பாபாசாகேப்

# டாக்டர் அம்பேத்கர்

## நூல் தொகுப்பு :

தொகுதி 31



டாக்டர் பாபாசாகேப்

# அம்பேத்கர்:

## பேச்சும் எழுத்தும்

நூல் தொகுப்பு:

## தொகுதி 31

முதல் பாகம்

(பிரிவுகள் I - III)



டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891　　　　பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

## இந்து சட்டத் தொகுப்பின் முக்கியத்துவம்

இந்து சட்டத் தொகுப்பு ஈடுஇணையற்றது; கடந்த காலத்தில் இந்திய சட்டப் பேரவையில் நிறைவேற்றப்பட்ட எந்த சட்டமும் அல்லது இனி நிறைவேற்றப்படவிருக்கும் எந்த சட்டமும் முக்கியத்துவத்தில் இதற்கு (இந்து சட்டத் தொகுப்பு) இணையாக முடியாது. இந்து சமுதாயத்தைப் பீடித்துள்ள வர்க்கத்துக்கும் வர்க்கத்துக்கும் இடையேயும் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையேயும் நிலவிவரும் ஏற்றத்தாழ்வைப் பற்றிக் கவலைப் படாமல் பொருளாதாரப் பிரச்சினைகள் குறித்து மேலும் மேலும் சட்டங்களை இயற்றிக் கொண்டு செல்லுவது நமது அரசியல் சாசனத்தையே கேலிக்கூத்தாக்குவதாகும்; சாணக் குவியல் மீது மாடமாளிகையைக் கட்டியெழுப்புவது போன்றதாகும்.

— "இந்து சட்டத் தொகுப்பு" பற்றி
டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்.

This Volume XXXI in Tamil forms the Part One (Sections I - III) of the English Edition Volume 14 of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

**Dr. BABASAHEB AMBEDKAR**
**SPEECHES AND WRITINGS**



Year : December, 2002

Language : Tamil

Volume No : 31

Price : Paperback - **Rs. 40/-**
Cloth bound - **Rs.** 105/-

Publishers : **Dr. AMBEDKAR FOUNDATION,**
Ministry of Social Justice and Empowerment,
Govt. of India,
15, Janpath, New Delhi - 110 001.

Distributors : **NEW CENTURY BOOK HOUSE (P) LTD.,**
41-B, SIDCO Industrial Estate,
Ambattur, Chennai - 600 098.

Printers : **PAVAI PRINTERS (P) LTD.**
142, Jani Jan Khan Road,
Royapettah, Chennai - 600 014.
Ph: 8482441, 8482973.

This Volume XXXI in Tamil forms the Part One (Sections I - III) of the English Edition Volume 14 of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

முதற் பதிப்பு: டிசம்பர், 2002
சித்திரபானு ஆண்டு, மார்கழி



விலை : ரூ. 40/-

நூலகப் பதிப்பு : ரூ. 100/-

**வெளியீட்டாளர்:**
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்,
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

**விற்பனை நிலையம்:**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

அச்சிட்டோர்:
**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,**
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 28482441, 28482973

# ஆலோசனைக்குழு

**மாண்புமிகு டாக்டர் சத்தியநாராயண ஜாட்டியா,**
சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
இந்திய அரசு

**உறுப்பினர் - செயலாளர்**
சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சகம்
இந்திய அரசு

**இயக்குநர்,**
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

***நிர்வாக ஆசிரியர் (தமிழ்):***
***ரா. ரங்கசாமி (மாஜினி)***
சென்னை, தமிழ்நாடு.

ஆங்கில நூல் வெளியீடு:

***கல்வித்துறை,***
***மகாராஷ்டிர மாநில அரசு, 1992.***

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

**திரு. வஸந்த் மூன்**
*மும்பை*

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

*ரா. ரங்கசாமி (மாஜினி)*

மொழிபெயர்ப்பாளர்கள்:

**திரு. கே.எம். நடராஜன்** *(சென்னை சட்டக் கல்லூரிப் பேராசிரியர் (ஓய்வு)*
**திரு. வி. இராதாகிருஷ்ணன்**
**திரு. ஏ.எஸ். மணி**
**திரு. கே. நீலகண்டன்**

ஒப்புநோக்கியோர்:

**திரு.** *ரா. ரங்கசாமி (மாஜினி)*

பிழைதிருத்த உதவி:

**திரு. கே. நீலகண்டன்**
**திரு. வி. இராதாகிருஷ்ணன்**

# அணிந்துரை

பாரத ரத்னா டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு சகலகலா வல்லவர்; பல அரிய திறமைகளின் பெட்டகமாகத் திகழ்ந் தவர்; சீரிய பண்புகளின் சுரங்கமாக விளங்கியவர்; நேரிய செயற்பாடுகளின் கருவூலமாக மிளிர்ந்தவர். சுருங்கச் சொன்னால் அவரை ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்று கூறினால் அது மிகையாகாது.

இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக டாக்டர் அம்பேத்கரை இந்திய அரசியல் சாசனத்தின், அரசமைப்புச் சட்டத்தின் பிதாமகர் எனக் கூறலாம். அவரது அற்புத சட்டப் புலமையை, உலகிலுள்ள பல்வேறு அரசியல் சாசனங்கள் குறித்து அவருக்கிருந்த ஆழ்ந்த, தேர்ந்த, தெளிந்த ஞானத்தை இது விகசிதமாகப் புலப்படுத்துகிறது. மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை 14 ஆவது தொகுதி தமிழில் 31 ஆவது தொகுதியாக வெளியிடப்படுகிறது. இவை அனைத்தும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அரசியல் நிர்ணயசபையில் சமர்ப்பித்த இந்து சட்டத் தொகுப்பு மசோதா குறித்த விவாதங்களாகும். இந்த விவாதங்களுக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அளித்த பதில்கள் படிப்போர் உள்ளத்தைப் பிணைத்து ஈர்ப்பதாக உள்ளன. எத்தகைய சிக்கலான விஷய மாக இருந்தாலும் புள்ளிவிவர ஆதாரங்களோடு, தகுந்த விவரங் களோடு, அலசி ஆராய்ந்து, அசைக்க மறுக்க முடியாதபடி அவர் பதிலளித்திருப்பதைக் காணலாம்.

இந்தத் தொகுதி பலரால் மொழிபெயர்க்கப்பட்டிருப் பதால் மொழி நடையும், சொல்லாக்கமும், பதப் பிரயோகங் களும் வேறுபட்டிருப்பது தவிர்க்க முடியாததாகி விட்டன. இதனை வாசகர்கள் பொறுத்தருள்வார்கள் என்று நம்புகிறோம். இதுவரை வெளிவந்துள்ள தொகுதிகளுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்தத் தொகுதியும் வாசகர் களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

நல்வாழ்த்துக்கள்!

(ஒப்பம்) டாக்டர் சத்திய நாராயண ஜாட்டியா
சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
புதுடில்லி இந்திய அரசு.

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்புகளை இந்தியிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் 31-வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம். உயர்ந்ததோர் இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை இந்திய மொழிகளில் பெயர்த்து வெளியிடுவதில் முனைந்து பணியாற்றும் பதிப்பாசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

புதுடில்லி

இயக்குநர்
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

# தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

இந்து சமுதாயத்தை சீர்திருத்துவதிலும், அதிலும் முக்கியமாக அந்த சமுதாயத்தில் ஆண்களுக்கு நிகராக பெண்களுக்குள்ள உரிமையை நிலைநாட்டுவதிலும் எல்லையற்ற ஆர்வம் காட்டியவர் டாக்டர் அம்பேத்கர். இந்த முயற்சியின் ஒரு பகுதியாகவே இந்து சட்டத் தொகுப்பு மசோதாவை 1947 ஏப்ரல் 11 ஆம் தேதி இந்திய அரசியல் நிர்ணயசபையில் கொண்டு வந்தார். இந்த மசோதாவுக்கு ஒருபுறம் தீவிர ஆதரவும் இன்னொருபுறம் கடும் எதிர்ப்பும் இருந்தது. இந்த மசோதா மீது நான்காண்டுகளுக்கும் மேலாக விவாதம் நடைபெற்றது; எனினும் ஒரு முடிவுக்கு வந்தபாடில்லை. சுதந்திர இந்தியாவின் நாடாளுமன்றத்தில் வேறு எந்த மசோதா மீதும் இவ்வளவு நீண்டகாலம் விவாதம் நடைபெற்றதில்லை எனலாம். இந்த மிக முக்கிய மசோதாவுக்கு முன்னுரிமை தந்து, 1951 செப்டம்பர் 1 ஆம் தேதிக்குள் அதனை சட்டமாக்க வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தினார். ஆனால் இந்த மசோதாவை எதிர்த்தவர்கள் தொடர்ந்து முட்டுக்கட்டைப் போட்டு, மசோதா நிறைவேறுவதை வேண்டுமென்றே தாமதப்படுத்தினர். இதனால் வெறுத்துப் போன டாக்டர் அம்பேத்கர் 1951 அக்டோபர் 10 ஆம் தேதி தமது பதவி விலகல் கடிதத்தைச் சமர்ப்பித்துவிட்டு அவையை விட்டு மிகுந்த வேதனையோடு வெளியேறினார்.

இந்த இந்து சட்டத் தொகுப்பு மசோதா அரசியல் நிர்ணயசபையில் கொண்டுவரப்பட்டதிலிருந்து 1951 அக்டோபர் 10 ஆம் தேதி வரை நடைபெற்ற முழு விவாதமும் இந்த நூலில் நான்கு பகுதிகளாகத் தரப்பட்டுள்ளது. மசோதாவை பொறுக்குக் குழுவுக்கு அனுப்பும் விவரம் முதல் பகுதியில் தரப்பட்டுள்ளது. டாக்டர் அம்பேத்கர் தயாரித்த வரைவு இந்து தொகுப்பும், அப்போது நடைமுறையிலிருந்த இந்து சட்டத் தொகுப்பும் இரண்டாவது பகுதியிலும், இந்த சட்டத் தொகுப்பு பற்றி நடைபெற்ற பொது விவாதம் மூன்றாவது பகுதியிலும், இந்து சட்டத் தொகுப்பு மசோதா பற்றிய ஷரத்து வாரியான விவாதம் நான்காவது பகுதியிலும் இடம்பெற்றுள்ளன. டாக்டர் அம்பேத்கரது அறிவும் செறிவும், ஆழ்ந்த சட்டப் புலமையும், குதர்க்க வாதங்களுக்கு சாட்டையடி கொடுக்கும் வேகமும் விவேகமும், சிந்தனையைத் தூண்டும் நகைச்சுவை உணர்வும், பகைவர்களையும் வியக்க வைக்கும் வாதத் திறமையும் இந்தத் தொகுதியில் தெள்ளத் தெளிவாகப் பிரதிபலிக்கக் காணலாம்.

ரா. ரங்கசாமி (மாஜினி)
தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்

# பொருளடக்கம்

## பாகம் ஒன்று

### பிரிவு I



### பிரிவு II



### பிரிவு III

# *இந்து சட்டத் தொகுப்பு

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** *(சட்ட அமைச்சர்) : ஐயா, பின்வருமாறு நான் முன்மொழிகிறேன்:*

*தற்போதுள்ள இந்து சட்டத்தின் சில பிரிவுகளை மாற்றி அமைக்கவும், உள்ள சட்டங்களை தொகுத்து வழங்கவுமான இந்த மசோதாவை தற்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்.*

*சபாநாயகர் : பின்வரும் தீர்மானம் முன்மொழியப்படுகிறது:*

*''தற்போதுள்ள இந்து சட்டங்களில் சில பிரிவுகளை மாற்றி அமைக்கவும், உள்ள சட்டங்களைத் தொகுத்து வழங்கவுமான இந்த மசோதாவை தற்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்.''*

**திரு. நசிருத்தீன் அகமது** *(மேற்கு வங்காளம்: முஸ்லீம்) : இந்த முக்கியமான மசோதாவின் தற்போதைய நிலை என்ன என்பதை நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். இந்து நண்பர்களிடையே இம்மசோதாவைப் பற்றி பல்வேறு கருத்துக்கள் நிலவுவதாகவும், அது குறித்து அவர்கள் மிகுந்த பரபரப்பு அடைந்திருப்பதாகவும் அறிகிறேன். ஆகையால் இம்மசோதாவின் தற்போதைய நிலை என்ன என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** *இம் மசோதா தற்போது அறிமுகப்படுத்தப்பட்டு உள்ளது. அவ்வளவுதான். மேற்கொண்டு வேறு எந்தக் கட்டத்தையும் அது எட்டவில்லை.*

**திரு. ஆர்.வி. துலேகர்** *(உத்திரப்பிரதேசம் - பொது) : இப்போது மாறி உள்ள சூழ்நிலையில் இந்து சட்டம் என்றோ, முஸ்லீம் சட்டம் என்றோ எதுவும் தேவையில்லை. நமக்கு ஒரு பொதுவான சட்டம் இருக்க வேண்டும். ஆகவே....*

**திரு. சபாநாயகர் :** *இந்த மசோதாவின் தராதரங்கள் பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் பேசுகிறார். இது குறித்து தமது கருத்துக்களைக் கூறுவதற்கு அவருக்குத் தகுந்த வாய்ப்பு கிடைக்கும்.*

---

* *அரசியல் நிர்ணய சபை (சட்டமன்ற) விவாதங்கள், இனி அ.நி. (சட்.) வி. எனக் குறிப்பிடப்படும், தொகுதி 1, நவம்பர் 17, 1947, பக்கம் 41.*

இப்போதுள்ள நிலை இந்த மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாமா வேண்டாமா என்பதுதான்.

**திரு. ஆர்.வி. துலேகர் :** அப்படியானால் நான் இந்த மசோதாவை எதிர்க்கிறேன். அது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் படலாகாது.

**திரு. சபாநாயகர் :** விஷயம் இதுதான்:

''தற்போதுள்ள இந்து சட்டத்தின் சில பிரிவுகளை மாற்றி அமைக்கவும், உள்ள சட்டங்களைத் தொகுத்து வழங்கவுமான இந்த மசோதாவை தற்போது பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளலாம்.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

---

## *இந்து கலப்புத் திருமணங்களை ஒழுங்குபடுத்துவதற்கும் அவற்றை சட்ட ரீதியாக செல்லுபடியாக்குவதற்குமான மசோதா

**திரு. மோகன்லால் சாக்சேனா** (உத்திரப்பிரதேசம் - பொது) **:** மாண்புமிகு சட்ட அமைச்சர் இந்து சட்டத் தொகுப்பு மசோதாவை பொறுக்குக் குழுவிற்கு அனுப்ப இந்த அமர்வில் ஒரு தீர்மானம் கொண்டு வரப் போவதாக என்னிடம் சொல்லிய காரணத்தினால் எனது தீர்மானத்தை நான் அறிமுகப் படுத்த விரும்பவில்லை.

**திரு. சபாநாயகர் :** மாண்புமிகு உறுப்பினர் இப்போது ஒரு தீர்மானம் கொண்டுவர விரும்பவில்லை என்றும், ஆனால் அதே நேரத்தில் அவசியப்படும்போது தீர்மானம் கொண்டுவர விரும்புகிறார் என்றும் நான் எடுத்துக் கொள்ளலாமா?

**திரு. மோகன்லால் சாக்சேனா :** ஆம், ஐயா, நீங்கள் சொல்வது சரிதான். மாண்புமிகு சட்ட அமைச்சர் தமது தீர்மானத்தை அறிமுகப்படுத்தவில்லை என்றால் நான் அறிமுகப்படுத்த இருக்கிறேன்.

---

★ அ.நி.வி. (சட்.) விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 11, 1948, பக். 599

## *இந்து திருமணத்தை அங்கீகரிக்கும் மசோதா

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா** (கிழக்கு பஞ்சாப், பொது) : இந்துக்கள், சீக்கியர்கள், ஜைனர்கள் மற்றும் அவர்களின் பல்வேறு உட்பிரிவுகளிடையே நடைபெறும் திருமணங்கள் முறையான திருமணங்கள் என அறிவிக்கும் மசோதாவை அறிமுகப்படுத்த விரும்புகிறேன்; அதற்கான அனுமதியைக் கோருகிறேன்.

**திரு. சபாநாயகர் :** தீர்மானம் வருமாறு:

> ''இந்துக்கள், சீக்கியர்கள், ஜைனர்கள் மற்றும் அவர்களின் பல்வேறு உட்பிரிவினருக்கிடையே நடைபெறும் திருமணங்கள் செல்லத்தக்கவை என்பதை அறிவிக்கும் மசோதாவை அறிமுகப் படுத்த அனுமதி கோரப்படுகிறது.''

தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** ஐயா, நான் அந்த மசோதாவை முன்மொழிகிறேன்.

---

## இந்து சட்டத் தொகுப்பு

**+மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (சட்ட அமைச்சர்) : ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''இந்து சட்டத்தின் சில பிரிவுகளை மாற்றி அமைப்பதற்கும், மற்ற பிரிவுகளைத் தொகுத்து வழங்குவதற்குமான மசோதா ஒரு பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்பப்படுகிறது. அந்தக் குழுவில் பின்வரும் நபர்கள் உறுப்பினர்களாக இருப்பார்கள்: திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், டாக்டர் பக்ஷி தேக் சந்த், திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார், திருமதி ஜி. துர்க்காபாய், திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி, திரு. யு. சீனிவாச மல்லையா, திரு. மிகிர் லால் சட்டோபாத்யாயா, டாக்டர் பி.எஸ். தேஷ்முக், திருமதி ரேணுகா ரே, டாக்டர் பி.கே. சென், பாபு ராம்நாராயண் சிங், திரு. கிஷோரி மோகன் திரிபாதி, திருமதி அம்மு சுவாமிநாதன், பண்டிட் பாலகிருஷ்ண சர்மா, திரு. குர்ஷீத் லால்,

---

★ அ.நி.வி. (சட்.) விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 26, 1948, பக். 1288.

\+ அ.நி.வி. (சட்.) விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 9, 1948, பக். 3628-33

திரு. பிரஜேஷ்வர் பிரசாத், திரு. பி. சிவராவ், திரு. பல்தேவ் சுவரூப், திரு. வி.சி. கேசவராவ் மற்றும் மசோதா அறிமுகப்படுத்துபவர். சட்டப்பேரவையின் அடுத்த அமர்வு ஆரம்பித்த முதல் வாரத்தின் கடைசி நாளிற்குள் தனது அறிக்கையை இக்குழு அளிக்க வேண்டும். ஐந்து உறுப்பினர்கள் கலந்து கொண்டாலே இக்குழு தன் பணியை கவனிக்கலாம்.''

மாலை 4 மணி

ஐயா, இவ்வளவு முக்கியமான மசோதா இந்த அமர்வின் இறுதி நாளின் கடைசி நேரத்தில் எடுத்துக் கொள்ளப் படுவது மிக பரிதாபகரமான ஒரு சூழ்நிலையாகும். இதை அறியும்போது எனக்கும் மற்ற உறுப்பினர்களுக்கும் தீராத மனவேதனையாக இருக்கிறது. அரைமணி இடைவேளையுடன் இந்தத் தீர்மானம் குறித்த விவர்தத்தை மாலை 7 மணிக்குள் முடித்துக் கொள்வதற்கு சபாநாயகரும் மற்றவர்களும் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த மசோதாவைப் பற்றி முழுமையாக விளக்க வேண்டுமென்றால் குறைந்தது நான்கு அல்லது ஐந்து மணி நேரம் தேவைப்படும். ஆனால் இப்போது நம் முன்னுள்ள கால அளவைக் கருத்தில் கொண்டு, மற்ற உறுப்பினர்கள் பேச அதிக நேரம் ஒதுக்கி, நான் எந்த அளவிற்கு குறைவான நேரம் எடுத்துக் கொள்ள முடியுமோ அந்த அளவிற்கு எடுத்துக் கொள்ளலாம் என நினைக்கிறேன். தற்போது நடைமுறையில் உள்ள சட்டத்திலிருந்து என்னென்ன வகையில் மாற்றங்கள் கொண்டு வரப்பட உள்ளன என்பதை மட்டும் என் தொடக்க உரையில் விளக்கிச் சொல்ல முற்படுகிறேன். இதற்காக அவை என்னை மன்னிக்கும் என்று நம்புகிறேன்.

ஐயா, இப்போதுள்ள இந்து சட்டத்தின் விதிகளை உயர்நீதிமன்றம் மற்றும் பிரிவி கவுன்சில் அளித்துள்ள பல்வேறு தீர்ப்புகளிலிருந்து திரட்டப்பட வேண்டி உள்ளன. அவை சாதாரண மனிதனுக்கு எளிதில் விளங்கக் கூடியவை அன்று. மேலும் அவை அடிக்கடி வழக்காடுதலுக்கும் இட்டுச் செல்லுகின்றன. மொத்தத்தில் அவை திகைப்பூட்டும் ஒரு கதம்பத் திரளாக அமைந்துள்ளன. தற்போதுள்ள சட்டங்களிலிருந்து இனி வரப்போகும் சட்டத் தொகுப்பு ஏழு தலைப்புகளில், மாறுபட்டுள்ளதாக நாம் கருதலாம். அவை ஒவ்வொன்றையும் நான் விளக்க முற்படுகிறேன்.

முதலாவதாக இந்து ஆணோ அல்லது பெண்ணோ உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அவர்களுடைய சொத்துக்கள் யாருக்குப் போக வேண்டும் என அறிவிக்கும் சட்டத் தொகுப் பாகும்.

அடுத்ததாக, உயில் எழுதாமல் இறந்துவிடும் நபரின் வாரிசு களை மாற்றி அமைக்கும் தொகுப்பாகும். அடுத்ததாக ஜீவனாம்சம், திருமணம், மணமுறிவு, தத்தெடுப்பு, வயது வராதோர் மற்றும் காப்பாளர்கள் பற்றியதாகும். முதலாவதாக வாரிசுரிமையைப் பற்றிய தொகுப்பாகும்.

முதல் முயற்சியாக வாரிசுரிமையைப் பற்றி சில மாற்றங் களை செய்ய முற்படுகிறோம். இந்த அவையிலுள்ள பல்வேறு வழக்கறிஞர் உறுப்பினர்களுக்குத் தெரிந்த ஒன்றை நான் ஞாபகப் படுத்த விரும்புகிறேன். பொதுவாக இந்துக்கள் மிதாக்ஷரா மற்றும் தயபாகா ஆகிய இரு பிரிவுகளின் கீழ் கொண்டுவரப்பட்டு அதன் அடிப்படையில் வாரிசுரிமை நிர்ணயிக்கப்படுகிறது. இரண்டு பிரிவு களுக்கும் இடையே அடிப்படையான வேறுபாடுகள் உள்ளன.

மிதாக்ஷரா பிரிவின்படி ஒரு குடும்பத்தின் சொத்து அந்த நபரின் தனி சொத்து அல்ல. அது கூட்டுடைமையாகும். கூட்டுடைமை என்பதில் தந்தை, மகன், பேரன் மற்றும் பேரனின் மகன் ஆகியோர் அடங்குவர். மேலே கூறியுள்ள எல்லோருக்கும் குடும்பச் சொத்தில் உரிமை உண்டு. அதில் ஒருவர் இறந்துவிட்டால் அவருடைய பங்கு உயிரோடு உள்ள மற்றவர்களுக்குப் போய்ச் சேரும்; இறந்து போன வரின் வாரிசுதாரர்களுக்கு அல்ல.

இந்த மசோதாவில் அடங்கியுள்ள இந்துச் சட்டத் தொகுப்பில் தயபாகா சட்டத்தைப் பின்பற்றி வாரிசுரிமை நிர்ணயிக்கப்படு கிறது. இதன்படி குடும்ப வாரிசு தன் பங்கை முழு சுதந்திரத்துடன், மற்றவர்களுக்கு உயில் மூலம் கொடுக்கவோ, அல்லது விற்கவோ உரிமையுடையவராகின்றார். இது இந்த மசோதா கொண்டுவர முயலும் ஓர் அடிப்படை மாற்றமாகும். இம் மாற்றத்தின் மூலம் இந்தியா முழுமைக்கும் ஒரே மாதிரியாக தயபாகா சட்ட முறையை பின்பற்ற வழி செய்கின்றது; தற்போது மிதாக்ஷரா முறை அமலி லுள்ள பகுதிகளுக்கு இதனை விஸ்தரிக்க வழிவகை செய்கிறது.

வாரிசுரிமையைப் பொறுத்தவரை மிதாக்ஷரா மற்றும் தயபாகா அமைப்பில் அடிப்படை வித்தியாசங்கள் இருக்கின்றன. மிதாக்ஷரா சட்டப்படி பெண்வழி வாரிசுகளைவிட ஆண்வழி வாரிசுகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது. ஆனால் தயபாகா முறையில் உறவுமுறை ஆண் வழியாக இருந்தாலும் அல்லது பெண் வழியாக இருந்தாலும் ஒரே முறையைப் பின்பற்றி இரண்டு முறை உறவுகளும் சமமாகக் கருதப்படுகின்றன. ஆகையால் புதிய சட்டத் தொகுப்பில் மிதாக்ஷரா முறையைத் தவிர்த்து தயபாகா முறை பின்பற்றப்படுகிறது.

மேற்கூறிய மாற்றத்துடன் வாரிசுரிமையைப் பொறுத்து மேலும் நான்கு மாற்றங்களை புதிய சட்டத்தொகுப்பு அறிமுகப் படுத்துகிறது.

முதலாவதாக விதவை, மகள், இறந்து விட்ட மகனின் மனைவி ஆகியோர் வாரிசு உரிமை விஷயத்தில் மகனுடன் சமமாகப் பாவிக்கப் படுவார்கள். அத்துடன் மகளுக்கும் தனது தந்தையின் சொத்தில் உரிமை வழங்கப்பட்டுள்ளது. மகனின் பங்கில் பாதி மகளுக்கு வழங்கப்பட்டுள்ளது. பெண் வாரிசுதாரர்களைப் பொறுத்தவரையில் மகளின் உரிமைக்காக மட்டுமே இந்த மாற்றம் செய்யப்பட்டுள்ளது. குடும்பத்தில் உள்ள மற்ற பெண்களின் உரிமைகள் 1937ல் இயற்றப் பட்ட பெண்களின் சொத்துரிமைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது. அதைப் பொறுத்து இந்த சட்டத்தொகுப்பில் எந்த மாற்றமும், செய்யப் படவில்லை. ஆனால் 1937-ம் ஆண்டு சட்டத்தில் சொல்லப்பட்ட உரிமைகள் இச்சட்டத்திலும் சேர்க்கப்பட்டுள்ளன.

மிதாக்ஷரா அல்லது தயபாகா பிரிவுகளில் சொல்லப் பட்டுள்ளதை விட இந்தப் புதிய தொகுப்பில் பல்வேறு நிலையி லுள்ள பெண்களும் வாரிசுகளாக சேர்க்கப்பட்டுள்ளனர். இது இந்த தொகுப்பில் இடம்பெற்றுள்ள இரண்டாவது மாற்றமாகும்.

மிதாக்ஷரா அல்லது தயபாகா சட்டப் பிரிவுகளில் பெண் களின் உரிமையை தீர்மானிக்க பல்வேறு அளவுகோல்கள் கையாளப் பட்டன. உயில் எழுதி வைப்பவர் இறக்கும் சமயத்தில் ஒரு பெண் செல்வந்தரா அல்லது ஏழையா, திருமணமானவளா, விதவையா, குழந்தை உள்ளவளா, அல்லது குழந்தை இல்லாதவளா என்பதைப் பொறுத்து அவளது உரிமை நிர்ணயிக்கப்பட்டது. ஆனால் அந்த

வித்தியாசங்கள் எல்லாம் இந்தப் புது சட்டத்தொகுப்பில் பின்பற்றப் படவில்லை. எல்லாப் பெண்களும் ஒரே மாதிரியாகப் பாவிக்கப் படுவார்கள். இது இந்த சட்டத் தொகுப்பின் மூன்றாவது மாற்ற மாகும்.

ஒரு பெண்ணின் வாரிசு உரிமை அவள் வாரிசாக சேர்க்கப் பட்டாளா இல்லையா என்பதைப் பொறுத்தே அமையும். வேறு எந்த அளவுகோலும் கிடையாது.

தயபாகா சட்டப்படி தந்தைக்கு வாரிசுரிமையில் முன்னுரிமை அளிக்கப்பட்டது. ஆனால் புதிய சட்டத் தொகுப்பில் தாய்க்கு முன்னுரிமை அளிக்கப்பட்டுள்ளது. இது தயபாகா சட்டத்தில் செய்யப் பட்டுள்ள கடைசி மாற்றமாகும்.

ஓர் ஆண் உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அவரின் வாரிசுகள் யார் யார் என்பதை இதுவரை கவனித்தோம். உயில் எழு தாமல் இறந்து விடும் ஒரு பெண்ணின் சொத்திற்கு யார் யார் வாரிசாக முடியும் என்பதை இனி பார்ப்போம். ஒரு பெண்ணின் சொத்து பொதுவாக இரண்டு வகைப்படும். ஒன்று அவளின் சீதனச் சொத்து. இரண்டு பெண்ணின் சொத்து. இந்த இரண்டு பிரிவுகளும் இங்குள்ள உறுப்பினர்களுக்கு நன்கு அறிமுகமான ஒன்றுதான்.

சீதனச் சொத்து என்பது பல்வேறு வகையான பிரிவுகளை உள்ளடக்கியது. ஒவ்வொரு பிரிவைப் பொறுத்து அதனுடைய வாரிசுகள் நிர்ணயிக்கப்படுகிறார்கள். மிதாக்ஷரா மற்றும் தயபாகா வில் இதே முறை பின்பற்றப்படுகிறது. சீதனச் சொத்தைப் பொறுத்து இரண்டு மாற்றங்களைப் புது சட்டத் தொகுப்பு அறிமுகப்படுத்து கிறது. பல்வேறு பிரிவுகளான சீதனச் சொத்தை ஒரே பிரிவின் கீழ் கொண்டுவருகிறது. சீதனச் சொத்தில் மகளுக்கு மட்டும் இருந்த உரிமையை விரிவுபடுத்தி மகனுக்கும் பங்கு அளிக்கப்பட் டுள்ளது. மகளுக்குக் கிடைக்கும் பங்கில் பாதி மகனுக்கு வழங்கப் பட்டுள்ளது.

தந்தையின் சொத்தில் மகனுக்கு கிடைக்கும் பங்கில் பாதியை மகளுக்கும் அதேமுறையில் தாயின் சொத்தில் மகளுக்குக் கிடைக்கும் பங்கில் பாதியை மகனுக்கும் அளித்து இருவரை யும் சமமாகப் பாவிக்கும் ஒரு நிலைமையை இந்தப் புதிய சட்டத்

தொகுப்பு ஏற்படுத்தி உள்ளது. இதை உறுப்பினர்கள் உணர வேண்டும்.

''பெண்ணின் சொத்து'' என்ற அமைப்பில் பெண்ணிற்கு அவள் உயிருள்ளவரை அனுபவிக்கும் உரிமை மட்டுமே இந்துச் சட்டத்தில் வழங்கப்பட்டது என்பதை உறுப்பினர்கள் அனைவரும் அறிவர். அந்த முறையில் அவள் சட்ட ரீதியாக அவசியம் ஏற்பட்டால் மட்டுமே அந்தச் சொத்தை விற்க முடியும். மற்ற நிலைகளில் அவள் அனுபவிக்க மட்டுமே முடியும். அவள் இறந்த பிறகு அந்தச் சொத்து அவள் கணவனின் வாரிசுகளுக்குப் போய்ச் சேரும்.

இந்தப் புதிய சட்டத்தொகுப்பில் இரண்டு மாற்றங்கள் செய்யப் பட்டுள்ளன. ஒன்று ஒரு பெண்ணிற்கு முழுமையான உரிமை அளிக்கப்பட்டுள்ளது. இரண்டாவதாக, அவள் இறந்த பிறகு அவள் கணவனின் வாரிசுகள் யாரும் அச் சொத்தில் உரிமை கொண்டாட முடியாது.

சொத்துரிமை பெறுவதற்குப் பெண்களுக்குள்ள உரிமைகளுக்கு உறுதுணையாக இருக்கும் மற்றொரு முக்கியமான வகையுரை (ஷரத்து) இந்த மசோதாவில் இடம் பெற்றுள்ளது; அது வரதட்சிணை அல்லது சீதனம் சம்பந்தப்பட்டதாகும். வரதட்சிணை கொடுமை குறித்து இந்த அவை உறுப்பினர்கள் அனைவரும் நன்கு அறிவர். இளம் பெண்கள் தங்கள் பெற்றோர்களிடமிருந்து வரதட்சிணையாகவோ, சீதனமாகவோ அல்லது பரிசுப் பொருள்களாகவோ ஏராளமான சொத்துக்களைக் கொண்டுவருகின்றனர். அப்படியிருந்தும் அவர்கள் எவ்விதம் குரூரமாக, ஈவு இரக்கமின்றி, மிருகத்தனமாக, மிலேச்சத்தனமாக நடத்தப்படுகின்றனர், ஒருத்தப் படுகின்றனர், ஒடுக்கப்படுகின்றனர் என்பதைப் பார்க்கிறோம். இத்தகைய நிலைமையில் இந்த அப்பாவிகளைப் பாதுகாப்பதற்கு ஓர் உறுதியான ஏற்பாடு இந்த மசோதாவில் செய்யப்பட்டுள்ளது; அதற்கு இந்த மசோதா வழிவகை செய்துள்ளது. திருமண நேரத்தில் ஒரு பெண்ணிற்கு அளிக்கப்படும் சீதனம், வரதட்சிணை ஆகிய எல்லாச் சொத்துக்களும் அவளுடைய நன்மைக்காக பாதுகாக்கப் பட்டு அவளுக்கு 18 வயது முடிந்தவுடன் அவளிடம் ஒப்படைக்கப் பட வேண்டும்.

அதில் அவளது கணவரோ அல்லது அவளுடைய உறவினர்களோ எந்த உரிமையும் கோர முடியாது. அவளது சொத்தை தங்கள் இஷ்டம் போல் ஊதாரித்தனமாக செலவிட்டு, எஞ்சிய வாழ்நாள் காலத்தில் அவளை நிராதரவானவளாக, துன்புற்றவளாக, துயருறுவளாக விட அவர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. இந்து சட்டத் தொகுப்பில் செய்யப்பட்டுள்ள இந்த மாற்றம் மிக முக்கியமான ஒன்றாக கருதப்பட வேண்டும்.

அடுத்தது ஜீவனாம்சம் பற்றிய ஒன்றாகும். இறந்துவிட்ட நபரின் சார்ந்திருப்போர்கள், அவரின் சொத்தை வாரிசுரிமை மூலமாகவோ, அல்லது உயில் மூலமாகவோ பெற்றிருந்தால் அவரிடமிருந்து ஜீவனாம்சம் பெற உரிமையுள்ளவர்களாகிறார்கள். அவர்களைக் காப்பாற்ற வேண்டியது சொத்தை அடைந்தவரின் கடமையாகும். இறந்தவரினால் பராமரிக்கப்பட்ட அவரது வைப்பாட்டியும்கூட அவரைச் சார்ந்திருப்போரில் சேர்க்கப்பட்டுள்ளது துரதிர்ஷ்டவசமான ஒன்றாகும். எனினும் இவ்விஷயம் மசோதாவில் சேர்க்கப்பட்டிருப்பதால் அது குறித்துப் பரிசீலனை செய்ய வேண்டும். இதில் உறவினர்கள் சார்ந்திருப்போராக சேர்க்கப்பட்டுள்ளனர். இதில் பெரிய மாற்றம் ஒன்றும் இல்லை.

பொதுவாக ஒரு பெண் கணவனுடன் வாழ்ந்தால் மட்டுமே அவள் அவனால் பராமரிக்கப்படவேண்டும். ஆனால் சில குறிப்பிட்ட காரணங்களுக்கு அவள் பிரிந்து வாழ நேரிட்டால், அப்பொழுதும் அவள் அவனால் பராமரிக்கப்பட வேண்டியுள்ளது. அவள் தனக்கான ஜீவனாம்சம் பெற உரிமை பெறுகிறாள். கீழ்க்காணும் சூழ்நிலைகளை அதற்கான காரணங்களாகக் கருதலாம்: 1) கணவன் சில கொடுமையான வியாதிகளால் பாதிக்கப்பட்டிருக்கும்போது; 2) அவன் மற்ற பெண்ணுடன் வாழும்போது; 3) அவன் அவளை கொடுமைப்படுத்தும்போது; 4) அவன் அவளை இரண்டாண்டுக் காலமாக கவனிக்காமல் விடும்போது; 5) அவன் வேறு மதத்திற்கு மாறிய பொழுது மற்றும் அவள் தனியாக இருப்பதற்கான சரியான காரணங்கள் இருக்கும்போது.

அடுத்து திருமணத்தைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். இந்த சட்டத் தொகுப்பு இரண்டு வகையான திருமணங்களை ஏற்றுக் கொள்கிறது. ஒன்று காலம் காலமாக நடைமுறையிலிருந்துவரும் பழக்கத்திலுள்ள இந்துத் திருமண முறையில், அதாவது சடங்கு ரீதியான திருமண முறையில் செய்துகொள்ளும் திருமணங்கள்.

இன்னொன்று பதிவு முறையில் செய்து கொள்ளும் சிவில் திருமணங்கள். இப்போதுள்ள இந்துச் சட்டம் ''சடங்கு முறை'' திருமணத்தையே அங்கீகரிக்கிறது; ''சிவில்'' திருமணம் என்று அழைக்கப்படுவதை அங்கீகரிப்பதில்லை. தற்போதைய இந்து சட்டத் தொகுப்பு மசோதாவின் கீழ் செல்லுடைமையுள்ள சடங்கு ரீதியான திருமணத்திற்கும் செல்லுடைமையுள்ள பதிவுத் திருமணத்திற்குமான நிபந்தனைகளைக் கருதிப் பார்க்கும் போது அவற்றிடையே உண்மையில் அதிக வேறுபாடு ஏதுமில்லை.

சடங்கு ரீதியாக இந்து முறையில் செய்து கொள்ளும் திருமணங்களுக்கு ஐந்து விதிமுறைகள் உண்டு. முதலாவதாக, மணமகன் 18 வயது பூர்த்தியானவராக இருக்க வேண்டும். இரண்டாவதாக, மணமகள் 14 வயது பூர்த்தியானவளாக இருக்க வேண்டும். கல்யாணத்தின் போது இருவரில் எவரும் ஏற்கனவே மணமானவராக இருக்கக் கூடாது. மூன்றாவதாக, தடை செய்யப்பட்ட உறவினர்களாக இருக்கக்கூடாது. நான்காவதாக, ஒரே கோத்திரம் உள்ளவர்களாக இருக்கக் கூடாது. ஐந்தாவதாக, புத்திசுவாதீனம் இல்லாதவராகவோ அல்லது மடையராகவோ இருக்கக்கூடாது. ஒரே கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் பதிவு முறையில் திருமணம் செய்து கொள்ளலாம். பதிவு முறையில் திருமணம் செய்வோர் அதில் கூறப்பட்டுள்ள விதிமுறைகளின்படி திருமணம் செய்துகொள்ள வேண்டும். தற்போதுள்ள சட்டப்படி மணமக்கள் இருவரும் ஒரே ஜாதியை அல்லது ஏற்றுக் கொள்ளப்பட்ட உட் ஜாதியை சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்ற விதிமுறை புதிய சட்டத் தொகுப்பில் நீக்கப்பட்டுள்ளது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா** (கிழக்கு பஞ்சாப், பொது) : இரு வேறு ஜாதியினருக்கு இடையே நடைபெறும் திருமணம் செல்லத்தக்கதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் என்னுடைய பேச்சைத் தொடர விடுங்கள். மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது பேச்சின் நடுவே கேள்வி கேட்டால் அதற்கான பதிலை அளிக்கிறேன்.

ஒரே கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள்- கோத்ரபிரவாரா - திருமணம் செய்துகொள்ளக்கூடாது என்பது இப்போதுள்ள முறை. ஆனால் புதிய சட்டத் தொகுப்பில் அதற்கு தடையேதும் இல்லை.

இது இரண்டாவது ஷரத்தாகும். மூன்றாவதாக பழைய முறையில் ஒன்றுக்கு மேற்பட்ட திருமணம் அதாவது பலதார மணம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால் புதிய சட்டத் தொகுப்பில் ஒரு தார மணம் அதாவது ஒரு துணை மணம் வலியுறுத்தப்பட்டுள்ளது. பழைய முறையில் சடங்கு ரீதியில் நடைபெற்ற திருமணம் எந்த சூழ்நிலையிலும் ரத்து செய்யப்பட முடியாதது; அதேபோல் விவாகரத்தும் செய்ய முடியாது. ஆனால் புதிய சட்டத் தொகுப்பில் சில குறிப்பிட்ட காரணங்களுக்காக திருமணத்தை முடிவுக்குக் கொண்டு வரவும் பிரிந்து வாழவும், திருமண முறிவு ஏற்படவும் வழி வகை செய்யப்பட்டுள்ளது. இது முற்றிலும் புதியதொரு மாற்றமாகும். புதிய சட்டத் தொகுப்பின் அடிப்படையில் திருமணம் செய்துகொள்வோர் மூன்று வழிகளில் திருமண உறவை முடிவுக்குக் கொண்டுவரலாம். முதலாவதாக, திருமணமே செல்லாது எனக் கோரலாம்; இரண்டாவதாக, திருமணம் தற்போது செல்லத்தக்கது அல்ல எனக் கோரலாம்; மூன்றாவதாக, திருமணத்தை ரத்து செய்யக் கோரலாம்.

திருமணம் செல்லத்தக்கது அல்ல என அறிவிக்க இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று, திருமணம் நடந்தபோது ஒருவருடைய கணவனோ மனைவியோ உயிருடன் இருத்தல், அல்லது இருவரும் தடை செய்யப்பட்ட உறவினராக இருத்தல்.

திருமணம் செல்லத்தக்கது அல்ல என அறிவிக்க நான்கு காரணங்கள் உள்ளன. ஒன்று, ஆண்மை அற்றவர் அல்லது திருமண வாழ்க்கை நடத்துவதற்குத் தகுதி இல்லாதவராக இருத்தல்; இரண்டு, இருவரும் ஒரே கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாக இருத்தல்; மூன்று இருவரில் ஒருவர் மனநிலை சரியில்லாதவராக அல்லது மடையராக இருத்தல்; நான்கு, பாதுகாவலரின் ஒப்புதலை ஏமாற்றியோ அல்லது வன்முறை மூலமோ பெறுதல்.

திருமண ரத்து என்னும் வாள் சர்வசதாவும் தலைக்குமேல் தொங்கிக்கொண்டிருக்காதபடி அதற்கு ஒரு வரம்பு கட்ட இந்த மசோதா விவேகமான முறையில் வழிவகை செய்துள்ளது. இம் மாதிரியான விவாகரத்து வழக்கை திருமணம் நடந்த மூன்றாண்டுகளுக்குள் தொடர வேண்டும். இல்லையென்றால் பிறகு வழக்கு தொடர முடியாது, மேலும் திருமண முறிவுக்கு ஆதாரம் ஏதும் இல்லை என்பதுபோல் திருமணம் தொடர்ந்து நடைமுறையில் இருக்கும், அதே சமயம் திருமணம் செல்லத்தக்கதல்ல என்ற சூழ்நிலை

ஏற்பட்டாலும், இத்திருமணம் செல்லத்தக்கதல்ல என்று நீதிமன்றம் அறிவித்தாலும்கூட இத்திருமணத்தின் மூலம் பிறந்த குழந்தைகளை அது பாதிக்காது, அவர்கள் சட்ட ரீதியான குழந்தைகளாகவே கருதப் படுவார்கள். அடுத்து மண முறிவை அல்லது விவாகரத்தை எடுத்துக் கொண்டால் மணமுறிவுக்கு ஏழு காரணங்கள் சொல்லப்பட்டுள்ளன. 1) புறக்கணித்தல், 2) மற்ற மதத்திற்கு மாறிக் கொள்ளல், 3) வேறு பெண்ணுடன் வாழ்தல் அல்லது மனைவியாக இருப்பவள் வேறு ஆணின் காமக்கிழத்தியாக இருத்தல் 4) குணப்படுத்த முடியாத மனச் சிதைவு 5) தீர்க்க முடியாத குஷ்ட ரோகம் 6) பால்வினை நோய் மற்ற வருக்கு தொற்றக் கூடிய அளவில் இருத்தல், மற்றும் 7) கொடுமைப் படுத்தல்.

அடுத்து, தத்து எடுப்பதைப் பற்றி அதாவது சுவீகாரம் பற்றிப் பார்ப்போம். புதிய சட்டத் தொகுப்பில் சொல்லப்பட்டுள்ளவை ஏற்கனவே உள்ள சட்டத்தில் இருப்பவைதான். இரண்டு புதிய வகை யங்கள் அதாவது ஷரத்துகள் சேர்க்கப்பட்டுள்ளன. இந்தப் புதிய ஷரத்தின்படி, தத்து எடுக்க விரும்பும் ஆண் தன் மனைவியின் ஒப்புதலைப் பெற வேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தால், குறைந்தது ஒருவரிடமாவது ஒப்புதல் பெறவேண்டும்.

ஒரு விதவை தத்து எடுக்க விரும்பினால் அவளுடைய கணவன் அம்மாதிரி தத்து எடுக்கும் உரிமையை அவளுக்கு அளித்திருக்க வேண்டும். அம்மாதிரி, கணவனால் ஒப்புதல்அளிக்கப்பட்டதா என்பதை உறுதிப்படுத்த அந்த ஒப்புதல் உயில் போன்றவற்றில் எழுத்து மூலமாக இருக்க வேண்டும் என வலியுறுத்தி சொல்லப் பட்டுள்ளது. அதுவும் பதிவு செய்யப்பட்டிருக்க வேண்டும். வாய்மொழி ஒப்புதல் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. ஏராளமான வழக்குகள் நடைபெறுவதற்குரிய பிரச்சினைகளில் ஒன்றாக தத்தெடுக்கும் பிரச்சினை இருந்து வந்திருக்கிறது. இதில் எல்லா விதமான ஏமாற்று வித்தைகளும் நடைபெறுகின்றன. சாட்சிகள் மிரட்டப்படுகின்றனர்; பலவிதமான வாய்மொழிச் சாட்சிகள் உருவாக்கப்படுகின்றனர்; விதவைகள் ஏமாற்றப்படுகின்றனர்; தாங்கள் தத்தெடுத்தது உண்மை தான் என்று ஒரு சமயம் கூறுகின்றனர்; இன்னொரு சமயமோ, இல்லை, நாங்கள் தத்தெடுக்கவே இல்லை என்று கூறி வழக்குக்கு முற்றுப்புள்ளி வைக்கக் கோருகின்றனர். இம்மாதிரியான சூழ்நிலைகளை மாற்றி அமைக்கும் நோக்கத்துடன் ஒப்புதல் பதிவு செய்யப்பட வேண்டும்

என சொல்லப்பட்டுள்ளது. மற்றவர்களுடைய தூண்டுதலால் தத்து எடுத்ததாகவோ அல்லது இல்லை என்றோ மாற்றி மாற்றி சொல்லக் கூடிய கொடுமையிலிருந்து இதன் மூலம் விதவைகள் மீட்கப்படு கின்றனர்.

அடுத்ததாக, உரிய வயது வராதோர் மற்றும் காப்பாளர் பற்றியும் புதிய சட்டத் தொகுப்பில் கருதப்பட்டது. இந்தத் துறை யில் எந்த மாற்றமும் செய்யப்படாததால் அதைப் பற்றி சொல்வ தற்கு ஒன்றுமில்லை.

இந்தப் புதிய தொகுப்பினால் ஏற்பட்டுள்ள மாற்றங்களை உறுப்பினர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். முதலாவதாக, ஒரு குடும்பத்தில் பிறந்த காரணத்திற்காக மட்டும் சொத்தில் உரிமை கொண்டாடுவதையும், குடும்பத்தில் ஒருவர் இறந்துவிட்டால் அவர் பங்கு உயிருடன் உள்ள மற்றவர்களுக்கு போகவேண்டும் என்ற நிலைமையையும் இது மாற்றி அமைத்துள்ளது. இரண்டாவதாக, மகளுக்கு பாதி அளவிற்கு சொத்துரிமை அளிக்க வேண்டும் என்பதை இது வலியுறுத்தியுள்ளது. மூன்றாவதாக பெண்ணிற்கு ஓரளவுக்குக் கொடுக்கப்பட்டிருந்த அனுபவிக்கும் உரிமை முழு உரிமையாக மாற்றப்பட்டதாகும். நான்காவதாக, திருமணத்திலும் தத்து எடுப் பதிலும் கடைப்பிடிக்கப்பட்ட ஜாதி முறைகள் இந்தப் புது சட்டத் தொகுப்பில் விடப்பட்டுள்ளன. ஐந்தாவதாக, ஒருதார திருமணக் கோட்பாடு, ஆறாவதாக, விவாகரத்துக் கோட்பாடு. நமக்கு அளிக்கப் பட்டுள்ள குறைவான காலஅவகாசத்தைக் கருத்தில் கொண்டு என்னென்ன பிரச்சினைகளை நாம் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள லாம் என்பதை நான் சொல்ல விரும்புகிறேன். இந்தப் புதிய சட்டத் தொகுப்பில் ஏற்படுத்தப்பட்டுள்ள மாற்றங்கள் யாவும் நியாயப் படுத்தப்பட வேண்டியவையாகும். ஆனால் இப்போதுள்ள குறைந்த கால அவகாசத்தில் இதை எல்லாம் விவாதித்தால் அதனால் கால விரையம் ஆகுமே தவிர வேறு அல்ல. உறுப்பினர்கள் யாவரும் தங்களுடைய கருத்துக்களை இப்போது சொல்லலாம். அவர்கள் கருத்தைக் கேட்டபின் அவசியம் ஏற்படின் என்னுடைய விளக் கத்தை அப்போது சொல்கிறேன். நான் தற்போது இந்த சட்டத் தொகுப்பு மசோதாவை அறிமுகப்படுத்துகிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** மசோதா அறிமுகப்படுத்தப்படுகிறது:

''இந்து சட்டத்தின் சில பிரிவுகளை மாற்றி அமைப்பதற்கும், மற்ற பிரிவுகளைத் தொகுத்து வழங்குவதற்குமான மசோதா ஒரு பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்பப்படுகிறது, அந்தக் குழுவில் பின்வரும் நபர்கள் உறுப்பினர்களாக இருப்பார்கள்: டாக்டர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், டாக்டர் பக்ஷிதேக் சந்த், திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார், திருமதி ஜி. துர்க்காபாய் திரு. யு. சீனிவாச மல்லையா, திரு மிகிர்லால் சட்டோபாத்தியாயா, டாக்டர் பி.எஸ். தேஷ்முக், திருமதி ரேணுகா ரே, டாக்டர் பி.கே. சென், பாபு ராம் நாராயண் சிங், திரு. கிஷோரி மோகன் திரிபாதி, திருமதி அம்மு சுவாமிநாதன், பண்டிட் பாலகிருஷ்ண சர்மா, திரு. குர்ஷீத் லால், திரு மிரஜேஸ்வர் பிரசாத், திரு. பி. சிவராவ், திரு. பால்தேவ் சுவரூப், திரு. வி.சி. கேசவ ராவ் மற்றும் மசோதா அறிமுகப்படுத்துபவர்.

அடுத்த அமர்வு ஆரம்பித்த முதல் வாரத்தின் கடைசி நாளிற்குள் இக் குழு அறிக்கையை அளிக்க வேண்டும். ஐந்து உறுப்பினர்கள் கலந்து கொண்டாலே இக்குழு தனது பணியை கவனிக்கலாம்.

***டாக்டர் பி. பட்டாபி சீதாராமய்யா:** (பொது) ஐயா, உங்கள் பார்வையில் படுவதற்காகவும் அவையினர் என் பேச்சைக் கேட்பார்கள் என்ற நம்பிக்கையிலும் நான் முதலாவதாக எழுந்துள்ளேன். இந்த நாடு நீண்ட காலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த மிக முக்கியமான இந்த மசோதா இந்த அவையில் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளது அறிய மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். ஆயிரம் ஆண்டுகளாக அந்நிய ஆதிக்கத்திலிருந்த நம் நாட்டில் நீண்ட காலமாக எந்த சமுதாய முன்னேற்றமும் இன்றி நாடு போய்க் கொண்டிருந்தது. மரபு வழக்கு முறை என்பது ஆட்சி செய்பவர்களின் பாதுகாப்பிலும் அவர்கள் தரும் ஊக்கத்திலும்தான் வளர்ந்து வளம்பெற முடியும். ஆனால் நம் நாட்டில் நீண்டநாளாக மன்னராட்சி இல்லாத காரணத்தால், வழிகாட்டுபவர்களும் இல்லை.

இன்றும்கூட மேல்நாட்டில் ஒரு பழக்கத்தை ஏற்படுத்த வேண்டுமானால், அரசர் அதை ஆரம்பித்து வைக்க வேண்டும். உடனடியாக அது மக்களால் பின்பற்றப்படுகிறது. எட்டாம் எட்வர்டு என்ற மன்னரின் வாழ்வில் நடந்த ஒரு சம்பவத்தை நீங்கள்

---

* அ.நி.ச. (சட்ட) விவாதங்கள், டி, தொகுப்பு 4, ஏப்ரல் 9, 1948, பக்கங்கள் 3633-39.

கேள்விப்பட்டிருக்கலாம். அவர் ஒரு விழாவிற்குச் சென்றிருந்த பொழுது மக்கள் அவரிடம் தங்கள் குறையை முறையிட்டார்கள். உங்கள் குறை என்ன என்று அவர் கேட்டார். முன்பெல்லாம் மக்கள் வைக்கோலினால் செய்த தொப்பியை அணிந்து வந்தார்கள், இவ்வகை தொப்பியை தயார் செய்வது எங்கள் தொழில், இப்போது மக்கள் கம்பளியினாலான வேறுவகை தொப்பி அணிய முற்பட்டதால் எங்கள் தொழில் பெரிதும் பாதிக்கப்பட்டுவிட்டது என்று அவர்கள் கூறினார்கள்.

அவர்கள் குறையை நிவர்த்தி செய்யும் எண்ணத்துடன் மறுநாள் நடைபெற்ற ஒரு விழாவில் மன்னர் வைக்கோலினால் ஆன தொப்பி அணிந்து கொண்டு வந்தார். இதனைக் கண்ணுற்ற மக்களும் உடனே அதைப் பின்பற்றினார்கள். அத்தொழிலில் ஈடுபட்டிருந்தோர்களது குறையும் நீங்கியது. அதுதான் மன்னருடைய செல்வாக்கு.

அரசர் என்பவர் நாட்டின் தலைவர் மட்டுமல்ல. சமுதாயத்தின் தலைவரும் அவர்தான். மக்களுடைய கருத்தை உருவாக்குபவரும், வழிகாட்டுபவரும், அவர்களை கண்காணிப்பவரும் மன்னர்தான். எனவே, பண்டைப் பாரம்பரியமான, தொன்மையான, காலத்தால் புடமிடப்பட்ட பழக்க வழக்கங்களை அவர் கணித்து மதிப்பிடுகிறார்; அந்தப் பழக்க வழக்கங்களில் அவசியமான மாற்றங்கள் செய்ய அவருக்கு அதிகாரம் உண்டு. ஆனால் ஆங்கிலேயர்கள் நம்மை ஆள ஆரம்பித்த பிறகு நம் நிலை என்ன?

முகலாயர்கள் நம்மை ஆண்ட போது நம்முடைய பழக்க வழக்கங்களை அவர்கள் பின்பற்றினார்கள். அவர்களுடைய பழக்கவழக்கங்களை நாம் பின்பற்றினோம். இரண்டுகலாசாரங்களும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தன; இதனால் சமூகத்தில் சில முன்னேற்றங்கள் ஏற்பட்டன. ஆனால் இந்த நாட்டின் அதிகார பீடத்தில் ஆங்கிலேயர்கள் அமர்ந்த பிறகு இந்நாட்டின் மிகப் பெரும்பாலான மக்களால் நெருங்க முடியாதவர்களாக, அணுக இயலாதவர்களாக அவர்கள் கருதப்பட்டார்கள்.

பிரிட்டிஷார் இந்த நாட்டின் எந்தப் பழக்க வழக்கத்தையும் மாற்ற அஞ்சினார்கள். ஆகையால் அவர்கள் எல்லாவிதமான பழக்க வழக்கங்களையும் இருந்த படியே அனுமதித்து மக்கள் அவரவர்கள் நிலையில் வாழ அனுமதித்தார்கள். அதில் இடையூறு செய்தால் தங்களுடைய ஆட்சிக்கு அது பாதகமாக அமையும்

எனக் கருதினார்கள். எனவே, இந்த நாட்டின் சமயத் துறையிலோ பழக்க வழக்கங்களிலோ தடையிடுவதில்லை என்ற நிலையை மேற்கொண்டார்கள். தாங்கள் மேற்கொள்ளும் இந்த நிலை சரியானது எனவும், நியாயமானது எனவும் கூடக் கருதினார்கள். இதுபோன்றே சமுதாய முன்னேற்றத்துக்கான மாற்றங்களை உயர் நீதிமன்ற நீதிபதிகளும் அனுமதிக்கவில்லை. நடைமுறையில் இருந்த பழக்க வழக்கங்களை ஏற்றுக் கொள்வதிலேயே அவர்கள் எப்போதும் கவனமாக இருந்தார்கள். இவ்வாறாக பழக்க வழக்கங்கள் எத்தகைய மாற்றமும் இல்லாமல் கல் போல் இறுகித் தொடர்ந்த காரணத்தால் 150 வருடக் காலத்திற்கு எந்த சமுதாய மாற்றமும் ஏற்படவில்லை.

சில நேரங்களில் சில பழக்கங்களின் குறைகளை சுட்டிக் காட்டிய மேல்நாட்டு மதவாதிகள் எந்த முன்னேற்ற நோக்கத் துடனும் அதைக் கூறவில்லை. மாறாக, குற்றம் காணும் நோக்கி லேயே, போக்கிலேயே அவ்வாறு செய்தார்கள்.

ஆனால் காலம் மாற மாற, ஜனநாயகப் பண்புகள் நிலைத்து நிற்க ஆரம்பித்தவுடன் வேறு வகையான மாற்றங்கள் தோன்ற ஆரம்பித்தன. இதற்கு ஆங்கிலக் கல்வியும் பெரிதும் துணை புரிந்தது.

ஆங்கிலம் படித்த இந்தியர்கள் மிக வேகமாக தங்கள் கலாசாரத்தை விடுத்து ஆங்கில கலாசாரத்தைப் பின்பற்றியதை ஆங்கில மதவாதிகள் ஏற்றுக்கொள்ளவில்லை. இம்மக்கள் உண்மையிலேயே புதிய கலாசாரத்தை ஏற்றுக்கொண்டார்களா அல்லது இது ஒரு பொய்மையான தோற்றமா என அவர்கள் ஐய முற்றார்கள். தங்களுடைய அதிகாரத்திற்கு அது பாதகமாக முடியும் என அவர்கள் நம்பினார்கள்.

இம்மாதிரியான மாற்றங்களினால் சமுதாயத்தில் ஒரு பெரிய மனமாற்றம் ஏற்படும் என அவர்கள் அஞ்சினார்கள். பிரம்மோ தத்துவம் பெரிதும் எதிர்க்கப்பட்டது. அது ஆங்கில அரசிற்கு அபாயமாக முடியும் என கருதப்பட்டது. இதன் காரண மாக ஆங்கிலேயர்கள் மிகவும் பழமைவாதியாக மாறினார்கள். சமுதாயத்தில் எந்த முன்னேற்றமும் ஏற்படாமல் இருக்கும்

வழக்கமே தொடர்ந்தது. பெண் வயது வந்த பின் திருமணம் செய்வது சட்டத்திற்கு புறம்பானது என பஞ்சாப் உயர்நீதிமன்றம் அறிவித்தது. இம்மாதிரியான தீர்ப்பு சமுதாய முன்னேற்றத்திற்கு எல்லாவிதமான தடையையும் ஏற்படுத்தியது.

இந்த நிலைமையை மாற்ற 1870ஆம் வருட சட்டம் 3 இயற்றப் பட்டது. இது பிரம்ம திருமணச் சட்டம் என வழங்கப்பட்டது. இந்தச் சட்டத்தின்படி திருமணம் செய்ய விரும்புவோர் தாங்கள் "நான் இந்துவோ, முஸ்லீமோ, கிருத்துவனோ, பார்சியோ அல்லது யூதனோ அல்ல" என அறிவிக்க வேண்டும். இம்மாதிரியான ஷரத்தின் காரணமாக அச்சட்டம் மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட வில்லை. அதற்கு அடுத்து சாரதா சட்டம் அமுலுக்கு வந்தது. அந்தச் சட்டத்தனால் சமுதாயத்தில் நல்ல முன்னேற்றவும் ஏற்பட்டது. ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாயிற்று. 1885ல் இந்திய தேசிய காங்கிரஸ் தோன்றிற்று. 1919 வரை அது ஒரு துணை சமூக சீர்திருத்த அமைப்பாக விளங்கிவந்தது. நாட்டைப் பீடித்துள்ள சமூகத் தீமைகளை அது சுட்டிக்காட்டி வந்ததோடு, இத்தீமைகளைக் களைவதற்கான பல்வேறு சட்ட நடவடிக்கைகளையும் அது பரிந்துரைத்தது. ஆனால் இந்த சட்ட மாற்றங்களைச் செயல்படுத்த பிரிட்டிஷ் அரசாங்கம் தயாராக இல்லை. மேலும் அந்நியர்களிடமிருந்து இம்மாதிரியான சட்ட மாற்றங்களை ஏற்றுக் கொள்ள சமுதாயமும்தயாராக இல்லை. அந்நிய ஆதிக்கம் கொடுக்கும் சமூக மாற்றத்தையும் ஏற்றுக் கொள்ளும் மனநிலை மக்களுக்கு இல்லை.

அதிர்ஷ்டவசமாக அந்தக் காலகட்டத்தை தாண்டி இப்போது நாம் வந்துள்ளோம். நம் தேசிய அரசில் முன்னேற் றதிற்கு வழி வகுக்கும் இம் மாதிரியான சட்டங்கள் உருவாகும் காலத்தில் நான் வாழ்ந்து வருவது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். நோக்கிலும் போக்கிலும் விரிவானதும், மிகுந்த பலனளிக்கக் கூடியதும், நம் சமூகப் பிரச்சினைகளுக்கு சிறந்த மருந்தாக இருக்கக் கூடியதுமான ஒரு முற்போக்கான சீர்திருத்தத்தை மேற்கொள்ள தேசிய அரசு முன்வந்துள்ளது. இவ்வகையில் பெண்களின் சொத்துரிமை, திருமணம், விவாகரத்து ஆகிய அனைத்துத் துறைகளையும் உள்ளடக்கிய ஒரு சிறந்த சட்டம் வருவது மிகவும் விரும்பத்தக்க ஒன்றாகும். காலம் செல்லச் செல்ல இன்னும் அதிக முன்னேற்றமான சட்டங்களை நாம் உருவாக்க முடியும்.

கணவன் இறந்த பின் மனைவிக்கு அளிக்கப்படும் உரிமைகளைப் பற்றி முதலில் கவனிப்போம். நம்முடைய சாத்திரங்களில் பெண்ணின் நிலை இவ்வாறு கூறப்பட்டுள்ளது; அவள் இளமையில் தந்தைக்கும், நடுத்தர வயதில் கணவனுக்கும், முதுமையில் மகனுக்கும் அடிமையாக இருக்கிறாள். இம்மாதிரி சொல்லப்படுவது பாதி அளவிற்குத்தான் உண்மை. ஆனால் அக்கூற்றில் உண்மை உண்டு. இவ்வாறெல்லாம் கூறுவது சில சமயங்களில் பயனுள்ளதாக இருப்பதாக நாம் கண்டாலும் அவற்றில் பொதிந்துள்ள உண்மை நிலையை நாம் உணர வேண்டும்; இவையாவற்றின் முழு முக்கியத்துவத்தை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

நம் முன்னுள்ள சட்டத் தொகுப்பின்படி ஒரு பெண்ணிற்கு சொத்து முழுமையாக கொடுக்கப்பட்டு அதை விற்பதற்கும் அவளுக்கு உரிமை அளிக்கப்பட்டுள்ளது. இவை எப்போது அமலுக்கு வரும் என்பதை சட்ட அமைச்சர் விளக்கினால் நன்றாக இருக்கும். இந்தச் சட்டத்தொகுப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டதற்குப் பிறகு ஒரு கணவன் இறந்துவிட்டால் அந்த மனைவிக்கு என்ன வகையான உரிமைகள் கிடைக்கும்? இந்த காலகட்டத்திற்கு ஓர் ஆண்டுக்குமுன் இறந்துவிட்ட கணவனின் மனைவிக்குள்ள உரிமைகளுடன் ஒப்பிடும்போது இவளுடைய உரிமைகள் யாவை? பின்னால் சொல்லப்பட்டவளுக்கு அனுபோக உரிமை மட்டும்தான் உள்ளது. இதற்கு எந்த வகையான மாற்றம் சொல்லப்பட்டுள்ளது? அனுபோக உரிமை மட்டும் உள்ள விதவை அந்த சொத்தை அடமானம் வைக்கவும் அல்லது விற்கவும் அவளுக்கு உரிமை வழங்கப்பட்டுள்ளதா? இந்த கேள்விக்கான விடையை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. தம்முடைய பதிலில் சட்ட அமைச்சர் இதற்கான விளக்கம் அளிப்பார் என எதிர்பார்க்கிறேன். ஒரு மகளின் ''உரிமைகள்'' யாவை? இதைத் தெரிந்து கொள்வதில் மிகவும் ஆவலாக உள்ளேன். மற்ற வெளிநாட்டு பிரமுகர்களுடன் விவாதிக்கும்போது நம் நாட்டு நிலையை நாம் பெருமையாகத்தான் சொல்வேன்.

ஒரு பழக்கத்தின் அல்லது ஒரு கோட்பாட்டின் உண்மை நிலையை அறிய தற்போதைய அதன் சீர்கெட்ட நிலைமையை மட்டும் ஆராயாமல், அதனுடைய அடிப்படை தத்துவத்தையும், அதன் பெருமையையும் நாம் அறிந்து கொள்ள வேண்டும். சாதாரண மக்கள் வாழ்வு சிறப்பாக அமையத்தான் அக்காலத்தில் நம் முன்னோர்கள் குழந்தைத் திருமணத்தை பின்பற்றினார்கள்.

இம்மாதிரியான திருமணத்தினால் ஒரு பெண் மிக இளம் வயதிலேயே வேறு ஒரு குடும்பத்தில் வாழத் தலைப்பட்டு அங்குள்ள நிலைமைக்கு தன்னைத் தயார் படுத்திக் கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது. ஆனால் அந்த சூழ்நிலை இப்போது மாறிவிட்டது. தற்போது திருமணம் செய்து கொள்ளாமலும் பிள்ளைப் பேறுகள் இல்லாமலும் பிரமச்சாரிகளாக வாழ்ந்து, மற்றவர் மனைவியரை விமர்சிப்பதில் பெரும் இன்பம் காணவோர் எண்ணிக்கை அதிகரித்தவரும் ஒரு காலகட்டத்தில் நாம் வாழ்ந்து வருகிறோம். திருமணம் செய்து கொண்டு பிள்ளைகள் பெற்றுக் கொள்வதைவிட அது சிறந்ததாக அவர்களுக்குத் தோன்றுகிறது. எனவே,மாறியுள்ள சூழ்நிலையில் குழந்தைத் திருமணம் எனும் கோட்பாடு ஏற்றுக் கொள்ளக் கூடியது அல்ல.

ஒவ்வொருவரும் அவரவர்கள் விருப்பப்படி தங்கள் வாழ்வை அமைத்துக் கொள்ள அவர்களுக்கு பூரண உரிமை உள்ளது. இதற்கான கட்டுப்பாட்டை விதிக்க சமூகத்திற்கு எந்த உரிமையும் இல்லை. சமூக நிலைமைகளும் பெரிதும் மாறிவிட்டன. எனவே, பழைமைக்கும் கடந்தகாலக் கட்டுதிட்டங்களுக்கும், வழக்கு முறைக்கும் நாம் அடிமையாகி விடக்கூடாது.

ஆனால் தற்போதுள்ள நிலைமையை நாம் எவ்வாறு சமாளிப்பது? எத்தனை எத்தனையோ புதல்வியர்களும், தங்கைகளும் பல்வேறு குடும்பங்களில் அல்லலுற்றுக் கொண்டிருக்கிறார்கள்; அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்; வாதனையும் வேதனையும் பட்டுக் கொண்டிருக்கிறார்கள், நமது அருமை பெருமைகளை நாம் மற்றவர்களுக்கு சொல்லிக் கொண்டிருக்கும் அதே நேரத்தில் நம் பெண்களின் இழிவினும் இழிவான நிலைமையை நம்மால் மறக்க முடியாது; தங்கள் குடும்பங்களிலேயே அவர்கள் வேறு வழி எதுவும் தெரியாது வதைபட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த அவலங்களில் இருந்த எல்லாம் விடுபட காதல் பாணம் தான் சிறந்த வழி என நான் கருதுகிறேன்; அழுகி நாற்றமெடுத்துப் போன நமது பழைய பழக்க வழக்கங்களுக்கு இதுதான் சரியான பரிகாரமாக இருக்க முடியும் என்று நினைக்கிறேன்.

ஆமதாபாத் சிறையில் இருந்த போது நான் ஓர் ஆங்கிலப் புதினம் படித்தேன். ''வெல்லற்கரிய பெண்கள்'' என்பது அந்தப் புதினத்தின் தலைப்பு. அச்சமயம் இங்கிலாந்தில் ஒரு போர் மூளும்

சூழ்நிலை உருவாகி இருந்தது. எப்படியும் போரைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று எல்லாப் பெண்களும் விரும்பினார்கள். ஆனால் ஆண்களோ இவர்களுக்கு எதிர் துருவமாக இருந்தார்கள். அவர்கள் கொலைவெறிப் பிடித்து அலைந்தார்கள். போரில் தங்கள் வீரதீரத்தைக் காட்ட வேண்டும் என்று துடித்தார்கள். அவர்களை எப்படித் தடுத்து நிறுத்துவது? இதற்குப் பெண்கள் ஒரு வழி கண்டு பிடித்தார்கள். அந்த் வழி என்ன? அவர்கள் சொன்னார்கள்: வாருங்கள், நாம் காதல் வேலை நிறுத்தம் செய்வோம். எந்தக் கன்னிப் பெண்ணும் தன் காதலனுடன் பேசக் கூடாது; எந்த மனைவியும் தன் கணவனுடன் பேசக் கூடாது; எந்தத் தாயும் தன் மகனுடன் பேசக் கூடாது. ஆண்கள் இவ்வாறு பகிஷ்கரிக்கப்பட்டார்கள். போர் ரத்து செய்யப்பட்டது என்று அறிவிக்கப்படும் வரை ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே எத்தகைய சமூக வாழ்க்கையும் நிலவவில்லை. இவர்களுடன் நாங்கள் சேர்ந்து இணைந்திருக்க மாட்டோம் என்று பெண்கள் சூளுரைத்தார்கள்.

இதேப் போன்று நம்முடைய கிராமங்களிலோ அல்லது நகரங்களிலோ ஏதோ ஒரு பெண்ணுக்கு அவள் கணவனால் தீங்கு ஏற்பட்டால் அதை எதிர்க்க மற்ற மனைவிமார்கள் முன்வர வேண்டும். அவர்கள் அனைவரும் ஒன்று கூடி ஒரு மன்றம் அமைத்து அதில் 24 மணி நேரம் தங்கியிருக்க வேண்டும். அப்போது நல்ல விளைவுகள் ஏற்படும். தீங்கு செய்யும் கணவனை மற்ற ஆண்கள் வழிக்குக் கொண்டுவருவார்கள். அவர்கள் அவனிடம் பின்வருமாறு கூறுவார்கள்: ''என்ன காரியம் செய்துவிட்டாய்? நம் குடும்பங்கள் எல்லாம் சிதைந்து போய்விட்டன. நீ உன் மனைவியைத் திரும்ப அழைத்து வந்தாலொழிய நமது வீடுகளெல்லாம் வெறிச்சோடிக் கிடக்கும்.''

இம்மாதிரி நான் சொல்வது இப்போது உங்களுக்கு நகைப்பாக இருக்கும். நம்முடைய குடும்பங்களில் நடக்கும் கணவன் - மனைவி பிரச்சினைகளுக்காக அவர்களுக்கு எதிராக வழக்குப் போட முடியுமா? கணவனும் மனைவியும் ஒருவருக்கு எதிராக ஒருவர் மலைமலையாகக் குற்றச் சாட்டுகளை அடுக்கிக் கொண்டே போவார்கள். இதனால் எந்தப் பயனும் விளையாது. ஒரு சமயம், கணவனுக்கும் மனைவிக்கு நடந்த சச்சரவில் நான் தலையிட்டு ஏன் அவளை அடிக்கிறாய் எனக் கணவனைக் கேட்டேன். அவ்வளவுதான் அந்த மனைவி பத்திரகாளியாகி விட்டாள்! என்மீது சீறிவிழுந்தாள்: ''என்னை அடிக்க என் கணவ

னுக்கு எல்லா உரிமையும் இருக்கிறது. அதைக் கேட்க நீ யார்?'' எனப் பொரிந்து தள்ளினாள். குடும்ப விவகாரங்களில் மூன்றாவது மனிதர் தலையீட்டை அவர்கள் எளிதில் ஏற்றுக் கொள்வதில்லை. கவுரவர்களும் பாண்டவர்களும் சண்டையிட்டுக் கொண்டபோது அவர்கள் பின்வருமாறு கூறுவது உண்டு: ''5 பேருக்கு எதிராக நாங்கள் 100 பேர் இருக்கிறோம். ஆனால் மூன்றாவது நபருக்கு எதிராக நாங்கள் 100 மற்றும் 5 பேர் இருக்கிறோம்.'' ஆக நாம் குடும்ப சண்டைகளில் தலையிடும்போது இரு சாராருமே நமக்கு எதிராகக் கச்சை கட்டுகிறார்கள்.

மனைவிக்கு என்று தனியாக சொத்து இருப்பது மிக அவசியம். ஒரு மனைவியின் நிலை மிகவும் இரங்கத்தக்கதாக இருப்பதைக் காண்கிறேன். அவளுடைய சகோதரி மகன் வருகிறான். அவருடைய சகோதரிகள் வருகிறார்கள். அவர்கள் வரும்போது அவர்களுக்கு அன்பளிப்பு அளிக்க விரும்புகிறாள். ஆனால் இதற்காக கேவலம் ரூ. 5 க்குக் கூட அவள் தன் கணவனது நல்லெண்ணத்தை எதிர்பார்க்கும் சூழ்நிலை உள்ளது. அச்சமயம் கணவன்மார்கள் எத்தகைய மனநிலையில் இருப்பார்கள் என்று சொல்ல முடியாது. சிலர் நல்ல மன நிலைமையில் இருப்பார்கள். சிலர் நல்ல மன நிலைமையில் இல்லாதிருப்பார்கள். எனவே மனைவிக்கு அவளுக்கென்று ஏதாவது சொத்து இருக்க வேண்டும். இதற்காக அவள் தன் நகையை விற்கமுடியுமா? எந்தப் பெண்ணும் தன் நகையை விற்கமாட்டாள். தன் கணவன் இறந்த பிறகும் நகைகளை விற்க விரும்பமாட்டாள். தனக்கும் தன் கணவனுக்கும் இடையே உள்ள பாலமாக அதை அவள் கருதுவாள். இது எனக்கு நன்றாகத் தெரியும். பலபெண்களிடம் நான் இதைப் பற்றிப் பேசி இருக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் நீண்ட நேரம் பேச விரும்புகிறாரா?

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமைய்யா :** என்னை மன்னியுங்கள். நான் நேரத்தைக் கவனிக்கவில்லை. என் பேச்சைத் தொடர விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** இப்போது இந்த அவை அரை மணி நேரம் ஒத்திவைக்கப்படுகிறது. 5.30க்கு மீண்டும் கூடும்.

*பிற்பகல் 5.30 மணி வரை அவை ஒத்திவைக்கப்பட்டது.*

---

*5.30 மணிக்கு மீண்டும் அவை கூடியது. சபாநாயகர் மாண்புமிகு மாவலங்கர் அவைக்கு தலைமை தாங்கினார்.*

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா :** சபாநாயகர் அவர்களே, ஒரு பெண்ணிற்கு அவள் தந்தையிடமிருந்து கிடைக்கும் சொத்துரிமை பற்றிக் கூறிக்கொண்டிருந்தேன். நான் எனது சில சிநேகிதிகளிடம் பின்வருமாறு கேட்டேன்: ''நீங்கள் வேறு ஒரு குடும்பத்திற்குச் சென்று அங்கு ராணியாக இருக்கப் போகிறீர்கள். என்னுடைய மனைவிதான் என் வீட்டின் ராணியாக இருக்கிறாள். அவளிடம்தான் வீட்டு இரும்புப் பெட்டிச் சாவிகள் இருக்கின்றன. அதேபோல் நீங்களும் இன்னொரு வீட்டின் இரும்புப் பெட்டிச் சாவியை வைத்திருக்கப் போகிறீர்கள். அப்படியிருக்கும்போது நீங்கள் ஏன் சொத்துரிமை கேட்கிறீர்கள்?'' இவ்விதம் வீட்டு ராணி யாக இருப்பது மட்டும் போதுமானது அல்ல. கணவன் எவ்வளவு தான் நல்லவனாக இருந்தாலும் எப்போதும் அவன் தயவில் இருப்பது சரியானதன்று. அவளுக்கென்று தனியான உரிமை இருப்பதுதான் முக்கியமானது.

பெண்களுக்கு தந்தையின் சொத்தில் உரிமை கொடுப்பது மூலம், மகன்களின் உரிமையில் தலையீடாகாதா என நினைத்தேன். ஆனால் சீதனச் சொத்தில் மகனுக்கு உரிமை கொடுத்திருப் பதன் மூலம் இருவரும் சமமாக பாவிக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. ஆகை யால் மகனும் மகளும் சம அளவிற்கு இருக்கும் வகையில் ஒவ்வொருவரும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இனி வருங்காலத்தில் என்னுடைய பெண்ணை இன்னா ருக்குத் திருமணம் செய்து கொடுக்கிறேன் என்றில்லாமல் வேறு வகையாக திருமணப் பத்திரிகைகள் அச்சிடப்பட வேண்டும். என்னுடைய மகளும் இன்னாரும் திருமணம் செய்துகொள்ள இருக்கிறார்கள் என அச்சிடவேண்டும். ஆனால் மலபார் பகுதி யைத் தவிர மற்ற இடங்களில் திருமணத்திற்குப் பின் பெண்தான் கணவர் இல்லத்திற்குப் போகிறாள். மலபாரில்தான் திருமணத் திற்குப் பின் கணவன் மனைவியின் வீட்டிற்குப் போகிறான்.

ஒரு பெண் திருமணத்திற்குப் பின் கணவர் வீட்டிற்கு போனவுடன் அவளுக்கு அளிக்கப்பட்ட பொருட்களை அவள் அனுபவிக்க முடியுமா என்பது சந்தேகத்திற்கு உரியதாகும். நான் என்னுடைய முகமதிய நண்பர்களிடம் முஸ்லீம் சட்டப்படி

பெண்ணிற்கு வழங்கப்படும் சொத்தை அவள் அனுபவிக்கிறாளா எனக் கேட்டபோது பழக்கத்தில் அது இல்லை என்ற பதில்தான் கிடைத்தது.

80 விழுக்காடு நிலச் சுவான்தார்கள் வரியாக 21/2 ஏக்கர் நஞ்சை அல்லது 5 ஏக்கர் புஞ்சை நிலத்திற்கு ரூ. 10 மட்டும்தான் செலுத்துகிறார்கள். அவர்களா தங்கள் பெண்களுக்கு சொத்தில் உரிமை அளிக்கப்போகிறார்கள். இது சட்டரீதியாக கொடுக்கப் பட்டாலும் நடைமுறையில் சொத்தை அனுபவிக்கும் சூழ்நிலை இல்லை என்றே நான் கருதுகிறேன் சமுதாயத்தில் பெண்ணின் தகுதியை உயர்த்தியதின் மூலம் முழு உரிமையாக அவளுக் கென்று சொத்துரிமை அளித்து அவளுடைய தன்மானம் உயரு வதற்கு வழி செய்ய வேண்டும். திருமண உறவு என்பது அடிமை சாசனமல்ல - ஒரு முறை திருமணம் நடந்தால் அந்த கணவன் எப்போதும் கணவனே என்றும் அதே முறையில் ஒரு மனைவி எப்போதும் மனைவியே என்றும் சொல்லி, திருமணம் சொர்க்கத் தில் நிச்சயிக்கப்பட்டது என்று சொல்வது எப்போதும் சரியானதாக இருக்க முடியாது.

மேற்சொன்ன கொள்கை சரியானது என்று மேலெழுந்த வாரியாக தோன்றினாலும், கணவனுடைய முறைகேடான வாழ்க்கை குஷ்டரோகம் போன்ற வியாதி, ஆண் மலட்டுத்தன்மை மற்றும், சட்ட அமைச்சர் சொல்லிய பல்வேறு காரணங்கள், கணவனிட மிருந்து பிரிந்து வாழ மனைவிக்கு உரிமை உண்டு. தான் எந்த முறையில் வேண்டுமானாலும் வாழும் உரிமையும் அவன் விரும்பினால் முதல் மனைவி இருக்கும்போதே, இரண்டாவது திருமணம் செய்துக் கொள்ளலாம் என்ற உரிமையும் கணவனுக்கு இருந்தால், அதே உரிமை தன்னுடைய கணவன் உயிருடன் இருக்கும்போது, மனைவி இரண்டாவது கணவனை திருமணம் செய்ய முடியுமா? அந்த சூழ்நிலையை எண்ணிப் பாருங்கள்.

ஒரு கணவன் ஐரோப்பிய முறையில் உடை உடுத்திக் கொண்டு தன்னுடன் வரும் மனைவி, இந்து முறைப்படி சேலை அணிந்து வரவேண்டும் என்று நினைக்கிறான். இதை மாற்றி அமைத்து கணவன் வேட்டியுடனும், மனைவி ஐரோப்பிய உடை யிலும் சென்றால் அது நன்றாகவா இருக்கும்? அது மிக அபத்தமாக இருக்கும்.

ஆங்கிலத்தில் தயார் செய்த பத்திரத்தில், தமிழில் கையெழுத்திட்டால் அது எப்படி இருக்குமோ, அப்படிதான் இது இருக்கும். ஆங்கிலத்தில் தயார் செய்த பத்திரத்தில் தெலுங்கில் கையெழுத்திடக்கூடாது என ஓர் அதிகாரி கூறினார். நான் அதற்கு தெலுங்கில் தயார் செய்த பத்திரத்தில் ஆங்கிலத்தில் கையெழுத்திடுவதும் அபத்தமானது என்று கூறினேன். ஆகையால் நம்முடைய தமக்கை, தங்கை, அன்னை மற்றும் பெண்களுக்கு எல்லா உரிமைகளையும் அளித்து, குறிப்பாக கணவனிடமிருந்து தகுந்த காரணங்களுக்காக, பிரிந்து வாழ்வதற்கும், திருமண உறவை முறித்துக் கொள்வதற்கும் உரிமை இருக்க வேண்டும்.

பெண்களின் உரிமைக்காக போராடும் பல பெண் உறுப்பினர்கள் இந்த அவையில் இருக்கிறார்கள். நான் அவர்களுக்கு ஒன்றை கூற விரும்புகிறேன்: மண முறிவு என்பது ஒரு கடைசி ஆயுதமாகவே இருக்க வேண்டும். வேறு எந்த முறையிலும் கணவன் மனைவியருக்கு இடையே உள்ள பிரச்சினை தீர்க்கப்பட முடியாத ஒன்றாக இருக்கும்போதுதான் அந்த உரிமையை பயன்படுத்த வேண்டும். அற்பக் காரணங்களுக்காக, கடைசி ஆயுதத்தைப் பயன்படுத்தக் கூடாது. சமுதாயக் கருத்து, தனியாக அவர்களிடம் பேசுவது, குடும்ப உறுப்பினர்களிடம் பேசுவது போன்ற பல்வேறு வழிகள் இருக்கின்றன. கணவன் மனைவிக்கிடையே ஏற்படும் பிரச்சினை மிகவும் சாதாரணமானது. பெரும்பாலான பிரச்சினை பகலில் தோன்றி இரவில் முடிந்துவிடும். இம்மாதிரியான பிரச்சினைகள் தொடர்வதில்லை. அவற்றை நாம் பெரிது படுத்தக்கூடாது.

அமெரிக்காவில், ''இன்டியோனோபோலிஸ்'' என்ற பெயரில் ஒரு மாகாணம் இருக்கிறது. அங்குள்ள ரயில் நிலையத்தில் உள்ள சுமையாட்கள் ''இன்டியோனோபோலிஸ், இருபது நிமிடங்களில் விவாகரத்து'' என்று கூச்சலிடுவார்கள். மணமுறிவு நீதிமன்றம் அந்த ரயில் நிலையத்திலேயே இருக்கிறது. ரயிலில் வந்து கொண்டிருக்கும்போது, கணவன், மனைவி இடையே ஏதேனும் பிரச்சினை எழுமானால் அந்த ரயில் நிலையத்தில் இறங்கி, மண முறிவு உத்திரவைப் பெற்றுக் கொண்டு மீண்டும் அதே ரயிலில் தங்கள் பயணத்தைத் தொடரலாம். நம்முடைய நிலைமை இவ்வாறு இருக்கக்கூடாது. ஒரு பெண் அணிந்திருக்கும் நகையை எவ்வாறு மிகவும் தவிர்க்க முடியாத நிலைமையில் அடகுவைப்போமோ அவ்வாறே நமது மண முறிவு என்பது கடைசி ஆயுதமாக இருக்க

வேண்டுமே தவிர, எடுத்தோம் கவிழ்த்தோம் என்ற முறையில் அதைப் பயன்படுத்தக்கூடாது.

அடுத்ததாக, தத்து எடுப்பதை பற்றிப் பார்ப்போம். இது மிகக் கடினமான பிரச்சினை, மாண்புமிகு சட்ட அமைச்சர் மிதாக்ஷரா, தயபாகா ஆகிய இரண்டு சட்டங்களையும் ஒன்றாக்கியுள்ளார். தயபாகா சட்டம் வங்காளத்திலும், மிதாக்ஷரா சட்டம் தென்னிந்தியாவிலும் பின்பற்றப்படுகிறது. மாயுகா என்ற சட்டம் பம்பாயில் பின்பற்றப்படுகின்றது. இந்தச் சட்டத்தின்படி பிராமணரால்லாத சமூகத்தில் ஒரு குழந்தையைத் தத்தெடுக்க விதவைக்கு கணவனுடைய அனுமதி தேவையில்லை; விதவை தன் விருப்பம்போல் ஒரு குழந்தையைத் தத்து எடுக்க முடியும்.

பத்து பனிரெண்டு ஆண்டுகளுக்கு முன்பு பிரிவி கவுன்சில் அளித்த ஒரு தீர்ப்பைப் படித்தேன். மிதாக்ஷரா சட்டப்படி இத்தகைய தத்தெடுப்பு சாத்தியமில்லாத இதர இடங்களிலும் பம்பாயில் நடைமுறையிலுள்ள சட்டம் பின்பற்றப்பட வேண்டும் என்று விரும்புகிறேன். எதற்காக தத்து எடுக்கிறார்கள்? குடும்பத்தினுடைய தொடர்ச்சிக்காகத்தான் தத்து எடுக்குகிறார்கள். காலமான கணவனுக்குள்ள உரிமை, மனைவிக்கும் இருக்க வேண்டாமா? ஆணுக்கு மட்டும் உள்ள உரிமையாக இதைக் கருத முடியுமா? ஒரு தாய்க்கு தத்து எடுக்கும் உரிமை இருக்க வேண்டும். கணவனுடைய அனுமதி எழுத்து மூலமாகவோ அல்லது உயில் மூலமாகவோ இருக்க வேண்டும் என்பது சரியல்ல. ஆங்கில சட்டப்படி உயில் என்பது வாய் மூலமாகக்கூட இருக்கலாம். அது எழுதப்பட்டால் இரண்டு சாட்சிகள் இருக்க வேண்டும். வாய் மொழி உயில் மூலமாக லட்சக்கணக்கான, கோடிக்கணக்கான சொத்துக்கள் மாற்றப்பட்டுள்ளன. ''எல்லாம் என் மனைவிக்கே'' என ஒரு துண்டு காகிதத்தில் எழுதியது செல்லத்தக்க ஒன்றாக கருதப்பட்டது. அப்படி இருக்கும் போது மனைவி தத்து எடுக்க கணவன் வாய்மொழியாக அனுமதி கொடுத்தால் அது செல்லாது என சொல்வது சரியல்ல. இந்த முக்கியமான கருத்தை இந்தப் புதுச் சட்டத் தொகுப்பைப் பரிசீலித்து வரும் பொறுக்குக் குழு கவனிக்க வேண்டும். *(ஓர் உறுப்பினர்: எதற்காக அனுமதி?)* அனுமதி தேவை என்றால் ஏன் அது வாய் மொழியாக இருக்கக் கூடாது? தத்து எடுக்கும் சட்டத்தை எந்த அளவிற்கு சுலபமாக மாற்ற முடியுமோ, அந்த அளவுக்கு மாற்ற வேண்டும். அடுத்ததாக ஒருதார திருமண முறையைப் பற்றிக் கவனிப்போம்.

திருமணத்திற்காக கணவனைத் தேர்ந்தெடுக்கும்போது என்னென்ன விஷயங்களை கவனிக்க வேண்டும் என்பதை தெரிந்துக் கொள்ள முடியாத நிலையில் நம் இளம் பெண்கள் இருக்கிறார்கள். இது துரதிர்ஷ்டவசமானது. பழங்கால வழக்கு ஒன்று உள்ளது. அதன்படி கணவன் வீட்டாரின் செழிப்பு, அவனது தோற்றம், குடும்பப் பாரம்பரியம், குடும்பக் கலாசாரம் முதலியவற்றைக் கவனிக்க வேண்டும். ஆனால் தற்போதுள்ள நிலைமை வேறுவிதமாக இருக்கிறது.

சில படித்த பெண்கள், எதைப் பற்றியும் கருத்தில் கொள்ளாமல் தங்களுடைய கணவன்மார்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டவர், ஏற்கனவே திருமணமாகி மனைவி மற்றும் ஐந்தாறு குழந்தைகளுடன் வசிப்பவராக இருக்கிறார். அவர்களது கல்லூரி நாட்களில் எப்படிக் கணவரை தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற விவரம் தெரியாத காரணத்தினால்தான் இந்த சூழ்நிலை ஏற்படுகிறது. இதைப்பற்றி வெளிப்படையாகப் பேச எல்லோரும் அச்சப்பட்டாலும் தனிப்பட்ட முறையில் பேசும்போது, இது குறித்து மிக விரிவாக பேசுகிறார்கள். விலக்கப்பட்ட கனியை யாரும் சுவைத்துப் பார்க்காமல் இருப்பதில்லை. ஆகையால் பெண்கள் படிக்கும்போது இதைப் பற்றிய கல்வியை அவர்களுக்கு அளிக்க வேண்டும். ஒரு சமயம் என்னுடைய நண்பர் ஒருவருடன் உரையாடிக்கொண்டிருந்தேன். தனது கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அவர் தமது மகளுக்கு அளித்திருந்தார். அவர் தான் தேர்ந்தெடுத்த ஒரு மணமகனைப் பற்றிய விவரத்தை தன்னுடைய மகளிடம் கூறிய விவரத்தைச் சொன்னார். தான் தேர்ந்தெடுத்துள்ள நபர் பார்ப்பதற்கு நன்றாக இருப்பதாகவும், சட்டம் பயின்று வழக்கறிஞராகப் பணியாற்றுவதாகவும், பெரிய பணக்காரருடைய புதல்வராக இருப்பதாகவும், பெரிய வீட்டின் அதிபதியாக இருப்பதாகவும் கூறினார். அதற்கு அந்த மகள் நீங்கள் சொல்லும் நபருக்கு மோட்டார் கார் போன்ற வசதிகள் இல்லை என்று, சொல்லி மறுத்துவிட்டாள். மோட்டார் கார் முதலான வசதிகள் உள்ள நபரைத் தான் நான் மணந்து கொள்வேன் என்று அவள் கூறினாள். இதுதான் சரியானபடி போதனை அளிக்கப்படாத இளம் மக்களின் மனோபாவம், மனப்போக்கு, மனநிலை என்று கூறலாம். எனவே இதுபோன்ற விஷயங்களைப் பற்றி எல்லாம் அவர்களுக்குப் போதிப்பது அவசியம். திருமணத்தைப்பற்றிச் சட்டம் இயற்றினால் மட்டும் போதாது. ஒரு தார திருமண முறையைப் பற்றியும், திருமணம்

செய்யும்போது கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளைப் பற்றியும் எல்லோரும் முழுமையாகத் தெரிந்து கொள்ளும் வகையில் எடுத்துரைக்க வேண்டும். இது மிக மிக முக்கியமான ஒன்றாகும்.

இந்த மசோதாவின் ஒவ்வொரு அம்சத்தையும் நான் வரவேற்கிறேன். இதில் அங்கொன்றும் இங்கொன்றுமாக சில குறைபாடுகள் இருந்தால், குழுவின் உறுப்பினர்கள் அதைச் சரிசெய் வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. எனக்கு 68 ஆண்டு அனுபவமுள்ளது. இன்னும் பல மணி நேரம் விரிவாக பேச முடியும். ஆனால் இந்த அவை ஏழு மணிக்குள் முடிக்கப்பட வேண்டும் என்ற கட்டாயம் இருக்கின்ற காரணத்தினால், என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக் கொள்கிறேன். என்னுடைய சகோதர, சகோதரிகள் பேச மிகுந்த ஆர்வமுடன் இருக்கிறார்கள். நானும் அவர்களுடைய பேச்சைக் கேட்க விரும்புகிறேன்.

***திரு. நசிருத்தீன் அகமது** (மேற்கு வங்காளம் முஸ்லீம்) : அய்யா, என்னுடைய நண்பர்கள் சொல்லிய சில கருத்துக்களை நான் அப்படியே சொல்கிறேன் என்ற குற்றச்சாட்டுக்கு உள்ளான துர்ப்பாக்கியமான நிலையில் நான் இருக்கிறேன். இந்த மசோதா வுக்குப் பல எதிர்ப்புகள் இருக்கின்றன. ஆனால் என்னை பொறுத்த வரையில் இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன். இதனுடைய பல பிரிவுகள் எங்கள் சமூகத்திலுள்ள அநேக சட்டங்களுக்குப் பெரும்பாலும் ஏற்புடையவையாக இருக்கின்றன. நடைமுறை விளைவுகளைப் பொருட்படுத்தாமல் எல்லோருக்கும் நன்மை செய்ய இந்த மசோதா முற்படுகிறது. ஓரளவு அச்ச உணர்வுடன் பேச முற்படுகிறேன். இந்த மசோதாவை எதிர்த்து சிம்ம கர்ஜனை செய்யக்கூடிய ஜாம்பவான்களே உறுதி வாய்ந்த ஐந்து பெண் உறுப்பினர்களைச் சமாளிக்க இயலாமல் அடக்கி வாசிக்க வேண்டியவர்களாக இருப்பதைக் காணும் சூழ்நிலையில் நான் எடுத்துரைக்க ஏற்றுக் கொண்டுள்ள கருத்துக்களைச் சற்று அச்சத்துடனேயே சொல்ல முற்படுகிறேன்.

ஐயா, மாண்புமிகு சட்ட அமைச்சர் எங்களுக்குச் சில வெளி யீடுகளை கொடுத்துள்ளார். அவ்வாறு கொடுக்கப்பட்ட வெளியீடுகளில் தொகுத்துரைக்கப்பட்டுள்ள கருத்துக்களைப் பற்றி எங்களுக்கு ஏதும் சொல்லவில்லை. இந்த வெளியீடுகள் இப்போதுதான்

* அ.நி.ச. (சட்ட) விவாதங்கள், டி., தொகுப்பு 4, ஏப்ரல் 9, 1948, பக்கங்கள் 3639-42.

எங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. இந்த வெளியீடுகளை படித்து, விரிவாக ஆராய்ந்து பார்த்து உறுப்பினர்கள் தங்கள் கருத்துக் களைச் சொல்ல வேண்டுமென்று எதிர்பார்த்தால் அதற்கு போதிய கால அவகாசம் இல்லை. இந்து சட்டக் குழுவின் அறிக்கை ஒன்று உள்ளது. அதில் பல்வேறு கருத்துக்கள் சொல்லப்பட்டுள்ளன. அந்த அறிக்கை உறுப்பினர்களுக்கு விநியோகிக்கப்படவில்லை. *(ஓர் உறுப்பினர்: ''அது விநியோகிக்கப்பட்டுள்ளது'')* இல்லை, விநியோகிக்கப்படவில்லை. இந்தப் புத்தகம் கொடுக்கப்பட வில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நூலகத்தில் அது நீண்டகாலமாக வைக்கப்பட்டிருந்தது.

**திரு. நசிருத்தீன் அகமது :** அது நீண்டகாலமாக வைக்கப் படவில்லை. மிக சமீப காலமாகத்தான் அது நூலகத்தில் வைக்கப் பட்டது. நான் புத்தகக் கடையிலிருந்து அதை வாங்கினேன். மிக சமீபமாகத்தான் சில பிரதிகள் நூலகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** (சென்னை - பொது) விஷயம் என்ன?

**திரு. நசிருத்தீன் அகமது :** ரங்காவைப் போன்ற மதிப் பிற்குரிய உறுப்பினர் 'விஷயம் என்ன?' என்று கேட்பதிலிருந்து, ஒன்று தெளிவாகிறது....

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா :** நீங்கள் எதைப் பற்றிக் குறிப்பிடுகிறீர்கள் என்றுதான் கேட்டேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்து சட்டக் குழுவின் அறிக்கை.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா :** அது ராவ் குழுவின் அறிக்கை. பொது மக்கள் பார்வைக்கு அது ஓராண்டுக் காலமாகவே வைக்கப் பட்டு இருக்கிறது.

**திரு. சபாநாயகர் :** அது எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும். மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது பேச்சைத் தொடர லாம்.

திரு. நசிருத்தீன் அகமது : அந்த அறிக்கை சமீபத்தில் தான் வெளியிடப்பட்டது. காலஞ்சென்ற நீதிபதி டி.என். மிட்டரின் மாறுபட்ட கருத்து அந்த அறிக்கையில் இடம்பெற்றுள் ளது. இந்த மசோதாவிற்கு எதிரான பல்வேறு கருத்துக்களைச் சேகரித்து அதில் அவர் குறிப்பிட்டிருக்கிறார். அவற்றை நான் படிக்க விரும்பவில்லை. அந்தக் கருத்துகளை அவர் பிராந்திய வாரியாகவும், தலைப்பு வாரியாகவும் பிரித்து அதில் விவரமாக குறிப்பிட்டிருக்கிறார். அவற்றைப் பற்றி எல்லாம் கவனிக்க இப்போது நேரமில்லை. ஆனால் இந்த மசோதாவின் கோட்பாடு கள் முழு இந்து சமுதாயத்தில் அதாவது இந்து சமுதாயத்தின் வைதிகப் பிரிவால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்று அவர் கூறியிருக்கிறார்.

அரசாங்கம் இந்த மசோதாவைப் பற்றி கொடுத்துள்ள பல்வேறு தரப்பினருடைய கருத்துக்களையும் எனக்குக் கொடுக்கப்பட் டுள்ள மிகக் குறைந்த கால அவகாசத்தில் மிக கவனமாகப் படித்துப் பார்த்தேன். இந்த மசோதாவுக்கு எதிராக மிகப் பெருமள வில் கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன. இந்தக் குழு வங்கா ளத்தில் பல்வேறு தரப்பினரின் கருத்தை கேட்டபோது அங்கு கருத்து ஒரே மாதிரியாக இருந்தது. இப்போது கொடுக்கப்பட்டுள்ள அறிக்கையிலும் வங்காளத்தின் கருத்து ஒரே மாதிரியாக இருக்கிறது. அந்தக் கருத்து இந்த மசோதாவிற்கு எதிராக உள்ளது.வங்காள அரசின் சட்டச் செயலர் தமது கருத்தை சொல்லியிருக்கிறார். அறிக்கை எண். 4-ல் கருத்து 17-ல் அவரது இந்தக் கருத்து இடம் பெற்றிருக்கிறது. அவரது கருத்தும் இந்த மசோதாக்கு எதிராக இருப்பதைப் பார்க்கிறோம். இந்த மசோதாவை பரி சீலனைக்கு எடுத்துக்கொள்ள இது தகுந்த நேரமல்ல என்று அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. (ஓர் உறுப்பினர்: அது எப்போது?'') அதில் எந்தத் தேதியும் போடவில்லை. ஐந்தாறு நாட்களுக்கு முன்புதான் அது உறுப்பினர்களுக்கு விநியோகிக்கப் பட்டுள்ளது. இந்த மசோதா மிகப் பெரிய மாற்றத்தை உண்டு பண்ணக் கூடிய ஒன்றாகும். ஆனால் அப்படியிருக்கும்போது இந்த மசோதாவைப்பற்றிய கருத்துக்கள் சரியான முறையில் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படவில்லை. இந்த மசோதா சம்பந்தமாக தெரிவிக்கப்பட்டுள்ள பல்வேறு எதிர்ப்புக்களையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். பலதரப்பட்ட சமூகத் தினரைக் கொண்டுள்ள இந்த அவை இம் மசோதாவைப் சீலனைக்கு எடுத்துக்கொள்ளக் கூடாது; அப்படி எடுத்துக் கொண்டால்

பல்வேறு சமூகங்களாகச் சேர்ந்தவர்கள் இம் மசோதாவுக்குத் தங்கள் ஆதரவைத் தெரிவித்து வைதிக இந்து சமயத்தின் இலட்சியத்தைப் பாழ்ப்படுத்தி விடுவார்கள் என்ற அச்சம் நிலவுகிறது. இந்தக் காரணத்தினால், இந்து சமூகம் இம்மசோதாவை கடுமையாக எதிர்க்கும் நிலையில் இந்த மசோதாவை நான் ஆதரிக்கவில்லை என்று கூறிக்கொள்ள விழைகிறேன்.

பெண்களுக்குச் சொத்தில் பங்கு கொடுத்துள்ளதின் காரணமாக பல்வேறு வழக்குகள் வர வாய்ப்புள்ளது. இந்த முறையில் சொத்துக்களை சிறு சிறு அளவாகப் பிரிப்பதால், கூட்டுக் குடும்ப அமைப்பு தகர்ந்து விடும். முகமதியர்களுக்கிடையே சொத்துக்கள் சிறு சிறு அளவில் பிரிக்கப்பட்ட காரணத்தினால் முகமதியர்கள் எப்படி பாதிக்கப்பட்டார்களோ, அதே நிலைமை இந்துக்களுக்கும் ஏற்படும். சுருதி, ஸ்மிருதி ஆகியவை கடவுளால் வழங்கப் பட்டவை என இந்துக்கள் கருதுகிறார்கள். இவற்றில் சொல்லப் பட்டுள்ள கருத்துக்களுக்கு எதிராக இப்போது அறிமுகப்படுத்தப் பட்டுள்ள மசோதாவில் பல பிரிவுகள் இருக்கின்றன. இந்த காரணத்திற்காக இந்த மசோதா கடுமையாக எதிர்க்கப்படுகின்றது. மத நம்பிக்கையின் அடிப்படையிலுள்ள இந்தக் கருத்துக்கள் அனைத்தையும் மூட நம்பிக்கை என நாம் தள்ளி விடமுடியாது. சமூகம் எப்போதும் ஒரே நிலையில் இருக்க முடியாது என்றாலும் காலம் காலமாக இந்தக் கருத்துக்கள்தான் இந்துக்களைக் கட்டுப்படுத்தி வந்துள்ளன. சமூகம் மாறித்தான் ஆகவேண்டும். ஆனால் அந்த மாற்றம் நம்முடைய அனுபவத்தின் அடிப்படையில், முன்னெச் சரிக்கையோடு ஏற்பட வேண்டும்.

இந்த மசோதா ஒரே அடியில் ஒரு பெரிய மாற்றத்தை உண்டு பண்ண முயற்சிக்கிறது. நாடு சுதந்திரம் அடைய வேண்டும் என்ற ஒரே இலட்சியத்திற்காகத்தான் இந்த அவை தேர்ந்தெடுக்கப் பட்டது. உண்மையிலேயே மிகப் பரந்த வீச்சும் சிக்கலும் கொண்ட இந்த மசோதாவும் அதன் கோட்பாடுகளும் இதன் முன்னர் மக்கள் அறியாதவை. ஆகையால் சுதந்திரத்துக்குப் பிறகு, அரசியல் சட்டம் இயற்றப்பட்ட பிறகு, அதன் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்ப டும் அவையினால் இந்த மசோதா பரிசீலிக்கப்பட வேண்டும்; பல்வேறு மக்களின் கருத்துக்களையும் தெரிந்து அது அறிமுகப் படுத்தப்பட வேண்டும். அப்போதுதான் பெரும்பாலான மக்கள் இதை விரும்புகிறார்களா என்று தெரியவரும். உண்மையில் இந்த

மசோதா சரியான முறையில் வீநியோகிக்கப்படவில்லை. சில அமைப்புகளுக்கு சில நாட்களும், வேறு சில அமைப்புகளுக்கு ஒரு சில மணி நேரம் மட்டுமே கொடுத்து அவற்றின் கருத்தைக் கேட்டிருக்கிறார்கள், இந்தக் காரணங்களினால் இந்த மசோதாவை இப்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளக் கூடாது என்று வாதிக்கப்படுகிறது.

இன்னொரு முக்கியப் பிரச்சினையும் இருக்கிறது. இந்துக் களுக்கு இந்தியா முழுமைக்கும் ஒரே வகையான சட்டத்தை அமுல்படுத்த இந்த மசோதா முயற்சிக்கிறது. ஆனால் குறுகியகால அளவில் இந்த முயற்சி வெற்றி பெறுவது சாத்தியமல்ல.

விவசாய நிலம் இந்த அவையின் அதிகார எல்லைக்குட் பட்டது அல்ல. அது பிராந்திய அவைகளின் அதிகாரத்திற்கு உட் பட்டதாகும். நாம் இயற்றும் சட்டம் விவசாய நிலத்தைத் தவிர்த்து மற்ற சொத்துக்களைத்தான் கட்டுப்படுத்தும். வருமான வரி சட்டத்திலும், வேறு சில சட்டங்களிலும் இந்தக் கருத்து சொல்லப் பட்டுள்ளது. விவசாய நிலம், மற்றும் விவசாயம் அல்லாத நிலம் என்று பிரித்தாலும் இரண்டிற்குமிடையே உள்ள நிலங்களும் இருக்கின்றன. இதல்லாமல் நமது சொத்தின் பெரும் பகுதி - சுமார் 80 சதவீதம் - வேளாண் நிலங்களாக அமைந்துள்ளது. இம்மாதிரியான நிலங்களைக் குறித்தெல்லாம் வெவ்வேறு மாகாணங்கள் வெவ்வேறு முறையில் சட்டம் இயற்ற முற்படலாம். சில மாகாணங்கள் எந்தச் சட்டமும் இயற்றாமலும் இருக்கலாம். மேலும் இந்திய ஒன்றியத்தில் தம்மை இணைத்துக் கொள்ளும்சமஸ்தானங்களும் இருக்கின்றன. இந்துச் சட்டம் என்பது ஒரேபோல் இருந்தாலும், இந்தியா முழுமைக்கும் ஒரே முறையில் இருக்க வேண்டும் என நினைத்தாலும், ஒவ்வொரு மாநிலமும் வெவ்வேறு முறையில் சட்டங்களை இயற்றலாம். ஒவ்வொரு மாகாண அரசாங்கமும் சமஸ்தான அரசாங்கமும் பெரும்பாலும் அந்தந்தப் பகுதியில் வழக்கிலுள்ள பழக்க வழக்கங்களுக்குஏற்பவும் அங்குள்ள மக்களின் கருத்துக் கேற்பவும் சட்டங்கள்இயற்றும். உதாரணமாக மேற்கு வங்கத்தை எடுத்துக் கொள்வோம். அந்த மாகாணத்தின் அபிப்பிராயத்துக்கு எதிரான ஒரு சட்டத்தை மேற்கு வங்க சட்டமன்றத்தால் இயற்றுவது என்பது மிகவும் கடினம். ஒரு பிராந்தியத்திலுள்ள சட்டம் மற்ற மாநிலத்திற்குப் பொருத்தமாக அமையாது.

இந்தக் காரணங்களினால் ஒரு மனிதனுக்கு வீடும், விவசாய நிலமும் இருந்தால் இரண்டு வகையான சட்டங்கள் அவனைக் கட்டுப்படுத்தும். ஒரு சட்டம் விவசாயமல்லாத நிலத்தையும் இன்னொரு சட்டம் விவசாய நிலத்தையும் கட்டுப்படுத்தும். நாம் எத்தகைய சட்டத்தை இயற்றினாலும் அது ஒரே மாதிரியானதாக இருக்க வேண்டும். எனவே அந்தந்த மாகாணங்களினுடைய கருத்தைக் கேட்டு அவற்றின் ஒப்புதலுடன் இம்மாதிரியான சட்டங்களை இயற்றினால் அது பொருத்தமாக இருக்கும். சில சட்டங்கள் விஷயத்தில் இந்த முறையை நாம் கடைபிடித்திருக் கிறோம். மாநிலங்களுடைய ஒப்புதல் பெற்று எல்லோருக்கும் பொதுவான சட்டத்தை இயற்றினால்தான் அது சிறப்பாக அமையும். மாநிலங்களுடைய ஒப்புதல் இன்றி எதுவும் சிறப்பாக செய்ய முடியாது. இது நமக்குள்ள சில சிரமங்கள்.

கால அவகாசம் குறைவாக உள்ளது என்பதை சட்ட அமைச்சர் கூறியுள்ளதால், இந்த மசோதாவின் முக்கிய அம்சங் களைக்கூட நாம் கவனிக்க இயலாது. பல்வேறு தரப்பினர் சொல்லிய கருத்துக்களை சரியான முறையில் கவனிக்கப்பட வில்லை. ஒவ்வொருவருடைய கருத்தையும் அலசி ஆராய்ந்து உறுப்பினர்களுக்குத் தொகுத்து வழங்கப்படாத காரணத்தினால் எதைப்பற்றியும் நாம் விரிவாக கவனிக்க முடியாது. இங்கு தெரி விக்கப்பட்டுள்ள கருத்துகளை தனிப்பட்ட உறுப்பினர்கள் மிக வேகமாக படிப்பதும், அவற்றை ஆராய்வதும் தங்களுடைய மூளையின் பல்வேறு பகுதிகளில் அவற்றை இருத்தி, ஒருமுகப் படுத்தப்பட்ட முறையில் அவற்றைப் பயன்படுத்துவதும் மிகவும் கடினம். இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு விஷயத்தில் மாண்புமிகு அமைச்சரின் இலாகா ஒவ்வொரு கருத்தையும் அதன் பல்வேறு கோணங்களில் அலசி ஆராய்ந்து சரியான முறையில் அவற்றை தொகுத்து அளித்தால்தான் உறுப்பினர்களுக்கு அது உதவும். இந்தக் கருத்துக்களுக்குள்ள ஆதரவு மற்றும் எதிர்ப்பின் பகைப்புலனில் அவற்றை வகைப்படுத்திக் கூறும் பொறுப்பை அமைச்சகம் ஏற்றுக் கொள்ள வேண்டும். இந்த முறையை வேறு சில சூழ்நிலைகளில் அவர்கள் பின்பற்றி இருப்பதைப் பார்க் கிறோம். அதேமுறை இங்கும் பின்பற்றப்பட வேண்டும்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை: பொது): நீங்கள் கூறியவை எல்லாம் சட்டக் குழு அறிக்கையில் தொகுத்து, வகுத்து, பகுத்து வழங்கப்பட்டுள்ளன.

**திரு. நசிருத்தீன் அகமது :** உங்கள் தகவலுக்கு நன்றி. ஆனால் நான் குறிப்பிடும் கருத்துகள் அறிக்கைக்கு பின்னால்தான் எங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. சட்ட அமைச்சகத்தால் மிக சமீப காலத்தில்தான் அவை எங்களுக்கு விநியோகிக்கப்பட்டன. மசோதாவில் அவை அப்படியே இருக்கின்றன.

ஆனால் இந்து சட்டக் குழுவின் அறிக்கையில் சேகரித்துக் கொடுக்கப்பட்டுள்ள கருத்துகள் இந்த மசோதா தயாரிக்கப்படு வதற்கு முன்பு பெறப்பட்டவை அதாவது விசாரணைக் கட்டத் தின்போது பெறப்பட்டவை. நான் இங்கு குறிப்பிடும் கருத்துகள் அறிக்கையில் பிரசுரிக்கப்பட்டவை அல்ல என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் கவனிக்கத் தவறிவிட்டார். அந்தக் கருத்துகள் தனியாக அச்சடிக்கப்பட்டு கொடுக்கப்பட்டுள்ளன. இந்தக்கருத்துக்களைத் தான் நான் இங்கு குறிப்பிடுகிறேன். இந்தக் கருத்துக்களின் பல்வேறு அம்சங்களையும் அலசி ஆராய்ந்து அவை கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். இதைப்பற்றி மேலும் நான் பேச விரும்பவில்லை. தனிப்பட்ட முறையில் இந்த மசோதாவிற்கு என்னுடைய ஆதரவை தெரிவிக்கிறேன். ஆனால் இங்கு நான் குறிப்பிட்டிருப்பவை என் நண்பர்கள் சிலர் தெரிவித்த கருத்துக்களேயாகும். இன்னும் வேறு சில கருத்துக்களும் இருக்கின்றன. அவை அவ்வளவு முக்கியமானவை அல்ல. அவகாசம் குறைவாக இருப்பதால் என்னுடைய பேச்சை சுருக்கிக்கொள்ள விரும்புகிறேன்.

பொதுமக்களின் கருத்திற்கு ஏற்ப சட்டம் அமைய வேண்டுமே தவிர, எந்தக் கருத்தையும் பொது மக்களின் மேல் திணிக்கக் கூடாது. அரசியலுக்கு தந்தை எனக் கருதப்படும் எட்மண்ட் பர்க் என்ற அறிஞரின் கருத்தை நான் இங்கு மேற் கோள் காட்ட விரும்புகிறேன். ஒரு சமயம் அவர் பின்வருமாறு கூறினார்:

> ''சட்டம் என்பது பொதுமக்களின் கருத்தை பிரதிபலித்து அதற்கு ஒரு வடிவம் கொடுத்து அமுல்படுத்துவதுதானே தவிர கருத்துக்களை திணிப்பதல்ல.''

பொதுமக்களின் ஆதரவு இந்த மசோதாவிற்கு இல்லை என்பது பொதுவான எதிர்ப்புகளிலிருந்து தெரிகிறது. படித்த மேல் மட்டத்திலுள்ள சிலரும், நவ நவீன நாகரிகம் பெற்ற சில பேரும் தான் இந்த மசோதாவிற்கு ஆதரவாக இருக்கிறார்கள். ஆனால்

பெரும்பாலான மக்கள் இதைப்பற்றி எதையும் தெரிந்துக் கொள்ளக் கூடிய நிலையில்லை. இந்த மசோதாவின் கருத்துக்கள் அவர்களைச் சென்று அடையவில்லை; இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த இந்த விஷயம் முழு அளவுக்கு அவர்களிடையே விநியோகிக்கப் படவில்லை. இந்த அவை தகுந்த வழிகாட்டுதலுடன் இந்த மசோதாவை பொறுக்குக் குழுவிற்கு அனுப்ப வேண்டும். ஆனால் எந்த வழிகாட்டுதலுமின்றி நாம் அனுப்புகிறோம். நான் சில விளக்கங்களை சட்ட அமைச்சரிடம் இருந்து எதிர்பார்க்கிறேன். நான் எழுப்பிய சந்தேகங்களுக்கு தகுந்த விடை கிடைக்கும் என நம்புகிறேன். பொறுக்குக் குழுவைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. மிகவும் திறமையான, பெரிதும் தகுதிவாய்ந்த, நன்கு விவரம் தெரிந்த உறுப்பினர்கள் அதில் இடம்பெற்றுள்ளனர். அவர்கள் எல்லா எதிர்ப்புகளையும் கருத்தில் கொண்டு நல்ல முடிவு எடுப்பார்கள், நியாயம் வழங்குவார்கள் என்று நம்புவோம்.

***திருமதி ஹன்சாமேதா** (பம்பாய் பொது) : மாண்புமிகு சபாநாயகர் அவர்களே, இந்த அமர்வு முடிவடையும் தறுவாயில் கூட இந்த மசோதாவை கொண்டுவந்த, மாண்புமிகு சட்ட அமைச்சரைப் பாராட்டுகிறேன். இந்தப் பரிந்துரைகளுக்கு ஆதாரமாக அமைந்துள்ள அறிக்கையைத் தயாரிப்பதில் பெரும்பங்கு கொண்ட திரு. பி.என். ராவுக்கும் அவருடைய சகாக்களுக்கும் என்னுடைய நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறேன். இந்து சட்டத்தைத் தொகுத்து அளிக்கும் இந்த மசோதா புரட்சிகரமான மசோதாவாகும்; இது விஷயத்தில் நாம் அதிகம் திருப்தியடையவில்லை என்றாலும் இந்துக்களின் சமுதாய வரலாற்றில் இது ஒரு முக்கிய இடத்தைப் பெறும் என்பதில் ஐயமில்லை. இந்த மசோதா தயாரிக்கப்பட்டதற்குப் பிறகு பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. நம்முடைய அரசியல் சுதந்திரம் இவ்வகையில் மிக மிக முக்கியமான மாற்றமாகும்.

*மாலை 6 மணி*

நமது புதிய அரசியல் அமைப்புச் சட்டம் உருவாகிக் கொண்டிருக்கிறது. அது எந்த முறையில் உருவாக்கப்பட வேண்டும் என்பதற்கான அடிப்படைக் கோட்பாடுகளை நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். இனி உருவாக இருப்பது ஒரு ஜனநாயக

---

* அரசியல் நிர்ணய சபை (சட்டமன்ற) விவாதங்கள், ஏப்ரல் 9, 1948, பக்கங்கள் 3642-44.

நாடாகும். எல்லோரும் சமம் என்ற அடிப்படையில் அது உருவாக்கப்படஉள்ளது. நம்முன்னுள்ள வாரிசுரிமை மற்றும் திருமணம் பற்றிய பிரச்சினைகளை இந்தக் கருத்துக்களின் அடிப்படையில் நாம் அணுக வேண்டும். எனவே, பொறுக்குக் குழு இந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் இந்தப் புதிய மசோதா தயாரிக்கப்படும்படியாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

வாரிசுரிமையைப் பொறுத்தவரையில் இந்தச் சட்டத் தொகுப்பு ஆறு பாரபட்சங்களை ரத்து செய்துள்ளது. ஆண் பெண் என்ற பேதம் இந்த சட்டத் தொகுப்பில் நீக்கப்பட்டுள்ளது. ஒரு பெண்ணும் வாரிசாகக் கருதப்பட்டு, முழு உரிமையுடன் சொத்தை அனுபவிக்கும் சூழ்நிலை உருவாக்கப்பட்டுள்ளது. அவளுக்கு இதுவரை ஓரளவு மட்டுமே இருந்த அனுபோக உரிமை நீக்கப்பட்டுள்ளது. ஆனால் இது போதுமானதல்ல. மகனுக்கு அளிக்கும் பங்கில் பாதிதான் மகளுக்கு கொடுக்கப்பட்டுள்ளது. நம்முடைய மக்களுக்கு அரசியல் சட்டத்தின் வழியாக கொடுக்கப் பட உள்ள நீதி, சமூக, அரசியல் மற்றும் பொருளாதார சமத்துவத் திற்கு இது எதிரானதாகும். இந்த முறையில் ஒரு தந்தையின் சொத்தில் மகனுக்கு கொடுக்கும் அதே பங்கு மகளுக்கும் கொடுக்கப்பட வேண்டும். தாயின் சொத்தில் மகளுக்கு அளிக்கப் படும் அதே பங்கு மகனுக்கும் அளிக்கப்பட வேண்டும்.

ஒரு பெண் தன்னுடைய தந்தையிடமிருந்தும் கணவனிட மிருந்தும் சொத்தில் பங்கு பெறுகிறாள். ஆனால் ஓர் ஆண் தன் மனைவியிடமிருந்து எந்தச் சொத்தையும் பெறுவதில்லை. பெண்கள் சங்கங்கள், கணவனும், தங்கள் மனைவியரின் சொத்திலிருந்து உரிமை கோரலாமென சொல்லியிருக்கின்றன. இந்திய வாரிசு உரிமை சட்டத்தில் கணவன் மனைவியினுடைய சொத்திலிருந்து உரிமை கோர ஏற்கனவே வகை செய்யப்பட்டுள்ளது. அதே முறையை இங்கு நாம் பின்பற்றலாம்.

பெண்களுக்கு குறிப்பாக நிலத்தில் சொத்துரிமை கொடுத் தால் நிலங்கள் பல துண்டுகளாக பிரிந்துவிடும் என மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிட்டார். பெண் வாரிசுகளுக்கு மட்டும் இது ஏன் சொல்லப்படுகின்றது? ஓர் ஆணுக்கு 4 அல்லது 5 மகன்கள் இருந்தால் அந்த நிலம் அவர்களுக்கிடையே பிரிக்கப்படுகின்றது. அவர்களுக்கெதிராக ஏன் இந்த வாதம் முன்வைக்கப்படுவதில்லை? மகள் சொத்தை பெறும்போது மட்டும் இந்த வாதம் எடுத்து

வைக்கப்படுகிறது. நிலத்தை துண்டு போடக் கூடாது என்று ஒரு சட்டம் இருக்கலாம். நிர்ணயிக்கப்பட்ட வரம்பிற்கும் கீழே இருந்தால் அதனை விற்றுவிடலாம் அல்லது நிலத்தை எல்லோரும் ஒன்றாக அனுபவிக்க வேண்டும் என்று சொல்லலாம்.

அடுத்ததாக திருமணத்தைப் பற்றிப் பார்ப்போம். ஒருதார திருமணமுறை கொண்டு வரப்படுவதை இந்தியப் பெண்கள் அனைவரும் வரவேற்பார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தப் பொது சட்டம் அமுலுக்கு வந்தஉடன் ஒருதார திருமண முறை நன்கு வேர் ஊன்றிவிடும்.

உலகிலுள்ள முன்னேற்றமடைந்த, நாகரிகமான அத்தனை நாடுகளும், சமூகங்களும் ஒருதார திருமண முறையைத்தான் பின்பற்றுகின்றன. இந்தத் திருமண முறை நம் நாட்டிலும் இருந் திருந்தால் பெண்ணைக் கடத்திச் சென்று அவளைக் கட்டாயத் திருமணம் செய்யும் சூழ்நிலை தடுக்கப்பட்டு இருக்கும். இது எல்லாவற்றையும் உள்ளடக்கிய மிக முக்கிய கருத்தாகும். இந்த அவை இதை வரவேற்கும் என நம்புகிறேன்.

திருமணத்திற்காக விதிக்கப்பட்டுள்ள சில நிபந்தனை களைப் பற்றி நான் என்னுடைய கருத்தை சொல்ல விரும்புகிறேன். நெருங்கிய உறவினர்களுக்கிடையேயான திருமணத்தைப் பற்றி சொல்லும்போது, அதாவது ஒரே கோத்திரத்திற்குள் (சபிண்டா) திருமணம் செய்துகொள்வது பற்றிக் கூறும்போது நெருங்கிய உறவினர்கள் யார் யார் என்பதை சற்று விரிவாகச் சொல்ல வேண்டும். இது சம்பந்தமாக இந்தத் தொகுப்பில் சொல்லியுள்ள விளக்கம் போதுமானதாக இல்லை. திருமணம் செய்து கொள்வ தற்கு வயது வரம்பு நிர்ணயிக்கப்பட வேண்டும். இதற்காக உள்ள சாரதா சட்டம் திருப்தி அளிக்கவில்லை. ஏனென்றால் அந்தச் சட்டத்தினால் குழந்தைத் திருமணத்தை தடுக்க முடியவில்லை. அந்தச் சட்டத்தை சரியான முறையில் அமுல்படுத்த முடிய வில்லை. ஆகையால் கடுமையான சட்டம் கொண்டுவரப்பட வேண்டும். 16-வயது திருமண வயது என்று நினைத்தால் அது சட்டத்தில் சேர்க்கப்பட வேண்டும். பொறுக்குக் குழு இந்த மாற்றத்தைச் செய்ய வேண்டும்.

அடுத்ததாக, விவாகரத்து பிரச்சினையை எடுத்துக் கொண்டால், அதுவும் முழுமையாக இல்லை. கணவன் மனைவி மண முறிவு பெற அவர்கள் ஐந்தாண்டு பிரிந்து இருக்க வேண்டும்

என்று சொல்லப்படுகிறது. நாரத ஸ்மிருதியில் குழந்தையில்லாத பெண் மூன்று ஆண்டு பொறுத்திருந்து பிறகு திருமணம் செய்துக் கொள்ளலாம் என்று சொல்லப்பட்டுள்ளது. அதே முறையை இந்த சட்டத் தொகுப்பிலும் பின்பற்றலாம். அவளுக்குக் குழந்தைகள் இல்லையென்றால் ஐந்தாண்டுக்காலம் காத்திருக்க வேண்டிய அவசியமில்லை. மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு தனது கணவனை அவள் விவாகரத்து செய்யலாம். அதேசமயம் அந்தப் பெண்ணிற்கு குழந்தைகள் இருந்தால் ஐந்தாண்டுக் காலம் காத்திருக்கலாம்; இது நியாயமான கால அளவாகும்.

காப்பாண்மை பற்றி இப்போதுள்ள சட்டத்தில் எந்த மாற்றத்தையும் இந்தச் சட்டத் தொகுப்பு கொண்டுவரவில்லை. தந்தைதான் குழந்தையின் பாதுகாவலன்; தாய்க்கு இதில் எந்தப் பொறுப்பும் கிடையாது. தாயையும் தந்தையுடன் பாதுகாவலராகச் சேர்க்கப் பட வேண்டும்.

தத்து எடுப்பதைப் பற்றிய வரையில் இப்போது உள்ள அத்தனைப் பிரிவுகளும் ரத்து செய்யப்பட வேண்டும். நாம் ஒரு மத சார்பற்ற நாடு. இந்து சட்டத்தில் தத்து எடுப்பது மத காரணங் களுக்காக உள்ளது. மத அடிப்படையிலான ஒரு பிரிவு மத சார்பற்ற நாட்டில் அவசியமில்லை. மத அடிப்படையில் ஏற்படும் தத்து எடுப்பை வாரிசு உரிமைக்கும் பின்பற்ற வேண்டுமா என்பதை கவனிக்க வேண்டும். அம்மாதிரி கூடாது என நாம் சொல்ல வேண்டும். மத காரணங்களுக்கு அல்லாமல் வேறு காரணங்களுக் காக பெண்ணையும் தத்தெடுக்கும் பிரிவு சேர்க்கப்படவேண்டும். ஒருவனுக்கு பிறந்த குழந்தைக்குள்ள அத்தனை உரிமையும் தத்து எடுத்த குழந்தைக்கும் இருக்க வேண்டும். மத காரணங் களுக்காக தத்து எடுக்கப்பட்டிருந்தால் அதில் வாரிசுரிமையைச் சேர்க்கக்கூடாது.

பொறுக்குக் குழு வேறு சில முக்கிய கருத்துக்களையும் கவனிக்க வேண்டும் என விரும்புகிறேன். பல்வேறு பேச்சுக்கள் இங்கு பேசப்பட்டன. முக்கியமாக மதிப்பிற்குரிய உறுப்பினர் டாக்டர் பட்டாபி மிக நீண்டதோர் உரை ஆற்றினார். பழங் காலத்தில் வழக்கத்திலிருந்த எல்லாவற்றையும் அவர் பாராட்டிப் பேசினார். நாம் மிக அதிகமாக பழங்காலத்தின்மீது கவனம் செலுத்தி விட்டோம். எதிர்காலத்தை நாம் பார்க்க வேண்டும். எதிர்கால சந்ததியினருக்காகத்தான் நாம் இந்த சட்டத்தை இயற்று

கிறோம். இது நமக்காக அல்ல; இது நமக்குப் பின்னால் வரும் சந்ததியினருக்காகத்தான். எதிர்கால நிலமை என்ன என்பதை நாம் கவனிக்க வேண்டும். சூழ்நிலைகள்தான் சட்டத்தை முடிவு செய்கின்றன. சமூகத்தின் பிரதிபலிப்பாகத்தான் சட்டம் இருக்கிறது. சமூகத்தைப் பிரதிபலிப்பதாக, மக்கள் எந்தச் சூழ்நிலையில் வாழ்கிறார்கள் என்பதைச் சட்டம் சொல்கிறது. நம்முடைய கருத்துக்களை எதிர்கால சந்ததியினர் மீது நாம் திணிக்கக் கூடாது. திருமணம், மண முறிவு மற்றும் வேறு எதுவாக இருந்தாலும் அவற்றை அவர்கள் மீது நாம் திணிக்கக் கூடாது. இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு ஒரு நல்ல மசோதாவை இந்து சமுதாயத்துக்காக இந்த பொறுக்குக் குழு அளிக்கும் என நம்புகிறேன்.

*திரு. ராம் சகாய் (குவாலியர்) : இந்த மசோதாவைப் பற்றி குறிப்பாக நான் எதுவும் சொல்வதற்கில்லை. தற்போதுள்ள இந்து சமுதாயத்தைக் கருத்தில் கொண்டு இந்த மசோதா தயாரிக்கப்பட்டிருக்கும் விதத்தைப் பாராட்டுகிறேன். இதில் ஓரிரு தவறுகள் இருப்பதாக நான் உணருகிறேன். அதை பொறுக்குக் குழு சரி செய்ய வேண்டும். மசோதாவின் பாகம் IV பிரிவு 3(6)ல் வயது வராதப் பெண்களுக்குத் திருமணம் செய்யும்போது பாதுகாவலருடைய ஒப்புதல் பெற வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது: ஆனால் அம்மாதிரி ஒப்புதல் பெறாமல் திருமணம் நடந்தாலும் திருமணம் செல்லத்தக்கது அல்ல என்று சொல்ல முடியாது என்று பிரிவு 5-ல் கூறப்பட்டுள்ளது. ஒரு பிரிவில் ஒப்புதல் பெற வேண்டும் என்பதைக் கட்டாயமாக்கி, இன்னொரு பிரிவில் ஒப்புதல் பெறாவிட்டாலும் திருமணம் செல்லத்தக்கது என்று சொல்வது சரியானதல்ல. ஒப்புதல் ஏமாற்றியோ அல்லது கட்டாயப்படுத்தியோ பெறப்பட்டால் திருமணம் செல்லத் தக்கது அல்ல என்று சொல்லிவிட்டு ஒப்புதலே பெறாமல் செய்த திருமணம் செல்லத்தக்கது என்று கூறுவது சரியானதல்ல. இது முக்கியமான தவறாகும். இதைப் பொறுக்குக் குழு கவனிக்க வேண்டும்.

அடுத்து வாரிசு உரிமை பற்றியது. இதைப்பற்றி திருமதி ஹன்சா மேத்தா தம்முடைய பேச்சில் குறிப்பிட்டார். அவருடைய கருத்துகளை நான் முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை. இந்து தர்மங்களுக்கெதிராக இந்தப் புதிய இந்து சட்டத் தொகுப்பில் வாரிசு உரிமைகள் பற்றிச் சொல்லப்பட்டுள்ளன. பெண்களுக்கு உரிமைக் கொடுக்கக் கூடாது என்று நான் சொல்லவில்லை. ஆண்களைவிட பெண்களுக்கு அதிக உரிமை கொடுத்துள்ளதாக நான்

கருதுகிறேன். ஒரு பெண் தன்னுடைய தந்தையிடமிருந்தும் தன்னுடைய கணவன் குடும்பத்திலிருந்தும் உரிமை பெற அனுமதிக்கப் பட்டிருக்கிறாள். ஆனால் ஓர் ஆண் தான் பிறந்தக்குடும்பத்திலிருந்து மட்டும்தான் உரிமை பெற முடியும். தன்னுடைய மாமனார் குடும்பத்திலிருந்து எந்த உரிமையும் பெற முடியாது. இது வரை பெண்களுக்கு இழைக்கப்பட்டுள்ள அநீதி இப்போது ஆண்களுக்கு இழைக்கப்பட்டுள்ளது. ஒரு பெண் தன்னுடைய குடும்பத்தில் பெற்ற உரிமை இந்தக் குறைப்பாட்டை சரி செய்துவிடும் எனக் கருதலாம். இந்த மசோதாவின் நோக்கங்களையும் தற்போதுள்ள சூழ்நிலை களையும் வைத்துப்பார்க்கும்போது உண்மையான பிரச்சினைகளுக்கு எந்தத் தீர்வும் காணப்பட்டதாகத் தெரியவில்லை.

ஒரு பெண் தன்னுடைய குடும்பத்திலிருந்து பெறும் சொத்து அவளுடைய சீதனமாகக் கருதப்படுகிறது. அந்தச் சொத்தில் கணவ னுக்கு எந்த உரிமையும் கிடையாது. ஆகையால் முக்கியமான இந்த இரண்டாவது குறைப்பாட்டை பொறுக்குக்குழு கவனிக்க வேண்டும்.

இன்னொரு முக்கிய விஷயம், தர்ம சாஸ்திரங்களுக்கும் தற்போதுள்ள சமூக நிலைக்கும் எவ்வளவு வேறுபாடுகள் இருந் தாலும் நாம் தர்ம சாஸ்திரங்களைத்தான் பின்பற்றவேண்டும். உணர்ச்சி வசப்பட்டும், மேல்நாட்டுப் பாணியைப் பின்பற்றியும் நம்முடைய அடிப்படை பழக்க வழக்கங்களை மாற்றக் கூடாது. இம்மாதிரி மாற்றி னால் அது பல்வேறு பிரச்சினைகளை உருவாக்கி நம்முடைய சமுதாய முன்னேற்றத்திற்கு அது இடையூறை ஏற்படுத்தும். இது விரும்பத் தக்கதல்ல. இதை எல்லாம் கருத்தில் கொண்டு பொறுக்குக் குழு உறுப் பினர்கள் தகுந்த மாற்றம் செய்ய வேண்டும்.

டாக்டர் பி.வி. கேஸ்கர் (உத்திரப்பிரதேசம், பொது) : ஐயா, இம்மாதிரியான ஒரு புதிய சட்டத் தொகுப்பைக் கொண்டுவர வேண்டும் என்ற எண்ணம் மிக நீண்ட காலத்திற்கு முன்பே இருந்தது. ஆனால் காலம் தாழ்த்தியாவது இம்மாதிரியான புது சட்டத் தொகுப்பை கொண்டுவந்த மாண்புமிகு சட்ட அமைச்சரைப் பாராட்டு கிறேன். என்னுடைய நண்பர் டாக்டர் பட்டாபி கூறியதுபோல் இது ஒரு புரட்சிகரமான சட்டத் தொகுப்பாகும். இந்து சமூகத்தின் அடிப் படையையே இது மாற்றி அமைக்கக் கூடியது. ஆயிரம் வருடங் களாக இந்து சமூகத்தில் எவ்வித மாற்றமும் இல்லாமல் இருந்தது. இவ்வாறு மாற்றமே இல்லாத இந்து சமுதாயத்தை மாற்றி அமைக்க

முயற்சிக்கும் போது அதற்கு எல்லாவிதமான எதிர்ப்பும் தடைகளும் ஏற்படுவது இயல்பே. இந்த எதிர்ப்புகளையும் தடைகளையும் மீறி பொறுக்குக்குழு உறுப்பினர்களும் மாண்புமிகு சட்ட அமைச்சரும் இந்தப் புதிய சட்டத் தொகுப்பு சட்டமாக வர எல்லா முயற்சிகளிலும் ஈடுபட வேண்டும். இந்து சமூகத்தின் அடிப்படையையே மாற்றக் கூடிய வகையில் புதிய மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. இம் மசோதாவின் புரட்சிகரமான தன்மை பற்றி சமுதாயத்தின் சில வைதிகப் பிரிவினர் கிலியும் பீதியும் அடைந்திருப்பதாக என்னுடைய நண்பர் திரு. நசிருத்தீன் அகமது வாதித்தார். சில மாற்றங்கள் புரட்சி கரமாகத் தோன்றுகின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால் டாக்டர் பட்டாபி கூறியதுபோல் உண்மையில் அவை புரட்சிகரமானவை அல்ல. பல நூற்றாண்டுகளாக இந்து சமுதாயம் எந்த மாற்றமும் ஏற்படாமல் அப்படியே சென்றுகொண்டிருந்தது. இந்து சமுதாயம் வளர்ச்சியடைய எந்த வாய்ப்பும் அளிக்கப்படவில்லை. பல நூற் றாண்டுகளில் தொடர்ந்து ஏற்பட வேண்டிய மாற்றம் ஏற்படாத காரணத்தினால், நாம் ஒரு சில நாட்களில் அந்த மாற்றத்தை ஏற்படுத்த முயற்சி செய்ய வேண்டியவர்களாக உள்ளோம்.

எத்தகைய மாற்றத்தையும் விரும்பாத அடிப்படைவாதி களுடைய எதிர்ப்பிற்கு பலியாகாமல், பொறுக்குக் குழு உறுப்பினர் கள் தக்க மாற்றங்களைக் கொண்டு வந்து இந்து சமுதாயம் முன்னேற வழி காண வேண்டும். பல அடிப்படையான மாற்றங்களைச் செய்வ துடன் நில்லாமல் இந்து சட்டங்களை தொகுத்து வழங்குவது மிக முக்கியமான பணியாகும். இப்போதுள்ள இந்து சட்டம் திக்கு தெரியாத ஒரு கானகமாகக் காட்சியளிக்கிறது. பல்வேறு இடங்களில் பல்வேறு விதமான சட்டங்கள் நடைமுறையில் இருக்கின்றன. ஒவ்வொரு ஜாதிக்கும் அதன் பல்வேறு உட்பிரிவுகளுக்கும் பலவிதமான சட்டங் கள் இருக்கின்றன. இவையாவும் வழக்கறிஞர்களுக்கு ஒரு சொர்க்க புரியாக உள்ளன. இவை எல்லா சூழ்நிலைகளிலும் விரும்பத்தக்கவை என்று சொல்ல முடியாது. ஆனால் இவற்றை எல்லாம் ஒழுங்குபடுத்தி ஒரு கட்டுக்குள் கொண்டு வருவது மிக அவசியமாகும். இந்து சட்டத்தை மாற்றுவதிலிருந்து இது வேறுபட்டது. இந்த இரண்டு கருத்துகளின் அடிப்படையில் பார்க்கும்போது இந்த மசோதா காலந் தாழ்த்தி வருவதாகவே கருதுகிறேன். இந்தத் தொகுப்பைப் பரிசீலிப் பதற்கான முதல் குழு 1944-ல் அமைக்கப்பட்டுள்ளது. ஆகையால் இதை மேலும் தாமதமாக்கக் கூடாது எனப் பொறுக்குக் குழு உறுப் பினர்களைக் கேட்டுக் கொள்கிறேன். இந்த மசோதாவை குறித்துள்ள சில கருத்துக்கள் பல வருடங்களாக மக்கள் முன் இருக்கின்றன.

இப்போதும் அவை எல்லோருடைய கவனத்தையும் ஈர்த்துள்ளன. ஆகையால் இது குறித்து விவாதிப்பதற்கான நேரத்தைச் சுருக்கி விரைவாக முடிந்த அளவிற்கு அவையின் அடுத்த அமர்விலாவது இந்த மசோதாவை அறிமுகப்படுத்த வேண்டும் எனக் கேட்டுக் கொள் கிறேன். நான் இந்த மசோதாவை வரவேற்கிறேன்.

*__பேகம் அய்ஸாஸ் ரசூல்__ *(உத்திரப்பிரதேசம்: முஸ்லீம்)* : ஐயா, நான் நீண்ட நேரம் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. நேரம் மிகக் குறைவாகவே இருக்கிறது என்பது எனக்குத் தெரியும். எனினும் மாண்புமிகு சட்ட அமைச்சர் கொண்டு வந்துள்ள இந்த மசோதாவை வரவேற்கவில்லை என்றால் நான் என்னுடைய கடமையிலிருந்து தவறியதாக ஆகிவிடும். நாம் சுதந்திரமடைந்து ஒரு தேசிய அரசாங்கம் உள்ள நிலைமையில் இம்மாதிரியான மசோதா கொண்டு வரப்படுவது சரியான அணுகுமுறையேயாகும். பொறுக்குக் குழு இனியும் தாமதிக்காமல் தன்னுடைய அறிக்கையை விரைவாக அளித்து இந்த மசோதாவை சட்டமாக்க முயற்சிக்க வேண்டும்.

இந்த மசோதாவில் கூறியுள்ள கருத்துக்கள் பெரும்பாலானவை அடிப்படை மாற்றங்களை உண்டாக்கக் கூடியவையாகும். குறிப்பாக திருமணம், மணம் முறிவு, வாரிசுரிமை மற்றும் தத்து எடுத்தல் முதலியவை அடிப்படையான மாற்றங்களை ஏற்படுத்தும். இது மிக முக்கியமான விஷயமாகும். இந்து சட்டங்களை தொகுத்து வழங்கக் கூடிய இந்த மசோதா ஒரு சிறப்பான நிகழ்ச்சியாகும். இம்மாதிரியான ஒரு மசோதா இதுவரை இந்த அவையில் கொண்டுவரப்பட்டதில்லை எனலாம்.

இந்த மசோதாவின் பல்வேறு பிரிவுகளைப்பற்றிக் கருதாமல் இந்த மசோதாவை வரவேற்கிறேன். ஒரு நாட்டிலுள்ள பெண்களின் நிலைமையைப் பொறுத்துத்தான் அந்த நாட்டின் சமூக நிலைமை நிர்ணயிக்கப்படுகிறது. இந்திய நாட்டில் இந்துப் பெண்களின் நிலைமை மிகமிகப் பின்தங்கியுள்ளது. ஷரியத் சட்டம் முஸ்லீம் பெண் களுக்கு நிறைய உரிமைகளை வழங்குகிறது. நான் அதில் பெருமைப் படுகிறேன். ஷரியத் சட்டம் பெண்களுக்குப் பல உரிமைகளை அளித்தா லும், நடைமுறையில் இந்தியாவின் பல பகுதிகளில் அவை சரியான முறையில் கடைப்பிடிக்கப்படுவதில்லை என்பதை நான் அறிவேன். இதை டாக்டர் பட்டாபியும் குறிப்பிட்டார்கள்.

---

* *அரசியல் நிர்ணய சபை (சட்டமன்ற) விவாதங்கள், ஏப்ரல் 9, 1948, பக்கங்கள் 3648.*

பஞ்சாப் மாநிலத்திலுள்ள வழக்கப்படி, தந்தையின் சொத்தில் பெண்களுக்கு உரிமை அளிப்பதில்லை. அதே முறையில் உத்திரப் பிரதேசத்தில் முஸ்லீம் பெண்களுக்கு சில உரிமைகள் மறுக்கப்படுகின்றன. இப்போது கொண்டுவரப்பட்டுள்ள மசோதாவின்படி முஸ்லீம் பெண்களுக்குள்ளதுபோல் இந்து பெண்களுக்கும் சில உரிமைகள் வழங்கப்படுவதை அறிய மகிழ்ச்சியடைகிறேன். இதை சமுதாயத்தின் எந்தப் பிரிவினரும் எதிர்ப்பார்கள் என நான் கருதவில்லை. எனினும் இது மதக் கோட்பாடுகளை உள்ளடக்கியுள்ள காரணத்தினால் மாற்றத்தை விரும்பாத சில சமுதாயப் பிரிவினர் இந்த முயற்சிக்கு எதிர்ப்பு தெரிவிக்கலாம். அவர்களுடைய எதிர்ப்பு எவ்வகையிலும் இந்த முயற்சிக்கு இடையூறாக இல்லாமலிருக்கும்படிப் பொறுக்குக் குழு உறுப்பினர்கள் பார்த்துக் கொள்ள வேண்டும். இந்த மசோதாவை விரைவாக சட்டமாக்க முயற்சிக்க வேண்டும். சமுதாயம் ஸ்தம்பித்துப் போய் ஒரே நிலையில் இருக்கக் கூடாது; அது முன்னேற்றப் பாதையில் சென்றுகொண்டிருக்க வேண்டும். இந்தியப் பெண்கள் பொருளாதார ரீதியில் சுதந்திரமாக இயங்கக் கூடிய சூழ்நிலை உருவாக வேண்டும். அப்போதுதான் நாடு முன்னேற்ற பாதையில் தாண்டுகால் போட்டுச் செல்லும். எனது இந்தக் கருத்துக்களைக் கூறி இந்த முயற்சிக்கு என் முழு ஆதரவு அளிக்கிறேன்.

திரு. ரோகிணி குமார் சௌதுரி (அசாம் பொது) : ஐயா, இந்த மசோதா கொண்டுவந்ததற்காக மாண்புமிகு சட்ட அமைச்சரவைப் பாராட்டுகிறேன். மாண்புமிகு சட்ட அமைச்சர் பலர் அவரைப் பாராட்டும் இந்த சூழ்நிலையை விரும்புவார் என நினைக்கிறேன். இது இந்து சட்டத் தொகுப்பு மசோதா என்று பெயரிடப்பட்டிருப்பதை விட, இந்துப் பெண்கள் சட்டத் தொகுப்பு மசோதா என்று குறிப்பிட்டிருக்கலாம். இவ்வாறு கூறுவதால் நான் இந்த மசோதாவை விமர்சிப்பதாக கருத வேண்டாம்.

மத சார்பற்ற ஓர் அரசை நாம் அமைக்கப் போகிறோம் என்று தீர்மானம் நிறைவேற்றி, வகுப்புவாத இயக்கங்களுக்கு முட்டுக்கட்டை போட்ட மூன்று நான்கு தினங்களுக்குள்ளேயே இவ்வளவு அவசர அவசரமாக, ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சார்ந்தவர்களுக்காக இந்த மசோதாவை ஏன் கொண்டு வருகிறோம் என்பது எனக்குப் புரியவில்லை. எல்லா வகுப்புவாத இயக்கங்களையும் தவிர்க்க வேண்டும் என்று முடிவு செய்துவிட்ட பிறகு, இந்து, முஸ்லீம், கிருத்தவர்கள்

* அரசியல் நிர்ணய சபை (சட்டமன்ற) விவாதங்கள், ஏப்ரல் 9, 1948, பக்கங்கள் 3648 - 50.

முதலான நாட்டின் சகல பிரஜைகளுக்கும் பலனளிக்கக் கூடிய ஒரு பொதுவான மசோதாவை ஏன் கொண்டு வரக்கூடாது என்று அறிய விரும்புகிறேன். அம்மாதிரியான ஒரு மசோதாவை கொண்டு வருவதற்காக மாண்புமிகு சட்ட அமைச்சர் இப்போதுள்ள இந்த மசோதாவை திரும்பப் பெற்றால் அது சிறப்பானதாக இருக்கும்; சில நிமிடங்களுக்கு முன் அவர் திரும்ப பெற்றதைவிட இன்னும் அது சிறப்பாக இருக்கும்.

தங்கள் சகோதரர்களுடைய உரிமைகளிலிருந்து, தங்களுக்கு சில உரிமைகளைப் பெற்றுக் கொள்ள சில பெண்கள் ஆவலாக உள்ளார்கள் என்பது எனக்குத் தெரியும். அதே போல் தங்களுக்கு விருப்பமில்லாத திருமண உறவில் தள்ளப்பட்ட சில பெண்கள், அந்த உறவிலிருந்து விடுபட விரும்புகிறார்கள் என்பதையும் நான் அறிவேன். அதே முறையில் சமுதாயத்தின் மேல் மட்டத்திலுள்ள சில பெண்கள் பலதார திருமண தடை சட்டத்தைப்பற்றி யோசிக்கிறார்கள். இந்து சட்டத் தொகுப்பின் மூலமாக, இந்து சட்டத்தையும் வழக்கத்தையும் மாற்றி அமைக்க அவர்கள் முயற்சிக்கிறார்கள்! இதை யாருக்காக செய்கிறீர்கள்? யார் இதனால் பயன் பெறப் போகிறார்கள்? பெரும்பாலான மக்கள் விவசாயத்தையும் விவசாய நிலங்களையும் நம்பி உள்ள போது, இதில் சேராத மற்ற சொத்துக்களைப் பற்றி சட்டம் இயற்றுவதால் என்ன பயன்? நம்முடைய கிராமங்களில் உள்ள ஏழை இந்துக்கள் மண முறிவை விரும்புகிறார்களா? தங்களுடைய தந்தையிடமிருந்து சொத்துக்களைப் பெற விரும்புகிறார்களா? இல்லவே இல்லை. சமுதாயத்தின் மேல் மட்டத்திலுள்ள ஆண்களுக்கும் பெண்களுக்கும் உதவி செய்யவே இந்தச் சட்டத்தை கொண்டு வருகிறீர்கள். இது பணக்கார ஆணுக்காக, குறிப்பாக ஒரு ஏழைக்கு தன்னுடைய பெண்ணை திருமணம் செய்து வைத்து அந்தப் பெண்ணை, அவள் விருப்பப்படி வாழ வைக்காத சூழ்நிலையில், இந்தச் சட்டம் அவளுக்கு உதவும். இந்த சூழ்நிலையில் இந்த திருமணத்தை ரத்து செய்ய அவன் விரும்புகிறான். அம்மாதிரியான ஆணுக்குத்தான் இந்த சட்டம் உதவி செய்யும். பழக்க வழக்கங்கள் ஒவ்வொரு பிராந்தியத்திலும் வேறுபடுகின்றன. என்னுடைய பிராந்தியத்தைச் சேர்ந்த யாரும் இந்தப் பொறுக்குக் குழுவில் இடம்பெறவில்லை. அஸாம் மாநிலத்தில் இந்து சட்டத்தின் இடத்தைப் பெற்றுள்ள பழக்க வழக்க மரபுகள் எவ்வளவு விசித்திரமானவை என்பதை எல்லா வழக்கறிஞர்களும் அறிவர். *மனிராம் காட்டியா - எதிர் - கெரிதலிட்டானி* என்ற வழக்கில் பிரிவிக் கவுன்சில் அளித்துள்ள தீர்ப்பை இவ்வகையில் முக்கியமாகக் குறிப்பிடலாம். இந்துக்களிடையே

செயல்படுத்தப்படும் சட்டத்தை இது அநேகமாக புரட்சிகரமான தாக்கியுள்ளது எனலாம்.

அடுத்து, ஆதிவாசிகளை எடுத்துக்கொள்வோம். அவர்கள் இஸ்லாம், கிருத்துவம் அல்லது புத்தமதம் ஆகிய ஏதாவது ஒன்றுக்கு மாறி இருக்கவில்லை என்றால் அவர்கள் இந்துக்களாகவே கருதப் படுவார்கள் என்று இந்த மசோதா சொல்கிறது. அவர்கள் மீது இந்த மசோதாவைத் திணிக்கப் போகிறீர்களா? இந்த மசோதாவின்படி வாரிசுரிமையை அவர்கள் மீது திணித்தால் அவர்கள் நிச்சயம் உங்க ளுக்கு எதிராகக் கலகக் கொடி தூக்குவார்கள். காசியா என்ற அசாம் பிரிவைச் சேர்ந்தவர்கள் தங்களுடைய இளைய மகளுக்கு சொத்தை அளிக்கிறார்கள். ஆனால் இந்தப் புதிய மசோதாவின்படி சொத்து விதவை, மகனின் விதவை, விதவையான மகள், மகனுடைய மருமகள் ஆகியோருக்கு வழங்கப்பட்டுள்ளது. இம்மாதிரியான சட்டத்தை அவர்கள் மீது திணித்தால் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என நினைக்கிறீர்களா?

சாஸ்திர முறை ரீதியான திருமணம் என்றும் சட்டப்படியான திருமணம் என்றும் இரு வகையான திருமணங்களை நீங்கள் அறிமுகப் படுத்தியுள்ளீர்கள். சாச்சாரீஸ் என்ற பிரிவினர் எப்படித் திருமணம் செய்து கொள்கிறார்கள் என்பதைச் சொல்கிறேன். ஓர் ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்கிறார்கள். பிறகு அந்தப் பெண் அவர்களுடைய பெற்றோர்களிடமிருந்து, நிர்ப்பந்தத்தின் பேரில் பிரிக்கப்பட்டு, இருவரும் திருமணம் செய்து கொள்கிறார்கள். நீங்கள் இருவரும் பதிவு அலுவலகத்திற்குச் சென்று திருமணம் செய்துக்கொள்ளுங்கள் என்று அவர்களிடம் கூறுவீர்களா?

வரதட்சிணையை நாம் கடுமையாக எதிர்க்கிறோம். பணக் காரர்கள் தங்களுடைய பெண்களுக்கு வரதட்சிணை கொடுத்து மிக விரைவாகத் திருமணத்தை முடித்து விடுகிறார்கள். அந்த பெண்கள் அழகற்றவர்களாகவும் குருடர்களாகவும் இருந்தாலும்கூட அவர் களுக்கு வரதட்சிணை கொடுத்துத் திருமணம் செய்துவைக்க முடிகிறது. என்னிடம் பணம் இல்லை என்றால் என்னுடைய வீடு மற்றுட் சொத்துக் களை அடகு வைத்தாவது திருமணம் செய்து வைத்து எனது மகள் பிரச்சினைக்கு ஒரு தீர்வு கண்டுவிடுவேன். ஆனால் இப்போது என்ன நடக்கும்? தற்போது பெண்கள் குடும்பச் சொத்தில் ஒரு பங்கை வாரிசுரிமையாகப் பெறுவார்கள். என்னுடைய மகன்களுக்கு பெண் பார்க்கும்போது அதிர்ஷ்டவசமாக - எனக்கு ஐந்து மகன்கள்

இருக்கிறார்கள் - நான் ஒரு சாதாரண குடும்பத்தை, சொத்தை அடகு வைத்தோ கடன் வாங்கியோ திருமணம் செய்யும் நிலையில் உள்ள குடும்பத்தை நாடமாட்டேன்; மாறாக சொத்தில் பங்குபெறும் நிலையில் உள்ள குடும்பத்தைத்தான் நாடுவேன். இம்மாதிரியான முறையில் நீங்கள் ஏழைகளுக்குச் சட்டம் இயற்றப் போகிறீர்களா? ஏழைகளை எடுத்துக் கொண்டால் அவர்களுக்கு விவசாய நிலம் மட்டுந்தான் சொத்தாக இருக்கிறது. தேயிலைத் தோட்டத்தை அதில் சேர்த்தால் பரவாயில்லை. அவர்களுக்கு வேறு விவசாய நிலம் இல்லை. ஓர் ஏழையின் மகள் எவ்வளவுதான் அழகாக இருந்தாலும், திறமையானவளாக இருந்தாலும் சொத்து இல்லாத காரணத்தினால் அவள் திருமணம் தடைபட்டு விடும். வழக்கு முறைக்கு எதிராக அவசர அவசரமாக இம்மாதிரியான சட்டத்தை இயற்றுவது சரியல்ல. இன்னும் நான் அதிகமாகக் கூட சொல்ல முடியும். ஆனால் இந்த அவையில் திருமணம் ஆகாத பல உறுப்பினர்கள் இருக்கிறார்கள். ஆகையால் இந்த மசோதா குறித்து என்னுடைய எல்லா எதிர்ப்புகளையும் சொல்ல விரும்பவில்லை.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : மாண்புமிகு சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவிற்கு இவ்வளவு அமோக ஆதரவு கிடைத்திருப்பது என்னுடைய பணியை மிகச் சுலபமாக்கி விட்டது. இந்த மசோதா குறித்த விவாதத்தில் பங்கு கொண்டு தங்கள் கருத்துக்களைத் தெரிவித்த உறுப்பினர்களுக்குப் பதில் சொல்லும் வகையில் என்னுடைய பேச்சை அமைக்கிறேன்.

திரு. நசிருத்தீன் அகமது தெரிவித்த கருத்தை முதலில் எடுத்துக் கொள்கிறேன். ஐயா, சட்டமன்றம் என்பது ஒரு நீதிமன்றம் அல்ல. இந்த அவைக்கு வரும் ஒரு வழக்கறிஞர் தம்முடைய தொழிலை செய்யவோ, அல்லது தம்முடைய கட்சிக்காரருக்கு வாதாடவோ இங்கு வரவில்லை என்றுதான் நினைத்தேன். ஆனால் என்னுடைய நண்பர் அவருக்கு உண்டான தொகையை பெற்றுக் கொண்டோ, அல்லது தம்முடைய பெருந்தன்மையின் காரணமாகவோ, அவருடைய கட்சிக்காரருடைய கருத்தைச் சொல்ல முற்பட்டார்: அந்தக் கட்சிக் காரர்கள் தாங்கள் என்ன நினைக்கிறோம் என்பதை சொல்லுவதற் கான தைரியமில்லாதவர்களாக இருக்கிறார்கள். ஆனால் நுணுக்கமான சட்டப் பிரச்சினைகளை நான் இங்கு எழுப்ப விரும்பவில்லை.

---

* அரசியல் நிர்ணய சபை (சட்டமன்ற) விவாதங்கள், ஏப்ரல் 9, 1948, பக்கங்கள் 3650-53.

அவர்கள் சொல்லிய கருத்துக்களுக்கு பதிலளிக்க மட்டுமே விரும்பு கிறேன். அவருடைய முதல் வாதம் இந்த மசோதா சரியான முறை யில் விளம்பரப்படுத்தப்படவில்லை என்பதும், தங்கள் கருத்துக் களைச் சொல்ல பொதுமக்களுக்கு போதிய வாய்ப்பு அளிக்கப்பட வில்லை என்பதும்தான். அவருடைய கட்சிக்காரர்கள் அவருக்கு தவறான தகவல்களைக் கொடுத்துள்ளார்கள் என்றே நினைக்கிறேன்.

1937-ல் இயற்றப்பட்ட சட்டத்திலேயே இந்த மசோதாவிற் கான வித்து விதைக்கப்பட்டுவிட்டது. அந்த ஆண்டிலிருந்தே இந்த மசோதாவில் சொல்லியுள்ள பல்வேறு விதி முறைகளைப் பற்றி ஆராய பல்வேறு குழுக்கள் நியமிக்கப்பட்டன. அவை ஒரு குழுவி லிருந்து இன்னொரு குழுவிற்கு அனுப்பப்பட்டு, பல்வேறு மட்டங் களில் ஆராயப்பட்டன.

உதாரணத்திற்கு சொல்ல வேண்டும் என்றால் 1937-ல் இயற்றப் பட்ட பெண்ணுரிமைச் சட்டத்தில் உள்ள குறைபாடுகளைக் களைய 1941-ல் உள் துறையினால் ஒரு குழு அமைக்கப்பட்டது. ராவ் குழு என்று அழைக்கப்படும் அந்தக் குழு 1941- ஜூன் 19-ஆம் தேதி தன் னுடைய அறிக்கையை அளித்தது. இந்த அறிக்கையை என்னுடைய நண்பர் பார்த்திருந்தால் இந்தக் குழு அந்த அறிக்கைக்கு எவ்வளவு பிரதானம் கொடுத்தது என்பதையும், என்னென்ன முறையில் மக்க ளுடைய கருத்தை அறிந்தது என்பதையும், என்னென்ன பிராந்தியங் களுக்குச் சென்று வந்தது என்பதையும் விரிவாக அறியலாம்.

இதே குழு 1942-ல் வாரிசுரிமை மற்றும் திருமணம் குறித்த மசோதாக்களை வழங்கியது. அந்த மசோதாக்கள் இரு அவைகளின் கூட்டுக் குழுவிற்கு அனுப்பப்பட்டது. 1943-ம் ஆண்டு இந்து வாரி சுரிமை மசோதா அறிமுகப்படுத்தப்பட்டது. இந்தக் கூட்டுக் குழு, பொது மக்களின் கருத்துக்களை வரவேற்றது. அக்கருத்துக்களை அவை உறுப்பினர்களுக்கு வழங்கியது. இவற்றை எல்லாம் பார்க்கும்போது அரசாங்கம் தகுந்த விளம்பரம் கொடுக்கவில்லை என்ற என் நண்பரின் கருத்து ஏற்றுக்கொள்ளக் கூடியதல்ல என்பது தெள்ளத் தெளிவு.

அடுத்ததாக, நீதிபதி மிட்டர் அளித்த சிறுபான்மை அறிக்கையை அவர் குறிப்பிட்டிருக்கிறார். இந்த மசோதாவில் அடங்கியுள்ள விஷ யங்களின் பல்வேறு சாதக பாதகங்களை நீதிபதி தமது அறிக்கை யில் அலசி ஆராய்ந்து இருக்கிறார். ஒரு குழுவினுடைய உறுப்பினரைப்

பற்றி நான் எதையும் குறையாகச் சொல்லவில்லை. அவர் பயனுள்ள பணி செய்துள்ளார் என்பதில் ஐயமில்லை. ஆனால் அதே உறுப்பினர் தம்முடைய கருத்திலிருந்து மாறுபட்டு விட்டார் என்பதை இங்கு என்னால் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. குழுவின் பெரும்பாலான உறுப்பினர்கள் தெரிவித்த கருத்தை என்னுடைய நண்பர் திரு. நசிருத்தீன் அகமது படித்தால், அந்த மசோதாவில் சொல்லப்பட்ட அத்தனை கருத்துக்களும், குறிப்பாக பெண்களுக்கு உரிமை அளிக்கும் கருத்துகள் 1930-ல் கொடுக்கப்பட்ட அறிக்கையில் அந்த உறுப்பினரே தெரிவித்த கருத்தை அடிப்படையாகக் கொண்டவையே யாகும் என்பதைத் தெரிந்து கொள்வார். பெண்ணினுடைய உரிமைகளைக் கட்டுப்படுத்தும் தீர்ப்பு வழிச் சட்டத்துக்கு எந்த அடிப்படையும் இல்லை என அவர் தமது அறிக்கையில் கூறி இருக்கிறார். ஆனால் அவரே தற்போதுள்ள விவாதத்திற்கு பொருள் இல்லை எனக் குறிப்பிடுகிறார்.

இந்த மசோதா விவசாய நிலங்களைத் தவிர்த்து மற்ற சொத்துக்களைபற்றிக் குறிப்பிடுவதால் இது ஒரு முழுமையான தொகுப்பு அல்ல என்று மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் கருதுகிறார். வாரிசு உரிமைக்குள்ள பெரும்பாலான சொத்துக்கள் இந்த மசோதாவிற்கு உட்படவில்லை என்று அவர் கருத்துத் தெரிவிக்கிறார். விவசாய நிலங்களை இந்த மசோதாவில் சேர்க்காததற்கு இரண்டு விளக்கங்கள் அளிக்கலாம்.*

இந்திய அரசாங்க சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள அட்டவணைகளைக் கவனித்தால் என்னுடைய நண்பருக்கு ஒன்று நன்றாக விளங்கும். அதாவது அந்த சட்டத்தில் மத்திய அரசு சட்டம் இயற்றுவதற்கான அதிகாரம் பெற்றுள்ள சில துறைகளும், மாகாண அரசுக்கென்று சில தனியான துறைகளும் ஒதுக்கப்பட்டிருப்பது தெரியவரும். சமஷ்டி நீதிமன்றத்தின் விளக்கப்படி மாகாணப்பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கும் நிலம் என்ற வார்த்தை நில குத்தகை மற்றும் வாரிசுரிமை ஆகியவற்றையும் குறிக்கும். ஆகையால் அந்த நிலத்திற்கு உண்டான வாரிசுரிமைப் பற்றி மத்திய அரசு சட்டம் இயற்றினால் அது செல்லத்தக்கது அல்ல. ஆனால் நான் சொல்ல விரும்புவது வேறு விதமானது. அதாவது இந்த மசோதாவில் வேறு எந்தக் குறைபாடும் இருப்பதாக நான் கருதவில்லை. எல்லாச் சொத்துக்களுக்குமான வாரிசுரிமை ஒரே முறையில் இருக்க வேண்டிய அவசியமில்லை.

* 'விவசாய நிலமல்லாத சொத்து' என்று விவாதங்களில் பக்கம் 3651-ல் தவறாகக் குறிப்பிடப்பட்டுள்ளது

தற்போதுள்ள சூழ்நிலைகளை சரியான முறையில் கணக்கிலெடுத்துக் கொண்டு இந்திய அல்லது இந்து சமுதாயம் நிலத்தின் வாரிசாக முதல் மகன் மட்டும் இருக்க வேண்டும் என்றும், மற்ற மகன்களுக்கும் பெண்களுக்கும் எந்த உரிமையும் வேண்டாம் என்றும் நினைக்கலாம். அதைப்பற்றி நாம் எதுவும் சொல்லாத சூழ்நிலையில் இனி வரும் காலத்தில் புதிதாக அந்தப் பிரச்சினையை கருதலாம். ஆகையால் என்னுடைய நண்பர் சொல்லிய கருத்திற்காக எந்தவிதமான வருத்தமும் பட வேண்டிய அவசியமில்லை.

என்னுடைய நண்பர் சௌதுரி இது ஒரு மதவாத சட்டம் என நினைக்கிறார். பல மதங்கள் உள்ள இந்திய நாட்டில், இந்து மக்களுக்காக மட்டும் அறிமுகப்படுத்தியுள்ள இந்தச் சட்டத்தொகுப்பு மதவாத சட்டம் எனக் கருதலாம். ஆனால் இதற்கு மாற்று என்ன? என்னுடைய நண்பர் சொல்லக்கூடிய மாற்று, அந்தந்த மதங்களை அடிப்படையைக் கொண்டு, வாரிசுரிமை மற்றும் திருமண சட்டங்களை இயற்றாமல், மதம் இனம் மற்றும் ஜாதி, அடிப்படையிலன்றி எல்லோருக்கும் பொதுவான சட்டம் இயற்ற வேண்டும் என்று அவர் கூறினால், நிச்சயமாக நான் அவர் கருத்துக்கு ஒத்துப் போவேன். ஆனால் அது அவருடைய முடிவு அல்ல.

இனி வரப்போவது மதசார்பற்ற அரசாங்கம் என்பதால் மத அடிப்படையிலான சட்டம் சரியல்ல என்று சொல்வது நிச்சயமற்ற தன்மையை உண்டாக்கும். இந்த நாடு பல சமூகத்தினரைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு சமூகமும் தனக்கென்று தனித்தனியாக சட்டங்களை வைத்துக் கொண்டு இருக்கின்றன. மதசார்பு அற்ற அரசாங்கத்தை நாம் ஏற்படுத்தப் போவதால் அவரவர்களுக்கென்று தனித் தனியாக உள்ள சட்டங்களை எல்லாம் மறந்துவிட்டு எல்லோருக்கும் பொதுவான ஒரு சட்டம் இயற்ற வேண்டும் என்ற கருத்து எனக்கு உடன்பாடானதல்ல. அம்மாதிரி செய்தால் அது குழப்பத்திற்கும் எதேச்சை அதிகாரத்திற்கும் வழிவகுக்கும்.

அடுத்தபடியாக, வழக்கியல் சட்டத்தை இந்த மசோதா கணக்கிலெடுத்துக் கொள்ளவில்லை என்ற குற்றச்சாட்டை அவர் கூறுகிறார். தமக்கு ஆதரவாகப் பிரிவு கவுன்சில் தீர்ப்பை எடுத்துக் காட்டுகிறார். ஆனால் நாம் எல்லோரும் ஒத்துக் கொள்ளக் கூடிய நிலை என்னவென்றால் இந்துக்களை பொறுத்தவரை ஸ்மிருதியில் சொல்லப்பட்டுள்ள கருத்தைவிட வழக்கு முறையில் உள்ளவைதான் பின்பற்றப்படும் என்பதுதான். இது நாம் எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. ஆனால் நாம்

என்ன செய்கிறோம்? நம் புதிய வழக்கு முறைக்கு எதிராக இருக்கிறோம். நடைமுறையில் உள்ள வழக்கத்தை நாம் குலைக்கவில்லை. இந்து சட்டம் என்பது வழக்கு முறையை அடிப்படையாகக் கொண்டுள்ளதால், நாம் இப்போதுள்ள வழக்கு முறையை பின்பற்றுகிறோம். அந்த வழக்கு முறைக்குத்தான் நாம் இப்போது உயிர் கொடுத்து சட்ட வடிவு தருகிறோம்.

வழக்கு முறையை மிக அதிகமாக பின்பற்றும் ஆதிவாசிகளை நாம் கருத்தில் கொள்ளவில்லை என்ற கருத்தையும் அவர் சொல்கிறார். இந்தச் சட்டத் தொகுப்பில் யார் இந்து, யார் இந்து அல்லதாவன், யாருக்கு இந்தத் தொகுப்பு அமுல்படுத்தப்படும் என்பதை எல்லாம் கவனித்தால் பிரச்சினை நன்கு விளங்கும். முஸ்லீம்கள், பார்சிகள் அல்லது கிறித்தவர்கள் ஆகியவர்களாக மாறாவிட்டால் அவர்கள் இந்துக்களாக கருதப்படுவார்கள் என்று சொல்லப்பட்டுள்ளது. அவர்கள் இந்துக்கள் என்று சொல்லவில்லை. ஆதிவாசியான ஒரு நபர், தான் இந்து அல்ல என்று சொன்னால், அதை நீதி மன்றத்தில் நிரூபித்து தனக்கு இந்த தொகுப்பு பொருந்தாது என்பதை நிரூபிக்க முடியும். அந்த சூழ்நிலையில் இந்தத் தொகுப்பு அவரை கட்டுப்படுத்தாது.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி :** என்னுடைய கருத்து என்னவென்றால் அவர் தன்னை இந்து என்று சொல்லிக்கொள்ள விரும்பவில்லை. ஆனால் அதே நேரத்தில் இந்துக்களுடைய எல்லாப் பழக்க வழக்கங்களையும் பின்பற்ற விரும்புகிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உள்ள நிலைமை இதுதான். ஒரு நபர் தன்னை இந்து என்று சொல்லிக் கொண்டால் அவர் இந்துக்களுக்கான அத்தனை சட்டங்களையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். இதில் குழப்பம் ஏதும் கூடாது. ஓர் இந்து எல்லாவகைகளிலும் ஓர் இந்துவாகத்தான் இருக்க வேண்டும். ஓர் ஆதிவாசி தன்னை இந்து என்று சொல்லிக்கொள்ள விரும்பவில்லை என்றால் அதை அவர் நிரூபிக்கும்போது இந்த சட்டம் அவரைக் கட்டுப்படுத்தாது.

என்னுடைய நண்பர் டாக்டர் சீதாராமையா ஒரு கேள்வி கேட்டார். இந்தச் சட்டம் அமுலுக்கு வருவதற்கு முன்பாக, ஒரு விதவை பெற்ற அனுபோக உரிமை, முழு உரிமை பெற்ற சொத்தாக மாறுமா என்பதுதான் அந்தக் கேள்வி. இந்தச் சட்டத் தொகுப்பில் தான் அனுபோக உரிமை முழு உரிமையாக மாற்றப்பட்டுள்ளது. இது

இனிமேல் தான் அமுலுக்கு வரவேண்டும். இது ஏற்கனவே அமுலுக்கு வந்ததாகக் கருதப்படும் என்று எங்கும் சொல்லப்படவில்லை. அம்மாதிரி சொல்லவும் முடியாது. ஏற்கனவே, அனுபோக பாத்திய மாக விதவைகளால் அனுபவிக்கப் பட்ட சொத்து அவர்கள் காலத் திற்குப்பின் மற்ற எத்தனையோ நபர்களுக்கு கைமாறியிருக்கும். அதை எல்லாம் குலைக்கும் வகையில் இந்தச் சட்டம் முன் தேதி யிட்டு அமுலுக்கு வந்ததாக கருத முடியாது.

திருமதி ஹன்சா மேதா தானும் மற்ற பெண்களும் இந்தத் தொகுப்பில் பெண் உரிமைகளைப் பற்றி இடம்பெற்றுள்ள விதி களின்பால் அதிருப்தி அடைந்திருப்பதாகச் சொன்னார். அவரவர்கள் எதிர்பார்ப்புக்கு ஏற்ப இந்த மசோதா அமையாதிருக்கலாம். ஆனால் ஒன்றை அவர் உணர வேண்டும்: இது ஒரு எழுச்சியற்ற, மந்தமான சமுதாயம். இந்து சமுதாயம் கடவுளோ அல்லது ஸ்மிருதியோ தான் சட்டம் இயற்ற முடியும் என்ற ஆழ்ந்த நம்பிக்கை கொண்டது. இருக்கும் சட்டத்தை மாற்றும் அதிகாரம் இந்து சமுதாயத்திற்கு கிடையாது என்பதும் அதன் கருத்து. இந்தக் காரணங்களினால் பல நூற் றாண்டுகளாக, தலைமுறை தலைமுறையாக இந்து சமுதாயத்தில் சட்டம் ஒரே மாதிரியாக இருந்து வருகிறது. இந்து சமுதாயம் தன் னுடைய அதிகாரத்தையும் பொறுப்பையும் உணரவில்லை. சமுதாய, பொருளாதார மற்றும் சட்ட ரீதியான மாற்றங்களை நாம்தான் உரு வாக்க வேண்டும் என்ற பொறுப்பு இந்த சமுதாயத்திற்கு இல்லாமல் இருந்தது. முதல் முறையாக நாம்தான் இத்தகைய ஒரு பெரிய பொறுப்பை நடைமுறைப்படுத்தும் எண்ணத்தில் துணிச்சலாக இந்த இந்து சட்ட தொகுப்பைக் கொண்டு வந்திருக்கிறோம், இதற்கு மக்கள் ஒத்துழைப்பு அளித்து ஒரு பெரிய மாற்றத்திற்கு உதவுவார்கள் என்று நம்புகிறோம்.

ஐயா , இந்த மசோதாவிற்கு எதிராக பொதுமக்கள் கருத்துக் கொண்டுள்ளார்கள் என்று பேசப்பட்டுள்ளது. இங்கு சொல்லப்பட் டுள்ள பல்வேறு கருத்துக்களை நாம் பரிசீலித்ததில் பின்வரும் கருத்தை நான் சொல்ல விரும்புகிறேன். இந்தப் பிரச்சினை பெரும் பாலோரின் கருத்துப்படி முடிவு செய்யப்பட வேண்டிய விஷயமல்ல. மாற வேண்டிய கட்டாயத்தில் உள்ள ஒரு சமுதாயம் பழையவற்றை மறந்து புதியவற்றை நோக்கி முன்னேறும் போது, ஒரு சாரார் பழமைக் கும், ஒரு சாரார் புதியவற்றிற்கும் ஆதரவு கொடுப்பார்கள். ஆனால் நாம் கடைப்பிடிக்க வேண்டிய பாதை நம்முடைய மனச்சாட்சி சொல்லும் பாதை மட்டும்தான். சமுதாயத்தின் மனசாட்சிக்கேற்ப தான் இந்த மசோதா அமைந்துள்ளது. ஆகையால் நான் இந்த

மசோதாவை எந்த விதமான தடையுமின்றி அறிமுகப்படுத்துகிறேன். பெரும்பாலான மக்கள் அதை எதிர்த்தாலும் இந்த மசோதா ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும்.

**திரு. சபாநாயகர் :** விஷயம் இதுதான் : தற்போதுள்ள இந்து சட்டத்தின் சில பிரிவுகளை மாற்றி அமைக்கவும், மற்ற பிரிவுகளை தொகுத்து வழங்குவதுமான பொறுக்குக் குழுவிற்குக் கீழ்க்காணும் நபர்கள் உறுப்பினர்களாக இருப்பார்கள்: திரு. அல்லாடி கிருஷ்ண சாமி அய்யர், டாக்டர் பக்ஷி தேக் சந்த், திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார், திருமதி. ஜி. துர்காபாய், திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி, திரு. யு. சீனிவாச மல்லையா, திரு. மிகிர் லால் சட்டோபாத்யாயா, டாக்டர் பி.எஸ். தேஷ்முக், திருமதி ரேணுகா ரே, டாக்டர் பி.கே. சென், பாபு ராம்நாராயண் சிங், திரு. கிஷோரி மோகன், திருமதி அம்மு சுவாமிநாதன், பண்டிட் பால கிருஷ்ண சர்மா, திரு. குர்ஷித் லால், திரு. பிரகேஸ்வர் பிரசாத், திரு. பி. சிவராவ், திரு. பல்தேவ் சுவரூப், திரு. வி.இ. கேசவராவ் மற்றும் மசோதாவை அறிமுகப் படுத்துபவர். அடுத்தக் கூட்டம் ஆரம்பித்த முதல் வாரத்தின் கடைசி நாளுக்குள் இக்குழு அறிக்கையை அளிக்க வேண்டும். ஐந்து உறுப் பினர்கள் கலந்துகொண்டாலே இக்குழு தனது பணியைக் கவனிக் கலாம்.

இந்தத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. சபாநாயகர் :** இத்துடன் இந்த அவை முடிவிற்கு வருகிறது. ஜனவரி 28-ந்தேதி ஆரம்பித்த இந்த அவை எல்லோருடைய ஒத் துழைப்புடன் முடிவிற்கு வருகிறது.

எல்லா உறுப்பினருடைய ஒத்துழைப்பும் எப்போதும் எனக்கு கிடைத்தது. நான் அவர்களுக்கு நன்றி கூறி இந்தக் கூட்டத்தை முடிக் கிறேன்.

*(இந்த அவை மறு தேதி குறிப்பிடப்படாமல் ஒத்தி வைக்கப் பட்டது.)*

□□

# பிரிவு II

## டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின்
## வரைவு இந்து சட்டத் தொகுப்பு மசோதா
## பொறுக்குக் குழு ஏற்படுத்திய மாற்றங்களுடன்
## அப்போதிருந்த இந்து சட்டத் தொகுப்பு

## குறிப்பு

அரசு அறிமுகப்படுத்தவுள்ள திருத்தங்களுக்கு மேற்கொண்டு சரியான விளக்கம் கொடுக்கும் எண்ணத்துடன், இந்தத் தொகுப்பு என்ன முறையில் மாற்றப்படப் போகிறது என்பது இப்புத்தகத்தின் 58-174ஆவது பக்கங்களில் கொடுக்கப்பட்டுள்ளது.

பொறுக்குக் குழு ஏற்படுத்திய மாற்றங்களுடன் இப்போதைய வரைவு தொகுப்பின் வகையங்கள் 175-247ஆவது பக்கங்களில் கொடுக்கப்பட்டுள்ளன. என்ன மாற்றம் செய்யப்பட்டுள்ளது என்பதும், இனி அறிமுகப்படுத்தவுள்ளதுமான பிரிவும் 58-174ஆவது பக்கங்களில் அடிக்கோடிட்டு அல்லது பக்கக் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

விடுபட்ட பிரிவுகள் நட்சத்திரக் குறிகளுடன் குறிக்கப்பட்டுள்ளன. ஏதாவது காலியான பக்கம் இருப்பின், அது பொறுக்குக் குழுவின் சிபாரிசில் அதற்கு ஈடான எதுவும் இல்லை என்பதையோ அல்லது பொறுக்குக் குழுத் தொகுப்பின் ஒரு பகுதி விட்டுவிடப் பட்டது என்பதையோ குறிக்கும்.

(மேலும் திருத்துவதற்குப் பரிந்துரைத்தபடி)

A

மசோதா

***(இந்து சட்டத்தின் சில பிரிவுகளை மாற்றி அமைக்கவும், தொகுத்து அளிக்கவுமான அறிமுகப்படுத்தவுமான மசோதா.***

* * *

கீழ்க்கண்ட முறையில் நாடாளுமன்றத்தால் சட்டமாக்கப் படுகிறது:

**பகுதி I - முதல் நிலை**

**1. தலைப்பும் மற்றும் அமுல்படுத்தப்பட உள்ள இடமும்**
* * * இந்தச் சட்டம் இந்து சட்டத் தொகுப்பு, 1950 என அழைக்கப்படும்.

2. இது ஜம்மு காஷ்மீர் தவிர இந்தியா முழுமைக்கும் பொருந்தும்.

* * * * *

*(2)

**2. தொகுப்பின் பிரயோகம்** - (1) இந்தத் தொகுப்பு கீழ்க்கண்டவர்களுக்குப் பொருந்தும்-

அ) மத ரீதியில் இந்துக்களாக உள்ளவர்கள், இந்து மதத்தின் பல்வேறு பிரிவுகளைப் பின்பற்றுவோர், வீர சைவர்கள் அல்லது லிங்காயத்துகள் மற்றும் பிரம்மோ, பிரார்த்தனாக்கள் அல்லது ஆரிய சமாஜிகள்.

ஆ) புத்த மதம், ஜைன மதம் மற்றும் சீக்கிய மதத்தைப் பின்பற்றுபவர்கள்.

இ) i) இந்தப் பிரிவில் செய்யப்பட்டுள்ள வியாக்கியானத்துக்கு உட்பட்டு பெற்றோர்களில் ஒருவர் இந்துவாக இருந்தால் அவர்களுக்குப் பிறக்கும் சட்டப்படியான மற்றும் சட்டத்திற்கு புறம்பான குழந்தைகள்;

ii) சட்டரீதியான மற்றும் சட்டத்திற்குப் புறம்பான குழந்தையின் பெற்றோரில் ஒருவர், இந்தப் பிரிவின்படி இந்துவாக இருக்கவேண்டும்; ஆனால் அதே சமயம் இத்தகைய இந்துக் குழந்தை சம்பந்தப்பட்ட பெற்றோர் சார்ந்த சமூகத்தின், குழுவின், அல்லதுகுடும்பத்தின் ஓர் உறுப்பினராக வளர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

ஈ) **பௌத்த, ஜைன மற்றும் சீக்கிய,** மதத்திலிருந்து இந்து மதத்திற்கு மாறியவர்.

2) மத ரீதியில் முஸ்லீம், கிருத்துவர், மற்றும் பார்சி, யூதர் அல்லாத எவருக்கும் இத்தொகுப்பு பொருந்தும்.

ஆனால் இந்தத் தொகுப்பு ஏற்கப்பட்டிருக்கவில்லை என்றால் இங்கு குறிப்பிடப்பட்டிருக்கும் எந்த ஒரு விஷயம் சம்பந்தமாகவும் ஒருவர் இந்து சட்டத்துக்கோ அல்லது அதன் எந்த ஒரு பழக்கவழக்கத்துக்கோ, வழக்காறு மரபுக்கோ உள்ளாகி இருக்கமாட்டார் என்னும் பட்சத்தில் அப்போது இவ்விஷயங்கள் சம்பந்தமாக இந்தச் சட்டத் தொகுப்பு அவருக்குப் பொருந்தாது.

3) இந்தத் தொகுப்பின் எந்தப் பகுதியிலாவது ''இந்து'' என்று சொல்லப்பட்டால், ஒரு நபர் இந்து மதத்தில் பிறக்காதவராக இருந்தாலும், இந்த தொகுப்பு அவருக்குப் பொருந்தும் என்று பொருள் கொள்ளவேண்டும்.

★ ★ ★ ★ ★ ★

**(3)**

**3. பொருள்வரையறைகள் :** இந்தத் தொகுப்பில் சந்தர்ப்ப சூழ்நிலை வேறு விதமாக இருந்தாலன்றி

**i) ''அலிய சந்தானச் சட்டம்'' என்பது இந்தச் சட்டம் இயற்றப்படாமலிருந்து எவர்கள் 1949 - மதராஸ் அலிய சந்தான சட்டத்துக்கு (மதராஸ் சட்டம் IX 1949) உட்பட்டவர்களாக இருக்கிறார்களோ அவர்களுக்குப் பொருந்தக் கூடிய சட்ட முறைமையைக் குறிக்கும்;**

ii) ''வழக்காறு'' மற்றும் நெடுநாளைய ''நிலைத்த நடைமுறை'' என்றால் நீண்ட காலமாக எந்தவித தடையுமின்றித் தொடர்ந்து பின்பற்றப் பட்டு வரும் முறை எனக் கருதப்படும். எந்த ஒரு பகுதியிலும் இந்துக்கள் மத்தியில் சில குறிப்பிட்ட குடும்பம், பழங்குடியினர் அல்லது குழு அல்லது சமூகத்தால் தங்களைக் கட்டுப்படுத்தக் கூடிய ஒன்றாக பின்பற்றப்படுபவையாகும். இம்மாதிரியான பழக்கம் பொதுவான விதிமுறைக்கு எதிரானதாகவோ தர்க்கரீதியாக ஏற்றுக் கொள்ளக்கூடியதற்கு மாறுபட்டதாகவோ இருக்கக் கூடாது.

(iii) ஒரு குடும்பத்திற்கு மட்டும் அமுல்படுத்தப்பட வேண்டிய விதி முறை அந்த குடும்பத்தினரால் கைவிடப்படாத ஒன்றாக இருக்க வேண்டும்;

(iv) ஒரே பெற்றோர் வழியாக பிறந்த நபர், அந்த பெற்றோருக்கு முழு இரத்த உறவு முறை கொண்ட உறவினராகக் கருதப்படுவார். ஒருவருடைய இரு வேறு மனைவிகள் வழியாக பிறந்த நபர்கள் பாதி ரத்த உறவு முறை கொண்டவர்களாகக் கருதப்படுவார்கள்;

(v) இரு தகப்பன் வழியாக ஒரே தாயின் வயிற்றில் பிறந்த நபர்கள் ''கர்ப்ப ரத்த உறவினர்கள்'' என்று கருதப்படுவார்கள்.

*விளக்கம் IV & V* - பிரிவுகளில் சொல்லப்பட்டவைகளில், 'மூதாதையர்'' என்பதில் தந்தையும், பெண் மூதாதையர் என்பதில் தாயும் அடங்குவர்.

(vi) ''மறுமக்கதாயம்'' சட்டம் என்பது கீழ்க்கண்டவர்களுக்கு அமுல்படுத்தப்படும்:

(அ) எவர் இந்தச் சட்டத் தொகுப்பு இயற்றப்படாவிட்டால் பின்வரும் சட்டங்களுக்குக் கட்டுப்படக்கூடியவர்களோ அவர்கள் மதராஸ் மருமக்கதாயம் சட்டம் 1932 (மதராஸ் சட்டம் XXII, 1933) திருவாங்கூர் நாயர் சட்டம் - 1100, திருவாங்கூர் ஈழவர் சட்டம் - III-1100, நாஞ்சில் நாடு வெள்ளாளர் சட்டம் - 1101, திருவாங்கூர் க்ஷத்திரிய சட்டம் - 1108, திருவாங்கூர் கிருஷ்ண வக்கா - மருமக்க தாயி சட்டம் - 1115, கொச்சி தீய்யா சட்டம் VIII - 1107, கொச்சி நாயர் சட்டம் XXIX - 1113, கொச்சி மருமக்க தாயச் சட்டம் XXXIII - 1113; அல்லது

ஆ) எந்தச் சமூகத்தை சேர்ந்த நபரும், திருவாங்கூர் கொச்சி அல்லது மதராஸில் பெரும்பாலும் வசிப்பவராக இருந்து, பெண் வழியாக வாரிசுரிமை பெறுபவர்களாயிருப்பவர்கள், ஆனால் இதில் அலிய சந்தான சட்டம் சேர்க்கப்படமாட்டாது;

(vii) ''நம்பூதிரி சட்டம்'' என்று சொன்னால் இந்தத் தொகுப்பு இயற்றப்படா விட்டால் கீழ்க்காணும் ஏதாவது ஒரு சட்டத்துக்கு உட்பட்டவர்கள்: மதராஸ் நம்பூதிரி சட்டம் - 1932 (மதராஸ் சட்டம் XXI - 1931) கொச்சி நம்பூதிரி சட்டம் - XVII 1114 அல்லது திருவாங்கூர் மலயாள பிராமணர் சட்டம் - 1106 (ஒழுங்கு முறைச் சட்டம் III 1106);

(viii) ''பகுதி'' என்றால் இந்தத் தொகுப்பின் ஒரு பகுதி என்று பொருள்;

(ix) ''வகுத்தமைக்கப்பட்டது'' என்றால் இந்த தொகுப்பின் விதிகளின்படி வகுத்தமைக்கப்பட்டது என்று பொருள்படும்.,

(x) ''உறவு முறை'' என்றால் சட்டரீதியான உறவு முறை என்று பொருள்.

சட்டத்திற்கு புறம்பாக பிறந்த குழந்தைகள் அவர்களுடைய தாய்க்கு உறவினர்களாக கருதப்படுவார்கள். அவர்களுக்குச் சட்ட ரீதியாக பிறக்கும் குழந்தைகள் அதே முறையில், ஒருவருக்கொருவர் உறவினர்களாக கருதப்படுவர்.

''உறவு முறை'' என்று சொன்னால் அல்லது எங்காவது குறிப்பிடப்பட்டால் இதே முறையில் புரிந்துக் கொள்ள வேண்டும்.

(xi) ''மகன்'' என்ற சொல் தத்து எடுத்த மகனையும் உள்ளடக்கும். இந்தத் தொகுப்பிற்கு முன்போ, பின்போ தத்து எடுத்த நபரையும் உள்ளடக்கும். ஆனால் சட்டத்திற்கு புறம்பான மகனை உள்ளடக்காது.

***(4)***

***4, இந்தத் தொகுப்பின் ஒட்டுமொத்த விளைவு :*** *இந்தத் தொகுப்பில் திட்டவட்டமாக வேறுவிதமாகக் குறிப்பிடப்பட்டிருந்தாலொழிய :-*

*(அ) இந்தத் தொகுப்பு தொடங்குவதற்கு முன்னர், அதில் இடம் பெற்றிருக்கும் எந்த விஷயங்கள் சம்பந்தமாகவும் நடைமுறையிலிருந்து வரும் இந்து சட்டத்தையோ, பழக்கவழக்கத்தையோ, வழக்காறையோ பற்றிய எந்த வாசகமும், விதியும் பொருள் விளக்கமும் செயலிழந்துவிடும்; மற்றும்*

*(ஆ) இந்தத் தொகுப்பிற்கு எதிராக உள்ள எந்தச் சட்டமும்; தொகுப்பிற்கு முன்பு அமுலில் இருந்தாலும் இப்போது அது செயலிழந்துவிடும்.*

**(5)**

# பகுதி II - திருமணம் மற்றும் திருமணத்தை செல்லாமல் ஆக்குதல்

## அத்தியாயம் 1

### *திருமணம்*

**5. பொருள் விளக்கம்:** இந்தப் பகுதியில் சந்தர்ப்ப சூழ்நிலை வேறு விதமாக இருந்தாலன்றி கீழ்க்காணும் முறையைப் புரிந்துக் -கொள்ள வேண்டும்.

*அ) ''மாவட்ட நீதிமன்றம்'' என்பதில் மாவட்ட நீதிமன்றத்துக்கு உட்பட்டு மாநில அரசால் அரசாங்க பதிவேட்டில் அறிவிக்கப்பட்டுள்ள எந்த நீதிமன்றமும் அடங்கும்.*

*ஆ) ''சபிண்டா உறவு முறை'' என்பது எந்த ஆணும் மூன்றாவது அட்டவணையில் முதல் பிரிவில் முதல் பத்தியில் சொல்லப்பட்டுள்ள நபருக்கு உறவினராக இருந்தால் அவர் அவருக்கு சபிண்டா உறவு எனக் கருதப்படுவார். ஒரு பெண் சபிண்டா உறவு முறை என்று சொன்னால், அதே பகுதியில் உள்ள இரண்டாவது பத்தியிலுள்ள நபருக்கு உறவாக இருந்தால் அவர் அந்த நபருக்கு சபிண்டா உறவு முறை என்று சொல்லப்படும்.*

*இ) ''தடுக்கப்பட்ட உறவு முறை'' என்பது - மூன்றாவது அட்டவணையில் இரண்டாவது பிரிவில் முதல் பத்தியில் குறிக்கப்பட்டுள்ள நபரும், வேறு நபர்களும் தடுக்கப்பட்ட உறவு முறையைச் சேர்ந்தவர்கள் என்று கொள்ளவேண்டும். அதே போல் அதே பிரிவில் இரண்டாவது பத்தியிலுள்ள பெண்ணும் வேறு நபர்களும் தடுக்கப்பட்ட உறவு முறை என்ற வட்டத்திற்குள் வருவர்.*

*விளக்கம் :- ஆ, இ என்ற பகுதியில் சொல்லியுள்ள உறவு முறை கீழ்க்காணுபவற்றை உள்ளடக்கும்-*

(i) பாதி ரத்த உறவு, கர்ப்ப ரத்த உறவு, முழு ரத்த உறவு சம்பந்தப்பட்ட உறவு முறை;

(ii) சட்டத்திற்கு புறம்பான ரத்த உறவு முறை மற்றும் சட்டத்திற்குட்பட்ட உறவு முறை;

(iii) ரத்த ரீதியான உறவு முறை மற்றும் தத்து எடுப்பதால் வரும் உறவு முறை.

உறவு முறை என்று வரும் இடங்களில் எல்லாம் இந்தப் பொருளில் புரிந்துக் கொள்ள வேண்டும்.

★ ★ ★

*(6)*

**6. இந்து திருமண முறைகள் :** இங்கு வேறு விதமாக வெளிப்படையாகக் கூறாதவரையில், இந்துக்களிடையிலான எந்தத் திருமணமும் சடங்கு முறைப்படி நடத்தப்பட்டாலொழிய அது அங்கீகரிக்கப்பட மாட்டாது -

**அ)** **ஒரு தார்மிகத் திருமணம் அல்லது,**

**ஆ)** **சிவில் (பதிவு) திருமணம் அல்லது**

**இ)** **பிரிவு 24 (அ)வின் ஷரத்துகளின்படி - அந்தப் பிரிவு பொருந்துகின்ற திருமணங்கள்;**

*(7)*

*ஒரு தார்மிகத் திருமணத்திற்குப் பொதுவான வகையங்கள்*

**7. ஒரு செல்லுபடியாகும் தார்மிகத் திருமணத்திற்கான அத்தியாவசிய நிலைமைகள்** - தார்மிக முறையில் சடங்குகளின்படி எந்த இரு இந்துக்களிடையில் நடைபெறும் ஒரு திருமணமும், கீழ்வரும் நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்பட்டால் அது ஒரு செல்லுபடியாகும் திருமணமாகும். அந்த நிபந்தனைகளாவன:

i) திருமணத்தின்போது எந்தத் தரப்புக்கும் கணவனோ அல்லது மனைவியோ இருக்கக் கூடாது;

ii) திருமணத்தின்போது எந்தத் தரப்பும் முட்டாளாகவோ, பைத்தியமாகவோ இருக்கக்கூடாது;

iii) திருமணத்தின்போது மணமகன் பதினெட்டு வயது பூர்த்தியடைந்தவனாக இருக்கவேண்டும்; மணமகள் பதினைந்து வயது பூர்த்தியடைந்தவளாக இருக்கவேண்டும்;

iv) மணமக்கள் தடை செய்யப்பட்ட உறவுமுறைக்கு உட்பட்டவராக இருக்கக்கூடாது;

v) தரப்புகள், இருவருக்கும் இடையில் ஒரு தார்மிகத் திருமணத்தை அனுமதிக்கிற அவர்கள் இருவரின் வழக்கம் அல்லது மரபுக்கு இசைவாக இருந்தாலொழிய அவர்கள் ஒருவருக்கு மற்றொருவர் சபிண்டாக்கள் அல்ல.

vi) மணமகள் தனது பதினாறாவது வயதைப் பூர்த்தி செய்யாமலிருக்கும் நிலைமையில் அவள் தமது திருமணத்திற்கு கார்டியனின் (பாதுகாவலரின்) சம்மதம் பெற்றிருக்க வேண்டும்.

## (8)

## ஒரு சிவில் (பதிவுத்) திருமணத்திற்கான பொதுவான ஷரத்துக்கள்

***8. ஒரு செல்லுபடியாகும் சிவில் திருமணத்திற்கு அத்தியாவசியமானவை:*** பதிவு முறையில் நிறைவேற்றப்பட்ட எந்த இரு இந்துக்களுக்கும் இடையிலான திருமணம், பின்வரும் நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்பட்டால் அது செல்லத்தக்க திருமணமாகும். அவையாவன:

i) திருமணத்தின்போது யாரும் கணவனையோ, மனைவியையோ கொண்டிருப்பவராக இருக்கக்கூடாது;

ii) திருமணத்தின்போது யாரும் முட்டாளாகவோ, மனநிலை சரியில்லாதவராகவோ இருக்கக்கூடாது;

iii) திருமணத்தின்போது மணமகன் 18 வயதையும், மணமகள் **பதினைந்து** வயதையும் பூர்த்தி செய்தவர்களாக இருக்கவேண்டும்.

iv) தரப்புகள் தடைசெய்யப்பட்ட உறவுமுறையின் எல்லைகளுக்குள் இருக்கக்கூடாது.

v) திருமண சந்தர்ப்பத்தில் மணமகனும் மணமகளும் 21 வயதைப் பூர்த்தி செய்யாதவர்களாயிருந்தால், அவர்கள் தமது பாதுகாவலரின் (கார்டியன்) சம்மதத்தைப் பெற்றிருக்கவேண்டும்.

**மணமகள்** ஒரு விதவையாக இருந்தால் அத்தகைய சம்மதம் தேவையில்லை.

(9)

## ஒரு தார்மிகத் திருமணத்தின் சம்பிரதாயங்கள்

**9. சடங்குகள்** - (1) ஒரு *தார்மிகத்* திருமணமானது, அத்தகைய திருமணத்திற்கு அத்தியாவசியமான, இருதரப்புகளுக்கு மரபான சடங்குகள் மற்றும் சம்பிரதாயங்களுக்கு ஏற்ப நிறைவேற்றப்பட்டாலொழிய அது பூர்த்தியடையாது; இரு தரப்புகளையும் கட்டுப்படுத்தாது.

2) அத்தகைய சடங்குகளிலும் சம்பிரதாயங்களிலும் **சப்தபதி** உள்ளடங்கியிருந்தால் (அதாவது, புனிதமான அக்னியின் முன்னால் மணமகனும் மணமகளும் கூட்டாக ஏழு அடிகளை எடுத்துவைத்தல்) ஏழாவது அடி எடுத்து வைத்தபோது அந்தத் திருமணம் நிறைவு பெறுகிறது. இரு தரப்பினரையும் கட்டுப்படுத்துகிறது.

3) இந்தப் பிரிவில் என்ன கூறப்பட்டிருந்த போதிலும்,

*தார்மிக* முறையில் நிறைவு பெற்ற எந்தத் திருமணமும், சடங்கு ரீதியாக அது நிறைவு செய்யப்பட்ட பின்னர், எந்த ஒரு தரப்பினரின் மரபான சடங்குகள் மற்றும் சம்பிரதாயங்களில் ஏதாவது குறைபாடுகளைக் காரணம் காட்டி, செல்லாததாக்கப்பட முடியாது.

(10)

**10. *தார்மிகத்* திருமணத்தின் பதிவு :** (1) எந்த ***தார்மிகத்*** திருமணத்தின் சான்றை நிறுவும் நோக்கத்திற்காக, ***மாநில அரசு,*** விதிகளின்படி கீழ்வருவனவற்றை ஏற்பாடு செய்யலாம்:-

அ) அத்தகைய திருமணத்தின் விவரங்களை, அது பொருத்தமானது என்று கருதும் முறையிலும், சூழ்நிலைகளிலும், இதற்காக வைக்கப்பட்டிருக்கும் ***தார்மிகத்*** திருமணப் பதிவேட்டில் பதிவு செய்யப்படும்; மற்றும்

ஆ) **மாநிலத்தில்,** அல்லது விதிகளில் நிர்ணயித்துக் கூறப்படும் **பிரதேசங்களில்** அத்தகைய விவரங்கள் பதிவு செய்யப்படுவது கட்டாயமாகும்.

2) துணைப் பிரிவு *(1)*ன் கீழ் எந்த விதிகளையும் உருவாக்குவதில், ***மாநில அரசு,*** அந்த விதிகளை மீறுவதை, அபராதத்துடன் தண்டிப்பதற்கு வகை செய்யலாம்; அது நூறு ரூபாய்கள் வரை செல்லக் கூடும்.

(11)

## ஒரு பதிவுத் திருமணத்தின் சம்பிரதாயங்கள்

**11. திருமணப் பதிவாளர்கள்:** மாநில அரசு, இந்து திருமணங்களுக்கு ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நபர் களைப் பதிவாளர்களாக நியமிக்கலாம்; இந்த பாகத்தில், ''ரிஜிஸ்ட்ரார்'' (பதிவாளர்) என்று குறிக்கப்படும். இவர்கள் மாநிலத் திற்கு, அல்லது அதனுடைய எந்தப் பகுதிக்காவது நியமிக்கப் படலாம்; அத்தகைய எந்தப் பதிவாளராவது நியமிக்கப்படும் பிரதேசம், அவருடைய மாவட்டம் என்று அழைக்கப்படும்.

(12)

**12. திருமணம் பற்றி பதிவாளருக்கு அறிவிப்பு :-** இந்த பாகத்தின் கீழ் ஒரு பதிவுத் திருமணம் செய்து கொள்ளப்படுவதற்கு விரும்பினால், திருமணத்தின் தரப்புகள், நான்காவது அட்டவணையில் குறிப்பிட்டுள்ள படிவத்தில் எழுத்து மூலமாக மாவட்டப் பதிவாளருக்கு அறிவிப்புக் கொடுக்க வேண்டும். குறைந்தபட்சம் திருமணத்தின் தரப்புகளில் ஒருவர், அந்த அறிவிப்புக் கொடுக்கும் தேதிக்கு முன்னதாக முப்பது நாட் களுக்குக் குறையாமல் அங்கு வசித்திருக்க வேண்டும்.

(13)

**13. திருமண அறிவிப்பு புத்தகம் மற்றும் வெளியிடுதல்:-** பதிவாளர் (1) 12-வது பிரிவின்படித் தமக்கு அளிக்கப்பட்டுள்ள அத்தனை அறிவிப்புகளையும் இத்தகைய அறிவிப்பு ஒவ்வொன்றின் நகலையும் மாநில அரசால் தமக்கு வழங்கப்பட்டுள்ள இந்து சிவில் திருமணப் புத்தகம் என்ற புத்தகத்தில் எழுதி வைக்க வேண்டும். அம்மாதிரியான புத்தகம் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் எந்தக் கட்டணமுமின்றிப் பொது மக்கள் பார்வையிட வைக்கப்பட வேண்டும்.

2) பதிவாளர் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள அத்தனை அறிவிப்புகளையும் அதற்கென்று ஏற்படுத்தப்பட்டுள்ள முறைகளின்படி வெளியிட வேண்டும்.

(14)

**14. திருமணத்திற்கு எதிர்ப்பு :** (1) 12-வது பிரிவின்படி திருமண அறிவிப்பு கொடுக்கப்பட்ட 30- நாட்களுக்குப் பின் உட்பிரிவு 2-ன்படி எதிர்ப்பு இருந்தால் தவிர அந்தத் திருமணத்தை நடத்தலாம்.

2) திருமண அறிவிப்பு கொடுத்த 30- நாட்களுக்குள் விதி 8-க்கு இந்த திருமண அறிவிப்பு முரணாக இருக்கிறது என்று சொல்லி எந்த நபரும் எதிர்ப்பு தெரிவிக்கலாம்;

3) இம்மாதிரி தெரிவிக்கும் எதிர்ப்பை இந்து சிவில் திருமண புத்தகத்தில் பதிவாளர் பதிவு செய்ய வேண்டும்; மேலும் இந்த எதிர்ப்பை அவசியம் ஏற்பட்டால் எதிர்ப்புத் தெரிவித்தவருக்கு விளக்கிச் சொல்லி இந்தப் புத்தகத்தில் அவரையோ அவர் சார்பாக வேறு எவரையுமோ கையெழுத்து இடச்செய்ய வேண்டும்.

(15)

15. எதிர்ப்பு மனு கிடைத்தவுடன் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறையில் (1) 14-வது பிரிவின்படி திருமணத்திற்கு எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டிருந்தால் எதிர்ப்பு மனு கிடைத்த 30-நாட்கள் முடிவதற்குள் திருமணத்தை நடத்தப் பதிவாளர் அனுமதிக்கக் கூடாது. தகுந்த அதிகாரம் பெற்றுள்ள நீதிமன்றம் திறந்திருந்தால் அல்லது அந்த நீதிமன்றம் விடுமுறையில் இருந்தால், நீதிமன்றம் திறந்து 30- நாட்களுக்குள் திருமணம் நடைபெற அனுமதிக்கக் கூடாது.

2) இந்தத் திருமணத்திற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் நபர், அதற்கென்று அதிகாரம் பெற்றுள்ள மாவட்ட நீதிமன்றத்தில்* * * எட்டாவது விதியில் சொல்லப்பட்டுள்ள நிபந்தனைகளுக்கு மொத்தமாகவோ அல்லது ஏதாவது ஒரு நிபந்தனைக்கு எதிராகவோ இத்திருமணம் நடந்துள்ளது எனக் கூறி அதற்காக வழக்கு போட முடியும். அம்மாதிரி வழக்குப் போட்டால் வழக்குப் போட்ட நபருக்கு வழக்குப் போட்டதற்காக சான்றிதழ் அந்த நீதிமன்றத் தால் வழங்கப்படும்.

3) விதி 2-ன்படி சான்றிதழ் பெற்ற நபர் சான்றிதழ் பெற்ற 30-நாட்களுக்குள் அதனைப் பதிவாளரிடம் ஒப்படைக்க வேண்டும். நீதிமன்றம் விடுமுறையானால், நீதிமன்றம் திறந்து 30 - நாட்களுக்குள் ஒப்படைக்க வேண்டும்.

4) அத்தகைய சான்றிதழ், துணைப் பகுதி (3)ல் வரையறுத்துக் கூறியுள்ள முறையிலும், அந்தக் காலவரம்புக்குள்ளும் சமர்ப்பிக்கப்படாவிட்டால், அல்லது நீதிமன்றத்தின் முடிவு, பகுதி 8ல் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகள் எதையும் அந்தத் திருமணம் மீறாத நிலையில், திருமண அறிவிப்புக் கொடுக்கப் பட்டுள்ள பதிவாளர், அந்தத் திருமணத்தை நடத்தி வைக்கலாம்.

5) பகுதி 8ல் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகள் எதையாவது அந்தத் திருமணம் மீறுகிறதென்று நீதிமன்றம் முடிவு செய்தால், திருமணம் நடத்தப்பட முடியாது.

(16)

**16. ஆட்சேபனை நியாயமானதாக இல்லாவிட்டால், அபராதம் விதிப்பதற்கு நீதிமன்றத்தின் அதிகாரம் :-** வழக்குத் தொடுக்கப்பட்டுள்ள நீதிமன்றத்தில், ஆட்சேபனை நியாயமானதல்ல, உண்மையானதல்ல என்று தோன்றினால், ஆட்சேபம் செய்துள்ள நபருக்கு ரூபாய் ஆயிரத்திற்கு மேற்படாத அபராதத்தை நீதிமன்றம் விதிக்கலாம்; மேலும், அத்தொகை முழுவதையோ, அல்லது அதன் ஒரு பகுதியையோ திருமணம் செய்து கொள்ள விருக்கும் மணமக்களுக்கு வழங்கலாம்.

(17)

**17. மணமக்களும் சாட்சிகளும் செய்யவேண்டிய பிரகடனம் :-** (1) திருமணம் செய்துகொள்வதற்கு முன்னால், மணமக்களும், மூன்று சாட்சிகளும் பதிவாளரின் முன்னிலையில், ஐந்தாவது அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள படிவத்தில் கையெழுத்திட வேண்டும். மற்றும், மணமக்களில் யாராவது 21 வயதைப் பூர்த்தி செய்யாமலிருந்தால், (மண மகள் விதவையாக இல்லாத பட்சத்தில்) அவரது கார்டியனும் அந்தப் பிரகடனத்தில் கையெழுத்திட வேண்டும்.

2) துணைப் பிரிவு (1)ன் கீழ் செய்யப்படும் எந்தப் பிரகடனத்திலும் பதிவாளரும் எதிர் - கையெழுத்து இடவேண்டும்.

(18)

**18. திருமணம் நடைபெறும் இடமும் முறையும் :** 1) திருமணம் கீழ்வரும் இடங்களில் முறைப்படி நடைபெறலாம்:

அ) பதிவாளரின் அலுவலகத்தில், அல்லது,

ஆ) பதிவாளரின் அலுவலகத்திலிருந்து நியாயமான அளவு தூரத்தில், இருதரப்பினரின் விருப்பத்திற்கேற்ப வேறு இடத்தில், நிர்ணயிக்கப்படும் நிபந்தனைகளின் பேரிலும், நிர்ணயிக்கப் படும் கூடுதல் கட்டணம் செலுத்தப்படுவதன் பேரிலும் நடை பெறலாம்.

2) திருமணம் எந்த முறையிலும் நடைபெறலாம்: ஆனால், பதிவாளரின் முன்னிலையிலும், மூன்று சாட்சிகளின் முன்னிலை யிலும் மணமகனும், மணமகளும் ஒருவருக்கொருவர் நான் (அ) உங்களை (ஆ) என்னுடைய சட்டப்படியான மனைவியாக (அல்லது கணவனாக) ஏற்றுக் கொள்கிறேன் என்று கூறினால் தான் திரும ணம் நிறைவுபெறும், இருதரப்பினரையும் கட்டுப்படுத்தும்.

3) திருமணம் பதிவாளர் மற்றும் மூன்று சாட்சிகளின் முன்னிலையில் நடைபெறவேண்டும்.

(19)

**19. திருமணச் சான்றிதழ்** - (1) திருமணம் நடத்தப்பட்ட வுடனே, பதிவாளர், ஆறாவது அட்டவணையில் குறிப்பிடப் பட்டுள்ள படிவத்தில் அந்தத் திருமணம் சம்பந்தமான ஒரு சான்றிதழை எழுதி, அவரால் அதற்காக வைக்கப்பட்டுள்ள புத்தகத்தில் அதைச் சேர்க்க வேண்டும்; அந்தப் புத்தகத்திற்கு ''இந்து சிவில் திருமண சான்றிதழ் புத்தகம்'' என்று பெயர். அந்த சான்றிதழில் மணமக்களும், மூன்று சாட்சிகளும் கையெழுத்திட வேண்டும்.

2) இந்து சிவில் திருமண சான்றிதழ் புத்தகத்தில் பதிவாளர் சான்றிதழைப் பதிவு செய்ததும், அந்த சான்றிதழ், ஒரு சிவில் திருமணம் நடத்தப்பட்டது என்ற உண்மைக்கு முடிவான சாட்சிய மாகக் கருதப்பட வேண்டும். திருமணத்திற்கு சாட்சிகளின் கையெழுத்துக்கள் முதலிய எல்லா சம்பிரதாயங்களும் கடைப் பிடிக்கப்பட்டன.*

* இந்தப் பிரிவில் டாக்டர் அம்பேத்கர் தமது சொந்தப் பிரதியில் பின் கண்டவாறு பென்சிலால் எழுதியுள்ளார். 'எல்லா சம்பிரதாயங்கள் கடைப்பிடிக்கப்பட்டு திருமணம் நடைபெற்றது என்பதற்கான உறுதியான சான்றும் தேவை - ஆசிரியர்.

(20)

**20. அறிவிப்புக் கொடுத்தபின் மூன்று மாதங்களுக்குள் திருமணம் நடத்தப்படாவிட்டால், புதிய அறிவிப்பு தேவை-**
பிரிவு 12-ன்படி, பதிவாளருக்கு அறிவிப்புக் கொடுத்ததிலிருந்து மூன்று மாதங்களுக்குள் ஒரு திருமணம் நடத்தப்படாவிட்டால், அல்லது உத்தேசத் திருமணத்தை ஆட்சேபிக்கும் நபர், தகுதியுள்ள அதிகார வரம்புள்ள ஒரு நீதிமன்றத்தில் ஒரு வழக்குப் பதிவு செய்து, அந்த நீதிமன்றத்தின் முடிவும் (தீர்ப்பும்)வழங்கப்பட்டிருந்தால், அத்தகைய முடிவுக்கு எதிராக மேல் முறையீடு செய்வதற்கு சட்டப்படி அனுமதிக்கப்பட்டுள்ள மூன்று மாத காலம் முடிவடைந்து விட்டால், அல்லது, அத்தகைய முடிவுக்கு எதிராக மேல் முறையீடு செய்யப்பட்டிருந்தால், அப்பீல் நீதிமன்றத்தின் முடிவு வழங்கப் பட்டதிலிருந்து மூன்று மாதங்களுக்குள், திருமண அறிவிப்பும், அது சம்பந்தமான எல்லா நடைமுறைகளும் (விசாரணைகளும்) காலாவதியாகிவிட்டதாகக் கருதப்பட வேண்டும்; மேலும், இந்த அத்தியாயத்தில் வரையறுத்துக் கூறப்பட்டுள்ள முறையில் ஒரு புதிய அறிவிப்புக் கொடுக்கப்படுகின்ற வரையில் திருமணம் நடத்தப்படுவதற்கு எந்தப் பதிவாளரும் அனுமதிக்கக் கூடாது.

(21)

## தார்மிகத் திருமணங்களை சிவில் திருமணங்களாகப் பதிவு செய்தல்

**21. சில தார்மிகத் திருமணங்களைப் பதிவு செய்வதற்கான நடைமுறை:** 1) எந்த இரு இந்துக்களாவது தார்மிக முறைப்படியான திருமணம் செய்து கொண்டுள்ள நிலையில்:-

அ) இந்த சட்டத்தொகுப்பு தொடங்கப்படுவதற்கு முன்னால், எந்த வாசகம், விதி அல்லது இந்து சட்டத்தின் வியாக்கியானப்படி, அல்லது திருமணத்தின்போது அமலிலிருந்த எந்த வழக்கம் அல்லது மரபின்படி நடத்தப்பெற்ற அத்தகைய எந்தத் திருமணத்தின் செல்லத்தக்க தன்மை குறித்து சந்தேகங்கள் (ஐயப்பாடுகள்) எழுப்பப்பட்டால், அல்லது,

ஆ) இந்த சட்டத் தொகுதி தொடங்கப்பட்டதற்குப் பின்னர், **7-வது பிரிவின் (v)-வது ஷரத்தில்** அடங்கியுள்ள விவரங்களுக்கு முரணாயிருக்கிறது என்ற காரணத்தினால் அத்தகைய திருமணம் செல்லத்தகாததாக்கப்பட்டால்: அத்தகைய நபர்கள், எந்த சமயத்திலாவது, மணமக்களில் யாராவது ஒருவர், தமது திருமணத்தைப் பதிவு செய்வதற்காக விண்ணப்பம் கொடுத்த தேதிக்கு முன்னால் முப்பது நாட்களுக்குக் குறைவில்லாமல் வசித்துள்ள மாவட்டத்தின் பதிவாளருக்கு - அந்தப் பதிவாளரின் முன்னால் நடத்தப்பட்ட சிவில் திருமணம் என்ற வகையில், விண்ணப்பித்துக் கொள்ளலாம்.

2) அத்தகைய எந்த விண்ணப்பமும் கிடைக்கப் பெற்றதன் பேரில், பதிவாளர், வரையறுக்கப்பட்டுள்ள முறையில் பொது அறிவிப்புக் கொடுக்க வேண்டும்; அதற்குப் பிறகு, ஆட்சேபத்திற்கு முப்பது நாட்களை அனுமதித்த பின்னர், மற்றும் அந்தக் காலகட்டத்தினுள் பெறப்படும் எந்த ஆட்சேபங்களையும் விசாரித்த பின்னர்; பதிவாளர் பின்வருமாறு திருப்தியடைந்தால்:

அ) விண்ணப்பத்தில் குறிக்கப்பட்டுள்ள தேதியில் திருமணச் சடங்கு நடைபெற்றது, மற்றும் அந்தத் தேதியிலிருந்து அவர்கள் கணவனும் மனைவியுமாக வாழ்ந்து வருகிறார்கள் என்றும்,

ஆ) **பிரிவு 8-ன் (i), (ii), (iii) மற்றும் (iv)-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள** நிபந்தனைகள், விண்ணப்பம் கொடுக்கப்பட்டுள்ள தேதியில் திருமணத்தின் தரப்புகளிடையில் (மணமக்களிடையில்) பூர்த்தி செய்யப்பட்டுள்ளன என்றும்; மற்றும்

இ) திருமண சந்தர்ப்பத்தில் மணமக்கள் விதவையாக இல்லாத நிலையில், மனுக் கொடுத்த தேதியில் 21-வயதைப் பூர்த்தி செய்யாத நிலையில், ஒரு சிவில் திருமணமாக அவர்களது திருமணம் பதிவு செய்யப்படுவதற்கு அவருடைய அல்லது அவளுடைய கார்டியனின் சம்மதம் பெறப்பட்டுள்ளது என்பது குறித்துப் பதிவாளர் திருப்தியடைந்தால், ஏழாவது அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள படிவத்தில், இந்து தார்மிகத் திருமணப் பதிவேட்டில் ஒரு சான்றிதழைப் பதிவு செய்யலாம்; அந்த சான்றிதழில் மணமக்களும் மூன்று சாட்சிகளும் கையொப்பமிட வேண்டும்.

3) துணைப்பிரிவு (2)ல் குறிப்பிடப்பட்டுள்ள அத்தகைய சான்றிதழ் எதுவும் பதிவு செய்யப்பட்ட பின், அந்தத் திருமணம் எல்லா நோக்கங்களுக்கும் செல்லத்தக்கதாக கருதப்பட வேண்டும்; மணமக்கள் தார்மிகத் திருமணம் செய்து கொண்டதற்குப் பின்னர் பிறந்த எல்லாக் குழந்தைகளும் (அவர்களின் பெயர்களும் சான்றிதழிலும் இந்து **தார்மிகத்** திருமணப் பதிவேட்டிலும் பதிவு செய்யப்பட வேண்டும்) எல்லா அம்சங்களிலும், அவர்களது பெற்றோர்களின் சட்டப்படியான குழந்தைகளாகவே கருதப் படுவார்கள், எப்பொழுதும் அப்படியே கருதப்படுவார்கள்.

4) அத்தகைய திருமணத்தின் எந்தத் தரப்பும், இந்தப் பிரிவின் கீழ் வெளியிடப்படும் எந்த உத்தரவினாலாவது பாதிக்கப் பட்டால், அந்த உத்தரவுக்கு எதிராக, 3-வது பிரிவில் விளக்கியுள்ளபடி, மாவட்ட நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்து கொள்ளலாம்; அந்தப் பதிவாளர் தமது அதிகார எல்லையின் ஸ்தல வரம்புகளுக்குள், தமது அதிகாரத்தை செலுத்துகிறார், மேலும், அத்தகைய மேல் முறையீட்டின் பேரில், மாவட்ட நீதிமன்றத்தின் முடிவு இறுதியானதாகும்.

(22)

## திருமண ஆவணங்களைப் பயன்படுத்துதல்

**22. திருமண ஆவணங்கள் ஆய்வு முதலியவற்றுக்குத் திறந்திருக்க வேண்டும்:-** இந்து தார்மிகத் திருமணப் பதிவேடும், இந்து சிவில் திருமண சான்றிதழ் புத்தகமும் எல்லா நியாயமான காலங்களிலும் ஆய்வுக்குத் திறந்திருக்க வேண்டும்; மற்றும் அவற்றில் அடங்கியுள்ள விவரங்களின் உண்மைக்கு சான்றாகவும் அனுமதிக்கப்பட வேண்டும்.

விண்ணப்பத்தின் பேரில், அவற்றின் சான்றளிக்கப்பட்ட பகுதிகள், நிர்ணயிக்கப்பட்ட கட்டணம் செலுத்தப்பட்டதன் பேரில் பதிவாளரால் வழங்கப்பட வேண்டும்.

(23)

**23. திருமணப் பதிவேடுகளில் அடங்கியுள்ள விவரங்களின் நகல்கள் பிறப்பு, மரணம், மற்றும் திருமணப் பதிவாளர் ஜெனரலுக்கு அனுப்பி வைக்கப்படுதல்** - அவருடைய (பதிவாளரின்) மாவட்டம் அமைந்துள்ள மாநிலத்திற்கான பிறப்பு, மரணம் மற்றும் திருமணங்களின் பதிவாளர் ஜெனரலுக்கு நிர்ணயிக்கப்படும் கால இடைவெளிகளில், இந்து **தார்மிகத்** திருமணப் பதிவேட்டிலும் இந்து சிவில் திருமண சான்றிதழ் புத்தகத்திலும் - அத்தகைய இடைவெளிக்குப்பின்னர் அவரால் எழுதப்பட்ட அனைத்துப் பதிவுகளின் ஒரு மெய்யான நகலை, சான்று அளித்து, நிர்ணயிக்கப்பட்ட படிவத்தில் பதிவாளர் அனுப்பி வைக்கவேண்டும்.

(24)

## திருமணத்தில் கார்டியன் முறை

**24. திருமணத்தில் கார்டியன்களிடையில் முன்னுரிமை:** 1) நான்காவது (IV) பாகத்தின் ஷரத்துகளுக்கு உட்பட்டு, இந்த பாகத்தின் கீழ் திருமணத்தில் ஒரு கார்டியனின் (பாதுகாவலர்) சம்மதம் எங்கெங்கு அவசியமோ, அத்தகைய சம்மதத்தை வழங்குவதற்கு உரிமையுள்ள நபர்கள் பின்வரும் வரிசைப் படி உள்ளவர்களாவர், அவர்களாவன:

1) தந்தை;

2) தாய்;

3) சகோதரர்

* * * * *

* * * * *

4) மிகவும் நெருக்கமான வேறு எந்த உறவினரும்

* * * * *

*விளக்கம் :-* மேலே (4) வதாகக் கூறப்பட்டுள்ளதற்கான பதிவிற்கு எந்த இரு உறவினர்களில் மிகவும் நெருக்கமானவர் என்பதை நிர்ணயிப்பதற்கான சோதனை, பாகம் VII-ல் உயில் எழுதாமல் இறப்பவரின் வாரிசுரிமை பற்றிய விதிகளுக்கு ஏற்ப குழந்தையின் பிதிரார்ஜிதமான சொத்தை வாரிசுரிமையாகப் பெறுவதற்கு யார் முதலில் உரிமையுள்ளவர்கள் என்பதேயாகும்.

2) இந்தப் பிரிவின் ஷரத்துகளின் கீழ் திருமணத்தில் கார்டியனாகச் செயல்படுவதற்குத் தகுதி பெறுவதற்குக் குறிப்பிட்ட நபர் 21 வயதைத் தாண்டியவராக இருக்க வேண்டும்.

3) மேலே கூறப்பட்ட ஷரத்துகளின் கீழ் திருமணத்தில் கார்டியனாக இருப்பதற்குத் தகுதியுள்ள எந்த நபரும் மறுத்தால், அல்லது அவர் பிரசன்னமாயில்லாவிட்டால் இயலாமை அல்லது வேறு காரணத்தினால், செயல்பட முடியாமல் அல்லது தகுதியற்றவராக இருந்தால், அடுத்து இரண்டாவது நிலையிலுள்ள நபர் திருமணத்தில் கார்டியனாக இருப்பதற்கு தகுதியுடையவராவார்.

4) வயதுக்கு வராதவரின் (மைனர்) நலனுக்காக, திருமணத்தின் கார்டியன் ஏற்பாடு செய்த உத்தேசத்திருமணத்தைத் தடையாணையின் மூலம் தடுப்பது அவசியம் என்று நீதிமன்றம் நினைத்தால், அவ்வாறு தடை செய்வதற்கு நீதிமன்றத்திற்குள்ள அதிகாரவரம்பை இந்த பாகத்திலுள்ள எதுவும் பாதிக்காது.

*(25)*

***மருமக்கத்தாயர்களிடையிலான செல்லத்தக்கத் திருமணத்திற்கான சிறப்பு ஷரத்துக்கள், முதலியன***

***24-அ. மருமக்கத்தாயத் திருமணம் அல்லது அலிய சந்தானப் பெண் சம்பந்தமான நிபந்தனைகள்:*** *(1) இந்த சட்டத் தொகுதி அமலுக்கு வந்ததற்குப்பின்னர் ஒரு பெண்ணுக்கும் - இந்த சட்டத் தொகுதி நிறைவேற்றப்படவில்லையென்றால் மருமக்கத்தாயம் அல்லது அலிய சந்தானம் சட்டத்தின்படி நடைபெற்றிருக்கும் - ஓர் இந்து ஆணுக்கும் இடையில் நடைபெற்றிருக்கும் திருமணம் 7-வது பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்பட்டிருந்தால் அது செல்லத்தக்க திருமணமாகும்.*

*ஆனால் மேலே கூறப்பட்ட பிரிவின் (V)-வது ஷரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனை அத்தகைய திருமணம் எதற்கும் பொருந்தாததாக இருக்க வேண்டும்.*

*2) இந்தப் பிரிவின் கீழான ஒவ்வொரு திருமணமும், மணமக்கள் சார்ந்த அல்லது அவர்களில் ஒருவர் சார்ந்த சமூகத்தில் மரபாக உள்ள சடங்குகள் மற்றும் சம்பிரதாயங்களின்படி வெளிப்படையாக நடத்தப்படவேண்டும்;*

*ஆனால், அத்தகைய திருமணம் எதுவும் மேலே கூறப்பட்ட சடங்குகள் மற்றும் சம்பிரதாயங்கள் எதுவும் நடத்தப்பட்டதில் ஏதாவது குறைபாடு காரணமாக செல்லத்தக்கதல்ல என்று கருதப் படக்கூடாது.*

*3) இந்தப் பிரிவின் கீழான ஒவ்வொரு திருமணத்திற்கும், நிர்ணயிக்கப்படும் குறிப்பிட்ட காலத்திற்குள் சம்பந்தப்பட்ட நபர், சம்பந்தப்பட்ட அதிகாரிக்கும், சம்பந்தப்பட்ட முறையில் (படிவத்தில்) அறிவிப்புக் கொடுக்க வேண்டும்.*

*4) இந்தப் பிரிவின் ஷரத்துகளின்கீழ் ஒரு திருமணம் ஒரு பெண்ணுக்கும் - இந்த சட்டத் தொகுப்பு நிறைவேற்றப்படாமலிருந்தால் மருமக்கத்தாயம் அல்லது அலிய சந்தானச் சட்டத்தின்படி திருமணம் நடைபெற்றிருக்கும் - அத்தகைய சட்டத்தின்படியல்லாத ஓர் இந்து ஆணுக்கும் இடையில் நடைபெற்றால் துணைப்*

பிரிவு (3)ன் கீழ் அவர்கள் அறிவிப்புக் கொடுப்பது சட்டப்பூர்வமான தாகும்; அதில் அவர்கள், இந்த பாகத்தில் மருமக்கத்தாயம் அல்லது அலியசந்தானத் திருமணங்களை ரத்து செய்வது சம்பந்த மாக அடங்கியுள்ள சிறப்பு ஷரத்துக்களின் ஆளுகைக்கு உட் படுவதாக அவர்கள் விருப்பம் தெரிவிக்க வேண்டும். இப்படிப்பட்ட பிரகடனம் எதுவும் செய்யாத வரையில்:-

அ) அத்தகைய சிறப்பு ஷரத்தில் அடங்கியுள்ள எதுவும் (இந்தப் பிரிவு நீங்கலாக), மண மக்களில் யாருக்கும் பொருந்தாது; மற்றும்,

ஆ) இந்த பாகத்தின் அத்தியாயங்கள் II-ம் III-ம் ஒரு தார்மிகத் திருமணத்திற்கு, அல்லது ஒரு ***தார்மிகத் திருமணம்*** சம்பந்தமாகப் பொருந்துவதைப் போல, இத்தகைய திருமணத்திற்கும் பொருந்தும்.

5) துணைப் பிரிவு (3)-ன்படி தேவைப்படுவது போல், திருமணம் பற்றி அறிவிப்புக் கொடுப்பதற்கு எந்த நபரும் தவறி னால், அவருக்கு ஐம்பது ரூபாய் வரையில் அபராதம் விதித்துத் தண்டனை வழங்கப்படவேண்டும்.

ஆனால், அத்தகைய அறிவிப்புக் கொடுப்பதற்குத் தவறி யதன் காரணமாக அத்திருமணம் செல்லாததாக்கப்படக் கூடாது; அல்லது மணமக்களின் சட்டபூர்வமான உரிமைகள், அல்லது அத்தகைய திருமணமே கூட பாதிக்கப்படக்கூடாது.

(26)

## தண்டனைகள் முதலியன

***25. இரு மனைவிகளை மணம் செய்து கொள்வதும் அதற்கான தண்டனையும்:-** தனது மனைவி அல்லது கணவன் உயிருடன் இருக்கும் போது - இந்த சட்டத் தொகுப்பின் விதிகளின்படி அல்லது: இந்த சட்டம் அமலாவதற்கு முன்னால், சட்டத்தின் படி, அல்லது அந்த சமயத்தில் அமலிலுள்ள மரபு அல்லது வழக்கத்தின்படி திருமணம் ரத்து செய்யப்படாத வரையில், இந்த சட்டம் அமலாக்கப்பட்டதற்குப் பின்னர் வேறு எந்தத் திருமணம் செய்துகொண்டாலோ, கணவன் அல்லது மனைவி உயிருடனிருக்கும் காலத்தில் மீண்டும் திருமணம் செய்து கொண்ட குற்றத்திற்காக இந்திய தண்டனைச் சட்டம் (1860-ம் வருடத்திய XLV-வது சட்டம்) 494, 495 பிரிவுகளில் நிர்ணயிக்கப் பட்டுள்ள தண்டனைகளுக்கு உள்ளாவார்கள்.

* * *

(27)

26. பொய்யான பிரகடனம் அல்லது சான்றிதழில் கையெழுத் திட்டதற்காக தண்டனை: இந்த பாகத்தின் கீழ் தேவைப்படுகின்ற பொய்யான கூற்றைக் கொண்ட, மற்றும் பொய்யானதென்று அவர் அறிந்துள்ள, அல்லது பொய்யானதென்று நம்புகிற அல்லது உண்மை யானதென்று நம்பாத எந்தப் பிரகடனம் அல்லது சான்றிதழை வழங்கு கின்ற, கையெழுத்திடுகின்ற அல்லது சான்றொப்பமிடும் ஒவ்வொரு நபரும், இந்திய தண்டனைச் சட்டத்தின் (1860-ன் XLV-வது சட்டம்) 199-வது பிரிவில் விவரிக்கப்பட்டுள்ள குற்றம் செய்தவராகிறார்.

* * *

---

* டாக்டர் அம்பேத்கர், தமது சொந்தப் பிரதியில் பென்சிலால் 'விஷயத்தைத் தெளிவாக்குவதற்காக, மரபையும் அங்கீகரிக்கிறது' என்று குறிப்பிட்டுள்ளார். - ஆர்)

*(28)*

## அத்தியாயம் II

## மணவாழ்க்கைக்குரிய உரிமைகளை மீட்டெடுத்தலும் நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து வாழ்தலும்

**27. மணவாழ்க்கைக்குரிய உரிமைகளை மீட்டெடுப்பதற்கான விண்ணப்பம் :** கணவன், அல்லது மனைவி ஆகிய இருவரில் ஒருவர், நியாயமான காரணமின்றி, மற்றவரின் தொடர்பிலிருந்து விலகிச் சென்று விட்டால், பாதிக்கப்பட்ட நபர், மாவட்ட நீதிமன்றத்திற்கு, மண வாழ்க்கைக்குரிய உரிமைகள் தனக்கு மீட்டு அளிக்கப்பட வேண்டுமென்று மனுச் செய்து கொள்ளலாம்; அந்த நீதிமன்றம், அத்தகைய மனுவில் கூறப்பட்டுள்ள விவரங்களின் உண்மைத் தன்மை குறித்து திருப்தியடையும் பட்சத்தில், அந்த மனு அனுமதிக்கப்படாதிருப்பதற்கு சட்டப்படியான காரணங்கள் எதுவும் இல்லாதபட்சத்தில், மணவாழ்க்கை உரிமைகள் மீட்டு அளிக்கப்பட வேண்டுமென்று நீதிமன்றம் ஆணையிடலாம்.

*(29)*

**28. மண வாழ்க்கை உரிமைகள் மீட்டு அளிக்கப்பட வேண்டுமென்ற மனுவுக்கு பதில் :** மண வாழ்க்கை உரிமைகள் மீட்டு அளிக்கப்பட வேண்டுமென்ற மனுவுக்கு பதிலாக எதுவும் வாதாடப்பட முடியாது. - நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து வாழ்வதற்கான அல்லது திருமணம் ரத்து செய்யப்படுவதற்கான ஓர் ஆணைக்கான காரணமாக அது அமைய முடியாது.

*(30)*

**29. நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து வாழ்தல் :** இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால், அல்லது அதற்குப் பின்னர் செய்துகொள்ளப்பட்ட ஒரு திருமணத்தின் கணவனோ அல்லது மனைவியோ, பின்வரும் காரணங்களினால் பிரிந்து வாழ்வதற்கு நீதிமன்றத்தின் ஆணையைக் கோரி மாவட்ட நீதிமன்றத்திற்கு மனுச்செய்து கொள்ளலாம். அந்தக் காரணங்களாவன:

அ) **இந்த மனுக் கொடுப்பதற்கு முன்னால்** இரண்டு ஆண்டுகளுக்குக் குறைவில்லாத காலத்திற்கு, **காரணமில்லாமல்** மனுதாரரை மற்றைய தரப்பு கைவிட்டு விலகிச் சென்றது;

*ஆ) மற்றைய தரப்புடன் மனுதாரர் சேர்ந்து வாழ்வது பாது காப்பற்றதாக்கும் கொடுமை புரிந்த குற்றத்திற்காக, அல்லது*

*இ) மனுக் கொடுப்பதற்கு முன்னதாக ஓராண்டுக்குக் குறை வில்லாத காலத்தில் பால்வினை நோயினால் - பிறருக்குப் பரப்பத் தக்க வகையில் - மனு தாரரிடமிருந்து பெறப்படாததால் - பாதிக்கப்பட்டி ருத்தல்;*

*ஈ) கடுமையான தொழுநோயால் பாதிக்கப்பட்டிருத்தல், அல்லது*

*உ) திருமணம் நடைபெற்ற தேதியிலிருந்து வழக்கமாக மனநிலை சரியில்லாதிருத்தல்; அல்லது,*

*ஊ) திருமணத்தின்போது, ஒழுக்கக்கேடு புரிந்திருத்தல்;*

*விளக்கம் :- இந்தப் பிரிவில் ''பொறுப்பை விட்டுச் செல் லுதல்'' என்ற சொற்றொடரின் பொருள், நியாயமான காரணமின்றி, மற்றையத் தரப்பின் சம்மதமில்லாமல், அல்லது அத்தகைய தரப்பின் விருப்பத்திற்கு எதிராக, திருமணத்தின் மற்றைய தரப்பைக் கைவிட்டுச் செல்லுதல் என்று பொருளாகும்.*

*(30)*

*(31)*

## அத்தியாயம் III

*<u>திருமணத்தை ரத்து செய்வது சம்பந்தமான பொதுவான விதிகள்</u>*

***30. நீதிமன்றத்தின் ஆணையின் பேரில் அல்லாமல் எந்தத் திருமணமும் ரத்து செய்யப்பட முடியாது-*** *இந்த பாகத்தில் என்ன கூறப்பட்டுள்ள போதிலும், இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால் அல்லது அமலுக்கு வந்ததற்குப் பின்னால் செய்துகொள்ளப்பட்ட எந்தத் திருமணமும், ஒரு தகுதி வாய்ந்த* ***<u>நீதிமன்றத்தின் ஓர் ஆணையின் மூலமாக அல்லாது,</u> சட்டப் படி ரத்து செய்யப்பட்டதாகக் கருத முடியாது.***

*(32)*

***30. அ.திருமணத்தை ரத்து செய்யும் முறைகள் :*** *ஒரு திருமணமானது ரத்து செய்வதற்கான ஓர் ஆணையின் மூலம் ரத்து செய்யப்படலாம், 31-வது பிரிவில் கூறப்பட்டுள்ள எந்தக் காரணத்தினாலாவது செல்லுபடியாகாமற் போனால், அல்லது ரத்து செய்யப்படுவதற்கான ஓர் ஆணையின் மூலம், 32-வது பிரிவில் வரையறுத்துக் கூறப்பட்டுள்ள ஏதாவது ஒரு காரணத்தினால் செல்லத்தகாததாகிவிட்டால், அல்லது 33-வது பிரிவில் கூறப்பட்டுள்ள ஏதாவது ஒரு காரணத்தினால் விவாகரத்துக்கான ஓர் ஆணையின் வாயிலாக - ஒரு திருமணம் ரத்து செய்யப்படலாம்.*

*<u>திருமணங்களின் செல்லாத் தன்மை</u>*

***31. செல்லாத் தன்மைக்கான ஆணையைப் பெறுவதற்கான காரணங்கள்:*** *1) இந்த சட்டத் தொகுப்பு அமலாவதற்கு முன்னால் செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும் கீழ்வரும் காரணங்களால் <u>செயல்லத்தக்கதல்ல என்ற ஓர் ஆணையின் மூலம் ரத்து செய்யப்படலாம்:</u>*

*அ) திருமணத்தின்போது, அமலிலிருந்த எந்த ஒரு சட்டத்தின் ஷரத்துகளின் காரணமாக, திருமணத்தின் போது எந்த ஒரு தரப்பின் கணவன் அல்லது மனைவி ஒரு வாழ்க்கை துணையுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்ற காரணத்தினால் அத்திருமணம் செல்லத்தகாததாக இருந்தால்; அல்லது,*

*ஆ) திருமணத்தின்போது, தரப்புகள், பிரிவு 5-ன் இ) ஷரத்தில் விளக்கப்பட்டுள்ள தடை செய்யப்பட்டுள்ள உறவு முறையின் எல்லைகளுக்குள் இருந்தால்;*

அதேபொழுதில், திருமணத்தின்போது அமலிலிருந்த எந்த ஒரு சட்டத்தின் ஷரத்துகளின் கீழ் அது செல்லத்தக்கதாயிருந்தால், இந்தத் துணைப் பிரிவின் (ஆ) ஷரத்தின் விதிகளின் கீழ் அத்தகைய திருமணம் எதுவும் ரத்து செய்யப்படக்கூடாது.

2) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வந்ததற்குப் பின்னர் செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும் கீழ்வரும் காரணங் களினால் செல்லத்தக்கதல்ல என்ற ஓர் ஆணையின் கீழ் ரத்து செய்யப் படலாம்:

அ) ஒரு **தார்மிகத் திருமணமாக** இருந்தால், 7-வது பிரிவின் (i), (iv) மற்றும் (v)-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகளில் எதையாவது மீறுமேயானால்,

ஆ) ஒரு சிவில் திருமணமாக இருந்தால், 8-வது பிரிவின் (i) மற்றும் (iv)-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனை களில் எதையாவது மீறினால்:

**அதேபொழுதில், 7-வது பிரிவின் (ங)-வது ஷரத்தில் அடங்கியுள்ள தடையின் கீழ் வருகின்ற எதற்கும், திருமணத்தை ரத்து செய்வதற்கான எந்த நடைமுறைகளும் தொடங்கப்படு வதற்கு முன்னால், 21-வது பிரிவின் கீழ் திருமணம் ஒரு சிவில் திருமணமாகப் பதிவு செய்யப்பட்டிருந்தால், இந்தப் பிரிவில் அடங்கியுள்ள எதுவும் பொருந்தாது.**

(34)

## திருமணத்தைக் கலைத்தல்

**32. கலைப்பதற்கான ஆணைக்கான காரணங்கள் :** 1) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால், செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும், திருமணத்தின் எந்தத் தரப் பாவது திருமணத்தின்போது முட்டாளாகவோ, அல்லது பைத்திய மாகவோ இருக்கிறார் என்ற காரணத்தின் பேரில், கலைப்பதற்கான ஆணையின் பேரில் ரத்து செய்யப்படலாம்.

2) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வந்ததற்குப் பின்னர் செய்துகொள்ளப்பட்ட எந்தத் திருமணமும், பின்வரும் காரணங் களினால் கலைப்பதற்கான ஓர் ஆணையின் பேரில் ரத்து செய்யப் படலாம். அதாவது :-

அ) ஒரு தார்மிகத் திருமணமாயிருந்து 7-வது பிரிவின் (ii), (iii) மற்றும் (iv)-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந் தனைகளில் எதையாவது மீறுவதாயிருந்தால்....

ஆ) ஒரு சிவில் திருமணமாக இருந்து, 8-வது பிரிவின் (ii), (iii) மற்றும் (v)-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகளை மீறினால்...

ஆனால், அதே சமயத்தில் ஒரு நிர்ப்பந்தமோ மோசடியோ இருந் தாலொழிய, ஒரு தார்மிகத் திருமணம் அது நிறைவு செய்யப் பட்டதற்குப் பின்னர், திருமணத்திற்கான கார்டியனின் சம்மதம் பெறப்படவில்லை என்ற காரணத்தினாலேயே செல்லத்தகாததாகாது, அல்லது அவ்வாறு கருதப்பட மாட்டாது.

*  *  *  *  *

(35)

## விவாக ரத்து

33. விவாக ரத்து ஆணைக்கான காரணங்கள் : இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னர், அல்லது அமலுக்கு வந்ததற்குப்பின்னர் செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும், கீழ்வரும் காரணங்களில் எதன் பேரிலாவது விவாகரத்து ஆணையின் பேரில் ரத்து செய்யப்படலாம். அவை யாவன:-

i) திருமணத்தின் போது, திருமணத்தின் எந்தத் தரப்பாவது ஆண்மை (ஆற்றல்) அற்று இருத்தல், மேலும் வழக்குத் தொடரப்படும் வரையிலும் தொடர்ந்து அவ்வாறே இருத்தல்;

ii) கணவன் ஒரு * * * வைப்பாட்டியை வைத்திருத்தல், அல்லது மனைவி வேறொருவரின் வைப்பாட்டியாகி இருத்தல், அல்லது ஒரு விலைமாதர் வாழ்க்கையை நடத்துதல்;

iii) திருமணத்தின் எந்தத் தரப்பாவது வேறு மதத்திற்கு மாறிச்சென்றதன் மூலம் இந்துவாக இல்லாமற் போதல்;

iv) எந்தத் தரப்பாவது குணப்படுத்த முடியாத அளவிற்கு மனநிலை சரியில்லாதவராக இருத்தல், மனுக் கொடுக்கப்படுவதற்கு முன் ஐந்தாண்டுகளுக்குக் குறைவில்லாத காலத்திற்குத் தொடர்ந்து சிகிச்சை பெற்றுக் கொண்டிருத்தல்; மற்றும்

v) எந்தத் தரப்பாவது ஒரு கடுமையான * * * வகைப்பட்ட தொழுநோயால் பாதிக்கப்பட்டிருத்தல்.

vi) எந்தத் தரப்பாவது, மற்றையத் தரப்புக்கு எதிராக நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து வாழ்வதற்கான ஆணை அல்லது உத்தரவு பெறப்பட்டதற்குப்பின் இரண்டு ஆண்டுகள் அல்லது அதற்கு மேலாக மண வாழ்க்கை உடலுறவை மீண்டும் தொடங்காதிருத்தல்;

vii) மணவாழ்க்கை உரிமைகளை இரண்டு ஆண்டுகளுக்கு அல்லது அதற்கு மேலாக மீட்டெடுப்பதற்கான ஆணைக்கு இணங்குவதற்கு எந்தத் தரப்பாவது தவறியிருப்பது.

(36)

**34. திருமணம் ரத்து செய்யப்படுவதற்கான உரிமை:**
1) திருமணத்தை ரத்து செய்வதற்கான ஓர் ஆணையை, ரத்து செய்வதற்கான ஆணைக்கான ஒரு மனுவின் மூலமாகவோ, அல்லது வேறு எந்த வழக்கிலும் ஒரு கோரிக்கையை எழுப்புவதன் மூலமாகவோ திருமணத்தின் ஒரு தரப்பினாலோ, அல்லது ஒரு வழக்குரைஞராலோ, அல்லது பாதிக்கப்பட்ட எந்த நபராலோ, அல்லது அக்கறையுள்ள எந்த நபராலோ பெறலாம்.

2) திருமணத்தைக் கலைப்பதற்கான அல்லது விவாகரத்துக்கான ஆணைக்கான ஒரு மனு, திருமணத்தின் ஒரு தரப்பின் வேண்டுகோளின் பேரில் மட்டுமே சமர்ப்பிக்கப்பட முடியும்.

ஆனால் அதே சமயத்தில், நிவாரணம் பெறுவதற்காக, எந்தத் தரப்பும் மற்றையத் தரப்பின் தவறை அல்லது இயலாமையை சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதற்கு உரிமையில்லை.

(37)

**35. வழக்குரைஞர்களை நியமித்தல் :** 1) மாநில அரசானது ஒரு வழக்குரைஞரையோ அல்லது கூடுதலானவர்களையோ அரசுக்காக வாதாடுவதற்கு நியமிக்கலாம். அவர்களுக்குப் பின்வரும் உரிமைகள் இருக்கும் :-

i) பொது நலனை முன்னிட்டோ அல்லது எந்த நீதிமன்றத்தின் வேண்டுகோளின் பேரிலோ வாதாடுவது உசிதமானது என்று வழக்குரைஞர் கருதினால், அவர் எந்தத் திருமணத்தையும் ரத்து செய்வதற்கான எந்த வழக்கிலும் ஆஜராகலாம் அல்லது தலையிடலாம்;

ii) ரத்து செய்வதற்கான ஓர் ஆணையின் மூலம் ரத்து செய்வதுதான் பொருத்தமான நிவாரணமாக இருக்கும்போது, எந்தத் திருமணத்தையும் ரத்து செய்வதற்கான வழக்கைத் தொடரலாம்.

2) வழக்குரைஞரின் உரிமை செயல்படுத்தப்படுவது சம்பந்தமான, அல்லது அதன் விளைவான எல்லா விஷயங்களையும் முறைப்படுத்துவதற்கான விதிகளை மாநில அரசு உருவாக்கலாம்.

(38)

**36. திருமணம் செய்துகொள்ளப்பட்ட மூன்று ஆண்டுகளுக் குள் விவாகரத்துக்கான எந்த மனுவும் சமர்ப்பிக்கப்படக் கூடாது:** 1) இந்தப் பாகத்தில் என்ன கூறப்பட்டிருந்தபோதிலும், விவாகரத்துக் கான ஓர் ஆணைக்கான எந்த மனுவையும் - திருமணம் நடைபெற்ற தேதியிலிருந்து மூன்றாண்டுகள் முடிவடைந்திருந்தாலொழிய எந்த நீதிமன்றமும் ஏற்றுக் கொள்வது தகுதியுடையதல்ல;

அதே சமயத்தில், நீதிமன்றம், உயர்நீதிமன்றத்தினால் உருவாக்கப்படும் எந்த விதிகளுக்கும் ஏற்ப செய்து கொள்ளப் படும் மனுவின் பேரில், மனுதாரருக்கு அசாதாரணமான இடர்ப்பாடு ஏற்பட்ட காரணத்தினாலும், அல்லது எதிர்வாதியின் அசாதாரண மான ஒழுக்கக்கேட்டின் காரணமாகவும், திருமணம் நடைபெற்ற தேதியிலிருந்து மூன்றாண்டுகள் முடிவதற்கு முன்னாலே கூட அந்த மனுவை அனுமதிக்கலாம். ஆனால், மனுவை விசாரிக்கும் போது, எந்தத் தவறான முறையிலோ அல்லது வழக்கின் தன்மையை மறைத்தோ மனுவைப் பெறுவதற்கு அனுமதி பெற்றதாகத் தோன்றினால், திருமணம் நடைபெற்று மூன்றாண்டுகள் முடிவடைவ தற்கு முன்னால், நீதிமன்றம் வெளியிடும் ஆணை பயனளிக்காது என்று நிபந்தனை விதிக்கவேண்டும்; அல்லது அந்த மனுவைத் தள்ளுபடி செய்து விடலாம்; அதேபொழுதில் மூன்றாண்டுகள் முடிவடைந்த பிறகு அதே மனுவை அல்லது இவ்வாறு தள்ளுபடி செய்யப்பட்ட மனுவுக்கு ஆதாரமாக உள்ள சாராம்சத்தில் அதே விவரங்களுடன் கூடிய மனுவை மீண்டும் சமர்ப்பிப்பதை இது பாதிக்காது.

2) திருமணம் செய்து கொள்ளப்பட்ட தேதியிலிருந்து மூன்றாண்டுகள் முடிவடைவதற்கு முன்னால், விவாகரத்துக்காக ஒரு மனு சமர்ப்பிப்பதற்கு அனுமதி கோரி இந்தப் பிரிவின் கீழ் செய்துகொள்ளப்படும் விண்ணப்பம் சம்பந்தமாகத் தீர்ப்புக் கூறுகையில் நீதிமன்றம், மேற்படி திருமணத்தின் மூலமான குழந்தைக ளின் நலன்களையும், மேலே கூறப்பட்ட மூன்றாண்டுகள் முடி வடைவதற்கு முன்னால் தரப்புகளிடையில் சமரசம் ஏற்படுவதற் கான நியாயமான சாத்தியப்பாடு இருக்கிறதா என்ற பிரச்சினை யையும் கவனத்தில் எடுத்துக் கொள்ளும்.

(39)

## திருமணம் ரத்து செய்யப்படுவதன் விளைவு

**37. மீண்டும் திருமணம் செய்து கொள்வதற்குத் தரப்பு களுக்கு சுதந்திரம்:** தகுதி வாய்ந்த ஒரு நீதிமன்றத்தின் ஓர் ஆணையின் மூலம் ஒரு திருமணம் ரத்து செய்யப்பட்டிருந்தால், அந்த ஆணைக்கு எதிராக மேல் முறையீடு எதுவும் செய்து கொள்ளப்படாத நிலையில், அல்லது அத்தகைய மேல்முறையீடு எதுவும் தள்ளுபடி செய்யப்பட்டிருந்தால், திருமணத்தின் சம்பந்தப் பட்ட தரப்புகள், முந்திய திருமணம் மரணத்தினால் இல்லாமல் செய்யப்பட்டது போன்று, மீண்டும் திருமணம் செய்து கொள்வது சட்டப்படியானதேயாகும்.

(40)

**38. திருமணம் ரத்து செய்யப்பட்டதன் விளைவுகள் :**
1) ஒரு திருமணம், செல்லாததாக்கப்படும் ஓர் ஆணையின் வாயிலாக ரத்து செய்யப்பட்டால், xxx சம்பந்தப்பட்ட தரப்புகள் ஏற்கனவே திருமணம் செய்து கொள்ளாதவர்களாகவே கருதப் பட வேண்டும் அல்லது அவர்கள் கணவன் - மனைவி உறவுடன் இருக்கவில்லை என்று கருதப்பட வேண்டும்.

ஆனால் அதேபொழுதில், ஒரு முன்னாள் கணவர் அல்லது மனைவி உயிருடனிருக்கிறார் என்ற காரணத்தினால் ஒரு திருமணம் செல்லத்தக்கதல்ல என்ற ஆணையின் பேரில் ரத்து செய்யப்பட்ட நிலையில், அதற்குப் பிந்திய திருமணம் நல்ல நோக்கத்தில் செய்து கொள்ளப்பட்டதாக மதிப்பிடப்பட்ட நிலை யில், மற்றும் ஒரு தரப்போ அல்லது இரு தரப்புகளோ, முந்திய கணவர் அல்லது மனைவி இறந்து விட்டதாகப் பூரணமாக நம்பி யிருந்த நிலையில், ஆணை பிறப்பிக்கப்படுவதற்கு முன்னால் பிறந்த குழந்தைகளைப் பற்றி ஆணையில் குறிப்பிடப்பட வேண்டும்; மற்றும் எல்லா அம்சங்களிலும் அவர்களது பெற்றோர் களின் சட்டப்படியான குழந்தைகளாகக் கருதப்பட வேண்டும், அவ்வாறே எப்பொழுதும் இருந்ததாகக் கருதப்படவேண்டும்.

2) ஒரு திருமணம், கலைக்கப்படுவதற்கான ஓர் ஆணையின் வாயிலாக, அல்லது விவாக ரத்துக்கான ஓர் ஆணையின் வாயிலாக ரத்து செய்யப்பட்டால் அந்த ஆணை வெளியிடப்பட்ட தேதியி லிருந்து தரப்புகள் மனைவி மற்றும் கணவன் என்ற உறவு அற்றுப் போனவர்களாவர். அந்தத் திருமணத்தின் மூலமாக ஏதாவது குழந்தைகள் பெறப்பட்டிருந்தால், எல்லா அம்சங்களிலும் அவர்கள் அவர்களது பெற்றோர்களின் சட்டப்பூர்வமான குழந்தைகளாகவே கருதப்பட வேண்டும், எப்போதும் அவ்வாறே இருந்ததாகவும் கருதப்படவேண்டும். அவர்களின் பெயர்கள் ஆணையில் குறிப் பிடப்பட வேண்டும்.

*(41)*

*அதிகார எல்லை வரம்பும் நடைமுறையும்*

**39. இந்த பாகத்தின் கீழ் நிவாரணம் வழங்கப்படுவதற்கான அதிகார எல்லை வரம்பு :-** இந்த பாகத்தில் அடங்கியுள்ள எதுவும் எந்த நீதிமன்றத்திற்கும் கீழ்வருவனவற்றிற்கு அதிகாரம் அளிக்காது: அதாவது:

அ) திருமணம் இந்தியாவில் நடைபெற்றிருந்து, மற்றும் மனுதாரர் மனுவை சமர்ப்பிக்கும் சமயத்தில் இந்தியாவில் வசித்துக் கொண்டிருந்தார் என்ற நிலைமையில் அல்லாது, திருமணத்தை ரத்து செய்வதற்கான ஆணைகளைப் பிறப்பித்தல்.

ஆ) திருமணத் தரப்புகள், மனு கொடுக்கும் சமயத்தில் இந்தியாவில் வாழ்ந்து வந்தார்கள் என்ற நிலைமையில் அல்லாது, திருமணத்தைக் கலைத்தல் அல்லது விவாக ரத்துக்கான ஆணை பிறப்பித்தல். அல்லது,

இ) இந்த பாகத்தின் கீழ், மனுக் கொடுக்கும் சமயத்தில் மனுதாரர் இந்தியாவில் வசித்துக் கொண்டிருந்த நிலைமையில், அல்லாது திருமணத்தை செல்லாததாக்கும் ஓர் ஆணை அல்லது திருமணத்தைக் கலைக்கின்ற அல்லது விவாகரத்துக்கான ஆணையைத் தவிர வேறு எந்த நிவாரணமும் வழங்குவது.

(42)

40. எந்த நீதிமன்றத்திற்கு மனு செய்ய வேண்டும் என்பது பற்றியும், இரகசியமாக தனி அறையில் விசாரிப்பது பற்றியும்;
(1) இந்தப் பகுதியின் கீழ் எந்த மனுவையும் தரப்புகள்திருமணம் செய்து கொண்ட இடம் கணவன் மனைவி இருவரும் சேர்ந்து வாழும் இடம் அல்லது கடைசியாக அவர்கள் சேர்ந்து வாழ்ந்த இடம் ஆகியவற்றின் எல்லைக்குட்பட்ட மாவட்ட நீதிமன்றத்துக்குச்சமர்ப்பிக்க வேண்டும்.

2) இந்தப் பிரிவின்படியான வழக்கு நெறிமுறைகள் அத்தனையும் தனிமை அறையில் நடத்த நீதிமன்றம் முடிவு செய்யலாம்; வழக்குக்கு சம்மந்தப்பட்டவர்கள் இருவரில் ஒருவர் விரும்பினாலும் நீதிமன்றம் இவ்வாறு முடிவு செய்யலாம்.

(43)

41. மனுக்களின் உள்ளடக்கங்களும் சான்றாதாரங்களும்:-
1) இந்தப் பிரிவின்படி போடப்படும் எந்த மனுவிலும், எந்த அடிப்படையில் நிவாரணம் கோருகிறார்கள் என்பதை தெளிவாகவும் விளக்கமாகவும் சொல்ல வேண்டும். திருமணத்தை ரத்து செய்யக் கோரும் மனுவாகவோ அல்லது தீர்ப்புவழி பிரிவுக்கான மனுவாகவோ இருந்தால் இது விஷயத்தில் கணவன் மனைவிக்கிடையே எந்தவிதமான கூட்டுச்சதியும் இல்லை என்று உறுதி கூற வேண்டும்.

(44)

42. சிவில் நடைமுறைச் சட்டத்தை அமல்படுத்துவது :-
இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள இதர விதி முறைகளுக்குட்பட்டு இந்தப் பகுதியின் கீழ் ஒருதரப்புக்கும் இன்னொரு தரப்புக்கும் இடையே நடைபெறும் எல்லாவிதமான சட்ட நடவடிக்கைகளும் சிவில் நடைமுறைச் சட்டம் 1908ன்படி (சட்டம் V 1908) முறைப்படுத்தப்பட வேண்டும்.

**43. நீதிமன்ற நடவடிக்கை குறித்த தீர்ப்பாணை:** இந்தப் பகுதியின்கீழ் போடப்பட்ட எந்த மனுவும், அதை எதிர்த்து வழக் காடப்பட்டாலும் அல்லது வழக்காடப்படாவிட்டாலும், நீதிமன்றம் திருப்தி அடைந்தால் நிவாரணம் கொடுப்பதற்கு தகுந்த அடிப்படை இருக்கும்போது நிவாரணம் கொடுக்கலாம். இந்த மனு, மனுதாரரும் எதிர்மனுதாரரும் சேர்ந்து, வஞ்சகமான உடன்பாடு செய்து கொள்ள வில்லை என்பதை உறுதி செய்துகொள்ள வேண்டும். அதே முறையில் பிறர் மனை புணர்தல் என்ற குற்றச்சாட்டு இருந்தால், அதை ஏற்றுக் கொள்ளவோ, அல்லது மன்னிக்கப்படவோ இல்லை என்பதை உறுதி செய்ய வேண்டும்.

*(45)*

*(46)*

***44. திருமணத்தை ரத்து செய்யும் நடவடிக்கையில் பிறப்பிக்கும் மற்ற உத்திரவுகள்:-*** *இந்தப் பிரிவின் கீழ்போடப்படும் எந்த மனுவிலும், மனைவிக்கு தனிப்பட்ட முறையில் எந்த வருமானமும் இல்லாத சூழ்நிலையில் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவோ அல்லது நீதிமன்ற நடவடிக்கையை நடத்துவதற்கோ மனைவி போடும் மனுவை பரிசீலித்து மனைவிக்கு இந்த நீதிமன்ற நடவடிக்கை முடியும்வரை அதை நடத்துவதற்கான பணமும், மாதாந்திர பிரிமனை பணமும் கணவனுடைய நிகர வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்குக்கு மேற்படாமல் அளித்து நீதிமன்றம் உத்திரவு போடலாம்.*

*(47)*

***45. நிரந்தர ஜீவனாம்சம்:*** *1)இந்தப் பிரிவின் கீழ் அதிகாரம் செலுத்தும் எந்த நீதிமன்றமும் தீர்ப்பாணை வழங்கும் போதோ அல்லது அதற்குப் பிறகோ, அதற்கேற்ற மனு மனைவியினால் போடப்பட்டால், மனைவி நன்நடத்தை உள்ளவராகவும், மீண்டும் திருமணம் செய்து கொள்ளாமலும் இருந்தால், கணவனுடைய சொத்தை ஜீவனாம்சத்துக்காகப் பிணையாக வைத்து உத்திரவிட முடியும். இம்மாதிரி பிணையாக வைத்து உத்திரவிடும்போது மொத்தமாக ஒரு குறிப்பிட்டத் தொகைக்காக பிணையாக வைத்தோ அல்லது மாதாந்திரத்திற்கு குறிப்பிட்ட பணம் இவ்வளவு என்று சொல்லியோ உத்திரவிட முடியும். மனைவி உயிருள்ள வரை ஜீவனாம்சம் பெற உத்திரவிட முடியும். இம்மாதிரி உத்திரவிடும்போது கணவன் மனைவி ஆகியோருடைய நன்னடத்தையை கருத்தில் கொள்ள வேண்டும்.*

*2) உட்பிரிவு (1)-ன் கீழ் போடப்பட்ட உத்திரவிற்குப் பிறகு நிலைமை மாறிவிட்டால் எந்த நபரும் அதற்கான மனு போட்டால் அதை விசாரித்து மாறியுள்ள சூழ்நிலைக்கேற்ப முதலில் போட்ட உத்திரவை மாற்றி அமைத்தோ, அல்லது முழுமையாக ரத்து செய்தோ நீதிமன்றம் உத்திரவிட முடியும். மாறியுள்ள நிலைமைகளை நன்கு கவனித்து எது சரியோ அத்தகைய உத்திரவை நீதிமன்றம் அளிக்கலாம்.*

*3) உட்பிரிவு (1) அல்லது (2) ஆகியவற்றின் கீழ் மனைவிக்கு சாதகமாக போடப்பட்ட உத்திரவை, மனைவி மறுமுறை திருமணம் செய்துக் கொண்டாலோ அல்லது நன்நடத்தை இல்லாமல் இருந்தாலோ அந்த உத்திரவை நீதிமன்றம் ரத்து செய்ய முடியும்.*

*(48)*

**46. குழந்தைகள் பாதுகாப்பு:** இந்தப் பகுதியின் கீழ் நடைபெறும் எந்த நீதிமன்ற நடவடிக்கையிலும் அவ்வப்போது நிலைமைக்கேற்றவாறு குழந்தைகளுடைய பாதுகாப்பு, அவர்களுடைய பராமரிப்பு, கல்வி ஆகியவற்றிற்காக நீதிமன்றம் தகுந்த உத்திரவைப் போடலாம். அம்மாதிரி உத்திரவு போடும்போது குழந்தைகளுடைய விருப்பத்தையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

இந்த நீதிமன்ற நடவடிக்கையில் தீர்ப்பாணை வழங்கிய பிறகோ அல்லது அது நிலுவையிலிருக்கும்போதோ போடப்பட்ட இடைக்கால உத்திரவை, நிலைமைக்கேற்றவாறு குழந்தைகளுடைய பாதுகாப்பு, அவர்களுடைய பராமரிப்பு, கல்வி ஆகியவற்றிற்காக நீதிமன்றம் அவ்வப்போது உள்ள நிலைமைக்கேற்ப தகுந்த உத்திரவை போடலாம்.

*(49)*

47. சொத்தைப் பற்றி கருத்து: இந்தப் பிரிவின்கீழ் நடைபெறும் நீதிமன்ற நடவடிக்கையை கவனிக்கும் எந்த நீதிமன்றமும்; தீர்ப்பாணையில் கீழ்க்காணும் சொத்தை குறித்து உத்திரவிடலாம்:

i) தீர்ப்பாணை போடுவதற்கு முன்பு கணவனுக்கும் மனைவிக்கும் சேர்ந்து உரிமையுள்ள சொத்து;

ii) பிரிவு 93-ல் சொல்லியுள்ள வரதட்சிணை சொத்து அல்லது மனைவிக்கு மட்டும் உரிமையுள்ள கணவன் பொறுப்பிலுள்ள ஏனைய சொத்துக்கள்.

*(50)*

## <u>*தீர்ப்பாணை மற்றும் உத்திரவுக்கெதிரான மேல் முறையீட்டை அமுல்படுத்தல்:-*</u>

48. <u>**தீர்ப்பாணை மற்றும் உத்திரவுகளை அமல்படுத்துவதும் அதற்கான மேல்முறையீடும்:**</u> நீதிமன்றத்தினால் போடப்பட்ட உத்திரவுகளும், தீர்ப்பாணைகளும் சிவில் அசல் அதிகார வரம்பிற்கு உட்பட்ட நீதிமன்றங்களால் போடப்பட்ட உத்திரவுகளைப்போல் அமுல்படுத்தப்படும். இந்த உத்திரவிற்கு எதிராக அவ்வப்போதுள்ள விதிமுறைகளுக்கேற்ப மேல் முறையீடு செய்யலாம்.

* * * *

செலவு தொகைக்கான விஷயத்தில் மட்டும் மேல்முறையீடு செய்ய முடியாது.

(51)

## பாகம் IV

## *மருமக்கத்தாயம், மற்றும் அலிய சந்தான முறை திருமணங்களை ரத்து செய்ய உள்ள சிறப்பு விதிமுறைகள்*

**49. மருமக்கத்தாயம் அல்லது அலியசந்தான முறை திருமணத்தை ரத்து செய்தல்:-**

*1) பிரிவு 24 அ உட்பிரிவு (4)ல் சொல்லப்பட்டவைகளுக்குட் பட்டு அந்தப் பிரிவின்படி செய்யப்பட்டுள்ள திருமணங்கள் கீழ்க்காணும் முறையில் ரத்து செய்யப்படலாம் -*

*அ) பிரிவு 49அ-வின்படி திருமணம் செல்லாதது என்று உத்திர விடலாம்;*

*ஆ) பிரிவு 49ஆ-வின்படி மணமுறிவு உத்திரவு போடலாம்.*

*இ) தாங்கள் திருமணத்தை ரத்து செய்வதாக ஆவணத்தை பதிவு செய்யலாம்.*

*ஆனால் பெண் 18 வயதிற்குட்பட்டவளாக இருந்தால் அவளுக்கு 18-வயது முடியும்வரை திருமணத்தை மணமுறிவு செய்ததாக உத்திரவு போட முடியாது.*

*2) பதிவு ஆவண மூலம் திருமணம் ரத்து செய்யப்பட்டால் பதிவு செய்த தேதியிலிருந்து அது அமுலுக்கு வரும்.*

(52)

**49.அ. மருமக்கத்தாயம் மற்றும் அலியசந்தான திருமணத்தை செல்லாததெனத் தீர்ப்பாணை வழங்க தேவைப்படும் ஆதாரங்கள் :-**

*1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருமுன் நடைபெற்ற மருமக்கத்தாய திருமணம், மற்றும் அலியசந்தான சட்டப்படி நடைபெற்ற திருமணம் கீழ்க்காணும் காரணங்களுக்காக செல்லத்தக்கதல்ல என்று தீர்ப்பாணை வழங்கி ரத்து செய்யலாம்.*

*அ) திருமணம் நடைபெற்றபோது அமுலிலிருந்த சட்ட விதிகளின்படி கணவனோ மனைவியோ உயிருடன் இருத்தல்; அல்லது*

*ஆ) திருமணம் செய்து கொண்டவர்கள் பிரிவு 5 உட்பிரிவு (இ)-ன் படி தடுக்கப்பட்ட உறவினர்களாக இருத்தல்;*

*ஆனால் திருமணம் நடைபெற்றபோது அமுலில் இருந்த சட்டப் படி அத்திருமணம் செல்லத்தக்கதாக இருந்தால் உட்பிரிவு (அ)-ல் சொல்லியுள்ளபடி ரத்து செய்ய முடியாது.*

2) பிரிவு 24அ- உட்பிரிவு 4-ன்படி செய்யப்பட்ட திருமணம், பிரிவு 7 உட்பிரிவு (IV)ல் (1)-ல் சொல்லியுள்ள நிபந்தனைகளுக்கு எதிராக இருந்தால் அது செல்லத்தக்கதல்ல என்று கூறி உத்திரவிடலாம்.

3) இந்தப் பிரிவின்படி திருமணம் செல்லத்தக்கதல்ல எனத் தீர்ப்பாணை வழங்கினால், அவ்வாறு திருமணம் செய்துக் கொண்டவர்கள் எந்தக் காலத்திலும் கணவன் மனைவியாக வாழ்ந்தார்கள் என்றோ அத்திருமணம் நடைபெற்றதாகவோ எடுத்துக் கொள்ள முடியாது.

ஆனால் முன்னாள் கணவனோ அல்லது மனைவியோ உயிருடன் இருந்தார்கள் என்ற காரணத்திற்காக திருமணம் செல்லத் தக்கதல்ல என்று தீர்மானிக்கப்பட்டாலும் முன்னாள் கணவனோ மனைவியோ இறந்து விட்டார்கள் என்ற நல்லெண்ணத்தில் மறுமுறையும் அவர்கள் திருமணம் செய்துக் கொண்டால் திருமண ரத்து தீர்ப்பாணை வழங்குமுன் பிறந்த குழந்தைகள் அவர்களுடைய பெற்றோருக்கு சட்டரீதியாக பிறந்த குழந்தைகள் என கருதப்படுவார்கள்.

(53)

**49. ஆ) மருமக்கத்தாயம் மற்றும் அலிய சந்தான சட்ட முறை திருமணத்தை ரத்து செய்வதற்கான மனுவும் அதன் நடைமுறையும் :** 1) பிரிவு 24அ உட்பிரிவு 4-ல் சொல்லப்பட்டவைகளுக்குட்பட்டு இந்தப் பிரிவின்படி திருமணம் செய்து கொண்ட எந்த நபரும் மண முறிவு உத்தரவிற்காக மாவட்ட நீதிமன்றத்திற்கு மனு செய்யலாம்.

2) இந்த மனுவில் எந்த இடம், எந்தத் தேதி, மற்றும் ஒப்புதல் கொடுத்த பாதுகாவலருடைய பெயர் மற்றும் விலாசம் ஆகியவற்றை விரிவாக கொடுக்க வேண்டும்; திருமணம் நடைபெற்ற விவரத்தையும் தரவேண்டும்.

3) இந்த மனுவினுடைய நகல் மனுதாரருடைய செலவில் எதிர் மனுதாரருக்கு கொடுக்கப்பட வேண்டும்.

4) பிரிவு 24அ-வின்படி செய்யப்பட்ட திருமணம் பிரிவு 7 - உட்பிரிவு (i) - (iv)-ல் சொல்லப்பட்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டிருந்தால், திருமணம் நடந்து 6 மாதத்திற்கு பின்பு, அதை ரத்து செய்யவேண்டும் என்று மனு செய்தால், எதிர்மனுதாரருக்கு இந்த மனுவின் நகல் கொடுக்கப்பட்டு ஓராண்டானதும், நீதிமன்றம் தகுந்த விசாரணைக்குப் பிறகு திருப்தி அடைந்தால், அந்தத் திருமணத்தை ரத்து செய்து உத்திரவிடலாம்.

5) இந்தத் திருமண ரத்து உத்திரவு, உத்திரவு போட்ட தேதியிலிருந்து அமுலுக்கு வரும்; இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளுக்கு உட்பட்டு, மறுபடியும் திருமணம் செய்து கொள்ள உரிமை உண்டு.

6) இந்தப் பிரிவின்படி திருமணத்தை மணமுறிவு செய்து தீர்ப்பாணை வழங்கப்பட்டால், தீர்ப்பாணை வழங்கப்பட்ட தேதியிலிருந்து அவர்களிடையே உள்ள கணவன் மனைவி உறவு முடிவுக்கு வரும். தீர்ப்பாணை வழங்குவதற்கு முன்பு பிறந்த குழந்தைகள் எல்லாக் காலத்திற்கும் எல்லாச் சூழ்நிலைகளுக்கும், சட்ட ரீதியான குழந்தைகள் என கருதப்படுவார்கள்.

*(54)*

**50. மருமக்கதாயம் அல்லது அலியசந்தான திருமணங்களுக்குரிய சில விதிமுறைகள்:** *1) பிரிவு 24அ-ன் படி செய்யப்பட்ட திருமணங்களுக்கு பிரிவு 39 முதல் 48 வரை உள்ள விதிமுறைகள் பொருந்தும். இந்தப் பகுதியின்படி அந்தத் திருமணங்களை ரத்து செய்ய மேற்படி பிரிவுகளை அமுல்படுத்த வேண்டும்.*

*பாகம் II மற்றும் III ஆகியவற்றில் சொல்லப்பட்டுள்ளவை இந்தப் பிரிவின்படி செய்த திருமணங்களுக்குப் பொருந்தாது. பிரிவு 24அ உட்பிரிவு (4) ல் சொல்லப்பட்டுள்ளவைகளை இந்தப் பிரிவு கட்டுப்படுத்தாது. ஆனால் உட்பிரிவு (1)க்கு உட்பட்டு அது இயங்க வேண்டும்.*

(55)

## பாகம் V

### பாதுகாப்பு

**51. முந்தையத் திருமணங்களின் பாதுகாப்பும் அதற்கான சிறப்பு விதிமுறைகளும்:** 1) இந்தத் தொகுப்பு வருவதற்கு முன் செய்யப்பட்ட செல்லத்தக்க திருமணங்கள் திருமணம் செய்து கொண்டவர்கள் ஒரே கோத்திரத்தை சேர்ந்தவர்கள் என்பதற்காகவோ அல்லது, வெவ்வேறு ஜாதிகளை சேர்ந்தவர்கள் என்பதற்காகவோ ஒரே ஜாதியின் வெவ்வேறு உட்பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் என்பதற்காகவோ செல்லத்தகாதது என்ற நிலை வராது. எப்போதும் அது செல்லத்தக்கது என்றும் சொல்ல முடியாது.

2) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருமுன், மருமக்கதாயம், மற்றும் அலியசந்தான சட்டத்தைப் பின்பற்றும் பெண்ணுக்கும், இந்து ஆணுக்கும் நடைபெற்ற திருமணம், இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபின் செல்லத்தக்க ஒன்றாகும். அது தொடர்ந்து செல்லத்தக்க திருமணமாகும். மருமக்கதாயம், மற்றும் அலிய சந்தான திருமணங்களை ரத்துச் செய்ய இந்தத் தொகுப்பில் சொல்லப்பட்டுள்ள சிறப்பு விதிமுறைகள், திருமணம் செய்து கொண்டவர்கள் மேற்படி சட்டங்களுக்குட்பட்டவர்கள் என்று கருதி அந்த விதிமுறைகளை பின்பற்ற வேண்டும்.

மருமக்கதாயம் சட்டத்தில், பிரிவு (3) உட்பிரிவு (ஆ) விளக்கப்பட்டுள்ள இனத்தைச் சேர்ந்த பெண் அந்த சட்டத்தினால் உட்படுத்தப்பட்ட அல்லது உட்படுத்தப்படாத இந்து ஆணை, அப்போதுள்ள வழக்கத்திலிருந்த சடங்குகள்படி, இந்தத் தொகுப்பு வருவதற்குமுன் திருமணம் செய்துக் கொண்டால் உட்பிரிவு (2) உள்ளடக்கி, அது செல்லத்தக்க ஒன்றாக அமையும். இருவரும் கணவன் மனைவியாக உறவு வைத்துக்கொள்ள எந்தத் தடையும் இருக்கக் கூடாது.

இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருமுன் திருமணம் செய்துக் கொண்ட இருவர்களின் வழக்கப்படியோ, அல்லது ஒருவரின் வழக்கப்படியோ, திருமணம் ரத்து செய்யப்பட்டிருந்தால் இந்த உட்பிரிவில் சொல்லப்பட்ட எதுவும் அந்த ரத்தை பாதிக்காது.

**51-அ இந்தத் தொகுப்பு வருவதற்கு முன்போ, பின்போ ரத்து செய்யப்பட்ட, சில செல்லத்தக்கத் திருமணங்கள் மூலமாக பிறந்த குழந்தைகளை இது பாதிக்காது.** இந்தத் தொகுப்பு

வருவதற்கு முன்பு, மருமக்கதாயம் அல்லது அலியசந்தான சட்டத்திற்கு உட்பட்ட ஒரு பெண்ணுக்கும் ஓர் இந்திய ஆணுக்கும் நடைபெற்றத் திருமணம் அப்போதுள்ள சட்டப்படியோ, அல்லது அதற்குப் பின் ஏற்பட்ட சட்டப்படியோ, அல்லது பிரிவு 51 உட்பிரிவு (3)-ன் படியோ நடந்த திருமணம் ரத்து செய்யப்பட்டாலோ, அல்லது திருமணமானவரில் ஒருவர் இறந்துவிட்டாலோ அல்லது வேறு காரணங்களாலோ, அந்தத் திருமணத்தின் மூலமாகப் பிறந்த குழந்தைகளின் சட்ட உரிமைகளை அந்த ரத்து பாதிக்காது. அவர்களுடைய உரிமைகள் அவர்களுடைய வாரிசுகளுக்கும் கிடைக்கும்.

(2) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பு நிலுவையிலுள்ள வழக்கில் ரத்து செய்யக் கோரும் மனு, இல்லா நிலையது திருமணம் மனுவாகவோ அல்லது தீர்ப்பு வழி பிரிவுரைக்கான மனுவாகவோ இருந்தால் இதில் எதுவாக இருந்தாலும் அப்போதுள்ள விதிமுறைகளின் படி தீர்ப்பாணை வழங்கப்படும். இந்த தீர்ப்பாணை வழங்குவதற்கு முன்பாகவே, இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்துவிட்டாலும், அது அமுலுக்கு வராததாகக் கருதி தீர்ப்பாணை வழங்கப்படும்.

**51. <u>ஆ. நிலுவையிலுள்ள நடவடிக்கைகளைப் பாதுகாத்தல்.</u>** **விவாக ரத்திற்காகவோ, அல்லது தீர்ப்பு வழி பிரிவுரைக்காகவோ, போடப்பட்ட மனு,** மனுபோட்ட தேதியிலிருந்த சட்டத்தின் படி தீர்ப்பாணை வழங்கப்படும்; அது நிலுவையில் இருக்கும் போது இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தாலும், இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்ததாகக் கருதாமல் தீர்ப்பாணை வழங்கப்படும்.

(56)

# பகுதி III - தத்து எடுப்பு

### பாகம் 1

### தத்து எடுப்பு அல்லது சுவீகாரம் பொது

**52. இந்தப் பகுதிக்கு எதிராக தத்து எடுத்தல் தடுக்கப்பட்டுள்ளது.** *1) இந்தப் பகுதிக்கு சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளுக்கெதிராக, இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு எந்த இந்து ஆணும் தத்து எடுக்கக்கூடாது.*

*2) பிரிவு 66 உட்பிரிவு (2)ல் சொல்லப்பட்டுள்ளவைகளுக்குத் தவிர, இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைகளுக்கு எதிராக எடுக்கும் எந்தத் தத்து எடுப்பும் செல்லாது.*

*3) சட்ட ரீதியாக சரியில்லாத எந்தத் தத்து எடுப்பும், தத்து எடுக்கப்பட்டவரின் குடும்பத்தில் எந்த உரிமையும் கொண்டாட முடியாது. அதே முறையில் அவர் பிறந்த குடும்பத்தில் அவருக்கிருந்த எந்த உரிமையும் பாதிக்கப்படாது.*

(57)

**53. தத்து எடுப்பதற்கான அடிப்படைத் தேவைகள்:** *கீழ்க்காணும் சூழ்நிலைகளைத் திருப்தி செய்தால் தவிர எந்தத் தத்து எடுப்பும் செல்லாது:*

*i) தத்து எடுப்பவர் அதற்கான தகுதியையும் உரிமையையும் பெற்றிருக்க வேண்டும்.*

*ii) தத்து கொடுப்பவர் அதற்கான தகுதியைப் பெற்றிருக்க வேண்டும்.*

*iii) தத்து எடுத்துக் கொள்ளப்பட்டவர் அதற்கான தகுதியைப் பெற்றிருக்க வேண்டும்;*

*iv) தத்து கொடுப்பதும் எடுப்பதும் நேரடியாக நடைபெற்றால் தான் அது முழுமை பெறும்;*

*v) இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள மற்ற நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும்.*

(58)

## *தத்து எடுப்பதற்கான தகுதிகள்*

**54. ஓர் இந்து ஆணுக்கு தத்து எடுப்பதற்கான தகுதிகள்:** பதினெட்டு வயது முடிந்து நல்ல மன நிலையிலுள்ள எந்த இந்து ஆணும் தத்து எடுத்துக் கொள்ளும் தகுதி உடையவராவார். தத்து எடுத்துக்கொள்ளும் ஓர் ஆணுக்கு **மனைவி உயிருடன் இருந்தால்** அவருடைய ஒப்புதல் இல்லாமல் தத்து எடுக்கக்கூடாது. ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தால் ஏதாவது ஒரு மனைவியிடம் ஒப்புதல் பெற வேண்டும். ஒப்புதல் கொடுப்பதற்கான தகுதி யாருக்கும் இல்லை என்றால் அம்மாதிரி ஒப்புதல் பெற வேண்டியதில்லை.

*விளக்கம் :* மனைவிக்கு 18-வயது முடியாமலிருந்தால் அல்லது, மனநிலை பாதிக்கப்பட்டவராக இருந்தால் அவருக்கு அந்தத் தகுதி இல்லை.

*(59)*

**55. தத்து எடுக்க விதவைக்குள்ள தகுதிகள்:-** *(1) ஓர் இந்து விதவை நல்ல மனநிலை உடையவராக இருந்து 18-வயது முடிந்தவராக இருந்தால் தன்னுடைய கணவனுக்காக ஒரு மகனை தத்து எடுக்க முடியும். கீழ்க்காணும் நிபந்தனையை அவள் பூர்த்தி செய்ய வேண்டும்:*

*அ) தத்து எடுப்பதற்கு அவளுடைய கணவன் எந்தத் தடையையும் விதித்திருக்கக் கூடாது.*

*ஆ) அவளுடைய தத்து எடுக்கும் அதிகாரம் முடிவிற்கு வந்து இருக்கக்கூடாது.*

*(2) உட்பிரிவு (1)-ல் சொல்லப்பட்டுள்ள எதுவும் 18 வயது பூர்த்தியடையாத ஓர் இந்து விதவையினுடைய தத்து எடுக்கும் உரிமையை பாதிக்காது. ஒரு குறிப்பிட்ட மகனை தத்து எடுத்துக் கொள்ளும் உரிமை அவளுடைய கணவனால் கொடுக்கப்பட்டு இருக்க வேண்டும்.*

*(60)*

**56. தத்து எடுப்பதைக் குறித்துள்ள அதிகாரமும் தடையும்:** *1) எந்த இந்து ஆண்மகனும், தனக்கு ஒரு மகனை தத்து எடுக்கும் அதிகாரம் இருந்தால், தன்னுடைய மறைவிற்கு பிறகு ஒரு மகனை தத்து எடுக்கும் அதிகாரத்தை மனைவிக்கு அளிக்கலாம். அதே முறையில் தத்து எடுக்கக்கூடாது என்றும் தடுக்கலாம்.*

*2) ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருக்கும் போது, ஒருவருக்கோ அல்லது எல்லோருக்குமோ தத்து எடுக்கும் உரிமையை கொடுக்கலாம். அதே முறையில் அவர்களை தத்து எடுக்கக் கூடாது என்றும் தடுக்கலாம்.*

*3) ஓர் இந்து ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகளை விட்டு இறந்துவிட்டால் ஒரு குறிப்பிட்ட விதவைக்கு மட்டும், அவரது விதவைகளுக்கு மட்டும் தத்து எடுக்கும் அதிகாரத்தை தான் இறப்பதற்கு முன் அளித்திருந்தால், அம்மாதிரி குறிப்பிடப்படாத மற்ற விதவைகளுக்கு அந்த அதிகாரம் வழங்கப்படவில்லை என்று பொருள் படும்.*

*(61)*

***57. அதிகாரம், தடை மற்றும் ரத்து ஆகியவை குறித்த முறைகள்:*** *1) தத்து எடுக்கும் அதிகாரத்தையோ அல்லது தத்து எடுக்ககூடாது என்ற தடையையோ சட்ட ரீதியாக அளிக்க பதிவுச் சட்டம் 1908 (XVI - 1908)-ன் படி தகுந்த ஆவணத்தின் மூலமாக பதிவு செய்ய வேண்டும். அல்லது இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 (XXXIX 1925) பிரிவு 63-ன்படி உயில் எழுதப்பட்டிருக்க வேண்டும்.*

*2) தத்து எடுக்கும் அதிகாரமோ, அல்லது தடையோ ஏற்கனவே வழங்கப்பட்டிருந்தால், தகுந்த ஆவணங்கள் மூலம் அல்லது உயில் மூலம் அதை ரத்து செய்து விடலாம்.*

*3) உயில் மூலமாக அந்த தத்து எடுக்கும் அதிகாரமோ அல்லது தடையோ விதிக்கப்பட்டிருந்தால் இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 (XXXIX 1925) அட்டவணை III பிரிவு 70-ல் சொல்லியுள்ளபடி அதை ரத்து செய்யலாம்.*

*(62)*

**58. இரண்டுக்கும் அல்லது அதற்கும் மேற்பட்ட விதவைகளின் தத்து எடுக்கும் உரிமை:** ஓர் இந்து இரண்டும் அல்லது அதற்கும் மேற்பட்ட விதவைகளை விட்டு விட்டு இறந்து விட்டால், ஒரு மகனை தத்து எடுக்கும் தகுதி எல்லோருக்கும் இருந்தால் அவர்களுக்கிடையே கீழ்க்காணும் முறையில் தத்து எடுக்கும் தகுதி நிர்ணயிக்கப்படும்:-

அ) ஒன்றுக்கு மேற்பட்டவருக்கு முன்னுரிமை அளிக்கப் பட்டிருந்தால் அதன்படி தத்து எடுக்கப்பட வேண்டும்.

ஆ) அம்மாதிரி முன்னுரிமை அளிக்கப்படாமல் இருக்கும் போது பிரிவு 59-ல் சொல்லப்பட்டுள்ள வரிசைப்படி தத்து எடுக்கப்படும் உரிமை நிர்ணயிக்கப்படும்.

இ) தத்து எடுக்க உரிமை அளித்தோ, அல்லது தத்து எடுப்பதை தடுத்தோ அவர் எந்த ஏற்பாடும் செய்யவில்லை என்றால் பிரிவு 59-ல் சொல்லியுள்ளபடி, விதவைகளின் வரிசை முறை நிர்ண யிக்கப்படும்.

ஈ) உட்பிரிவு (அ) மற்றும் (இ)-ன் படி உரிமை பெற்ற விதவை தனக்குள்ள உரிமையை தனக்கடுத்துள்ள விதவைக்கு பதிவு ஆவணம் மூலம் கொடுத்துவிடலாம். அம்மாதிரி எதுவும் கொடுக்கப்படவில்லை என்றாலோ அல்லது ஒரு நியாயமான காலத்திற்குள் தத்து எடுக்காவிட்டாலோ, அவருக்குள்ள உரிமை அடுத்தடுத்துள்ள விதவைகளுக்கு மாறி, கடைசி விதவைகளுக்கு வந்து சேரும்.

*(63)*

**59. மனைவிகள் மற்றும் விதவைகளுக்கிடையே உள்ள முந்துரிமைத் தகுதி :** மனைவிகள் மற்றும் விதவைகளுக்கிடையேயுள்ள முந்துரிமைத் தகுதி அவர்கள் அவரைத் திருமணம் செய்துக் கொண்ட தேதியைப் பொறுத்து நிர்ணயிக்கப்படும்.

*(64)*

**60. விதவையினுடைய தத்து எடுக்கும் உரிமை முன்னர் தத்து எடுத்த காரணத்தினால் மறைந்து விடாது.** இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைகளுக்குட்பட்டு, ஒரு விதவைக்கு கொடுக்கப் பட்ட அதிகாரத்தில் கணவன் வேறு வகையாக சொல்லியிருந்தால் தவிர, பல மகன்களை ஒருவனுக்குப்பின் ஒருவனாக அவர்கள் இறந்த பிறகு தத்து எடுத்துக் கொள்ளலாம்.

*(65)*

*61. விதவையின் உரிமைக்கு முடிவு :- (1) ஒரு விதவையின் தத்து எடுக்கும் உரிமை கீழ்க்காணும் காரணங்களினால் முடிவுக்கு வரும்:*

*(அ) அவள் மறுமுறை திருமணம் செய்துகொண்டாலோ அல்லது,*

*(ஆ) அவள் கணவனின் இந்து மகன் இறந்த பிறகு அவனுக்கு வாரிசாக ஓர் இந்து மகனையோ, விதவையையோ, அல்லது மகனின் விதவையையோ விட்டுச் சென்றாலோ அல்லது,*

*(இ) அவள் இந்துவாகத் தொடராமலிருந்தாலோ அல்லது இந்துவாக இல்லாமலிருந்தாலோ.*

*விளக்கம் : இதன் உட்பிரிவில் மகன் என்றால் மகன், மகனின் மகன், மகனின் மகனின் மகன், சட்ட ரீதியாக பிறந்தவரோ அல்லது தத்து எடுக்கப்பட்டவரோ.*

*(2) ஒரு முறை விதவையின் உரிமை முடிவுக்கு வந்தால் அது மறுபடியும் அவளுக்குக் கிடைக்காது.*

*(66)*

## *தத்து கொடுக்க தகுதியுடையவர்கள்*

***62. தத்து கொடுப்பதற்கு தகுதியுள்ளவர்கள்:*** *1) ஒரு பையனின் தந்தையோ அல்லது தாயோ மட்டும்தான் அப்பையனை தத்து கொடுக்க முடியும்.*

*2) பிரிவு (3) உட்பிரிவு (அ) மற்றும் (இ) ஆகியவற்றில் கூறப் பட்டுள்ளவற்றுக்கு உட்பட்டு, தந்தை உயிரோடிருந்தால் அவர் ஒப்புதளித்தால் மட்டும்தான் தத்து கொடுக்க உரிமை உள்ளவர். தாய், தத்து கொடுக்க தகுதியுள்ளவராக இருந்தால், அவரின் ஒப்புதல் இல்லாமல் தத்து கொடுக்க முடியாது.*

*3) ஒருதாய் தன் மகனை பின் கண்ட சூழ்நிலையில் தத்து கொடுக்கலாம்.*

*அ) தந்தை உயிருடன் இல்லாது போது, அல்லது*

*ஆ) பகுதி VII பிரிவு 110-ன் உட்பிரிவு (1)ல் சொல்லியுள்ளபடி அவர் முழுமையாகவும் இறுதியாகவும் உலகைத் துறந்திருந்திருந்தால்,*

*இ) அவர் இந்துவாக தொடர்ந்து இல்லாவிட்டால்,*

ஈ) அவர் ஒப்புதல் கொடுக்கும் தகுதியை இழந்துவிட்டிருந்தால், தந்தை தாயை தத்து கொடுக்க தடை செய்து, அதற்கான ஆவணத்தை இந்திய பதிவுச் சட்டம் 1908 (XVII 1908) படி பதிவு செய்திருந்தால், அல்லது இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 (XXXIX 1925)யில் சொல்லியுள்ளபடி உயில் எழுதியிருந்தால்,

4) ஒரு மகனைத் தத்து கொடுக்கும் தந்தையும், தாயும் 18 வயது நிரம்பியவர்களாகவும், நல்ல மனநிலை உள்ளவர்களாகவும் இருக்க வேண்டும்.

*விளக்கம் :-* இந்தப் பிரிவுக்காக -

i) ''தந்தை'', ''தாய்'' என்று சொல்லப்பட்டுள்ளது தத்து எடுத்த தந்தையையும், தாயையும் குறிக்காது.

ii) தந்தையும், தாயும், 18 வயதிற்கு உட்பட்டவர்களாகவும், மனநிலை சரியில்லாதவர்களாகவும் இருந்தால், அவர்கள் தத்து கொடுக்கும் தகுதி இல்லாதவர்களாக கருதப்படுவார்கள்.

(67)

### தத்து எடுத்துக் கொள்ளப்படுவதற்கான தகுதிகள்

**63. யாரை தத்து எடுக்கலாம்:** 1) எந்த ஒரு பெண்ணையும் ஓர் இந்து ஆணோ பெண்ணோ தத்து எடுத்துக் கொள்ளக் கூடாது.

2) எந்தப் பையனையும், கீழ்க்காணும் நிபந்தனைகளை திருப்தி செய்தால் தவிர, தத்து எடுத்துக் கொள்ளக் கூடாது:

i) அவன் ஒரு இந்துவாக இருக்க வேண்டும்;

ii) அவன் திருமணமானவனாக இருக்கக்கூடாது;

iii) அவன் ஏற்கனவே தத்து எடுக்கப்பட்டவனாக இருக்கக் கூடாது;

iv) அவன் 15 வயது பூர்த்தியாகதவனாக இருக்கக் கூடாது.

(68)

**64) சில நபர்கள் தத்து எடுத்துக் கொள்வதற்கு தகுதி இல்லாதவர்களாக இருப்பார்கள்:** சில சந்தேகங்களை நிவர்த்திக்க, கீழ்க்காணும் நபர்களை தத்து எடுக்க முடியாது என அறிவிக்கப் படுகிறது.

i) மூத்த அல்லது தந்தையின் ஒரே மகன்

ii) ஒரு தாயின் மகன், அவனைத் தத்து எடுக்கும் தந்தை சட்ட ரீதியாக அந்தத் தாயை திருமணம் செய்து கொள்ள முடியாத நிலை, குறிப்பாக, தன் மகனின் மகன், சகோதரியின் மகன், அல்லது தாயின் சகோதரியின் மகன், மேலும்

iii) தத்து எடுக்கும் தந்தைக்கு நெருங்கிய உறவினர் இருக்கும் போது, அதைவிட ஒரு புதியவனை தத்து எடுப்பது.

(69)

### அவசியமான சடங்குகள்

**65. தத்து எடுப்பதின் முழுமை:-** தத்து எடுக்கும் சடங்கின் போது தத்து கொடுக்கும் பெற்றோர், தத்து எடுக்கும் பெற்றோரிடம் மகனை ஒப்படைக்க வேண்டும்; அவர்கள் இல்லாதபோது அவர்களால்அங்கீகரிக்கப்பட்டவர்கள் அங்கு இருக்க வேண்டும். இல்லை என்றால் அந்தத் தத்து எடுப்பு சட்டப்படி செல்லாது.

*விளக்கம்:* தத்து ஹோமம் செய்யும் சடங்கு, தத்து எடுப்பது சட்டரீதியாக இருக்க அவசியமான சடங்கு அல்ல.

(70)

## தத்து எடுக்க உள்ள மற்ற நிபந்தனைகள்

**66. மற்ற நிபந்தனைகள்:** 1) எல்லாத் தத்து எடுப்பு நடவடிக்கைகளிலும் கீழ்க்காணும் நிபந்தனைகள் நிறைவேற்றப்பட வேண்டும்:-

i) தத்து எடுக்கும்போது, தத்து எடுக்கும் தந்தைக்கு ஓர் இந்து மகன், மகனின் மகன், மகனின் மகனின் மகன் (இரத்த உறவு முறையிலோ அல்லது தத்து எடுத்த முறையிலோ) உயிருடன் இருக்கக் கூடாது.

ii) சேர்ந்தார்ப்போல் ஒரே பையனை இரண்டு பேரோ அல்லது அதற்கு மேற்பட்டோரோ ஒரே நேரத்தில் தத்து எடுக்கக் கூடாது. அதே முறையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பையன்களை ஒரே நபர் ஒரே நேரத்தில் தத்து எடுத்துக் கொள்ளக் கூடாது.

விளக்கம் - ஒரு பையன் தாயின் கருவில் இருக்கக்கூடும், பின்னர் உயிரோடு பிறக்கக்கூடும். எனினும் தத்து எடுக்கும் சமயத்தில் அவன் பிறக்கவில்லை என்றால் தத்தெடுக்கும் போது அந்த நோக்கத்துக்காக அவன் உயிரோடிருப்பவனாகக் கருதப்பட மாட்டான்.

iii) தத்து கொடுப்பவர் மற்றும் தத்து எடுப்பவர் இருவரும் மனமுவந்து ஒப்புதலுடன் இக்காரியத்தில் ஈடுபட வேண்டும்.

2) தத்து எடுக்க தத்து கொடுப்பவரிடமிருந்தோ, அல்லது தத்து எடுப்பவரிடமிருந்தோகட்டாயப்படுத்தல், தகா நிலைவற்புறுத்தல், ஏமாற்று, பொய்யாகத் திரித்திக் கூறுதல், அல்லது தவறான முறை ஆகிய எவற்றினாலும் ஒப்புதலைப் பெற்றாலும் இக்காரியத்தில் ஈடுபட்ட எவரும் தத்து எடுத்தது செல்லாது என்று வழக்குப் போடலாம்.

கீழ்க்காணும் காரணங்களுக்காக அந்த வழக்கை நீதிமன்றம் தள்ளுபடி செய்யலாம்:

அ) கட்டாயப்படுத்தல் மற்றும் தகாநிலை வற்புறுத்தல் நடந்து இரண்டாண்டுகள் முடிந்து விட்டாலோ, அல்லது பொய்யாகத் திரித்திக் கூறுவது, அல்லது ஏமாற்றுவது ஆகியவை நடந்து இரண் டாண்டுகள் முடிந்து விட்டாலோ,

ஆ) ஒரு நபரின் ஒப்புதலை கட்டாயப்படுத்தியோ தகாநிலை வற்புறுத்தியோ, ஏமாற்றியோ, பொய்யாகத் திரித்திக் கூறியோ பெற்றால், அந்த நபர் தன்னுடைய ஒப்புதலை உறுதி செய்தால், அது யாருடைய உரிமையையும் பாதிக்காது.

3) உட்பிரிவு (2) பிரிவு (அ)-ன் படி குறிப்பிட்ட காலத்திற்குள் வழக்கு போடாவிட்டால் அல்லது உட்பிரிவு (2) பிரிவு (ஆ) படி தத்து எடுத்தல் உறுதி செய்யப்பட்டால் அது சட்ட ரீதியான தத்து என்று கருதப்பட்டு, தத்து எடுத்த தேதியிலிருந்து எல்லா காரணங்களுக் காகவும் அது அமுலுக்கு வந்ததாகக் கருதப்படும்.

(71)

## பாகம் II

### தத்து எடுப்பதின் விளைவுகள்

**67. தத்து எடுப்பதின் விளைவுகள் :** தத்து எடுக்கப்பட்ட மகன், எல்லாக் காரணங்களுக்காகவும் தத்து எடுத்தத் தேதியிலிருந்து தத்து எடுக்கப்பட்டவருக்கு மகனாகக் கருதப்படுவான். அந்தத் தேதியிலிருந்து அவன் பிறந்த குடும்பத்தில் உள்ள அத்தனை உறவுகளும் அவனை விட்டு நீங்கும். பிறகு அவனுக்கும் அவன் பிறந்த குடும்பத்துக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது :

ஆனால் -

அ) தான் பிறந்த குடும்பத்தில் தொடர்ந்திருந்தால் யாரை திருமணம் செய்து கொள்ள முடியாதோ அவளை தத்து போன பிறகும் திருமணம் செய்து கொள்ளக் கூடாது;

ஆ) அவனுக்கென்று, அவன் பிறந்த குடும்பத்தில் கொடுக்கப் பட்ட சொத்து, தத்து போன பின்பும் அவனிடமே இருக்கும். அந்தச் சொத்துக்கு சில நிபந்தனைகளோ, பிணையோ இருந்தால் அது தொடர்ந்து இருக்கும். அந்தச் சொத்தின் வருமானத்தில் யாரை யாவது பாதுகாக்க வேண்டும் என்றாலும் அதையும் அவன் செய்து வரவேண்டும்;

இ) பிரிவு 68-ல் சொல்லப்பட்டுள்ள நிலைமைகளுக்கு உட்பட்டு அவன் தத்து போவதற்கு முன்பு அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த பிறருக்குக் கொடுக்கப்பட்டுள்ள சொத்து தொடர்ந்து அவர்களிடமே இருக்கும். அது எந்த பாதிப்புக்கும் உள்ளாகாது.

(72)

**68. தத்து எடுத்த பிறகு சொத்து ஒருவரிடமிருந்து எடுக்கப்படுதல்:-** இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபின், ஒரு விதவை ஒரு மகனைத் தத்து எடுத்துக் கொண்டால், அந்த மகன் கீழ்க்காணுபவற்றை எடுத்துக் கொள்வான் :-

அ) அந்த விதவையின், அவளுடன் உள்ள மற்ற விதவை களின் சொத்தில் பாதி அளவிற்கு, தத்து எடுப்பதற்கு முன்பு இருந்ததை அவன் எடுத்துக் கொள்வான்.*****,

ஆ) ஒரு மகன், மகனின் மகன், அல்லது மகனின் மகனின் மகன் ஆகிய தத்து எடுக்கும் தந்தையின் உறவினர்கள் இறந்த

பிறகு தத்து எடுக்கப்பட்டால், பாதி சொத்து, விதவை மற்றும் அவருடன் இருக்கும் மற்ற விதவைகள் சொத்தில், அவர்களால் தத்து எடுத்த தந்தையின் சொத்தில் பெறப்பட்டது, மற்றும் இறந்து விட்ட மகன், மகனின் மகன், மகனின் மகனின் மகன் ஆகியோருடைய வாரிசாக சொத்தில் பாதியை எடுத்துக் கொள்வான். தத்து எடுப்பதற்கு முன்பு இருந்த சொத்தைக் கணக்கிட்டு இந்தப் பாகம் முடிவு செய்யப்படும்.

*                *                *                *                *

*(73)*

***69. தத்து எடுப்பவர் அவரின் சொத்தை நிர்வகிக்கும் உரிமை:*** *தத்து எடுக்கும்போது செய்துகொண்ட ஒப்பந்தங்களுக்கு உட்பட்டு, தத்து எடுத்த பிறகும், தத்து எடுத்த தந்தை மற்றும் தாய் அவர்களுடைய சொத்தை பரிமாற்றம் செய்து கொள்வதோ, அல்லது உயில் மூலம் மற்றவர்களுக்கு மாற்றவோ செய்யலாம்.*

*(74)*

***70. மனைவி இழந்தவர் தத்து எடுத்துக் கொண்டால் தாயை முடிவு செய்வது சம்மந்தமாக:-*** *(1) ஓர் இந்து, மனைவி உயிருடன் இருக்கும்போது, ஒரு மகனை தத்து எடுத்துக் கொண் டால், அவள் அந்த மகனின் தத்துத் தாய் எனக் கருதப்படுவாள்.*

*2) ஓர் இந்துவிற்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தால் -*

*i) எந்த மனைவியினுடன் வசிக்கிறாரோ அல்லது எந்த மனைவியின் ஒப்புதலுடன் தத்து எடுத்துக் கொண்டாரோ, அல்லது*

*ii) ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியுடன் வசித்துவந்தாலோ அல் லது அவர்களுடைய ஒப்புதலைப் பெற்றாலோ, அந்த மனைவிகளில் யார் அவரை முதலில் திருமணம் செய்து கொண்டாரோ அவர், அம்மகனின் தத்துத் தாய் என்றும் மற்றவர்கள் மாற்றாந் தாய்கள் என்றும் கருதப்படுவார்கள்.*

*3) மனைவி இழந்தவர், மனைவி இறந்த பிறகு தத்து எடுத் தால், தத்து எடுப்பதற்கு முன்பு இறந்துவிட்ட மனைவி தத்து எடுத்த மகனின் தத்துத் தாய் என கருதப்படுவார். அதற்கு முன்பு இறந்த மனைவியோ அல்லது தத்து எடுத்த பிறகு அவர் திருமணம் செய்து கொண்ட மனைவியோ, தத்து எடுக்கப்பட்ட மகனின் மாற்றாந் தாய்மார்கள் எனக் கருதப்படுவர்.*

*ஆனால் தத்து எடுக்கும் தந்தை, யாரை தத்துத் தாய் எனக் கருதவேண்டும் என்று அதற்கான ஏற்பாடு செய்திருந்தால் அவரை தத்துத் தாயாகக் கருதி மற்றவர்களை மாற்றாந்தாய்களாகக் கருத வேண்டும்.*

*4) திருமணமாகாத ஒருவர், தத்து எடுத்தால், பிறகு அவர் திருமணம் செய்து கொள்ளும் மனைவி தத்து எடுத்த மகனின் மாற்றாந்தாய் எனக் கருதப்படுவார்.*

(75)

**71. ஒரு விதவை தத்து எடுத்தால் தத்துத் தாயை முடிவு செய்வது சம்மந்தமாக :** 1) இறந்துவிட்ட ஓர் இந்துக் கணவர் ஒன்றுக்க மேற்பட்ட விதவைகளை விட்டுச் சென்றிருக்கும்போது, எந்த விதவை தத்து எடுக்கிறாரோ அவர் அந்தத் தத்து எடுத்த மகனின் தத்துத் தாய் என்றும், மற்ற விதவைகள் மாற்றாந்தாய்கள் என்றும் கருதப்படுவார்கள்.

2) ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகள் கூட்டாகத் தத்து எடுக்கும்போது, முதலில் திருமணம் செய்து கொண்டவர் தத்துத் தாய் என்றும் மற்றவர்கள் மாற்றாந்தாய்கள் என்றும் கருதப் படுவார்கள்.

(76)

**72. சட்ட ரீதியான தத்து எடுப்பை ரத்து செய்ய முடியாது :** சட்ட ரீதியாக தத்து எடுக்கப்பட்டால், அதை தத்து எடுத்த தந்தையோ, தாயோ, அல்லது வேறு நபரோ ரத்து செய்ய முடியாது. அதே முறையில், தத்து எடுக்கப்பட்ட மகனும், தான் தத்து எடுக்கப்பட்டதை துறந்துவிட்டு, அந்தத் தகுதியை விட்டு விட்டு தான் பிறந்த குடும்பத்திற்கு போக முடியாது.

**73. சில ஒப்பந்தங்கள் செல்லத்தக்கவை அல்ல :-** தத்து எடுக்கக்கூடாது என ஒப்பந்தம் செய்து கொண்டால் அது செல்லத்தக்கதல்ல. அதே முறையில் தத்து எடுக்கப்பட்ட மகனின் உரிமைகளைக் குறைக்கும் வகையில் செய்து கொள்ளும் ஒப்பந்தம் செல்லத்தக்கது அல்ல.

(78)

## பாகம் III

### பதிவு அல்லது தத்து எடுப்பதன் ஆவணம்

**74. தத்து எடுத்தலின் பதிவும் சான்றுறுதியும்:** (1) ஒரு மாநில அரசு, அரசு பதிவேட்டில் தகுந்த முறையில் வெளியிட்டு, இந்த மாநில முழுமைக்கோ, அல்லது ஏதாவது ஒரு பகுதிக்கு பொருந்தும் வகையிலோ, தத்து எடுப்பது முறையாக அதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள விதிமுறைகளின்படி, பதிவு செய்வதற்காக உள்ள விதிகளின்படி பதிவு செய்யப்பட்டால்தான் செல்லத் தக்கதாகும் என அறிவிக்கலாம்.

2) தத்து எடுப்பு உட்பிரிவு (1)ன் படி பதிவு ஆவணம் மூலம்தான் நடைபெற வேண்டும் என்றால், அந்த ஆவணத்தைத் தவிர வேறு எந்த முறையிலும் அதை நிரூபிக்க முடியாது.

**74. அ) பிரிவு 74 பொருந்தாத தத்து எடுப்பிற்கு பின்பற்ற வேண்டிய முறை :** பிரிவு 74-ல் சொல்லியுள்ளபடி எந்த அறிவிப்பும் மாநில அரசால் வெளியிடப்படவில்லை என்றால், தத்து எடுப்பை நிரூபிக்க, மாநில அரசு தத்து எடுப்புப்பதிவுப் புத்தகம் ஒன்றை ஏற்படுத்தி அதைப் பாதுகாக்க அதற்கான அதிகாரிகளையும் நியமித்து பிரிவு 75-ல் சொல்லியுள்ளபடி தத்து எடுப்பை பதிவு செய்ய ஏற்பாடு செய்யலாம்.

(79)

**75. மனு போடும் முறையும், அதில் குறிக்கப்பட வேண்டிய விபரங்களும்:** பிரிவு 74அ-ன்படி போடப்படும் மனுவில், தத்து எடுத்தவரும், தத்து கொடுத்தவரும் கையெழுத்திட்டு, தத்து எடுத்த 90 நாட்களுக்குள் மனுவை கீழ்க்காணும் விபரங்களுடன் அனுப்பி வைக்க வேண்டும்:-

i) தத்து எடுத்த தேதி;

ii) தத்து எடுத்த முறை;

iii) தத்து எடுக்கப்பட்டவர், அல்லது எடுக்கப்பட்டவர்களின், வயது அல்லது வயதுகள், நபர் அல்லது நபர்களின் பெயர்கள்;

iv) தத்து எடுக்கும் தந்தை, திருமணமானவராக இருந்தால், அவர் மனைவியின் பெயர், அவருடைய மனைவி ஏற்கனவே இறந்துவிட்டிருந்தால் அந்த மனைவியின் பெயர், ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தால், அல்லது மனைவியர் ஏற்கனவே இறந்து விட்டால், அவர்கள் பெயர், அவர்களை அவர் எந்த வரிசையில் திருமணம் செய்து கொண்டார் என்பதையும், மனைவி அல்லது முன்பே இறந்த மனைவியின் பெயர், அவர் தத்துத் தாயாக இருந்தால்;

v) ஒரு பெண் தத்து எடுத்தால், அவளுடைய கணவன் பெயர், மற்ற மனைவியர் அல்லது அவளுடன் வாழும் மற்ற விதவைகளின் பெயர்;

vi) தத்து கொடுக்கும் நபரின் பெயர் மற்றும் வயது;

vii) தத்து எடுக்கப்படும் மகனின் பிறந்த வீட்டில் அவருக்கு வைத்த பெயர்;

viii) தத்து எடுக்கப்பட்ட பையனின் வயது;

ix) தத்து எடுக்கப்பட்ட மகனுக்கு தத்து எடுக்கும் வீட்டில் வைத்த பெயர்.

(80)

**76. தத்து எடுப்பதை எழுதிவைப்பது:-** பிரிவு 74-அ-ன் படி நியமிக்கப்பட்டுள்ள அதிகாரி, தத்து எடுத்தவரும், தத்து கொடுத்தவரும் கையொப்பமிட்டிருக்கிறார்கள் என்பதையும், அதில் சொல்லியுள்ளபடி தத்து எடுக்கப்பட்டுள்ளது என்பதையும் பற்றி திருப்தி அடைந்தால், தத்து எடுப்புப் புத்தகத்தில், தத்து எடுத்ததை குறிக்க வேண்டும்.

(81)

## பகுதி IV - உரிய வயது வராதோர் மற்றும் காப்பாளர் ஆகியோரைப் பற்றி:-

**77. விளக்கம் :** இந்தப் பகுதியில் -

அ) உரிய வயது வராதோர் என்றால் 18-வயதிற்கு உட்பட்டோர் என்று பொருள்;

ஆ) ''இயல்பான காப்பாளர்'' என்றால் பிரிவு 78-ல் சொல்லப்பட்டுள்ள நபரைக் குறிக்கும். ஆனால் அது கீழ்க்காணும் நபர்களை உள்ளடக்காது:

i) உரிய வயதுவராத நபரின் தந்தை எழுதிய உயிலின்படி நியமிக்கப்பட்ட காப்பாளர், அல்லது

ii) நீதி மன்ற உத்திரவால் நியமிக்கப்பட்ட நபர், அல்லது

iii) காப்பாளராக பணி புரிய, காப்பாளருக்கான நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்ட நபர்

(82)

**78. உரிய வயதுவராத ஓர் இந்துவின் இயல்பான பாதுகாவலர்:-** உரிய வயதுவராத இந்து நபரின் பொருளுக்கும், அவரை பாதுகாக்கவும் கீழ்க் காணுபவர்கள் இயல்பான பாதுகாவலர் என கருதப்படுவார்கள்-

அ) ஒரு திருமணமாகாத பெண்ணிற்கும், அல்லது பையனுக்கும் தந்தை பாதுகாவலராகக் கருதப்படுவார். அவருக்குப் பின் தாய் பாதுகாவலராக இருப்பார். ஆனால் உரிய வயது வராத நபர், 3-வயதிற்குட்பட்டவராக இருந்தால் தாய் பாதுகாவலராக இருப்பார்.

ஆ) முறையற்ற திருமணத்தில் பிறந்த பையனுக்கும் அதே உறவு முறையில் பிறந்த திருமணமாகாத பெண்ணிற்கும் தாயும், அவருக்குப் பிறகு தந்தையும் இயல்பான பாதுகாவலராக இருப்பர்.

இ) திருமணம் ஆன பெண்ணிற்கு கணவர் இயல்பான பாதுகாவலராக இருப்பார்.

கீழ்க்காணும் சூழ்நிலையில் ஏதாவது ஒன்று இருந்தால் உரிய வயது வராத நபரின் இயல்பான பாதுகாவலராக ஒருவர் நீடிக்க முடியாது -

அ) அவர் இந்துவாக நீடிக்காவிட்டால், அல்லது

ஆ) பிரிவு 110- உட்பிரிவு (1)-ல் சொல்லியுள்ளபடி முழுமையாகவும் இறுதியாகவும் உலகப் பந்தத்தை துறந்து விட்டவராக இருந்தால்.

*(83)*

***79. தத்து எடுக்கப்பட்ட நபரின் இயல்பான பாதுகாப்புரிமை:-*** *தத்து எடுக்கப்பட்ட நபரின் பாதுகாப்புரிமை தத்து எடுக்கப்பட்டபின் அவர் பிறந்த குடும்பத்திலிருந்து தத்து எடுக்கப்பட்ட குடும்பத்திற்கு மாறிவிடும்.*

*(84)*

**80. இயல்பான பாதுகாவலரின் அதிகாரங்கள்:** 1) உரிய வயது வராத இந்துவின் பாதுகாவலர் இந்தப் பிரிவிற் குட்பட்டு அந்த நபரின் நன்மைக்காகவும், அந்த நபரின் சொத்தை அடைவதற்காகவும் பாதுகாக்கவும், எல்லா விதமான அவசியமான, நியாயமான நடவடிக்கைகளில் ஈடுபடலாம். ஆனால் எந்தச் சூழ்நிலையிலும் அந்த நபரின் உரிமையை பாதிக்கும் வகையில் எதுவும் செய்யக்கூடாது.

2) நீதிமன்றத்தின் முன் அனுமதி பெறாமல் இயல்பான பாதுகாவலவர் கீழ்க்காணும் எந்தக் காரியத்தையும் செய்யக் கூடாது-

அ) அடமானம் அல்லது பொருட்பிணைப்பொறுப்பு, விற்பனை, இனாமாக அளித்தல், அல்லது உரிய வயது வராத நபரின் அசையா சொத்துக்களின் பரிமாற்றம்; அல்லது

ஆ) எந்தச் சொத்தையும், 5 வருடத்திற்குமேல் குத்தகைக்கு விடுவதோ, அல்லது அந்த நபர் வயது வந்த காலத்திற்குப் பின் ஓர் ஆண்டிற்கு மேல் குத்தகைக்கு விடுவதோ கூடாது.

3) உட்பிரிவு (1) அல்லது (2) - க்கு எதிராக இயல்பான பாதுகாவலர் அந்த நபரின் அசையாச் சொத்துக்களை எவ்விதத்திலும் ஏதாவது செய்ய முயற்சித்தல் அந்த நபரோ அல்லது அதனால் பாதிக்கப்பட்டவரோ, அந்த முயற்சியைத் தவிர்க்க நடவடிக்கை எடுக்கலாம்.

4) உட்பிரிவு (2)-ல் சொல்லப்பட்டுள்ள எந்தக் காரியங்களைச் செய்யவும் இயல்பான பாதுகாவலர் மனு செய்தால் அது மிக அவசியமான ஒன்றாக இருந்தாலோ, அல்லது உரிய வயது வராத நபரின் நலனுக்காக இருந்தாலோ மட்டுமே நீதிமன்றம் தகுந்த அனுமதியை அவருக்கு அளிக்க வேண்டும்.

5) பாதுகாவலர் மற்றும் பாதுகாப்பிலுள்ளவர் சட்டம் 1890 (VIII of 1890) பிரிவு 29 படியும் உட்பிரிவு (2) - படியும் அனுமதி கோரும் மனுவிற்கு உத்திரவு வழங்க பின்கண்ட நடைமுறை கடைப்பிடிக்கப்பட வேண்டும். குறிப்பாக-

அ) மனு சம்பந்தப்பட்ட நடவடிக்கைகள் பிரிவு IV- அ-வின் படியான நடவடிக்கைகளாகக் கருதப்பட்டு இந்த அனுமதி மனு கவனிக்கப்பட வேண்டும்;

*ஆ) அந்தச் சட்டத்தின் பிரிவு 31 உட்பிரிவு (2) (3) (4) ஆகியவற்றில் சொல்லியுள்ள நடைமுறைகளை நீதிமன்றம் பின்பற்ற வேண்டும்; மற்றும்*

*இ) இயல்பான பாதுகாவலருக்கு உட்பிரிவு (2)ன் கீழ் சொல்லப் பட்டுள்ள எதையும் செய்ய அனுமதி மறுக்கப்பட்டால், அவர் உயர் நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்யலாம்.*

*6) இந்தப் பிரிவில் ''நீதிமன்றம்'' என்று சொன்னால் அசையாச் சொத்துக்கள் உள்ள இடத்திற்கு முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ அதிகார வரம்பு பெற்றுள்ள, மாவட்ட நீதிமன்றம் என்று பொருளாகும் அல்லது பிரிவு (4) அ - பாது காவலர் மற்றும் பாதுகாப்பில் உள்ளவர் சட்டம் 1890 (VIII of 1890) படி அதிகாரம் அளிக்கப்பட்டுள்ள நீதிமன்றம் என்று பொருள் படும்.*

*(85)*

**81. இயல்பான பாதுகாவலரின் மாற்றி அமைக்கும் உரிமை:** உரிய வயது வராத ஓர் இந்துவின் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி இயல்பான பாதுகாவலர் மற்றொருவருக்குப் பொறுப்பு அளித்தால் அந்தப் பொறுப்பை கீழ்க்காணும் காரணங்கள் தவிர்த்து, மற்ற சூழ்நிலைகளில் மாற்றி அமைக்கலாம்-

அ) மாற்ற அனுமதிப்பது வயது வராதவரின் நலனுக்கு எதிராக அமைந்திருத்தல்; அல்லது

ஆ) இயல்பான பாதுகாவலர் தொடர்ந்து இந்துவாக நீடிக்காமல் இருத்தல் அல்லது

இ) வேறு தகுந்த காரணங்களுக்காக மாற்றி அமைக்கும் உரிமையை அளிப்பது உசிதமில்லாதிருத்தல்

*(86)*

**82. உயில்வழி பாதுகாவலரின் அதிகாரங்கள் :** 1) ஓர் இந்து தந்தை உரிய வயது வராத தன்னுடைய சட்டரீதியான குழந்தைகளில் ஏதேனும் ஒன்றைப் பார்த்துக் கொள்வதற்காகவோ அல்லது வயதுவராத குழந்தையின் சொத்துக்களை பாதுகாத்து கொள்வதற்காகவோ அல்லது இரண்டிற்குமாகவோ உயில் மூலமாக ஒரு பாதுகாவலரை நியமிக்கலாம்; ஆனால் வயது வராத இந்த நபரின் தாய் உயிருடன் இருந்து அந்த நபரின் பாதுகாவல ராக இருக்கத் தகுதி உள்ளவராக இருக்கும்போது, வேறு எந்த நபரும் பாதுகாவலராக இருக்க இந்தப் பிரிவு அனுமதிப்பதாகக் கொள்ள முடியாது.

2) தந்தையின் மரணத்திற்குப் பிறகு உயிலில் சொல்லப் பட்டுள்ள நிபந்தனைகளுக்குட்பட்டு, பாதுகாவலராக நியமிக்கப்பட்ட நபர் இயல்பான பாதுகாவலருடைய எல்லா உரிமைகளை யும் பெற்று அதற்கேற்ற முறையில் செயல்பட முடியும்.

3) இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ளவைகளுக்கு உட்பட்டு, ஓர் இந்து விதவை உயில் மூலமாக தன்னுடைய வயது வராத குழந்தைகள் எது ஒன்றையும் கவனித்துக் கொள்ளப் பாது காவலரை நியமிக்க முடியும்;

ஆனால் அவருடைய கணவர் ஏற்கனவே உயில் மூலமாக குழந்தைக்குப் பாதுகாவலரை நியமிக்காமல் இருந்தால் மட்டுமே அவர் இவ்வாறு செயல்பட முடியும்.

4) அவ்வாறு பாதுகாவலராக நியமிக்கப்பட்டவரின் உரிமை, உரிய வயது வராத நபர் பெண்ணாக இருந்தால், அவளுக்குத் திருமணம் ஆன உடன் அது முடிவிற்கு வந்துவிடும்.

(87)

***83. உரிய வயது வராத நபரை மத ரீதியாக வளர்ப்பது பாதுகாவலரின் கடமை:** உரிய வயது வராத ஓர் இந்து நபரின் பாதுகாவலர் அந்த நபரை, அந்த நபரது தந்தையின் மத வழக்கப் படி வளர்க்க வேண்டும்.

(88)

**84. பாதுகாவலராக செயல்படும் நிலையிலுள்ள ஒருவர்,** உரிய வயது வராத நபரின் சொத்தை எதுவும் செய்யக் கூடாது: இந்தத் தொகுப்பு அமலுக்கு வந்த பிறகு பாதுகாவலராக செயல்படும் நிலையிலுள்ள ஒருவர், உரிய வயது வராதவரின் சொத்தை விற்பதோ, அல்லது வேறு எவ்விதத்திலும் பாதிக்கும் வகையில் செயல்படவோ கூடாது.

* டாக்டர் அம்பேத்கர் தமது பிரதியில் 'பிரரேபிக்க வேண்டியதில்லை' என்று குறிப்பிட்டிருக்கிறார் - ஆசிரியர்.

*(89)*

**85. உரிய வயது வராதவரின் நலன்தான் முக்கியமானது.** ஒரு பாதுகாவலரை நியமிக்கும்போதோ அல்லது அறிவிக்கும் போதோ அந்த நபரின் நலனை நீதிமன்றம் முக்கியமாகக் கருத வேண்டும். இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைகளின் காரண மாகவோ அல்லது பிரிவு 24-ல் சொல்லப்பட்டவைகளுக்காகவோ, ஒரு நபர் பாதுகாவலராக இருந்தால் அது உரிய வயது வராத அந்த நபரின் நலனுக்கு ஏற்றதல்ல என நீதிமன்றம் கருதினால் அந்த உரிய வயது வராத அந்த ஆணுக்கோ பெண்ணுக்கோ தான் பாதுகாவலராக இருப்பேன் என்று ஒருவர் உரிமை கோர முடியாது.

*(90)*

## பகுதி V கூட்டுக் குடும்பம் மற்றும் அதன் கூட்டு உரிமையாளர்கள்:

### பாகம் 1

### பொது

**86. பிறப்பினால் உரிமை பறி போவதும் உரிமை கிடைப்பதும் :** இந்தப் பகுதியில் விவரமாகவும் வெளிப்படையாகவும் சொல்லப்பட்டவைகளுக்கு மாறாக, ஓர் இந்து இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு ஒரு சொத்தில் உரிமையோ அல்லது எந்த ஒரு நலனையோ எதிர்பார்க்க முடியாது-

அ) தன்னுடைய முன்னோர் உயிருடன் இருக்கும்போது அவருடைய சொத்தில், அந்தக் குடும்பத்தில் பிறந்த ஒரே காரணத்திற்காக எந்த உரிமையும் கோர முடியாது, அல்லது

ஆ) எஞ்சுநர் உரிமை முறையைப் பின்பற்றி அமைக்கப் பட்டுள்ள ஒரு கூட்டுக் குடும்ப சொத்தின் மீதும் உரிமை கோர முடியாது.

*(91)*

**87. <u>கூட்டு நிலச் சொத்துரிமையை பொது நிலச் சொத்துரிமையாக மாற்றுவது :</u>** <u>இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபோது,</u> இந்தப் பகுதியில் * * * சொல்லப்பட்டவைகளுக்கு உட்பட்டு, ஒரு கூட்டுக் குடும்பத்தின் உறுப்பினர்கள், பொதுவாக சொத்தை அனுபவித்துக் கொண்டிருந்தால் அது, இந்த தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு பொது நிலச் சொத்து உரிமையாக மாறியதாகக் கருதப்பட்டு ஒவ்வொரு நபரும் அவளோ அவனோ முழு உரிமையாளராக, அவர்களுக்கிடையே பிரிவினை ஏற்பட்டு தனித்தனியாக அனுபவிப்பதாகக் கருதப்படும்.

இந்தப் பிரிவில் சொல்லப்பட்டுள்ள எதுவும் அந்தச் சொத்தில் வாழும் உரிமை பெற்றவரை, அல்லது அதிலிருந்து ஜீவனாம்சம் பெற உரிமை பெற்றுள்ள நபரை எந்தவிதத்திலும் பாதிக்காது. முழு உரிமைப் பெற்ற நபராக இருந்தால் இந்தத் தொகுப்பு அமுலுக்கு வராததாகக் கருதி, நீதிமன்றத்தில் தன்னுடைய நிலைமையை நிலை நாட்ட முடியும்.

* * *

(92)

**88. தர்ம ரீதியான கடமை விதி ★ ★ ★ அகற்றப் பட்டது:** (1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு பிரிவு (2)-ல் சொல்லப்பட்டவைகளுக்குட்பட்டு, ஒருவருடைய முன்னோர் பட்ட கடனுக்காக, அல்லது விற்பனை செய்த சொத்துக்காக அல்லது வேறு எந்தக் கடனுக்காகவும் ஆண் வாரிசுசுதாரர் தர்ம ரீதியாகக் கொடுக்க கடமைப்பட்டிருக்கிறார் என்று கருதி எந்த நீதிமன்றமும் நடவடிக்கை எடுக்கக் கூடாது.

(2) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருமுன் ஏற்பட்ட கடனாக இருந்தால் பிரிவு (1)-ல் சொல்லியுள்ள எதுவும் கீழ்க் கண்டவற்றைப் பாதிக்காது:-

அ) அத்தகைய வாரிசுதாரருக்கு எதிராக நடவடிக்கை எடுக்க பணம் கொடுத்தோருக்குள்ள உரிமை அல்லது

ஆ) அந்தக் கடனுக்காக அல்லது வேறு கடனுக்காக சொத்தைப் பராதீனமாக்குதல்.

இந்தத் தொகுப்பு அமுலுக்கு வராததாகக் கருதி வாரிசின் தர்ம ரீதியான கடமை என்ற முறையில் அவருக்கு எதிராக நடவடிக்கை எடுக்க முடியும்.

விளக்கம் : உட்பிரிவு (2)-ல் சொல்லியுள்ள ''அத்தகைய வாரிசுதாரர்'' என்பது இறந்தவரின் ஆண் வழி வாரிசை மட்டும் குறிக்கும். அவர் அந்தக் குடும்பத்தில் பிறந்தவராகவோ, தத்து எடுக்கப்பட்டவராகவோ இருக்கலாம். பிறப்பு அல்லது தத்து எடுப்பு, இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பு நடை பெற்றிருக்க வேண்டும்.

(93)

**89. இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன் கூட்டு குடும்ப உறுப்பினர்கள் பட்ட கடனுக்குள்ள பொறுப்பு:** இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பு அந்தக் குடும்பத் தலைவர் கடன்பட்டிருந்தால், அது குடும்ப நலனுக்காக இருந் தால், அந்தக் குடும்ப நபர்கள் அந்தக் கடனைத் திருப்பித் தர கடமைப்பட்டுள்ளார்கள். அந்தக் குடும்ப உறுப்பினர்கள் எல்லோ ருக்கும் எதிராகவோ, அல்லது திருப்பித் தர கடமைப்பட்டுள்ளவ ருக்கு எதிராகவோ, இந்தத் தொகுப்பு அமுலுக்கு வரவில்லை எனக் கருதி நடவடிக்கை எடுக்க முடியும்.

(94)

## பாகம் II

### மிதாக்ஷரா - கூட்டுக் குடும்ப உறுப்பினர்கள்

**90. இந்தப் பகுதியை அமுல்படுத்தல்:** இந்தத் தொகுப்பு அமுல் படுத்தப்படாதிருந்தால் மிதாக்ஷரா முறை பின்பற்றப்படும் இந்துக்களுக்கு இந்தப் பிரிவு அமுல்படுத்தப்படும்.

**90. அ) விளக்கம் :** இந்தப் பகுதியில் ''முன்னோர் சொத்து'' என்றால் ஓர் இந்து ஆண் தன் தந்தை, தந்தையின் தந்தை அல்லது தந்தையின் தந்தையின் தந்தை ஆகியோரிடமிருந்து வாரிசுரிமையாகப் பெற்ற சொத்தைக் குறிக்கும். அது, கீழ் காண்பவற்றையும் உள்ளடக்கும்:

அ) பாகப் பிரிவினையின் போது மேற் சொன்ன மூதாதையரின் சொத்திலிருந்து அவர் பாகத்திற்கு வந்த சொத்து;

ஆ) அந்த மூதாதையர் சொத்துடன் இணைந்தது; ஆனால் கீழ்காண்பவற்றை அது உள்ளடக்காது:-

i) இந்து படிப்பினால் பெறப்பட்ட சட்டம் 1930 (XXX of 1930) சட்டத்தின்படி ஒருவன் சம்பாதித்த சொத்து;

ii) வாரிசுரிமை இல்லாமல் மற்ற வகையில் சேர்த்த சொத்து;

iii) வாரிசுரிமையில் மேற்கூறிய தந்தை வழி மூதாதையர்களைத் தவிர்த்து மற்றவர்களிடமிருந்து பெறப்பட்ட சொத்து;

iv) அவர் பொறுப்பிலுள்ள மற்ற தனிச் சொத்துக்கள்.

இம்மாதிரியான சொத்துக்கள் சிலவற்றை முழுமையாகவோ சிலவற்றையோ மற்ற கூட்டுக் குடும்ப உறுப்பினர்களுடன் பகிர்ந்து கொள்ளப்படலாம்.

*விளக்கம் :* மூதாதையர் சொத்தினுடைய சேர்ப்பு என்பது இந்தச் சொத்துடைய வருமானம்., அந்த வருமானத்திலிருந்து வாங்கப்பட்ட சொத்து, அந்த சொத்தினுடைய உதவியுடன் பெறப்பட்ட சொத்து, அந்த சொத்து விற்பனையில் கிடைத்த பணம், அந்தப் பணத்தைக் கொண்டு பெறப்பட்ட சொத்து முதலியவற்றைக் குறிக்கும்.

**90. ஆ) கூட்டுக் குடும்ப உறுப்பினர்கள்:** *(1)* ஒரு நபர் கூட்டுக் குடும்ப உறுப்பினராகக் கருதப்பட கீழ்க்காணும் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும்.:-

i) அ) அவர் மூதாதையர் சொத்திலிருந்து வாரிசுரிமை பெற்றவராக இருக்க வேண்டும், அல்லது

ஆ) அவர் அந்தக் குடும்பத்தினுடைய ஆண் வாரிசு வாயிலாகப் பிறந்தவராக இருந்து அந்தப் பெற்றோர் அந்த குடும்பத்தின் சொத்தை வாரிசுரிமையாக பெற்றவராக இருக்க வேண்டும்.

ii) உட்பிரிவு (அ) பகுதி (1)ல் - சொல்லப்பட்டுள்ள நபர் பின்கண்டவரிடமிருந்துநான்கு தலைமுறைக்கு மேற்பட்ட வராக இருக்கக்கூடாது-

அ) மேற்குறிப்பிட்ட சொத்தை வாரிசுரிமையாக பெற்ற நபர், அல்லது

ஆ) ஏற்கனவே சொத்தை வாரிசுரிமையாகப் பெற்று அவர் உயிருடன் உள்ள மூத்த ஆண் வாரிசு.

2) உட்பிரிவு (1)-ன் படி எந்த முறையில் உறவு கொண்டுள்ளார்கள் என்பதைக் கணக்கிட ஒவ்வொரு தலைமுறையும் ஒரு கட்டமாகக் கருதப்படும்.

3) கூட்டுக் குடும்ப உறவினர்களிடையே பிரிவினை ஏற்பட்ட பிறகு அவர்கள் கூட்டுக் குடும்ப உறவினர் என்ற நிலையிலிருந்து விடுபடுவார்கள்; மாறுபட்ட நிலையை நிரூபித்தால் தவிர-

அ) தன்னுடைய ஆண்வழி வாரிசுகள் வகையில் அவர்கள் பிரிந்த ஒரே காரணத்திற்காக கூட்டுக் குடும்ப உறுப்பினர்கள் இல்லை என்று சொல்லமுடியாது; அல்லது

ஆ) ஒரே ஓர் உறுப்பினர் மட்டும் பிரிந்துவிட்டால், மற்ற கூட்டுக்குடும்ப உறுப்பினர்கள், அவர்களிடையே பிரிவினை ஏற்பட்ட ஒரே காரணத்திற்காக அந்தத் தகுதியை அவர்கள் இழக்க மாட்டார்கள்.

4) ''கூட்டுக் குடும்ப உறுப்பினர்கள்'' என்பது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட ஆண்கள் சில காலத்திற்கு ஒரே குடும்ப உறுப்பினர்களாக இருப்பதைக் குறிக்கும்.

*(95)*

**90. இ) கூட்டுக் குடும்ப சொத்தைக் குறித்த நிலைமைகள்:** ஒரு கூட்டுக் குடும்பத்தைச் சேர்ந்த உறுப்பினர் இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்போ பின்போ சம்பாதித்த சொத்திற்கு கீழ்க்காணும் விதிமுறைகள் பொருந்தும்:-

அ) கூட்டுக் குடும்ப உறுப்பினர் ஒவ்வொருவரும் அந்தக் குடும்பத்தில் பிறந்த காரணத்திற்காக தன் தந்தைக்கு சமமாக அந்தக் குடும்பச் சொத்தில் உரிமை உடையவராவார்;

ஆ) கூட்டுக் குடும்ப உறுப்பினர் அனைவரும் அந்தச் சொத்தை கூட்டு நிலச் சொத்துரிமை முறையில் வைத்திருப்பார்கள்;

இ) ஒரே எஞ்சுநர் உரிமை உள்ள நபர் இருந்தால் தவிர கூட்டுக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் இறந்துவிட்டால் சொத்தில் அவருக்கு இருந்த உரிமை உயிருடன் உள்ள மற்ற உறுப்பினர்களுக்குப் போகுமே தவிர வாரிசுரிமை முறையில் அவர்களுடைய வாரிசுகளுக்குப் போகாது;

ஈ) உட்பிரிவு இ-ல் என்ன சொல்லப்பட்டிருந்தாலும், கூட்டுக் குடும்ப உறுப்பினர் ஒருவர் இறந்துவிட்டால் அவருடைய விதவையும் மகளும் மற்றவர்களுடன் சேர்ந்து அவருடைய சொத்தில் -

i) விதவைக்கு மகனுக்குள்ள உரிமைக்கு சமமாகவும்,

ii) திருமணமாகாத மகளைப் பொறுத்தவரை மகனுக்கு கிடைக்கும் உரிமையில் பாதியும், திருமணமான மகளானால், மகனுக்கு கிடைக்கும் பங்கில் கால் பாகமும் பெறுவார்கள்.

*(97)*

***90. ஈ) கூட்டுக் குடும்ப உறுப்பினர்களுக்கு கூட்டு குடும்பரீதியில் சொத்தை விற்பதற்கான உரிமை :*** *90-இ உட்பிரிவு (ஈ)யில் சொல்லியுள்ளபடி உரிமை பெற்ற எந்தப் பெண்ணும் அல்லது கூட்டுக் குடும்ப உறுப்பினரும், அந்தக் கூட்டுக் குடும்ப உறுப்பினர் என்ற முறையில் மேற்கண்ட முறையில் உரிமை பெற்றிருந்தாலோ, அந்தச் சொத்தை மாற்றவோ அல்லது பிணையாக வைக்கவோ தங்களுக்குள்ள பாக அளவிற்கு மேல் செய்ய முடியாது. எந்த நீதி மன்றமும், அந்தக் கூட்டுக் குடும்ப உறுப்பினர் அல்லது அந்தப் பெண்ணிற்கு எதிராக, அவர்களுக்குள்ள உரிமைகளுக்கு அதிகமாக எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாது.*

***90. உ) கூட்டுக் குடும்பச் சொத்தில் பாகப் பிரிவினை கேட்கும் உரிமை:-*** *(1) பிரிவு 90-இ உட்பிரிவு (ஈ)யின்படி கூட்டுக் குடும்பச் சொத்தில் உரிமை பெற்ற கூட்டுக் குடும்ப உறுப்பினர் எவரும் எந்தப் பெண்ணும் தங்கள் பகுதி சொத்தைத் தனியாக தன் பொறுப்பில் வைத்து அனுபவிப்பதற்காக, மற்ற உறுப்பினர்கள் ஒத்துக் கொள்ளாவிட்டாலும் அதற்கான நடவடிக்கை எடுக்கலாம்.*

*2) உட்பிரிவு (1)ன்படி உரிமை பெற்ற ஒரு பெண் பாகப் பிரிவினை பெறாமல் இறந்துவிட்டால், அவர் இறந்த பின் அவருடைய பாகம் கூட்டுக் குடும்ப மற்ற உறுப்பினர்களுக்குப் போகும்.*

*(99)*

***90. ஊ) கூட்டுக் குடும்ப உறுப்பினர் மற்ற உறுப்பினரின் பாகத்தை வாங்கும் உரிமை :*** *பிரிவு 90-ஈ-யில் என்ன சொல்லப்பட்டிருந்தாலும், வேறு ஓர் உறுப்பினர் இந்துவாக தொடர்ந்து நீடிக்காமல் மற்ற மதத்திற்கு மாறிவிட்டாலோ, அல்லது 90-இ உட்பிரிவு (ஈ)யின் படி உரிமை பெற்ற பெண் அதற்குப் பிறகு பாகப்பிரிவினைச் சட்டம் 1983 ((IV of 1983)ஐ அமுல் படுத்தி இந்துவாக நீடிக்காத ஆணும், உரிமை பெற்ற பெண்ணும், கூட்டுக் குடும்பத்திற்கு சொந்தமான வசிக்கும் இடத்தையும் தங்களுக்கு மாற்ற மற்ற உறுப்பினர் கோரலாம்.*

*(99)*

**90. எ) பாகப்பிரிவினையில் சொத்தை ஒதுக்கீடு செய்தல் :** ஒரு கூட்டுக் குடும்பச் சொத்தில் பாகப் பிரிவினை நடந்தபின் கீழ்க்காணும் முறைகளைப் பின்பற்றி உறுப்பினர்களுக்கு அவர்களுக்குண்டான பாகத்தை அளிக்க வேண்டும்:

அ) தந்தைக்கும், மகன்களுக்கும் இடையே பாகப்பிரிவினை ஏற்பட்டால் ஒவ்வொரு மகனும் தந்தைக்குச் சமமாக எடுத்துக் கொள்ள வேண்டும்;

ஆ) பாகப்பிரிவினை சகோதரர்களுக்கிடையே ஏற்பட்டால், எல்லோரும் சமமாக எடுத்துக் கொள்ள வேண்டும்;

இ) குடும்பத்தைச் சேர்ந்த பல்வேறு குழுவினரிடையே கூட்டுக் குடும்பச் சொத்து பாகப் பிரிவினை செய்யப்பட்டால், ஒவ்வொரு குழுவும் சமமாக எடுத்துக் கொள்ள வேண்டும்;

ஈ) ஒரே குழுவைச் சேர்ந்த கூட்டுக் குடும்ப உறுப்பினர்களுக்கிடையே பாகப்பிரிவினை ஏற்பட்டால் எல்லோரும் சமமாக பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

*(100)*

**90. ஏ) கூட்டுக் குடும்பத்திற்கு முற்றுப்புள்ளி:** வேறு எந்தக் கூட்டுக் குடும்ப உறுப்பினரும் இல்லை என்ற சூழ்நிலையில், மூதாதையர் சொத்தைப் பெற்ற ஓர் உறுப்பினரின் சொத்து, அவருக்குப் பின் அவருடைய வாரிசுகளுக்குப் போகும். அதற்கு எஞ்சுநர் உரிமை முறை பொருந்தாது.

(101)

## பாகம் III

## *மருமக்கதாய, அலியசந்தான மற்றும் நம்பூதிரி கூட்டுக் குடும்பங்கள்*

*90. ஐ) மருமக்கதாய, அலியசந்தான மற்றும் நம்பூதிரி கூட்டுக் குடும்பங்களுக்கான விசேட வகையங்கள்:* இந்தத் தொகுதி இயற்றப்படாமலிருந்தால் மருமக்கதாய, அலிய சந்தான அல்லது நம்பூதிரி சட்டம் பயன்படுத்தப்பட்டிருக்கக் கூடிய இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள எதுவும், தார்வாட், தவசி மற்றும் குடும்பா, கவரு மற்றும் இல்லோம் ஆகியவற்றுக்கு பொருந்தாது; மருமக்கதாய, அலியசந்தான மற்றும் நம்பூதிரி சட்டம் இந்த தொகுப்பு இயற்றப்படுவதற்கு முன்புள்ள முறையே பின்பற்றப்படும். அவற்றை இந்தத் தொகுப்பு எடுத்து விட்டதாகக் கொள்ள முடியாது. அவர்களுடைய சொத்து குறித்துள்ள எல்லா முறைகளும் (வாரிசுரிமையோ அல்லது மற்ற முறையோ) அல்லது பாகப் பிரிவினை அல்லது சொத்தை நிர்வகித்தல் ஆகிய யாவும் *தார்வாட், தவசி, குடும்பா, கவரு* அல்லது ***இல்லோம்*** ஆகியோர் பழைய முறையைத் தொடர்ந்து பின்பற்றலாம்.

(102)

## பாகம் IV

*பலதரப்பட்டது*

***90.ஒ) விலக்கு : இந்தப் பாகத்தில் சொல்லியுள்ள எதுவும் கீழ்காண்பவற்றிற்கு பொருந்தாது :***

அ) எந்தச் சொத்தும், வழக்கமுறைப்படி ஒரு தனி வாரிசுக்குப் போகும்போது, அல்லது விரும்பி அளிக்கும்போது, அல்லது சட்ட மூலமாக கொடுக்கப்படும்போது; அல்லது

ஆ) திருவாங்கூர் - கொச்சி அரசில், அல்லது சென்னை மாநிலத்தைச் சேர்ந்த மலபார், தெற்குக் கனரா அல்லது நீலகிரி மாவட்டத்தில் அவ்வப்பொழுதுள்ள சட்டத்திற்கேற்ப, அல்லது வழக்கு முறைக்கு ஏற்ப எந்த ஒரு சிறப்புத் தகுதியும், ஒரு தனி மனிதனால் அனுபவிக்கும்போது; அல்லது

இ) கீழ்க்காணும் சொத்துக்கள் - இவை திருவாங்கூர் - கொச்சி அரசைச் சேர்ந்தவை :-

இடப்பல்லி, பூஞ்சார் மற்றும் கிளிமனூர் சொத்துக்கள் மற்றும் வலியம்மா தம்புரான் கோவிலகம் சொத்து, இவற்றுள் உள்ளடங்கிய அரண்மனைப் பணம்.

(103)

## பாகம் VI பெண்ணின் சொத்து

***91. பெண்ணின் சொத்தின் நிலை:*** *(1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபின் ஒரு பெண் எந்த சொத்தைப் பெற்றாலும் அது அவளின் முழுமையான சொத்தாகும்.*

*(2) உட்பிரிவு (1)ல் சொல்லப்பட்டுள்ள எதுவும், அன்பளிப்பு அல்லது உயில் மூலம் பெறப்பட்டிருந்தால், அவற்றில் சொல்லப்பட்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டுத்தான் அவற்றை அவள் அனுபவிக்க முடியும்.*

*ஆனால் அவள் பெண் என்பதற்காக மட்டும் அந்த நிபந்தனைகளை விதிக்க முடியாது.*

*விளக்கம் : ''சொத்து'' என்றால் அது அசையும் மற்றும் அசையாச் சொத்துக்களைக் குறிக்கும். அந்தச் சொத்து அப்பெண்ணால், அவள் திருமணத்திற்கு முன்போ அல்லது பின்போ பெறப்பட்டிருக்கலாம். அவள் விதவையாக இருக்கும்போதோ, அல்லது வாரிசுரிமையாகவோ அல்லது பாகப் பிரிவினையிலோ, அல்லது அவளது ஜீவனாம்சத்திற்காகவோ, ஜீவனாம்சத்திற்கு ஏற்கனவே வரவேண்டியவையாகவோ, அல்லது உறவினர் அல்லது மற்றவரால் அன்பளிக்கப்பட்டதாகவோ, அவளது திறமையால் பெறப்பட்டதாகவோ அல்லது வாங்கியதாகவோ அல்லது வேறு முறையிலோ இருக்கலாம்.*

(104)

***92. பெண்ணின் சொத்து கைமாறும் நிலை:*** *1) இந்தத் தொகுப்பு அமலுக்கு வந்தபின் ஒரு பெண் இறந்துவிட்டால் அவள் அந்தச்சொத்தை இந்தத் தொகுப்பு வருவதற்கு முன்போஅல்லது பின்போ எப்போது பெற்றிருந்தாலும் அவளுக்குப் பிறகு பாகம் VII-ல் சொல்லியுள்ளபடி அவளுடைய வாரிசுக்குப் போகும்.*

*2) அவள் இறக்கும்போது இந்து பெண் சொத்து என அழைக்கப்படுவதை அனுபவிக்கும் உரிமை மட்டும் பெற்றிருந்தால் உட்பிரிவு (1)-ல் சொல்லியுள்ளவை, அந்தச் சொத்திற்குப் பொருந்தா. அம்மாதிரியான சொத்து கீழ்க்காணும் முறையில் கை மாறும்:*

i) வாரிசுரிமை முறையில் அவள் அச்சொத்தைப் பெற்றிருந்தால், பகுதி VII-ல் சொல்லப்பட்டுள்ள கடைசியாக இருந்த முழு அதிகாரம் பெற்ற உரிமையாளரின் வாரிசுகளுக்குப் போகும்;

ii) பாகப் பிரிவினை மூலம் அச் சொத்து பெறப்பட்டிருந்தால் அல்லது வேறு முறையில் பெறப்பட்டிருந்தால், இந்தத் தொகுப்பு இயற்றப்படாமல் இருந்தால் யாருக்குப் போகுமோஅவர்களுக்குப் போகும்.

*(105)*

***93) சீதனம் மனைவியின் நலனுக்காகப் பாதுகாக்கப் பட வேண்டும்:*** *(1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு, எந்த சீதனமும், திருமணத்தன்றோ, திருமணத்திற்கு நிபந்தனையாகவோ அல்லது திருமணத்திற்கு பிரதிபலனாகவோ அளிக்கப்பட்டிருந்தால், திருமணமான அந்தப் பெண்ணின் சொத்தாகக் கருதப்படும்.*

*(2) அப்பெண்ணிற்காக சீதனத்தைப் பெற்ற ஒருவர் அவள் நன்மைக்காக அதை பாதுகாக்க வேண்டும். அவளுக்கு 18 வயது முடிந்தவுடன் அதை அவளிடம் கொடுக்க வேண்டும். அவள் அதற்குள் இறந்துவிட்டால் பாகம் VII-ல் சொல்லப்பட்டுள்ள வாரிசுகளுக்குக் கொடுக்க வேண்டும்.*

*விளக்கம் :- இந்தப் பகுதியில் ''சீதனம்'' என்று சொன்னால் எந்த சொத்தும் ஒருவரால், திருமணத்தின்போது, அதற்கு பிரதி பலனாகவோ, அல்லது நிபந்தனையாக அளித்ததோ அல்லது அளிப்பதாக வாக்குறுதி கொடுக்கப்பட்டதாகவோ இருக்கலாம். ஆனால் திருமணத்தின் போது மணமகனுக்கோ அல்லது வேறு நபருக்கோ அளிக்கப்பட்ட சிறு அன்பளிப்பு இதில் சேராது.*

*(106)*

## பகுதி VII - வாரிசு உரிமை

### பாகம் I

### *அமுல்படுத்துதல்*

***94. இந்தப் பகுதியிலிருந்து சில சொத்துக்களுக்கு விதி விலக்கு - பின்கண்ட சொத்துக்களுக்கு இந்தப் பகுதி - பொருந்தாது -***

i) வழக்க முறைப்படியான வாரிசு உரிமையின் பிரகாரம் ஒரு நபருக்கு வரும் சொத்து அல்லது அன்பளிப்பாக கிடைக்கும் சொத்து அல்லது **சட்ட ரீதியாகக் கிடைக்கும் சொத்து அல்லது பிரிவு 90 - J - படி கிடைக்கும் மற்ற எந்த சொத்து, அல்லது**

ii) **பகுதி V-ல் சொல்லியுள்ளபடி கூட்டுக் குடும்பச் சொத்து ஓர் உறுப்பினர் இறந்தவுடன் அவருடைய பங்கு, மற்ற உறுப்பினர் களுக்கு எஞ்சுநர் உரிமை முறையில் போவது, அல்லது**

iii) ***90-I-ல் சொல்லப்பட்டுள்ளவைகளைப் பின்பற்றும் தார் வாடு, தவசி, குடும்பா, கவரு, அல்லது இல்லோம் சொத் துக்கள்.***

*(107)*

***95. இந்தப் பகுதியை அமுல்படுத்தல்:*** பிரிவு 94-ல் வேறுவிதமாகச் சொல்லப்பட்டிருந்தாலொழிய உயில் எழுதாமல், இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு இறந்துவிடும் ஒரு இந்துவின் சொத்துக்கு கீழ்க்காணும் முறையில் வாரிசு உரிமை முடிவு செய்யப்படும்:-

*(அ)* அசையும் சொத்தாக இருந்தால் உயில் எழுதாமல் இறந்து விட்டவர் அவர் மரணமடைந்தபோது, இந்தச் சட்டம் அமுல்படுத்தப் படும் இடங்களில் வசிக்கவில்லை என்பது நிரூபணமாக வேண்டும்;

*(ஆ)* அசையா சொத்தாக இருந்தால் மேலே கூறிய எல்லைக் குள் அது இருந்தால் உயில் எழுதாமல் இறந்துபோனவர் அவர் இறந்த போது அந்தக் குறிப்பிட்ட எல்லைக்குள் வசித்தாரா இல்லையா என்பது தெரிய வேண்டும்.

*விளக்கம் :-* இந்தப் பகுதியை பொறுத்தவரை ஓர் இந்து வின் வாழ்விடம் என்பது பிரிவு 6 முதல் 18 வரை இரண்டையும் சேர்த்து இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 (XXXIX of 1925)-ல் சொல்லப்பட்டுள்ளவற்றின் அடிப்படையில் தீர்மானிக்கப்பட வேண்டும்.

*(108)*

***96. <u>வாரிசு உரிமை விஷயத்தில் பிரிந்த மற்றும் பிரியாத மகன்களுக்கிடையே வேற்றுமை கிடையாது-</u>*** *உயில் முறை அல்லாத வாரிசுரிமை விஷயத்தில் பின்கண்டவாறு வேற்றுமை பாராட்டக்கூடாது:-*

*1) உயில் எழுதாமல் இறந்துபோனவரிடமிருந்து பிரிந்த ஒரு மகனுக்கும் பிரியாத ஒரு மகனுக்கும் இடையே அல்லது, பிரிந்த ஒரு மகனுடன் மறுபடியும் சேர்ந்துக் கொண்ட ஒரு மகனுக்கும் இடையே;*

*2) விதவையான ஒரு பெண் வாரிசு மற்றும் விதவை அல்லாத ஒரு பெண் வாரிசு அல்லது ஏழ்மையான ஒரு பெண் வாரிசு, மற்றும் பணக்கார பெண் வாரிசு, குழந்தை உள்ள அல்லது குழந்தை இல்லாத ஒரு பெண் வாரிசு, அல்லது குழந்தை பிறக்க வாய்ப்புள்ள ஒரு பெண் வாரிசு ஆகியோருக்கு இடையே.*

*(109)*

**பாகம் II**

*உயில் முறை அற்ற வாரிசுரிமை*

*ஆண்கள் சொத்து விஷயத்தில் பொது விதிமுறைகள்*

***97. 1)* விளக்கம் :** இந்தப் பகுதியில் குறிப்பிட்ட சூழ்நிலை வேறு பொருளைக் குறித்தால் தவிர -

*(அ) ''ஆண் வழி உறவு'' - ஒரு நபர் அடுத்தவருக்கு ஆண் வழியினர் (கோத்ரஜா) என்றால் இரண்டு பேரும் இரத்த வழி உறவிலோ அல்லது தத்து எடுத்த வகையிலோ ஆண்கள் மூலமாக மட்டுமே உறவினராவார்கள்;*

*(ஆ) ''பெண் வழி உறவு'' - ஒரு நபர் அடுத்த நபருக்கு பெண்வழி உறவினர் என்றால் (பந்து) இரண்டு பேரும் இரத்த வழி முறையிலோ அல்லது தத்து எடுத்த முறையிலோ பெண்கள் மூலமாக மட்டுமே உறவினராவார்கள்.*

*(இ) ''வாரிசு'' என்றால் உயில் எழுதாமல் இறந்து போனவரது சொத்தில் இந்தப் பகுதியின் கீழ் பங்கு பெற உரிமை பெற்ற ஆணோ பெண்ணோ ஆவார்.*

*(ஈ) ''உயில் முறை அற்ற வாரிசுரிமை'' என்றால் ஒரு நபர், தான் இறக்கும் முன் அமுல்படுத்த தகுதியுள்ள உயிலை எழுதாமல் இறந்துவிட்டால், அவர் தனது சொத்துக்கு உயில் முறை அற்ற வாரிசை விட்டுவிட்டு இறந்தார் என்று பொருள்.*

*(2) இந்தப் பகுதியில் குறிப்பிட்ட சூழ்நிலை வேறு பொருளைக் குறித்தால் தவிர, ஆண்களைக் குறிக்கும் சொல் பெண்களையும் உள்ளடக்கியதாகக் கொள்ள முடியாது.*

*(110)*

**98. இங்கு ஆண் விஷயத்தில் வாரிசு உரிமை சம்பந்தமான பொது விதிமுறைகள் :** *பிரிவு 105அ 105 ஒ இரண்டும் உள்ளடக்கி குறிப்பிட்டு சொல்லப்பட்டுள்ளவைகளைத் தவிர, உயில் எழுதாமல் இறந்து விடும் ஓர் இந்து ஆணின் சொத்து, கீழ்க் காணும் விதிமுறைகளுக்குட்பட்டு வழங்கப்படும்:-*

*அ) முதலாவதாக எட்டாவது அட்டவணை பிரிவு 1-ல் சொல்லப்பட்டுள்ள உறவினர்களான முன்னுரிமை பெற்ற வாரிசுகள்;*

*ஆ) இரண்டாவதாக எட்டாவது அட்டவணையில் பிரிவு I-ல் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை பெற்ற வாரிசு இல்லா விட்டால் எட்டாவது அட்டவணை பிரிவு II-ல் சொல்லப் பட்டுள்ள உறவினர்களான முன்னுரிமை பெற்ற வாரிசுகள்;*

*இ) மூன்றாவதாக, மேலே குறிப்பிடப்பட்ட இரண்டு பிரிவு களையும் சேர்ந்த முன்னுரிமை பெற்ற வாரிசு எவரும் இல்லை என்றால் பிரிவு 102-ல் சொல்லப்பட்டுள்ள அவரது ஆண்வழி உறவினர்கள்;*

*ஈ) கடைசியாக, ஆண்வழி உறவு முறைகள் இல்லா விட்டால், பிரிவு 103ல் சொல்லப்பட்டுள்ள பெண்வழி உற வினர்கள்.*

*(111)*

***99. முன்னுரிமை பெற்ற வாரிசுகளிடையே வாரிசுரிமையை நிர்ணயிக்கும் முறை :*** *எட்டாவது அட்டவணையில் பிரிவு I-ல் உள்ள வாரிசுகள் ஒன்றாக எடுத்துக் கொள்ளப்படுவார்கள். பிரிவு II-ல் முதல் வரிசையில் குறிக்கப்பட்டுள்ளவர்கள் இரண்டாவது வரிசையில் குறிக்கப்பட்டுள்ளவர்களை விட முன்னுரிமை பெறுவார்கள். அதே முறையில் மூன்றாவது வரிசையில் குறிக்கப் பட்டுள்ளவர்களை விட இரண்டாவது வரிசையில்குறிக்கப் பட்டுள்ளவர்கள் முன்னுரிமை பெறுவார்கள். இதே முறையில் அடுத்தடுத்து வரிசைகளில் உள்ளவர்களைவிட முன் வரிசையில் உள்ளவர்கள் முன்னுரிமை பெறுவார்கள்.*

*(112)*

***100. பிரிவு I-ல் உள்ள முன்னுரிமை பெற்ற வாரிசுகளுக்கிடையே சொத்தைப் பகிர்ந்தளித்தல் :*** *(1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட ஒருவரது சொத்து **எட்டாவது** அட்டவணை பிரிவு I-ல் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை பெற்ற வாரிசுகளிடையே பிரித்தளிக்கப்படும். இதன்படி ஒரு விதவையின் பங்கு ஒவ்வொரு மகனின் பங்கிற்கு சமமாக இருக்கும்; ஒரு மகனை விட்டு இறந்து விட்ட மகன் அல்லது உயில் எழுதாமல் இறந்துவிட்டவர் உயிரோடிருந்தபோது வாழ்ந்த மகனின் மகன் ஆகியோர் இதில் அடங்குவர். திருமணமாகாத ஒவ்வொரு மகளின் பங்கு ஒவ்வொரு மகனின் பங்கில் பாதியும் அதேபோல் திருமணமான மகளின் பங்கு ஒவ்வொரு மகனின் பங்கில் கால்பாகமும் இருக்கும்.*

*முன்னால் இறந்துவிட்ட மகன் ஒரு மகனையோ அல்லது மகனின் மகனையோ விட்டுச் செல்லாமல் தனது விதவையையோ அல்லது உயில் எழுதாமல் இறந்துவிட்டவர் காலத்தில் வாழ்ந்த தனது மகனின் விதவையையோ விட்டுவிட்டு இறந்துவிட்டால், உயில் எழுதாமல் இறந்துவிட்ட மகனின் பங்கில் பாதி முன்னால் இறந்த மகனுக்குக் கிடைக்கும்.*

*2) உட்பிரிவு I-ல் சொல்லப்பட்டுள்ள உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் மகன் அவருக்கு முன் இறந்துவிட்டிருந்தால் சொத்து கீழ்க்காணும் முறையில் பகிர்ந்தளிக்கப்படும்:-*

*அ) அவ்வாறு முதலில் இறந்துவிட்ட மகன் ஒரு மகனையோ அல்லது மகனின் மகனையோ விட்டுவிட்டு இறந்துவிட்டிருந்தால், அவ்வாறு உயில் எழுதாமல் இறந்து விட்டவரின் சொத்து பங்கு பிரிக்கப்படவேண்டும். அப்போதுதான் முதலில் இறந்த மகனின் விதவையின் பங்கு அவன் பங்கிற்கு சமமாக இருக்கும். அப்போதுதான் இன்னொரு மகன் ஒரு மகனை விட்டுவிட்டு முதலில் இறந்து விட்டிருந்தால் அவன் பங்கிற்கு சமமாக சொத்து இருக்கும்.*

*முதலில் இறந்துவிட்ட மகனின் மகன் உயில் எழுதாமல் இறந்துவிட்டவருக்கு முன்பாக ஒரு விதவையை விட்டுவிட்டு இறந்துவிட்டால், ஆனால் அவருக்கு மகன் இல்லாதிருக்கும்போது, மகனின் மகனின் பங்கு, இறந்துவிட்டவரின் மகனின் பங்கில் பாதியாக இருக்கும்.*

*ஆ) முதலில் இறந்துவிட்ட மகனின் மகனுடைய பங்கை, உயில் எழுதாமல் இறந்துவிட்டவருக்கு முன்பாக அவன் இறந்து விட்டால், அவனுடைய விதவை மற்றும் மகன்கள் சமமாகப் பங்கிட்டுக் கொள்வார்கள்.*

இ) முதலில் இறந்துவிட்ட மகன், தன் விதவையை விட்டு விட்டு இறந்தாலோ, அல்லது மகனின் விதவை அல்லது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மகன்களின் விதவைகளை விட்டு விட்டு இறந்தாலோ, ஆனால் மகனையோ மகனின் மகனையோ விடாமலிருந்தால், அது உயில் எழுதாமல் இறந்தவர் இறக்கும் போது உள்ள நிலையாக இருந்தால், முதலில் இறந்த மகனின் சொத்து அவனின் விதவை மற்றும் மகனின் விதவை ஆகியோ ருக்கிடையே பங்கிடப்படும். அப்போதுதான் முதலில் இறந்த மகனின் விதவையின் சொத்து, முதலில் இறந்த மகனுடைய விதவையின் சொத்தைவிட இரண்டு மடங்காக இருக்கும்.

3) இந்தப் பிரிவிற்காக, ஒரு நபர் ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகளை விட்டுவிட்டுச் சென்றால் அவர்கள் யாவரும் சொத்தைத் தங்களுக்குள் சமமாக பங்கிட்டுக் கொள்வார்கள். ஒரு விதவை இருந்தால் அவளுக்கு என்ன பங்கு கிடைக்குமோ அதை அவர்கள் யாவரும் சமமாக பங்கிட்டுக் கொள்வார்கள்.

* * * *

* * * *

*(114)*

***101. பிரிவு II-ல் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை வாரிசுகளுக்கிடையே சொத்தைப் பகிர்ந்து அளிக்கும் முறை:*** *8-வது அட்டவணை II-வது பிரிவில் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை வாரிசுகளுக்கிடையே பகிர்ந்து அளிக்கும்போது போட்டியிடுவோர் வரிசையில் இடம் பெற்றுள்ளவர்களுக்குச் சமமாக அளிக்க வேண்டும். உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் சொத்துக்களை இந்த முறையில்தான் பிரிக்க வேண்டும்.*

*(115)*

***102. பெண்வழி உறவின் வாரிசுகள் :*** *8-வது அட்டவணை பிரிவு I அல்லது II-ல் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை பெற்ற வாரிசுகள் எவரும் இல்லை என்றால், உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் சொத்துக்களை இந்தப் பிரிவில் சொல்லப் பட்டுள்ள முறையில் ஐந்து தலைமுறைகளுக்குட்பட்டுள்ள பெண் வழி உறவினர்களுக்கு கொடுக்க வேண்டும்.*

*(116)*

***103. பெண் வழியில் யார் வாரிசுகள் :*** *முன்னுரிமை வாரிசுகள் மற்றும் ஆண் வழி வாரிசுகள் இல்லை என்றால் இறந்துபட்ட நபரின் ஐந்து தலைமுறைக்கு உட்பட்ட பெண்வழி உறவினர்கள், இந்தப் பகுதியில் சொல்லிய விதிமுறைகளுக்குட் பட்டு சொத்து எடுத்துக் கொள்வார்கள்.*

*(117)*

***104. ஆண் வழி உறவினர்கள் மற்றும் பெண் வழி உறவினர் களுக்கிடையே வாரிசுரிமையை நிர்ணயிக்கும் முறை :-*** *ஆண் வழி அல்லது பெண்வழி உறவினர்களுக்கிடையே வாரிசுகளை நிர்ணயிக்க கீழ்க்கண்ட விதிமுறைகளை பின்பற்ற வேண்டும்:-*

*விதி 1 - இரண்டு வாரிசுகளில் குறைந்த முன் தலைமுறைகள் உள்ள அல்லது முன் தலைமுறைகள் இல்லாத வாரிசுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.*

*விதி 2 - முன் தலைமுறைகள் எண்ணிக்கை சமமாக இருந்தால் அல்லது இல்லாமல் இருந்தால், முன்தலைமுறை இல்லாத அல்லது குறைவான தலைமுறைகள் உள்ள வாரிசுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.*

*விதி 3 - பின்தலைமுறைகள் எண்ணிக்கை சமமாக இருந் தால், அல்லது இல்லாது இருந்தால் ஆண் தலைமுறையி லுள்ள வாரிசுக்கு பெண்தலைமுறை வாரிசை விட முன் னுரிமை அளிக்கப்படும். உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் தலைமுறையிலிருந்து இது கணக்கிடப்பட வேண்டும். இந்த இரு வாரிசுகளின் தலைமுறைகள் தனித்தனியாக கணக்கிடப்பட வேண்டும்.*

*விதி 4 - இரண்டு தலைமுறைகள் தனித்தனியே பிரிக்கப் படமுடியாத சூழ்நிலை இருந்தால் பெண் வாரிசை விட ஆண் வாரிசுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும்.*

*விதி 5 - இரண்டு வாரிசுகளுக்குமிடையே யாரை தேர்ந் தெடுப்பது என்ற பிரச்சினை இருந்தால் இருவருக்கும் சமமாக கொடுக்க வேண்டும்.*

* * * * *

* * * * *

*(117A)*

***105. தலைமுறைகளைக் கணக்கிடுதல் :*** *(1) ஆண் வழி மற்றும் பெண்வழி உறவு முறையில், உறவு முறையை நிர்ணயிக்க மேல்வழி அல்லது கீழ்வழி அல்லது இரண்டும், உயில் எழுதாமல் இருந்த நபரின் தலைமுறையிலிருந்து கணக்கிட வேண்டும்.*

*2) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரைக் கொண்டு தான் மேல் மற்றும் கீழ் தலைமுறை நிர்ணயிக்கப்பட வேண்டும்.*

*3) ஒவ்வொரு தலைமுறையும் ஒரு கட்டமாக மேலோ கீழோ கணக்கிடப்படும்.*

*(118)*

### *ஆண் மருமக்கதாய சொத்திற்கு வாரிசுரிமை*

**105A . மருமக்கதாயத்தைச் சேர்ந்த ஆண் உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அவருடைய சொத்திற்கு வாரிசு உரிமையை நிர்ணயிக்கும் விதிமுறைகள்:-** *இந்தப் பகுதியில் என்ன சொல்லப்பட்டிருந்தாலும், ஓர் இந்து ஆணின் தனிப்பட்ட அல்லது சுயசம்பாத்திய சொத்தை, அவர் உயில் எழுதாமல் இறந்து விட்டால் கீழ்க்காணும் முறையில் நிர்ணயித்து மாற்றம் ஏற்படும்:-*

*அ) மருமக்கதாயம் மற்றும் அலிய சந்தான சட்டம், இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன் பின்பற்றப்பட்டிருந்தால், அது பிரிவு 105C முதல் 105 T வரை இரண்டும் சேர்ந்து உள்ள விதிமுறைகளின்படி நிர்ணயிக்கப்படும்.*

*ஆ) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன், ஒருவருக்கு நம்பூதிரி சட்டம் பின்பற்றப்பட்டிருந்தால், அது பிரிவு 105J -யில் சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளுக்கு உட்பட்டு நிர்ணயிக்கப் படும்.*

*(119)*

**105B. நேர்வழி இறங்குறவு விளக்கம் :-** *பிரிவு 105C முதல் 105J இரண்டும் சேர்க்கப்பட்டு பிரிவு 109A மற்றும் 109Bயில் நேர்வழி இறங்குறவு சொல்லப்பட்டிருந்தால், அது அவரின் வழித் தோன்றலைக் குறிக்கும். அது ஆண் வழி அல்லது பெண்வழி, அல்லது பகுதி ஆண்வழியாகவோ பகுதி பெண்வழியாகவோ இருக்கலாம். மேலும் அவரின் எந்தக் குழந்தையையும் இதில் உள்ளடக்கும்.*

*(120)*

**105C. நேர்வழி இறங்குறவு இருந்தால், அந்தச் சொத்தை மாற்றுவது பற்றி:** *1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட ஒரு நபர், அவருக்குப்பின் நேர்வழி இறங்குறவு வழித்தோன்றலையோ அல்லது வழித் தோன்றல்களையோ, மேலும் அவருடைய தாய் அல்லது விதவை, அல்லது விதவைகள் அல்லது அவருடைய தாய் மற்றும் விதவை அல்லது விதவைகளையோ விட்டுவிட்டுச் சென்றிருந்தால், உயில் எழுதாமல் இறந்து விட்ட நபரின் எல்லாச் சொத்துக்களும் அவர்களுக்குப் போகும்.*

*2) தாய் அல்லது விதவை இல்லை என்றால் எல்லாச் சொத்துக் களும் நேர்வழி இறங்குறவு வழித்தோன்றலுக்கோ அல்லது வழித்தோன் றல்களுக்கோ போகும்.*

(121)

**105D. பகிர்ந்தளிக்கும் விதிமுறைகள் :** நேர்வழி இறங்குறவு வழித் தோன்றல்கள் இருந்தால், பிரிவு 105Cயில் சொல்லப்பட்டுள்ள வாரிசுகளுக்கு கீழ்க்காணும் விதிமுறை களைப் பின்பற்றி அந்தச் சொத்து பகிர்ந்தளிக்கப்படும்:-

அ) ஒவ்வொரு குழந்தையும் (மகன் அல்லது மகள்) சம பங்குக்கு உரியவர்களாவார்கள்;

ஆ) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் குழந்தை அவருக்கு முன் இறந்துவிட்டால், அந்தக் குழந்தையின் நேர்வழி இறங்குறவு வழித் தோன்றல்கள் உட்பிரிவு (C)யில் சொல்லப்பட்டவைகளுக்கு உட்பட்டு, அந்தக் குழந்தை உயில் எழுதாமல் இறந்து விட்ட நபர் இறக்கும்போது, உயி ருடனிருந்தால் என்ன பங்கைப் பெறுமோ அந்தப் பங்கு அந்தக் குழந்தைகளுக்குக் கிடைக்கும்.

இ) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் பேரப்பிள்ளைகள், அவரின் குழந்தை இறக்காமல் இருந்தால் என்ன பங்கைப் பெற்றிருக்குமோ, அந்தப் பங்கைப் பெறுவார்கள்;

அந்த பேரக்குழந்தை, உயில் எழுதாமல் இறந்த நபருக்கு முன்பாகவே இறந்து விட்டிருந்தால், அதனுடைய நேர்வழி இறங் குறவு வழித்தோன்றல்கள் உட்பிரிவு (E)யில் சொல்லியுள்ள வற்றிற்கு உட்பட்டு, அந்தப் பேரக்குழந்தை எந்த அளவிற்கு பங்கு பெற்றிருக்கிறதோ அந்தப் பங்கைப் பெறுவார்கள்;

ஈ) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் நேர்வழி இறங்குறவு வழித்தோன்றலில் கடைசி வழித் தோன்றலை அந்தச் சொத்து அதே முறையில் சென்றடையும்.

உ) உயில் எழுதாமல் இறந்த நபரின் குழந்தையின் வழித் தோன்றல்கள், பேரக்குழந்தை அல்லது மற்ற நேர்வழி இறங்குறவு வழித் தோன்றல்கள் அவரின் சொத்தில், குழந்தை, பேரக்குழந்தை அல்லது மற்ற வழித் தோன்றல்கள் அவர் இறக்கும் போது உயிருடன் இருந்தால், பங்கு பெற முடியாது.

ஊ) விதவை அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகள் இருந்தால், எல்லா விதவைகளும் ஒன்றாக, குழந்தைக்குக் கிடைக் கும் பங்கிற்குச் சமமாக அந்தச் சொத்தைப் பெறமுடியும். ஒன்றுக்கு மேற் பட்ட விதவைகள் இருந்தால் அவர்கள் யாவரும் சொத்தை சமமாகப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

எ) குழந்தைக்குச் சமமாக, தாயும் சம பங்கு பெற உரிமை உண்டு.

*(122)*

**105E. நேர்வழி இறங்குறவு வழித்தோன்றல்கள் இல்லாமல், விதவை மற்றும் தாய் இருந்தால் அந்தச் சொத்து மாறும் முறை** - 1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபர், தனக்குப் பிறகு நேர்வழி வழித் தோன்றல்கள் யாரையும் விட்டுச் செல்லாமல், தாய் மற்றும் விதவை அல்லது விதவைகளை விட்டு இறந்து விட்டால், பாதி சொத்து அவருடைய தாய்க்கும், மற்றபாதி அவருடைய விதவைக்கும் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகள் இருந்தால் அவர்கள் எல்லோருக்கும் சமமாகக் கிடைக்கும்.

*(123)*

**105F. தாய் இல்லாமல் இருந்து, விதவை அல்லது நேர்வழி இறங்குறவு வழித்தோன்றல்கள் இருந்தால் அந்தச் சொத்து மாறும்** முறை: 1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபர் அவருக்குப் பின் நேர்வழி இறங்குறவு வழித் தோன்றல்கள், அல்லது அவருடைய தாய் ஆகியோரை விட்டுச் செல்லாமல், விதவை மற்றும் விதவைகளையும் மற்றும் அவரது தாயின் நேர்வழி இறங்குறவு வழித்தோன்றல், அல்லது வழித் தோன்றல்களையும் விட்டுச் சென்றால் பாதி சொத்து அவருடைய விதவை அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகள் இருந்தால் அவர்களுக்குச் சமமாகவும், மற்ற பாதி சொத்து அப்போதுள்ள நேர்வழி இறங்குறவுவழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்களுக்கும் போகும்.

2) உயில் எழுதாமல் இறந்த நபரின் தாய்க்கு எந்த நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல்களும் இல்லாவிட்டால், எல்லாச் சொத்துக்களும், விதவைக்கோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகள் இருந்தால் அவர்களுக்கோ சமமாகப் போகும். விதவை இல்லாதபோது, எல்லாச் சொத்துக்களும் தாயின் நேர்வழி இறங்குறவு வழித்தோன்றல்களுக்குப் போகும்.

*(124)*

**105G. தாய்வழி பாட்டி அல்லது அவளுடைய நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல்கள் அல்லது தந்தை இருந்தால் சொத்து மாறும் முறை** (1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபர் பிரிவு 105C, 105E, மற்றும் 105F ஆகியவற்றில் சொல்லப்பட்டுள்ள வாரிசுகளை விட்டுச் செல்லாமல் தம்முடைய தந்தை மற்றும் தாய் வழிப்பாட்டி அல்லது நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்களை விட்டுச் சென்றிருந்தால் அவருடைய

தந்தைக்குப் பாதி சொத்தும், மற்ற பாதி அவளுடைய தாய்வழிப் பாட்டி அல்லது அவள் இல்லை என்றால் அவளது நேர்வழி இறங்குமுறை வழித்தோன்றல் அல்லது வழித்தோன்றல்களுக்குச் செல்லும்.

2) தாய்வழிப் பாட்டியின் நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல் இல்லை என்றாலும், மேலும் தந்தை இல்லை என்றாலும், மொத்த சொத்தும் தாய்வழி பாட்டிக்குப் போகும். அவள் இல்லை என்றால் அவள் நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்களுக்குப் போகும்.

*(125)*

**105H. மற்ற சந்தர்ப்பங்களில் சொத்து மாற்ற முறை:** 1) உயில் எழுதாமல் இறந்து விட்ட நபர், பிரிவு 105C, 105E, 105F மற்றும் 105G ஆகியவற்றில் சொல்லியுள்ள எந்த வாரிசுகளையும் விட்டுச் செல்லாமல் இருந்தால் அந்தச் சொத்து அவருடைய தாயின் தாய் வழிப்பாட்டிக்கும், அவள் இல்லாவிட்டால் அவளுடைய நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்களுக்கும் போகும்.

2) அம்மாதிரி எந்த நேர்வழி இறங்குமுறை உறவு இல்லை என்றால், உயில் எழுதாமல் இறந்த நபரின் சொத்து மிகத் தூர பெண் உறவினருக்கும், அவள் இல்லாதபோது, அவளுடைய நேர்முறை இறங்குறவு வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்களுக்கும், நெருங்கிய முன்தலைமுறை மற்றும் அவளின் வழித் தோன்றல் களுக்கும் போகும். மிகத்தூர முன்தலைமுறை உறவினர் அல்லது அவர் வழித் தோன்றல்கள் இதில் இடம்பெற மாட்டார்கள்.

*(126)*

**105.I. தாயின் நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல்கள் அல்லது மற்ற முன்தலைமுறையினரிடையே சொத்தை பங்கிடுவதற்கான விதிமுறைகள்:** உயில் இல்லாமல் இறந்த நபரின் சொத்து அல்லது மற்ற எந்த பங்கும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல்கள் அவருடைய தாய்க்கு இருந்தால் அவர்களுக்கோ அல்லது மற்ற முன்தலைமுறையினருக்கோ பங்கு பிரிவு 105C உட்பிரிவு (A) முதல் (C) வரை உள்ள பிரிவுகளுக்கு உட்பட்டு கொடுக்கப்படும். தாய் மற்றும் மற்ற முன் தலைமுறையினர் உயில் எழுதாமல் இறந்து விட்டதாகக் கருதி உயிருடன் உள்ள வழித் தோன்றல்களுக்கு மட்டும் சொத்தை விட்டு விட்டுச் சென்றதாகக் கருதப்படும்.

*(127)*

**105J. நம்பூதிரி ஆண்களுக்குள்ள சிறப்பு வாரிசுரிமை விதிமுறைகள் :** இந்தப் பாகத்தில் என்ன சொல்லப்பட்டிருந் தாலும், தனியாக மற்றும் சுயமாகச் சம்பாதித்த ஓர் இந்து ஆண் இந்தத் தொகுதி இயற்றப்படாதிருந்தால் நம்பூதிரி சட்டத்துக்கு உட்பட வேண்டியிருப்பவர் உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அச்சொத்து குறித்துக் கீழ்க்கண்ட விதி முறைகள் பின்பற்றப்பட வேண்டும் -

அ) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபர், தனக்குப்பின், நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல் களையோ, அல்லது விதவை மற்றும் விதவைகளையோ அல்லது அந்த வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்களையோ மற்றும் விதவை அல்லது விதவைகளோ விட்டுச் சென்றிருந்தால், அந்த முழுசொத்தும் உட்பிரிவு (a) முதல் (i) வரை உள்ள முறைப்படி அவர்களுக்குப் போகும்.

ஆ) உட்பிரிவு (a)வில் சொல்லியுள்ள எந்த உறவினரையும் அவர் விட்டுச் செல்லாதிருந்தால் பிரிவு 97 முதல் 108 வரை உள்ளவற்றில் சொல்லியுள்ள விதி முறைகளின்படி அச்சொத்து முறைப்படி உரிமை மாற்றித் தரப்படும்.

(128)

## உயில்வழி அல்லாத முறையில் ஒரு பெண்ணின் சொத்திற்குள்ள வாரிசுரிமை

### பொது விதிமுறைகள்

**106. ஓர் இந்து பெண்ணின் வாரிசுகள் :** பிரிவு 109A மற்றும் 109Bயில் சொல்லப்பட்டுள்ளவைகளைத் தவிர்த்து உயில் எழுதாமல் இறந்துவிடும் ஓர் இந்துப் பெண்ணின் சொத்தை கீழ்க் காணும் முறையில் மாற்ற வேண்டும்:-

அ) முதலாவதாக கணவன் மற்றும் குழந்தைகள், முதலில் இறந்துவிட்ட குழந்தையின் குழந்தைகள்;

ஆ) இரண்டாவதாக, உட்பிரிவு (அ) யில் சொல்லப்பட்டுள்ள வாரிசுகள் இல்லை என்றால் பிரிவு 109-ல் சொல்லப்பட்டுள்ள வாரிசுகளின் வரிசைப்படி.

(129)

**107. வாரிசுகளுக்கிடையே பங்கைப் பிரிப்பது:** 1) ஓர் இந்துப் பெண் கணவனையும் குழந்தைகளையும் விட்டுவிட்டு இறந்து விட்டால், உயில் எழுதாமல் அவள் விட்டுச் சென்ற சொத்துகள் யாவும் அவள் கணவன் மற்றும் குழந்தைகளால் சமமாக பங்கிட்டுக் கொள்ளப்படும்.

2) ஓர் இந்துப் பெண் உயில் எழுதாமல் இறந்துவிட்டால், அவளுடைய சொத்து கணவன் இல்லாமல் குழந்தைகள் மட்டும் இருக்கும்போது, அவள் உயில் எழுதாமல் விட்டுச் சென்ற சொத்து அவள் குழந்தைகளால் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளப்படும்.

3) ஓர் இந்துப் பெண் உயில் எழுதாமல் இறந்துவிட்டால், அவள் உயிருடன் இருக்கும்போது அவளுடைய எந்த ஒரு பிள்ளையும் குழந்தைகளை விட்டுவிட்டு இறந்துவிட்டிருந்தால் அந்தப் பிள்ளைக்கு என்ன பங்கு கிடைத்திருக்குமோ அந்தப் பங்கை அந்தக் குழந்தைகள் எடுத்துக் கொள்வார்கள்.

(130)

**108. குழந்தைகள் இல்லை என்றால் சொத்து கணவனுக்குக் கிடைக்கும்:** ஓர் இந்துப் பெண் உயில் எழுதாமல் இறந்து விட்டால், அவளுக்குக் குழந்தைகள் இல்லை என்னும்போது அவளுடைய கணவனுக்கு அந்தச் சொத்து கிடைக்கும். அவள் உயிருடன் இருக்கும்போது அவள் பிள்ளை குழந்தைகளை விட்டு விட்டு இறந்தால் அவர்களுக்குப் பிரிவு 107ன் படி அவள் உயில் எழுதாத சொத்து கிடைக்கும். அந்தக் குழந்தைகளும் இல்லாத போது அந்த உயில் எழுதாத சொத்து அவள் கணவனுக்குப் போகும்.

(131)

**109. பெண்ணின் சொத்துக்கு மற்ற வாரிசுகள்:** ஓர் இந்துப் பெண் பிரிவு 107 அல்லது 108-ல் சொல்லப்பட்டுள்ள வாரிசுகள் யாரும் இல்லாமல் இறந்து விட்டால், உயில் எழுதப் படாத அவளுடைய சொத்துக்கள் பின்கண்ட வாரிசுகளுக்குக் கீழ்க் காணும் முறையில் போகும்:-

1) தாய், தந்தை;

2) கணவனுடைய வாரிசுகள் - கணவர் உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அவருடைய சொத்துக்கள் யாருக்கு போகுமோ, அந்த வாரிசுகளுக்கு அவருடைய சொத்தாக அவர் உயில் எழு தாமல் மனைவிக்குப் பிறகு இறந்துவிட்டதாகக் கருதிப் போகும்.

3) தாயின் வாரிசுகள் - தன் மகள் இறந்த உடன் அந்தத் தாய் இறந்ததாகக் கருதி, அவள் உயில் எழுதாமல் போனால், அவள் சொத்து யாருக்குப் போகுமோ, அந்த வாரிசுகளுக்கு அதற் குண்டான விதிமுறைகளின் படி போகும்.

4) தந்தையின் வாரிசுகள் - மகள் இறந்தபிறகு அந்தத் தந்தை இறந்ததாகக் கருதி அவர் உயில் எழுதாமல் போனால், அவர் சொத்து யாருக்குப் போகுமோ அந்த வாரிசுகளுக்கு அதற் குண்டான விதி முறைகளின்படி போகும்.

*(132)*

## *பெண் மருமக்கதாயம் சொத்துக்கு வாரிசுகள்*

**109 A. மருமக்கதாயம் அல்லது அலியசந்தான முறை களைப் பின்பற்றும் பெண்கள் உயில் எழுதாமல் இறந்து விட்டால் அவர்களுடைய சொத்துக்களுக்கு வாரிசுகள்:** *இந்தப் பகுதியில் என்ன சொல்லப்பட்டிருந்தாலும், இந்தத் தொகுப்பு இயற்றப்படாமல் இருந்தபோது, மருமக்கதாயம் அல்லது அலியசந்தான முறையைப் பின்பற்றிய பெண்ணின் தனிப்பட்ட அல்லது சுய சம்பாத்திய சொத்து, அவள் உயில் எழுதாமல் இறந்து விட்டால் கீழ்க்காணும் முறைப்படி வாரிசு அல்லது வாரிசு களுக்குப் போகும்:-*

*அ) உயில் எழுதாமல் இறந்துவிட்டப் பெண் தனக்குப் பின் நேர் வழி இறங்குறவு வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்களை விட்டு விட்டு இறந்துவிட்டால் பிரிவு 105D உட்பிரிவு (a) முதல் (e)-ல் சொல்லியுள்ளது போல் அவளது சொத்து முழுவதும் பகிர்ந்து கொள்ளப்படும்.*

*ஆ) உயில் எழுதாமல் இறந்துவிட்ட பெண்ணிற்கு நேர்வழி இறங்குறவு வழித் தோன்றல் யாரும் இல்லை என்றால் அவளது சொத்து முழுவதும் உயில் எழுதாமல் இறந்துவிட்ட அந்தப் பெண்ணின் தாய்க்கோ, அவள் இல்லை என்றால் அவளுடைய நேர்வழி இறங்குறவு வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்களுக்கோ போகும்.*

*இ) உயில் எழுதாமல் இறந்துவிட்ட பெண்ணிற்கு நேர்வழி இறங்குறவு வழித்தோன்றல் அவளுக்கோ அல்லது அவள் தாய்க்கோ இல்லாமல் கணவன் மற்றும் அவளின் தாய்வழி பாட்டி அல்லது பாட்டியினுடைய நேர்வழி இறங்குறவு வழித் தோன்றல் அல்லது வழித் தோன்றல்கள் இருந்தால், பாதி சொத்து அவளுடைய பாட்டிக்கும் அல்லது அவள் இல்லாத போது அவளுடைய நேர்வழி இறங்குறவு வழித் தோன்றல் அல்லது வழித்தோன்றல்களுக்கும் போகும்.*

ஈ) உயில் எழுதாமல் இறந்துவிட்ட பெண்ணின் தாய் வழி பாட்டியோ அல்லது அவளுடைய இறங்குறவு வழித் தோன்றல் களோ இல்லாவிட்டால், அவளுடைய சொத்துக்கள் யாவும் அவளுடைய கணவனுக்குப் போகும். அவள் கணவன் இல்லை என்றால் அவளுடைய எல்லாச் சொத்துக்களும் அவ ளுடைய தாய்வழி பாட்டிக்கும் அல்லது அவளுடைய வழித்தோன் றல் அல்லது வழித்தோன்றல்களுக்கும் போகும்.

உ) உயில் எழுதாமல் இறந்துவிட்டப் பெண்ணுக்கு மேற் கூறிய எந்த வாரிசுகளும் இல்லை என்றால் எல்லாச் சொத்துக் களும், அவளுடைய தாய் வழி பாட்டிக்கும் அல்லது அவள் இல்லை என்றால் அவளுடைய நேர்வழி இறங்குறவு வழித்தோன் றல் அல்லது வழித் தோன்றல்களுக்கும் போகும்.

*(133)*

***109 B. உயில் எழுதாமல் இறக்கும் நம்பூதிரி பெண்ணின் சொத்துக்கு வாரிசுதாரர்கள் :*** *இந்தப் பாகத்தில் என்ன சொல்லப்பட்டிருந்தாலும், தனியாக மற்றும் சுயமாகச் சம்பாதித்த ஓர் இந்துப் பெண் இந்தத் தொகுதி இயற்றப்படாதிருந்தால் நம்பூதிரி சட்டத்துக்கு உட்பட வேண்டியிருப்பவர் உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அவளது சொத்து குறித்துக் கீழ்க்கண்ட விதிமுறைகள் பின்பற்றப்பட வேண்டும்:-*

*அ) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நம்பூதிரி பெண் தனக்குப் பின் நேர்வழி இறங்குமுறை வழித் தோன்றலை அல்லது வழித் தோன்றல்களை விட்டுச் சென்றிருந்தால் அவளது சொத்து முழுவதும் 105D பிரிவு (a) முதல் (e) வரையுள்ள உப பிரிவுகளில் கூறியுள்ளபடி இத்தகைய வழித் தோன்றலுக்கு அல்லது வழித் தோன்றல்களுக்கு பகிர்ந்தளிக்கப்படும்.*

*ஆ) இறங்கு முறை வழித் தோன்றல் எவரும் இல்லையென்றால் அவளது சொத்து கணவனுக்குப் போகும்.*

*இ) கணவன் இல்லையென்றால் 109 ஆவது பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள விதிமுறைகளின்படி அவளது சொத்து வாரிசுதாரர்களுக்குப் பிரித்துத் தரப்படும்.*

*(134)*

### *துறவியின் சொத்துக்கு வாரிசுதாரர்கள்*

***110. துறவிகளுக்கான விதிகள்:*** *(1)ஒருவர் முற்றிலுமாகவும் முழுவதுமாகவும் துறவு வாழ்க்கை மேற்கொண்டு ஒரு துறவியாகவோ, தவசியாகவோ, நிரந்தர சமய சீடராகவோ மாறினால் இத்தகைய துறவு வாழ்க்கையை மேற்கொண்டபோது உயில் எழுதிவைக்காமல் இறந்தால் எப்படியோ அப்படி அவரது சொத்து அவருடைய வாரிசுதாரர்களுக்கு உரிமை மாற்றிக் கொடுக்கப்படும்.*

*2) இத்தகையவர் துறவியானபிறகு வாங்கும் சொத்து அவரது மரணத்திற்குப் பிறகு அவரது உறவினர்களுக்குப் போய்ச் சேராது; மாறாக பின்கண்டபடி உரிமை மாற்றம் செய்யப்படும்:*

*அ) துறவியானால் அதே துறவி வகையைச் சேர்ந்த ஓர் ஆன்மீக சகோதரருக்குப் போய்ச் சேரும்;*

*ஆ) தவசியானால் நடைமுறையிலுள்ள வழக்காற்றின்படி அவரது நல்லொழுக்கமுள்ள சீடரைப் போய்ச் சேரும்;*

*இ) நிரந்தர சமய சீடரானால் அவரது ஆசானைப் போய்ச் சேரும்.*

*(135)*

### *வாரிசுரிமைகள் பற்றி பொதுவான விதிமுறைகள்*

***111. முழு ரத்த உறவு பாதி ரத்த உறவைவிட முன்னுரிமை பெறுகிறது:*** உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபருக்கு இரண்டு வகையான வாரிசுகள் இருந்து அவர்கள் இருவரும் எல்லா வகையிலும் சம அளவில் இருந்தால், முழு ரத்த உறவு வாரிசுகள் பாதி ரத்த உறவு வாரிசுகளை விட முன்னுரிமை பெறுவார்கள்.

* * * * * *

*(136)*

***112. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வாரிசுகள் இருக்கும் போது வாரிசுரிமையை வகைப்படுத்தல்:*** இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வாரிசுகள் உயில் எழுதாமல் இறந்து விட்ட நபருக்கு சமவாரிசாக இருந்து ஒன்றாக சொத்தை அடையும் நிலை இருந்தால் -

அ) வேறுவகையாக வெளிப்படையாக சொல்லியிருந்தால் தவிர அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாகத் தான் அதை எடுத்துக் கொள்வார்கள், குழுவாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள்;

ஆ) பொது நிலச் சொத்துரிமையாக எடுத்துக் கொள்வார்களே தவிர கூட்டு நிலச் சொத்துரிமையாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.

(137)

**113. கருவில் உள்ள குழந்தையின் உரிமை:** உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் கருவில் இருந்த குழந்தை பிறகு உயிருடன் பிறந்தால், உயில் எழுதாமல் இறந்தவர் இறப்பதற்கு முன்பாகவே அக்குழந்தை பிறந்ததாகக் கருதி அது உரிய பங்கைப் பெற முடியும். உயில் எழுதாமல் இறந்தவர், இறந்த தேதியிலிருந்தே அந்த குழந்தைக்கு அந்த சொத்தில் உரிமை இருந்ததாகக் கருதப்படும்.

(138)

**114. வாரிசுரிமையை ஊகிப்பது:** இரண்டு நபர்கள் ஒரே நேரத்தில் இறந்து, யார் முதலில் இறந்தார் என்பதைத் தெளிவாக கண்டுபிடிக்க முடியாத சூழ்நிலை இருந்தால், அதற்கு மாறாக நிரூபிக்கப்பட்டாலன்றி, வயதானவர் முதலில் இறந்த தாகக் கருதப்படும்.

(139)

**115. சில சூழ்நிலைகளில் பிரிவினைச் சட்டம் 1893ஐ அமுல்படுத்தல்:** இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் எந்த அசையாச் சொத்துக்களில் உள்ள பங்கு சம்பந்தமாகவும் அல்லது அவர் தனியாக அல்லது கூட்டாக நடத்திக் கொண்டிருந்த வியாபாரத்தின் பங்கு சம்பந்தமாகவும்:

அ) ஒன்று அல்லது மேற்பட்ட உயில் எழுதாமல் இறந்து விட்ட நபரின் மகன், மகனின் மகன், மகனின் மகனின் மகன், மற்ற உறவினர்களுடன் சேர்ந்து ஒரு வாரிசுப் பாகப் பிரிவினைக்கு வழக்குப் போடலாம்; அல்லது

ஆ) 8-வது அட்டவணை பிரிவு I-ல் சொல்லப்பட்டுள்ள ஆண் வாரிசுகளில் யாராவது ஒருவர் உயில் எழுதாமல் இறந்துவிட்டவரின் மகளைக் கட்டாயப்படுத்தி இறந்து விட்ட நபரின் சொத்தில் அவளுடைய பங்கை தனியாக அனுபவிக்க எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கூறலாம். (அவர் அம்மாதிரி செய்ய உரிமை உள்ளது).

சொத்துப் பிரிவினை நடந்திருக்கிறது, அவளோ அல்லது அவனோ குடியிருப்பு வீட்டில் தனக்குரிய பங்கை பெற்றிருக்கிறார்கள், உயில் எழுதாமல் இறந்துவிட்டவரின் குடும்பம் பிரியாமல் இருக்கிறது என்று கருதப்படும்போது பிரிவினைச் சட்டம் 1893-ன் (IV of 1893) ஷரத்துகளைப் பயன்படுத்தலாம்.

(140)

வாரிசுகளை தகுதியின்மை ஆக்குதல்

**116. உலகைத் துறந்தவர் போன்றோர் தகுதி இழக்கின்றனர்:** ஒரு நபர் முழுமையாகவும் இறுதியாகவும் பிரிவு 110 உட்பிரிவு (1)-ன் படி உலகைத் துறந்து விட்டால் அவர் தன் ரத்த வழி உறவு, திருமண உறவு மற்றும் தத்து எடுத்த உறவு ஆகியவற்றின் மூலம் எந்த உறவினரிடமிருந்தும் சொத்தை வாரிசாகப் பெறும் தகுதியை இழக்கிறார்.

(141)

**117. கற்பிழந்த மனைவி தகுதி இழக்கிறாள்:** ஒரு பெண் திருமணத்திற்குப் பிறகு அவளுடைய கணவன் உயிருடன் இருந்தபோது கற்பு இழந்திருந்தால், அதை அவன் மன்னித்திருந் தால் தவிர, அவனுடைய சொத்துக்கு வாரிசாக முடியாது. ஆனால் கணவனுடைய சொத்தை வாரிசுரிமையாகப் பெற இதனைக் காரணமாகக் காட்ட முடியாது. ஒரு நீதிமன்ற வழக்கில் அவள் கற்பிழந்தவள் என்பது நிரூபிக்கப்பட்டு, அந்தக் கணவனும் அந்த வழக்கில் சேர்க்கப்பட்டிருந்து, அந்தப் பிரச்சினை குறித்து நீதி மன்றம் தீர்ப்பு அளித்து, அது பின்னால் மாற்றாமல் இருந் தால்தான் அதனைக் காரணமாகக் காட்டி அவளுக்கு சொத்துரி மையை மறுக்க முடியும்.

(142)

**118. மறுதிருமணம் செய்துகொண்ட விதவைகள் தகுதி இழக்கிறார்கள்:** முன்னால் இறந்துவிட்ட மகனின் விதவை முன்னால் இறந்துவிட்ட மகனின் மகனின் விதவை தந்தையின் விதவை ஆகியோரின் வாரிசுரிமைப் பற்றி தீர்மானிக் கும்போது அவர்களில் எவரேனும் ஏற்கனவே மறுமணம் செய்துக் கொண்டிருந்தால் அத்தகையவர்கள் தகுதியிழக்கிறார்கள்.

(143)

**119. கொலையாளி தகுதியிழக்கிறான் :** ஒரு நபர் ஒரு கொலை செய்தாலோ, அல்லது கொலை செய்ய உடந்தையாக இருந்தாலோ, அவ்வாறு கொலை செய்யப்பட்ட நபரின் சொத்துக்கு வாரிசாக முடியாது; அல்லது வேறு எந்த சொத்துக்கும் வாரிசானாலும் அந்த நபரையும் கொலை செய்தாலோ கொலைக்கு உடந்தையாக இருந்தாலோ வாரிசாக முடியாது.

(144)

**120. மதமாற்றம் செய்துக் கொண்டவரின் வாரிசுகள் தகுதியிழக்கிறார்கள்:** இந்தத் தொகுப்பு வருவதற்கு முன்போ பின்போ ஓர் இந்து வேறு மதத்திற்கு மாறிவிட்ட காரணத்தால் இந்துவாக நீடிக்காதபோது, அம்மாதிரி மதமாற்றம் செய்து கொண்ட பிறகு பிறந்த குழந்தைகள், அவர்களுடைய இந்து சொந்தக்காரர்களிடமிருந்து வாரிசாக சொத்துரிமை பெற முடியாது. அந்தக் குழந்தைகளோ அல்லது வழித் தோன்றல்களோ வாரிசு உரிமை பற்றிப் பரிசீலிக்கப்படும்போது இந்துக்களாக இருந்தால் அப்போது அவர்கள் வாரிசு உரிமை பெறுவார்கள்.

(145)

**121. வாரிசுதார் தகுதி இழக்கும் போது வாரிசுரிமை:** இந்தப் பகுதியின் கீழ் யாராவது ஒரு நபர் வாரிசாவதற்கு தகுதி இழந்து விட்டால், உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபருக்கு முன்பாகவே அவர் இறந்து விட்டதாகக் கருதப்படும்.

(146)

122. நோய் மற்றும் குறைபாடுகள் தகுதி நீக்கம் செய்யாது: எந்த நபரும் அவருக்குள்ள வியாதி, குறைபாடு மற்றும் ஊனம் ஆகியவற்றிற்காக வாரிசாகும் உரிமையை இழக்க மாட்டார். இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைகளுக் குட்பட்டு, வேறு எந்த காரணத்திற்காகவும் அவர் வாரிசு உரிமையை இழக்கமாட்டார்.

*(147)*

### *அரசு உறுபொருள்*

**123. வாரிசுகள் இல்லாத நிலை:** உயில் எழுதாமல் இறந்துவிட்ட ஒருவர் இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள எந்த ஒரு வாரிசும் இல்லாமல் இறந்துவிட்டால் அவன் அல்லது அவளுடைய சொத்து அரசாங்கத்திற்குப் போகும். ஒரு வாரிசுக்கு என்னென்ன பொறுப்புகளும் கடமைகளும் இருக்கின்றனவோ, அவைகளுக்குட்பட்டு அரசாங்கம் அந்தச் சொத்தை எடுத்துக் கொள்ளும்.

*(148)*

## பாகம் III

### *உயில்வழி வாரிசுரிமை*

***124. உயில் வழி வாரிசுரிமை :*** *1) இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925* (XXXIX of 1925) *படியும் இந்துக்களை கட்டுப்படுத்தும் வேறு சட்டப்படியும் அவற்றின் விதிமுறைகளில் சொல்லியுள்ள படி, ஓர் இந்து தன்னுடைய எந்தச் சொத்தையும் உயில் மூலமாகவோ அல்லது வேறு முறையிலோ மாற்றலாம்.*

*2) பின்கண்டவை எதுவும் ஓர் இந்துவை அனுமதிக்காது:-*

*அ) ஜீவனாம்சம் பெற, இந்தத் தொகுதியிலுள்ள விதிமுறைகள்படியோ, அல்லது அமுலிலுள்ள வேறு சட்டத்தின்படியோ, உரிமைப் பெற்றுள்ளவரை அந்த உரிமை பாதிக்கக்கூடாது;*

*ஆ) சட்ட ரீதியாக மாற்றக் கூடியவை தவிர அவனோ அவளோ அந்தச் சொத்தில் எந்த மாற்றமும் செய்யக்கூடாது.*

2

(149)

## பாகம் VIII ஜீவனாம்சம்

***125. ஜீவனாம்சம் விளக்கப்படுகின்றது:*** இந்தப் பகுதியில் ஜீவனாம்சம் என்பதில் பின்கண்டவை அடங்கும்:

i) எல்லாச் சூழ்நிலைகளிலும், உணவு, உடை, இடம், கல்வி, மருத்துவச் செலவு மற்றும் கவனிப்பு ஆகியவற்றிற்கு ஏற்பாடு செய்தல்; மேலும்

ii) திருமணமாகாத பெண் இருந்தால், அவளின் திருமணத்திற்காக நியாயமான செலவு மற்றும் அதைச் சார்ந்த இதர செலவுகள் செய்தல்.

### குடும்ப உறுப்பினர்களைக் காப்பாற்றும் சொந்த பொறுப்பு

***126. மனைவியைப் பாதுகாத்தல்:*** 1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்போ அல்லது பின்போ, இந்தப் பிரிவில் சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளுக்கு உட்பட்டு ஓர் இந்து மனைவி, தன் கணவனால் அவன் உயிருள்ள வரை பராமரிக்க உரிமைப் பெற்றுள்ளாள். அவன் காலமான பிறகு அவனுடைய தந்தை அவளைப் பராமரிக்க வேண்டும்.

2) தன் கணவனுடன் சேர்ந்து வாழ்ந்தால் மட்டுமே அவள் அம்மாதிரி பராமரிப்பை எதிர்பார்க்க வேண்டும்.

எனினும் பின்கண்ட காரணங்களுக்காக அவள் தனித்து வாழ்ந்தாலும், தன்னுடைய உரிமையைப் பறிகொடுக்க வேண்டியதில்லை:-

அ) **அவன் மிகத் தீவிரமான குஷ்டரோகத்தினால் பாதிக்கப்பட்டிருந்தால் அல்லது தொற்றக்கூடிய பாலியல் நோயினால் பாதிக்கப்பட்டிருந்தால், ஆனால் அந்த நோய் அவனுக்கு அவளிடமிருந்து தொத்திக் கொள்ளாததாக இருந்தால்;**

ஆ)தன் மனைவி வாழும் வீட்டிலேயே ஒரு காமக்கிழத்தியை வைத்திருந்தால்;

இ) அவள் அவனுடன் வாழ்வது பாதுகாப்பற்றது என்னும் ரீதியில் அவளுக்கு அவன் மிகவும் கொடூரமானவனாக இருந்தால்;

ஈ) எந்தக் காரணமும் இன்றி, அவளுடைய ஒப்புதலின்றி, அல்லது அவளது விருப்பத்திற்கு எதிராக அவன் அவளைக் கைவிட்டிருந்தால்;

உ)அவன் வேறு மதத்திற்கு மாறி அதனால் தொடர்ந்து இந்துவாக இல்லாமலிருந்தால்;

ஊ) அவள் அவனிடமிருந்து தனித்து வாழ வேறு எதாவது தகுந்த காரணமிருந்தால்,

3) ஓர் இந்து மனைவி, அவள் கற்பிழந்து வாழ்ந்தாலும் அல்லது வேறு மதத்திற்கு மாறி இந்துவாக தொடர்ந்து நீடிக்காவிட்டாலும், அவள் கணவனிடமிருந்து பிரிந்து வாழவும் ஜீவனாம்சம் பெறவும் உரிமை இல்லை.

*(150)*

***127. விதவையான மருமகளைக் காப்பாற்றும் கடமை:-*** ***பிரிவு 126***ன்படி ஒரு மாமனாருக்கு தன் மருமகளைக் காப்பாற்றும் கடமை உள்ளது. ஆனால் அந்த அளவிற்கு அவருக்கு வசதி இருந்தால் மட்டுமே இது நீடிக்கும். மேலும் விதவை மருமகள் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள தகுந்த சொத்து இல்லை என்ற சூழ்நிலையிலும், கணவனுடைய சொத்திலிருந்து தகுந்த ஜீவனாம்சம் பெறக் கூடிய நிலை இல்லை என்றாலும், அல்லது தன் மகனிடமிருந்து அல்லது அவனுடைய சொத்திலிருந்து பெற முடியாவிட்டாலும் மட்டுமே மாமனார் காப்பாற்ற வேண்டும். அவள் மறுமணம் செய்து கொண்டால் மாமனாருக்குள்ள அத்தகைய கடமை முடிவுக்கு வந்து விடும்.

*(151)*

***128. குழந்தைகள் மற்றும் வயதான பெற்றோர் பராமரிப்பு:*** *1) இந்தப் பிரிவில் சொல்லப்பட்டுள்ளவைகளுக்கு உட்பட்டு, ஓர் இந்து தன் சட்ட ரீதியான குழந்தைகளையும் அல்லது முறையற்ற திருமணத்தில் பிறந்த குழந்தைகளையும், வயதான பெற்றோர்களையும் பராமரிக்கக் கடமைப்பட்டுள்ளார்.*

*2) தான் உரிய வயது வராதவரை, சட்டரீதியாகப் பிறந்த குழந்தையும், முறையற்ற திருமணத்தில் பிறந்த குழந்தையும்அவன் அல்லது அவளது தந்தையிடமிருந்து ஜீவனாம்சம் பெறமுடியும்.*

*3) தகுந்த வசதி இன்றி, இருக்கும் வயதான தந்தை தன் மகனிடமிருந்து ஜீவனாம்சம் பெற முடியும்.*

*(152)*

***129. குழந்தைகளைத் தாய் பராமரித்தல்:*** *ஓர் இந்துப் பெண் தன் சட்டரீதியான குழந்தைகளையும் மற்றும் முறையற்ற திருமணத்தில் பிறந்த குழந்தைகளையும், தன் கணவனுக்கு தகுந்த வசதியில்லாமல் தனக்கு நல்ல வசதி இருந்தால் தன் வாழ்நாள் முழுதும் பராமரிக்கக் கடமைப்பட்டுள்ளாள்.*

(153)

**தங்களைச் சார்ந்திருப்பவர்களைப் பராமரிப்பது வாரிசுகளின் கடமை**

**130. தங்களைச் சார்ந்துள்ளவர்களைப் பராமரிக்கும் கடமை வாரிசுகளுக்குண்டு:** 1) பிரிவு 131-ல் சொல்லப்பட்டுள்ளவைகளுக்கு உட்பட்டு, இறந்துவிட்ட ஓர் இந்துவின் வாரிசுகள், அவரிடமிருந்து பெற்ற சொத்துக்களைக் கொண்டு அவரைச் சார்ந்துள்ளவர்களை பராமரிக்க வேண்டும்.

2) இந்தப் பகுதிக்காக, இறந்துவிட்டவரின் கீழ்க்காணும் உறவினர்கள் அவரைச் சார்ந்துள்ளவர்களாகக் கருதப்படுவார்கள்:-

i) அவரின் தந்தை,

ii) அவரின் தாய்,

iii) அவரின் விதவை, அவள் மறுமணம் செய்து கொள்ளாமல் இருக்கும் வரை,

iv) அவரின் மகன், முன்னால் இறந்துவிட்டவரது மகனின் மகன், முன்னால் இறந்துவிட்ட மகனின் முன்னால் இறந்துவிட்ட மகன், அவன் உரிய வயது வராத நிலையில், ஜீவனாம்சம் பெறமுடியாத நிலையில், பேரனைப் பொறுத்து தன்னுடைய அப்பாவின் சொத்திலிருந்து, பேரனின் பேரனைப் பொறுத்து, அவருடைய தந்தையின் சொத்திலிருந்து அல்லது தந்தையின் தந்தையின் சொத்திலிருந்து;

v) அவரின் திருமணமாகாத மகள், அவள் திருமணமாகாமல் இருக்கும் வரை;

vi) அவரின் திருமணமான மகள்; அவள் தன் கணவனிடமிருந்து ஜீவனாம்சம் பெற முடியாத நிலையில் இருந்தால், அல்லது மகன் இருந்தால் மகனிடமிருந்து அல்லது அவனுடைய சொத்திலிருந்து ஜீவனாம்சம் பெற முடியாத நிலையில் இருந்தால்;

vii) அவருடைய விதவை மகள்;

கீழ்க்கண்டவர்களிடமிருந்து அவள் ஜீவனாம்சம் பெற முடியாத நிலையில் இருத்தல்:

அ) தன்னுடைய கணவனுடைய சொத்திலிருந்து அல்லது

ஆ) மகன் இருந்தால் மகனிடமிருந்து அல்லது அவன் சொத்திலிருந்து அல்லது

இ) அவளுடைய மாமனாரிடமிருந்து அல்லது அவளுடைய தந்தையிடமிருந்து அல்லது அவர்கள் இருவருடைய சொத்திலிருந்து

viii) அவருடைய மகனின் விதவை அல்லது முன்னால் இறந்து விட்ட மகனின் விதவை, அவள் மறு திருமணம் செய்யாதவரை.

அவள் தன் கணவனுடைய சொத்திலிருந்து ஜீவனாம்சம் பெறமுடியாமல் இருந்து, அல்லது அவளுடைய மகன் இருந்தால் அவனிடமிருந்து அல்லது அவனுடைய சொத்திலிருந்து பேரனின் விதவையைப் பொறுத்து, மாமனாரின் சொத்திலிருந்து;

ix) அவனுடைய உரிய வயது வராத முறையற்ற திருமணத்தில் பிறந்த குழந்தை, அவன் உரிய வயது வராத நிலையிலுள்ளவரை;

x) அவனின் திருமணமாகாத, முறையற்ற திருமணத்தில் பிறந்த மகள், அவள் திருமணமாகாமல் இருக்கும் வரை.

*(154)*

***131. தங்களைச் சார்ந்துள்ளவர்களைப் பாதுகாக்க வாரிசுகளின் கடமைக்குள்ள வரம்பு:*** *சார்ந்துள்ள ஒருவர், உயில் வழியோ அல்லது உயில் வழி அல்லாத முறையிலோ இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபின் ஓர் இந்துவின் சொத்தில் எந்த ஒரு பாகத்தையும் பெறவில்லை என்றால் உயில்வழிமுறையில் பெற்ற சொத்து, இந்தப் பகுதியின் கீழ் அவருக்கோ அல்லது அவளுக்கோ அளிக்கப்பட்டிருக்கக் கூடிய ஜீவனாம்சத்தைவிட சார்ந்துள்ளவர் குறைவாகப் பெற்றால்,*

*அவன் அல்லது அவள், இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ளவைகளுக்கு உட்பட்டு சொத்தை எடுத்துக் கொண்டவர்களிடமிருந்து ஜீவனாம்சம் பெற உரிமையுண்டு.*

*ஒவ்வொரு வாரிசுகளின் கடமை அவன் அல்லது அவள் பெற்ற சொத்தின் அளவிற்கு ஏற்ற முறையில் அமையும்.*

*தானே சார்ந்துள்ளவராக இருக்கும் அவனோ அல்லது அவளோ மற்ற யாருக்கும் தங்கள் பங்கை அளிக்க வேண்டிய அவசியமில்லை. அவனோ, அவளோ, மற்றவர்களுக்கு பங்களிப்பு அளிப்பதன் காரணமாக அவர்களுடைய பங்கு குறைந்துவிடும் போது அவர்களுக்குக் கிடைக்கும் ஜீவனாம்சம் குறைந்துவிடும்,*

*(155)*

## *ஜீவனாம்சத் தொகை*

***132. ஜீவனாம்சத் தொகை:*** *1) மனைவி, குழந்தைகள் அல்லது வயதான பெற்றோர்களுக்கு எந்த அளவிற்கு ஜீவனாம்சத் தொகை கொடுக்க வேண்டும் என்பதை இந்தப் பகுதியின்படி முடிவு செய்வதற்கு முன் பின்கண்டவற்றைக் கவனத்தில் கொள்ள வேண்டும்:-*

*அ) அந்த நபர்களின் வாழ்க்கை முறை மற்றும் அந்தஸ்து;*

*ஆ) ஜீவனாம்சம் கேட்கும் நபர்களின் நியாயமான தேவைகள்;*

*இ) தந்தையிடமிருந்து பிரிந்து வாழ்ந்தால், அவன் அல்லது அவள் அவ்வாறு பிரிந்து வாழ்வதற்குத் தகுந்த காரணங்கள் இருக்கின்றனவா;*

*ஈ) ஜீவனாம்சம் கோரும் நபரின் சொத்து மதிப்பு, அதிலிருந்து வரக்கூடிய வருமானம், ஜீவனாம்சம் கோருபவரின் சொந்த வருமானம், அல்லது மற்ற துறைகளிலிருந்து கிடைக்கும் வருமானம்;*

உ) இந்தப் பகுதியின்படி எத்தனை நபர் ஜீவனாம்சம் பெற தகுதியுள்ளவர்கள்.

2) இந்தப் பகுதியின்படி என்ன தொகை ஜீவனாம்சமாக கொடுக்கலாம் என்பதை முடிவு செய்ய, கீழ்க்காணுபவற்றை கவனத்தில் கொள்ள வேண்டும்:-

அ) இறந்தவருடைய கடனைக் கொடுத்த பிறகு, அவர் சொத்தின் நிகர மதிப்பு;

ஆ) சார்ந்துள்ளவர்களுக்கு, இறந்தவரின் உயிலில் செய்யப் பட்டுள்ள ஏற்பாடுகள்;

இ) இறந்தவரின் வாழ்க்கை நிலை மற்றும் அந்தஸ்து, மற்றும் சார்ந்துள்ளவரின் வாழ்க்கை நிலை மற்றும் அந்தஸ்து;

ஈ) அவர்களுக்கிடையே உள்ள தலைமுறை உறவுமுறை;

உ) சார்ந்துள்ளவரின் நியாயமான தேவைகள்;

ஊ) இறந்தவர் மற்றும் சார்ந்துள்ளவரின் முற்கால உறவு முறை;

எ) அவன் அல்லது அவளின் சொத்து மதிப்பு, அதிலிருந்து வரக்கூடிய வருமானம்; அவன் அல்லது அவளின் சொந்த வருமானங்கள் அல்லது மற்ற துறை வருமானங்கள்;

ஏ) இந்தப் பகுதியின் கீழ் ஜீவனாம்சம் பெற தகுதியுள்ள சார்ந்துள்ளவர்களின் எண்ணிக்கை;

ஐ) விதவையாக இருந்தால் அவளுடைய நடத்தை.

(156)

**133. எவ்வளவு தொகை ஜீவனாம்சமாக அளிப்பது என்பது நீதிமன்றத்தின் விருப்புரிமையைப் பொறுத்தது:** 1) பிரிவு 132 உட்பிரிவு (1) அல்லது உட்பிரிவு (2) ஆகியவற்றில் சொல்லப்பட்டுள்ளவைகளில் எது பொருந்துமோ அதைக் கருத்தில் கொண்டு, இந்தப் பாகத்தின் கீழ் ஜீவனாம்சம் ஏதாவது கொடுக்க வேண்டுமா, அப்படி கொடுக்க வேண்டும் என்றால் எவ்வளவு கொடுக்க வேண்டும் என்பதை நீதிமன்றம் முடிவு செய்ய வேண்டும்.

2) திருமணமாகாதப் பெண்ணிற்கு அளிக்கப்படும் தொகை, இறந்தவர் உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அவளுக்கு என்ன கிடைத்திருக்குமோ அதில் பாதி அளவாக இருக்கும்.

(157)

**134. சூழ்நிலை மாற்றங்களுக்கு ஏற்ப ஜீவனாம்சத் தொகையின் அளவு மாற்றப்படலாம்:-** இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்போ பின்போ, நீதிமன்றத் தீர்ப்பால் நிர்ணயிக்கப்பட்ட ஜீவனாம்சம் அல்லது ஒப்பந்தத்தால் நிர்ணயிக்கப்பட்ட ஜீவனாம்சம் எதுவாக இருந்தாலும், மாறியுள்ள சூழ்நிலைகளுக்கேற்ப அந்த மாற்றத்தை நியாயப்படுத்துவதாக இருக்க வேண்டும்.

(158)

**135. கடனுக்கு முன்னுரிமை:** இந்தப் பாகத்தில் சொல்லப்பட்டுள்ளவைகளுக்கு உட்பட்டு, எந்த வகையானக் கடனாக இருந்தாலும் சார்ந்துள்ளவர்களின் ஜீவனாம்சக் கோரிக்கையைவிட அதற்கு முன்னுரிமை அளிக்க வேண்டும்.

(159)

**136. சார்ந்துள்ளவர்கள் ஜீவனாம்சம் கோரும்போது** அதை, இறந்தவரின் சொத்திற்கு முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ அதை பொருட்பிணை பொறுப்பாக்க முடியாது. ஆனால் உயில் மூலமாகவோ, நீதிமன்ற உத்தரவினாலோ, அல்லது சார்ந்துள்ளவர் சொத்தின் முழு உரிமையாளர் அல்லது பகுதி உரிமையாளருடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் மூலமாகவோ அல்லது வேறு வகையிலோ அம்மாதிரி பொருட்பிணைப் பொறுப்பு ஏற்படுத்தலாம்.

*(160)*

***137. மூன்றாம் நபர் ஜீவனாம்சம் பெற தகுதியுள்ளபோது சொத்தை மாற்றுவது:*** மூன்றாம் நபர் ஒரு சொத்திலிருந்து ஜீவனாம்சம் பெற உரிமையுள்ளவராக இருக்கும்போது, அந்தச் சொத்து முழுமையாகவோ அல்லது அதன் பகுதியோ மாற்றப்பட்டால், மாற்றம் பெற்றவர் அம்மாதிரியான ஜீவனாம்சத்தைப் பற்றித் தெரிந்திருந்தால், அவருக்கு எதிராக, இந்தத் தொகுப்பு இயற்றப்படாமல் இருந்தால், எந்த அளவிற்கு அந்தச் சொத்திற்கெதிராக கோர முடியுமோ அந்த அளவிற்குக் கோரலாம்.

## பாகம் IX - பலதரப்பட்டவைகள்

***138. விதிமுறைகள் இயற்றும் அதிகாரம் :*** *(1) இந்தத் தொகுப்பின் நோக்கத்தை நிறைவேற்ற மாநில அரசு விதி முறைகள் இயற்றலாம்.*

*2) குறிப்பாக, மேலே சொல்லப்பட்டுள்ள பொதுவான அதிகாரத்திற்குட்பட்டு விதிமுறைகளை நிர்ணயிக்கலாம்.*

i) *தார்மிகத் திருமணங்கள் குறித்து அவற்றின் என்னென்ன விவரங்கள் தார்மிகத் திருமண பதிவு புத்தகத்தில் குறிக்கலாம் என்பதையும், அவற்றை குறிக்கும் முறை மற்றும் சூழ் நிலை ஆகியவற்றை நிர்ணயிக்கலாம்.*

ii) *எந்த இடங்கள் மற்றும் எந்த வகை தார்மிகத் திருமணங் களைப் பற்றிய விவரங்கள் கட்டாயமாக குறிக்கலாம் என்பதை யும் அவ்வாறு குறிக்கத் தவறும்போது அவற்றிற்கான தண்டனையும்.*

iii) *எந்த இடங்களுக்கு திருமணப் பதிவாளர்கள் நியமிக்கப் பட வேண்டும் என்பதையும் அவருடைய கடமை மற்றும் பணிகள்;*

iv) *இந்து தார்மிகத் திருமணப் புத்தகம் மற்றும் இந்து சிவில் திருமண அறிவிப்பு புத்தகம் ஆகியவற்றை என்ன முறையில் வைக்க வேண்டும் என்பதையும் பிரிவு 12-ன் கீழ் திருமண அறிவிப்பு எவ்வாறு வெளியிடப்பட வேண்டும் என்பதையும்;*

v) *பிரிவு 21-ன்படி எந்த முறை மனு அறிவிப்பு செய்ய வேண்டும் என்பதையும்;*

vi) *சிவில் திருமணங்களை நடத்த எவ்வளவு கட்டணம் என்பதையும் திருமண பதிவாளர் செய்யும் மற்ற கடமைகளுக்கு என்ன கட்டணம் என்பதையும்;*

vii) *இந்து தார்மிகத் திருமணப் புத்தகம் இந்து சிவில் திருமண புத்தகம் ஆகியவற்றை பார்வையிடுவதற்கும் அதன் நகல்கள் பெறுவதற்கும் என்ன கட்டணம் என்பதுப்பற்றி*

viii) *பிறப்பு இறப்பு மற்றும் திருமண பதிவாளர் ஜெனரலுக்கு இந்து தார்மிகத் திருமண புத்தகம் மற்றும் இந்து சிவில் திருமண புத்தகம் ஆகியவற்றை என்ன முறையில் எந்த இடை வெளியில் அனுப்ப வேண்டும் என்பதையும்*

ix) பிரிவு 24-A-ன்படி எந்த நபருக்கு, என்ன முறையில் எந்த அதிகாரிக்கு அறிவிப்புக் கொடுக்க வேண்டும் என்பது பற்றி;

x) தத்து எடுப்பதன் மனுவில் குறிக்க வேண்டிய தகவல்கள்;

xi) தத்து எடுப்பதைக் குறிக்கக் கட்டணம் எவ்வளவு;

xii) எந்த முறையில் தத்து எடுக்கும் புத்தகம் வைக்கப்பட வேண்டும்;

xiii) தத்து எடுப்பு புத்தகத்தில் உள்ள தகவல்களை எந்த முறையில் அங்கீகரிப்பது.

***139. திருத்தங்களும், சட்ட நீக்கமும்:*** *முதல் அட்டவணையில் 3-வது பத்தியில் சொல்லியுள்ள சட்டங்கள், 4-வது பத்தியில் சொல்லியுள்ள அளவிற்கு திருத்தப்படும். இரண்டாவது அட்டவணையின் 3-வது பத்தியில் சொல்லியுள்ள சட்டங்கள் அதன் 4-வது பத்தியில் சொல்லியுள்ள அளவிற்கு சட்ட நீக்கம் செய்யப்படும்.*

(பொறுக்குக் குழுவிற்கு பரிந்துரைத்தபடி)

A

மசோதா

***(இந்து சட்டத்தின் சில பிரிவுகளை மாற்றி அமைக்கவும், தொகுத்து அளிக்கவுமான அறிமுகப்படுத்தவுமான மசோதா.***

இந்தியாவின் பல பகுதிகளிலுள்ள இந்து சட்டத்தின் சில பிரிவுகளை மாற்றி அமைக்க வேண்டியதும், சிலவற்றை தொகுக்க வேண்டியதும் அவசியம் எனக் கருதப்பட்டு :

கீழ்க்காணும் முறையில் சட்டமாக்கப்படுகிறது:

**பகுதி I முதல் நிலை**

**1. தலைப்பு, அமுல் படுத்தப்பட உள்ள இடம், ஆரம்பம் -**

*(1) இந்தச் சட்டம் இந்து சட்டத் தொகுப்பு - 1948 - என்று அழைக்கப்படும்.* ***பகுதி 1, பிரிவு 1, பக்கம் 1***

*(2) இந்தச் சட்டத் தொகுப்பு இந்தியாவின் எல்லா மாகாணங்களுக்கும் பொருந்தும்.*

*(3) இது 1951-வது வருடம் ஜனவரி முதல் தேதி முதல் அமுலுக்கு வரும்.*

**2. இந்தத் தொகுப்பின் அமுல்** - *(1) இந்தத் தொகுப்பு கீழ்க்கண்டவர்களுக்கு அமுல் படுத்தப்படும்:* *பகுதி 1 பிரிவு 2 பக்கம் 1*

*அ) வீர சைவர்கள், லிங்காயத்துகள், பிரம்மோக்கள், பிரார்த்தனாக்கள், ஆர்ய சமாஜிகள் உட்பட இந்து மதத்தின் எந்தப் பிரிவையும் சேர்ந்தவர்கள்;*

*ஆ) புத்த, ஜைன மற்றும் சீக்கிய மதத்தைச் சார்ந்தவர்;*

*இ) i) இந்தப் பிரிவின்படி இந்துக்கள் என்று கருதப் படக்கூடிய பெற்றோர்களுக்குச் சட்டரீதியாகவோ அல்லது சட்டத்திற்குப் புறம்பாகவோ பிறந்த குழந்தை;*

*ii) பெற்றோரில் ஒருவர் இந்துவாக இருந்து, அவர்களுக்குச் சட்ட ரீதியாகவோ, சட்டத்திற்குப் புரம்பாகவோ பிறக்கும் குழந்தை; ஆனால் அந்தக் குழந்தை அவர்கள் சார்ந்துள்ள குழு, குடும்ப, சமூக வழக்கப்படி வளர்க்கப்பட்டதாக இருக்க வேண்டும்.*

*ஈ) இந்து மதத்திற்கு மத மாற்றம் செய்துக் கொண்ட நபர்,*

*2) முஸ்லீம், கிருத்துவர், பார்சி அல்லது யூத மதத்தைச் சேராத மற்ற எவருக்கும் இது பொருந்தும்;*

*பகுதி 1 பிரிவு 2 பக்கம் 1*

*ஆனால் இந்தத் தொகுப்பு ஏற்பட்டிருக்கவில்லை என்றால் இங்கு குறிப்பிடப்பட்டிருக்கும் எந்த ஒரு விஷயம் சம்பந்தமாகவும் ஒருவர் இந்து சட்டத்துக்கோ அல்லது அதன் எந்த ஒரு பழக்க வழக்கத்துக்கோ, வழக்காறு மரபுக்கோ உள்ளாகி இருக்க மாட்டார் என்னும் பட்சத்தில் அப்போது இவ்விஷயங்கள் சம்பந்தமாக இந்தச் சட்டத் தொகுப்பு அவருக்குப் பொருந்தாது.*

*3) ''இந்து'' என்று இந்த தொகுப்பில் எங்கு சொல்லி இருந்தாலும், மதரீதியில் இந்துவாக இல்லாவிட்டாலும் இந்தத் தொகுப்பின் படி இந்துவாக அவர் கருதப்படுவார்.*

*4) 1872 சிறப்பு திருமணச் சட்டத்தில் என்ன கூறப்பட்டிருந்த போதிலும் இந்தத் தொகுப்பின் பல்வேறு பிரிவுகள், இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பு மேற்படி சட்டத்தின்படி திருமணம் செய்துக் கொண்ட எல்லா இந்துக்களுக்கும் பொருந்தும்.* *பகுதி 1 பிரிவு 6 பக்கம் 2 மற்றும் அட்டவணை 1, பக்கம் 30*

*(2)*

**3. பொருள் வரையறைகள்:** இந்தத் தொகுப்பில் இதற்கு மாறாக சொல்லப்பட்டிருந்தால் தவிர, மற்றும் வேறு சூழ்நிலை இருந்தால் தவிர கீழ்க்காணும் பொருள் கொள்ள வேண்டும்:

*பகுதி - 1*
*பிரிவு - 4 & 5*
*பக்கம் - 2*

(i) ''வழக்காறு'' மற்றும் ''நெடுநாளைய நிலைத்த நடைமுறை'' என்பவை நீண்டகாலமாக எந்த விதத் தடையுமின்றித் தொடர்ந்து பின்பற்றப்பட்டு வரும் முறைகள் எனக் கருதப்படும்; இவை இந்துக்கள் மத்தியில் சில குறிப்பிட்ட குடும்பம் அல்லது குழு, அல்லது சமூகத்தால், தங்களைக் கட்டுப்படுத்தக் கூடியவையாகும்; பின்பற்றப் படுபவையாகும்.

ஆனால் இம்மாதிரியான பழக்கம் பொதுவான விதிமுறைக்கு எதிரானதாகவோ, தர்க்க ரீதியாக ஏற்றுக்கொள்ளக் கூடியதற்கு மாறுபட்டதாகவோ இருக்கக்கூடாது.

மேலும், ஒரு குடும்பத்தினரால் மட்டும் பின்பற்றப்படக் கூடிய வழக்கமாக இருந்தால் அக்குடும்பத்தால் அது கைவிடப்பட்ட ஒன்றாக இருக்கக்கூடாது.

ii) ''மாவட்ட நீதிமன்றம்'' என்றால் பிரதான உரிமை இயல் நீதிமன்றம் என்று பொருள்படும். பிரிவு 44, மற்றும் 49 தவிர்த்து இந்தப் பொருள்படும் பிரிவு உயர்நீதிமன்றத்தின் உரிமையியல் அசல் அதிகார வரம்புக்குட்பட்டதையும் சேர்க்கும்.

*பகுதி - 1*
*பிரிவு - 5(d)*
*பக்கம் - 2*

(iii) ''முழு ரத்த உறவு'' - ''பாதி ரத்த உறவு'' **பகுதி - 5 (e)**

ஒரு பெற்றோருக்கு பிறந்த நபர்கள் முழு ரத்த உறவினர் எனக் கருதப்படுவார்கள். தந்தை ஒருவராக இருந்து தாய் வேறாக இருந்தால் அவர்கள் பாதி ரத்த உறவு எனக் கருதப்படுவார்கள்.

(iv) இரு தகப்பன் வழியாக ஒரே தாயின் வயிற்றில் பிறந்த நபர்கள் கர்ப்ப ரத்த உறவினர்கள் என்று கருதப்படுவார்கள். **பகுதி - 5 (f)**

*பொருள்வரையறை :* இந்தப் பிரிவில் மூதாதையர் என்பது தந்தையையும் பெண் மூதாதையர் என்பது தாயையும் உள்ளடக்கும்.

(V) ''பகுதி'' என்றால் இந்தத் தொகுப்பின் எந்தப் பகுதியையும் குறிக்கும். **பகுதி - 5 (h)**

(vi) ''நிர்ணயிக்கப்பட்டது'' என்றால் இந்தத் தொகுப்பின் கீழ் ஏற்படுத்திய விதிமுறைகளின்படி நிர்ணயிக்கப்பட்டது என்று பொருளாகும்.

(vii) ''உறவினர்'' என்றால் சட்டரீதியான உறவினரைக் குறிக்கும்.

சட்டத்திற்கு புறம்பாக பிறந்த குழந்தைகள் அவர்களுடைய தாய்க்கு உறவினர்களாக கருதப்படுவார்கள். அவர்களுக்கு சட்ட ரீதியாக பிறக்கும் குழந்தைகள் ஒருவருக்கொருவர் உறவினர்களாக கருதப்படுவார்கள். உறவினர்கள், மற்றும் உறவு முறை என்றால் இந்தப் பொருளில் புரிந்துக் கொள்ள வேண்டும்.

(viii) ''மகன்'' என்பது இந்தத் தொகுப்பிற்கு முன்போ பின்போ தத்து எடுத்தவரையும் உள்ளடக்கும். ஆனால் சட்டத்திற்குப் புறம்பாக பிறந்த மகனை உள்ளடக்காது.

பகுதி - 2
பிரிவு - 2 (c)
பக்கம் - 3

(3)

**4. இந்தத் தொகுப்பின் ஒட்டுமொத்த விளைவு:** இந்தத் தொகுப்பில் திட்டவட்டமாக வேறுவிதமாகக் குறிப்பிடப்பட்டிருந்தாலொழிய இந்தத் தொகுப்பு தொடங்குவதற்கு முன்னர் அதில் இடம் பெற்றிருக்கும் எந்த விஷயங்கள் சம்பந்தமாகவும் நடைமுறையிலிருந்து வரும் இந்து சட்டத்தையோ, பழக்க வழக்கத்தையோ, வழக்காறையோ பற்றிய எந்த வாசகமும், விதியும், பொருள் விளக்கமும் செயலிழந்துவிடும்.

**பகுதி - 1**
**பிரிவு - 3**
**பக்கம் - 1**

*(4)*

## பாகம் II - திருமணமும் மணவிலக்கும்

### அத்தியாயம் 1

*திருமணம்*

பகுதி VI
பிரிவு 1
பக்கம் 14

**5. விளக்கம் :** இந்த பாகத்தில், பொருளில் அல்லது சந்தர்ப்பத்தில் பொருந்தாதது ஏதும் இல்லாத நிலையில்:

*அ) i) எந்த நபர் சம்பந்தமாகவும் ''சபிண்டா உறவுமுறை'' யானது மூன்றாவது தலைமுறை (உள்ளிட்டு) வரையிலும் வம்சாவளியில் தாய் வழியாகவும், வம்சாவளியில் தந்தைவழி யாகவும் ஐந்தாவது தலைமுறை (உள்ளிட்டு) விரிவுபடுகிறது. ஒவ்வொருவர் விஷயத்திலும் முதல் தலைமுறை என்று கருதப் படுகிற சம்பந்தப்பட்ட நபரிலிருந்து வம்சாவளி மேல்நோக்கிக் கண்டறியப்படுகிறது;*

*ii) இரண்டு நபர்கள் - அவர்களில் ஒருவர் மற்றொருவரின் சபிண்டா உறவு எல்லைகளுக்குள் ஏறுவரிசையிலான வம்சா வளியைச் சேர்ந்தவராக இருந்தாலும், அல்லது அவர்கள் ஒவ் வொருவர் சம்பந்தமாகவும் சபிண்டா எல்லை வரம்புக்குள் ஒரு பொதுவான ஏறுவரிசை வம்சாவளியைக் கொண்டிருந் தாலும் அவர்கள் ஒருவர் மற்றொருவரின் ''சபிண்டாக்கள்'' ஆவார்.*

*ஆ) ''தடைசெய்யப்பட்ட உறவுமுறையின் எல்லைகள்'' - இரு நபர்கள் - அவர்களில் ஒருவர் மற்றொருவரின் ஏறுவரிசை வம் சாவளியினராக இருந்தால், அல்லது மற்றவரின் ஏறுவரிசை அல்லது இறங்குவரிசை வம்சாவளி மனைவி அல்லது கணவ ராக இருந்தால், அல்லது அந்த இருவரும் சகோதரர், சகோதரி யாக இருந்தால், தாயுடன் பிறந்தவர், உடன் பிறந்தார் மகள், உடன்பிறந்தார் சகோதரி, உடன்பிறந்தார் மகன் அல்லது இரு சகோதரர்களின் அல்லது இரு சகோதரிகளின் குழந்தைகளாக இருந்தால் அவர்கள் ''தடை செய்யப்பட்ட உறவுமுறையின் எல்லைகளுக்கு'' உட்பட்டவராகக் கருதப்படுவர்.*

*விளக்கம்: ஷரத்துகள் (அ) மற்றும் (ஆ)வின் நோக்கங் களுக்காக, உறவுமுறையில் பின்வருவன அடங்கும்:-*

i) அரை அல்லது கர்ப்ப ரத்தம் மற்றும் முழு ரத்தம் வகையிலான உறவுமுறை;

ii) தகாத ரத்த உறவு மற்றும் முறையான ரத்த உறவு மூலமான உறவு முறை;

iii) சுவீகாரம் எடுத்துக் கொள்வது மற்றும் ரத்த சம்பந்தமான உறவுமுறை; மற்றும்

இந்த ஷரத்துகளில் உள்ள எல்லா வகையான உறவுமுறையும் அதற்கேற்ப அர்த்தப்படுத்திக்கொள்ளப்படவேண்டும்.

*உதாரணங்கள்*

i) இ, பொதுவான மூதாதையர் 'அ'வின் தந்தையின் தாயின் தந்தையினுடைய தந்தை; மற்றும் 'ஆ'வின் தாயின் தந்தை. 'இ' ஆனவர் 'அ'வின் தந்தை வழியில் 'அ'விலிருந்து ஐந்தாவது தலைமுறையும், 'ஆ'வின் தாய்வழியில் 'ஆ'விலிருந்து மூன்றாவது தலைமுறையுமாகும். 'அ'வும் 'ஆ'வும் ஒருவர் மற்றொருவரின் சபிண்டாக்கள் ஆவர்.

ii) 'அ'வும் 'ஆ'வும் ரத்த சம்பந்தமுள்ள சகோதரனும் சகோதரியுமாவர். அவர்களது சந்ததிகள் சபிண்டா உறவு முறையின் எல்லைகளுக்குள் ஒருவர் மற்றொருவரின் சபிண்டாக்கள் ஆவர். அவர்களது தந்தையின் சந்ததிகளும் அவருடைய மூதாதையரும்கூட 'அ' மற்றும் 'ஆ'வின் சபிண்டாக்களாவார்; அவர்களின் சந்ததிகள் சபிண்டா உறவுமுறையின் எல்லைகளுக்கு உட்பட்டவர்களாவர். ஆனால் 'அ'வின் தாய்வழிப் பாட்டனார், 'ஆ'வின் தாய்வழிப் பாட்டனாரின் சபிண்டாவாக இருக்க வேண்டிய அவசியமில்லை அல்லது முன்னால் கூறப்பட்ட தாய்வழிப் பாட்டனாரின் ஒரு மகனும் பிந்தியவரின் ஒரு மகனும் சபிண்டாவாக இருக்கவேண்டிய அவசியமில்லை

iii) 'அ'வும், 'ஆ'வும் கருப்பிறப்பான சகோதரனும் சகோதரியும் ஆவர். அவர்களின் வழித்தோன்றல்கள் 'சபிண்டா' உறவுமுறையின் எல்லைகளுக்குள் ஒருவர் மற்றொருவரின் 'சபிண்டா' ஆவர். அவர்களது தாயின் வழித்தோன்றல்களும், அவருடைய மூதாதையரும் சபிண்டா உறவுமுறையின் எல்லைகளுக்குள் 'அ' மற்றும் 'ஆ'வினுடைய மற்றும் அவர்களது வழித்தோன்றல்களுடைய சபிண்டாக்களாவர்.

ஆனால் 'அ'வின் தந்தைவழிப் பாட்டனார், 'ஆ'வின் தந்தைவழிப் பாட்டனாரின் சபிண்டாவாக இருக்க வேண்டிய அவசியமில்லை. அதுபோன்றே, முந்திய தந்தைவழிப் பாட்டனாரின் ஒரு மகன் பிந்தியவரின் ஒரு மகனின் சபிண்டாவாக இருக்க வேண்டிய அவசியமில்லை.

(5)

**6. இந்து திருமணமுறைகள் :** இங்கு வேறு விதமாக வெளிப்படையாகக் கூறப்படாத வரையில், இந்துக்களிடையிலான எந்தத் திருமணமும் - அது சமயச் சடங்கு ரீதியிலோ அல்லது இந்தப் பாகத்தின் ஷரத்துகளுக்கு இசைவான முறையில் ஒரு பதிவுத் திருமணமாகவோ நடைபெற்றிருந்தால் அல்லாது அது செல்லத்தக்க திருமணமாக அங்கீகரிக்கப்பட மாட்டாது. பாகம் IV பிரிவு 1 பக்கம் 15

(6)

*சமயச்சடங்கு ரீதியான திருமணம்*

7. சமயச்சடங்கு ரீதியான திருமணம் சம்பந்தப் பட்ட நிபந்தனைகள்:- பாகம் IV பகுதி 3 பக்கம் 15

எந்த இரு இந்துக்களுக்கு இடையிலான திருமணமும் சமயச் சடங்கு ரீதியில் செய்துகொள்ளப்படலாம்; அதற்குக் கீழ்க் கண்ட நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்படவேண்டும். அவை யாவன:

1) திருமணத்தின்போது மணமக்கள் ஒரு கணவனையோ அல்லது மனைவியையோ கொண்டவராக இருக்கக்கூடாது;

2) திருமண சந்தர்ப்பத்தில் மணமக்களில் யாரும் முட்டாளாகவோ அல்லது மனநிலை சரியில்லாதவராகவோ இருக்கக் கூடாது;

3) திருமணத்தின்போது மணமகன் பதினெட்டு வயதைப் பூர்த்தி செய்தவனாகவும், மணமகள் பதினான்கு வயதைப் பூர்த்திசெய்த வளாகவும் இருக்க வேண்டும்;

4) தரப்புகள் தடை செய்யப்பட்ட உறவு முறையின் எல்லை களுக்குள் இருக்கக்கூடாது;

5) மணமக்கள் ஒவ்வொருவரின் மரபோ அல்லது வழக்கமோ அவர்களுக்கு இடையில் ஒரு சமயச் சடங்கு ரீதியிலான திருமணத்தை அனுமதித்தாலொழிய தரப்புகள் ஒருவர் மற்றொரு வரின் *சபிண்டா* அல்ல.

6) மணமகள் தனது பதினாறாவது வயதைப் பூர்த்தி செய்யாத நிலையில், திருமணத்திற்கு அவளுடைய கார்டிய னுடைய சம்மதத்தைப் பெற்றிருக்க வேண்டும்.

(7)

**10. ஒரு பதிவுத் திருமணம் சம்பந்தப்பட்ட நிபந்தனைகள்:-**

*1) திருமணத்தின்போது மணமக்கள் ஏற்கனவே ஒரு கணவனையோ அல்லது மனைவியையோ கொண்டவராக இருக்கக் கூடாது;*

**பாகம் IV**
**பகுதி 7**
**பக்கம் 16**

*2) திருமணத்தின்போது மணமக்கள் யாரும் முட்டாளாகவோ, அல்லது மனநிலை சரியில்லாதவராகவோ இருக்கக்கூடாது;*

*3) திருமணத்தின்போது மணமகன் பதினெட்டு வயதைப் பூர்த்தி செய்தவனாகவும் மணமகள் பதினான்கு வயதைப் பூர்த்தி செய்தவளாகவும் இருக்கவேண்டும்;*

*4) தரப்புகள் தடை செய்யப்பட்ட உறவுமுறையின் எல்லைகளுக்குள் இருக்கக்கூடாது.*

*5) ஒவ்வொரு தரப்பும் இருபத்தியோரு வயதைப் பூர்த்தி செய்யாதவராக இருந்தால், திருமணத்திற்குத் தமது கார்டியனுடைய சம்மதத்தைப் பெற்றிருக்கவேண்டும்;*

*ஒரு விதவையின் விஷயத்தில் அத்தகைய சம்மதம் தேவையில்லை.*

*(8)*

**8. தேவைப்படும் சடங்குகள் :** (1) சமயச் சடங்கு ரீதியான ஒரு திருமணமானது, அத்தகைய திருமணத்திற்கு அத்தியாவசியமான யாராவது ஒரு தரப்பினரின் வழக்கமான சடங்குகள் மற்றும் சம்பிரதாயங்களுக்கு ஏற்ப நடைபெற்றாலொழிய, நிறைவு பெற்றதாகாது, தரப்பினரைக் கட்டுப்படுத்தாது. பாகம் IV, பகுதி 4 பக்கம் 15

2) அத்தகைய சடங்குகளிலும் சம்பிரதாயங்களிலும் சப்தபடி உள்ளடங்கியிருக்கும் நிலைமையில் (அதாவது, புனித அக்னியின் முன்னால், மணமகனும் மணமகளும் கூட்டாக ஏழு அடிகளை எடுத்துவைத்தல்) திருமணம் நிறைவு பெற்றதாகிறது, இரு தரப்பினரையும் கட்டுப்படுத்தும்.

3) இந்தப்பகுதியில் என்ன கூறப்பட்டிருந்த போதிலும் சமயச் சடங்கு ரீதியாக நிறைவு செய்யப்பட்ட எந்தத் திருமணமும், அவ்வாறு நிறைவடைந்ததற்குப்பின், யாராவது ஒரு தரப்பின் மரபான சடங்குகள், சம்பிரதாயங்களில் ஏதாவது சரியாக நடைபெறவில்லை என்ற காரணத்தின் பேரில் செல்லாததாகக் கருதப் பட முடியாது.

(9)

**9. சமயச் சடங்கு ரீதியான திருமணங்களைப் பதிவு செய்தல்:-**

1) எந்த சமயச் சடங்கு ரீதியான திருமணத்தின் சான்று பெறும் நோக்கத்திற்காக, மாகாண அரசு, விதிகளின் படி கீழ்வருவனவற்றுக்கு ஏற்பாடு செய்யலாம்:- பாகம் IV பகுதி 6 பக்கம் 15

அ) அத்தகைய திருமணத்தின் விவரங்கள், அரசு பொருத்தமானதெனக் கருதும் முறையிலும், சூழ்நிலைமைகளிலும், இந்த நோக்கத்திற்காக வைக்கப்பட்டுள்ள இந்து சமயச் சடங்கு ரீதியிலான திருமணப் பதிவேட்டில் பதிவு செய்யப்பட வேண்டும்; மற்றும்

ஆ) இத்தகைய பதிவுகள் கட்டாயமாகும்; விதிகளில் குறிப்பிட்டுக் கூறப்பட்டுள்ள வகைகளில் அல்லது அத்தகைய பிரதேசங்களில் அவை செய்யப்பட வேண்டும்.

2) துணைப் பிரிவு (1)ன் கீழ் எந்த விதிகளையும் உருவாக்குவதில், மாகாண அரசு, அந்த விதிகள் மீறப்பட்டால், அதற்கு அபராத தண்டனை விதிக்கப்படுவதற்கு வகை செய்யலாம்; அது நூறு ரூபாய் வரையிலும் விரிவுபடலாம்.

(10)

**11. திருமணப் பதிவாளர்கள்:** மாகாண அரசு, இந்துத் திருமணங்களின் பதிவாளர்களாக ஒருவர், அல்லது அதற்கு அதிகமானவர்களை நியமிக்கக் கூடும்; இந்த பாகத்தில், ''பதிவாளர்கள்'' என்று அவர்கள் குறிப்பிடப்படுவார்கள்; மாகாணத்திற்கு அல்லது அதனுடைய எந்தப் பகுதிக்கோ, பிரதேசத்திற்கோ அவர்கள் நியமிக்கப்படுவார்கள். அத்தகைய பதிவாளர் நியமிக்கப்படும் பிரதேசம் அவருடைய மாவட்டம் என்று அழைக்கப்படும்.

*பாகம் IV பகுதி 8, பக்கம் 16*

*(11)*

**12. திருமணத்தைப்பற்றிப் பதிவாளருக்கு அறிவிப்புக் கொடுத்தல் :** இந்த பாகத்தின் கீழ் ஒரு பதிவுத் திருமணம் நடத்தப்படுவதற்கு எண்ணப் பட்டிருந்தால், திருமணத்தின் தரப்புகள், மூன்றாவது அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள படிவத்தில் மாவட்டப் பதிவாளருக்கு எழுத்து மூலமாக அறிவிப்புக் கொடுக்க வேண்டும்; அதில் குறைந்தபட்சம் திருமணத்தின் ஒரு தரப்பினர், அத்தகைய அறிவிப்புக் கொடுப்பதற்கு முப்பது நாட்களுக்குக் குறையாமல் அந்த இடத்தில் வசித்திருக்க வேண்டும்.

*பாகம் IV பகுதி 9, பக்கம் 16*

*(12)*

பாகம் IV
பிரிவு 10
பக்கம் 16

**13. திருமண அறிவிப்புப் புத்தகமும், வெளியீடும்:-** 1) 12-வது பிரிவின் கீழ் கொடுக்கப் பட்டுள்ள எல்லா அறிவிப்புகளையும் அவருடைய அலுவலகத்தின் ஆவணங்களோடுகூட பதிவாளர் வைத்திருக்க வேண்டும்; மற்றும் அத்தகைய அறிவிப்பு ஒவ்வொன்றின் ஓர் உண்மையான நகலையும், அந்த நோக்கத்திற்காக மாநில அரசினால் அவருக்குக் கொடுக்கப்பட்டுள்ள நோட்டுப் புத்தகத்தில் பதிவு செய்து வைத்திருக்க வேண்டும். அந்தப் புத்தகத்திற்கு ''இந்து சிவில் திருமண அறிவிப்புப் புத்தகம்'' என்று பெயர்;அந்தப் புத்தகம் எல்லா நியாயமான சமயங்களிலும், அதை ஆய்வு செய்ய விருப்பமுள்ள ஒவ்வொரு நபருக்கும், கட்டணமின்றி, ஆய்வு செய்வதற்குத் திறந்திருக்க வேண்டும்.

2) பதிவாளர் அத்தகைய அறிவிப்பு ஒவ்வொன்றையும் நிர்ணயிக்கப்பட்ட முறையில் வெளியிடவும் வேண்டும்.

(13)

பாகம் IV
பிரிவு 10
பக்கம் 16

**14. திருமணத்திற்கு ஆட்சேபம் :** (1)செய்து கொள்ளப்படவிருக்கும் ஒரு திருமணத்திற்கு, 12-வது பிரிவின் கீழ் கொடுக்கப்பட்டுள்ள அறிவிப்புத் தேதிக்குப் பின் முப்பது நாட்கள் கழிந்ததற்குப் பின்னர், துணைப் பிரிவு (2)ன் கீழ் ஆட்சேபனை தெரிவிக்கப் பட்டிருந்தாலொழிய, அந்தத் திருமணம் நடத்தப்படலாம்.

2) எந்த நபரும், செய்துகொள்ளப்படவிருக்கும் திருமணத் திற்கான அறிவிப்புக் கொடுத்த தேதியிலிருந்து முப்பது நாட் களுக்குள், 10-வது பிரிவின் (1), (2), (3), (4) மற்றும் (5)-வது ஷரத்து களில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகளில் ஒன்றையோ, அல்லது அதிகமானவற்றையோ அது மீறுகிறது என்ற காரணத்தின் பேரில் ஆட்சேபிக்கலாம்.

3) செய்யப்பட்ட ஆட்சேபத்தின் தன்மையைப் பதிவாளர், இந்து சிவில் திருமண அறிவிப்புப் புத்தகத்தில் எழுத்து மூலம் பதிவு செய்யவேண்டும், தேவைப்பட்டால், அவர் ஆட்சேபம் தெரி விக்கும் நபருக்கு அதை வாசித்துக் காட்டி, விளக்கி, அவருடைய கையெ ழுத்தைப் பெற வேண்டும், அல்லது அவருடைய சார்பில் வருகின்ற நபரின் கையெழுத்தைப் பெற வேண்டும்.

**15. ஆட்சேபனை கிடைக்கப்பெற்றதும் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறை :-**

பாகம் IV
பிரிவு 12
பக்கம் 17

(1) நடத்தப்படவுள்ள ஒரு திருமணத்திற்கு, 14 வது பிரிவின் கீழ் ஓர் ஆட்சேபனை செய்யப்பட்டால், அந்த ஆட்சேபனை கிடைக்கப் பெற்றதிலிருந்து முப்பது நாட்கள் முடிவடைகின்ற வரையில், அந்தத் திருமணம் நடைபெறுவதற்குப் பதிவாளர் அனுமதிக்கக்கூடாது. தகுதியான அதிகார எல்லை வரம்புள்ள நீதிமன்றம் அந்த சமயத்தில் திறந்திருந்தாலும், அல்லது, அத்தகைய நீதிமன்றம் எதுவும் அந்த சமயத்தில் திறக்கப் படாமலிருந்தாலும், அத்தகைய நீதிமன்றம் திறக்கப்பட்டதிலிருந்து முப்பது நாட்கள் கழியும்வரையிலும் அந்தத் திருமணம் நடை பெறுவதற்குப் பதிவாளர் அனுமதிக்கக்கூடாது.

2) நடத்தப்படவுள்ள திருமணத்தை ஆட்சேபிக்கும் நபர், ஸ்தல அதிகார வரம்புள்ள மாவட்ட நீதிமன்றத்தில் (அல்லது மாகாண அரசினால் அதிகாரமளிக்கப்பட்ட, அத்தகைய அதிகார வரம்புள்ள வேறு எந்த நீதிமன்றத்திலும்)* ஆசிரியர் அந்த உத்தேசத் திருமணம் 10-வது பிரிவின் (1) (2) (3) (4) மற்றும் (5)வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிபந்தனைகளை மீறுகிறதென்று ஓர் அறிக்கை வெளியிடும்படிக் கோரலாம்; அதன்படி அத்தகைய வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ள நீதிமன்றம், அந்த வழக்கு தொடுத்துள்ள நபருக்கு, அத்தகைய வழக்குத் தொடுக்கப் பட்டுள்ளதாக ஒரு சான்றிதழ் கொடுக்கலாம்.

3) துணைப் பிரிவு (2)ல் குறிப்பிடப்பட்டுள்ள சான்றிதழ், பதிவாளரிடம், ஆட்சேபனையை அவர் பெற்றுக்கொண்ட தேதியிலிருந்து முப்பது நாட்களுக்குள் சமர்ப்பிக்கப்பட்டால், அந்த சமயத்தில் தகுதி வாய்ந்த அதிகார வரம்புள்ள ஒரு நீதிமன்றம் திறந்திருந்தாலும் அல்லது அத்தகைய நீதிமன்றம் எதுவும்திறக்கப்படாமல் இருந்தாலும், அத்தகைய நீதிமன்றம் திறக்கப்பட்ட நாளிலிருந்து முப்பது நாட்களுக்குள், அத்தகைய நீதிமன்றத்தின் முடிவு வழங்கப்படுகின்ற வரையில், அந்தத் திருமணம் நடத்தப்படக் கூடாது. அத்தகைய முடிவுக்கு எதிராக

---

* டாக்டர் அம்பேத்கர் தமது சொந்தப் பிரதியில் ஊதாப் பென்சிலில் பின்வருமாறு எழுதியுள்ளார் - விடப்பட்டது. அவசியமில்லாதது. மாவட்ட நீதிமன்றம் பற்றிய புதிய வரையுறையைக் காண்க

*மேல்முறையீடு செய்வதற்கு சட்டத்தில் அனுமதிக்கப்பட்டுள்ள காலம் முடியும் வரையிலும், அல்லது, அந்த முடிவுக்கு எதிராக ஒரு மேல் முறையீடு இருந்தால், மேல் முறையீட்டு நீதிமன்றத்தின் முடிவு வழங்கப்படும் வரையிலும், அந்தத் திருமணம் நடைபெறுவதற்கு அனுமதிக்கப்படக்கூடாது.*

*4) அத்தகைய சான்றிதழ் துணைப்பிரிவு (3)ல் வரையறுக்கப் பட்டுள்ள முறையிலும், காலகட்டத்தினுள்ளும், அல்லது நீதி மன்றத்தின் முடிவு, அந்தத் திருமணம் 10-வது பிரிவின் (1), (2), (3), (4) மற்றும் 5-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகள் எதையும் மீறாததாக இருந்தால், திருமண அறிவிப்புக் கொடுக்கப் பட்டுள்ள பதிவாளர் அந்தத் திருமணத்தை நடத்தி வைக்கலாம்.*

*5) அந்தத் திருமணம், 10-ஆவது பிரிவின் (1), (2), (3), (4), மற்றும் (5)-வது ஷரத்துகளில் நிர்ணயித்துக் கூறப்பட்டுள்ள நிபந்தனைகள் எதையாவது மீறுவதாக நீதிமன்றத்தின் முடிவு இருந்தால், அந்தத் திருமணம் நடத்தப்படக்கூடாது.*

*(15)*

***16. ஆட்சேபம் நியாயமானதாக இல்லாவிட்டால் அபராதம் விதிப்பதற்கு நீதிமன்றத்திற்கு அதிகாரம் :*** *வழக்குத் தொடுக்கப்பட்டுள்ள நீதிமன்றத்திற்கு, ஆட்சேபம் நியாயமானதல்ல என்றும் உண்மையானதல்ல என்றும் தோன்றினால், ஆட்சேபம் தெரிவித்த நபருக்கு ஆயிரம் ரூபாய் வரையில் அபராதம் விதித்து, அதை அல்லது அதன் ஒரு பகுதியை உத்தேசத் திருமண தம்பதிகளுக்கு வழங்கலாம்.*

*பாகம் IV*
*பகுதி 13*
*பக்கம் 17*

*(16)*

***17. மணமக்களும், சாட்சிகளும் கையெழுத்திடும் பிரகடனம்:*** *1) திருமணம் நடத்தப் பெறுவதற்கு முன்னால், மணமக்களும் மூன்று சாட்சிகளும் பதிவாளரின் முன்னிலையில் நான்காவது அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள பிரகடனத்தில்*

*பாகம் IV*
*பகுதி 14*
*பக்கம் 17*

கையெழுத்திட வேண்டும். மணமக்களில் யாரும் 21-வயதைப் பூர்த்தி செய்யவில்லை என்றால் அந்தப் பிரகடனத்தில் (விதவை மணமகளாக இருந்தால் அன்று) அவர்களுடைய பாதுகாவலரும் (கார்டியன்) கையெழுத்திட வேண்டும்.

2) துணைப் பிரிவு (1)ன் கீழ் செய்யப்படும் ஒவ்வொரு பிரகடனத்திலும் பதிவாளர் எதிர்-கையெழுத்துப் போடவேண்டும்.

*(17)*

*(18)*

**18. திருமணம் நடைபெறும் இடமும் முறையும் :** 1) திருமணம் கீழ்வரும் இடங்களில் முறைப்படி நடைபெறலாம்:

பாகம் IV
பகுதி 15
பக்கம் 17

அ) பதிவாளரின் அலுவலகத்தில், அல்லது,

ஆ) பதிவாளரின் அலுவலகத்திலிருந்து நியாயமான அளவு தூரத்தில், இருதரப்பினரின் விருப்பத்திற்கேற்ப வேறு இடத்தில், நிர்ணயிக்கப்படும் நிபந்தனைகளின் பேரிலும், நிர்ணயிக்கப் படும் கூடுதல் கட்டணம் செலுத்தப்படுவதன் பேரிலும் நடை பெறலாம்.

2) திருமணம் எந்த முறையிலும் நடைபெறலாம்: ஆனால், பதிவாளரின் முன்னிலையிலும், மூன்று சாட்சிகளின் முன்னிலை யிலும் மணமகனும், மணமகளும் ஒருவருக்கொருவர் நான் (அ) உங்களை (ஆ) என்னுடைய சட்டப்படியான மனைவியாக (அல்லது கணவனாக) ஏற்றுக் கொள்கிறேன் என்று கூறினால்தான் திருமணம் நிறைவுபெறும், இருதரப்பினரையும் கட்டுப்படுத்தும்.

3) திருமணம் பதிவாளர் மற்றும் மூன்று சாட்சிகளின் முன்னிலையில் நடைபெறவேண்டும்.

*(18)*

பாகம் IV
பகுதி 17
பக்கம் 18

***19. திருமணச் சான்றிதழ்*** - *(1) திருமணம் நடத்தப்பட்டவுடனே, பதிவாளர், ஆறாவது அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள படிவத்தில் அந்தத் திருமணம் சம்பந்தமான ஒரு சான்றிதழை எழுதி, அவரால் அதற்காக வைக்கப்பட்டுள்ள புத்தகத்தில் அதைச் சேர்க்க வேண்டும்; அந்தப் புத்தகத்திற்கு ''இந்து சிவில் திருமண சான்றிதழ் புத்தகம்'' என்று பெயர். அந்த சான்றிதழில் மணமக்களும், மூன்று சாட்சிகளும் கையெழுத்திட வேண்டும்.*

*2) இந்து சிவில் திருமண சான்றிதழ் புத்தகத்தில் பதிவாளர் சான்றிதழைப் பதிவு செய்ததும், அந்த சான்றிதழ், ஒரு சிவில் திருமணம் நடத்தப்பட்டது என்ற உண்மைக்கு முடிவான சாட்சியமாகக் கருதப்பட வேண்டும். திருமணத்திற்கு சாட்சிகளின் கையெழுத்துக்கள் முதலிய எல்லா சம்பிரதாயங்களும் கடைப் பிடிக்கப்பட வேண்டும்.*

*(19)*

புதிது

***20. அறிவிப்புக் கொடுத்தபின் மூன்று மாதங்களுக்குள் திருமணம் நடத்தப்படாவிட்டால், புதிய அறிவிப்பு தேவை*** - *பிரிவு 12-ன்படி, பதிவாளருக்கு அறிவிப்புக் கொடுத்ததிலிருந்து மூன்று மாதங்களுக்குள் ஒரு திருமணம் நடத்தப்படாவிட்டால், அல்லது உத்தேசத் திருமணத்தை ஆட்சேபிக்கும் நபர், தகுதியுள்ள அதிகார வரம்புள்ள ஒரு நீதிமன்றத்தில் ஒரு வழக்குப் பதிவு செய்து, அந்த நீதிமன்றத் தின் முடிவும் (தீர்ப்பும்) வழங்கப்பட்டிருந்தால், அத்தகைய முடிவுக்கு எதிராக மேல் முறையீடு செய்வதற்கு சட்டப்படி அனுமதிக்கப் பட்டுள்ள மூன்று மாத காலம் முடிவடைந்து விட்டால், அல்லது, அத்தகைய முடிவுக்கு எதிராக மேல் முறையீடு செய்யப்பட்டிருந்தால், அப்பீல் நீதிமன்றத்தின் முடிவு வழங்கப்பட்டதிலிருந்து மூன்று மாதங்களுக்குள், திருமண அறிவிப்பும், அது சம்பந்தமான எல்லா நடைமுறைகளும் (விசாரணைகளும்) காலாவதியாகிவிட்டதாகக்*

கருதப்பட வேண்டும்; மேலும், இந்த அத்தியாயத்தில் வரையறுத்துக் கூறப்பட்டுள்ள முறையில் ஒரு புதிய அறிவிப்புக் கொடுக்கப்படுகின்ற வரையில் திருமணம் நடத்தப்படுவதற்கு எந்தப் பதிவாளரும் அனுமதிக்கக் கூடாது.

*(20)*

**21. சமயச் சடங்கு ரீதியான சில திருமணங்களைப் பதிவு செய்வதற்கான நடைமுறை :** 1) எந்த இரு இந்துக்களாவது சமயச் சடங்கு ரீதியிலான திருமணத்தைச் செய்துகொண்டுள்ள நிலையில் :- பாகம் IV பிரிவு 18 பக்கம் 18

அ) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால், இந்து சட்டத்தின் எந்த வாசகம், விதி, அல்லது வியாக்கியானத்தின் ஷரத்துகளின் காரணமாக, அல்லது திருமணத்தின் போது, அமலிலிருந்த எந்த வழக்கம் அல்லது மரபின் காரணமாக அத்தகைய எந்தத் திருமணத்தின் செல்லத்தக்க தன்மை குறித்து ஐயப்பாடுகள் தெரிவிக்கப்பட்டால், அல்லது

ஆ) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வந்ததற்குப்பின்னர், ஏழாவது பிரிவின் (5)வது ஷரத்தில் அடங்கியுள்ள விதிகளுக்கு முரணானதாக இருந்ததன் விளைவாக, அத்தகைய திருமணம் செல்லத்தகாததாயின்,

அத்தகைய நபர்கள், அவர்களில் யாராவது ஒருவர், மனுக் கொடுப்பதற்கு முன்னால், முப்பது நாட்களுக்குக் குறைவில்லாமல் வசித்துள்ள மாவட்டத்தின் பதிவாளருக்கு, பதிவாளரின் முன்னால் செய்துகொள்ளப்பட்ட ஒரு சிவில் திருமணம் என்பதைப் போன்று தங்களது திருமணத்தைப் பதிவு செய்யும்படி விண்ணப்பித்துக் கொள்ளலாம்.

2) அத்தகைய விண்ணப்பம் எதுவும் பெறப்பட்டதன் பேரில், வரையறுக்கப்பட்ட முறையில் பதிவாளர் அது பற்றி பகிரங்கமாக அறிவிப்புச் செய்யவேண்டும்; பின்னர், ஆட்சேபனைக்கு முப்பது நாட்கள் அவகாசம் கொடுத்தபின்னரும், அந்தக் கால அவகாசத்தினுள் ஏதாவது ஆட்சேபனைகள் வந்தால் அவற்றை விசாரித்த பின்னர் பதிவாளர் கீழ்வருவது பற்றி அவர் திருப்தியடைந்தால், அதாவது:

அ) விண்ணப்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ள தேதியில் திருமணச் சடங்கு நடைபெற்றது; அது முதலாக மணமக்கள் கணவனும் மனைவியுமாக ஒன்றாக வாழ்ந்து வருகிறார்கள்;

ஆ) பத்தாவது பிரிவின் (1) முதல் (4) வரையிலான ஷரத்துகளிலுள்ள நிபந்தனைகள், விண்ணப்பத் தேதியில் மணமக்களிடையில் பூர்த்தி செய்யப்பட்டுள்ளன; மற்றும் (இ) திருமணத்தின் போது மணமகள் விதவையாக இல்லாத நிலையில், விண்ணப்பத் தேதியில் 21 வயதைப் பூர்த்தி செய்யாததால், திருமணத்தை ஒரு சிவில் திருமணமாகப் பதிவு செய்வதற்கு அவருடைய, அல்லது அவருடைய கார்டியனின் சம்மதம் பெறப்பட்டுள்ளது என்று

பதிவாளர் திருப்தி அடைந்தால், இந்து சமயச் சடங்கு ரீதியிலான திருமணப் பதிவேட்டில் ஆறாவது அட்டவணையில் குறிப்பிடப் பட்டுள்ள படிவத்தில் திருமணத்தின் ஒரு சான்றிதழை அவர் பதிவு செய்ய வேண்டும்: அந்த சான்றிதழில் மணமக்களும், மூன்று சாட்சிகளும் கூடக் கையெழுத்திட வேண்டும்.

3) துணைப் பிரிவு (2)ல் குறிப்பிட்டுள்ளபடி அத்தகைய எந்த சான்றிதழும் பதிவு செய்யப்பட்டதன் பேரில், திருமணம் எல்லா நோக்கங்களுக்கும் செல்லத்தக்கதாகக் கருதப்பட வேண்டும்; மற்றும் சமயச் சடங்கு ரீதியிலான திருமணம் செய்துகொண்ட பின்னர் மணமக்களுக்குப் பிறந்த எல்லாக் குழந்தைகளும் (அவர்களின் பெயர்கள் சான்றிதழிலும் இந்து சமயச் சடங்கு முறைப்படியான திருமணப் பதிவேட்டிலும் எழுதப்படவேண்டும்) எல்லா அம்சங்களிலும் தமது பெற்றோர்களின் சட்டப்படியான குழந்தைகளாகக் கருதப்படுவர், எப்போதும் அவ்வாறே கருதப் படுவர்.

4) அத்தகைய திருமணத்தின் எந்தத் தரப்பும், இந்தப் பிரிவின் கீழ் வெளியிடப்படும் எந்த உத்தரவினாலும் பாதிக்கப் பட்டால், அந்த உத்தரவுக்கு எதிராக, மாவட்ட நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்யலாம்; அதன் பேரில் பதிவாளர் தமது அதிகார எல்லையின் ஸ்தல வரம்புக்குள் செயல்படுகிறார்; அத்தகைய மேல் முறையீட்டின் பேரில் மாவட்ட நீதிமன்றத்தின் முடிவு இறுதியானதாகும்.

(21)

**22. திருமண ஆவணங்கள் ஆய்வு முதலியவற்றுக்குத் திறந்திருத்தல்:** இந்து சமயச் சடங்கு ரீதியிலான திருமணப்பதிவேடும், இந்து சிவில் திருமண சான்றிதழ் புத்தகமும் எல்லா நியாயமான சமயங்களிலும் ஆய்வுக்குத் திறந்திருக்க வேண்டும்; மற்றும் அவற்றில் அடங்கியுள்ள விவரங்களின் மெய்மைக்குச் சான்றாக அவை அனுமதிக்கப்பட வேண்டும்.

பாகம் IV
பிரிவு 19
பக்கம் 18

விண்ணப்பத்தின் பேரிலும், நிர்ணயிக்கப்பட்ட கட்டணத்தைப் பதிவாளருக்குச் செலுத்துவதன் பேரிலும் அவற்றிலிருந்து சான்றளிக்கப் பட்ட பகுதிகள், பதிவாளரால் வழங்கப்பட வேண்டும்.

(22)

**23. திருமண ஆவணங்களில் உள்ள பதிவுகளின் நகல்களைப் பிறப்பு, மரணம் மற்றும் திருமணப் பதிவாளர் - ஜெனரலுக்கு அனுப்பி வைத்தல் :-** பதிவாளர், தனது மாவட்டம் அமைந்துள்ள மாகாணத்தின் பிறப்பு, மரணம் மற்றும் திருமணங்களின்பதிவாளர் - ஜெனரலுக்கு, நிர்ணயிக்கப்படும் கால இடைவெளிகளில் - இந்து சமயச் சடங்கு ரீதியிலான திருமணப்பதிவேட்டிலும், இந்து சிவில் திருமணச் சான்றிதழ் புத்தகத்திலும், அத்தகைய கடைசி இடைவெளிக்குப்பின் அவரால் வரையப்பட்ட அனைத்துப் பதிவுகளின் ஓர் உண்மை நகலை, நிர்ணயிக்கப்பட்ட முறையிலும், அவரால் சான்றளித்தும் பதிவாளர் அனுப்ப வேண்டும்.

பாகம் IV
பிரிவு 20
பக்கம் 18

(23)

பாகம் IV
பகுதி 22
பக்கம் 19

*24.* **திருமணத்தில் கார்டியன் முறை :-** *1) (IV)ம் பகுதியின் ஷரத்துகளுக்கு உட்பட்டு, இந்த பாகத்தின் கீழ் திருமணத்தில் கார்டியனின் சம்மதம் எங்கெங்கு தேவைப்படுகிறதோ, அத்தகைய சம்மதம் அளிப்பதற்கு உரிமையுள்ள நபர்கள், கீழ்வரும் வரிசைப்படி வருபவர்களாவர். அதாவது :-*

*1) தந்தை;*

*2) தாய்;*

*3) தந்தைவழிப் பாட்டனார்;*

*4) சொந்த சகோதரர் அல்லது ஒன்றுவிட்ட சகோதரர்; முழுரத்த சம்பந்தமுள்ள சகோதரர் விரும்பத்தக்கவர்; முழுரத்த சம்பந்தமுள்ள அல்லது ஒன்றுவிட்ட சகோதரரில் மூத்தவர் விரும்பத்தக்கவர்;*

*5) முழு ரத்த சம்பந்தமுள்ள சிற்றப்பா அல்லது ஒன்று விட்ட சிற்றப்பா ஆகியவர்களில் (4)-வதாகக் கூறப்பட்டுள்ள விரும்பத்தக்கவர் விதிகளின்படி அமையும்;*

*6) தாய்வழிப் பாட்டனார்;*

*7) தாய்வழி மாமா விஷயத்தில், மேலே (4)-வதாகக் குறிப்பிட்டுள்ளவாறு விரும்பத்தக்கவர் விதிகளின் படி அமையும்;*

*8) வேறு எந்த உறவினராவது; தூரத்து உறவினருக்கு மாறாக, மிகவும் நெருக்கமான உறவினர் விரும்பப்படுகிறார்; அதே வழியில் உறவுள்ள உறவினர்களிடையில், மேலே (4)-வதாகக் கூறப்பட்டுள்ளபடி விரும்பத்தக்கவர் பற்றிய விதிகளின்படி அமையும்.*

*விளக்கம் : (8)-வதாகக் கூறப்பட்டுள்ளதன் நோக்கத்திற்கு இரு உறவினர்களில் யார் மிகவும் நெருக்கமானவர் என்பது பாகம் VII-ல் உயில் எழுதி வைக்காமல் இறந்துபோனவரின் சொத்தின் வாரிசுரிமை உடையவர் பற்றிய விதிகளுக்கு ஏற்ப, முதலில் அதைப் பெறக் கூடிய தகுதியுள்ளவர் யார் என்ற அடிப்படையில் தீர்மானிக்கப்படும்.*

*2) இந்தப் பகுதியின் ஷரத்துகளின் கீழ், திருமணத்தில் கார்டியனாக செயல்படுவதற்குத் தகுதியுடையவர் இருபத்தி ஒன்றாவது வயதைப் பூர்த்தி செய்தவராக இருக்க வேண்டும்.*

*3) மேலே கூறப்பட்ட ஷரத்துகளின் கீழ் திருமணத்தில் கார்டியனாக இருப்பதற்குத் தகுதியுடையவர் மறுத்தாலோ அல்லது பிரசன்னமாயில்லாததாலோ இயலாமை அல்லது வேறு காரணத்தினால் செயல்பட முடியாமை அல்லது அவ்வாறு செயல்படுவதற்குப் பொருத்தமில்லாதவர் என்றால், வரிசைப்படி அடுத்துள்ள நபர் கார்டியனாக இருப்பதற்குத் தகுதியுடையவராவார்.*

*4) கார்டியனால் ஏற்பாடு செய்யப்பட்ட உத்தேசத் திருமணத்தை பருவமடையாதவரின் (மைனர்) நலனுக்காகத் தடையாணையின் மூலம் தடை செய்வது அவசியம் என்று நீதிமன்றம் கருதினால், அவ்வாறு தடை செய்வதற்கு அந்த நீதிமன்றத்திற்குள்ள அதிகார வரம்பை இந்த பாகத்திலுள்ள எதுவும் பாதிக்காது.*

*(24)*

**25. இருதார மணமும் அதற்கான தண்டனையும் :** எந்த நபரும் - அவருடைய அல்லது அவளுடைய வாழ்நாளில் - அத்தகைய நபரின் திருமணம், தகுதியான அதிகார வரம்புள்ள ஒரு நீதிமன்றத்தினால் ரத்து செய்யப் படாதவரையில், இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வந்ததற்குப் பின்னர், வேறு திருமணம் செய்து கொண்டால், ஒரு கணவன் அல்லது மனைவி உயிருடன் இருக்கும் காலத்தில் மீண்டும் திருமணம் செய்துகொண்ட குற்றத் திற்காக, 1860-ம் வருட இந்திய தண்டனைச் சட்டத்தின் (1860-ன் XLV) 494, 495-ம் பிரிவுகளில் விதிக்கப்பட்டுள்ள தண்டனைக்கு உள்ளாவார்கள்.

பாகம் V
பகுதி 24
பக்கம் 19

*(26)*

பாகம் IV
பகுதி 22
பக்கம் 18

***26. பொய்யான பிரகடனம் அல்லது சான்றிதழில் கையொப்பமிட்டதற்கு தண்டனை:*** *இந்த பாகத்தின் கீழ் தேவைப்படும் எந்தப் பிரகடனம் அல்லது சான்றிதழை உருவாக்குகின்ற, கையெழுத்திடுகின்ற அல்லது சான்றொப்பம் அளிக்கும் ஒவ்வொரு நபரும் - அது பொய்யானதாக இருந்தால், மற்றும் அது அவருக்குத் தெரிந்திருந்தால், அல்லது அது பொய்யென்று நம்புகிறாரென்றால், அல்லது அது உண்மையென்று நம்பாதவராக இருந்தாலும், 1860-ம் வருட (1860-ன் XLV) இந்திய தண்டனைச் சட்டத்தின் 199-வது பிரிவில் விவரித்துள்ள குற்றம் புரிந்தவராகக் கருதப்பட வேண்டும்.*

*(27)*

**31. மணவாழ்க்கை உரிமைகளை மீட்டெடுப்பதற்கான மனு :** கணவனோ, மனைவியோ நியாயமான காரணமின்றி, ஒருவர் மற்றொருவருடனான தொடர்பிலிருந்து விலகிச் சென்றுவிட்டால், பாதிக்கப்பட்ட நபர், மண வாழ்க்கை உரிமைகளை மீட்டெடுப்பதற்காக மாவட்ட நீதிமன்றத்திற்கு மனுச் செய்து கொள்ளலாம். அத்தகைய மனுவிலுள்ள விவரங்களின் உண்மைத் தன்மை குறித்து நீதிமன்றம் திருப்தியடையும் பட்சத்தில், அந்த மனு அனுமதிக்கப்படக் கூடாதென்பதற்கு எத்தகைய சட்டபூர்வமான காரணமும் இல்லாத நிலையில், நீதிமன்றம் அதற்கேற்ப, மணவாழ்க்கை உரிமைகளை மீட்டு அளிப்பதற்கான ஆணை பிறப்பிக்கலாம். (புதிது)

(28)

**32. மண வாழ்க்கை உரிமைகள் மீட்டு அளிக்கப்பட வேண்டுமென்பதற்கான மனுவுக்கு பதில்:** நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து செல்வதற்கோ, அல்லது திருமணத்தை ரத்து செய்ய வேண்டுமென்பதற்கான ஓர் ஆணைக்கோ ஒரு காரணமாக இருக்க முடியாத, மணவாழ்க்கை உரிமைகளை மீட்டு அளிக்க வேண்டுமென்பதற்கான ஒரு மனுவுக்கு பதிலாக எதையும் கூற முடியாது. (புதிது)

(29)

*நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து செல்லுதல்*

**33. நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து செல்லுதல்:** இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால் அல்லது பின்னால் நடைபெற்ற ஒரு திருமணத்தின் இருதரப்புகளில் ஒருவர், பின்வரும் காரணத்திற்காக, நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து செல்வதற்கான அனுமதி கோரி மாவட்ட நீதிமன்றத்தில் ஒரு மனுக் கொடுக்கலாம். அதாவது:- (பாகம் IV பிரிவு 30 பக்கம் 21)

அ) இரண்டு ஆண்டுகளுக்குக் குறைவில்லாத காலத்திற்கு மனுதாரரைக் கைவிட்டுச் சென்றதற்காக; அல்லது

ஆ) மனுதாரர் மற்றையத் தரப்புடன் வாழ்வதைப் பாதுகாப் பற்றதாகச் செய்யும் கொடுமை செய்த குற்றம் புரிந்ததற்காக;

இ) மனுதாரரிடமிருந்து பெற்றிராத பிறருக்குப் பரப்பக் கூடிய, மனுக் கொடுப்பதற்கு முந்திய ஓராண்டுக்குக் குறைவில்லாத காலத்திற்கு ஒரு பால் வினைநோயினால் பாதிக்கப்பட்டிருந்தால் அல்லது

ஈ) ஒரு கடுமையான தொழுநோயினால் பாதிக்கப்பட்டிருந் தால் அல்லது

உ) திருமணமான நாளிலிருந்து வழக்கமாக மனநிலை சரி யில்லாதவராக இருந்திருந்தால், அல்லது

ஊ) திருமணத்தின்போது ஒழுக்கக் கேடான செயல் புரிந்திருந்தால்.

*விளக்கம் :* இந்தப் பகுதியில் ''கைவிட்டுச் செல்லுதல்'' என்ற சொற்றொடருக்கு (அவற்றின் இலக்கண ரீதியான மாறுபாடு களும் தொடர்பான பிரயோகங்களும் எப்படியிருந்தபோதிலும்) திருமணத்தின் மற்றையத் தரப்பை, நியாயமான காரணமின்றி யும், அத்தகைய தரப்பின் சம்மதமின்றியோ அல்லது அதனுடைய விருப்பத்திற்கு எதிராகவோ கைவிட்டுச் செல்லுதல் என்று பொருள்.

(30)

34. எந்தத் திருமணமும் நீதிமன்றத்தின் உத்திரவில்லாமல் தவிர்க்கப்படக் கூடாது. இந்த பாகத்தில் என்ன கூறப்பட்டிருந்த போதிலும், இந்த சட்டத் தொகுப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன்னாலோ, அல்லது பின்னாலோ செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும், அத்தகைய திருமணம் செல்லத் தகாததாக, அல்லது செல்லத் தகாததாகிவிடக் கூடியதாக இருந்தாலும், கலைக்கப்படு வதற்கான ஒரு மனுவின் மீதோ அல்லது, அந்தத் திருமணத்தின் செல்லத்தக்க தன்மை ஒரு பிரச்சினையாக இருக்கிற வேறு எந்த நீதிமன்ற வழக்கிலோ திருமணம் கலைக்கப்பட்டதாக அறிவிக்கப் பட்டாலொழிய (எந்தத் திருமணமும்) சட்டப்படி ரத்து செய்யப் பட்டதாகக் கருதப்பட முடியாது.

(31)

(32)

**28. செல்லாத திருமணம் :-** 1) இந்த சட்டத்தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால்செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும் பின்வரும் காரணங்களால் செல்லாததாகிவிடும். அதாவது -

பாகம் IV
பகுதி 29
(2) (ii)
பக்கம் 2

அ) அந்தத் திருமணத்தின்போது அமலிலுள்ள எந்த ஒரு சட்டத்தின் விதிகளின் காரணமாக, திருமணத்தின் போது எந்த ஒரு தரப்புக்கும் ஒரு கணவனோ அல்லது மனைவியோ உயிருடன் வாழ்ந்து வருகிறார் என்ற காரணத்தினால் அந்தத் திருமணம் செல்லத்தக்கதல்ல என்றாகிவிடும்; அல்லது,

ஆ) திருமணத்தின்போது தரப்புகள், 5-ம் பிரிவின் (ஆ) ஷரத்தினால் விளக்கியுள்ளபடி தடை செய்யப்பட்ட உறவுமுறை யின் எல்லைகளுக்குள் இருந்தால் அத்திருமணம் செல்லாததாகி விடும்.

அதேசமயத்தில், ஒரு திருமணம், திருமணம் நடைபெற்ற சமயத்தில் அமலிலுள்ள எந்த சட்டத்தின் விதிகளின் கீழ் செல்லத் தக்கதாக இருந்தால், அத்தகைய திருமணம் எதுவும் துணைப் பிரிவு (1)-ன் (ஆ) ஷரத்தின் விதிகளின் கீழ் செல்லாததாகக் கருதப் பட முடியாது.

2) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வந்ததற்குப் பின்னர் செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும் பின்வரும் காரணங்களால் செல்லாததாகிவிடும்: அதாவது

*அ) சமயச் சடங்கு ரீதியில் நடத்தப்பட்ட எந்தத் திருமணமும் பிரிவு 7-ன் (1), (4) மற்றும் (5)-வது ஷரத்துகளில் குறிப்பிட்டுள்ள நிபந்தனைகளை மீறினால் (செல்லாததாகிவிடும்).*

*ஆ) ஒரு சிவில் திருமணமாக நடத்தப்பட்ட எந்தத் திருமணமும் 10-வது பிரிவின் (1) மற்றும் (4)-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகளை மீறினால் அது செல்லாததாகிவிடும்.*

*ஆனால், அதே சமயத்தில், துணைப் பிரிவு (2)-ன் (அ) ஷரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வழக்கில், திருமணம், அதன்பின்னர் எந்த சமயத்திலாவது, அந்தத் திருமணத்தைக் கலைப்பதற்கான மனு எந்த நீதிமன்றத்திலாவது கொடுப்பதற்கு முன்னர், 21-வது பிரிவின் கீழ் ஒரு சிவில் திருமணமாகப் பதிவு செய்து கொள்ளப் பட்டிருந்தால், 7-வது பிரிவின் (5)வது ஷரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனை பொருந்தாது.*

*(33)*

**29. செல்லாததாகக் கூடிய திருமணங்கள் :** 1) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால் செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும், திருமணத்தின்போது திருமணத்தின் எந்தத் தரப்பும் ஒரு முட்டாளாகவோ அல்லது மனநிலை சரியில்லாதவராகவோ இருந்தால் அது செல்லத்தக்கதல்ல.

பாகம் IV
பிரிவு 5
பக்கம் 15

2) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வந்ததற்குப் பின்னர் நடத்தப்பட்ட எந்தத் திருமணமும் பின்வரும் காரணங்களால் செல்லத்தகாததாகும்:

அ) சமயச் சடங்கு ரீதியாக நடத்தப்பட்ட திருமணமாக இருந்து, 7-வது பிரிவின் (2), (3) மற்றும் (6)-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகளில் எதையாவது மீறினால்;

ஆ) ஒரு சிவில் திருமணமாக இருந்து, 10-வது பிரிவின் (2), (3) மற்றும் 5-வது ஷரத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகளில் எதையாவது மீறினால்;

ஆனால், அதேபொழுதில், நிர்ப்பந்தமோ மோசடியோ இருந்தாலன்றி, சமயச் சடங்கு ரீதியில் நடத்தப்பட்ட ஒரு திருமணம், அது நிறைவு அடைந்ததற்குப் பின்னர், திருமணத்திற்கான மணப்பெண்ணின் கார்டியனுடைய சம்மதம் பெறப்படவில்லை அல்லது முன்கூட்டியே பெறப்படவில்லை என்ற காரணத்தினாலேயே செல்லாததாகிவிட்டதாகக் கருத முடியாது அல்லது எப்பொழுதும் செல்லாததாகாது.

3) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னரோ அல்லது வந்ததற்குப் பின்னரோ செய்து கொள்ளப்பட்ட எந்தத் திருமணமும் 30-வது பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள காரணங்களில் எதன் காரணமாகவாவது செல்லத்தகாததாகும்.

4) இந்த பாகத்தின் கீழ் எந்த மனுவாவது சமர்ப்பிப்பதற்குக் கால வரம்பு நிர்ணயிக்கப்பட்டுள்ள நிலையில், அந்தக் கால வரம்புக்குள் எந்த மனுவும் சமர்ப்பிக்கப்படாவிட்டால் அந்தத் திருமணம் செல்லத்தக்கது என்று கருதப்படும், எல்லா நோக்கங்களுக்கும் அது செல்லத்தக்கதாக இருக்கும்.

36. திருமணத்தைக் கலைப்பது : (1) 35-வது பிரிவின் ஷரத்துக்களுக்கு உட்பட்டு, ஒரு திருமணத்தின் எந்தத் தரப்பாவது, ஒரு திருமணத்தை செல்லாததாக்கும் அல்லது செல்லுபடியாகாததாக்கும் எந்தக் காரணங்களின் பேரிலாவது, மாவட்ட நீதிமன்றத்தில் திருமணத்தைக் கலைப்பதற்கான மனு சமர்ப்பிக்கலாம்.

*2) துணைப் பிரிவு (1)ல் கூறப்பட்டுள்ள எதுவும் கீழ் வரும் காரணங்களால் ஒரு நீதிமன்றம் ஆணை பிறப்பிப்பதற்கு அதற்கு அதிகாரமளிக்காது:-*

*i) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னர் செய்து கொள்ளப்பட்ட திருமணம், அந்தத் திருமணம் நடைபெற்ற சமயத்தில் பின்வரும் காரணங்களால் செல்லத்தக்கதாக இருந்தால்:-*

*அ) ஓர் ஆணின் முன்னாள் மனைவி, திருமணத்தின்போது வாழ்ந்து வந்தால், அல்லது*

*ஆ)திருமணத் தரப்புகள், 5-வது பிரிவின் (ஆ) ஷரத்தில் விளக்கியுள்ளபடி தடை செய்யப்பட்ட உறவுமுறையின் எல்லைகளுக்குள் இருந்தால்; ...*

*ii) செல்லத்தகாததாகும் ஒரு திருமணத்தின் விஷயத்தில், இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னரோ அல்லது அமலுக்கு வந்ததற்குப் பின்னரோ, எந்தத் தரப்பாவது திருமணத்தின் போது ஒரு முட்டாளாகவோ அல்லது மனநிலை சரியில்லாதவராகவோ இருந்தால், அல்லது திருமணத்தின்போது எதிர்வாதி ஆண்மையற்றவராக இருந்தால், வழக்கு நடைமுறை தொடுக்கப்படுகின்றவரையிலும் கூட தொடர்ந்து அவ்வாறே இருந்தால் -திருமணம் நடைபெற்றதற்குப் பிறகு மூன்று ஆண்டுகளுக்குள்ளே இத்தகைய திருமணத்தை ரத்து செய்யும்படி மனு கொடுக்கப்பட வேண்டும்; அல்லது*

*iii) செல்லத்தகாததாகும் ஒரு திருமணம் சம்பந்தமாக, இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னதாக, அல்லது அமலுக்கு வந்ததற்குப்பின் செய்து கொள்ளப்பட்ட திருமணமாக இருந்த போதிலும் - மனுதாரரின் சம்மதம் அல்லது மணமகன் அல்லது மணமகளின் கார்டியனின் சம்மதம் தேவையாயிருக்கும்போது, அத்தகைய கார்டியனின் சம்மதம் நிர்ப்பந்தம் மூலமாகவோ அல்லது மோசடியின் மூலமாகவோ பெறப்பட்டிருந்தால், அந்த நிர்ப்பந்தம் செல்லப்படுவது நின்றுபோய், அல்லது அந்த மோசடி கண்டு பிடிக்கப்பட்டதற்கு ஓராண்டுக்குள் திருமணக் கலைப்புக்கான மனு கொடுக்கப்பட்டிருந்தாலொழிய, அத்தகைய மனுவைப் பின்வரும் காரணத்தினால் நீதிமன்றம் நிராகரிக்க வேண்டும் (தள்ளுபடி செய்ய வேண்டும்):*

*அ) மனுதாரர், அவருடைய அல்லது அவளுடைய சுதந்திரமான சம்மதத்துடன் திருமணத்தின் மற்றைய தரப்புடன், நிர்ப்பந்தம் மேற்கொண்டு செயல்படாமல் போன பின்னர், அல்லது மோசடி கண்டு பிடிக்கப்பட்டதற்குப் பின்னர் - நிலைமைக்கு ஏற்ப கணவன் மனைவியாக வாழ்ந்து வந்துள்ளனர்.*

*(34)*

**30. திருமணத்தைக் கலைப்பதற்கான பிற காரணங்கள்**

*பாகம் IV பிரிவுகள் 29 - 30, பக்கம் 2*

இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னரோ, அல்லது அமலுக்கு வந்ததற்குப் பின்னரோ நடத்தப்பட்டுள்ள ஒரு திருமணம், பின்வரும் எந்தக் காரணத்தின் பேரிலாவது கலைக்கப்படலாம். அதாவது;

i) திருமணத்தின் எந்தத் தரப்பாவது, திருமண சமயத்தில் ஆண்மையற்றவராக இருந்தால், மற்றும் வழக்குத் தொடரப்படும் வரையிலும் அது நீடித்திருந்தால்,

ii) கணவர் வேறு ஒரு பெண்ணை வைப்பாட்டியாக வைத்துக் கொண்டிருந்தால், அல்லது மனைவி வேறு எந்த நபரின் வைப்பாட்டியாகி இருந்தால், அல்லது ஒரு விலைமாதின் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தால்;

iii) திருமணத்தின் எந்தத் தரப்பாவது வேறு மதத்திற்கு மாறிச் சென்றதன் மூலம் இந்துவாக இல்லாமற் போய்விட்டால்,

iv) எந்தத் தரப்பாவது குணப்படுத்த முடியாதவாறு மனநிலை சரியில்லாதவராக இருந்து, மனுக் கொடுப்பதற்கு ஐந்தாண்டுகளுக்குக் குறைவில்லாத காலத்திற்குத் தொடர்ந்து சிகிச்சை பெற்று வந்தால்; மற்றும்,

v) எந்தத் தரப்பாவது கடுமையான, மற்றும் குணப்படுத்த முடியாத தொழுநோயால் பாதிக்கப்பட்டிருந்தால்.

*(புதிது)*

**38. திருமணம் கலைக்கப்படுவதற்கான வேறு காரணங்கள்:** இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால் அல்லது அமலுக்கு வந்ததற்குப் பின்னால், நடத்தப்பட்டுள்ள திருமணத்தின் எந்தத் தரப்பும், பின்வரும் காரணங்களால் தமது திருமணம் கலைக்கப் பட வேண்டுமென்று கோரி மாவட்ட நீதிமன்றத்திற்கு மனுக் கொடுக்கலாம்:-

அ) எதிர்வாதிக்கு எதிராக, நீதிமன்றம் மூலமாகப் பிரிந்து வாழ்வதற்கான ஓர் ஆணை அல்லது உத்தரவு வெளியிடப்பட்ட பின்னர், இரண்டு ஆண்டுகள், அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு மண வாழ்க்கையில் உடலுறவு கொள்ளாதிருத்தல்; அல்லது,

ஆ) மண வாழ்க்கை உறவுகளை மீட்டெடுப்பதற்கான ஓர் ஆணையை இரண்டு ஆண்டுகள் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்குக் கடைப்பிடிப்பதற்கு எதிர்வாதி தவறியிருத்தல்.

***35. திருமணக் கலைப்புக்கு மனுச் செய்து கொள்வதற்குத் தகுதியுடைய நபர்கள்:*** *1)இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னால் அல்லது அமலுக்கு வந்ததற்குப் பின்னர் செய்து கொள்ளப்பட்ட திருமணமாக இருந்தாலும் சரி, அது செல்லுபடி யாகாத திருமணம் என்ற காரணத்தினால் தவறானதாக இருந்தால், பின்வரும் முறைகளில் அதற்கு எதிரான மனுவை நீதிமன்றம் அனுமதிக்கலாம். அதாவது;*

*i) திருமணத்தின் எந்தத் தரப்பாவது திருமணக் கலைப் புக்காக சமர்ப்பிக்கும் மனுவின் பேரில்; அல்லது,*

*ii) பாதிக்கப்பட்ட எந்த நபராவது, அல்லது இந்தத் திருமணத்தில் அக்கறை உடைய எந்த நபராவது எந்த வழக்கிலாவது எழுப்பப்படும் ஒரு பிரச்சினையின் பேரில்.*

*2) இந்த சட்டத் தொகுப்பு அமலுக்கு வருவதற்கு முன்னரோ அல்லது அமலுக்கு வந்ததற்குப் பின்னரோ செய்து கொள்ளப் பட்ட எந்தத் திருமணமாவது, அது செல்லுபடியாகாத திருமணம் என்ற காரணத்தினால் தவறானதாக இருந்தால், திருமணத்தின் எந்த ஒரு தரப்பின் வேண்டுகோளின் பேரில் அல்லாது, அத்தகைய முறையீடு எதையும் நீதிமன்றம் அனுமதிக்கக் கூடாது.*

*ஆனால், அதே சமயத்தில், நிவாரணம் பெறும் நோக்கத்திற்காக, எந்தத் தரப்பும் மற்றைய தரப்பின் குறைபாடு (தவறு) அல்லது இயலாமையைப் பயன்படுத்திக் கொள்வதற்குத் தகுதியுடைய வரல்ல.*

*(36)*

*(38)*

***50. மீண்டும் திருமணம் செய்துகொள்வதற்குத் தரப்புகளுக்கு சுதந்திரம் :*** *ஒருமாவட்ட நீதிபதி, திருமணத்தைக் கலைப்பதற்காக வெளியிட்ட ஆணையை ஊர்ஜிதம் செய்து உயர் நீதிமன்ற உத்தரவு வெளியிட்ட தேதியிலிருந்து ஆறு மாதங்கள் முடிவடைந்த பிறகு,*

*அல்லது, ஒரு திருமணத்தைக் கலைக்கும் ஆணையை ஓர் உயர்நீதிமன்றம் வெளியிட்டதற்குப் பின்னால் ஆறு மாதங்கள் முடிவடைந்தபோது, அத்தகைய ஆணைக்கு எதிராக மேல்முறையீடு எதுவும் செய்யப்படாதபோது,* ***(புதிது)***

*அல்லது, அத்தகைய மேல் முறையீடு எதுவும் தள்ளுபடி செய்யப்பட்டிருந்தால், அல்லது, அத்தகைய மேல் முறையீட்டின் விளைவாக, எந்தத் திருமணமாவது கலைக்கப்பட்டிருந்தால், திருமணத்தின் சம்பந்தப்பட்ட தரப்புகள், முந்திய திருமணம் மரணத்தினால் கலைக்கப்பட்டது போன்று, மீண்டும் திருமணம் செய்து கொள்வது சட்டப்படியானதேயாகும்.*

*(39)*

**37. திருமணத்தை செல்லாது என்று அறிவிப்பதன் விளைவு** : (1) செல்லத்தக்கதல்ல என்ற காரணத்தின் பேரில் ஒரு திருமணம் கலைக்கப்பட்டதாக அறிவிக்கும் பொழுது, அல்லது, ஒரு திருமணம் செல்லத்தக்கதல்ல என்று அறிவிக்கப்படும் நிலைமையில், அந்தத் திருமணம் செல்லுபடியாகாது என்று கருதப்படுகிறது. அந்தத் திருமணத்தின் வாயிலாகப் பெறப்பட்ட குழந்தைகள் சட்டப்படியானவை யல்ல என்று கருதப்படுவார்கள், எப்பொழுதும் அவ்வாறே கருதப் படுவார்கள்.

ஆனால் அதே சமயத்தில், ஒரு முன்னாள் கணவர் அல்லது மனைவி வாழ்ந்து வருகிறார் என்ற காரணத்தின் பேரில் ஒரு திருமணம் கலைக்கப்படுகிறது அல்லது செல்லத்தக்கதல்ல என்று அறிவிக்கப்படும் நிலைமையில், மேலும், அதைத் தொடர்ந்த திருமணம் நல்ல எண்ணத்துடன் புரியப்பட்டது, அதன் தரப்பு களில் ஒருவரோ அல்லது இருவருமோ முன்னாள் கணவர் அல்லது மனைவி இறந்துவிட்டதாகப் பூரணமாக நம்பிய நிலையில், மேற்படி ஆணை வெளியிடப்படுவதற்கு முன்னால் பெறப்பட்ட குழந்தைகள் அந்த ஆணையில் குறிப்பிட்டுக் கூறப்பட வேண்டும். எல்லா அம்சங்களிலும், அவர்களது பெற்றோர்களின் சட்டப்பூர்வமான குழந்தைகள் என்று கருதப்படவேண்டும், எப்பொழுதும் அவ்வாறே இருந்தார்கள் என்று கருதப்பட வேண்டும்.

2) பிரிவு 29 மற்றும் 30-ல் குறிப்பிடப்பட்டுள்ள எந்தக் காரணத்தின் பேரிலாவது ஒரு திருமணம் கலைக்கப்படும் நிலைமையில், அந்தத் திரு மணத்தின் வாயிலாகப் பெறப்பட்ட குழந்தைகள் எல்லா அம்சங்களிலும் அவர்களது பெற்றோர் களின் சட்டப்படியான குழந்தைகள் என்று கருதப்படுவார்கள், எப்போதும்அவ்வாறே இருந்ததாகக் கருதப்படுவார்கள், மற்றும் அவர்களின் பெயர்கள் அந்த ஆணையில் குறிப்பிடப்பட வேண்டும்.

**பாகம் IV**
**பிரிவு 29(1)**
**பக்கம் 21**

(40)

## அதிகார எல்லை வரம்பும் நடைமுறையும்

**39. இந்த பாகத்தின் கீழ் நிவாரணம் வழங்குவதற்கான அதி கார எல்லை வரம்பு :-**

இந்த பாகத்தில் அடங்கியுள்ள எதுவும் எந்த **புதிது** நீதிமன்றத்திற்கும் பின்வருவனவற்றைச் செய்வதற்கு அதிகாரம் அளிக்காது:- அவை யாவன:

அ) திருமணத்தைக் கலைப்பதற்கான ஆணைகளைப் பிறப்பிப்பதற்கு-

i) செல்லுபடியாகாத ஒரு திருமணத்தின் விஷயத்தில், 2)-வது ஷரத்து அல்லது 10-வது பிரிவின் (2) வது ஷரத்தின் விதிகளை மீறுகின்ற செல்லத்தகாததாகும் ஒரு திருமணத்தின் விஷயத்தில், அல்லது திருமணத்தின் சமயத்தில் திருமணத்தின் எந்தத் தரப்பாவது ஆண்மையற்று இருந்தால், வழக்குத் தொடுக்கப்படும் வரையிலும் தொடர்ந்து அவ்வாறே இருந்தால், அந்தத் திருமணம் ஒரு மாகாணத்தில் நடத்தப்பட்டு இருந்து, மனு கொடுக்கும் சமயத்தில் மனுதாரர் அந்த மாகாணத்திலேயே வாழ்ந்துகொண்டிருப்பவராக இருந்தால் அல்லாது அது தவிர்க்கப்பட முடியும். அல்லது,

ii) செல்லத்தகாததாகும் ஒரு திருமணத்தின் விஷயத்தில், இந்தப் பிரிவின் (அ) ஷரத்தின் (i) துணை ஷரத்திற்குள் அடங்காத திருமணத்தின் விஷயத்தில், திருமணத்தின் தரப்புகள், திருமணத்தைக் கலைப்பதற்கான மனுக் கொடுக்கும் போது ஒரு மாகாணத்தில் வந்து குடியேறியவர்களாக இருந்தால் அன்றி, அல்லது

ஆ) இந்த பாகத்தின் கீழ் திருமணத்தைக் கலைப்பதற்கான ஆணை அல்லது எந்த நிவாரணமாவது வழங்கப்படுவதற்கு மனுக் கொடுக்கும் சமயத்தில் மனுதாரர் ஒரு மாகாணத்தில் வசித்துக் கொண்டிருப்பவராக இருந்தால் அல்லாது.

(41)

***40. எந்த நீதிமன்றத்திற்கு மனு செய்ய வேண்டும்:*** இந்தப் பகுதியின்கீழ் எந்த மனுவையும் கணவன் மனைவி இருவரும் சேர்ந்து வாழும் இடம், அல்லது கடைசியாக அவர்கள் சேர்ந்து வாழ்ந்த இடம் ஆகியவற்றின் எல்லைக்குட்பட்ட மாவட்ட நீதிமன்றத்திற்குச் சமர்ப்பிக்க வேண்டும். *பிரிவு 3(2) தனிப்பிரிவு சட்டம்.*

***48. தனி அறையில் இரகசியமாக வழக்கு விசாரிக்கப்படலாம்:*** நீதிமன்றம் கருதினாலோ, அல்லது வழக்கிற்கு சம்மந்தப்பட்டவர்கள் விரும்பினாலோ, வழக்கை இரகசியமாக தனி அறையில் நடத்தலாம்.

(42)

***41. மனுக்களின் உள்ளடக்கங்களும் சான்றாதாரங்களும் :-*** 1) இந்தப் பிரிவின்படி போடப்படும் எந்த மனுவிலும் எந்த அடிப்படையில் நிவாரணம் கோருகிறார்கள் என்பதை தெளிவாகவும் விளக்கமாகவும், சொல்ல வேண்டும். திருமணத்தை ரத்து செய்யக்கோரும் மனுவாகவோ அல்லது தீர்ப்புவழி பிரிந்து வாழும் மனுவாகவோ இருந்தால் இது விஷயத்தில் கணவன் மனைவியருக்கிடையே எந்தவிதமாகன கூட்டுச் சதியும் இல்லை என்று உறுதி கூற வேண்டும். *பிரிவு 10 தனிப்பிரிவு சட்டம்.*

2) இந்த மனுவில் கூறியவை யாவும் மனுதாரரினாலோ அல்லது தகுதி பெற்ற வேறு யாராலோ உண்மை என உறுதி செய்யப்பட வேண்டும். அவை நீதிமன்ற விசாரணையின்போது சாட்சியமாக ஏற்றுக்கொள்ளத் தக்கவையாக இருக்க வேண்டும்.

(43)

***42. சிவில் நடைமுறைச் சட்டத்தை அமுல் படுத்துவது:*** இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள இதர விதிமுறைகளுக்கு உட்பட்டு, இந்தப் பகுதியின் கீழ், ஒருதரப்புக்கும் இன்னொரு தரப்புக்கும் இடையே நடைபெறும் எல்லாவிதமான சட்ட நடவடிக்கைகளும், சிவில் நடைமுறை சட்டம் 1908 (V 1908) படி முறைப் படுத்தப்படும். *பிரிவு 15 தனிப்பிரிவு சட்டம்.*

(44)

*(45)*

***43. நீதிமன்ற நடவடிக்கைகள் குறித்த தீர்ப்பாணை:-*** இந்தப் பகுதியின் கீழ் போடப்பட்ட எந்த மனுவும் அதை எதிர்த்து வழக்காடப்பட்டாலும் அல்லது வழக்காடப்படா விட்டாலும் நீதிமன்றம் திருப்தி அடைந்தால், நிவாரணம் கொடுப்பதற்கு அடிப் படை இருக்கும்போது நிவாரணம் கொடுக்கலாம். இந்த மனு தாரரும் எதிர்மனுதாரரும் சேர்ந்து வஞ்சகமாக உடன்பாடு செய்து கொள்ளவில்லை என்பதை உறுதி செய்துகொள்ளவேண்டும். அதே முறையில் பிறர் மனை புணர்தல் என்ற குற்றச்சாட்டு இருந்தால் அதை ஏற்றுக் கொள்ளவோ அல்லது மன்னிக்கப்படவோ இல்லை என்பதை உறுதி செய்ய வேண்டும்.

**45. வழக்கு நிலுவையிலிருக்கும்போது கொடுக்கப்படும் ஜீவனாம்சம்:**-இந்தப் பிரிவின்கீழ் போடப்படும் எந்த மனுவிலும் மனைவிக்கு தனிப்பட்ட முறையில் எந்த வருமானமும் இல்லாத சூழ்நிலையில், தன்னைக் காப்பாற்றிக்கொள்ளவோ அல்லது, நீதிமன்ற நடவடிக்கையை நடத்துவதற்கோ, மனைவி போடும் மனுவை பரிசீலித்து மனைவிக்கு இந்த நீதிமன்ற நடவடிக்கை முடியும்வரை, அதை நடத்துவதற்கான பணமும், மாதாந்திர ஜீவனாம்சமும் கணவனுடைய நிகர வருமானத்தில் 1/5-க்கு மேற்படாமல் அளிக்கும்படி நீதிமன்றம் உத்திரவிடலாம். பிரிவு 6 பம்பாய்ச் சட்டம்

(46)

**46. நிரந்தர ஜீவனாம்சப் பணம்:**- (1) இந்தப் பிரிவின் கீழ் அதிகாரம் செலுத்தும் எந்த நீதிமன்றமும் தீர்ப்பாணை வழங்கும்போதோ அல்லது அதற்கு பிறகோ, அதற்கேற்ற மனு மனைவியினால் போடப்பட்டால், மனைவி நன்நடத்தை உள்ளவராகவும், மீண்டும் திருமணம் செய்து கொள்ளாதவராகவும் இருந்தால், கணவனுடைய சொத்தை ஜீவனாம்சப் பணத்திற்குப் பிணையாக வைத்து உத்திரவிட முடியும். இம்மாதிரி பிணையாக வைத்து உத்திரவிடும்போது ஒரு குறிப்பிட்ட தொகையை பிணையாக வைத்தோ, அல்லது மாதாந்திரம் குறிப்பிட்ட பணம் இவ்வளவு என்று சொல்லியோ உத்திரவிட முடியும். மனைவி உயிரோடிருக்கும்வரை ஜீவனாம்சப் பணம் பெற உத்திரவிட முடியும். இம்மாதிரி உத்திரவிடும்போது கணவன் மனைவி ஆகியோருடைய நன்நடத்தையை கருத்தில் கொள்ள வேண்டும். பிரிவு 6 பம்பாய்ச் சட்டம்

2) உட்பிரிவு (1)ன்கீழ் போடப்பட்ட உத்திரவிற்கு பிறகு நிலைமை மாறிவிட்டால், எந்த நபரும் அதற்கான மனு போட்டால் அதை விசாரித்து மாறியுள்ள சூழ்நிலைக்கேற்ப முதலில் போட்ட உத்திரவை மாற்றி அமைத்தோ அல்லது முழுமையாக ரத்து செய்தோ உத்திரவிட முடியும். மாறியுள்ள நிலைமைகளை நன்கு கவனித்து எது சரியோ அந்த உத்திரவை நீதிமன்றம் அளிக்கலாம்.

3) உட்பிரிவு (1) அல்லது (2) ஆகியவற்றின்கீழ் மனைவிக்கு சாதகமாக போடப்பட்ட உத்திரவை மனைவி மறுமுறை திருமணம் செய்து கொண்டாலோ, அல்லது நன்நடத்தை இல்லாமல் இருந்தாலோ ரத்து செய்ய முடியும்.

*(47)*

***47. குழந்தைகள் பாதுகாப்பு:*** *இந்தப் பகுதியின் கீழ் நடைபெறும் எந்த நீதிமன்ற நடவடிக்கையிலும் அவ்வப்போது நிலைமைக்கேற்றவாறு குழந்தைகளுடைய பாதுகாப்பு, அவர்களுடைய பராமரிப்பு, கல்வி ஆகியவற்றிற்காக நீதிமன்றம் தகுந்த உத்திரவை போடலாம். அம்மாதிரி உத்திரவு போடும்போது குழந்தைகளின் விருப்பத்தையும் கருத்தில் கொள்ள வேண்டும்.* ***பிரிவு 15 பம்பாய்ச் சட்டம்***

*இந்த நீதிமன்ற நடவடிக்கையில் தீர்ப்பாணை வழங்கிய பிறகோ அல்லது அது நிலுவையிலிருக்கும் போதோ, போடப்பட்டு இடைக்கால உத்திரவை, நிலைமைக்கேற்றவாறு குழந்தைகளுடைய பாதுகாப்பு, அவர்களுடைய பராமரிப்பு கல்வி ஆகியவற்றிற்காக நீதிமன்றம் அவ்வப்போதுள்ள நிலைமைக்கேற்ப தகுந்த உத்திரவை போடலாம்.*

*(48)*

*(49)*

***49. தீர்ப்பாணை மற்றும் உத்திரவுகளை அமுல்படுத்துவதும், அதற்கான மேல் முறையீடும்:*** *எல்லாவிதமான தீர்ப்பாணைகளும் மற்றும் உத்திரவுகளும் அசல் சிவில் நீதிமன்ற அதிகாரத்துக்கு உட்பட்ட உத்திரவுகளைப் போல அமுல் படுத்தப்படும். அவ்வப்போது உள்ள விதிமுறைகளுக்கேற்ப மேல்முறையீடும் செய்யலாம்.* ***(புதிது)***

*அ) ஆனால் மாவட்ட நீதிமன்றமளித்த திருமண ரத்து தீர்ப்பாணைக்கு எதிராகவோ அல்லது, அந்த உத்திரவை ரத்து செய்தோ அல்லது உறுதி செய்தோ, உயர் நீதி மன்றம் போட்ட உத்திரவிற்கெதிராகவோ மேல் முறையீடு செய்ய முடியாது.* ***(புதிது)***

*ஆ) செலவுத் தொகைக்காக மட்டும் மேல்முறையீடு செய்ய முடியாது.*

*(50)*

*27. முன்பு நடைபெற்ற திருமணங்களுக்குப் பாது காப்பு: இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பு இந்துக்களுக்கிடையே நடந்த திருமணம் செல்லத்தக்க தாக இருந்தால், அந்த இருவரும், ஒரே* **கோத்திரத்தை** *சேர்ந்தவர்கள் என்ற காரணத்திற்காகவோ, அல்லது, வெவ்வேறு ஜாதிகளைச் சேர்ந்தவர்கள் என்பதற்காகவோ, ஒரே ஜாதியின் உட்பிரிவுகளை சேர்ந்தவர்கள் என்பதற் காகவோ அத்திருமணம் செல்லத்தகாதது என்ற நிலை உருவாகாது.*

***பகுதி IV பிரிவு 3 பக்கம் 15 (விளக்கம்)***

*51. பாதுகாப்புகள் (1) இந்தத் தொகுப்பு வருவதற்கு முன்போ பின்போ செய்யப்பட்ட புனித வினைமு மறைத் திருமணத்தை ரத்து செய்ய மதராஸ் மருமக்கதாய சட்டம் - 1932-ல் (மதராஸ் சட்டம் XXII - 1932) சொல்லப்பட் டுள்ள உரிமைகளை இந்தப் பகுதியில் சொல்லப்பட் டுள்ள எதுவும் கட்டுப்படுத்தாது.*

***பகுதி IV பிரிவு 34, பக்கம் 22 பிரிவு 17 பம்பாய் சட்டப் பிரிவு***

*2) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பு நிலுவையிலுள்ள வழக்கில் ரத்து செய்யக்கோரும் மனு, இல்லா நிலையது திருமணம் மனுவாகவோ அல்லது தீர்ப்பு வழி பிரிவுரைக்கான மனுவாகவோ இருந்தால் இதில் எதுவாக இருந்தாலும் அப்போதுள்ள விதிமுறை களின்படி தீர்ப்பாணை வழங்கப்படும். இந்தத் தீர்ப்பாணை வழங்குவதற்கு முன்பாகவே, இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்துவிட்டாலும், அது அமுலுக்கு வராததாகக் கருதி தீர்ப்பாணை வழங்கப்படும்.*

*(55)*

## பகுதி III - தத்து எடுத்தல்

### பாகம் 1

### தத்து எடுத்தல் - பொது

52. (1) இந்தப் பகுதிக்கு எதிராகத் தத்து எடுத்தல் தடுக்கப்பட்டுள்ளது. இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு ஓர் இந்து ஆண் தத்து எடுக்கும்போது இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளின்படிதான் எடுக்க வேண்டும்.

பகுதி VI
பிரிவு 1, 17, 27
பக்கம் 24, 27, 28

2) பிரிவு 66 உட்பிரிவு (2)-ல் சொல்லப்பட்டவைக்குட்பட்டு, இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைக்கு எதிராக, தத்து எடுத்தால் அது செல்லாது.

3) சட்டப்படி சரியில்லாத தத்து எடுப்பு தத்து எடுக்கும் குடும்பத்தில், தத்து எடுத்தவர் எந்த உரிமையும் கோர முடியாது. அதே முறையில் அவர் பிறந்த குடும்பத்தில் அவருக்குள்ள உரிமை எதுவும் பாதிக்கப்படாது.

(56)

53. **சட்ட ரீதியான தத்து எடுப்பதற்கான அடிப்படைத் தேவைகள்:** கீழ்க்காணும் சூழ்நிலைகளை திருப்தி செய்தால் தவிர எந்தத் தத்து எடுப்பும் செல்லாது.

பகுதி VI
பிரிவு 4
பக்கம் 24

i) தத்து எடுப்பவர் அதற்கான தகுதியையும் உரிமையையும் பெற்றிருக்க வேண்டும்;

ii) தத்து கொடுப்பவர் அதற்கான தகுதியை பெற்றிருக்க வேண்டும்;

iii) தத்து எடுத்துக் கொள்ளப்பட்டவர் அதற்கான தகுதியை பெற்றிருக்க வேண்டும்;

iv) தத்து எடுப்பதும் கொடுப்பதும் நேரடியாக நடைபெற்றால் தான் அது முழுமை பெறும்;

v)) இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள மற்ற நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

## *தத்து எடுப்பதற்கான தகுதிகள்*

**54. ஓர் இந்து ஆணுக்கு தத்து எடுப்பதற்கான தகுதிகள்:** *18 வயது முடிந்து நல்ல மன நிலையிலுள்ள எந்த இந்து ஆணும் தத்து எடுத்துக் கொள்ளும் தகுதியுடையவர் ஆவார். தத்து எடுத்துக் கொள்ளும் ஓர் ஆணுக்கு மனைவி உயிருடன் இருந்தால் அவளுடைய ஒப்புதல் இல்லாமல் தத்து எடுக்கக்கூடாது. ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தால் ஒரு மனைவியிடம் ஒப்புதல் பெற வேண்டும். ஒப்புதல் கொடுப்பதற்கான தகுதி யாருக்கும் இல்லை என்றால், அம்மாதிரி ஒப்புதல் பெற வேண்டியதில்லை.*

*பகுதி VI பிரிவு 5(1) பக்கம் 24*

*விளக்கம்:- மனைவிக்கு 18-வயது முடியாமல் இருந்தால் அல்லது மன நிலை பாதிக்கப்பட்டவராக இருந்தால் அவருக்கு அந்தத் தகுதி இல்லை.*

*(58)*

**55. விதவையின் தத்து எடுக்கும் தகுதி:** *(1) கீழ்க் காணும் நிபந்தனைகளுக்குட்பட்டு ஓர் இந்து விதவை 18-வயது முடிந்து, நல்ல மன நிலையுடன் இருந்தால் தன்னுடைய கணவனுக்காக ஒரு மகனை தத்து எடுக்க முடியும்.*

பகுதி VI
*பிரிவு 5(2)*
*பக்கம் 24*

*அ) நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ அவருடைய கணவனால் தத்து எடுக்க தடை செய்யப்படாமல் இருக்க வேண்டும்.*

*ஆ) தத்து எடுக்கும் அவளுடைய அதிகாரம் முடிவிற்கு வராமல் இருக்க வேண்டும்.*

*2) உட்பிரிவு 1-ல் சொல்லப்பட்டுள்ள எதுவும் 18-வயது முடியாத ஓர் இந்து விதவை தன் கணவனுக்காக ஒரு மகனை தத்து எடுத்துக் கொள்வதற்கு அவளுக்குள்ள அதிகாரத்தை தடுக்க முடியாது. இப்பகுதியில் சொல்லியுள்ளபடி அந்த அதிகாரம் அளிக்கப்பட்டு இருக்க வேண்டும்.*

*(59)*

**56. தத்து எடுப்பதற்கான அதிகாரம் மற்றும் தடை:** *1) மேலே சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளுக்குட்பட்டு ஒரு மகனை தத்து எடுக்கும் அதிகாரம் பெற்றுள்ள ஓர் இந்து ஆண், அதே முறையில் ஒரு மகனை தத்து எடுத்துக் கொள்ள தன்னுடைய மனைவிக்கு அதிகாரம் அளிக்கலாம், தத்து எடுக்கக் கூடாது என்ற தடையும் விதிக்கலாம்.*

பகுதி VI
*பிரிவு 6*
*பக்கம் 24*

*2) ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகள் இருந்தால் அதில் ஒருவருக்கோ அல்லது எல்லோருக்குமோ, தத்து எடுக்கும் உரிமையை அளிக்கலாம். அதேமுறையில் தடையும் விதிக்கலாம்.*

*3) ஓர் இந்து ஒன்றுக்கு மேற்ப்பட்ட விதவைகளை விட்டுச் சென்றால், குறிப்பிட்ட ஒரு நபருக்கோ, அல்லது சிலருக்கோ, ஒரு மகனை தத்து எடுக்கும் அதிகாரமோ அல்லது தடையோ விதித்திருந்தால், அவர் குறிப்பிடப்படாத விதவைகளுக்கு அதிகாரம் இல்லை என்று கருத வேண்டும்.*

*(60)*

பகுதி VI
பிரிவு 7
பக்கம் 24

**57. தத்தெடுப்பதற்கான அதிகாரம், தடை மற்றும் ரத்து ஆகியவை குறித்துள்ள முறைகள்:-** 1) தத்து எடுக்கும் அதிகாரத்தையோ அல்லது தத்து எடுக்கக்கூடாது என்ற தடையையோ சட்ட ரீதியாக அளிக்க பதிவுச் சட்டம் 1908 - XVI - 1908)-ன் படி தகுந்த ஆவணத்தின் மூலமாக பதிவு செய்ய வேண்டும். அல்லது இந்திய வாரிசுரிமை சட்டம் 1925 (XXXIX 1925) பிரிவு 63-ன்படி உயில் எழுதப் பட்டிருக்க வேண்டும்.

2) தத்து எடுக்கும் அதிகாரமோ அல்லது தடையோ ஏற்கனவே வழங்கப்பட்டிருந்தால், தகுந்த ஆவணங்கள் மூலம் அல்லது உயில் மூலம் அதை ரத்து செய்து விடலாம்.

3) உயில் மூலமாகத் தத்து எடுக்கும் அதிகாரமோ அல்லது தடையோ விதிக்கப்பட்டிருந்தால், இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 (XXXIX 1925) அட்டவணை III பிரிவு 70-ல் கூறியுள்ளபடி அதை ரத்து செய்யலாம்.

(61)

**58. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட விதவைகளுக்கு உள்ள தத்து எடுக்கும் உரிமை:** ஓர் இந்து ஆண் ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகளை விட்டுவிட்டு இறந்துவிட்டால், அவர்களுக்கு தத்து எடுக்கும் தகுதி இருந்தால், தன் கணவனுக்கு ஒரு மகனை தத்து எடுக்க கீழே சொல்லப்பட்டுள்ள முறைகளின்படி தத்து எடுக்க வேண்டும்.

பகுதி VI
பிரிவு 8
பக்கம் 25

அ) அவர் விதவைகள் எல்லோருக்குமோ, அல்லது அதில் ஒருவருக்கோ தத்து எடுக்கும் உரிமையை கொடுத்திருந்தால், அதில் முன்னுரிமை அளிக்கப்பட்டிருந்தால், தத்து எடுக்கும் உரிமை அதில் சொல்லப்பட்டுள்ள முறையில் நடைபெற வேண்டும்.

ஆ) அவர் அந்த முறையில் முன்னுரிமை எதுவும் அளிக்காதபோது, பிரிவு 59ல் சொல்லியுள்ள வரிசைப்படி தத்து எடுக்கும் உரிமையைப் பின்பற்ற வேண்டும்.

இ) அவர் அனுமதி வழங்காவிட்டாலோ, அல்லது தடை விதித்திருந்தாலோ, பிரிவு 59-ல் சொல்லப்பட்டுள்ள வரிசை முறையைப் பின்பற்றி தத்து எடுக்க வேண்டும்.

ஈ) உட்பிரிவு (ஆ) மற்றும் (இ)யின்படி தத்து எடுக்கும் உரிமை பெற்ற விதவை, தன்னுடைய உரிமையை தனக்கு அடுத்தவருக்கு வழங்கலாம். அவ்வாறு வழங்க பதிவு செய்வதன் மூலம் ஆவணத்தை எழுத வேண்டும். அவர் அவ்வாறு எழுதாவிட்டாலோ அல்லது ஒரு நியாயமான காலத்திற்குள் தத்து எடுக்காவிட்டாலோ அவருடைய உரிமை அடுத்தடுத்த விதவைகளுக்கு வந்து கடைசியாக உள்ள விதவைக்கு வந்து சேரும்.

(62)

**59. மனைவிகள் மற்றும் விதவைகளுக்கிடையே உள்ள முந்துரிமை தகுதி :-** இந்தப் பகுதிக்காக, முந்துரிமை முறை ஒருவரை அவர்கள் திருமணம் செய்துகொண்ட தேதியை வைத்து நிர்ணயிக்கப்படும். முதலில் திருமணம் செய்துகொண்டவரை மூத்தவர் என்றும் அதற்கு அடுத்ததாக மற்றவர்களையும் கணக்கிடுவார்கள்.

பகுதி VI
பிரிவு 9
பக்கம் 25

(63)

60. விதவையினுடைய தத்து எடுக்கும் உரிமை முன்னர் தத்து எடுத்த காரணத்தினால் மறைந்துவிடாது:- இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைகளுக்கு உட்பட்டு, ஒரு விதவைக்கு கொடுக்கப்பட்ட அதிகாரத்தில் கணவன் வேறுவகையாக சொல்லியிருந்தால் தவிர பல புதல்வர்களை ஒருவனுக்குப் பின் ஒருவனாக அவர்கள் இறந்த பிறகு தத்து எடுத்துக் கொள்ளலாம்.

பகுதி VI
பிரிவு 10
பக்கம் 25

(64)

*61. விதவையின் உரிமைக்கு முடிவு : 1) ஒரு விதவையின் தத்து எடுக்கும் உரிமை கீழ்க்காணும் காரணங்களினால் முடிவுக்கு வரும் :-* பகுதி V பிரிவு 10 பக்கம் 25

அ) அவள் மறுமணம் செய்துகொண்டால் அல்லது,

ஆ) அவள் கணவனின் இந்து மகன், ஓர் இந்து மகனையோ, விதவையையோ, அல்லது மகனின் விதவையையோ விட்டுவிட்டு இறந்துவிட்டால் அல்லது,

இ) அவள் இந்துவாக தொடர்ந்து நீடிக்காவிட்டால்,

விளக்கம் :- இந்த உட்பிரிவில் மகன் என்றால் மகன் மகனின் மகன், மகனின் மகனின் மகன், சட்டரீதியாகப் பிறந்த மகனோ அல்லது தத்து எடுக்கப்பட்டவனோ.

2) விதவையின் தத்து எடுக்கும் உரிமை ஒருமுறை முடிவுக்கு வந்தால் மறுமுறை அது அவளுக்குக் கிடைக்காது.

(65)

*62. தத்து கொடுக்க தகுதியுடையவர்கள்* பகுதி V பிரிவு 12 பக்கம் 25

1) ஒரு பையனின் தந்தையோ அல்லது தாயோ மட்டும்தான் அவனை தத்து கொடுக்க உரிமை உடையவர்கள். வேறு யாருக்கும் அந்தத் தகுதி கிடையாது.

2) பிரிவு (3) உட்பிரிவு (ஆ) மற்றும் (இ) ஆகியவற்றில் கூறப்பட்டுள்ளவற்றுக்கு உட்பட்டு, தந்தை மட்டும்தான் தத்து கொடுக்க உரிமையுள்ளவர். தாய், தத்து கொடுக்க தகுதியுள்ளவராக இருந்தால், அவரின் ஒப்புதல் இல்லாமல் தத்து கொடுக்க முடியாது.

3) ஒரு தாய் தன் மகனை தத்து கொடுக்க-

அ) தந்தை உயிருடன் இருக்கக்கூடாது அல்லது

ஆ) பகுதி VII பிரிவு 110-ன் உட்பிரிவு (1)ல் சொல்லியுள்ளபடி அவர் முழுமையாகவும் இறுதியாகவும் உலகைத் துறந்திருக்க வேண்டும்.

இ) அவர் இந்துவாக தொடர்ந்து இல்லாவிட்டால்

ஈ) அவர் ஒப்புதல் கொடுக்கும் தகுதியை இழந்துவிட்டிருந்தால், தந்தை தாயை தத்து கொடுக்க தடை செய்து, அதற்கான ஆவணத்தை இந்திய பதிவுச்சட்டம் 1908 (XVII 1908) படி பதிவு செய்திருந்தால், அல்லது இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 (XXXIX - 1925) யில் சொல்லியுள்ளபடி உயில் எழுதியிருந்தால்.

4) ஒருமகனை தத்து கொடுக்கும் தந்தையும் தாயும் 18 வயது நிரம்பியவர்களாகவும், நல்ல மனநிலை உள்ளவர்களாகவும் இருக்க வேண்டும்.

விளக்கம் :- இந்தப் பிரிவுக்காக -

(i) ''தந்தை'', ''தாய்'' என்று சொல்லப்பட்டுள்ளது தத்து எடுத்த தந்தையையும், தாயையும் குறிக்காது.

(ii) தந்தையும், தாயும் 18 வயதிற்கு உட்பட்டவர்களாகவும், மனநிலை சரி இல்லாதவர்களாகவும் இருந்தால், அவர் தத்து கொடுக்கும் தகுதி இல்லாதவர்களாக கருதப்படுவார்கள்.

(66)

*தத்து எடுத்துக் கொள்ளப்படுவதற்கான தகுதிகள்*

**63. யாரை தத்து எடுக்கலாம்:** 1)எந்த ஒரு பெண்ணையும் ஓர் இந்து ஆணோ, பெண்ணோ தத்து எடுத்துக் கொள்ள கூடாது. பகுதி VI பிரிவு 3 பக்கம் 24

2) எந்தப் பையனையும் கீழ்க்காணும் நிபந்தனைகளை திருப்தி செய்தால் தவிர, தத்து எடுத்துக் கொள்ளக் கூடாது. பகுதி VI பிரிவு 13 பக்கம் 26

i) அவன் ஒரு இந்துவாக இருக்க வேண்டும்.

ii) அவன் திருமணமானவனாக இருக்கக்கூடாது.

iii) அவன் ஏற்கனவே தத்து எடுத்துக் கொள்ளப்பட்டவனாக இருக்கக்கூடாது.

iv) அவன் 15 வயது பூர்த்தியாகதவனாக இருக்கக்கூடாது.

(67)

**64. சில நபர்கள் தத்து எடுத்துக் கொள்வதற்கு தகுதி இல்லாதவர்களாக இருப்பார்கள்:-** சில சந்தேகங்களை நிவர்த்திக்க, கீழ்க்காணும் நபர்களை தத்து எடுக்க முடியாது என அறிவிக்கப்படுகிறது: பகுதி VI பிரிவு 14 பக்கம் 16

i) மூத்த மகன் அல்லது தந்தையின் ஒரே மகன்

ii) ஒரு தாயின் மகன், அவனை தத்து எடுக்கும் தந்தை சட்ட ரீதியாக அந்தத் தாயைத் திருமணம் செய்து கொள்ள முடியாத நிலை, குறிப்பாக தன் மகளின் மகன், சகோதரியின் மகன், அல்லது தாயின் சகோதரியின் மகன்; மேலும்

iii) தத்து எடுக்கும் தந்தைக்கு நெருங்கிய உறவினர் இருக்கும் போது, அதைவிட்டு ஒரு புதியவரை தத்து எடுப்பது.

(68)

*அவசியமான சடங்குகள்*

***65. தத்து எடுப்பதின் முழுமை:*** தத்து எடுக்கும் சடங்கின் போது தத்து கொடுக்கும் பெற்றோர், தத்து எடுக்கும் பெற்றோரிடம் மகனை ஒப்படைக்க வேண்டும்; அவர்கள் இல்லாத போது அவர்களால் அங்கீகரிக்கப்பட்டவர்கள் அங்கு இருக்க வேண்டும். இல்லை என்றால் அந்தத் தத்து எடுப்பு சட்டப்படி செல்லாது.

*விளக்கம் :-* தத்து ஹோமம் செய்யும் சடங்கு, தத்து எடுப்பது சட்ட ரீதியாக இருக்க அவசியமான சடங்கு அல்ல.

(69)

*தத்து எடுக்க உள்ள மற்ற நிபந்தனைகள்*

பகுதி VI
பிரிவு 15
பக்கம் 26

**66. மற்ற நிபந்தனைகள்:** (1) எல்லாத் தத்து எடுப்பு நடவடிக்கைகளிலும் கீழ்க்காணும் நிபந்தனைகள் நிறைவேற்றப்பட வேண்டும்:-

i) தத்து எடுக்கும்போது, தத்து எடுக்கும் தந்தைக்கு ஓர் இந்து மகன், மகனின் மகன், மகனின் மகனின் மகன், (இரத்த உறவு முறையிலோ, தத்து எடுத்த உறவு முறையிலோ) உயிருடன் இருக்கக் கூடாது.

விளக்கம் :- ஒரு பையன் தாயின் கருவில் இருக்கக்கூடும். பின்னர் உயிரோடு பிறக்கக்கூடும், எனினும் தத்து எடுக்கும் சமயத்தில் அவன் பிறக்கவில்லை என்றால் தத்தெடுக்கும் போது அந்த நோக்கத்திற்காக அவன் உயிரோடிருப்பவனாக கருதப்பட மாட்டான்.

ii) சேர்ந்தார் போல் ஒரே பையனை இரண்டு பேரோ அல்லது அதற்கு மேற்பட்டோரோ, ஒரே நேரத்தில் தத்து எடுக்கக் கூடாது. அதே முறையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பையன்களை ஒரே நபர் ஒரே நேரத்தில் தத்து எடுக்கக்கூடாது.

iii) தத்து கொடுப்பவர், மற்றும் தத்து எடுப்பவர் இருவரும் மனமுவந்து ஒப்புதலுடன் இக்காரியத்தில் ஈடுபட வேண்டும்.

2) தத்து எடுக்க தத்து கொடுப்பவரிடமிருந்தோ, அல்லது தத்து எடுப்பவரிடமிருந்தோ கட்டாயப்படுத்தல், தகா நிலை வற்புறுத்தல் ஏமாற்று, பொய்யாகத் திரித்திக் கூறுதல், அல்லது தவறான முறை ஆகிய எவற்றினாலும் ஒப்புதலைப் பெற்றாலும் இக்காரியத்தில் ஈடுபட்ட எவரும் தத்து எடுத்தது செல்லாது என்று வழக்குப் போடலாம்.

கீழ்க்காணும் காரணங்களுக்காக அந்த வழக்கை நீதிமன்றம் தள்ளுபடி செய்யலாம்:-

அ) கட்டாயப்படுத்தல், மற்றும் தகாநிலை வற்புறுத்தல் நடந்து இரண்டாண்டுகள் முடிந்து விட்டாலோ, அல்லது பொய்யாக திரித்து கூறுவது, அல்லது ஏமாற்றுவது ஆகியவை நடந்து இரண்டாண்டுகள் முடிந்து விட்டாலோ,

ஆ) ஒரு நபரின் ஒப்புதலை கட்டாயப்படுத்தியோ, தகாநிலை வற்புறுத்தியோ, ஏமாற்றியோ, பொய்யாக திரித்திக் கூறியோ பெற்றால், அந்த நபர் தன்னுடைய ஒப்புதலை உறுதி செய்தால் அது யாருடைய உரிமையையும் பாதிக்காது.

3) உட்பிரிவு (2) பிரிவு (அ)-ன் படி குறிப்பிட்ட காலத்திற்குள் வழக்கு போடாவிட்டால் அல்லது உட்பிரிவு (2) பிரிவு (ஆ)-படி தத்து எடுத்தல் உறுதி செய்யப்பட்டால் அது சட்ட ரீதியான தத்து என்று கருதப்பட்டு, தத்து எடுத்த தேதியிலிருந்து எல்லாக் காரணங்களுக்காகவும், அது அமுலுக்கு வந்ததாகக் கருதப்படும்.

## பாகம் II

## தத்து எடுப்பதன் விளைவுகள்

**67. தத்து எடுப்பதன் விளைவுகள்:** தத்து எடுக்கப்பட்ட மகன், எல்லாக் காரணங்களுக்காகவும் தத்து எடுத்தத் தேதியிலிருந்து தத்து எடுக்கப்பட்டவருக்கு மகனாகக் கருதப்படுவான். அந்தத் தேதியிலிருந்து அவன் பிறந்த குடும்பத்தில் உள்ள அத்தனை உறவுகளும் அவனை விட்டு நீங்கும்: பிறகு அவனுக்கும் அவன் பிறந்த குடும்பத்துக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது;

பாகம் VI
பிரிவு 18
பக்கம் 23

ஆனால் -

அ) தான் பிறந்த குடும்பத்தில் தொடர்ந்திருந்தால் யாரைத் திருமணம் செய்து கொள்ள முடியாதோ அவளைத் தத்து போன பிறகும் திருமணம் செய்து கொள்ளக் கூடாது;

ஆ) அவனுக்கென்று அவன் பிறந்த கொடுக்கப்பட்ட சொத்து, தத்துபோன பின்பும் அவனிடமே இருக்கும். அந்தச் சொத்துக்கு சில நிபந்தனைகளோ, பிணையோ இருந்தால் அது தொடர்ந்து இருக்கும். அந்தச் சொத்தின் வருமானத்தில் யாரையாவது பாதுகாக்க வேண்டும்;

இ) பிரிவு 68-ல் சொல்லப்பட்டுள்ள நிலைமைகளுக்க உட்பட்டு, அவன் தத்து போவதற்கு முன்பு அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த பிறருக்குக் கொடுக்கப்பட்டுள்ள சொத்து தொடர்ந்து அவர்களிடமே இருக்கும். அது எந்தப் பாதிப்புக்கும் உள்ளாகாது.

(71)

**68. தத்து எடுத்த பிறகு சொத்து ஒருவரிடமிருந்து எடுக்கப்படுதல்-** (1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபின் ஒரு விதவை ஒரு மகனைத் தத்து எடுத்துக் கொண்டால், அந்த மகன் கீழ்க் காணுபவற்றை எடுத்துக் கொள்வான் -

பாகம் VI
பிரிவு 18
பக்கம் 23

அ) அந்த விதவையின், அவளுடன் உள்ள மற்ற விதவைகளின் சொத்தில் பாதி அளவிற்கு, தத்து எடுப்பதற்கு முன்பு இருந்ததை எடுத்துக் கொள்வான்

*ஆ) ஒரு மகன், மகனின் மகன் மகனின் மகனின் மகன் ஆகிய தத்து எடுக்கும் தந்தையின் உறவினர்கள் இறந்த பிறகு தத்து எடுக்கப்பட்டால், பாதி சொத்து, விதவை மற்றும் அவருடன் இருக்கும் மற்ற விதவைகள் சொத்தில், அவர்களால் தத்து எடுத்த இறந்து விட்ட மகன், மகனின் மகன், மகனின் மகனின் மகன் ஆகியோருடைய வாரிசாக சொத்தில் பாதியை எடுத்துக் கொள்வான். தத்து எடுப்பதற்கு முன்பு இருந்த சொத்தைக் கணக்கிட்டு இந்தப் பாகம் முடிவு செய்யப்படும்.*

*விதவையும், மற்றும் மற்ற விதவைகளும் பெற்ற சொத்து வழக்கம், மற்றும் நெறிமுறை அல்லது சொத்து அவர்களுக்கு கொடுக்கப்பட்டபோது சொல்லப்பட்ட நிபந்தனைகள் ஆகியவற்றின் காரணமாக பிரிக்க முடியாத சொத்தாக இருந்தால், தத்து எடுக்கப்பட்ட மகன், தத்து எடுப்பதற்கு முன்பு இருந்த சொத்தை முழுமையாக எடுத்துக் கொள்வான். இது உட்பிரிவு (அ) மற்றும் (ஆ) வின் படி எடுத்துக் கொள்ளும் சொத்துக்களுக்குக் கூடுதலாகும்.*

*2) உட்பிரிவு (1) பிராந்தியத்தின் எந்தப் பகுதியிலும் உள்ள விவசாய நிலங்களுக்கும் பொருந்தும்.*

*(72)*

**69. தத்து எடுத்தப் பெற்றோர்களுக்கு அவர்கள் சொத்து குறித்துள்ள உரிமைகள் :-** அவர்கள் எந்த ஒப்பந்தமும் செய்து கொண்டிருக்கவில்லை என்றால் தத்து எடுப்பு எந்த வகையிலும், தத்து எடுத்த தந்தை அல்லது தாய் ஆகியோரின் சொத்து உரிமைகளை எவ்விதத்திலும் பாதிக்காது. அவர்கள் ஒருவருக்கொருவரோ அல்லது உயில் மூலமாகவோ தங்கள் சொத்தை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். பாகம் VI பிரிவு 2(2), பக்கம் 27

(73)

**70. மனைவி இல்லாதவர் தத்து எடுக்கும்போது தத்துத் தாயை முடிவு செய்வது சம்பந்தமாக :-** பாகம் VI பிரிவு 22, பக்கம் 27, 28

1) ஓர் இந்து தன் மனைவி உயிருடன் இருக்கும் போது ஒரு மகனைத் தத்து எடுத்தால், அந்த மனைவி தத்து எடுத்த மகனுக்குத் தத்துத் தாயாகக் கருதப்படுவாள்.

2) ஓர் இந்துவிற்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தால் -

i) எந்த மனைவியுடன் அல்லது எந்த மனைவியின் ஒப்புதலுடன் தத்து எடுத்துக் கொண்டாரோ அவர் அல்லது

ii) ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியருடன் வசித்து வந்தாலோ அல்லது அவர்களது ஒப்புதலைப் பெற்றாலோ, அந்த மனைவிகளில் யாரை அவர் முதலில் திருமணம் செய்து கொண்டாரோ அவர், அம்மகனின் தத்துத் தாய் என்றும், மற்றவர்கள் மாற்றாந்தாய்கள் என்றும் கருதப்படுவார்கள்.

3) மனைவி இழந்தவர் மனைவி இறந்த பிறகு தத்து எடுத்தால், தத்து எடுப்பதற்கு முன்பு இறந்து விட்ட மனைவி தத்து எடுத்த மகனின் தத்துத் தாய் எனக் கருதப்படுவார். அதற்குப் பிறகு இறந்த மனைவியோ அல்லது தத்து எடுத்த பிறகு அவர் திருமணம் செய்து கொண்ட மனைவியோ தத்து எடுக்கப்பட்ட மகனின் மாற்றாந்தாய் எனக் கருதப்படுவார். ஆனால் தத்து எடுக்கும் தந்தை யாரைத் தத்துத் தாய் எனக் கருத வேண்டும் என்று அதற்கான ஏற்பாடு செய்திருந்தால் அவரைத் தத்துத் தாயாகவும் மற்றவர்களை மாற்றாந்தாயாகவும் கருத வேண்டும். பாகம் VI பிரிவு 2(3), பக்கம் 28

4) திருமணம் ஆகாத ஒருவர் தத்து எடுத்தப் பிறகு அவர் திருமணம் செய்து கொள்ளும் மனைவி தத்து எடுத்த மகனின் மாற்றாந்தாய் எனக் கருதப்படுவார்.

(74)

**71. ஒரு விதவை தத்து எடுத்தால் தத்துத் தாயை முடிவு செய்வது சம்பந்தமாக :** (1) இறந்து விட்ட ஓர் இந்துக் கணவர் ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகளை விட்டுச் சென்றிருக்கும்போது, எந்த விதவை தத்து எடுக்கிறாரோ, அவர் அந்தத் தத்து எடுத்த மகனின் தத்துத்தாய் என்றும், மற்ற விதவைகள் மாற்றாந்தாய்கள் என்றும் கருதப்படுவார்கள்.

பாகம் VI
பிரிவு 23,
பக்கம் 28

2) ஒன்றுக்கு மேற்பட்ட விதவைகள் தத்து எடுக்கும்போது, முதலில் திருமணம் செய்து கொண்டவர் தத்துத் தாய் என்றும், மற்றவர்கள் மாற்றாந்தாய்கள் என்றும் கருதப்படுவார்கள்.

(75)

**72. சட்ட ரீதியான தத்து எடுப்பை ரத்து செய்ய முடியாது :** சட்ட ரீதியாக தத்து எடுக்கப்பட்டால், அதை தத்து எடுத்த தந்தையோ, தாயோ, அல்லது வேறு நபரோ ரத்து செய்ய முடியாது. அதே முறையில், தத்து எடுக்கப்பட்ட மகனும், தான் தத்து எடுக்கப்பட்டதை துறந்துவிட்டு, அந்தத் தகுதியை விட்டு விட்டு தான் பிறந்த குடும்பத்திற்கு போக முடியாது.

(76)

**73. சில ஒப்பந்தங்கள் செல்லத்தக்கவை அல்ல:** தத்து எடுக்கக் கூடாது என ஒப்பந்தம் செய்து கொண்டால் அது செல்லத்தக்கது அல்ல. அதே முறையில் தத்து எடுக்கப்பட்ட மகனின் உரிமைகளைக் குறைக்கும் வகையில் செய்து கொள்ளும் ஒப்பந்தமும் செல்லத்தக்கது அல்ல.

பாகம் VI
பிரிவு 20,
பக்கம் 27

(77)

## பாகம் III
## *தத்து எடுப்பை எழுதி வைப்பது*

**74. தத்து எடுக்கப்பட்டதை எழுதி வைக்க வேண்டும்:-** *அதற்கு சம்மந்தப்பட்டவர்கள் விரும்பினால், மாநில அரசால், அரசு பதிவேட்டில் அறிவிக்கப்பட்டுள்ள முறையில், தத்து எடுக்கப்பட்ட இடத்திற்கான அதிகாரம் பெற்றுள்ள அதிகாரிகளுக்கு, அதற்கென்று விதிக்கப்பட்டுள்ள முறைகளின்படி, உரிய முறையில், விண்ணப்பம் செய்து, தத்து எடுப்பு பற்றிய புத்தகத்தில் பதிவு செய்யக் கோரலாம்.*

பகுதி VI
பிரிவு 30
பக்கம் 29

*(78)*

**75. மனு எப்போது போட வேண்டும் என்பது பற்றியும், அதில் குறிக்கப்பட வேண்டிய விபரங்களும்:** *தத்து எடுப்பவர், மற்றும் தத்து கொடுத்தவர், கையெழுத்திட்டு, தத்து எடுத்த 90 நாட்களுக்குள் மனு செய்ய வேண்டும். அந்த மனுவில் கீழ்க்காணும் விபரங்கள் கொடுக்கப்படவேண்டும்.*

பகுதி VI
பிரிவு 31
பக்கம் 29

i) *தத்து எடுத்த தேதி;*

ii) *தத்து எடுத்த முறை;*

iii) *தத்து எடுக்கப்பட்ட நபர் அல்லது நபர்களின் பெயர் அல்லது பெயர்கள், வயது அல்லது வயதுகள்;*

iv) *தத்து எடுத்தவர் திருமணமானவராக இருந்தால், அவர் மனைவியின் பெயர், அவர் மனைவி இல்லாதவராக*

இருந்தால், ஏற்கனவே இறந்துவிட்ட மனைவியின் பெயர், ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரோ, அல்லது இறந்துவிட்ட மனைவியரோ இருந்தால் அவர்களுடைய பெயர், அவர் எந்த வரிசையில் அவர்களை திருமணம் செய்து கொண்டார், தத்துத் தாயாகக் கருதப்பட வேண்டிய மனைவி அல்லது இறந்த மனைவியின் பெயர்;

v) ஒரு பெண் தத்து எடுத்தால், அவள் கணவன் பெயர், மற்றும் தன்னுடன் வாழும் மனைவியர் அல்லது விதவைகளின் பெயர்,

vi) தத்து கொடுக்கும் நபரின் வயது மற்றும் பெயர்;

vii) தத்து எடுக்கப்பட்ட பையனின், பிறந்த வீட்டில் வைத்த பெயர்;

viii) தத்து எடுக்கப்பட்ட பையனின் வயது;

ix) தத்து எடுக்கப்பட்ட பையனின், தத்து எடுத்த வீட்டில் வைத்த பெயர்;

(79)

***76. தத்து எடுப்பதை பதிவு செய்தல்:-*** *பிரிவு 74-அ-வின் கீழ் நியமிக்கப்பட்ட அதிகாரி, தத்து எடுத்தவர் மற்றும் தத்து கொடுத்தவர் ஆகிய இருவரும் கையெழுத்திட்டு முறையாக தத்து எடுக்கப்பட்டது எனத் திருப்தி அடைந்தால் அதற்காக உள்ள புத்தகத்தில் தத்து எடுக்கப்பட்ட விவரங்களை அந்தப் புத்தகத்தில் எழுத வேண்டும்.*

*(80)*

## பகுதி IV உரிய வயது வராதோர் மற்றும் காப்பாளர் ஆகியோரைப் பற்றி

**77. விளக்கம் :** இந்தப் பகுதியில்

பகுதி V
பிரிவு 1
பக்கம் 22

அ) உரிய வயது வராதோர் என்றால் 18-வயதிற்கு உட்பட்டோர் என்று பொருள்.

ஆ) ''இயல்பான காப்பாளர்'' என்றால் பிரிவு 78-ல் சொல்லப்பட்டுள்ள நபரைக் குறிக்கும். ஆனால் அது கீழ்க் காணும் நபர்களை உள்ளடக்காது:

i) உரிய வயதுவராத நபரின் தந்தை எழுதிய உயிலின்படி நியமிக்கப்பட்ட காப்பாளர், அல்லது

ii) நீதி மன்ற உத்திரவால் நியமிக்கப்பட்ட நபர், அல்லது

iii) காப்பாளராக பணி புரிய, காப்பாளருக்கான நீதிமன்றத் தால் நியமிக்கப்பட்ட நபர்

(81)

**78. உரிய வயதுவராத ஓர் இந்துவின் இயல்பான பாதுகாவலர்:-** உரிய வயதுவராத இந்து நபரின் பொருளுக்கும், அவரை பாதுகாக்கவும் கீழ்க் காணுபவர்கள் இயல்பான பாதுகாவலர் என கருதப்படுவார்கள்-

பகுதி V
பிரிவு 4
பக்கம் 22

அ) ஒரு திருமணமாகாத பெண்ணிற்கும், அல்லது பைய னுக்கும் தந்தை பாதுகாவலராகக் கருதப்படுவார். அவருக்குப் பின் தாய் பாதுகாவலராக இருப்பார். ஆனால் உரிய வயது வராத நபர், 3-வயதிற்குட்பட்டவராக இருந்தால் தாய் பாதுகாவலராக இருப்பார்.

ஆ) முறையற்ற திருமணத்தில் பிறந்த பையனுக்கும் அதே உறவு முறையில் பிறந்த திருமணமாகாத பெண்ணிற்கும், தாயும், அவருக்குப் பிறகு தந்தையும் இயல்பான பாதுகாவலராக இருப்பர்.

இ) திருமணம் ஆன பெண்ணிற்கு கணவர் இயல்பான பாதுகாவ லராக இருப்பார்.

கீழ்க்காணும் சூழ்நிலையில் ஏதாவது ஒன்று இருந்தால் உரிய வயது வராத நபரின் இயல்பான பாதுகாவலராக ஒருவர் நீடிக்க முடியாது -

அ) அவர் இந்துவாக நீடிக்காவிட்டால், அல்லது

ஆ) பிரிவு 110- உட்பிரிவு (1)-ல் சொல்லியுள்ளபடி முழுமையாக வும் இறுதியாகவும் உலகப் பந்தத்தை துறந்து விட்டவராக இருந்தால்.

(82)

(83)

**79. தத்து எடுக்கப்பட்ட நபரின் இயல்பான பாதுகாப்புரிமை:-** தத்து எடுக்கப்பட்ட நபரின் பாதுகாப்புரிமை தத்து எடுக்கப்பட்டபின் அவர் பிறந்த குடும்பத்திலிருந்து தத்து எடுக்கப்பட்ட குடும்பத்திற்கு மாறிவிடும்.

பகுதி V
பிரிவு 5
பக்கம் 22

80. **இயல்பான பாதுகாவலரின் அதிகாரங்கள்:** 1) உரிய வயது வராத இந்துவின் பாதுகாவலர் இந்தப் பிரிவிற்குட்பட்டு அந்த நபரின் நன்மைக்காகவும் அந்த நபரின் சொத்தை அடைவதற்கும், பாதுகாக்கவும் எல்லா விதமான அவசியமான மற்றும் நியாயமான நடவடிக்கைகளில் ஈடுபடலாம். ஆனால் எந்தச் சூழ்நிலையிலும் அந்த நபரின் உரிமையை பாதிக்கும் வகையில் எதுவும் செய்யக்கூடாது.

2) நீதிமன்றத்தின் முன் அனுமதிபெறாமல் இயல்பான பாதுகாவலர் கீழ்க்காணும் எந்தக் காரியத்தையும் செய்யக்கூடாது:-

அ) அடமானம்; அல்லது பொருட்பிணைப் பொறுப்பு, விற்பனை, இனாமாக அளித்தல், அல்லது உரிய வயது வராத நபரின் அசையாச் சொத்துகளின் பரிமாற்றம் அல்லது;

ஆ) எந்தச் சொத்தையும் 5-வருடத்திற்கு மேல் குத்தகைக்கு விடுவதோ, அல்லது அந்த நபர் வயது வந்த காலத்திற்குப் பின் ஓர் ஆண்டிற்கு மேல் குத்தகைக்கு விடுவதோ கூடாது.

3) உட்பிரிவு (1) அல்லது (2)-க்கு எதிராக இயல்பான பாதுகாவலர் அந்த நபரின் அசையாச் சொத்துக்களை எவ்விதத்திலும் ஏதாவது செய்ய முயற்சித்தால், அந்த நபரோ அல்லது அதனால் பாதிக்கப்பட்டவரோ அந்த முயற்சியைத் தடுக்க நடவடிக்கை எடுக்கலாம்.

4) உட்பிரிவு (2)-ல் சொல்லப்பட்டுள்ள எந்த காரியங்களைச் செய்யவும் இயல்பான பாதுகாவலர் மனு செய்தால் அது மிக அவசியமான ஒன்றாக இருந்தாலோ அல்லது உரிய வயது வராத நபரின் நலனுக்காக இருந்தாலோ மட்டுமே நீதிமன்றம் தகுந்த அனுமதியை அவருக்கு அளிக்க வேண்டும்.

**பகுதி V**
**பிரிவு 6**
**பக்கம் 23**

5) பாதுகாவலர் மற்றும் பாதுகாப்பிலுள்ளவர் சட்டம் 1890 (VIII of 1890) பிரிவு 29-ன் படியும் உட்பிரிவு (2)ன் படியும் அனுமதி கோரும் மனுவிற்கு உத்திரவு வழங்க பின்கண்ட நடைமுறை கடைப்பிடிக்கப்பட வேண்டும்.

குறிப்பாக -

அ) மனு சம்பந்தப்பட்ட நடவடிக்கைகள் பிரிவு IV-அ-ன் படியான நடவடிக்கைகளாகக் கருதப்பட்டு இந்த அனுமதி மனு கவனிக்கப்பட வேண்டும்;

*ஆ) அந்தச் சட்டத்தின் பிரிவு 31 உட்பிரிவு (1) (2) (3) (4) - ஆகியவற்றில் சொல்லியுள்ள நடைமுறைகளை நீதிமன்றம் பின்பற்ற வேண்டும்; மற்றும்*

*இ) இயல்பான பாதுகாவலருக்கு உட்பிரிவு (2)-ன் கீழ் சொல்லப் பட்டுள்ள எதையும் செய்ய அனுமதி மறுக்கப்பட்டால் அவர் உயர்நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்யலாம்.*

*6) இந்தப் பிரிவில் ''நீதிமன்றம்'' என்று சொன்னால் அசையாச் சொத்துக்கள் உள்ள இடத்திற்கு முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ அதிகார வரம்பு பெற்றுள்ள மாவட்ட நீதிமன்றம் என்று பொருளாகும் அல்லது பிரிவு (4) - அ - பாதுகாவலர் மற்றும் பாதுகாப்பிலுள்ளவர் சட்டம் 1890 (VIII of 1890) படி அதிகாரம் அளிக்கப்பட்டுள்ள நீதி மன்றம் என்று பொருள்படும்.*

*(84)*

*(85)*

**81. இயல்பான பாதுகாவலரின் மாற்றி அமைக்கும் உரிமை:** உரிய வயது வராத ஓர் இந்து பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி இயல்பான பாதுகாவலர் மற்றொருவருக்குப் பொறுப்பு அளித்தால் அந்தப் பொறுப்பை கீழ்க்காணும் காரணங்கள் தவிர்த்து, மற்ற சூழ்நிலைகளில் மாற்றி அமைக்கலாம்.

பகுதி V
பிரிவு 7
பக்கம் 23

அ) மாற்ற அனுமதிப்பது வயது வராதவரின் நலனுக்கு எதிராக அமைந்திருத்தல்; அல்லது

ஆ) இயல்பான பாதுகாவலர் தொடர்ந்து இந்துவாக நீடிக்காமல் இருத்தல் அல்லது

இ) வேறு தகுந்த காரணங்களுக்காக மாற்றி அமைக்கும் உரிமையை அளிப்பது உசிதமில்லாதிருத்தல்.

*(85)*

**82. உயில்வழி பாதுகாவலரின் அதிகாரங்கள் :** 1) ஓர் இந்து தந்தை உரிய வயது வராத தன்னுடைய சட்டரீதியான குழந்தைகளில் ஏதேனும், ஒன்றைப் பார்த்துக் கொள்வதற்காகவோ அல்லது வயதுவராத குழந்தையின் சொத்துக்களை பாதுகாத்து கொள்வதற்காகவோ அல்லது இரண்டிற்குமாகவோ உயிலின் மூலமாக ஒரு பாதுகாவலரை நியமிக்கலாம்; ஆனால் வயது வராத இந்த நபரின் தாய் உயிருடன் இருந்து அந்த நபரின் பாதுகாவலராக இருக்கத் தகுதி உள்ளவராக இருக்கும்போது, வேறு எந்த நபரும் பாதுகாவலராக இருக்க இந்தப் பிரிவு அனுமதிப்பதாகக் கொள்ள முடியாது.

பகுதி V
பிரிவு 1
பக்கம் 23

2) தந்தையின் மரணத்திற்குப் பிறகு உயிலில் சொல்லப் பட்டுள்ள நிபந்தனைகளுக்குட்பட்டு, பாதுகாவலராக நியமிக்கப்பட்ட நபர் இயல்பான பாதுகாவலருடைய எல்லா உரிமைகளை யும் பெற்று அதற்கேற்ற முறையில் செயல்பட முடியும்.

3) இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ளவைகளுக்கு உட்பட்டு, ஓர் இந்து விதவை உயில் மூலமாக தன்னுடைய வயது வராத குழந்தைகள் எது ஒன்றையும் கவனித்துக் கொள்ளப் பாது காவலரை நியமிக்க முடியும்;

ஆனால் அவருடைய கணவர் ஏற்கனவே உயில் மூலமாக குழந்தைக்குப் பாதுகாவலரை நியமிக்காமல் இருந்தால் மட்டுமே அவர் இவ்வாறு செயல்பட முடியும்.

4) அவ்வாறு பாதுகாவலராக நியமிக்கப்பட்டவரின் உரிமை, உரிய வயது வராத நபர் பெண்ணாக இருந்தால், அவளுக்குத் திருமணம் ஆன உடன் அது முடிவிற்கு வந்துவிடும்.

(86)

***83. உரிய வயது வராத நபரை இந்துவாக வளர்ப்பது பாதுகாவலரின் கடமை:*** உரிய வயது வராத ஓர் இந்து நபரின் பாதுகாவலர் அந்த நபரை, ஓர் இந்துவாக வளர்ப்பது அவரது கடமை.

பகுதி V
பிரிவு 9
பக்கம் 23

(87)

***84. பாதுகாவலராக செயல்படும் நிலையிலுள்ள ஒருவர்,*** உரிய வயது வராத நபரின் சொத்தை எதுவும் செய்யக்கூடாது: இந்தத் தொகுப்பு அமலுக்கு வந்த பிறகு பாதுகாவலராக செயல்படும் நிலையிலுள்ள ஒருவர், உரிய வயது வராதவரின் சொத்தை விற்பதோ, அல்லது வேறு எவ்விதத்திலும் பாதிக்கும் வகையில் செயல்படவோ கூடாது.

பகுதி V
பிரிவு 10
பக்கம் 23

(88)

*(89)*

**85. உரிய வயது வராதவரின் நலன்தான் முக்கியமானது.** ஒரு பாதுகாவலரை நியமிக்கும்போதோ அல்லது அறிவிக்கும்போதோ அந்த நபரின் நலனை நீதி மன்றம் முக்கியமாகக் கருத வேண்டும். இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைகளின் காரணமாகவோ அல்லது பிரிவு 24-ல் சொல்லப்பட்டவைகளுக்காகவோ, ஒரு நபர் பாதுகாவலராக இருந்தால் அது உரிய வயது வராத அந்த நபரின் நலனுக்கு ஏற்றதல்ல என நீதிமன்றம் கருதினால் அந்த உரிய வயது வராத அந்த ஆணுக்கோ பெண்ணுக்கோ தான் பாதுகாவலராக இருப்பேன் என்று ஒருவர் உரிமை கோர முடியாது.

*பகுதி V*
*பிரிவு 12*
*பக்கம் 22*

## பாகம் V - கூட்டுக் குடும்ப சொத்து

**86. ஒரு குடும்பத்தில் பிறப்பதினால் மட்டும் சொத்தில் எந்த உரிமையும் கிட்டிவிடாது :** இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு, முன்னோரின் சொத்தில் அவர் உயிருடன் இருக்கும்போது எந்த உரிமையும் கோர முடியாது என்று சொல்லப்பட்டுள்ளதை எந்த நீதிமன்றமும் அங்கீகரிக்க வேண்டியதில்லை. *பகுதி III- அ பிரிவு 2 பக்கம் 12*

*விளக்கம் :* இந்தப் பிரிவில் வரும் ''சொத்து'', என்பதில் அசையும் மற்றும் அசையா சொத்துக்கள் - அவை முன்னோர் சொத்தோ அல்லது இல்லையோ, எல்லோரும் சேர்ந்து சம்பாதித்ததோ, அல்லது மூதாதையர் சொத்தின் விளைவாக கிடைத்ததோ அல்லது வேறு எந்த முறையில் பெறப்பட்டதோ அடங்கும்.

(90)

**87. கூட்டு நிலைச் சொத்துரிமை பொது நிலச் சொத்துரிமையாக மாறுவது:** இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு எஞ்சிய உரிமை முறையில் அமைந்த சொத்தில் ஒருவருடைய உரிமையை அங்கீகரிக்கக் கூடாது. இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபோது, கூட்டுக் குடும்ப சொத்தை, அனுபவிக்கும் யாவரும், இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த அன்று, அவர்களுக்கிடையே பிரிவினை ஏற்பட்டு, ஒவ்வொருவரும் தனித்தனியாக முழு உரிமைப் பெற்று அனுபவிப்பதாகக் கருதப்படும். *பகுதி III- அ பிரிவு 2 பக்கம் 11*

இந்தப் பிரிவில் சொல்லப்பட்டுள்ள எதுவும் இந்தச் சொத்தில் வாழும் உரிமை பெற்ற மற்றும் ஜீவனாம்சம் பெற்ற எவரையும் பாதிக்காது. மற்ற நபர்கள் இந்தச் சொத்தில் தனியாக உரிமை பெற்றவர்களாக இருப்பதால், அவர்கள் தங்கள் உரிமையை நிலைநாட்ட, இந்தத் தொகுப்பு நிறைவேற்றப்படவில்லை என்று கருதி நீதிமன்றத்தில் தங்கள் உரிமையை நிலை நாட்ட முடியும்.

இந்த வரையறையின்படி தனியாகச் சொத்தை வைத்துக் கொள்ள உரிமைப் பெற்ற எந்தப் பெண்ணும் இந்தப் பிரிவின்படி அனுபவிக்கும் உரிமை மட்டுமே பெற முடியும். அவள் இறந்த பிறகு, இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்குமுன்; உரிமை பெற்றிருந்த மற்ற நபர்களுக்கு அந்த சொத்து போய்ச்சேரும். *பகுதி II பிரிவு 3 வரையறை பக்கம் 3*

(91)

**88. இந்து மகனின் தர்ம ரீதியான கடமை விதி அகற்றப்பட்டது:** (1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபிறகு உட்பிரிவு (2)-க்கு உட்பட்டு தர்ம ரீதியான கடமையை அமுல் படுத்த ஒரு மகன், பேரன், கொள்ளுப் பேரன் ஆகியோருக்கெதி ராக, அவருடைய தந்தை, தாத்தா மற்றும் தாத்தாவின் அப்பா பட்ட கடனுக்காக எந்தவித நடவடிக்கையும் எடுக்க முடியாது.

2) உட்பிரிவு - (1)-ல் சொல்லப்பட்டுள்ள எதுவும் இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பு பட்ட கடனாக இருந்தால் கீழ்க்காணும் நடவடிக்கையைப் பாதிக்காது:-

அ) மகன், பேரன், கொள்ளுப்பேரன் ஆகியோருக்கு எதிராக கடன் கொடுத்தவர் நடவடிக்கை எடுக்கும் உரிமை,. அல்லது

ஆ) அந்தக் கடனுக்காக எந்த சொத்தையும் விற்றது **இந்தத் தொகுப்பு இயற்றப்பட்டதாகக் கருதாமல்,** தர்ம ரீதியான கடமையின் அடிப்படையில் நடவடிக்கை எடுக்க முடியும்.

*விளக்கம் :* உட்பிரிவு (2)-ல் மகன் பேரன், கொள்ளுப் பேரன் என்று சொல்லப்பட்டுள்ளது, இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருமுன் பிறந்தவரையோ அல்லது தத்து எடுக்கப்பட்டவரையோ குறிக்கும்.

(92)

**89. இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருமுன் பட்ட கடனுக்காக கூட்டுக் குடும்ப உறுப்பினர்களின் பொறுப்பு பாதுகாக்கப்படாது-** கூட்டுக் குடும்பத்தின் தலைவரால் இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருமுன், குடும்ப நன்மைக்காக கடன் வாங்கப்பட்டிருந்தால் அந்தக் கடனை திருப்பிக் கொடுக்கும். அவருடைய பொறுப்பு மாறாது, இந்தத் தொகுப்பு இயற்றப் படவில்லை என்று கருதி கூட்டக் குடும்ப உறுப்பினர்கள் எல்லோருக்கும் எதிராகவோ அல்லது கடனை திருப்பிக் கொடுக்க கடமைப் பட்டுள்ளவருக்கு எதிராகவோ நடவடிக்கை எடுக்க முடியும்.

(93)

***90. விலக்கு அளிக்கப்பட்ட பிரிக்கப்பட முடியாத சொத்துக்கள்:*** *இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள எதுவும், தனி நபருக்குக் கிடைக்கும் சொத்திற்குப் பொருந்தாது. அது வழக்குமுறையின் வழி வாரிசுரிமையாகவோ, அல்லது அன்பளிப்பாகவோ, அல்லது சட்ட முறையிலோ கிடைக்கலாம்.*

(102)

## பாகம் VI பெண்ணின் சொத்து

**91. பெண் சொத்தின் நிலை:** *(1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்தபின் ஒரு பெண் எந்த சொத்தைப் பெற்றாலும் அது அவளின் முழுமையான சொத்தாகும்.*

**பகுதி II**
**பிரிவு 13**
**பக்கம் 9**

*(2) உட்பிரிவு (1)ல் சொல்லப்பட்டுள்ள எதுவும், அன்பளிப்பு அல்லது உயில் மூலம் பெறப்பட்டிருந்தால், அவற்றில் சொல்லப் பட்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டுத்தான் அவற்றை அவள் அனுபவிக்க முடியும்.*

*ஆனால் அவள் பெண் என்பதற்காக மட்டும் அந்த நிபந் தனைகளை விதிக்க முடியாது.*

*விளக்கம் : ''சொத்து'' என்றால் அது அசையும் மற்றும் அசையாச் சொத்துக்களைக் குறிக்கும். அந்தச் சொத்து அப்பெண்ணால், அவள் திருமணத்திற்கு முன்போ அல்லது பின்போ பெறப் பட்டிருக்கலாம். அவள் விதவையாக இருக்கும்போதோ, அல்லது வாரிசுரிமையாகவோ அல்லது பாகப் பிரிவினையிலோ, அல்லது அவளது ஜீவனாம்சத்திற்காகவோ, ஜீவனாம்சத்திற்கு ஏற்கனவே வரவேண்டியவையாகவோ, அல்லது உறவினர் அல்லது மற்ற வரால் அன்பளிக்கப்பட்டதாகவோ, அவளது திறமையால் பெறப் பட்டதாகவோ அல்லது வாங்கியதாகவோ அல்லது வேறு முறை யிலோ இருக்கலாம்.*

*(103)*

**92. பெண் சொத்து கைமாறும் நிலை:** *1) இந்தத் தொகுப்பு அமலுக்கு வந்தபின் ஒரு பெண் இறந்துவிட்டால் அவள் அந்தச் சொத்தை இந்தத் தொகுப்பு வருவதற்கு முன்போ அல்லது பின்போ எப்போது பெற்றிருந்தாலும் அவளுக்குப் பிறகு பாகம் VII-ல் சொல்லியுள்ளபடி அவளுடைய வாரிசுக்குப் போகும்.*

**பகுதி II**
**பிரிவு 3**
**பக்கம் 3**

*2) அவள் இறக்கும்போது இந்து பெண் சொத்து என அழைக்கப்படுவதை அனுபவிக்கும் உரிமை மட்டும் பெற்றிருந் தால் உட்பிரிவு (1)-ல் சொல்லியுள்ளவை, அந்தச் சொத்திற்குப் பொருந்தா. அம்மாதிரியான சொத்து கீழ்க்காணும் முறையில் கை மாறும்:*

*(104)*

i) வாரிசுரிமை முறையில் அவள் அச்சொத்தைப் பெற்றிருந்தால், பகுதி VII-ல் சொல்லப்பட்டுள்ள கடைசியாக இருந்த முழு அதிகாரம் பெற்ற உரிமையாளரின் வாரிசுகளுக்குப் போகும்;

ii) பாகப் பிரிவினை மூலம் அச் சொத்து பெறப்பட்டிருந்தால் அல்லது வேறு முறையில் பெறப்பட்டிருந்தால், இந்தத் தொகுப்பு இயற்றப்படாமல் இருந்தால் யாருக்குப் போகுமோ அவர்களுக்குப் போகும்.

*(104)*

**93) சீதனம் மனைவியின் நலனுக்காகப் பாது காக்கப்பட வேண்டும்:** *(1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு, எந்த சீதனமும், திருமணத்தன்றோ, திருமணத்திற்கு நிபந்தனையாகவோ அல்லது திருமணத்திற்கு பிரதி பலனாகவோ அளிக்கப்பட்டிருந்தால், திருமணமான அந்தப் பெண்ணின் சொத்தாகக் கருதப்படும்.*

பகுதி IV
பிரிவு 28
பக்கம் 20

*(2) அப்பெண்ணிற்காக சீதனத்தைப் பெற்ற ஒருவர் அவள் நன்மைக்காக அதை பாதுகாக்க வேண்டும். அவளுக்கு 18 வயது முடிந்தவுடன் அதை அவளிடம் கொடுக்க வேண்டும். அவள் அதற்குள் இறந்துவிட்டால் பாகம் VII-ல் சொல்லப்பட்டுள்ள வாரிசுகளுக்குக் கொடுக்க வேண்டும்.*

*விளக்கம் :- இந்தப் பகுதியில் ''சீதனம்'' என்று சொன்னால் எந்த சொத்தும் ஒருவரால், திருமணத்தின்போது, அதற்கு பிரதி பலனாகவோ, அல்லது நிபந்தனையாக அளித்ததோ அல்லது அளிப்பதாக வாக்குறுதி கொடுக்கப்பட்டதாகவோ இருக்கலாம். ஆனால் திருமணத்தின் போது மணமகனுக்கோ அல்லது வேறு நபருக்கோ அளிக்கப்பட்ட சிறு அன்பளிப்பு இதில் சேராது.*

*(105)*

# பகுதி VII - வாரிசு உரிமை

## பாகம் I

### பொது

**94. இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள சில சொத்துக்களுக்கு விதி விலக்கு :-** இந்தப் பகுதி பின்கண்டவற்றுக்குப் பொருந்தாது:

பகுதி II
பிரிவு 1
பக்கம் 2

i) ஆளுநர் அதிகாரத்திற்குட்பட்ட எல்லைக்குள் உள்ள விவசாய நிலம்; அல்லது

ii) வழக்கமான விதிமுறையின்படி ஒரு தனி வாரிசுக்கு கிடைக்கும் அல்லது அன்பளிப்பாக அளிக்கப்படும் அல்லது சட்ட ரீதியாக கிட்டும் சொத்து.

*(106)*

**95. இந்தப் பகுதியின் அமுலாக்கம்:** பிரிவு 94-ல் சொல்லப்பட்டவைகளுக்கு உட்பட்டு உயில் எழுதாமல், இந்த தொகுப்பு அமுலுக்கு வந்தபின் இறந்துவிடும் ஓர் இந்துவின் சொத்துக்கு கீழ்க்காணும் முறையில் வாரிசு உரிமை முடிவு செய்யப்படும்:-

பகுதி II
பிரிவு 3
பக்கம் 3

(அ) அசையும் சொத்தாக இருந்தால் உயில் எழுதாமல் இறந்துவிட்டவர் அவர் மரணமடைந்தபோது, இந்தச் சட்டம் அமுல் படுத்தப்படும் இடங்களில் வசிக்கவில்லை என்பது நிரூபணமாக வேண்டும்;

(ஆ) அசையா சொத்தாக இருந்தால் மேலே கூறிய எல்லைக் குள் அது இருந்தால் உயில் எழுதாமல் இறந்துபோனவர் அவர் இறந்த போது அந்தக் குறிப்பிட்ட எல்லைக்குள் வசித்தாரா இல்லையா என்பது தெரிய வேண்டும்.

*விளக்கம் :-* இந்தப் பகுதியை பொறுத்தவரை ஓர் இந்துவின் வாழ்விடம் என்பது பிரிவு 6 முதல் 18 வரை இரண்டையும் சேர்த்து இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 (XXXIX of 1925)-ல் சொல்லப்பட்டுள்ளவற்றின் அடிப்படையில் தீர்மானிக்கப்பட வேண்டும்.

*(107)*

**96. வாரிசு உரிமை விஷயத்தில் பிரிந்த மற்றும் பிரியாத மகன்களுக்கிடையே வேற்றுமை கிடையாது-** உயில் முறை அல்லாத வாரிசுரிமை விஷயத்தில் பின்கண்டவாறு வேற்றுமை பாராட்டக்கூடாது:- பகுதி II பிரிவு 7 விதிகள் 2,4 பக்கம் 3

1) உயில் எழுதாமல் இறந்துபோனவரிடமிருந்து பிரிந்த ஒரு மகனுக்கும் பிரியாத ஒரு மகனுக்கும் இடையே அல்லது, பிரிந்த ஒரு மகனுடன் மறுபடியும் சேர்ந்துக் கொண்ட ஒரு மகனுக்கும் இடையே;

2) விதவையான ஒரு பெண் வாரிசு மற்றும் விதவை அல்லாத ஒரு பெண் வாரிசு அல்லது ஏழ்மையான ஒரு பெண் வாரிசு, மற்றும் பணக்கார பெண் வாரிசு, குழந்தை உள்ள அல்லது குழந்தை இல்லாத ஒரு பெண் வாரிசு, அல்லது குழந்தை பிறக்க வாய்ப்புள்ள ஒரு பெண் வாரிசு ஆகியோருக்கு இடையே. பகுதி II பிரிவு 14 (4) பக்கம் 10

(108)

## பாகம் II

### உயில் முறை அற்ற வாரிசு உரிமை

**97. விளக்கம் :** இந்தப் பகுதியில் குறிப்பிட்ட சூழ்நிலை இதற்கு முரணாக இருந்தால் தவிர

*பாகம் II பிரிவு 2 பக்கம் 2*

அ) *''ஆண் வழி உறவு''* : ஒரு நபர் அடுத்தவருக்கு ஆண்வழியினர் (கோத்ரஜா) என்றால் இரண்டு பேரும் இரத்தவழி உறவிலோ அல்லது தத்து எடுத்தவகையிலோ ஆண்கள் மூலமாக மட்டுமே உறவானவர்கள்.

*பாகம் II பிரிவு 5 பக்கம் 2*

ஆ) *''பெண் வழி உறவு''* : ஒரு நபர் அடுத்த நபருக்கு பெண் வழி உறவினர் என்றால் (பந்து) இரண்டு பேரும் இரத்த . ழிமுறையிலோ அல்லது தத்து எடுத்த முறையிலோ பெண்கள் மூலமாக மட்டுமே உறவானவர்கள்.

இ) ''வாரிசு'' என்றால் உயில் எழுதாமல் இறந்து போனவரது சொத்தில் இந்தப் பகுதியின் கீழ் பங்கு பெற உரிமை பெற்ற ஆணோ, பெண்ணோ ஆவார்.

ஈ) ''உயில் முறையற்ற வாரிசு'' என்றால் ஒரு நபர் தான் இறக்கும் முன் அமுல் படுத்த தகுதியுள்ள உயிலை எழுதாமல் இறந்து விட்டால், அவர் தனது சொத்துக்கு உயில் முறையற்ற வாரிசை விட்டு விட்டு இறந்தார் என்று பொருள்.

2) இந்தப் பகுதியில் குறிப்பிட்ட சூழ்நிலை வேறு பொருளைக் குறித்தால் தவிர, ஆண்களைக் குறிக்கும் சொல் பெண்களையும் உள்ளடக்கியதாகக் கொள்ள முடியாது.

(100)

**98. இந்து ஆண் விஷயத்தில் வாரிசுரிமை சம்பந்தமான விதிமுறைகள்:** இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைகளுக்கு உட்பட்டு, உயில் எழுதாமல் இறந்துவிடும் ஓர் இந்து ஆணினுடைய சொத்துக்களுக்கு கீழ்க்காணும் விதிமுறைகளின்படி வாரிசுகள் நிர்ணயிக்கப்படும்:

*பாகம் II பிரிவு 4 பக்கம் 4*

அ) முதலாவதாக, அட்டவணை VII பிரிவு 1-ல் சொல்லப்பட்டுள்ள உறவினர்களான முன்னுரிமை பெற்ற வாரிசுகள்;

ஆ) இரண்டாவதாக, அட்டவணை VII பிரிவு II-ல் சொல்லப்பட்டுள்ள உறவினர்களான முன்னுரிமை பெற்ற வாரிசு இல்லா விட்டால் ஏழாவது அட்டவணை பிரிவு II-ல் சொல்லப்பட்டுள்ள உறவினர்களான முன்னுரிமை பெற்ற வாரிசுகள்;

இ) மூன்றாவதாக இரண்டு வகைகளையும் சேர்ந்த முன்னுரிமை பெற்ற வாரிசுகள் இல்லை என்றால் பிரிவு 102-ல் சொல்லப்பட்டுள்ள அவரது ஆண்வழி உறவின வாரிசுகள். இவை பிரிவு 102-ன் படி இருக்க வேண்டும்.

ஈ) கடைசியாக ஆண்வழி உறவினர் இல்லை என்றால், பிரிவு 103-ல் சொல்லப்பட்டுள்ள பெண்வழி உறவினர்கள்.

(110)

பாகம் II
பிரிவு 6
பக்கம் 6

**99. முன்னுரிமை பெற்ற வாரிசுகளிடையே வாரிசுரிமையை நிர்ணயிக்கும் முறை:** அட்டவணை VII பிரிவு 1-ல் சொல்லப்பட்டுள்ள வாரிசுகள்ஒன்றாக எடுத்துக் கொள்வார்கள். பிரிவு II-ல் முதல் வரிசையில் குறிக்கப்பட்டு உள்ளவர்கள் இரண்டாவது வரிசையில் குறிக்கப்பட்டு உள்ளவர்களை விட முன்னுரிமை பெறுவார்கள். இரண்டாவது வரிசையில் குறிக்கப்பட்டு உள்ளவர்கள் மூன்றாவது வரிசையில் உள்ளவர்களை விட முன்னுரிமை பெறுவார்கள். இதே முறையில் அடுத்தடுத்து உள்ள வரிசைகளில் உள்ளவர்களைவிட முன் வரிசையில் உள்ளவர்கள் முன்னுரிமை பெறுவார்கள்.

(111)

பகுதி IV
பிரிவு 7
பக்கம் 6

**100. பிரிவு I-ல் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை வாரிசுகளுக்கிடையே சொத்துப் பங்கீடு:** (1) உயில் எழுதாமல் இறந்துவிட்டவரின் சொத்து பிரிவு I-ல் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை வாரிசுகளுக்கிடையே பங்கிடப்படும். அப்போதுதான் விதவையின் பங்கு மற்ற மகன்களுக்குச் சமமாக இருக்கும். அது முதலில் இறந்துவிட்ட மகனையும்; மகனின் மகனையும் உள்ளடக்கும். ஒவ்வொரு மகளின் பங்கும் ஒவ்வொரு மகனின் பங்கிற்கு சமமாக இருக்கும். இவ்விதம் முதலில் இறந்துவிட்ட மகன், எந்த மகனையோ அல்லது மகளின் மகனையோ விட்டுச் செல்லாமல், விதவையை மட்டும் விட்டுவிட்டு இறந்தால், அல்லது மகனின் விதவை விட்டுவிட்டு இறந்தால், முன்னால் இறந்த மகனின் பங்கு இறந்தவர் மகனின் பங்கில் பாதியாக இருக்கும்.

(2) உட்பிரிவு (I)-ல் சொல்லப்பட்டுள்ள உயில் எழுதாமல் இறந்தவரின் மகன் அவருக்கு முன் இறந்த விட்டிருந்தால் சொத்து கீழ்க்காணும் முறையில் பிரிக்கப்படும்:-

அ) முன்னால் இறந்த அந்த மகன், தான் இறந்தபிறகு மகனையோ அல்லது மகனின் மகனையோ விட்டு விட்டு இறந்தால், அவன் பங்கும் அவன் விதவையின் பங்கும், இறந்த மகனின் பங்கும் சமமாக இருக்கும் வகையில் பிரிக்கப்படும். உயில் எழுதாமல் இறந்தவர் ஒரு மகனை விட்டு விட்டு இறந்திருந்தால் அவனுடைய பங்கும் சமமாக இருக்கும்.

ஆ) முதலில் இறந்துவிட்ட மகனின் மகனுடைய பங்கை உயில் எழுதாமல் இறந்துவிட்டவருக்கு முன்பாக அவன் இறந்துவிட்டால், அவனுடைய விதவை மற்றும் மகன்கள் சமமாகப் பங்கிட்டுக் கொள்வார்கள்.

இ) முதலில் இறந்து விட்ட மகன், தன் விதவையை விட்டு விட்டு இறந்தாலோ, அல்லது மகனின் விதவை அல்லது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மகன்களின் விதவைகளை விட்டு விட்டு இறந்தாலோ, ஆனால் அவன் ஒரு மகனையோ, மகனின் மகனையோ விட்டுச் செல்லாமலிருந்தால், அது உயில் எழுதாமல் இறந்தவர் இறக்கும்போது உள்ள நிலையாக இருந்தால், முதலில் இறந்த மகனின் சொத்து அவனது விதவை மற்றும் அவனது மகனின் விதவை ஆகியோருக்கிடையே பங்கிடப்படும். அப்போது தான் முதலில் இறந்த மகனின் விதவையின் சொத்து, முதலில் இறந்த மகனின் விதவையின் சொத்தை விட இரண்டு மடங்காக இருக்கும்.

3) இந்த பிரிவிற்காக, ஒரு நபர் ஒன்றுக்கு மேற்பட்ட விதவை களை விட்டுவிட்டுச் சென்றால் அவர்கள் யாவரும் சொத்தை தங்களுக்குள் சமமாக பங்கிட்டுக் கொள்வார்கள். ஒரு விதவை மட்டும் இருந்தால் அவளுக்கு என்ன பங்கு கிடைக்குமோ அதை அவர்கள் யாவரும் சமமாக பங்கிட்டுக் கொள்வார்கள்.

*உதாரணம்*

i) உயில் எழுதாமல் இறந்துவிட்டவருக்கு A, B, C, என மூன்று மகன்கள் உயிருடன் இருக்கின்றனர். முதலில் இறந்துவிட்ட D-என்ற மகன் மூலம் 5 பேரன்கள். முதலில் இறந்த உ என்ற மற்றொரு மகன் மூலம் 2 கொள்ளுப் பேரன்கள். A, B, C ஆளுக்கு ஒரு பாகம் எடுத்துக் கொள்வார்கள். D, மற்றும் E-ன் குடும்பம் ஆளுக்கு ஒரு பங்' எடுத்துக் கொள்ளும். D-யின் பேரன்களும், Eயின் கொள்ளுப் பேரன்களும் அவர்கள் குடும்பத்திற்கு ஒதுக்கிய பங்கில் சமமாக எடுத்துக் கொள்வார்கள். இறந்துவிட்டவரின் ஒவ்வொரு மகனும் ஐந்தில் ஒரு பங்கை யும், ஒவ்வொரு பேரனும் 20-ல் ஒரு பங்கையும், கொள்ளுப்பேரன்கள் 10-ல் ஒரு பங்கையும் எடுத்துக் கொள்வார்கள்.

ii) ஒரு விதவையோ அல்லது மகளோ மட்டும்தான் உயில் எழுதாமல் இறந்தவருக்கு ்ாரிசாக உள்ளார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்போது அவள் அவருடைய எல்லாச் சொத்தையும் எடுத்துக் கொள்வாள்.

iii) முன்னால் இறந்துவிட்ட மகனின் உயிருடன் உள்ள வாரிசுகள் விதவையும் இரண்டு பேரப் பிள்ளைகளுமாகும். விதவை ஒரு பாகமும், இரண்டு பேரப்பிள்ளைகளும் சேர்ந்து ஒரு பாகமும் எடுத்துக்கொள்கிறார்கள். ஆகையால் பங்கு பெறக்கூடிய சொத்தில் விதவைக்கு பாதியும் ஒவ்வொரு பேரனுக்கும் 1/4 பாகமும் கொடுக்கப்படுகிறது.

iv) உயிருடன் இருக்கும் வாரிசுகள் ஒரு மகளும், விதவையுமாகும். ஆகையால் முன்னால் இறந்துவிட்ட மகனின் சொத்தில் மகளுக்கு ஒரு பாகமும் விதவைக்கு பாதிபாகமும் கிடைக்கும்.

v) உயிருடன் இருக்கும் வாரிசுகள் மகன், மகள் மற்றும் முன்னால் இறந்துவிட்ட மகனின் விதவை. மகனுக்கு ஒரு பாகமும் மகளுக்கு ஒரு பாகமும், முன்னால் இறந்து விட்ட மகனின் விதவை பாதி பாகமும் எடுத்துக் கொள்ளலாம்.

vi) உயிருடன் உள்ள வாரிசுகள் ஒரு மகன், மகள், விதவை, மற்றும் முன்னால் இறந்துவிட்ட மகனின் மகன். மகனுக்கு ஒரு பாகமும், மகளுக்கு ஒரு பாகமும், விதவை மற்றும் முன்னால் இறந்துவிட்ட மகனின் மகனும் சேர்ந்து ஒரு பாகமும் எடுத்து அவர்களுக்கிடையே சமமாகப் பங்கிட வேண்டும்.

vii) உயிருடன் உள்ள வாரிசுகள் :

அ) விதவை ஆ) மகன்

இ) மகள் ஈ) முன்னால் இறந்துவிட்ட மகனின் விதவை,

உ) விதவை மற்றும் முன்னால் இறந்துவிட்ட மற்றொரு மகனின் இரண்டு மகன்கள்.

விதவைக்கு ஒரு பாகம், மகனுக்கு ஒரு பாகம்; மகளுக்கு ஒரு பாகம்; முன்னால் இறந்த மகனின் விதவை (ஈ) பாதி பாகம். அ-வில் குறிக்கப்பட்டுள்ள வாரிசுகளில் அவர் எல்லோருக்கும் சேர்ந்து ஒரு பாகம். பிறகு அவர்களுக்கிடையே அது சமமாகப் பங்கிடப்பட வேண்டும்.

viii) உயிருடன் உள்ள வாரிசுகள் :-

அ) மகன்,

ஆ) முன்னால் இறந்துவிட்ட மகனின் விதவை மற்றும் மூன்று மகன்கள்,

இ) (ஆ)-ல் சொல்லப்பட்டுள்ள முன்னால் இறந்த மகனின் மகனின் விதவை.

மகனுக்கு ஒரு பாகமும், ஆ - இ குறிக்கப்பட்டுள்ள வாரிசுகள் சேர்ந்து ஒரு பாகமும் எடுத்துக் கொள்வார்கள். பின்னால் சொன்ன பாகம் பகிர்ந்து அளிக்கப்பட்டால்தான், விதவை மற்றும் ஆ-ல் சொல்லப்பட்டுள்ள ஒவ்வொரு மகனும், ஒரு பகுதி எடுத்துக் கொண்டு, இ -ல் சொல்லப்பட்டுள்ள விதவை அந்தப் பகுதியில் பாதியும் எடுத்துக் கொள்வார்கள்.

இதன் விளைவாக முன்னால் இறந்து விட்ட மகன் பகிர்ந்து அளிக்கக் கூடிய சொத்தில் பாதி பாகமும், அவரின் முன்னால் இறந்துவிட்ட மகனின் விதவை 9-ல் ஒரு பாகமும், முன்னால் இறந்துவிட்ட மகனின் மூன்ற மகன்கள் 9-ல் ஒரு பாகமும் இறந்துவிட்ட நபரின் பேரில் விதவை 8-ல் ஒரு பாகமும் எடுத்துக் கொள்வார்கள்.

***101. பிரிவு II-ல் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை வாரிசுகளுக்கிடையே பகிர்ந்து அளிக்கும் முறை :*** உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் சொத்துக்கள், 'அட்டவணை VII பிரிவு II-ல் சொல்லப்பட்டுள்ள வரிசையில் உள்ள வாரிசுகள் சமமாக எடுத்துக் கொள்வார்கள்.

*(114)*

***102. பெண் வழியில் யார் வாரிசுகள் :*** அட்டவணை 7-ல் பிரிவு I அல்லது II-ல் சொல்லப்பட்டுள்ள முன்னுரிமை வாரிசுகள் இல்லை என்றால், இறந்து விட்ட நபரின் ஐந்துதலைமுறைகளுக்கு உட்பட்டபெண் வாரிசுகள் இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளுக்குட்பட்டு சொத்தை எடுத்துக் கொள்வார்கள்.

பகுதி I
*பிரிவு 8*
*பக்கம் 7*

*(115)*

*103. பெண்வழி உறவு வாரிசுகள்:* முன்னுரிமை வாரிசுகள் மற்றும் ஆண் வழி வாரிசுகள் இல்லை என்றால் இறந்துவிட்ட நபரின் ஐந்து தலைமுறைக்கு உட்பட்ட பெண்வழி உறவினர்களை இந்தப் பகுதியில் சொல்லியுள்ள விதிமுறைகளுக்குட்பட்டு எடுத்துக் கொள்ளலாம்.

பாகம் I
பிரிவு 8
பக்கம் 7

(116)

***104. ஆண்வழி உறவுகள் மற்றும் பெண்வழி உறவினர்களுக்கிடையே வாரிசுரிமையை நிர்ணயிக்கும் முறை:*** ஆண்வழி அல்லது பெண் வழி உறவுகளுக்கிடையே வாரிசுகளை நிர்ணயிக்கக் கீழ்கண்ட விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டும்:-

பாகம் II
பிரிவு 9
பக்கம் 7, 8

*விதி 1:* இரண்டு வாரிசுகளில் குறைந்த அல்லது முன் தலைமுறையில்லாத வாரிசுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.

*விதி 2 :* முன்தலைமுறைகள் எண்ணிக்கை சமமாக இருந்தால் அல்லது இல்லாமல் இருந்தால் முன்தலைமுறையில்லாத அல்லது குறைவான முன்தலைமுறைகள் உள்ள வாரிசுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.

*விதி 3 :* பின் தலைமுறைகள் எண்ணிக்கை சமமாக இருந்தால், அல்லது இல்லாதிருந்தால் ஆண் தலைமுறையிலுள்ள வாரிசுக்கு பெண் தலைமுறை வாரிசைவிட முன்னுரிமை அளிக்கப்படும். உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் தலைமுறையிலிருந்து இது கணக்கிட படவேண்டும். இந்த இரு வாரிசுகளின் தலைமுறைகள் தனித்தனியாகக் கணக்கிடப்பட வேண்டும்.

*விதி 4 :* இரண்டு தலைமுறைகள் தனித்தனியே பிரிக்கப்பட முடியாத சூழ்நிலை இருந்தால் பெண் வாரிசை விட ஆண் வாரிசுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும்.

*விதி 5 :* இரண்டு வாரிசுகளுக்குமிடையே யாரை தேர்ந்தெடுப்பது என்ற பிரச்சினை இருந்தால் இருவருக்கும் சமமாக கொடுக்க வேண்டும்.

*உதாரணங்கள்*

கீழ்க்காணும் உதாரணங்களில் F மற்றும் M என்பது F- தந்தையையும் M-தாயையும் குறிக்கும். உயில் எழுதாமல் இறந்த நபரின் முன்னோர்களைப் பற்றி குறிப்பிடும்போது இது பொருந்தும். கு மற்றும் ஈ ஆகியவை மகனையும் மகளையும் பொது தலைமுறையிலிருந்து கீழ்நோக்கி வரும்போது மகனையும்

மகளையும் குறிக்கும். MFSS என்பது உயில் எழுதாமல் இறந்து விட்ட நபரின் தாயின் தந்தையின் மகனின் மகனையும் (தாயின் சகோதரரின் மகன்) FDS என்பது தந்தையின் மகளின் மகனையும் (சகோதரியின் மகன்) குறிக்கும்.

i) இங்கு போட்டியிடும் உறவினர்கள் யார் என்றால் (1) SDSS - மகனின் மகளின் மகனின் மகன். 2) FDDS (சகோதரியின் மகளின் மகன்). எண் (1) மேல் தலைமுறை இல்லாத காரணத்தால் எண் (2) விட முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

ii) போட்டி போடும் வாரிசுகள் யார் என்றால், 1) FDDD - சகோதரியின் மகளின் மகள். 2) MFSSD தாய்வழி மாமாவின் மகனின் மகள். முன்னால் சொல்லப்பட்டுள்ளவர் ஒரே ஒரு தலைமுறையைக் கொண்டு இருப்பதால், பின்னால் சொல்லப்பட்டுள்ளவர் இரண்டு தலைமுறைகளை கொண்டுள்ளதால் முன்னால் சொல்லப்பட்டவருக்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

iii) போட்டி போடும் உறவினர்கள் யார் என்றால், (1) FDSS சகோதரியின் மகனின் மகன். 2) MFSSD தாய்வழி மாமாவின் மகனின் மகள். முதல் சொன்னவருக்கு ஒரு முன் தலைமுறை இருப்பதால் இரண்டு தலைமுறையுள்ள பின்னால் சொல்லப்பட்டவரைவிட முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

iv) போட்டி போடும் உறவினர்கள் யார் என்றால் - 1) MFDSS அம்மாவின் சகோதரியின் மகனின் மகன், 2) MFFDS அம்மாவினது அப்பாவின் சகோதரியின் மகன். முன்னால் சொல்லப்பட்டுள்ளவர் இரண்டு முன் தலைமுறைகளைக் கொண்டிருப்பதால் பின்னால் சொல்லப்பட்டுள்ள மூன்று தலைமுறைகளைக் கொண்டுள்ளவரை விட முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

v) போட்டி போடும் உறவினர்கள் யார் என்றால், (1) MFM - தாயின் தந்தையின் தாய் 2) FFFDSS - தந்தையின் தந்தையின் சகோதரியின் மகனின் மகன். இரண்டு வகையிலும் முன்தலைமுறை சமமாக இருக்கிறது. அதாவது மூன்று; ஆனால் முதலாவதன் கீழ் தலைமுறை கிடையாது. ஆனால் இரண்டாவதன்கீழ் மூன்று கீழ் தலைமுறைகள் இருக்கின்றன. ஆகவே முதலாவது (1) முன்னுரிமை பெறுகிறது.

vi) போட்டிபோடும் உறவினர்கள் யார் என்றால் 1) FMF (தந்தையின் தாயின் தந்தை) 2) MFF (தாயின் தந்தையின் தந்தை). இரண்டிலும் முன் தலைமுறை சமம். பின் தலைமுறை கிடையாது. முதல் நிலையிலேயே இரு வாரிசுகளுக்கும் வித்தியாசம் இருக்கிறது. எண் (1) ஆண் வழி வாரிசு எண் (2) பெண் வழி வாரிசு. ஆகையால் எண் (1)-ற்கு எண் (2) ஐ விட முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

vii) போட்டி போடும் உறவினர்கள் யார் என்றால் (1) FDSS (சகோதரியின் மகனின் மகன்), 2) FDDS - (சகோதரியின் மகளின் மகன்). இரண்டு பேரும் முன் தலைமுறையிலும் பின் தலைமுறையிலும் சமமாக இருக்கிறார்கள். மூன்றாவது நிலையில் இரண்டு பேருக்கும் வேற்றுமை இருக்கிறது. இந்த நிலையில் எண் (1) - ஆண்வழி வாரிசு, எண் (2) - தந்தையின் தாயின் சகோதரி மகன். முதலில் சொன்னதற்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

viii) போட்டியிடும் உறவினர்கள் யார் என்றால் :- (1) FMFSS -(தந்தையின் தாயின் சகோதரனின் மகன்), 2) FMFDS - (தந்தையின் தாயின் சகோதரியின் மகன்) . முன்னால் சொல்லப்பட்டதற்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

ix) போட்டி போடும் உறவினர்கள் யார் என்றால்:- (1) FDDS (சகோதரியின் மகளின் மகன்), 2) FDDD-(சகோதரியின் மகளின் மகன்). முன்னால்சொல்லப் பட்டதற்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

(117)

**105. தலைமுறைகளைக் கணக்கிடுதல் :** (1) ஆண் வழி மற்றும் பெண்வழி உறவு முறையில், உறவு முறையை நிர்ணயிக்க மேல்வழி அல்லது கீழ்வழி அல்லது இரண்டும், உயில் எழுதாமல் இருந்த நபரின் தலைமுறையிலிருந்து கணக்கிட வேண்டும்.

பகுதி II
பிரிவு 8
பக்கம் 7

2) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரைக் கொண்டு தான் மேல் மற்றும் கீழ் தலைமுறை நிர்ணயிக்கப்பட வேண்டும்.

3) ஒவ்வொரு தலைமுறையும் ஒரு கட்டமாக மேலோ கீழோ கணக்கிடப்படும்.

* * * * *

*உதாரணங்கள்*

i) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் தந்தையின் தாயின் தந்தை - வாரிசாகக் கருதப்பட இருக்கிறார். அவருக்கு கீழ்வழி தலைமுறை இல்லை. ஆனால் மூன்று முன் தலைமுறைகள் இருக்கின்றன. அவை:- 1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் தந்தை, 2) தந்தையின் தாய், 3) அவளின் தந்தை (வாரிசு).

ii) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் தந்தையின் தாயின் தந்தையின் தாய் வாரிசாகக் கருதப்பட இருக்கிறார். அவளுக்குக் கீழ் தலைமுறை கிடையாது. ஆனால் 4-முன் தலைமுறைகள் உண்டு. அவை வரிசைப்படி: 1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் தந்தை, 2) அந்தத் தந்தையின் தாய், 3) அவளின் தந்தை மேலும், 4) அவர் தாய் (வாரிசு).

iii) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின், மகனின் மகளின் மகனின் புதல்விகள் வாரிசாகக் கருதப்பட இருக்கிறார்கள். அவளுக்கு முன் தலைமுறை கிடையாது. ஆனால் கீழ்க்காணும் வரிசைப்படி நான்கு கீழ் தலைமுறைகள் உண்டு: 1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் மகன், 2) அந்த மகனின் மகள், 3) அவளின் மகன், மற்றும் 4) அவனின் மகள் (வாரிசு).

iv) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் தாயின், தந்தையின் தந்தையின் மகளின் மகன் வாரிசாகக் கருதப்பட இருக்கிறார். அவருக்கு மூன்று முன் தலைமுறைகள் உண்டு. முன் தலைமுறை கீழ்க்கண்ட வரிசைமுறையில் கணக்கிடப்படுகிறது. 1) உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் தாய், 2) அவளின் தந்தை, 3) தந்தையின் தந்தை, மற்றும் 4) இரண்டு பெண்கள்.

கீழ்க்காணும் வரிசைப்படி அவர்கள் கீழ்தலைமுறையைச் சேர்ந்தவர்கள்: 1) பொது தலைமுறையுடைய பெண் - அதாவது தாயின் தந்தையின் தந்தையின், மேலும் 2) அவரின் மகன் (வாரிசு).

(117A)

**உயில்வழி அல்லாத முறையில் ஒரு இந்து பெண்ணின் சொத்திற்குள்ள வாரிசுரிமை**

பகுதி II
பிரிவு 14
பக்கம் 9

**பொது விதிமுறைகள்**

**106. ஓர் இந்து பெண்ணின் வாரிசுகள் :** பிரிவு 109A மற்றும் 109Bயில் சொல்லப்பட்டுள்ளவைகளைத் தவிர்த்து உயில் எழுதாமல் இறந்துவிடும் ஓர் இந்துப் பெண்ணின் சொத்து கீழ்க் காணும் முறையில் மாற்ற வேண்டும்.

அ) முதலாவதாக கணவன் மற்றும் குழந்தைகள், முதலில் இறந்துவிட்ட குழந்தையின் குழந்தைகள்;

ஆ) இரண்டாவதாக, உட்பிரிவு (a)யில் சொல்லப்பட்டுள்ள வாரிசுகள் இல்லை என்றால் பிரிவு 109-ல் சொல்லப்பட்டுள்ள வாரிசுகளின் வரிசைப்படி.

(128)

**107. வாரிசுகளுக்கிடையே பங்கைப் பிரிப்பது:** 1) ஓர் இந்துப் பெண் கணவனையும் குழந்தைகளையும் விட்டுவிட்டு இறந்து விட்டால், உயில் எழுதாமல் அவள் விட்ட சொத்துகள் யாவும் அவள் கணவன் மற்றும் குழந்தைகளால் சமமாக பங்கிட்டுக் கொள்ளப்படும்.

பகுதி II
பிரிவு 14
பக்கம் 9

2) ஓர் இந்துப் பெண் உயில் எழுதாமல் இறந்து விட்டால், அவளுடைய சொத்து கணவன் இல்லாமல் குழந்தைகள் மட்டும் இருக்கும்போது, அவள் உயில் எழுதாமல் விட்ட சொத்து அவள் குழந்தைகளால் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளப்படும்.

பகுதி II
பிரிவு 14
பக்கம் 9

3) ஓர் இந்துப் பெண் உயில் எழுதாமல் இறந்துவிட்டால், அவள் உயிருடன் இருக்கும்போது அவளுடைய எந்த ஒரு பிள்ளையும் குழந்தைகளை விட்டுவிட்டு இறந்துவிட்டிருந்தால் அந்தப் பிள்ளைக்கு என்ன பங்கு கிடைத்திருக்குமோ அந்தப் பங்கை அந்தக் குழந்தைகள் எடுத்துக் கொள்வார்கள்.

(129)

**108. குழந்தைகள் இல்லை என்றால் சொத்து கணவனுக்குக் கிடைக்கும்:** ஓர் இந்துப் பெண் உயில் எழுதாமல் இறந்து விட்டால், அவளுக்குக் குழந்தைகள் இல்லை என்னும் போது அவளுடைய கணவனுக்கு அந்தச் சொத்து கிடைக்கும். அவள் உயிருடன் இருக்கும்போது அவள் பிள்ளை குழந்தைகளை விட்டுவிட்டு இறந்தால் அவர்களுக்குப் பிரிவு 107ன் படி அவள் உயில் எழுதாத சொத்து கிடைக்கும். அந்தக் குழந்தைகளும் இல்லாதபோது அந்த உயில் எழுதாத சொத்து அவள் கணவனுக்குப் போகும்.

(130)

**109. பெண்ணின் சொத்துக்கு மற்ற வாரிசுகள்:** ஓர் இந்துப் பெண் பிரிவு 107 அல்லது 108-ல் சொல்லப்பட்டுள்ள வாரிசுகள் யாரும் இல்லாமல் இறந்து விட்டால், உயில் எழுதப்படாத அவளுடைய சொத்துக்கள் பின்கண்ட வாரிசுகளுக்குக் கீழ்க்காணும் முறையில் போகும்:-

பகுதி II
பிரிவு 14
பக்கம் 9

1) தாய், தந்தை;

2) கணவனுடைய வாரிசுகள் - கணவர் உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அவருடைய சொத்துக்கள் யாருக்கு போகுமோ, அந்த வாரிசுகளுக்கு அவருடைய சொத்தாக அவர் உயில் எழுதாமல், மனைவிக்குப் பிறகு இறந்துவிட்டதாகக் கருதிப்போகும்.

3) தாயின் வாரிசுகள் - தன் மகள் இறந்த உடன் அந்தத் தாய் இறந்ததாகக் கருதி, அவர் உயில் எழுதாமல் போனால், அவள் சொத்து யாருக்குப் போகுமோ, அந்த வாரிசுகளுக்கு அதற்குண்டான விதிமுறைகளின் படி போகும்.

4) தந்தையின் வாரிசுகள் - மகள் இறந்தபிறகு அந்தத் தந்தை இறந்ததாகக் கருதி அவன் உயில் எழுதாமல் போனால், அவர் சொத்து யாருக்குப் போகுமோ அந்த வாரிசுகளுக்கு அதற்குண்டான விதி முறைகளின்படி போகும்.

(131)

*துறவியின் சொத்துக்கு வாரிசுதாரர்கள்*

**110. துறவிகளுக்கான விதிகள்:** *(1) ஒருவர் முற்றிலுமாகவும் முழுவதுமாகவும் துறவு வாழ்க்கை மேற்கொண்டு ஒரு துறவியாகவோ, தவசியாகவோ, நிரந்தர சமய சீடராகவோ மாறினால் இத்தகைய துறவு வாழ்க்கையை மேற்கொண்டபோது உயில் எழுதிவைக்காமல் இறந்தால் எப்படியோ அப்படி அவரது சொத்து அவருடைய வாரிசுதாரர்களுக்கு உரிமை மாற்றிக் கொடுக்கப்படும்.*

*பகுதி I பிரிவு 11 பக்கம் 9*

*2) இத்தகையவர் துறவியானபிறகு வாங்கும் சொத்து அவரது மரணத்திற்குப் பிறகு அவரது உறவினர்களுக்குப் போய்ச் சேராது; மாறாக பின்கண்டபடி உரிமை மாற்றம் செய்யப்படும்:*

*அ) துறவியானால் அதே துறவி வகையைச் சேர்ந்த ஓர் ஆன்மீக சகோதரருக்குப் போய்ச் சேரும்;*

*ஆ) தவசியானால் நடைமுறையிலுள்ள வழக்காற்றின்படி அவரது நல்லொழுக்கமுள்ள சீடரைப் போய்ச் சேரும்;*

*இ) நிரந்தர சமய சீடரானால் அவரது ஆசானைப் போய்ச் சேரும்.*

### *வாரிசுரிமைகள் பற்றிப் பொதுவான விதிமுறைகள்*

பாகம் II
பிரிவு 15
பக்கம் 10

***111. பாதி ரத்த உறவைவிட முழு ரத்த உறவு முன்னுரிமை பெறுகிறது:*** *உயில் எழுதாமல் இறந்து விட்ட நபருக்கு முழு ரத்த உறவுள்ள உறவினர்கள், பாதி ரத்த உறவுள்ள உறவினர்களைவிட முன்னுரிமை பெறுவார்கள். அவர்களுடைய மற்ற உறவுமுறை சமமாக இருக்கும் போது இது பின்பற்றப்படும்.*

*உதாரணங்கள்*

i) *முழு ரத்த உறவுள்ள சகோதரர், பாதி ரத்த உறவுள்ள சகோதரரைவிட முன்னுரிமை பெறுகிறார். ஆனால் பாதி ரத்த உறவுள்ள சகோதரர், முழு ரத்த உறவுள்ள சகோதரரின் மகனைவிட முன்னுரிமை பெறுகிறார். ஏனெனில் சகோதரர், சகோதரரின் மகனை விட நெருங்கிய உறவினர்.*

ii) *தந்தைவழி பாதி ரத்த உறவு மாமா, தந்தைவழி மாமாவின் மகன் முழு ரத்த உறவாக இருந்தாலும் முன்னுரிமை பெறுகிறார். ஏனெனில் மாமா, மாமன் மகனைவிட நெருங்கிய உறவினர்.*

iii) *முழு ரத்த உறவுள்ள சகோதரரின் மகள் பாதிரத்த உறவுள்ள சகோதரரின் மகளின் மகளைவிட முன்னுரிமை பெறுகிறாள். ஆனால் பாதி ரத்த உறவுள்ள சகோதரன் மகனின் மகனை அவர் முன்னுரிமை கொள்ள முடியாது, ஏனெனில், பின்னால் சொல்லப்பட்டவர் பிரிவு 104 விதி 4-ன் படி நெருங்கிய உறவினராக இருப்பதால், அவர் பாதி ரத்த உறவு முறையில் உறவினராக இருந்தாலும் முன்னுரிமை பெறுகிறார்.*

*(135)*

பாகம் II
பிரிவு 24
பக்கம் 11

***112. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வாரிசுகளிடையே வாரிசுரிமையை வகைப்படுத்தல்***

*ஒன்றுக்கு மேற்பட்ட வாரிசுகள் உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபருக்கு ஒன்றாக வாரிசானால் அவர்கள் அந்த சொத்தை -*

*அ) வேறு வகையாக வெளிப்படையாக சொல்லியிருந்தால் தவிர அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாகத்தான் எடுத்துக் கொள்வார்கள், குழுவாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.*

*ஆ) பொது நிலச் சொத்துரிமையாக எடுத்துக் கொள்வார்களே தவிர கூட்டு நிலச் சொத்துரிமையாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.*

*(136)*

***113. கருவில் உள்ள குழந்தையின் உரிமை :-*** உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் கருவில் இருந்த குழந்தை, பிறகு உயிருடன் பிறந்தால், உயில் எழுதாமல் இறந்தவர் இறப்பதற்கு முன்பாகவே அது பிறந்ததாகக் கருதி உரிய பங்கைப் பெற முடியும். உயில் எழுதாமல் இறந்தவர் இறந்த தேதியிலிருந்தே அந்தக் குழந்தைக்கு அந்த சொத்தில் உரிமை இருந்ததாகக் கருதப்படும்.

*(137)*

***114. வாரிசுரிமையை ஊகிப்பது:*** இரண்டு நபர்கள் ஒரே நேரத்தில் இறந்து, யார் முதலில் இறந்தார் என்பதைத் தெளிவாக கண்டுபிடிக்க முடியாத சூழ்நிலை இருந்தால், அதற்கு மாறாக நிரூபிக்கப்பட்டாலன்றி, வயதானவர் முதலில் இறந்ததாகக் கருதப்படும்.

**பாகம்** III-A
**பகுதி** III
***பிரிவு 16***
***பக்கம் 14***

*(138)*

***115. சிலசூழ்நிலைகளில் பிரிவினைச் சட்டம் 1893ஐ அமுல்படுத்தல்:*** இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பிறகு உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் எந்த அசையா சொத்துகளில் உள்ள பங்கு சம்பந்தமாகவும் அல்லது அவர் தனியாக அல்லது கூட்டாக நடத்திக் கொண்டிருந்த வியாபாரத்தில் பங்கு சம்பந்தமாகவும் உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபரின் மகன், மகனின் மகன் அல்லது மகனின் மகனின் மகன், மற்ற உறவினர்களுடன் சேர்ந்து ஒரு வாரிசுப் பாகப்பிரிவினைக்கு வழக்குப் போட்டால் பிரிவினைச் சட்டம் *1893* (IV of 1893) சட்டத்தை அமுல் படுத்தி ஏற்கனவே பாகப்பிரிவினை நடந்ததாகக் கருதி அவனோ அவளோ குடியிருக்கும் வீட்டுப் பங்கு மாற்றப்பட்டவராகக் கருதி உயில் எழுதாமல் இறந்துவிட்ட நபர் குடும்பம் பிரிக்கப்படாத குடும்பம் எனக் கருதப்படும்.

*பாகம் II*
*பிரிவு 12*
*பக்கம் 9*

*(139)*

### *வாரிசுகளைத் தகுதியின்மை ஆக்குதல்*

*116. உலகைத் துறந்தவர் போன்றோர் தகுதி இழக்கின்றனர்:* ஒரு நபர் முழுமையாகவும் இறுதியாகவும் பிரிவு 110 உட்பிரிவு (I)-ன் படி உலகைத் துறந்துவிட்டால் அவர் தன் ரத்த வழி உறவு, திருமண உறவு, மற்றும் தத்து எடுத்த உறவு ஆகியவற்றின்மூலம் எந்த உறவினரிடமிருந்தும் சொத்தை வாரிசாகப் பெறும் தகுதியை இழக்கிறார்.

*பாகம் II*
*பிரிவு 18*
*பக்கம் 11*

*(140)*

பாகம் II
பிரிவு 19
பக்கம் 1

**117. கற்பிழந்த மனைவி தகுதியிழக்கிறார்:** ஒரு பெண் திருமணத்திற்குப் பிறகு அவளுடைய கணவன் உயிருடன் இருந்தபோது கற்பிழந்திருந்தால், அதை அவன் மன்னித்திருந்தால் தவிர, அவனுடைய சொத்துக்கு வாரிசாக முடியாது. ஆனால் கணவனுடைய சொத்தை வாரிசுரிமையாகப் பெற இதனைக் காரணமாகக் காட்ட முடியாது, ஒரு நீதிமன்ற வழக்கில் அவள் கற்பிழந்தவள் என்பது நிரூபிக்கப்பட்டு, அந்தக் கணவனும் அந்த வழக்கில் சேர்க்கப் பட்டிருந்து, அந்தப் பிரச்சினை குறித்து நீதிமன்றம் தீர்ப்பளித்து, அது பின்னால் மாற்றாமல் இருந்தால்தான் அதனைக் காரணம் காட்டி அவளுக்குச் சொத்துரிமையை மறுக்க முடியும்.

(141)

(புதிது)

**118. மறு மணம் செய்துகொள்ளும் சில விதவைகள் தகுதி இழக்கிறார்கள்:** முன்னால் இறந்து விட்ட மகனின் விதவை முன்னால் இறந்துவிட்ட மகனின் மகனின் விதவை, தந்தையின் விதவை, சகோதரரின் விதவை, ஆகியோரின் வாரிசுரிமைப் பற்றி தீர்மானிக்கும்போது அவர்களில் எவரேனும் ஏற்கனவே மறுமணம் செய்துக் கொண்டிருந்தால் அத்தகையவர்கள் தகுதியை இழக்கிறார்கள்.

(142)

**119. கொலையாளி தகுதியிழக்கிறான்:** ஒரு நபர் ஒரு கொலையை செய்தாலோ அல்லது கொலை செய்ய உடந்தையாக இருந்தாலோ, அவ்வாறு கொலை செய்யப்பட்ட நபரின் சொத்துக்கு வாரிசாக முடியாது அல்லது வேறு எந்த சொத்துக்கும் வாரிசானாலும் அந்த நபரையும் கொலை செய்தாலோ அல்லது கொலைக்கு உடந்தையாக இருந்தாலோ வாரிசாக முடியாது. பகுதி II பிரிவு 20 பக்கம் 11

(143)

**120. மத மாற்றம் செய்து கொண்டவர்கள் தகுதியிழக்கிறார்கள்:** இந்தத் தொகுப்பு வருவதற்கு முன்போ, பின்போ ஓர் இந்து வேறு மதத்திற்கு மாறி விட்ட காரணத்தினால், இந்துவாக நீடிக்காத போது அம்மாதிரி மதமாற்றம் செய்து கொண்ட பிறகு, பிறந்த குழந்தைகள் அவர்களுடைய இந்து சொந்தக்காரர் களிடமிருந்து வாரிசாக சொத்துரிமை பெறமுடியாது. அந்தக் குழந்தைகளோ அல்லது வழித் தோன்றல்களோ வாரிசுரிமையைப் பற்றிப் பரிசீலிக்கப்படும்போது இந்துக்களாக இருந்தால் அப்போது கிடைக்கும். பகுதி II பிரிவு 20 பக்கம் 11

(144)

**121. வாரிசுதார் தகுதியிழக்கும்போது வாரிசு உரிமை:** இந்தப் பகுதியின் கீழ் யாராவது ஒரு நபர் வாரிசாவ தற்கு தகுதி இழந்துவிட்டால், உயில் எழுதாமல் இறந்து விட்ட நபருக்கு முன்பாகேவ அவர் இறந்துவிட்டதாகக் கரு தப்படும். பகுதி II பிரிவு 22 பக்கம் 11

(145)

**122. நோய் மற்றும் குறைபாடுகள் தகுதி நீக்கம் செய்யாது:** எந்த நபரும் அவருக்குள்ள வியாதி, குறைபாட, மற்றும் ஊனம், ஆகியவற்றிற்காக வாரிசு உரிமையை இழக்கமாட்டார், இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ளவைகளுக்குட்பட்டு வேறு எந்த காரணத்திற்காகவும் அவர் வாரிசு உரிமையை இழக்க மாட்டார். பகுதி II பிரிவு 23 பக்கம் 11

(146)

## அரசு உறுபொருள்

***123. வாரிசுகள் இல்லாத நிலை:*** உயில் எழுதாமல் இறந்துவிட்ட ஒருவர் இந்தப் பகுதியில் சொல்லப்பட்டுள்ள எந்த ஒரு வாரிசும் இல்லாமல் இறந்துவிட்டால் அவன் அல்லது அவளுடைய சொத்து அரசாங்கத்திற்குப் போகும். ஒரு வாரிசுக்கு என்னென்ன பொறுப்புகளும் கடமைகளும் இருக்கின்றதோ அவைகளுக்குட்பட்டு அரசாங்கம் அந்தச் சொத்தை எடுத்துக் கொள்ளும்.

பகுதி II
பிரிவு 25
பக்கம் 11

*(147)*

## பாகம் III

### *உயில்வழி வாரிசுரிமை*

***124. உயில் வழி வாரிசுரிமை :*** *1) இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 (XXXIX of 1925) படியும் இந்துக்களை கட்டுப்படுத்தும் வேறு சட்டப்படியும் அவற்றின் விதி முறைகளில் சொல்லியுள்ளபடி ஓர் இந்து தன்னுடைய எந்த சொத்தையும் உயில் மூலமாகவோ, அல்லது வேறு முறையிலோ மாற்றலாம்.*

***பகுதி III பிரிவு 1 பக்கம் 12***

*2) பின்கண்டவை எதுவும் ஓர் இந்துவை அனுமதிக்காது:-*

*அ) ஜீவனாம்சம் பெற, இந்தத் தொகுதியிலுள்ள விதிமுறைகள் படியோ, அல்லது அமுலிலுள்ள வேறு சட்டத்தின்படியோ, உரிமை பெற்றுள்ளவரை அந்த உரிமை பாதிக்கக்கூடாது.*

*ஆ) சட்ட ரீதியாக மாற்றக் கூடியவை தவிர, அவனோ அவறோ அந்தச் சொத்தில் எந்த மாற்றமும் செய்யக் கூடாது.*

*(148)*

## பாகம் VIII ஜீவனாம்சம்

**125. ஜீவனாம்சம் விளக்கப்படுகிறது:** இந்தப் பகுதியில் ஜீவனாம்சம் என்பதில் பின்கண்டவை அடங்கும்.

i) எல்லாச் சூழ்நிலைகளிலும், உணவு, உடை, இடம், கல்வி, மருத்துவச் செலவு மற்றும் கவனிப்பு ஆகியவற்றிற்கு ஏற்பாடு செய்தல், மேலும். பாகம் III-A பிரிவு - 3 பக்கம் 2

ii) திருமணமாகாத பெண்ணிருந்தால் அவளின் திருமணத்திற்காக நியாயமான செலவு மற்றும் அதைச் சார்ந்த செலவுகள் செய்தல்.

### *குடும்ப உறுப்பினர்களைக் காப்பாற்றும் சொந்தப் பொறுப்பு*

**126. மனைவியைப் பாதுகாத்தல்:** (1) இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்போ அல்லது பின்போ, இந்தப் பிரிவில் சொல்லப்பட்டுள்ள விதிமுறைகளுக்குட்பட்டு, ஓர் இந்து மனைவி தன் கணவனால் அவன் உயிருள்ள வரை பராமரிக்க உரிமை பெற்றுள்ளாள். அவன் காலமான பிறகு அவனுடைய தந்தை அவளைப் பராமரிக்க வேண்டும். பகுதி IV பிரிவு 26 பக்கம் 19, 20

2) தன் கணவனுடன் சேர்ந்து வாழ்ந்தால் மட்டுமே அவள் அம்மாதிரி பராமரிப்பை எதிர்பார்க்க வேண்டும்.

எனினும் பின்கண்ட காரணங்களுக்காக அவள் தனித்து வாழ்ந்தாலும், தன்னுடைய உரிமையைப் பறிகொடுக்க வேண்டியதில்லை:-

அ) அவன் வெறுக்கத்தக்கதொரு நோயினால் பாதிக்கப்பட்டிருத்தல்;

ஆ) தன் மனைவி வாழும் வீட்டிலேயே ஒரு காமக்கிழத்தியை வைத்திருத்தல்;

இ) மிகக் கொடூரக்காரனாக இருந்து அதனால் அவள் அவனுடன் வாழ்வதற்கு தகுந்த பாதுகாப்பு இல்லாதிருத்தல்;

ஈ) அவன் அவளை எந்தக் காரணமுமின்றி, அவளுடைய ஒப்புதலின்றி அல்லது அவளது விருப்பத்திற்கெதிராக அவளைக் கைவிட்டு விடுதல்;

உ) அவன் வேறு மதத்திற்கு மாறி அதனால் தொடர்ந்து இந்துவாக இல்லாமல் இருத்தல்;

ஊ) அவள் தனித்து வாழ வேறு ஏதாவது நியாயமான காரணம் இருத்தல்.

3) ஓர் இந்து மனைவி, அவள் கற்பிழந்து வாழ்ந்தாலும், அல்லது வேறு மதத்திற்கு மாறி இந்துவாக தொடர்ந்து நீடிக்கா விட்டாலும், அவள் கணவனிடமிருந்து பிரிந்து வாழவும், ஜீவனாம்சம் பெறவும் உரிமை இல்லை.

(149)

பகுதி III-A பிரிவு 8 பக்கம் 13

**127. விதவை மருமகளைக் காப்பாற்றும் கடமை:** பிரிவு 126-ன்படி ஒரு மாமனாருக்கு தன் மருமகளைக் காப்பாற்றும் கடமை உள்ளது. ஆனால் அந்த அளவிற்கு அவருக்கு வசதி இருந்தால் மட்டுமே இது நீடிக்கும். மேலும் விதவை மருமகள் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள தகுந்த சொத்தில்லை என்ற சூழ்நிலையிலும், கணவனுடைய சொத்திலிருந்து தகுந்த ஜீவனாம்சம் பெறக்கூடிய நிலை இல்லை என்றாலும், அல்லது தன் மகனிடமிருந்து அல்லது அவனுடைய சொத்திலிருந்து பெற முடியா விட்டாலும் மட்டுமே மாமனார் காப்பாற்ற வேண்டும். அவள் மறுமணம் செய்துக் கொண்டால் மாமனாருக்குள்ள அத்தகைய கடமை முடிவிற்கு வந்துவிடும்.

(150)

***128. குழந்தைகள் மற்றும் வயதான பெற்றோர் பராமரிப்பு:*** *1)இந்தப் பிரிவில் சொல்லப்பட்டவை களுக்குட்பட்டு ஓர் இந்து தன் சட்ட ரீதியான குழந்தை களையும் அல்லது முறையற்ற திருமணத்தில் பிறந்த குழந்தை களையும் வயதான பெற்றோர்களையும் பராமரிக்கக் கடமைப் பட்டுள்ளார்.* புதிது

*2) தான் உரிய வயது வராதவரை, சட்டரீதியாக பிறந்த குழந்தை யும் முறையற்ற திருமணத்தில் பிறந்த குழந்தையும் அவன் அல்லது அவளது தந்தையிடமிருந்து ஜீவனாம்சம் பெற முடியும்.*

*3) தகுந்த வசதியின்றி இருக்கும் வயதான தந்தை தன் மகனிட மிருந்து ஜீவனாம்சம் பெற முடியும்.*

*(151)*

***129. குழந்தைகளைத் தாய் பராமரித்தல்:-*** *ஒரு இந்துப் பெண் தன் சட்ட ரீதியான குழந்தைகளையும் மற்றும் முறையற்ற திருமணத்தில் பிறந்த குழந்தைகளையும் தன் கணவனுக்கு தகுந்த வசதி இல்லாமல், தனக்கு நல்ல வசதி இருந்தால் தன் வாழ்நாள் முழுதும் பராமரிக்கக் கடமைப்பட்டுள்ளாள்.* புதிது

*(152)*

**130. தங்களைச் சார்ந்துள்ளவர்களைப் பராமரிக்கும் கடமை வாரிசுகளுக்குண்டு:** 1) பிரிவு 131-ல் சொல்லப்பட்டுள்ளவைகளுக்கு உட்பட்டு, இறந்துவிட்ட ஓர் இந்துவின் வாரிசுகள், அவரிடமிருந்து பெற்ற சொத்துக்களைக் கொண்டு அவரைச் சார்ந்துள்ளவர்களைப் பராமரிக்க வேண்டும்.

பகுதி III-A
பிரிவு 5
பக்கம் 12

2) இந்தப் பகுதிக்காக, இறந்துவிட்டவரின் கீழ்க்காணும் உறவினர்கள் அவரைச் சார்ந்துள்ளவர்களாகக் கருதப்படுவார்கள்:-

i) அவரின் தந்தை,

ii) அவரின் தாய்,

iii) அவரின் விதவை, அவள் மறுமணம் செய்து கொள்ளாமல் இருக்கும் வரை,

iv) அவரின் மகன், முன்னால் இறந்துவிட்டவரது மகனின் மகன், முன்னால் இறந்துவிட்ட மகனின் முன்னால் இறந்து விட்ட மகன், அவன் உரிய வயது வராத நிலையில், ஜீவனாம்சம் பெறமுடியாத நிலையில், பேரனைப் பொறுத்து தன்னுடைய அப்பாவின் சொத்திலிருந்து, பேரனின் பேரனைப் பொறுத்து, அவருடைய தந்தையின் சொத்திலிருந்து அல்லது தந்தையின் தந்தையின் சொத்திலிருந்து;

v) அவரின் திருமணமாகாத மகள், அவள் திருமணமாகாமல் இருக்கும் வரை;

vi) அவரின் திருமணமான மகள்; அவள் தன் கணவனிடமிருந்து ஜீவனாம்சம் பெற முடியாத நிலையில் இருந்தால், அல்லது மகன் இருந்தால் மகனிடமிருந்து அல்லது அவனுடைய சொத்திலிருந்து ஜீவனாம்சம் பெற முடியாத நிலையில் இருந்தால்;

vii) அவருடைய விதவை மகள்;

கீழ்க்கண்டவர்களிடமிருந்து அவள் ஜீவனாம்சம் பெற முடியாத நிலையில் இருத்தல்:

அ) தன்னுடைய கணவனுடைய சொத்திலிருந்து அல்லது

ஆ) மகன் இருந்தால் மகனிடமிருந்து அல்லது அவன் சொத்திலிருந்து அல்லது

இ) அவளுடைய மாமனாரிடமிருந்து அல்லது அவளுடைய தந்தையிடமிருந்து அல்லது அவர்கள் இருவருடைய சொத்திலிருந்து,

viii) அவருடைய மகனின் விதவை அல்லது முன்னால் இறந்து விட்ட மகனின் விதவை, அவர்கள் மறு திருமணம் செய்யாதவரை. அவள் தன் கணவனுடைய சொத்திலிருந்து ஜீவனாம்சம் பெறமுடியாமல் இருந்து, அல்லது அவளுடைய மகன் இருந்தால் அவனிடமிருந்து அல்லது அவனுடைய சொத்திலிருந்து பேரனின் விதவையைப் பொறுத்து, மாமனாரின் சொத்திலிருந்து,

ix) அவனுடைய உரிய வயது வராத முறையற்ற திருமணத்தில் பிறந்த குழந்தை, அவன் உரிமை வயது வராத நிலையிலுள்ளவரை.

x) அவனின் திருமணமாகாத, முறையற்ற திருமணத்தில் பிறந்த மகள், அவள் திருமணமாகாமல் இருக்கும் வரை.

*(153)*

***131. தங்களைச் சார்ந்துள்ளவர்களைப் பாதுகாக்க வாரிசுகளின் கடமைக்குள்ள வரம்பு:*** சார்ந்துள்ள ஒருவர், உயில் வழியோ அல்லது உயில் வழி அல்லாத முறையிலோ இந்தத் தொகுப்பு அமுலுக்கு வந்த பின் ஓர் இந்துவின் சொத்தில் எந்த ஒரு பாகத்தையும் பெறவில்லை என்றால்,

பாகம் III-A
பிரிவு 4
பக்கம் 12

உயில்வழி முறையில் பெற்ற சொத்து இந்தப் பகுதியின் கீழ் அவருக்கோ அல்லது அவளுக்கோ அளிக்கப்பட்டிருக்கக் கூடிய ஜீவனாம்சத்தைவிட சார்ந்துள்ளவர் குறைவாகப் பெற்றால்,

அவன் அல்லது அவள் இந்தப் பகுதியில் சொல்லப்பட்டவைகளுக்குட்பட்டு சொத்தை எடுத்துக் கொண்டவர்களிடமிருந்து ஜீவனாம்சம் பெற உரிமை உண்டு.

ஒவ்வொரு வாரிசின் கடமை அவன் அல்லது அவள் பெற்ற சொத்தின் அளவிற்கு ஏற்ற முறையில் அமையும்.

தானே சார்ந்துள்ளவராக இருக்கும் எவரும், அவனோ அவளோ மற்ற யாருக்கும் தங்கள் பங்கை அளிக்க வேண்டிய அவசியமில்லை. அவனோ அவளோ மற்றவர்களுக்கு பங்களிப்பதின் காரணமாக அவர்களுடைய பங்கு குறைந்துவிட்டால், அதாவது அவர்களுக்குக் கிடைக்கும் ஜீவனாம்சம் குறைந்துவிட்டால்.

*(154)*

## *ஜீவனாம்சத் தொகை*

***132. ஜீவனாம்சத் தொகை:*** *1)* மனைவி, குழந்தைகள் அல்லது வயதான பெற்றோர்களுக்கு எந்த அளவிற்கு ஜீவனாம்சத் தொகை கொடுக்க வேண்டும் என்பதை இந்தப் பகுதியின்படி முடிவு செய்வதற்கு முன் பின்கண்டவற்றைக் கவனத்தில் கொள்ள வேண்டும்:-

பாகம் III-A
பிரிவு 6
பக்கம் 13

அ) அந்த நபர்களின் வாழ்க்கைமுறை மற்றும் அந்தஸ்து;

ஆ) ஜீவனாம்சம் கேட்கும் நபர்களின் நியாயமான தேவைகள்;

இ) தந்தையிடமிருந்து பிரிந்து வந்தால், அவன் அல்லது அவள் அவ்வாறு பிரிந்து வாழ்வதற்கு தகுந்த காரணங்கள் இருக்கின்றனவா;

ஈ) ஜீவனாம்சம் கோரும் நபரின் சொத்து மதிப்பு, அதிலிருந்து வரக்கூடிய வருமானம், ஜீவனாம்சம் கோருபவரின் சொந்த வருமானம் அல்லது மற்ற துறைகளிலிருந்து கிடைக்கும் வருமானம்.

உ) இந்தப் பகுதியின்படி எத்தனை நபர் ஜீவனாம்சம் பெற தகுதியுள்ளவர்கள்.

2) இந்தப் பகுதியின்படி என்ன தொகை ஜீவனாம்சமாகக் கொடுக்கலாம் என்பதை முடிவு செய்ய கீழ்க்காண்பவற்றை கவனத்தில் கொள்ள வேண்டும்:-

அ) இறந்தவருடைய கடனைக் கொடுத்த பிறகு அவர் சொத்தின் நிகர மதிப்பு;

ஆ) சார்ந்துள்ளவர்களுக்கு இறந்தவரின் உயிலில் செய்யப் பட்டுள்ள ஏற்பாடுகள்;

இ) இறந்துவிட்டவரின் வாழ்க்கைமுறை மற்றும் அந்தஸ்து, மற்றும் சார்ந்துள்ளவரின் வாழ்க்கை முறை மற்றும் அந்தஸ்து;

ஈ) அவர்களுக்கிடையேயுள்ள தலைமுறை உறவு முறை;

உ) சார்ந்துள்ளவரின் நியாயமான தேவைகள்;

ஊ) இறந்தவர் மற்றும் சார்ந்துள்ளவரின் முற்கால உறவு முறை;

எ) அவன் அல்லது அவளின் சொத்து மதிப்பு, அதிலிருந்து வரக்கூடிய வருமானம், அவன் அல்லது அவளின் சொந்த வருமானங்கள் அல்லது மற்ற துறை வருமானங்கள்;

ஏ) இந்தப் பகுதியின் கீழ் ஜீவனாம்சம் பெற தகுதியுள்ள சார்ந்துள்ளவர்களின் எண்ணிக்கை;

ஐ) விதவையாக இருந்தால் அவளுடைய நடத்தை.

(155)

**133. எவ்வளவு தொகை ஜீவனாம்சமாக அளிப்பது என்பது நீதிமன்றத்தின் விருப்புரிமையைப் பொறுத்தது:** 1) பிரிவு 132-உட்பிரிவு (1) அல்லது உட்பிரிவு (2) ஆகியவற்றில் சொல்லப்பட்டுள்ளவைகளில், எது பொருந்துமோ அதைக் கருத்தில் கொண்டு, இந்தப் பாகத்தின் கீழ் ஜீவனாம்சம் ஏதாவது கொடுக்க வேண்டுமா, அப்படி கொடுக்க வேண்டும் என்றால் எவ்வளவு கொடுக்க வேண்டும் என்பதை நீதிமன்றம் முடிவு செய்ய வேண்டும்.

பகுதி III-A
பிரிவு 6 (2)
பக்கம் 13

2) திருமணமாகாதப் பெண்ணுக்கு அளிக்கப்படும் தொகை, இறந்தவர் உயில் எழுதாமல் இறந்துவிட்டால் அவளுக்கு என்ன கிடைத்திருக்குமோ அதில் பாதி அளவாக இருக்கும்.

(156)

**134. சூழ்நிலை மாற்றங்களுக்கேற்ப ஜீவனாம்சத் தொகையின் அளவு மாற்றப்படலாம் :** இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்போ பின்போ நீதிமன்றத் தீர்ப்பால் நிர்ணயிக்கப்பட்ட ஜீவனாம்சம் அல்லது ஒப்பந்தத்தால் நிர்ணயிக்கப்பட்ட ஜீவனாம்சம் எதுவாக இருந்தாலும் மாறியுள்ள சூழ்நிலைகளுக்கேற்ப அந்த மாற்றத்தை நியாயப்படுத்துவதாக இருக்க வேண்டும்.

பகுதி III-A
பிரிவு 7 (2)
பக்கம் 14

(157)

**135. கடனுக்கு முன் உரிமை:** இந்த பாகத்தில் சொல்லப்பட்டுள்ளவைகளுக்குட்பட்டு எந்த வகையானக் கடனாக இருந்தாலும் சார்ந்துள்ளவர்களின் ஜீவனாம்ச கோரிக்கையைவிட அதற்கு முன்னுரிமை அளிக்க வேண்டும்.

பகுதி III-A
பிரிவு 8
பக்கம் 14

(158)

**136. சார்ந்துள்ளவர்கள் ஜீவனாம்சம் கோரும் போது** அதை இறந்தவரின் சொத்துக்கு முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ அதை பொருட்பிணை பொறுப்பாக்க முடியாது. ஆனால் உயில் மூலமாகவோ, நீதிமன்ற உத்திரவினாலோ அல்லது சார்ந்துள்ளவர் சொத்தின் முழு உரிமையாளர் அல்லது பகுதி உரிமையாளர் செய்துக் கொண்ட ஒப்பந்தத்தின் மூலமாகவோ அம்மாதிரி பொருட்பிணைப் பொறுப்பு ஏற்படுத்தலாம்.

பாகம் III-A
பிரிவு 9
பக்கம் 14

(159)

***137. மூன்றாம் நபர் ஜீவனாம்சம் பெற தகுதியுள்ள போது சொத்தை மாற்றுவது:*** *மூன்றாம் நபர் ஒரு சொத்திலிருந்து ஜீவனாம்சம் பெற உரியவராக இருக்கும்போது, அந்த சொத்து முழுமையாகவோ அல்லது அதன் பகுதி மாற்றப்பட்டால் மாற்றம் பெற்றவர் அம்மாதிரியான ஜீவனாம்சத்தை பற்றி தெரிந்திருந்தால் அவருக்கு எதிராக, இந்த தொகுப்பு இயற்றப்படாமலிருந்தால் எந்த அளவுக்கு அந்த சொத்திற்கு எதிராக கோர முடியுமோ அந்த அளவிற்கு கோரலாம்.*

*(160)*

(161)

## பாகம் IX - பலதரப்பட்டவைகள்

**138. விதிமுறைகள் இயற்றும் அதிகாரம் :** 1) இந்தத் தொகுப்பின் நோக்கத்தை நிறைவேற்ற மாநில அரசு விதிமுறைகள் இயற்றலாம்.

2) குறிப்பாக, மேலே சொல்லப்பட்டுள்ள பொதுவான அதிகாரத்திற்கு உட்பட்டு விதிமுறைகளை நிர்ணயிக்கலாம் -

i) புனித முறைத் திருமணங்களைக் குறித்து அவற்றின் என்னென்ன விவரங்கள் புனிதமுறை திருமண பதிவுப் புத்தகத்தில் குறிக்கலாம் என்பதையும், அவற்றைக் குறிக்கும் முறை மற்றும் சூழ்நிலை ஆகியவற்றை நிர்ணயிக்கலாம்;

ii) எந்த இடங்கள் மற்றும் எந்த வகைகள் புனித முறை திருமணங்களைப் பற்றிய விவரங்கள் கட்டாயமாக குறிக்கலாமென் பதையும், அவ்வாறு குறிக்கத் தவறும்போது அவற்றிற்கான தண்டனையும்;

iii) எந்த இடங்களுக்கு திருமணப் பதிவாளர்கள் நியமிக்கப் பட வேண்டும் என்பதையும், அவர்களுடைய கடமை மற்றும் பணிகள்;

iv) இந்து புனித முறை திருமணப் பதிவுப்புத்தகம் மற்றும் இந்து சிவில் திருமண அறிவிப்புப் புத்தகம் ஆகியவற்றை என்ன முறையில் வைக்க வேண்டும் என்பதையும் பிரிவு 12-ன் கீழ் திருமண அறிவிப்பு எவ்வாறு வெளியிடப்படவேண்டும் என்பதையும்;

v) பிரிவு 21-ன்படி எந்த முறை மறு அறிவிப்பு செய்ய வேண்டும் என்பதையும்;

vi) சிவில் திருமணங்களை நடத்த எவ்வளவு கட்டணம் என்பதையும், திருமணப் பதிலாளர் செய்யும் மற்றக் கடமை களுக்கு என்ன கட்டணம் என்பதையும்;

vii) இந்து புனித முறைத் திருமணம், புத்தகம் மற்றும் இந்து சிவில் திருமணப் புத்தகம் ஆகியவற்றை பார்வை இடுவதற்கும், அதன் நகல்கள் பெறுவதற்கும் என்ன கட்டணம் என்பது பற்றியும்

viii) பிறப்பு, இறப்பு மற்றும் திருமணப் பதிவாளர் ஜெனரலுக்கு, புனித முறை திருமணப் புத்தகம், மற்றும் இந்து சிவில் திருமணப் புத்தகம் ஆகியவற்றை என்ன முறையில் எந்த இடை வெளியில் அனுப்ப வேண்டும் என்பதையும்;

xi) பிரிவு 24-A-ன் படி எந்த நபருக்கு என்ன முறையில் எந்த அதிகாரிக்கு அறிவிப்பு கொடுக்க வேண்டும் என்பது பற்றியும்;

x) தத்து எடுப்பதின் மனுவில் குறிக்க வேண்டிய தகவல்கள்;

xi) தத்து எடுப்பதைக் குறிக்க கட்டணம் எவ்வளவு;

xii) எந்த முறையில் தத்து எடுக்கும் புத்தகம் வைக்கப்பட வேண்டும்;

xiii) தத்து எடுப்பு புத்தகத்தில் உள்ள தகவல்களை எந்த முறையில் அங்கீகரிப்பது.

*(161)*

***139. திருத்தங்களும், சட்ட நீக்கமும்:*** முதல் அட்டவணையில் 3-வது பத்தியில் சொல்லியுள்ள சட்டங்கள் 4-வது பத்தியில் சொல்லியுள்ள அளவிற்கு திருத்தப்படும். இரண்டாவது அட்டவணையின் 3-வது பத்தியில் சொல்லியுள்ள சட்டங்கள் அதன் 4-வது பத்தியில் சொல்லியுள்ள அளவிற்கு சட்ட நீக்கம் செய்யப்படும்.

*(162)*

*(163)*

## முதலாவது அட்டவணை

*(139 வது பிரிவைப் பார்க்கவும்)*

திருத்தங்கள்

| ஆண்டு | எண் | குறுகிய தலைப்பு | திருத்தங்கள் |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| 1872 | III | சிறப்புத் திருமணச் சட்டம், 1872. | 1. முகப்புரையில் ''இந்து, பௌத்த, சீக்கிய அல்லது ஜைன மதங்களைச் சார்ந்த நபர்களுக்கு'' என்ற சொற்களை நீக்க வேண்டும்.<br>2. 2வது பிரிவில் ''அல்லது கீழ்வரும் சமயங்களை அதாவது இந்து, பௌத்தம், சீக்கிய அல்லது ஜைன மதங்களைச் சார்ந்த நபர்களுக்கு இடையில்'' என்ற சொற்களை நீக்க வேண்டும்.<br>3. 23, 24வது பிரிவுகளும் ★ ★ ★ ★ மற்றும் 25, 26 பிரிவுகளும் நீக்கப் படுகின்றன. |

# முதலாவது அட்டவணை

(139 வது பிரிவைப் பார்க்கவும்)

திருத்தங்கள்

| ஆண்டு | எண் | குறுகிய தலைப்பு | திருத்தங்கள் |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| 1872 | III | சிறப்புத்திருமணச் சட்டம், 1872. | 1. முகப்புரையில் ''இந்து, பௌத்த, சீக்கிய அல்லது ஜைன மதங்களைச் சார்ந்த நபர்களுக்கு'' என்ற சொற்கள் நீக்கப்பட வேண்டும்.<br><br>2. 2ம் பிரிவில், ''அல்லது, கீழ்வரும் சமயங்களை, அதாவது, இந்து, பௌத்த, சீக்கிய அல்லது ஜைன சமயங்களில் எதையாவது பின் பற்றும் நபர்களுக்கு இடையில்'' என்ற சொற்கள் நீக்கப்பட வேண்டும்.<br><br>3. 23, 24வது பிரிவுகளும் - ஆளுநர் களின் மாகாணங்களில் விவசாய நிலத்திற்கு வாரிசுகளை ஏற்படுத்து கின்றதைத் தவிர, மற்றும் 25வது, 26வது பிரிவுகளும் நீக்கப்படுகின்றன. |

(164)

## இரண்டாவது அட்டவணை

(139 வது பிரிவைப் பார்க்கவும்)

தள்ளுபடி செய்யப்படுபவை

| ஆண்டு | எண் | குறுகிய தலைப்பு | தள்ளுபடி செய்யப்படும் அளவு |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| | | **மத்திய சட்டங்கள்** | |
| 1866 | XXI | சுதேசி மதம் மாறியவர்கள் திருமண கலைப்புச் சட்டம், 1866. | இந்துக்களுக்கு இது பிரயோகிக்கப் படும் வகையில் முழுமையாக தள்ளுபடி செய்யப்படுகிறது. ஏனெனில் இது தற்போதைய சட்டத் தொகுதிக்கு முரணானதாகும். |
| 1923 | XII | இந்து மரபுரிமை (இயலாமை அகற்றப்படுதல்) சட்டம், 1928 | முழுமையாக * * * * * * |
| 1929 | II | இந்து மரபுரிமை (திருத்தச்) சட்டம், 1929 | -do- |
| 1937 | XVIII | இந்து பெண்களின் சொத்து உரிமை சட்டம், 1937. | -do- |
| 1946 | XIX | இந்து திருமணமான பெண்களின் தனிவசிப்பிடம் மற்றும் பரா மரிப்புச் சட்டம், 1946. | -do- |
| 1946 | XXVIII | இந்து திருமண இயலாமைகள் அகற்றும் சட்டம், 1946 | -do- |
| | | **மாநிலச் சட்டங்கள்** | |
| 1933 | XXI | மதராஸ் நம்பூதிரிச் சட்டம், 1932 | V மற்றும் VII ம் பாகங்களில் உள்ளவை தவிர, முழுமையாக. |
| 1933 | XXII | மதராஸ் மருமக்கதாயம் சட்டம், 1932. | -do- |
| 1949 | IX | மதராஸ் அலியசந்தானம் சட்டம், 1949. | -do- |
| (கொல்லம் | ஆண்டு) | | |
| 1100 | II | திருவிதாங்கூர் நாயர் சட்டம், 1100. | -do- |
| 1100 | III | திருவிதாங்கூர் ஈழவச் சட்டம், 1101. | -do- |
| 1101 | VI | நாஞ்சில்நாடு வெள்ளாளர் சட்டம், 1101. | -do- |
| 1106 | III | திருவிதாங்கூர் மலையாள பிராமணர் சட்டம், 1106. | VII ம் பாகத்தில் உள்ளவை நீங்கலாக, முழுமையாக |
| 1108 | VII | திருவிதாங்கூர் க்ஷத்தியர் சட்டம் 1108 | V மற்றும் VII ம் பாகங்களில் உள்ளவை தவிர, முழுமையாக. |
| 1115 | VII | திருவிதாங்கூர் கிருஷ்ணவாக மருமக்கத்தாயி சட்டம், 1115. | -do- |
| 1107 | VIII | கொச்சி தீயர்கள் சட்டம் 1107. | -do- |
| 1113 | XXIX | கொச்சி நாயர் சட்டம், 1113. | -do- |
| 1113 | XXXIII | கொச்சி மருமக்கதாயம் சட்டம், 1113. | -do- |
| 1114 | XVII | கொச்சி நம்பூதிரி சட்டம், 1114 | பாகம் VIIல் உள்ளவை நீங்கலாக, முழுமையாக. |
| 1115 | XVII | கொச்சி மருமக்கதாயம் தீயர் சட்டம், 1115. | முழுமையாக. |

# இரண்டாவது அட்டவணை

(139 வது பிரிவைப் பார்க்கவும்)

தள்ளுபடி செய்யப்படுபவை

| ஆண்டு | எண் | குறுகிய தலைப்பு | தள்ளுபடி செய்யப்படும் அளவு |
|---|---|---|---|
| *1* | *2* | *3* | *4* |
| *1866* | XXI | சுதேசி மதம் மாறியவர்களின் திருமணக் கலைப்புச் சட்டம், *1866*. | இந்துக்களுக்கு அது பிரயோகமாகின்றவகையில்இந்தசட்டத்தொகுதியின் விதிகளுக்கு முரணானது. முழுமையாக. |
| *1928* | XII | இந்து மரபுரிமை (இயலாமையை அகற்றுதல்) சட்டம், *1928*. | ஆளுநர்களின் மாகாணங்களில் விவசாய நிலத்திற்கு வாரிசுரிமையை ஏற்படுத்துகின்றதைத் தவிர, முழுமையாக. |
| *1929* | II | இந்து மரபுரிமைச் சட்டம் (திருத்தச் சட்டம், *1929*. | -do- |
| *1937* | XVIII | இந்து பெண்கள் சொத்துரிமைச் சட்டம், *1937*. | முழுமையாக. |
| *1946* | XIX | இந்து திருமணமான பெண்களின் தனியாக வசிப்பதற்கான உரிமை மற்றும் பராமரிப்புச் சட்டம், *1946*. | -do- |
| *1946* | XXVIII | இந்து திருமண இயலாமைகள் அகற்றும் சட்டம், *1946*. | -do-. |

(164)

(165 - 167)

## மூன்றாவது அட்டவணை

முதலாவது பிரிவு

(பகுதி 5 (அ) பார்க்கவும்)

சபிண்டா உறவு முறை

| பத்தி1 | | பத்தி2 | |
|---|---|---|---|
| 1. | மகள் | 1. | மகன் |
| 2. | மகளின் மகள் | 2. | மகனின் மகன் |
| 3. | மகனின் மகள் | 3. | மகளின் மகன் |
| 4. | மகளின் மகனின் மகள் | 4. | மகனின் மகனின் மகன் |
| 5. | மகனின் மகனின் மகள் | 5. | மகளின் மகனின் மகன் |
| 6. | மகளின் மகளின் மகனின் மகள் | 6. | மகனின் மகளின் மகனின் மகன் |
| 7. | மகளின் மகனின் மகனின் மகள் | 7. | மகனின் மகனின் மகனின் மகன் |
| 8. | மகனின் மகளின் மகனின் மகள் | 8. | மகளின் மகளின் மகனின் மகன் |
| 9. | மகனின் மகனின் மகனின் மகள் | 9. | மகளின் மகனின் மகனின் மகன் |
| 10. | தாய் | 10. | தகப்பனார் |
| 11. | சகோதரி | 11. | சகோதரர் |
| 12. | சகோதரியின் மகள் (மருமகள்) | 12. | சகோதரரின் மகன் |
| 13. | சகோதரனின் மகள் | 13. | சகோதரியின் மகன் |
| 14. | சகோதரியின் மகனின் மகள் | 14. | சகோதரரின் மகனின் மகன் |
| 15. | சகோதரனின் மகனின் மகள் | 15. | சகோதரியின் மகனின் மகன் |
| 16. | சகோதரியின் மகளின் மகனின் மகள் | 16. | சகோதரரின் மகளின் மகனின் மகன் |
| 17. | சகோதரியின் மகனின் மகனின் மகள் | 17. | சகோதரரின் மகனின் மகளின் மகன் |
| 18. | சகோதரரின் மகளின் மகனின் மகள் | 18. | சகோதரியின் மகளின் மகனின் மகன் |
| 19. | சகோதரரின் மகனின் மகனின் மகள் | 19. | சகோதரியின் மகனின் மகனின் மகன் |
| 20. | தாயாரின் தாய் | 20. | தகப்பனாரின் தகப்பனார் |
| 21. | தாயாரின் சகோதரி | 21. | தகப்பனாரின் சகோதரர் |
| 22. | தாயாரின் சகோதரியின் மகள் | 22. | தகப்பனாரின் சகோதரரின் மகன் |
| 23. | தாயாரின் சகோதரனின் மகள் | 23. | தகப்பனாரின் சகோதரியின் மகன் |
| 24. | தாயாரின் சகோதரியின் மகனின் மகள் | 24. | தகப்பனாரின் சகோதரரின் மகனின் மகன் |
| 25. | தாயாரின் சகோதரனின் மகனின் மகள் | 25. | தகப்பனாரின் சகோதரியின் மகனின் மகன் |
| 26. | தாயாரின் சகோதரியின் மகளின் மகனின் மகள் | 26. | தகப்பனாரின் சகோதரரின் மகளின் மகனின் மகன் |
| 27. | தாயாரின் சகோதரியின் மகனின் மகனின் மகள் | 27. | தகப்பனாரின் சகோதரரின் மகனின் மகனின் மகன் |
| 28. | தாயாரின் சகோதரரின் மகளின் மகனின் மகள் | 28. | தகப்பனாரின் சகோதரியின் மகளின் மகனின் மகன் |
| 29. | தாயாரின் சகோதரரின் மகனின் மகனின் மகள் | 29. | தகப்பனாரின் சகோதரியின் மகனின் மகளின் மகன் |
| 30. | தகப்பனாரின் தாயார் | 30. | தாயாரின் தந்தை |
| 31. | தகப்பனாரின் சகோதரி | 31. | தாயாரின் சகோதரர் |
| 32. | தகப்பனாரின் சகோதரியின் மகள் | 32. | தாயாரின் சகோதரரின் மகன் |
| 33. | தகப்பனாரின் சகோதரரின் மகனின் மகள் | 33. | தாயாரின் சகோதரியின் மகன் |
| 34. | தகப்பனாரின் சகோதரியின் மகனின் மகள் | 34. | தாயாரின் சகோதரரின் மகனின் மகன் |
| 35. | தகப்பனாரின் சகோதரரின் மகனின் மகள் | 35. | தாயாரின் சகோதரியின் மகனின் மகன் |
| 36. | தகப்பனாரின் சகோதரியின் மகளின் மகனின் மகள். | 36. | தாயாரின் சகோதரரின் மகளின் மகனின் மகன். |

| பத்தி 1 | பத்தி 2 |
|---|---|
| 37. தகப்பனாரின் சகோதரியின் மகளின் மகனின் மகள் | 37. தாயாருடைய சகோதரர் மகனின் மகனுடைய மகன் |
| 38. தகப்பானாரின் சகோதரரின் மகளின் மகனின் மகள் | 38. தாயாருடைய சகோதரி மகளின் மகனுடைய மகன் |
| 39. தகப்பனாரின் சகோதரரின் மகளின் மகனின் மகள் | 39. தாயாருடைய சகோதரி மகனுடைய மகனின் மகன் |
| 40. தகப்பனாருடைய தாயாரின் தாயார். | 40. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனார். |
| 41. தகப்பனாருடைய தாயாருடைய சகோதரி | 41. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரர் |
| 42. தகப்பனாருடைய தாயாரின் சகோதரியின் மகள் | 42. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரருடைய மகன் |
| 43. தகப்பனாருடைய தாயாரின் சகோதரரின் மகள் | 43. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரியின் மகன் |
| 44. தகப்பனாருடைய தாயாரின் சகோதரியின் மகனின் மகள் | 44. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரர் மகனுடைய மகன் |
| 45. தகப்பனாருடைய தாயாரின் சகோதரரின் மகனின் மகள் | 45. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரியின் மகனுடைய மகன் |
| 46. தகப்பனாருடைய தாயாரின் சகோதரியின் மகளுடைய மகனின் மகள் | 46. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரர் மகளுடைய மகனின் மகன் |
| 47. தகப்பனாருடைய தாயாரின் சகோதரியின் மகனுடைய மகனின், மகனின் மகள் | 47. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரர் மகனுடைய மகனின் மகன் |
| 48. தகப்பனாருடைய தாயாரின் சகோதரர் மகளின் மகனின் மகள் | 48. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரி மகளின் மகனுடைய மகன் |
| 49. தகப்பனாருடைய தாயாரின் சகோதரர் மகனுடைய மகனின் மகள் | 49. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரி மகனுடைய மகனின் மகன் |
| 50. தகப்பனாருடைய தகப்பனாரின் தாயார் | 50. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனார் |
| 51. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரி | 51. தகப்பனாருடைய தாயாரின் சகோதரர் |
| 52. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரி மகனின் மகள் | 52. தகப்பனாருடைய தாயாரின் சகோதரர் மகன் |
| 53. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரர் மகள் | 53. தகப்பனாருடைய தாயாரின் சகோதரி மகன் |
| 54. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரி மகனின் மகள். (166) | 54. தகப்பனாருடைய தாயாரின் சகோதரர் மகனுடைய மகன் |
| 55. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரரின் மகனின் மகள். | 55. தகப்பனாருடைய தாயாரின் சகோதரியின் மகனுடைய மகன் |
| 56. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரியின் மகளின் மகனின் மகள் | 56. தகப்பனாருடைய தாயாரின் சகோதரரின் மகளுடைய மகனின் மகன் |
| 57. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரியின் மகனுடைய மகனின் மகள் | 57. தகப்பனாருடைய தாயாரின் சகோதரரின் மகனுடைய மகனின் மகன் |

| பத்தி 1 | பத்தி 2 |
|---|---|
| 58. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரரின் மகளுடைய மகனின் மகள் | 58. தகப்பனாருடைய தாயாரின் சகோதரியின் மகளுடைய மகனின் மகன். |
| 59. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரரின் மகனுடைய மகனின் மகள் | 59. தகப்பனாருடைய தாயாரின் சகோதரியின் மகனுடைய மகனின் மகன் |
| 60. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய தாயார். | 60. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனாருடைய தகப்பனார். |
| 61. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரி | 61. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனாரின் சகோதரர் |
| 62. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரியின் மகள் | 62. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனாருடைய சகோதரர் மகன் |
| 63. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரரின் மகள் | 63. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனாருடைய சகோதரி மகன் |
| 64. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரியின் மகனின் மகள் | 64. தகப்பனாருடைய தகப்பனாரின் சகோதரருடைய சகோதரரின் மகனுடைய மகன் |
| 65. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரரின் மகனின் மகள் | 65. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனார் சகோதரியின் மகனின் மகன் |
| 66. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரியின் மகளுடைய மகனின் மகன் | 66. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனாருடைய சகோதரருடைய மகளுடைய மகனின் மகன் |
| 67. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரியின் மகனுடைய மகனின் மகள் | 67. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனாருடைய சகோதரரின் மகனுடைய மகனின் மகன். |
| 68. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரரின் மகளுடைய மகனின் மகள் | 68. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனாருடைய சகோதரியின் மகளுடைய மகனின் மகன் |
| 69. தகப்பனாருடைய தாயாரின் தாயாருடைய சகோதரரின் மகனுடைய மகனின் மகள் | 69. தகப்பனாருடைய தகப்பனாரின் தகப்பனாருடைய சகோதரியின் மகனுடைய மகனின் மகன் |
| 70. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய தாயார் | 70. தகப்பனாருடைய தகப்பனாரின் தாயாரின் தகப்பனார். |
| 71. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய சகோதரி | 71. தகப்பனாரின் தகப்பனாருடைய தாயாரின் சகோதரர் |
| 72. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய சகோதரியின் மகள் | 72. தகப்பனாரின் தகப்பனாருடைய தாயாரின் சகோதரருடைய மகன் |
| 73. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய சகோதரரின் மகள் | 73. தகப்பனாரின் தகப்பனாருடைய தாயாரின் சகோதரி மகன் |
| 74. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய சகோதரியின் மகனின் மகள் | 74. தகப்பனாருடைய தகப்பனாரின் தாயாரின் சகோதரரின் மகனுடைய மகன் |

| பத்தி 1 | பத்தி 2 |
|---|---|
| 75. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய சகோதரரின் மகனுடைய மகள் | 75. தகப்பனாருடைய தகப்பனாரின் தாயாருடைய சகோதரியின் மகனுடைய மகன். |
| 76. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய சகோதரியின் மகளுடைய மகனின் மகள் | 76. தகப்பனாருடைய தகப்பனாரின் தாயாருடைய சகோதரரின் மகளுடைய மகனின் மகன். |
| 77. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய சகோதரியின் மகனுடைய மகனின் மகள் | 77. தகப்பனாருடைய தகப்பனாரின் தாயாருடைய சகோதரரின் மகனுடைய மகனுடைய மகன். |
| 78. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாருடைய சகோதரரின் மகனுடைய மகனின் மகள் | 78. தகப்பனாருடைய தகப்பனாரின் தாயாருடைய சகோதரியின் மகளுடைய மகனின் மகன். |
| 79. தந்தையின் தாயாருடைய தந்தையின் சகோதரரின் மகனின் மகனுடைய மகள். | 79. தகப்பனாருடைய தகப்பனாரின் தாயாருடைய மகனின் மகன். |
| 80. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் தாயார். | 80. தகப்பனாருடைய தாயாரின் தகப்பனாரின் தகப்பனார். |
| 81. தந்தையின் தந்தையுடைய தாயாரின் சகோதரி. | 81. தந்தையின் தாயாரின் தந்தையினுடைய சகோதரன். |
| 82. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் சகோதரியின் மகள் | 82. தந்தையின் தாயாரின் தந்தையினுடைய சகோதரன் மகன். |
| 83. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் சகோதரனின் மகள் | 83. தந்தையின் தாயாருடைய தந்தையின் சகோதரி மகன் |
| 84. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் சகோதரி மகனின் மகள் | 84. தந்தையின் தாயாருடைய தந்தையின் சகோதரரின் மகனுடைய மகன் |
| 85. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் சகோதரனின் மகனுடைய மகள் | 85. தந்தையின் தாயாருடைய தந்தையின் சகோதரி மகனின் மகன். |
| 86. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் சகோதரி மகனுடைய மகனின் மகள். | 86. தந்தையின் தாயாருடைய தந்தையின் சகோதரனின் மகளுடைய மகனின் மகன். |
| 87. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் சகோதரி மகனின் மகனுடைய மகள். | 87. தந்தையின் தாயாருடைய தந்தையின் சகோதரனின் மகனுடைய மகனின் மகன். |
| 88. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் சகோதரனின் மகளின் மகனுடைய மகள். | 88. தந்தையின் தாயாருடைய தந்தையின் சகோதரியின் மகளுடைய மகனின் மகன். |
| 89. தந்தையின் தந்தையினுடைய தாயாரின் சகோதரருடைய மகனின் மகனுடைய மகள். | 89. தந்தையின் தாயாரின் தந்தையுடைய சகோதரி மகனின் மகனுடைய மகன். |
| 90. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் தாயார். | 90. தந்தையின் தாயாருடைய தாயாரின் தந்தை. |

| பத்தி 1 | பத்தி 2 |
|---|---|
| 91. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரி | 91. தந்தையின் தாயாருடைய தாயாரின் சகோதரர் |
| 92. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரி மகள் | 92. தந்தையின் தாயாருடைய தாயாரின் சகோதரனின் மகன் |
| 93. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரரின் மகள் | 93. தந்தையின் தாயாருடைய தாயாரின் சகோதரி மகன் |
| 94. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரி மகனின் மகள் | 94. தந்தையின் தாயாரின் தாயாரின் சகோதரருடைய மகனின் மகன் |
| 95. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரர் மகனின் மகள் | 95. தந்தையின் தாயாரின் தாயாருடைய சகோதரி மகனின் மகன் |
| 96. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரியின் மகளுடைய மகனின் மகள் | 96. தந்தையின் தாயாரின் தாயாருடைய சகோதரரின் மகனின் மகனுடைய மகன் |
| 97. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரி மகனின் மகனுடைய மகள் | 97. தந்தையின் தாயாருடைய தாயாரின் சகோதரருடைய மகனின் மகனுடைய மகனின் மகன் |
| 98. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரர் மகளின் மகனுடைய மகள் | 98. தந்தையின் தாயாருடைய தாயாரின் சகோதரியின் ம்களுடைய மகனின் மகன் |
| 99. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் சகோதரர் மகனின் மகனுடைய மகள் | 99. தந்தையின் தாயாருடைய தாயாரின் சகோதரி மகனுடைய மகனின் மகன் |
| 100. கணவரின் சகோதரனுடைய விதவை | 100. கணவரின் சகோதரர் மகன் |
| 101. கணவரின் சகோதரருடைய மகனின் விதவை | 101. கணவரின் தந்தையின் சகோதரரின் மகன் |
| 102. கணவரின் சகோதரரின் மகனுடைய மகனின் விதவை. | 102. கணவரின் தந்தையின் தந்தையினுடைய மகன் |

* வரிசை எண் 100ம், 101ம், 102ம் டாக்டர் அம்பேத்கரால் அவருடைய சொந்தக் கையெழுத்தினாலேயே எழுதி சேர்க்கப்பட்டது. - ஆ-ர்.

168

## இரண்டாவது பிரிவு

## தடை செய்யப்பட்ட உறவு முறையின் படிநிலைகள்

(பகுதி 5 (பி) பார்க்கவும்)

| பத்தி 1 | பத்தி 2 |
|---|---|
| 1. தாயார் | 1. தந்தை |
| 2. தந்தையின் விதவை (மாற்றாந்தாய்) | 2. தாயாரின் கணவர் (மாற்றுத் தந்தை) |
| 3. தாயாரின் தாயார் | 3. தந்தையின் தந்தை |
| 4. தாயாரின் தகப்பனாரின் விதவை (மாற்றாந்தாய் பாட்டி) | 4. தந்தையின் தாயாரின் கணவர் (மாற்றுத் தாத்தா) |
| 5. தாயாரின் தாயாருடைய தாயார் | 5. தந்தையின் தந்தையினுடைய தந்தை |
| 6. தாயாரின் தாயாருடைய தந்தையின் விதவை (மாற்றாந்தாயின் தாயின் பாட்டி) | 6. தந்தையினுடைய தந்தையின் தாயாரின் கணவர் (மாற்றுத் தாத்தாவின் தாத்தா) |
| 7. தாயாரின் தந்தையின் தாயார் | 7. தந்தையின் தாயாரின் தந்தை |
| 8. தாயாரின் தந்தையுடைய தந்தையின் விதவை (மாற்றாந்தாயின் தாயின் பாட்டி) | 8. தந்தையின் தாயாருடைய தாயாரின் கணவர் (மாற்றுத் தாத்தாவின் தாத்தா) |
| 9. தந்தையின் தாயார் | 9. தாயாரின் தந்தை |
| 10. தந்தையினுடைய தந்தையின் விதவை (மாற்றாந்தாய் பாட்டி) | 10. தாயாருடைய தாயாரின் கணவர் (மாற்றுத் தாத்தா) |
| 11. தந்தையின் தாயாரின் தாயார் | 11. தாயாருடைய தந்தையின் தந்தை |
| 12. தந்தையின் தாயாரின் தந்தையின் விதவை (மாற்றாந்தாயின் தாயாரின் பாட்டி) | 12. தாயாருடைய தந்தையின் தாயாருடைய கணவர் (மாற்றுத் தாத்தாவின் தாத்தா) |
| 13. தந்தையினுடைய தந்தையின் தாயார் | 13. தாயாருடைய தாயாரின் தந்தை |
| 14. தந்தையின் தந்தையினுடைய தந்தையின் விதவை (மாற்றாந்தாயின் தாயாரின் பாட்டி) | 14. தாயின் தாயாருடைய தாயின் கணவர் (மாற்றுத் தாத்தாவின் தாத்தா) |
| 15. மகள் | 15. மகன் |
| 16. மகனின் விதவை | 16. மகளின் கணவர் |
| 17. மகளின் மகள் | 17. மகனுடைய மகன் |
| 18. மகளுடைய மகனின் விதவை | 18. மகளுடைய மகளின் கணவர் |
| 19. மகனுடைய மகள் | 19. மகளுடைய மகன் |
| 20. மகனுடைய மகனின் விதவை | 20. மகளுடைய மகளின் கணவன் |
| 21. மகளுடைய மகளின் மகள் | 21. மகனுடைய மகனின் மகன் |
| 22. மகளுடைய மகளின் மகனின் விதவை | 22. மகனுடைய மகனின் மகளுடைய கணவர் |
| 23. மகளுடைய மகனின் மகள் | 23. மகனுடைய மகளின் மகன் |
| 24. மகளுடைய மகனின் மகனுடைய விதவை | 24. மகனுடைய மகளுடைய மகளின் கணவர் |

| பத்தி 1 | பத்தி 2 |
|---|---|
| 25. மகனுடைய மகளின் மகள் | 25. மகளுடைய மகனின் மகன் |
| 26. மகனுடைய மகளின் மகனுடைய விதவை | 26. மகளுடைய மகனின் மகளுடைய கணவர் |
| 27. மகனுடைய மகனின் மகள் | 27. மகளுடைய மகளின் மகன் |
| 28. மகனுடைய மகனின் மகனுடைய விதவை | 28. மகளுடைய மகளின் மகளுடைய கணவர் |
| 29. சகோதரி | 29. சகோதரன் |
| 30. சகோதரி மகள் | 30. சகோதரனின் மகன்31. சகோதரியின் மகன் |
| 31. சகோதரனின் மகள் | |
| 32. தாயாரின் சகோதரி | 32. தாயாரின் சகோதரன் |
| 33. தந்தையின் சகோதரி | 33. தந்தையின் சகோதரர் |
| 34. தந்தையின் சகோதரரின் மகள் | 34. தந்தையின் சகோதரர் மகன் |
| 35. தாயாரின் சகோதரி மகள் | 35. தாயாரின் சகோதரி மகன் |

*(169)*

## நான்காவது அட்டவணை

*(12-வது பகுதியைப் பார்க்க)*

திருமணம் குறித்த அறிவிப்பு

................ இந்து தொகுப்புச் சட்டத்தின் IIம் பாகத்தின் கீழ் ...................மாவட்டத்திற்கான இந்து திருமணங்களின் பதிவாளர் ................. அவர்களுக்கு

எங்களுக்கு இடையில், கீழே கொடுக்கப்பட்டுள்ள தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் இந்து தொகுப்புச் சட்டத்தின் IIம் பாகத்தின் கீழ் சிவில் திருமணம் நடைபெறவிருக்கிறது என்று இதன் மூலம் நாங்கள் அறிவிப்பு செய்கிறோம்.

| பெயர் கள் | நிலை | பதவி அல்லது தொழில் | வயது | குடியிருக்கும் இடம் | அங்கு வசித்து வந்துள்ள காலம் |
|---|---|---|---|---|---|
| A B | திருமண மாகாதவர்<br>மனைவியை இழந்தவர்<br>மணவிலக்குப் பெற்றவர் | நில உடைமை யாளர் | ..... | ...... | ..... |
| C D | கன்னிப் பெண்<br>விதவை | ..... | ..... | ...... | ..... |

சான்று கூறுகிறோம், தேதி .................... மாதம்....................... ஆண்டு

(ஒப்பம்) A B

CD

## மூன்றாவது அட்டவணை

(12-வது பகுதி பார்க்கவும்)

திருமண அறிவிப்பு

இந்து தொகுப்புச் சட்டத்தின் II-ம் பாகத்தின் கீழ், ............ மாவட்டத்தின் இந்து திருமணங்களின் பதிவாளர் ............... அவர்களுக்கு.

இந்து தொகுப்புச் சட்டத்தின் II-ம் பாகத்தின் கீழ் எங்களுக்கு இடையில் இங்கு கொடுக்கப்பட்டுள்ள தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் திருமணம் நடைபெற உத்தேசிக்கப்பட்டுள்ளது என்று இதன் மூலம் நாங்கள் அறிவிப்புக் கொடுக்கிறோம்.

| பெயர்கள் | நிலை | தகுதி அல்லது தொழில் | வயது | குடியிருக்கும் இடம் | வசித்துவரும் காலம் |
|---|---|---|---|---|---|
| ஏபி | திருமணமாகாதவர்<br>மனைவியை இழந்தவர்<br>மண விலக்குப் பெற்றவர் | நில உடைமை யாளர் | .... | ..... | ..... |
| சிடி | கன்னி<br>விதவை | .... | .... | .... | ..... |

சாட்சிகள் தேதி........... மாதம்........ ஆண்டு

(ஒப்பம்) ஏபி
சிடி

(170)

## ஐந்தாவது அட்டவணை

(17-வது பகுதி பார்க்கவும்)

**மணமகன் செய்ய வேண்டிய பிரகடனம்**

ஏ.பி. ஆகிய நான் கீழ்வருமாறுப் பிரகடனம் செய்கிறேன்:-

1. நான் தற்பொழுது திருமணமாகாதவன் (அல்லது மனைவியை இழந்தவன், நிலைமைக் கேற்ப).

2. நான் இந்து மதத்தைச் சேர்ந்தவன் (அல்லது புத்தமதம், சீக்கிய மதம், அல்லது ஜைன மதம், நிலைமைக்கேற்ப).

3. எனக்கு ...... வயது நிறைவெய்தியுள்ளது.

4. நான் சிடிக்கு (மணமகள்) இந்து தொகுப்புச் சட்டத்தின் II-ம் பாகத்தில் தடை செய்யப்பட்டுள்ள உறவு முறையின் படிநிலைகளுக்கு உட்பட்ட உறவுக் காரனில்லை.

(மணமகன் 21 வயதைப் பூர்த்தி செய்யாத போது) :

5. எனக்கும் **சிடிக்கும்** இடையில் திருமணம் நடைபெறுவதற்கு **எம்என்** அதாவது எனது தந்தையுடைய (அல்லது பாதுகாவலர், எதார்த்த நிலைமையின்படி) அனுமதி வழங்கப்பட்டுள்ளது. அது ரத்துசெய்யப்படவில்லை).

6. இந்தப் பிரகடனத்தில் கூறியுள்ளவை எவையாவது பொய்யாக இருக்குமேயானால், அல்லது உண்மை என்று நம்பப்பட முடியாமல் இருக்குமானால், நான் சிறை தண்டனைப் பெறுவதற்கு உரியவனாவேன், மற்றும் அபராதமும் விதிக்கப் பெறுவதற்குரியவன் என்பதை நான் அறிவேன்.

(ஒப்பம்) ஏ.பி. (மணமகன்)

**மணமகள் செய்ய வேண்டிய பிரகடனம்**

**சிடி** ஆகிய நான் கீழ்வருமாறு பிரகடனம் செய்கிறேன்:-

1. தற்பொழுது நான் திருமணமாகாதவள் (அல்லது விதவை, எதார்த்த நிலைமையின்படி).

2. நான் இந்து மதத்தைச் சேர்ந்தவள் (அல்லது புத்த மதம், சீக்கிய மதம், அல்லது ஜைனமதம், எதார்த்த நிலைமையின்படி).

3. எனக்கு........... வயது நிறைவெய்தியுள்ளது.

4. நான், இந்து தொகுப்புச் சட்டத்தின் II-ம் பாகத்தில் தடை செய்யப்பட்டுள்ள உறவுமுறைக்குள் வரும் அளவில் **ஏ.பி.க்கு** (மணமகனுக்கு) உறவினர் அல்ல (மணமகள் 21 வயதைப் பூர்த்தி செய்யாத நிலையில், அவள் ஒரு விதவையாக இருந்தாலொழிய).

5. எனக்கும் **ஏபிக்கும்** இடையில் நடைபெறவுள்ள திருமணத்திற்கு எனது தந்தை **ஓ.பி.**யினுடைய (அல்லது பாதுகாவலர், எதார்த்த நிலைமையின்படி) சம்மதம் வழங்கப்பட்டுள்ளது, அது ரத்து செய்யப்படவில்லை).

6. இந்தப் பிரகடனத்தில் ஏதாவது கூற்று பொய்யாக இருந்தால், மற்றும் அத்தகைய கூற்றைத் தெரிவிக்கும்போது அது பொய் யென்று அறிந்திருந்தாலோ அல்லது நம்பியிருந்தாலோ, அல்லது அது உண்மையல்லவென்று தெரிந்திருந்தாலோ, நான் சிறைத் தண்டனை பெறுவதற்கும், அபராதம் விதிக்கப்படுவதற்கும் உரியவனாவேன் என்பதை அறிந்துள்ளேன்.

(ஒப்பம்) **சி.டி.** (மணமகள்)

*(170)*

## ஐந்தாவது அட்டவணை

*(17-வது பகுதி பார்க்கவும்)*

### மணமகன் செய்ய வேண்டிய பிரகடனம்

*ஏ.பி. ஆகிய நான் கீழ்வருமாறுப் பிரகடனம் செய்கிறேன்:-*

*1. நான் தற்பொழுது திருமணமாகாதவன் (அல்லது மனைவியை இழந்தவன், நிலைமைக் கேற்ப).*

*2. நான் இந்து மதத்தைச் சேர்ந்தவன் (அல்லது புத்தமதம், சீக்கிய மதம், அல்லது ஜைன மதம், நிலைமைக்கேற்ப).*

*3. எனக்கு ...... வயது நிறைவெய்தியுள்ளது.*

*4. நான் சிடிக்கு (மணமகள்) இந்து தொகுப்புச் சட்டத்தின் II-ம் பாகத்தில் தடை செய்யப்பட்டுள்ள உறவு முறையின் படிநிலைகளுக்கு உட்பட்ட உறவுக் காரனில்லை.*

*(மணமகன் 21 வயதைப் பூர்த்தி செய்யாத போது) :*

*5. எனக்கும் சிடிக்கும் இடையில் திருமணம் நடைபெறுவதற்கு* **எம்என்** *அதாவது எனது தந்தையுடைய (அல்லது பாதுகாவலர், எதார்த்த நிலைமையின்படி) அனுமதி வழங்கப்பட்டுள்ளது. அது ரத்துசெய்யப்படவில்லை).*

*6. இந்தப் பிரகடனத்தில் கூறியுள்ளவை எவையாவது பொய்யாக இருக்குமேயானால், அல்லது உண்மை என்று நம்பப்பட முடியாமல் இருக்குமானால், நான் சிறை தண்டனைப் பெறுவதற்கு உரியவனாவேன், மற்றும் அபராதமும் விதிக்கப் பெறுவதற்குரியவன் என்பதை நான் அறிவேன்.*

*(ஒப்பம்) ஏ.பி. (மணமகன்)*

### மணமகள் செய்ய வேண்டிய பிரகடனம்

*சிடி ஆகிய நான் கீழ்வருமாறு பிரகடனம் செய்கிறேன்:-*

*1. தற்பொழுது நான் திருமணமாகாதவள் (அல்லது விதவை, எதார்த்த நிலைமையின்படி).*

*2. நான் இந்து மதத்தைச் சேர்ந்தவள் (அல்லது புத்த மதம், சீக்கிய மதம், அல்லது ஜைனமதம், எதார்த்த நிலைமையின்படி).*

*3. எனக்கு........... வயது நிறைவெய்தியுள்ளது.*

4. நான், இந்து தொகுப்புச் சட்டத்தின் II-ம் பாகத்தில் தடை செய்யப்பட்டுள்ள உறவுமுறைக்குள் வரும் அளவில் **ஏ.பி.க்கு** (மணமகனுக்கு) உறவினர் அல்ல (மணமகள் 21 வயதைப் பூர்த்தி செய்யாத நிலையில், அவள் ஒரு விதவையாக இருந்தாலொழிய).

5. எனக்கும் **ஏபிக்கும்** இடையில் நடைபெறவுள்ள திருமணத்திற்கு எனது தந்தை **ஓ.பி.**யினுடைய (அல்லது பாதுகாவலர், எதார்த்த நிலைமையின்படி) சம்மதம் வழங்கப்பட்டுள்ளது, அது ரத்து செய்யப் படவில்லை).

6. இந்தப் பிரகடனத்தில் ஏதாவது கூற்று பொய்யாக இருந்தால், மற்றும் அத்தகைய கூற்றைத் தெரிவிக்கும்போது அது பொய் யென்று அறிந்திருந்தாலோ அல்லது நம்பியிருந்தாலோ, அல்லது அது உண்மையல்லவென்று தெரிந்திருந்தாலோ, நான் சிறைத் தண்டனை பெறுவதற்கும், அபராதம் விதிக்கப்படுவதற்கும் உரியவனாவேன் என்பதை அறிந்துள்ளேன்.

(ஒப்பம்) சி.டி. (மணமகள்)

மேலே குறிப்பிடப்பட்ட **ஏ.பி**யும் **சி.டி**யும் எங்கள் முன்னிலையில் கையொப்பமிட்டனர். நாங்கள் அறிந்தவரையில் இந்தத் திருமணத்திற்குச் சட்டப்படியான தடை ஏதுமில்லை.

ஜிஎச்<br>ஐஜே } (மூன்று சாட்சிகள்)<br>கேஎல்

(மணமகனோ அல்லது மணமகளோ இருபத்தியோரு வயது பூர்த்தியடையாதவர்களாயிருந்தால், ஒரு விதவை சம்பந்தப்பட்ட விஷயம் நீங்லாக:

என்னுடைய முன்னிலையிலும், என்னுடைய சம்மதத்துடனும் மேலே குறிப்பிட்ட **ஏபியும் சிடியும்** கையொப்பமிட்டனர். மேலே குறிப்பிட்ட **ஏபியின் எம்.என்.** (ஏ.பி - தந்தை (அல்லது பாதுகாவலர் (அல்லது **சி.டி** - எதார்த்த நிலைமையின்படி)

(உறுதிக் கையொப்பம்) **இ.எஃப்**

இந்து தொகுப்புச் சட்டத்தின் II-ம் பாகத்தின் கீழ்,<br>............. மாவட்டத்திற்கு<br>இந்துத் திருமணங்களின் பதிவாளர்

தேதி ........... மாதம் ........................ஆண்டு.

மேலே குறிப்பிடப்பட்ட ஏபியும் சிடியும் எங்கள் முன்னிலையில் கையொப்பமிட்டனர். நாங்கள் அறிந்தவரையில், இந்தத் திருமணத்திற்கு சட்டப்படியான தடை ஏதுமில்லை.

ஜி.எச்.<br>
ஐ.ஜே } (மூன்று சாட்சிகள்)<br>
கே.எல்.

(மணமகனோ அல்லது மணமகளோ இருபத்தியோரு வயது பூர்த்தியடையாதவர்களாயிருந்தால் ஒரு விதவை சம்பந்தப்பட்ட விஷயம் நீங்கலாக:

என்னுடைய முன்னிலையிலும், என்னுடைய சம்மதத்துடனும் மேலே குறிப்பிடப்பட்ட **ஏ.பியும் சி.டியும்** கையொப்பமிட்டனர். **எம்.என்.** (ஓ.பி. - மேலே குறிப்பிட்ட ஏ.பி.யின் தந்தை (அல்லது பாதுகாவலர் (அல்லது **சி.டி** - எதார்த்த நிலைமையின்படி)

(உறுதிக்கையொப்பம்) **இ.எஃப்.**<br>
இந்து தொகுப்புச் சட்டத்தின் II-ம் பாகத்தின் கீழ்<br>
.............. மாவட்டத்திற்கு<br>
இந்து திருமணங்களின் பதிவாளர்

தேதி.............. மாதம்...................... ஆண்டு.

(170)

*(171)*

## ஆறாவது அட்டவணை

*(19-வது பிரிவு பார்க்கவும்)*

*சிவில் திருமணத்திற்கான பதிவாளரின் சான்றிதழ்*

***இ.எஃப்.*** *ஆகிய நான், ................ 19...... அன்று,* ***ஏ.பி.யும் சி.டியும்*** *என்முன் ஆஜரானார்கள். அவர்கள் ஒவ்வொருவரும், என் முன்னிலையிலும், கீழே கையெழுத்திட்டுள்ள மூன்று நம்பகமான சாட்சிகளின் முன்னிலையிலும், இந்து திருமணச் சட்டத்தின் II-ம் பாகத்தில் கோரியுள்ளபடி பிரகடனங்கள் செய்துள்ளனர்; மற்றும் மேலே குறிப்பிட்ட பாகத்தின்கீழ், அவர்களுக்கிடையில், என் முன்னிலையில் திருமணம் முறைப்படி நடந்தேறியது என்று சான்றளிக்கிறேன்.*

*(ஒப்பம்)* ***இ.ஏஃப்***
*............ மாவட்டத்திற்கு இந்து திருமணச் சட்டத்தின் II-ம் பாகத்தின் கீழ் நடைபெறும் இந்து திருமணங்களின் பதிவாளர்.*

*ஒப்பம்* ***ஏ.பி.***
***சி.டி.***

***ஜி.எச்.***
***ஐ.ஜே.*** *(மூன்று*
***கே.எல்.*** *சாட்சிகள்)*

*தேதி ........... மாதம் .........................ஆண்டு.*

## ஐந்தாவது அட்டவணை

*(19-வது பிரிவு பார்க்கவும்)*

*சிவில் திருமணத்தின் பதிவாளரின் சான்றிதழ்*

**இ.எஃப்.** ஆகிய நான் .................. 19....... அன்று **ஏ.பி.யும் சி.டியும்** என்முன் ஆஜரானார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் என் முன்னிலையிலும், கீழே கையொப்பமிட்டுள்ள நம்பகமான மூன்று சாட்சிகளின் முன்னிலையிலும், இந்து திருமண சட்டத்தின் II-ம் பாகத்தில் கோரியுள்ளபடி பிரகடனங்கள் செய்துள்ளனர்; மற்றும், மேலே குறிப்பிட்ட பாகத்தின் கீழ், அவர்களுக்கிடையில், என் முன்னிலையில் திருமணம் முறைப்படி நடந்தேறியது என்று சான்றளிக்கிறேன்.

*(ஒப்பம்)* **இஎஃப்**

........... மாவட்டத்திற்கு இந்து திருமணச் சட்டத்தின் IIம் பாகத்தின் கீழ் நடைபெறும் இந்து திருமணங்களின் பதிவாளர்

*(ஒப்பம்)* ஏ.பி
சி.டி

ஜி.எச்.
ஐ.ஜே.
கே.எல். } (மூன்று சாட்சிகள்)

தேதி ........... மாதம் ........................ ஆண்டு.

(172)

## ஏழாவது அட்டவணை

(பிரிவு 21 பார்க்கவும்)

தார்மிகத் திருமணத்தின் பதிவாளரின் சான்றிதழ்

**ஏ.பியும் சி.டியும்** இன்று எனக்கு முன்னால் ஆஜராகி, அவர்கள் ஒவ்வொருவரும் என் முன்னிலையிலும், இங்கே கீழே கையொப்பமிட்டுள்ள நம்பகமான மூன்று சாட்சிகளின் முன்னிலையிலும், .................. 19............... அன்று தங்களுக்கிடையில் இந்து முறைப்படி தார்மிகத் திருமணம் நடந்தேறியது என்று பிரகடனம் செய்தனர்; மற்றும், அந்தத் திருமணம் பதிவு செய்துகொள்ளப் படுவதற்குத் தாங்கள் விரும்புவதாகவும் தெரிவித்தனர். எனவே, அவர்களின் விருப்பத்திற்கிணங்க, அந்தத் திருமணம், இன்று, இந்துத் திருமணச் சட்டத்தின் II-ம் பாகத்தின் 21-வது பிரிவின் கீழ் பதிவு செய்யப்பட்டுள்ளது என்று **இஎஃப்** ஆகிய நான் சான்றளிக்கிறேன். மேலே கூறப்பட்ட 21வது பிரிவின்கீழ் அவர்களது திருமணத்தைப் பதிவு செய்ய வேண்டுமென்று ............ நாளில் விண்ணப்பம் செய்து கொள்ளப்பட்ட தேதியிலிருந்து இது அமலுக்கு வருகிறது என்று சான்றளிக்கிறேன்.

மேலே கூறப்பட்டபடி இந்து முறைப்படி அவர்கள் திருமணம் செய்துகொண்டதற்குப்பின்னர், அவர்களுக்குப் பிறந்த கீழ் வரும் குழந்தைகள் சட்டப்படியானவர்கள் என்று கருதப்பட வேண்டும், எப்போதும் அவர்கள் சட்டப்படியானவர்களே.

(இங்கு குழந்தைகளின் பெயர்கள், அவர்களின் பிறந்த நாள் வரிசைப்படி எழுதப்படுகிறது. ஒவ்வொரு குழந்தைக்கு எதிராகவும் அதனுடைய பிறந்த தேதி குறிப்பிடப்படுகிறது).

(ஒப்பம்) **இஎஃப்**

..........மாவட்டத்திற்கு இந்து திருமண சட்டத்தின்
II-ம் பாகத்தின்கீழ் நடைபெறும்
இந்துத் திருமணங்களின் பதிவாளர்

(ஒப்பம்) ஏ.பி.
சி.டி.

ஜி.எச்.
ஐ.ஜே. } (மூன்று சாட்சிகள்)
கே.எல்.

## ஆறாவது அட்டவணை

(21-வது பிரிவு பார்க்கவும்)

புனித வினைமுறைப்படி நடக்கும் திருமணத்திற்கு பதிவாளரின் சான்றிதழ்

ஏ.பி.யும் சி.டியும் இன்று எனக்கு முன்னால் ஆஜராகி, அவர்கள் ஒவ்வொருவரும் என் முன்னிலையிலும், கீழே கையொப்ப மிட்டுள்ள நம்பகமான மூன்று சாட்சிகள் முன்னிலையிலும் தங்களுக்கு இடையில்............ 19..... அன்று, இந்து முறைப்படி புனித வினைமுறைத் திருமணம் நடந்ததாகப் பிரகடனம் செய்தனர். அந்தத் திருமணம் பதிவு செய்யப்படவேண்டுமென்ற தமது விருப்பத்தையும் தெரிவித்தனர். அவர்களுடைய விருப்பத்திற்கிணங்க, அந்தத் திருமணம் இன்று, இந்துத் திருமணச் சட்டத்தின் II-ம் பாகம், 21-வது பிரிவின்கீழ் பதிவு செய்யப்பட்டது என்று இஎஃப் ஆகிய நான் சான்றளிக்கிறேன். மேலே கூறப்பட்ட 21-வது பிரிவின் கீழ் அவர்கள் தமது திருமணம் பதிவு செய்யப்பட வேண்டுமென்று விண்ணப்பித்த ............... 19......... தேதியிலிருந்து இது செல்லுபடியாகும்.

மேலே குறிப்பிட்ட இந்து முறைப்படியான அவர்களது திருமணம் நடைபெற்றதற்குப் பின்னர் அவர்களுக்குப் பிறந்த கீழ்வரும் குழந்தைகள் சட்டப்படியானவை என்று கருதப்படும். எப்போதும் அவ்வாறே கருதப்படும்.

(இங்கு குழந்தைகளின் பெயர்கள் அவர்களின் பிறந்த தேதி வரிசைப்படி எழுதப்பட வேண்டும், ஒவ்வொரு குழந்தைக்கு எதிரிலும் அதனுடைய பிறந்த தேதி குறிக்கப்பட வேண்டும்..)

(ஒப்பம்) ஏ.பி.
சி.டி.

ஜி.எச்.
ஐ.ஜே.
கே.எல். } (மூன்று சாட்சிகள்)

(ஒப்பம்) இஎஃப்
........... மாவட்டத்திற்கு இந்து திருமண சட்டத்தின் II-ம் பாகத்தின்கீழ் இந்து திருமணங்களின் பதிவாளர்.

*(173)*

## எட்டாவது அட்டவணை

### முன்னுரிமை வாரிசுகள்

### வகுப்பு I

*(98-வது பிரிவு பார்க்கவும்)*

*மகன்; மனைவி (விதவை); *(அ) மகள்; முன்பே இறந்துபோன மகனின் மகன்; முன்பே இறந்துபோன மகனின் மனைவி (விதவை); முன்பே இறந்துபோன மகனின் முன்பே இறந்துபோன மகனின் மகன்; முன்பே இறந்துபோன மகனின் முன்பே இறந்துபோன மகனின் மனைவி (விதவை).*

### வகுப்பு II

*(98-வது பிரிவு பார்க்கவும்)*

I *தந்தை; தாய் *(ஆ)*

II *(1) மகனின் மகள் (2) மகளின் மகன் (3) மகளின் மகள்*

III *(1) மகனின் மகளின் மகன் (2) மகனின் மகனின் மகள், (3) மகனின் மகளின் மகள், (4) சகோதரர், (5) சகோதரி*

IV *(1) மகளின் மகனின் மகன் (2) மகளின் மகனின் மகள், (3) மகளின் மகளின் மகன் (4) மகளின் மகளின் மகள்*

V *(1) சகோதரனின் மகன், (2) சகோதரியின் மகன், (3) சகோதரரின் மகள் மற்றும் (4) சகோதரியின் மகள்*

VI *தகப்பனாரின் தகப்பனார்; தகப்பனாரின் தாய்*

VII *தகப்பனாரின் மனைவி (விதவை); சகோதரனின் மனைவி (விதவை)*

VIII *தகப்பனாரின் சகோதரர்; தகப்பனாரின் சகோதரி*

IX *தாயாரின் தகப்பனார்; தாயாரின் தாயார்*

X *தாயாரின் சகோதரர்; தாயாரின் சகோதரி.*

*விளக்கம் :- இந்த அட்டவணையில் சகோதரன் அல்லது சகோதரி என்று குறிப்பிடுவது சொந்த (ரத்த சம்பந்தமுள்ள) சகோதரன் அல்லது சகோதரியைக் குறிப்பிடுவதல்ல.*

---

* *(அ) 'திருமணமாகாத மகள்' மற்றும் *(ஆ) 'திருமணமான மகள்' என்று டாக்டர் அம்பேத்கரால் தனது சொந்தப் பிரதியில் திருத்தப்பட்டது.*

# ஏழாவது அட்டவணை

## முன்னுரிமை வாரிசுகள்

### வகுப்பு I

*(98-வது பிரிவு பார்க்கவும்)*

*மகன்; விதவை: மகள்; முன்பே இறந்துவிட்ட மகனின் மகன்; முன்பே இறந்துவிட்ட மகனின் மனைவி (விதவை); முன்பே இறந்து விட்ட மகனின் முன்பே இறந்துவிட்ட மகன்; முன்பே இறந்துவிட்ட மகனின் முன்பே இறந்துவிட்ட மகனின் மனைவி (விதவை)*

### வகுப்பு II

*(98ம் பிரிவு பார்க்கவும்)*

I *தந்தை; தாய்*

II *(1) மகளின் மகள் (2) மகளின் மகன் (3) மகளின் மகள்*

III *(1) மகனின் மகளின் மகன் (2) மகனின் மகனின் மகள் (3) மகனின் மகளின் மகள் (4) மகளின் மகனின் மகன் (5) மகளின் மகனின் மகள் (6) மகளின் மகளின் மகன் (7) மகளின் மகளின் மகள்.*

IV *சகோதரன், சகோதரி*

V *(1) சகோதரனின் மகன் (2) சகோதரியின் மகன் (3) சகோதரனின் மகள், மற்றும் (4) சகோதரியின் மகள்*

VI *தகப்பனாரின் தகப்பனார்; தகப்பனாரின் தாயார்*

VII *தகப்பனாரின் (மனைவி) விதவை; சகோதரனின் மனைவி (விதவை)*

VIII *தகப்பனாரின் சகோதரர், தகப்பனாரின் சகோதரி.*

IX *தாயாரின் தகப்பனார்; தாயாரின் தாயார்*

X *தாயாரின் சகோதரர்; தாயாரின் சகோதரி*

*விளக்கம் :- இந்த அட்டவணையில் சகோதரர் அல்லது சகோதரி என்று குறிப்பிடுவது இரத்தசம்பந்தமுள்ள சகோதரனையோ, சகோதரியையோ குறிப்பதாகாது.*

*(173)*

□□□

## பிரிவு III

## பொறுக்குக் குழுவிலிருந்து திருப்பி அனுப்பப்பட்டதற்குப் பின்னர் இந்து திருமண மசோதாவின் மீது நடைபெற்ற விவாதம்

*1949 பிப்ரவரி 11*

*முதல்*

*1950 டிசம்பர் 14 வரையில்*

## *இந்து திருமணங்கள் செல்லுபடி மசோதா

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா** (கிழக்கு பஞ்சாப் : பொது) : நான் பிரேரேபணை செய்கிறேன்:

> ''இந்துக்கள், சீக்கியர்கள், ஜைனர்கள் மற்றும் அவர்களின் வெவ்வேறு சாதியினர், உப-சாதியினர் ஆகியோரிடையிலான திருமணங்களை செல்லத் தக்கதாக்கும் மசோதா ஒரு பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு விட வேண்டும். அக் குழுவில் கியானி குர்முக் சிங் முஸாபிர், சர்தார் ஹுக்கம் சிங், திரு. எம். அனந்த சயனம் அய்யங்கார், திரு. தேசபந்து குப்தா, திருமதி ஜி. துர்க்காபாய், திருமதி ரேணுகா ரே., திரு. ராம்நாத் கோயங்கா, டாக்டர் பக்ஷி தேக் சந்த், லாலா அசிந்த் ராம், ரணவீர சிங், திரு. மகாவீர் தியாகி, மற்றும் இதைப் பிரேரணைசெய்பவர் உறுப்பினர்களாக இருப்பார்கள். குழுக் கூட்டத்தில் குறைந்தபட்சம் ஐந்து உறுப்பினர்களாவது கலந்துகொள்ள வேண்டும்.''

ஐயா, உங்களுடைய அனுமதியுடன் இந்தப் பிரேரணையை நான் முன்மொழியும்போது சட்டத்தின் இன்றைய நிலை என்ன என்பதைக் கூற விரும்புகிறேன். தற்பொழுது எல்லா விஷயங்களிலும், இந்துக்கள், சீக்கியர்கள், மற்றும் ஜைனர்கள் இந்து சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். திருமணம் சம்பந்தமாக, இன்று, இந்து சட்டத்தின் நிபந்தனைகளின்படி, வெவ்வேறு சாதிகளைச் சேர்ந்த ஓர் ஆணுக்கும் ஒரு பெண்ணுக்கும் இடையிலான திருமணம் பம்பாயில் தவிர வேறு எங்கும் செல்லத் தக்கதல்ல; அங்கு **அனுலோமா** திருமணங்கள் அனுமதிக்கப்படுகின்றன, ஆனால் **பிரதிலோமா** திருமணங்கள் அனுமதிக்கப்படுவதில்லை. அலகாபாத், சென்னை, மற்றும் கல்கத்தாவில் உயர்நீதிமன்றங்கள், **அனுலோமா** திருமணங்களைக்கூட செல்லத்தக்கவையல்ல என்று அறிவித்துள்ளன.

வெவ்வேறு மதங்களைச் சேர்ந்த நபர்களைப் பொறுத்த மட்டிலும், இதில்கூட நிலைமை மிகவும் நிச்சயமற்றதாக இருக்கிறது. இந்து சட்டத்தின் கறாரான கோட்பாடுகளின்படி அனுமதிக்கப்பட முடியாத எந்தத் திருமணமும் மரபு வழக்கத்தின்படி அனுமதிக்கப்படுகிறது. சாதாரணமாக, பஞ்சாபில் **கார்வாரி** மற்றும் **சந்திரதாரி** திருமணங்கள்கூட அனுமதிக்கப்படுகின்றன. கறாரான இந்து சட்டத்தின்படி வெவ்வேறு இந்து சமூகங்களைச் சேர்ந்தவர்களிடையிலான திருமணங்கள் அனுமதிக்கப்படாவிடினும் சட்ட மரபுரீதியில் பல இடங்களில் அத்தகைய திருமணங்கள் அனுமதிக்கப்படுகின்றன.

---

* அ.நி. (சட்) டி. தொகுதி I, 11 பிப்ரவரி, 1949 பக்கங்கள் 419-28.

உதாரணமாக நேப்பாளத்தில் அத்தகைய திருமணங்கள் செல்லத் தக்கவை என்று கருதப்படுகின்றன. சாதிகள் மலிந்ததாக இல்லாத பஞ்சாபில், சீக்கியர்களுக்கும் இந்துக்களுக்கும் இடையிலான திருமணங்கள் செல்லத்தக்கவை என்று பொதுவாக சமுதாயத்தினால் ஏற்றுக் கொள்ளப்படுகிறது - நீதி மன்றத்தினால் அல்ல. அவர்களின் குழந்தைகள் வாரிசுரிமைபெற அனுமதிக்கப்படுகிறார்கள்; அவர்கள், திருமணங்கள் சட்டப்படி நடந்ததாகவே கருதப்பட்டு, நடத்தப்படு கின்றன. ஜைனர்களுக்கும் இந்துக்களுக்கும் இடையில் முன்பு எந்தத் திருமணங்களும் நடைபெறும் வழக்கமில்லை. ஆனால் தற்பொழுது கடிகாரத் தொங்கட்டான் எதிர்ப்பக்கம் திரும்பிவிட்டது. ஜைனர் களுக்கும் இந்துக்களுக்குமிடையில், குறிப்பாக, இந்து அகர்வால் களுக்கும் ஜெயின் அகர்வால்களுக்கும் இடையில் திருமணங்கள் நடைபெறு கின்றன. ஆனால் ஒரு ஜெயின் அகர்வால் சட்டப்படி ஒரு சூத்திரரையோ அல்லது ஒரு பிராமணரையோ திருமணம் செய்து கொள்ள முடியாது. உப-பிரிவுகள், உப-சாதிகள் சம்பந்தமாகவும், 1946ம் வருடச் சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்னர், இந்து சமூகத்தின் உப-பிரிவுகளுக்கிடையிலான திருமணங்கள் சில இடங் களில் சட்டபூர்வமானவை என்றும் வேறிடங்களில் சட்ட விரோத மானவை என்றும் அறிவிக்கப்பட்டன. ஆனால் அது இங்கு முக்கியமல்ல. உப-பிரிவும், உப-சாதியும் ஒன்றுதானென்றால், இங்கு ''உப-சாதி'' என்ற சொல்லை உபயோகப்படுத்தியதற்கு நான் வருந்து கிறேன். பிரதான சாதியின் உப-பிரிவுகளின் உறுப்பினர்களுக்கு இடையிலான திருமணம் ஏற்கனவே சட்டபூர்வமாக்கப்பட்டுள்ளது. மற்றவற்றைப் பொறுத்த மட்டிலும், உதாரணமாக, வெவ்வேறு மதங்களையும் வெவ்வேறு சாதிகளையும் சேர்ந்த நபர்கள் திருமணம் செய்துகொள்ள விரும்பினால், தற்போதைய சட்டத்தின்படி அத்தகைய திருமணங்கள் சட்டப்பூர்வமானவை அல்ல. தற்பொழுது, இந்தத் தடை அகல வேண்டும் என்று பொதுமக்கள் அபிப்பிராயம் தெளிவாகக் கோருகிறது. வெவ்வேறு மதங்களையும் சாதிகளையும் சேர்ந்த திருமணங்கள் சட்டப்பூர்வமானதாக்கப்பட வேண்டும். தற்பொழுது பல இளைஞர்களும் யுவதிகளும் தமது சாதிகளுக்கு அப்பாற்பட்டு திருமணம் செய்து கொள்ள விரும்புகின்றனர். பொது மக்கள் அபிப்பிராயத்தைப் பொறுத்தமட்டிலும், இந்த நடவடிக்கைக்கு உறுதி யான ஆதரவு, அடித்தளம் இருக்கிறது என்று உறுதியாக நம்புகிறேன்.

தேசியக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, பஞ்சாபில் இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் தற்போதிருந்து வரும் உரசலைத் தீர்த்து அவர்களை ஒன்றுபட்ட மக்களாக்குவதற்கு, நூறு சீக்கிய

மற்றும் இந்துப் பெண்கள் நூறு இந்து மற்றும் சீக்கிய இளைஞர்களைத் திருமணம் செய்து கொண்டால், பிணக்கு முழுவதும் அகன்றுவிடும் என்று மிகவும் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். உண்மையில் இந்துக்களும் முஸ்லீம்களும் ஒருவரை ஒருவர் திருமணம் செய்து கொண்டிருந்ததால் பாகிஸ்தானே ஏற்பட்டிருக்காது என்று நம்புகிறேன். இந்தக் கலப்பு மணத்தை ஒரு மரபாக நாம் ஏற்றுக்கொண்டால், சாதிகளுக்கு இடையிலும், வெவ்வேறு மதங்களைச் சார்ந்தவர்களுக்கு இடையிலுமான அனைத்துக் கசப்புணர்ச்சியும் அகன்றுவிடும் என்று நிச்சயமாக நம்புகிறேன். இந்த நடைமுறையை நாம் ஏன் கடைப்பிடிக்கக் கூடாது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்து தர்மத்தின் மெய்யான கோட்பாடுகள் இதற்குக் குறுக்கே நிற்கின்றன என்று கூறப்படக் கூடும். இதற்கு எதிரான நடவடிக்கைகளை நாம் மேற்கொள்வது சரியானதல்ல. மகாபாரதத்தின் முதலாவது **சுலோகம்** இவ்வாறு தொடங்குகிறது என்று அடக்கத்துடன் கூறிக்கொள்ள விரும்புகிறேன்: அதாவது இந்த நாட்டில் அதிக க்ஷத்திரியர்கள் இல்லாததால், சில பிராமணர்களை வரவழைத்து க்ஷத்திரியர்களைப் பிறப்பிக்கும்படிக் கூறலாம். நமது அனைத்து மதங்களும் நமது வேதகாலக் கதைகளும் இந்துக்களிடையில் இத்தகைய திருமணங்கள் அடிக்கடி நடைபெறுகின்றன என்று நமக்குக் கூறுகின்றன. உதாரணமாக, சாதி அமைப்பு வேரூன்றுவதற்கு முன்னர், சாதியைப் பொறுத்தமட்டிலும் இந்துக்களிடையில் கலப்பு மணத்திற்கு எந்தத் தடையும் இருக்கவில்லை என்பதை நாம் எண்ணிப் பார்க்கலாம். எனவே தீவிரமான கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, இந்த நடவடிக்கை சம்பந்தமாக எத்தகைய விசேஷ சிரமமும் இல்லை என்று கருதுகிறேன்.

ஆயினும், அதேசமயத்தில் நான் வலியுறுத்த விரும்பும் விஷயம் என்னவெனில், இது ஓர் ஊக்கமூட்டும் ஏற்பாடுதான். தனது சாதிக்கு வெளியில் திருமணம் செய்து கொள்ளும்படி இது எந்த நபரையும் நிர்ப்பந்தப்படுத்துவதில்லை. ஒரு நபர் அவ்வாறு விரும்பினால், ஓர் இளைஞனும் ஓர் யுவதியும் அவ்வாறு எண்ணங் கொண்டிருந்தால், அவர்களது பெற்றோர்களும் அவ்வாறு எண்ணங் கொண்டிருந்தால், அந்த இருவரும் திருமணம் செய்துகொள்வதற்கு உதவவேண்டும், அவர்களது குழந்தைகள் சட்டப்படியானவை என்று கருதப்பட வேண்டும் என்றுதான் நான் விரும்புகிறேன்.

தற்பொழுது ஓர் இந்து தனது சாதிக்கு வெளியில் திருமணம் செய்து கொள்ள விரும்பினால், அவர் பொய் கூறுவதன் மூலம் தனது

நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள முடியாது என்பதல்ல. ஆரிய திருமண செல்லுபடியாகும் சட்டத்தின்படி, அவர், தனது சாதிக்கு வெளியில் எந்த இந்துவையும் திருமணம் செய்துகொள்ள முடியும். ஆனால், உதாரணமாக, ஒரு நபர் ஆரிய சமாஜத்தைச் சேர்ந்தவராக இல்லாவிட்டால், அவர் தமது காரியத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கு எதற்காகப் பொய் கூற வேண்டும்? எனவே, சட்டம் எதைக் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்றால், நபர்கள் சட்டப் பூர்வமான முறையில் தமது நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள வகை செய்ய வேண்டும் என்பதுதான். சிறப்புத் திருமண சட்டத்தின் (1872ம் வருட சட்டம் III) விதிகளின்படி, ஓர் இந்து அச்சட்டத்தின் திருத்தப்படாத விதிகளின்கீழ் ஒரு திருமணம் செய்துகொள்வது சாத்தியம் என்பதை நானும் அறிவேன் - ஆனால் அதே சமயத்தில் அவர் இந்துவாகத் தொடர்ந்து இருக்கும்போதே, தான் ஓர் இந்து அல்லாதவர் என்று அறிவிக்க வேண்டும். இந்து திருமணச் சட்டத்தில் 457-வது பத்தியில் எச்.எஸ். கவுர் என்பவர் ஒரு சுவையான புரியாபுதிரை வழங்கியுள்ளார். அவர் இவ்வாறு கூறுகிறார்:

> "இவ்வாறு சிறப்புத் திருமண (திருத்தச்) சட்டம் ஒரு முரண் புதிரான நிலைமையை ஏற்படுத்தியுள்ளதைக் காணலாம். ஓர் இந்து தன்னை இந்து அல்லாதவர் என்று அறிவித்து விட்டுத் திருமணம் செய்துகொள்கிறார் என்றால், அதே சமயத்தில் இந்து சட்டத்திற்கு உட்பட்டவராகவே இருக்கிறார். அவர் அவ்வாறு பிரகடனம் செய்யா விட்டால், அவர் இந்து சட்டத்திற்குக் கட்டுப்பட்டவராக இருக்க மாட்டார். இதனால் ஒரு புதிரான நிலைமை ஏற்படுகிறது. ஓர் இந்து எப்பொழுது இந்து அல்லாதவராகிறார்? இதற்கு விடை: அவர், சிறப்புத்திருமண (திருத்தச்) சட்டத்தின்கீழ் ஒரு இந்துவாகத் திருமணம் செய்துகொள்ளும்போதுதான்."

1923-ம் வருடச் சட்டம் நிறைவேற்றப்பட்டபோது - அந்தக் காலத்தின் விவாதங்களை நான் படித்துள்ளேன் - டாக்டர் கௌர் ஓர் இக்கட்டான நிலைக்குத் தள்ளப்பட்டதாகத் தோன்றுகிறது, அவர் சுதந்திரமாக இருந்திருந்தால் ஒருபோதும் ஏற்றுக்கொண்டிருக்காத ஒரு நிலைமையை அவர் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. சிறப்புத் திருமண (திருத்தச்) சட்டத்தின்படி இந்த நிலைமை மிகவும் விநோதமாக இருக்கிறது. ஒரு நபர் தனது மதத்திற்கு வெளியில் திருமணம் செய்து கொள்ள விரும்பினால், அதாவது ஓர் இந்து, இந்து அல்லாதவரைத் திருமணம் செய்துகொள்ள விரும்பினால், அப்பொழுது இந்தத்திருத்தச் சட்டத்தின் கீழ், "அவர்களுடைய முந்திய உரிமைகள் சாதி தகுதியின்மைகள் அகற்றல் சட்டத்தில் வகை செய்யப்பட்டுள்ள அளவிற்கு - பாதிக்கப்படுவதில்லை." ஆனால், இவ்வாறு இருந்தபோதிலும் அவர்கள் திருமணம் செய்து கொண்டு

விட்டால் என்ன ஏற்படுகிறது? இதனால் அவர்கள் அனுபவிக்கும் தகுதியின்மையை கௌரின் இந்து சட்டத்திலிருந்து நான் விவரிக்கிறேன்: ''சாதி தகுதியின்மைகள் அகற்றல் சட்டத்தில் வகை செய்துள்ள அளவிற்கு அவர்களது முந்திய உரிமைகள் பாதிக்கப் படாமல் உள்ளன. அவர்கள் இனி ஒருபோதும் தத்து எடுத்துக் கொள்ளும் உரிமையைப் பெற்றிருக்கவில்லை. அவ்வாறு திருமணம் செய்துகொள்ளும் நபர் ஒரு தத்து எடுத்துக்கொள்ளப்பட்ட மகனாக இருந்தால், அவரைத் தத்து எடுத்துக் கொண்ட தந்தை, அவர் விரும்பினால் மற்றொருவரை தத்து எடுத்துக்கொள்ளலாம்.'' இவ்வாறு திருமணம் செய்துகொள்ள விரும்பும் அப்பாவி மனிதர் தத்து எடுத்துக் கொள்ளப்பட்ட புதல்வர் என்ற வகையில் தனது உரிமைகளை இழக்கிறார், அவருடைய தகப்பனார் வேறொரு நபரை தத்து எடுத்துக் கொள்வதற்குத் தகுதி உடையவராகிறார். அந்த நிலைமையில் ''அத்தகைய திருமணம் கூட்டுக் குடும்பத்தை பிரிக்கும் விளைவைத் தோற்றுவிக்கிறது.'' இது மற்றொரு மிகப் பெரிய தகுதியின்மையாகும். ஒரு நபர் இந்து அல்லாதவரை மணக்க விரும்பினால், கூட்டுக் குடும்பம் சம்பந்தப்பட்ட மட்டிலும் அவர் இந்து அல்லாதவராக மாற வேண்டும். அந்த நிலையில், ''அவர்களின் சொத்துக்கும்'', அவர்களது குழந்தையின் சொத்துக்குமான வாரிசு இந்திய வாரிசுரிமை சட்டத்தினால் முறைப்படுத்தப்படுகிறது.'' இந்தத் தகுதியின்மைகளை நாம் ஏன் அனுபவிக்க வேண்டும் என்பதற்கு எவ்விதக் காரணமும் இல்லையெனப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஓர் இந்து அல்லாதவரை மணக்க விரும்பும் ஒரு நபர் இவற்றால் ஏன் பாதிக்கப்பட வேண்டும்? இது, அந்த நபர் மேன்மையானதாகக் கருதும் எல்லாச் சட்டங்களையும், முந்திய தலைமுறைகளிலிருந்து அவர் பிதுரார்ஜிதமாகப் பெற்றவற்றையெல்லாம் கைவிட வேண்டும் (விட்டொழிக்க வேண்டும்) என்பதையே காட்டுகிறது. இது ஒரு தவறான விதி. இது மோசடிக்கும் வேறு பல தீமைகளுக்கும் இட்டுச் செல்கிறது. பழைய நிலைமையிலிருந்து தற்போதைய நிலைமை ஓரளவு மேம்பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை. ஆரிய திருமணச் செல்லுபடிச் சட்டம் வருவதற்கு முன்னால் திருமணம் செய்துகொண்ட ஆரிய சமாஜவாதிகள், பல ஆண்டுகள் கணவன், மனைவி என்று தங்களை அறிவித்துக் கொள்ளாமலேயே இருந்துள்ள எத்தனை எத்தனையோ உதாரணங்கள் எனக்குத் தெரியும். அவ்வாறு அறிவித்துக்கொள்வதற்கு அவர்கள் பயந்தனர். அவ்வாறு செய்தால் அவர்களின் குழந்தைகளின் கதி என்னாவது? தற்பொழுது இந்துச் சட்டத்தொகுப்பு மசோதா உருப்பெறும் நிலையிலிருக்கிறது, எனவே இந்தக் கட்டத்தில் இந்தத் திருத்தத்திற்கு அவசியம்

என்ன? இந்த அம்சத்தை விளக்குவதற்கு என்னை அனுமதிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

முதலாவதாக, பணிவன்புடன் நான் தெரிவித்துக் கொள்வது, இந்துச் சட்டத் தொகுப்பு மசோதா எப்போது நிறைவேற்றப்படும் என்று எனக்குத் தெரியாது. இந்த அமர்விலோ, அடுத்த அமர்விலோ, அல்லது வேறு எந்த அமர்விலோ அது நிறைவேற்றப்படுமா என்பது ஐயத்திற்குரியதாகும். இது நமக்குத் தெரியாது. இரண்டாவதாக, இந்த மசோதா ஏற்றுக்கொள்ளப்பட்டால், அதில் கொடுக்கப்பட்டுள்ள இந்து சட்டத்தின் சில விதிகளுக்கு அது பாதை செப்பனிட்டுத்தரும், அந்த சட்டத்தை நிறைவேற்றுவதற்கும் அது உதவும். இந்தச் சட்டம் இல்லாததின் விளைவாக, திருமணம் செய்து கொள்ளாமலிருக்கும் பலரின் நிலைமை என்னாவது? அல்லது, ஒரு நபர் இறந்தால், சொத்துக்கான அவரது உரிமைகள் பாதிக்கப்படாதா? அதே சமயத் தில் இந்த மசோதா, சட்டமாக்கப்படுவதற்கு அனுமதிக்கப்படா விட்டால், இந்தச் சட்டத்தின் ஆளுகைக்குள் வரக்கூடிய பல வழக்குகள் தற்போது நடைமுறையிலுள்ள சட்டத்தின் ஆளுகையின் கீழ் வரும்; இதனால் மக்கள் பாதிக்கப்படுவார்கள்; நாடு முழுமை யுமே பாதிப்புக்குள்ளாகும், நாட்டை ஒற்றுமைப்படுத்தி, அதை ஒன்றுபட்ட தன்மையுடையதாகச் செய்யும் நிலைமைகளை உருவாக்கு வதற்கு நம்மால் முடியாமற் போகும்.

இது துண்டுதுக்காணியான சட்டத்திற்கு உதாரணம் என்று கூறப்படலாம். இத்தகைய துண்டு துக்காணியாக செய்யப்பட்ட சட்டங்களின் பல உதாரணங்களை நாம் அனைவரும் அறிவோம். 1946ல், சாதிகளின் உப-பிரிவுகளுக்கு இடையிலான திருமணங்களைச் செல்லத்தக்கதாக்குவது சம்பந்தமான சட்டத்தை நிறைவேற்றியதை நாம் அறிவோம். பின்னர் பம்பாயில், இருதார திருமணத்தைத் தடை செய்யும் சட்டத்தை நிறைவேற்றினோம்; வேறு பல சட்டங்களும் நிறைவேற்றப்பட்டன. இந்த மசோதாவுக்கு எதிராக வேறு எந்த ஆட்சேபங்கள் எழுப்பப்படக்கூடும் என்பதை நான் அறியேன். இது ஒரு மிகவும் சிறிய மசோதா, இது ஒரே ஒரு ஷரத்தை உடைய மசோதா வாகும். முந்திய திருமணங்கள் எல்லாம் செல்லத்தக்கவை எனக் கருதப்படும் என்றும், எதிர்காலத்திலும் அத்தகைய திருமணங்கள் செல்லுபடியாகும் என்றும் மட்டுமே அது கூறுகிறது. அது வேறு எதையும் செய்ய முற்படவில்லை. உண்மையில் இது சட்டமாக்கப் பட வேண்டும் என்ற ஒரு நேரடியான பிரேரணையுடன் இந்த அவை முன்வருவதற்கு நான் துணிச்சல் கொள்ளவில்லை. ஏனெனில், இந்த

மசோதாக்கள் எல்லாம் பொறுக்குக் குழுவுக்கு போகவேண்டும் என்று இந்த அவையில் ஒரு மரபு இருப்பதை நான் அறிவேன்.

இந்த அமர்வில், இந்த மசோதாவை சட்டமாக்க வேண்டும் என்று ஆவலுடன் இருக்கிறேன். ஏனெனில் அப்பொழுதுதான் பொது மக்களைப் பொறுத்தமட்டிலும் நாம் காரியமாற்ற உறுதி கொண்டு இருக்கிறோம் என்பதிலும், ஒரு வர்க்க பேதமற்ற சமுதாயத்தை உருவாக்க நாம் விரும்புகிறோம் என்பதிலும் மக்களுக்கு நம்பிக்கை ஏற்படும். நான் சொல்லும் கருத்தைப் பலர் விரும்ப மாட்டார்கள் என்பதை நான் அறிவேன். பத்திரிகைகளில் இத்தகையக் கருத்தைத் தெரிவித்ததற்காக நான் கடிந்து கொள்ளப்பட்டேன். அதே கருத்தைத் தான் இன்று இந்த அவையில் தெரிவித்தேன். ஆனால் இந்த மிக முக்கியமான விஷயத்தில் நாம் யாருக்கும் பயப்பட வேண்டிய தில்லை. நமக்கு வர்க்கபேதமற்ற சமுதாயம் தேவை என்று மகாத்மா காந்தி கூறியுள்ளார். ஒரு வர்க்க பேதமற்ற சமுதாயத்தை அடை வதற்கு இதுதான் சரியான வழியாகும். இது போன்ற ஒரு நட வடிக்கையை நாம் மேற்கொண்டால் சமூக உரிமைகள், பொருளாதார உரிமைகள், மற்றும் அரசியல் உரிமைகள் கண்ணோட்டத்தில் பரஸ்பரம் மாறுபட்டுள்ள மக்களிடையிலான எல்லா வேறுபாடு களும் மறைந்து விடும். வர்க்கங்களற்ற ஒரே சமுதாயம் அப்பொழுது நிலவும். இந்த அமர்விலேயே, இன்று பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்பிய பின்னர் இந்த மசோதாவை தயவு செய்து நிறைவேற்றும்படி இந்த அவையை வேண்டிக்கொள்கிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** கீழ்வரும் பிரேரணை முன்மொழியப் படுகிறது:

> ''இந்துக்கள், சீக்கியர்கள், ஜைனர்கள் இடையிலும், மற்றும் அவர்களின் வெவ்வேறு சாதிகள், உப-சாதிகளிடையிலும் நடைபெறும் திருமணங்களை செல்லத்தக்கதாக்கும் இந்த மசோதா கீழ்வரும் உறுப்பினர்களைக் கொண்ட ஒரு பொறுக்குக் குழவின் பரிசீலனைக்கு விடப்படுகிறது. அதன் உறுப்பினர்கள் வருமாறு: கியானி குருமுக் சிங் முஸாபிர், சர்தார் ஹுக்கம் சிங், திரு. எம். அனந்த சயனம் அய்யங்கார், திரு. தேசபந்து குப்தா, திருமதி ஜி. துர்க்காபாய், திருமதி ரேணுகா ரே, திரு. ராம்நாத் கோயங்கா, டாக்டர் பக்ஷி தேக் சந்த், லாலா அசிந்த்ராம், ரணவீர் சிங், திரு. மகாவீர் தியாகி, மற்றும் இதை முன்மொழிபவர். குழுவின் கூட்டத்திற்கு அவசியமான கோரம் ஐந்து உறுப்பினர்கள்.''

அவைக்கு அறிக்கை சமர்ப்பிக்கப்படுவதற்கு ஒரு தேதி நிர்ண யிப்பது வழக்கமான நடைமுறையாகும். எந்தத் தேதியில் அறிக்கை சமர்ப்பிப்பது என்பதற்கு ஆலோசனை வழங்க வேண்டும்.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா :** இந்த மாத இறுதியில், பிப்ரவரி 28 என்று கூறலாம்.

**திரு. துணை சபாநாயகர் :** 1949 பிப்ரவரி 28ம் தேதியன்று அறிக்கை சமர்ப்பிக்கப்பட வேண்டுமென்று ஆலோசனை வழங்கு கிறோம்.

**திரு. கே. அனுமந்தையா** (மைசூர் சமஸ்தானம்): ஐயா, இந்த மசோதாவை மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா, இந்த மசோதாவுக்கு ஆதரவாக மிகவும் நல்ல காரணங்களை முன்வைத்தார். இதற்கு கூடுதலாக வேறு எதுவும் கூறத் தேவையில்லை. 1947 ஆகஸ்டுக்கு முன்னர், 'சுதந்திரம்' என்ற ஒரே ஒரு குறிக்கோள் நமக்கு முன்னே இருந்தது 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற கோஷத்தை மகாத்மா காந்தி நமக்கு அளித்தார். விடுதலை அடைந்ததற்குப் பின்னர், 'நாட்டை ஒன்று படுத்துக' என்ற கோஷத்தை சர்தார் படேல் நமக்கு அளித்தார். அவர் அதை அரசியல் அரங்கில் செயல்படுத்தி வருகிறார். அது இந்த நாடு பெருமைப்படக்கூடிய மிகப் பெரிய சாதனையாகும் (குறுக்கீடு). சமூக அரங்கிலும் நாமும் அதைச் செய்ய வேண்டும் என்று மிகவும் பணிவன்புடனும் மனப்பூர்வமாகவும் கேட்டுக்கொள்கிறேன். 'சீர்குலைவுப் போக்குகள்' இந்தியாவுக்குப் பெரும் அபாயமாகும்: இவை வகுப்புவாதப் போக்குகள் என்றும் அழைக்கப்படுகின்றன. இன்றுள்ள திருமணமுறையானது இதற்குக் கோட்டையாக அமைந் துள்ளது. தற்போதுள்ள பல்வேறு வேறுபாடுகளை இது அப்படியே கட்டிக்காத்து, நிரந்தரமாக்குகிறது. இந்த மசோதா, மிகவும் எளிய முறையில் வருகின்ற காலத்தில் இந்த வேறுபாடுகளை அகற்றுவதற் கும், இந்து சமுதாயத்தை ஒற்றுமைப்படுத்துவதற்கும் ஒரு துவக்க மாக அமைந்துள்ளது. நான் மனதார இந்த மசோதாவை வரவேற் கிறேன். அதே பொழுதில் பொறுக்குக் குழுவில் இன்னொரு உறுப் பினரை சேர்த்துக் கொள்ளலாமென்றும், அதற்குத் திருமதி அன்னீ மாஸ்கரனே எம்.ஏ.,பி.எல்லின் பெயரைப் பரிசீலிக்கலாமென்றும் இந்த மசோதாவை முன்மொழிபவரிடம் தெரிவித்துக் கொள்கிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** அந்தப் பெயரைச் சேர்த்துக் கொள்வதில் எனக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை.

**திரு. கே.எம். முன்ஷி** (பம்பாய் : பொது) : இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன். என்னுடைய மதிப்புக்குரிய நண்பர், பண்டிட்

தாகூர்தாஸ் பர்கவா இந்த மசோதாவை ஒரு சிறிய மசோதா என்று கூறினார். அவர் கூறுவதினின்றும் நான் வேறுபடுகிறேன். இது ஒரு மிகப்பெரிய, இன்னும் சொல்லப்போனால் மிகவும் முக்கியத் துவம் வாய்ந்த மசோதா ஆகும். இது இப்பொழுது அல்ல, நாற்ப தாண்டுகளுக்கு முன்பே நிறைவேற்றப்பட்டிருக்கவேண்டும். இந்தப் பிரச்சினை முதலில் நீதிமன்றங்களின் முன் எழுப்பப்பட்டபோது, நீதிமன்றங்கள் வெவ்வேறு மாநிலங்களில், வெவ்வேறு சாதிகளைச் சேர்ந்த இந்துக்களிடையிலான திருமணங்கள் ஏதாவதொரு காரணத் திற்காக செல்லத்தக்கவை அல்ல என்று அறிவித்தன. ஆனால் அந்த நாட்களில் அரசு அதிகாரிகள், இந்து சமுதாயம் இயக்காற்றல் மிக்க தாக இருப்பதற்கு அனுமதிக்கத் தயாராக இல்லை. பழைய மரபு களையே நீடித்து நிலைத்திருக்கச் செய்ய அவர்கள் விரும்பினர். அந்த மரபுகள் (வழக்கங்கள்) 700 அல்லது 800 ஆண்டுகளுக்கு முன்னால் தயாரிக்கப்பட்ட பாடப்புத்தகங்களில் பொதிந்திருந்தவையாகும். ஐயா, எனக்கு ஒரு வழக்கு நினைவுக்கு வருகிறது. சுமார் 40 ஆண்டு களுக்கு முன்னால் என்று நினைக்கிறேன். பல ஆண்டுகளுக்கு முன்னால் இறந்துபோன கணவனின் மனைவி (விதவை)யின் திருமணம் செல்லுபடியாகுமா என்ற பிரச்சினை பம்பாய் உயர்நீதி மன்றத்தில் எழுப்பப்பட்டது. அப்பொழுது, அந்தப் பெண்ணுக்கு பேரப்பிள்ளைகளும் இருக்கும் நிலையில், அது செல்லத்தக்கதே என்று நிலைநாட்டுவதற்கு நான் நான்காண்டுகள் முயன்றேன். ஆனால் கணவனைக் காட்டிலும் மனைவி உயர் சாதியைச் சேர்ந்த வராதலால், அந்தத் திருமணம் செல்லத்தக்கதல்ல என்று உயர்நீதி மன்றம் தீர்ப்புக் கூறியது. மற்றொரு முக்கியமான வழக்கையும் நான் நடத்தினேன். அதில் உயர் சாதியைச் சேர்ந்த ஓர் இந்துவிற்கும் கீழ்ச் சாதியைச் சேர்ந்த மனைவிக்குமிடையிலான திருமணம் செல்லாது என்று கூறப்பட்டது. சர் லல்லுபாய் ஷா என்ற நீதிபதி பரந்த மனப்பான்மை உடையவர்தான். அந்த வழக்கில் ஒருவேளை எனக்கு வெற்றிகூடக் கிடைத்திருக்கும். ஆயினும் இந்து மேல் சாதியைச் சேர்ந்த கணவனுக்கும் இந்து கீழ்ச்சாதியைச் சேர்ந்த மனைவிக்கும் இடையிலான திருமணம் செல்லத்தக்கதாக சில மாகாணங்களில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. இவற்றை **அம்தோமா** திருமணங்கள் என்று நாங்கள் அழைக்கிறோம். இந்துக்களுக்கும் ஜைனர்களுக்கும் இடையிலும் கூட இப்பிரச்சினை நாட்டின் சில மாகாணங்களில் ஏற்பட்டுள்ளது. இந்துக்களும் ஜைனர்களும் தாராளமாகத் திருமணம் செய்து கொள்கின்றனர். ஆனால் வழக்கறிஞர்கள் முன்னே எப்போதும் இப்பிரச்சினை - ஓர் இந்துவுக்கும் ஒரு ஜைனருக்கும் இடையிலான திருமணம் செல்லுபடியாகுமா என்பது விவாதத்திலிருந்து வந்துள்ளது.

இந்த விதி உயிரோடுள்ள தரப்புகளுக்கிடையிலான திருமணங்களுக்கு மட்டும் பொருந்தும் என்று கருதுவதற்கு இடமளிக்கக் கூடும். கடந்த காலத்தில் நடைபெற்றுள்ள இந்த மாதிரியான திருமணங்களும் இதில் வாரிசுரிமைப் பிரச்சினையும் எழும் நிலைமையில் - இனிமேலும் செல்லுபடியாகும் என்று கருதப்பட வேண்டும் என்பது தெட்டத் தெளிவாக்கப்பட வேண்டும் என்று நினைக்கிறேன். பொறுக்குக் குழுவில் இது சம்பந்தமாக முறையான திருத்தம் செய்யப்படும் என்று நிச்சயமாக நம்புகிறேன். எனவே, ஐயா, நான் இந்தப் பிரேரணையை மனமார ஆதரிக்கிறேன்.

**திரு. தேசபந்து குப்தா** (டில்லி): அவையின் முன்னுள்ள பிரேரணையை நான் ஆதரிக்கிறேன். என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. முன்ஷி சுட்டிக்காட்டியது போன்று, இது மெய்யாகவே மிகவும் முக்கியமான மசோதா என்று நானும் உணருகிறேன். பல ஆண்டுகளாக, இந்து ஒருமைப்பாட்டுக்கு இடையூறாகவும் நமது தேசிய ஒருமைப்பாட்டுக்கு எதிராகவும் இருந்த ஒரு விஷயம், இந்து சமூகம் பல சாதிகளாகப் பிரிந்திருந்த விஷயம்தான். இந்த செயற்கையான தடை மதில்களைத் தகர்ப்பதற்கு முயலும் இதுபோன்ற ஒரு மசோதாவை மேற்கொண்டு எவ்விதத் தாமதமும் இன்றி நிறைவேற்ற வேண்டிய தருணம் வந்துவிட்டது என்று கருதுகிறேன். சிவில் திருமணங்களில் நம்பிக்கை இல்லாத என்னுடைய சில நெருக்கமான நண்பர்கள்கூட சிவில் திருமணங்களைக் கடைப்பிடித்த உதாரணங்களை நானறிவேன். ஏனெனில் அவர்கள், வேறு சாதியைச் சேர்ந்த மணமகளைத் தேர்ந்தெடுத்ததே இதற்குக் காரணம். ஆரியசமாஜம், 'குணா, கர்மா' என்ற அடிப்படையிலான சாதி அமைப்பில் எப்போதும் நம்பிக்கை கொண்டிருந்தார்கள் என்பதை ஐயா, நீங்கள் அறிவீர்கள். ஆரிய சமாஜத்தின் நிறுவனர், தொடக்கம் முதலாகவே அந்த சமய மரபைப் போதித்து வந்தபோதிலும், பிறப்பின் போது எந்த சாதியும் கிடையாது என்று அவர்கள் வாதிட்டு வந்தனர். இதர மக்கள் இன்று அனுபவித்து வரும் அதே ஆற்றல் குறைவை ஆரிய சமாஜவாதிகளும் அனுபவிக்க வேண்டியிருந்தது.

பல ஆண்டுப் போராட்டத்திற்குப் பின்னர், ஆரிய திருமணச் செல்லுபடிச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. ஆனால், ஆரிய சமாஜவாதிகள் மட்டுமன்றி இந்துக்களிடையிலான பொதுஜன அபிப்பிராயமும் போதியளவு முன்னேற்றமடைந்திருப்பதை நான் காண்கிறேன். இப்பொழுது பல இந்துக்கள் சாதி அமைப்பினால், பிறப்பை

இந்த விதி உயிரோடுள்ள தரப்புகளுக்கிடையிலான திருமணங்களுக்கு மட்டும் பொருந்தும் என்று கருதுவதற்கு இடமளிக்கக் கூடும். கடந்த காலத்தில் நடைபெற்றுள்ள இந்த மாதிரியான திருமணங்களும் இதில் வாரிசுரிமைப் பிரச்சினையும் எழும் நிலைமையில் - இனிமேலும் செல்லுபடியாகும் என்று கருதப்பட வேண்டும் என்பது தெட்டத் தெளிவாக்கப்பட வேண்டும் என்று நினைக்கிறேன். பொறுக்குக் குழுவில் இது சம்பந்தமாக முறையான திருத்தம் செய்யப்படும் என்று நிச்சயமாக நம்புகிறேன். எனவே, ஐயா, நான் இந்தப் பிரேரணையை மனமார ஆதரிக்கிறேன்.

**திரு. தேசபந்து குப்தா (டில்லி):** அவையின் முன்னுள்ள பிரேரணையை நான் ஆதரிக்கிறேன். என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. முன்ஷி சுட்டிக்காட்டியது போன்று, இது மெய்யாகவே மிகவும் முக்கியமான மசோதா என்று நானும் உணருகிறேன். பல ஆண்டுகளாக, இந்து ஒருமைப்பாட்டுக்கு இடையூறாகவும் நமது தேசிய ஒருமைப்பாட்டுக்கு எதிராகவும் இருந்த ஒரு விஷயம், இந்து சமூகம் பல சாதிகளாகப் பிரிந்திருந்த விஷயம்தான். இந்த செயற்கையான தடை மதில்களைத் தகர்ப்பதற்கு முயலும் இதுபோன்ற ஒரு மசோதாவை மேற்கொண்டு எவ்விதத் தாமதமும் இன்றி நிறைவேற்ற வேண்டிய தருணம் வந்துவிட்டது என்று கருதுகிறேன். சிவில் திருமணங்களில் நம்பிக்கை இல்லாத என்னுடைய சில நெருக்கமான நண்பர்கள்கூட சிவில் திருமணங்களைக் கடைப்பிடித்த உதாரணங்களை நானறிவேன். ஏனெனில் அவர்கள், வேறு சாதியைச் சேர்ந்த மணமகளைத் தேர்ந்தெடுத்ததே இதற்குக் காரணம். ஆரியசமாஜம், 'குணா, கர்மா' என்ற அடிப்படையிலான சாதி அமைப்பில் எப்போதும் நம்பிக்கை கொண்டிருந்தார்கள் என்பதை ஐயா, நீங்கள் அறிவீர்கள். ஆரிய சமாஜத்தின் நிறுவனர், தொடக்கம் முதலாகவே அந்த சமய மரபைப் போதித்து வந்தபோதிலும், பிறப்பின் போது எந்த சாதியும் கிடையாது என்று அவர்கள் வாதிட்டு வந்தனர். இதர மக்கள் இன்று அனுபவித்து வரும் அதே ஆற்றல் குறைவை ஆரிய சமாஜவாதிகளும் அனுபவிக்க வேண்டியிருந்தது.

பல ஆண்டுப் போராட்டத்திற்குப் பின்னர், ஆரிய திருமணச் செல்லுபடிச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. ஆனால், ஆரிய சமாஜவாதிகள் மட்டுமன்றி இந்துக்களிடையிலான பொதுஜன அபிப்பிராயமும் போதியளவு முன்னேற்றமடைந்திருப்பதை நான் காண்கிறேன். இப்பொழுது பல இந்துக்கள் சாதி அமைப்பினால், பிறப்பை

அடிப்படையாகக் கொண்ட செயற்கையான தடை மதில்கள் எழுப்பப் பட்டுள்ளதை அங்கீகரிப்பதில்லை. எனவே, அவர்கள் ஆரிய சமாஜ திருமணச் செல்லுபடிச் சட்டத்தையோ அல்லது சிவில் திருமண சட்டத்தையோ கடைப்பிடிக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்காளாவ தற்கு எந்தக் காரணமும் கிடையாது. இன்று, பொதுஜன அபிப்பிராயம் முன்னேற்றமடைந்துள்ள நிலையில், இந்துக்களின் ஒருமைப்பாட் டுக்குக் குறுக்கேயும், ஒரு தேசிய உணர்வை ஏற்படுத்துவதற்குக் குறுக்கேயும் இருந்து வந்த சாதித்தடை மதில்கள் அகன்றுள்ள நிலை யில், இது போன்ற ஒரு மசோதா நிறைவேற்றப்படுவதில் தாமதம் கூடாது என்று கருதுகிறேன்.

ஆனால், இந்து சட்டம் வரப்போகிறது, எனவே எந்தத் தனித் தனியான சட்டமும் வேண்டியதில்லை என்று கூறுவதில் ஓரளவு நியாயம் இருக்கத்தான் செய்கிறது. ஆயினும், என்னுடைய பல நண்பர்களைப் போன்றே நானும், இந்து சட்டத்தில் அடங்கியுள்ள சீர்திருத்தக் கருத்துக்களை எவ்வகையிலும் எதிர்க்காத இத்தகைய ஒரு மசோதா தாமதப்படக்கூடாது என்று நானும் நம்புகிறேன். இந்த அமர்விலேயே இந்து சட்டத் தொகுப்பு மசோதா நிறைவேற்றப் பட்டுவிட வேண்டுமென்று என்னுடைய நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் விரும்பினாலும் எங்களில் பலர் அந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அதற்குக் காலம் பிடிக்கும். பார்க்கப் போனால் இது மிகவும் முக்கியமான ஒரு மசோதா, அதில் சர்ச்சைக் குரிய பல ஷரத்துகள் இருக்கின்றன. எனவே, தற்போதைய மசோதாவை நாம் வரவேற்க வேண்டும், இது நிறைவேற்றப் படுவதில் தாமதம் கூடாது என்று நான் வலியுறுத்துகிறேன்.

என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா பிரேரணைசெய்துள்ள மசோதாவை நான் முழுமனதாக ஆதரிக்கிறேன், டாக்டர் அம்பேத்கரும் இதை ஏற்றுக்கொள்வார் என்றும், இந்து சமுதாயத்திற்கு மகத்தான முக்கியத்துவமுடைய இந்தச் சிறிய மசோதாவை, இந்த அமர்விலேயே சபை நிறை வேற்றும் என்றும் நம்புகிறேன்.

**டாக்டர் பக்ஷி தேக்சந்த்** (கிழக்கு பஞ்சாப் : பொது) : இந்த மசோதாவை பொறுக்குக் குழுவின் ஆய்வுக்கு விடவேண்டுமென்ற பண்டிட் தாகூர்தாஸ் பர்கவாவின் பிரேரணையை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன். இந்த மசோதாவுக்கு இதுவரையிலும் இந்த சபையின் பல்வேறு தரப்புகளிலிருந்து ஆதரவு கிடைத்துள்ளது,

இதற்கு எதிராக யாரும் ஆட்சேபனைக் குரல் எழுப்பமாட்டார்கள் என்று நம்புகிறேன்.

இந்த மசோதா புதியது ஒன்றுமில்லை என்றும் கூறுவேன். காலஞ்சென்ற திரு. வித்தல்பாய் படேலால் பழைய சாம்ராஜ்ய லெஜிஸ்லேடிவ் கவுன்சிலில் (அப்பொழுது அது இவ்வாறுதான் அழைக்கப்பட்டது) 1919-ல் ஏறத்தாழ இது போன்ற ஒரு மசோதா பிரேரணை செய்யப்பட்டது. அந்த மசோதா கருத்துக் கணிப்புக்காக சுற்றுக்கு விடப்பட்டது. வெவ்வேறு கருத்துக்கள் வெளிப்படுத்தப் பட்டன என்பது மெய்யே. வைதீக சார்புடையவர்கள் எதிர்த்தார் கள்; அதிகாரிகள் எதிர்த்தார்கள்; ஆனால் ஏராளமான நபர்களும் சங்கங்களும் அதை ஆதரித்தனர். ஆனால் மசோதா கவுன்சிலின் முன்னால் பரிசீலனைக்கு வருவதற்கு முன்பே, மாண்டேகு - செம்ஸ் போர்ட் சீர்திருத்தங்கள் அமலாகத் தொடங்கின. கவுன்சில் கலைக்கப் பட்டது, மசோதா காலாவதியாகி விட்டது. அதற்கு பின்னர் 1923-ல் டாக்டர் கவுர், 1872-ம் வருடத்திய பழைய மசோதாவைத் திருத்தம் செய்வதற்கு முயன்றார்; ஆனால் அப்பொழுதும்கூட அதற்கு எதிர்ப்பு இருந்தது, பல விவரங்களில் அந்த மசோதா திருத்தப்பட வேண்டிய தாயிற்று. சிவில் திருமண முறையில்தான் இந்துக்களின் வெவ்வேறு சாதிகளையோ அல்லது உப-சாதிகளைச் சேர்ந்தவர்களோ திருமணம் செய்துகொள்ள முடியும். சமயச் சடங்கு சார்ந்த திருமணங்கள் அனுமதிக்கப்படவில்லை. இந்து சட்டத்தின் கீழ் சமயச் சடங்கு சார்ந்த திருமணங்களைப் பொறுத்த மட்டிலும் வெவ்வேறு மாநிலங் களில் நிலைமை வெவ்வேறாக இருக்கிறது. சில மாகாணங்கள், ஏற்கனவே சுட்டிக்காட்டியது போன்று, **அனுலோமா** திருமணங்களை அனுமதிக்கின்றன; பிற மாகாணங்கள் இவற்றை அனுமதிப்ப தில்லை. பின்னால் கூறப்பட்ட மாகாணங்களில், சில **ஸ்மிருதி களில் அனுலோமா** திருமணங்கள் அனுமதிக்கப்பட்டபோதிலும், அவை காலாவதியாகிவிட்டன, தற்பொழுது அவை அங்கீகரிக்கப் படுவதில்லை என்று நீதிமன்றங்கள் தீர்ப்புக் கூறியுள்ளன. அனேக மாக எல்லா மாகாணங்களிலும் **பிரதிலோமா** திருமணங்கள் செல்லத் தக்கவையல்ல என்று தீர்ப்பு கூறப்பட்டுள்ளது. பஞ்சாபிலும் வேறு சில மாகாணங்களிலும் - வழக்க மரபுதான் முடிவு செய்வதற்கு விதியாக உள்ள இந்த மாகாணங்களில் - சில சாதிகளுக்கு இடையிலான திருமணங்கள் அனுமதிக்கப்படுகின்றன; ஆனால் வேறு சில சாதி களுக்கு இடையில் அனுமதிக்கப்படுவதில்லை. ஒரு துணிச்சலான நடவடிக்கை மேற்கொள்ள வேண்டிய தருணம் இப்பொழுது வந்து விட்டது என்று நினைக்கிறேன். இந்த மசோதா சட்டப் புத்தகத்தில்

ஏறியாக வேண்டும். இப்பொழுது நம் முன் உள்ள இந்து சட்டத்தின்கீழ் இது சம்பந்தமான விதிகள் சேர்க்கப்பட்டுள்ளன என்பதில் ஐய மில்லைதான். ஆயினும் இந்து சட்டத் தொகுப்பு மசோதா, ஒரு சர்வாம்சமான ஆவணம், பல்வேறு விஷயங்கள் அதில் அடங்கி யுள்ளன. கூடுதல் விரிவான பகுதிகளை அது விளக்குகிறது. அத னுடைய சில பகுதிகளுக்குப் பெருமளவு எதிர்ப்பு இருக்கிறது. இந்த மசோதா நிறைவேறுவதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும், எந்த வடிவத்தில் அது நிறைவேற்றப்படும் அல்லது உண்மையில் அது நிறைவேற்றப்படுமா என்பதையெல்லாம் நாம் அறியோம். (**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** ''அது நிச்சயமாக நிறைவேற்றப்படும்.'') நிச்சயமாக அதற்குக் காலம் பிடிக்கும். எனவே, இந்த விஷயத்தைப் பொறுத்தமட்டிலும், இந்த எளிய மசோதாவை நிறைவேற்றுவதைத் தாமதப்படுத்துவதற்கு எவ்விதக் காரணமும் இருக்க முடியாது. பெரும்பாலானோர் இதை ஒத்துக்கொள்கின்றனர் என்று நினைக் கிறேன். எனவே இந்தப் பிரேரணையை ஆதரிக்கிறேன்.

**திரு. மகாவீர் தியாகி** (உ.பி.: பொது) : என்னுடைய மதிப்புக் குரிய நண்பர் திரு. முன்ஷி கூறியது போன்று இந்த மகத்தான சீர்திருத்த மசோதாவுக்கு என்னுடைய ஆதரவைப் பதிவு செய்யும் பெருமையை ஈட்டுவதற்கு நானும் விரும்புகிறேன்.

வகுப்புவாத வேறுபாடுகளின் விளைவாக இந்தியா நீண்ட காலமாக பாதிப்படைந்து வந்துள்ளது. திருமணங்கள் இதன் அடிநிலைக் காரணமாகவும், தேர்தல்கள் இதன் 'ஆதாயக் காரண மாகவும்' இருந்து வருகின்றன; ஏனெனில் பிரதானமாக, திருமணத் தின்போதுதான் ஒருவர் மற்றவரின் சாதியைப் பற்றி விசாரிக்கிறார். திருமணங்கள் நடைபெறுகின்ற ஒவ்வொரு சமயத்திலும் சாதிகள் பற்றி விசாரிக்கப்படுகின்றன. ஒரு நபரின் சாதி பற்றி விசாரிக்கப்படு கின்றன மற்றொரு சந்தர்ப்பம், ஒருவர் தேர்தலுக்கு நிற்கும்போது. இப்பொழுது நாம் கூட்டுத் தொகுதிகள் வைத்துக் கொள்வதென்று முடிவு செய்துள்ளதால், வகுப்புவாதத் தீமையின் அடிப்படைக் காரணத்தைப் பெருமளவுக்கு அகற்றிவிட்டோம். இவ்வாறு அரசியல் ரீதியில் நாம் சரியான பாதையில் சென்று கொண்டிருக்கிறோம். என்னுடைய நண்பர் திரு. ஹனுமந்தையா சற்றுமுன் கூறியது போன்று, நாட்டை அரசியல் ரீதியில் ஒன்றுபடுத்தியதற்கான பெருமை மாண்புமிகு சர்தார் பட்டேலைச் சாரும். அரசியல் ரீதியில் இவ்வாறு ஒன்றுபடுத்தியதன் பின்னர், நம்முடைய அடுத்த உடனடியான தேவை சமூக ஒற்றுமையை ஏற்படுத்துவதாகும். இந்த மசோதா அந்தத்

தேவையை நிறைவேற்றும். இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப் பட்ட பின்னர், திருமணங்கள் சுதந்திரமாக நடைபெறும் என்று நிச்சயமாக நம்புகிறோம். சுதந்திரமான திருமணங்களில் நான் நம்பிக்கை உடையவன். இப்பொழுது இந்தியா சுதந்திரமடைந்து விட்டதால், திருமணங்களும் சுதந்திரமாக நடைபெற வேண்டும், எத்தகைய தடைக்கட்டுப்பாடுகளும் இருக்கக்கூடாது. இந்த மசோதா நம்முடைய வாழ்க்கையில் மிகவும் கடைசிக் கட்டத்தில் வந்துள்ளது குறித்து நான் வருந்துகிறேன். ஆனால், இந்த மசோதாவை நமது வருங்கால சந்ததிகள் நடைமுறைப்படுத்துவதற்கு நாம் நிறைவேற்று வோமாக. இந்தச் சட்டத்தினால் வழங்கப்பட்டுள்ள சுதந்திரத்தை நாடு அனுபவிக்கும் என்று நம்புகிறேன். இந்தப் பிரேரணையை முழுமனதோடு ஆதரிக்கிறேன்.

**திரு. உபேந்திர நாத் பர்மன்** *(மே. வங்கம் : பொது) :* இந்த மசோதாவுக்கும் பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அதைவிட வேண்டுமென்ற பிரேரணைக்கும் நானும் என்னுடைய முழு மனதான ஆதரவைத் தெரிவிக்கிறேன். என்னுடைய மனதில் நான் ஒரு விஷயத்தைத் தெளிவாக நம்புகிறேன். நம்முடைய தேசிய உணர்வுக்குக் குறுக்கே நிற்கும் சூழ்நிலை சாதித்தடை மதிலாகும். இது நீடித்திருக்கும் வரையில் இந்து சமூகத்தின் பல்வேறு பிரிவுகளும் மற்றும் பிற முஸ்லீமல்லாத சமூகங்களும் ஒன்றாக ஐக்கியப்படவோ, தேசிய இனம் என்ற உணர்வை - அதனுடைய உண்மையான பொருளில் - மனதில் உள்வாங்கிக் கொள்ளவோ முடியாது. ஒருவர் தன்னுடைய மகனையோ அல்லது மகளையோ தனது அண்டை வீட்டாரின் மகளுக்கோ, மகனுக்கோ திருமணம் செய்து கொடுக்க முடியாது என்று ஒருவர் உணருகின்றவரையில், அவர்கள் ஒன்று (ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள்) என்ற உண்மையான உணர்வு வர முடியாது. இந்த மசோதாவை நிறைவேற்றுவதன் மூலம் அந்தத் தடை மதில் அகற்றப் படும் என்று நினைக்கிறேன். நெருக்கமான உறவு என்ற உணர்வுதான் தேசிய உணர்வின் மெய்யான அடிப்படையாகும். நான் இந்த மசோதாவை முழுமனத்துடன் ஆதரிக்கிறேன், சாத்தியமான அளவு விரைவில் இது சட்டமாக நிறைவேற்றப்படும் என்று நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** *(சட்ட அமைச்சர்) :* இந்த மசோதா சம்பந்தமாக எனக்கும், இதைப் பிரேரணை செய்த என்னுடைய மதிப்பிற்குரிய நண்பருக்கும் இடையில் எந்தக் கருத்து வேறுபாடும் இருக்க முடியாது. ஏனெனில், இது நான் பிரேரணை செய்யவிருக்கிற இந்து சட்டத் தொகுப்பு மசோதாவின் ஒரு பகுதியே

யாகும். இந்த மசோதாவிற்கு என்னுடைய ஒரே ஆட்சேபனை என்னவென்றால், இந்து சட்டம் தொகுத்து அளிக்கப்படவேண்டும் என்ற கோட்பாட்டை சட்டப்பேரவை ஒத்துக் கொண்டதற்குப் பின்னர், இந்த சட்டத்தைத் துண்டு துண்டாக நிறைவேற்றுவதற்கு இப்பொழுது முயல்வது தவறாகும். இந்த மசோதாவின் அடிப் படையான கோட்பாடுகளுக்கு, நான் ஏற்கனவே கூறியது போன்று, எனக்கு ஆட்சேபனையில்லை. உண்மையில் அதே கோட் பாடுகள் இந்து சட்டத்தொகுப்பு மசோதா ில் அடங்கியுள்ளன. எனவே, என்னுடைய மதிப்புக்குரிய நண்பருக்கு நான் கூறும் யோசனை என்னவெனில், அவர் ஒன்று, இந்த மசோதாவை வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டும், அல்லது, இதைப் பரிசீலனை செய்வதை ஒத்திப்போட வேண்டும். அதற்குள் இந்து சட்டத் தொகுப்பு மசோதாவின் நிலைமை என்னவாகும் என்பதைத் திட்ட வட்டமாக நாம் தெரிந்துகொள்ள முடியும்.

இந்து சட்டத் தொகுப்பு மசோதாவை நான் முன்மொழி கிறேன் என்ற காரணத்தினாலும் இந்த மசோதா குறித்து பொறுக்குக் குழு சமர்ப்பித்த அறிக்கை அவையின் பரிசீலனையில் இருப்பத னாலும், நான் மேற்கொண்டுள்ள கண்ணோட்டத்தைத் தவிற வேறு எந்த நிலையையும் நான் மேற்கொள்ள இயலாது என்று அஞ்சு கிறேன்.

**சி.எச். ரணவீரசிங்** எழுந்திருக்கிறார் -

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை : பொது) : அவர் பேசுவதற்கு எவ்வாறு அனுமதிக்கப்பட முடியும்? விவாதத்தை முடித்து வைக்கும் பிரேரணை ஏற்கெனவே முன்மொழியப்பட்டு விட்டது.

**துணை சபாநாயகர்** : டாக்டர் அம்பேத்கரைப் பேசுவதற்கு நான் அனுமதித்தேன். அதை முன்மொழிந்தவர் அவர் அல்ல. கேள்வி கேட்கப்படவில்லை.

**சி.எச். ரணவீரசிங்** (கிழக்கு பஞ்சாப் : பொது) : (இந்தி உரை யின் ஆங்கில மொழியாக்கம்). ஐயா, திரு. துணை சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நான் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஆதரிக் கிறேன். ஏனெனில், ஆரம்பத்திலிருந்தே இந்துக்களிடையில் இந்த

3

மசோதாவின் கோட்பாட்டில் எப்பொழுதும் நம்பிக்கைகொண்டிருந்த சமூகத்தைச் சேர்ந்தவன் நான். இந்துக்களிடையில் தனது சொந்த சமூகத்திற்கு வெளியில் உறவுகளை ஏற்படுத்திக் கொண்டிருந்த, மேலும் எவ்வித வேறுபாடுகளையும் கொண்டிராத ஒரு சமூகம் இருக்கிறதென்றால் அது ஜாட் சமூகம்தான். இது விஷயத்தில் கருத்து வேறுபாடும் சமூக ஒதுக்கலும் இருந்தன என்பது உண்மையே. ஆனால் அது மிகவும் அற்பமானதாக இருந்தது. இந்த மசோதா, நம்நாடு முழுவதிலும் பல நூற்றாண்டுகளாக நாம் நம்பிக்கை கொண்டிருந்த ஒரு கோட்பாட்டை நிலைநாட்டுவதற்குப் பெருமளவு உதவும் என்ற உண்மையே, இதற்கு ஆதரவு தெரிவப்பதற்கு எனக்கு மிகுந்த உத்வேகத்தை அளிக்கிறது.

இரண்டாவதாக, என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. தியாகி கூறியது போன்று, இந்த மசோதா, நம்முடைய அடிமைத் தனத்திற்குக் காரணமான நம்முடைய பரஸ்பர வேறுபாடுகளை அகற்றிவிடும். சிறிய சமஸ்தானங்களை ஒருங்கிணைத்ததன் வாயிலாக, நமது தலைவர் மாண்புமிகு சர்தார் வல்லபாய் படேல், நமது நாட்டை ஒன்றாக இணைத்துள்ளார். இந்தப் பிரச்சினை நன்கு தீர்க்கப் பட்டுள்ளது. இதேபோல் நம்முடைய சமூகப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண்பதற்கு இந்த மசோதா ஒரு நல்ல நடவடிக்கையாகும் என்று கருதுகிறேன்.

இந்து சட்டத் தொகுப்பு மசோதாவைப் பொறுத்த மட்டிலும், அது ஒரு பெரிய விஷயமாகும். நாடோ இந்த அவையோ இதை ஏற்றுக்கொள்ளுமா என்பது இன்னும் தெரியவில்லை. அதனுடைய சில ஷரத்துகள் சம்பந்தமாக, நமது தலைவர்கள் வேறுபட்ட சில கருத்துகளைத் தெரிவித்துள்ளனர். எனவே, இந்த மசோதா, இந்து சட்டத் தொகுப்பு மசோதாவின் ஒரு பாகமாக அமைந்துள்ளது என்ற காரணத்தினாலும், இந்துச் சட்டத் தொகுப்பு மசோதா நிறை வேற்றப்பட்டு விட்டால், இந்த மசோதா இயல்பாகவே அதில் இணைக்கப்பட்டுவிடும் என்பதனாலும் இதைத் தட்டிக் கழிப்பதோ அல்லது நிராகரிப்பதோ எவ்வளவு தூரம் சரியானது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அது நிறைவேற்றப் படாவிட்டால், குறைந்தபட்சம் இந்த மசோதாவாவது நிறைவேற்றப் படும் வாய்ப்புகள் உள்ளன.

இந்த வார்த்தைகளோடு, இதை நான் முழுமனதாக ஆதரிக் கிறேன்.

**திரு. கே.எம். முன்ஷி:** டாக்டர் அம்பேத்கர் கூறிய ஓர் அம்சத்தைப் பற்றி பதில் கூறுவதற்கு எனக்கு அனுமதி கிடைக்குமா?

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர்:** பண்டிட் பர்கவா அதைப் பற்றிப் பேச முடியும்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஐயா, இந்த அவையின் எல்லாப் பகுதியினரும் இந்த மசோதாவை ஆதரித்தது குறித்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இந்த மசோதாவுக்கு எதிராக எத்தகைய ஆட்சேபனை எழுப்ப முடியும் என்று என்னால் கற்பனை கூட செய்து பார்க்க முடியவில்லை. எல்லோரும் இதை விரும்புகிறார்கள் என்பதை அறிய மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஓர் ஆட்சேபனை எழுப்பப்பட்டுள்ளது. அதாவது இந்து சட்டத் தொகுப்பு மசோதா தயாராகிக்கொண்டிருப்பதால், இப்பொழுது இந்த மசோதாவை நாம் எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை என்பதாகும். இந்த மசோதாவின் கோட்பாடுகளும் இந்து சட்டத் தொகுப்பு மசோதாவுக்கு ஆதாரப் பொருளாக இருக்கும் கோட்பாடுகளும் ஒன்றுக்கொன்று முரணானதாக இருந்தால், நான் இந்த ஆட்சேபனையைப் புரிந்து கொள்ள முடியும். ஆனால் இந்து சட்டத் தொகுப்பு மசோதாவைப் போன்ற அதே அடிப்படையை இந்த மசோதாவும் கொண்டிருப்பதால், நாம் இதை முன்னதாகவே நிறைவேற்றினால், இது மெய்யாகவே இந்து சட்டத் தொகுப்பு மசோதாவை நிறைவேற்றுவதற்குப் பாதையை செப்பனிடும். இதை நிறைவேற்றுவது இந்து சட்டத் தொகுப்பு மசோதாவை நிறைவேற்றுவதை எவ்வாறு தடுக்கும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. உண்மையில் இது, அதை நிறைவேற்றுவதை துரிதப்படுத்தும். சர்வாம்ச இந்து சட்டத் தொகுப்பு மசோதாவைப் போன்ற ஒரு மசோதா தயாராகிக் கொண்டிருப்பதால், மற்றொரு மசோதா நிறைவேற்றப்பட முடியாது என்பதற்கு சட்டம் அல்லது விதி அல்லது மரபு எங்கே இருக்கிறது என்று கேட்கிறேன். அத்தகைய மரபு எதுவும் கிடையாது. மற்றொரு மசோதாவில் அடங்கியுள்ள அம்சங்களில் ஒன்று உள்ளடங்கியுள்ளதனால் இரண்டாவது மசோதா நிறைவேற்றப்படக் கூடாது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

இந்த மசோதா, 1919-ல் கொண்டுவரப்பட்ட ஒரு மசோதாவை ஆதார அடிப்படையாகக் கொண்டது என்று பக்ஷி தேக்சந்த் சுட்டிக்காட்டியுள்ளார். இந்த மசோதா நம்முடைய மதிப்புக்குரிய தலைவர் வி.ஜே. படேலின் பெயருடன் தொடர்புடையது. இப்பொழுது

காலப் பொருத்தத்தைக் கொண்டு பார்க்கும்போது, இந்து சட்டத் தொகுப்பு மசோதாவைப் பொறுத்தமட்டில், இந்த வகைப்பட்ட மசோதா மிகவும் முன்கூட்டியே கொண்டுவரப்பட்டிருந்திருக்க வேண்டும். இந்த வகைப்பட்ட விஷயத்தில் மரபுக் கூறுகள் - அவை செல்லத்தக்கவையாயிருந்தாலும் கூட - அவை குறுக்கே நிற்பதற்கு அனுமதிக்கப்படக்கூடாது. இந்த இந்து சட்டத் தொகுப்பு மசோதா நிறைவேற்றப்படாவிட்டால் ஆயிரக்கணக்கான ஆண்கள், பெண் களின் கதி என்னாவது? இந்த அமர்விலும் கூட இது ஷரத்துவாரி யாக விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படப்போவதில்லை என்று நினைக்கிறேன். இது செப்டம்பர் அல்லது அக்டோபர் மாதத்திற்கும் கூட நீண்டுபோகக் கூடும், இது சர்ச்சைக்குரிய ஒரு மசோதாவாக இருப்பதால் இந்த அமர்வில்கூட இது நிறைவேற்றப்படாமல் போகக்கூடும். இன்னும் ஓராண்டு கூட ஆகலாம்; அந்தநிலையில், இந்த மசோதாவின் ஷரத்துக்களுக்கு இணங்க திருமணம் செய்து கொள்ள விரும்பும் எத்தனை எத்தனையோ இளைஞர்கள், யுவதி களின் நிலைமை என்னவாகும்? அது போன்றே, ஒரு தேசத்தை உருவாக்குவதற்கும் வலுப்படுத்துவதற்கும் இசைவான நம்முடைய நடவடிக்கைகள் என்னாவது?

ஐயா, இது விளையாட்டான ஒரு விஷயமல்ல. நான் டாக்டர் அம்பேத்கருக்கு உதவவே விரும்புகிறேன். அவருடைய திருமணம் கூட இந்த மசோதாவினால் சட்டபூர்வமானதாக்கப்படும். இதுகுறித்து அவர் ஏன் நகைக்கவேண்டும்? இது அவருக்குப் பொருந்தக்கூடும் அல்லது பொருந்தாமல் போகக்கூடும்; இருந்தபோதிலும் தகுதி யின்மைகள் ஏதாவது இருந்தால் அவை அகற்றப்படும். நூற்றுக் கணக்கான நபர்கள் இந்த மசோதாவின் கீழ் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறார்கள் என்பதை நானறிவேன். இந்த விதியின் கீழ் திருமணம் செய்து கொள்வது தவறா? இந்த அமர்விலேயே இந்த மசோதா நிறைவேற்றப்படுவதற்கு எதிராக யார் எந்த இடையூறு செய்தாலும் அதை நான் வெறுக்கிறேன். இந்த மசோதா இந்த அமர்வில் நிறைவேற்றப்படாவிட்டால், நம்முடைய முயற்சிகள் அனைத்தும், காந்திஜியின் முயற்சிகளும் வீணாகப் போய்விடும். எனவே, என்னுடைய வேண்டுகோள் இதுதான்: டாக்டர் அம்பேத் கரை, அவருடைய ஆட்சேபனையைத் தயவுசெய்து கைவிடும்படி வினயபூர்வமாகக் கேட்டுக்கொள்கிறேன். சாத்தியமான அளவு விரைவில் இந்த மசோதா நிறைவேற்றப்படுவதற்கு ஒத்துக்கொள்ளு மாறு கேட்டுக்கொள்கிறேன்; ஏனெனில், இது, இந்து சட்டத் தொகுப்பின் இது சம்பந்தப்பட்ட பகுதி நிறைவேற்றப்படுவதற்கும் அவருக்கு உதவும்.

**திரு. கே. ஹனுமந்தையா :** நான் தெரிவித்த திருமதி அன்னி மாஸ்கரீனின் அவர்களின் பெயரை மதிப்புக்குரிய உறுப்பினர் ஏற்றுக்கொண்டாரா?

**திரு. துணை சபாநாயகர் :** ஆம், காத்திருக்கும் பட்டியலில் எத்தனை நபர்கள் காத்திருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ள மாண்புமிகு சட்ட அமைச்சர் விரும்புகிறார் என்று கருதுகிறேன்.

பிரச்சினை என்னவெனில்:

''இந்துக்கள், சீக்கியர்கள், ஜைனர்கள் மற்றும் அவர்களின் பல்வேறு சாதிகள், உப-சாதிகளைச் சேர்ந்தவர்களுக்கு இடையிலான திருமணங்களை செல்லத்தக்கவையாக்குவதற்கு வகை செய்யும் இந்த மசோதா ஒரு பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு விட வேண்டும். அக்குழுவில் கீழ்வருபவர்கள் உறுப்பினர்களாக இருப்பார்கள்: கியானி குர்முக் சிங் முஸாபிர், சர்தார் ஹுக்கம்சிங், திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார், திரு. தேசபந்து குப்தா, திருமதி ஜி. துர்க்காபாய், திருமதி ரேணுகா ரே, திரு. ராம்நாத் கோயங்கா, டாக்டர் பக்ஷிதேக் சந்த், லாலா அசிந்த்ராம், சிஎச். ரணவீர் சிங், திரு. மகாவீர் தியாகி, திருமதி அன்னி மாஸ்கரீன், மற்றும் இந்த மசோதாவைப் பிரேரணை செய்பவர். 1949 பிப்ரவரி 28-க்குள் இக்குழு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும். குழு கூட்டத்தின் கோரம் குறைந்த பட்சம் ஐந்து உறுப்பினர்கள்.''

இந்தப் பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

---

## *இந்து சட்டத் தொகுப்பு - தொடர்ச்சி

**திரு. சபாநாயகர் :** மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா :** எழுந்திருக்கிறார்.

**திரு. ஜஸ்பத்ராய் கபூர்** (உ.பி: பொது): திரு. சபாநாயகர் அவர்களே, ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புகிறேன். இது ஏற்றுக்கொள்ளப்பட்டால், முந்திய அமர்வில் என்னுடைய மதிப்புக் குரிய நண்பர் திரு. நசிருத்தீன் அகமது எழுப்பிய ஒழுங்குப் பிரச்சினை மீது மேற்கொண்டு எந்த விவாதத்தையும் தடை செய்துவிடும். எனவே, என்னுடைய ஒழுங்குப் பிரச்சினையை உங்களுடைய பரிசீலனைக்குச் சமர்ப்பிப்பதற்கு எனக்கு அனுமதி வழங்குமாறுக் கேட்டுக் கொள்கிறேன்.

---

* அ.நி. (சட்டப்பேரவை) டி. தொகுதி I, பாகம் II, 1949 பிப்ரவரி 17, பக்கம் 614-21. எண். 4400-16.

**திரு. சபாநாயகர்:** பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா ஏற்கனவே எழுந்து நின்று கொண்டிருப்பதால், அவர் கூறுவதை முதலில் நான் கேட்க வேண்டும் என்று நினைக்கிறேன். அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதை என்னால் ஊகிக்க முடியாது. எழுப்பப்பட்ட ஒழுங்குப் பிரச்சினை மீது என்னுடைய சொந்தக் கருத்து இருக் கிறது. ஆயினும் பண்டிட் தாகூர்தாஸ் சொல்ல விரும்புவதை நான் பரிசீலனை செய்கிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா** (கிழக்கு பஞ்சாப் : பொது) : ஐயா, கடந்த சந்தர்ப்பத்தில், மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர், பிரேரணை சமர்ப்பித்தபோது, திரு. நசிருத்தீன் அகமது பொறுக்குக் குழுவினால் பரிசீலனை செய்யப்பட்ட மசோதா, சபையினால் அதனுடைய பரிசீலனைக்கு விடப்பட்ட மசோதா அல்ல என்ற கூற்றின்மீது ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பினார். அந்த விஷயம் பரிசீலனை செய்யப்பட்டு வந்தபோது, அந்த ஒழுங்குப் பிரச்சினை ஏன் மிகுந்த ஆதாரமுள்ளது என்பதற்கான சில காரணங்களை உங்களுடைய பரிசீலனைக்கு சமர்ப்பித்தேன். நான் அதைச் செய்யும் போது நீங்கள் விவாதத்தைத் தடுத்து நிறுத்தி, விஷயத்தை முடிவுக் குக் கொண்டுவந்தீர்கள். இது 1948, ஆகஸ்டு 31ம் தேதிய, சபை நடவடிக்கைக் குறிப்பின் 778-வது பக்கத்தில் வெளியாகியிருக் கிறது. ஐயா, அந்த சமயத்தில் உங்களுடைய எண்ண ஓட்டம் பற்றி நீங்கள் தெரிவித்தீர்கள். இந்த அறிக்கையின் 779ம் பக்கத்தில் குறிப் பிட்டுள்ள இரண்டு அல்லது மூன்று பிரச்சினைகளைப் பற்றி உரிய நேரத்தில் பரிசீலிப்பதாக நீங்கள் எங்களிடம் கூறியிருந்தீர்கள். உங்களுடைய மனதை அலட்டிக் கொண்டிருந்த அந்த இரு பிரச் சினைகள், முதலாவதாக, பொறுக்குக் குழு தனது வழிக்கு அப்பால், எல்லை வரம்பை மீறிச் சென்றதா என்பதும், இரண்டாவதாக பொறுக்குக் குழு தன்னிடம் பரிசீலனைக்கு விடப்பட்டுள்ளதன் எல்லை வரம்பைத் தாண்டிச் சென்றதா என்பதுமாகும். இவைதாம் அந்த இரண்டு பிரச்சினைகள். வாதப் பிரதிவாதம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இறுதியில் 780ம் பக்கத்தில் குறிப்பிட்டுள்ளபடி நீங்கள் முடிவு செய்தீர்கள். எல்லா விவரங்களையும் ஆய்வு செய்து, பின்னர் தீர்ப்புக் கூறுவதாகத் தெரிவித்தீர்கள். அது சம்பந்தமாக, திரு. நசிருத்தீன் அகமது எழுப்பிய ஒழுங்குப் பிரச்சினை மீது சில விஷயங்களை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவருவதற்கு விரும்புகிறேன்.

**திரு. சபாநாயகர் :** அந்த அறிக்கையை நான் பார்த்தபிறகு அப்பொழுது நான் இவ்வாறு கூறினேன் - எனக்கு அச்சிட்ட அறிக்கை

இன்னும் கிடைக்கவில்லை. ஆயினும் என்னிடம் அதனுடைய நகல்கள் உள்ளன. மதிப்புக்குரிய உறுப்பினர் திரு. விஸ்வநாததாஸ் ஒரு விஷயத்தை எழுப்பியபின், நான் கீழ்வருமாறு கூறினேன்:-

> ''நான் ஏற்கனவே கூறியது போன்று இந்த விஷயத்தில் நான் முடிவு கூறப்போவதில்லை. ஒழுங்குப் பிரச்சினை உள்ளிட்ட எல்லாவற்றையும் திறந்த மனதுடன் பார்க்கிறேன். ஏனெனில், இது விவரங்கள் சம்பந்தப்பட்ட பெரிய பிரச்சினைகளைத் தன்னுள் கொண்டுள்ளது என்பதைக் காணலாம். இந்த எல்லா விஷயங்களையும் நான் ஆய்வு செய்யவேண்டும். அதை நான் இன்னும் செய்யவில்லை. இந்தப் பிரச்சினையை இதோடு விட்டு விடலாமா?''

எனவே, இதை ஆய்வு செய்வதற்கு நான் எடுத்துக் கொண்டேன். அதை ஆய்வு செய்துவிட்டேன் என்று இப்பொழுது என்னால் கூற முடியும். ஒழுங்குப் பிரச்சினை சம்பந்தமாக மதிப்புக்குரிய உறுப்பினர்கள் என்ன கூறியிருந்தபோதிலும், நான் பொறுக்குக் குழுவின் அறிக்கையை ஆய்வு செய்தேன், முதலாவது மசோதாவை நான் ஆய்வு செய்தேன். பொறுக்குக் குழுவிடம் சமர்ப்பிக்கப்பட்டதாகக் கருதப்பட்ட மற்றைய முன்வரைவையும் ஆய்வு செய்தேன் என்பதில் ஐயமில்லை. மதிப்புக்குரிய உறுப்பினர் அது சம்பந்தமாக ஏதாவது கூறுவதற்கிருந்தால், அவர் கூறலாம்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** அது சம்பந்தமாகத்தான் இப்பொழுது பேசுவதற்கு எண்ணியுள்ளேன். உண்மையில், இதே ஒழுங்குப் பிரச்சினையை நானும் எழுப்பினேன். ஆனால் அதிருஷ்டவசமாக உங்களுடைய கவனத்தை திரு. நஸிருத்தீன் கவர்ந்தார். எனவே, இந்த விஷயம் சம்பந்தமாக நான் சிறிதளவு சொல்ல வேண்டியுள்ளது.

**திரு. மோகன்லால் கௌதம்** (உ.பி: பொது): ஐயா, இந்த ஒழுங்குப்பிரச்சினை சம்பந்தமாக நான் ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்ப விரும்புகிறேன். ஐயா, அவையின் நடைமுறை சம்பந்தப்பட்ட விதிகளின்படி, ஓர் அறிக்கை இந்த அவையில் சமர்ப்பிக்கப்பட்ட பிறகு எந்த ஒழுங்குப் பிரச்சினையையும் எழுப்புவதற்கு எந்த விதியையும் நான் காணவில்லை. அந்த விதியை மேற்கோள் காட்டும்படி மதிப்புக்குரிய உறுப்பினரை வேண்டுகிறேன். அப்பொழுதுதான் நான் அதை ஆய்வு செய்து, மதிப்புக்குரிய உறுப்பினர் எழுப்பிய ஒழுங்குப் பிரச்சினை விதிகளுக்கு மாறானதா இல்லையா என்பதைக் கண்டறிய முடியும்.

**திரு. சபாநாயகர் :** இவை மிகவும் தெளிவான விஷயங்கள். இவை பற்றிய விவாதம் தேவையில்லை. விஷயத்தின் சாராம்சம் பற்றி நமக்குக் கருத்து வேற்றுமை இருந்தால், விஷயத்தின் நுட்பக் கூறுகள் பற்றி காலத்தை விரயம் செய்யாமல் அந்த சாராம்சம் பற்றி மட்டும் விவாதிக்க அவகாசம் எடுத்துக் கொள்ளலாம். உறுப்பினர்கள் இந்து சட்டத் தொகுப்பிற்கு எதிராக இருக்கிறார்கள் என்றால் அது சாராம்சம் சம்பந்தப்பட்ட விஷயமாகும். அவர்கள் அதற்கு ஆதரவாக இருக்கின்றார்கள் என்றால், அதுவும் கூட சாராம்சம் சம்பந்தப் பட்ட விஷயமாகும். ஆனால், நுட்பக் கூறுகள் சம்பந்தமாக இந்த அவையின் நேரத்தை நாம் வீணாக்க வேண்டாம்.

அடுத்து, குறிப்பிடப்பட்ட ஒழுங்குப் பிரச்சினை பொறுக்குக் குழுவின் ஆய்வுக்கு அனுப்பப்பட்ட மசோதா, உண்மையில், பொறுக்குக் குழு ஆய்வு செய்த மசோதா அல்ல, எனவே அதன் அறிக்கை வேறு ஒன்றை அடிப்படையாகக் கொண்டதாகும் என்பதே. சுருங்கக்கூறின் அதுதான் ஒழுங்குப் பிரச்சினை. அந்த ஒழுங்குப் பிரச்சினை மீது வாதங்கள் புரியப்பட்டன. மதிப்புக்குரிய உறுப் பினர் பண்டிட் பர்கவா, விவரங்களைப் பற்றிப் பேச விரும்புகிறார் என்றால், விஷயங்கள் வேறுவிதமாகக் காட்சியளிக்கும். திரு. நசிருத்தீன் அகமது கூறியதில் எல்லா விஷயங்களும் அடங்கியிருக் கின்றன என்று கருதுகிறேன். வேறு எந்த விவரங்களையாவது அவர் என்னுடைய கவனத்திற்குக் கொண்டு வருகிறாரா?

**திரு. ஜஸ்பத்ராய் கபூர் :** ஐயா, என்னுடைய ஒழுங்குப் பிரச் சினையை உங்கள் முன் சமர்ப்பிப்பதற்கு என்னை அனுமதிக்கும்படி மிகுந்த மரியாதையுடன் உங்களை வேண்டுகிறேன். அது தற்போதைய அமர்வில், இந்தப் பிரச்சினையை விவாதிப்பதற்கு இந்த அவைக்குத் தகுதியிருக்கிறதா என்பது சம்பந்தப்பட்ட விஷயமாகும். மேலும் என்னுடைய நண்பர் திரு. நசிருத்தீன் எழுப்பியுள்ள ஒழுங்குப் பிரச் சினை இந்த அமர்விலேயே விவாதிக்கப்படவேண்டுமா என்பது மாகும். ஏனெனில், என்னுடைய ஒழுங்குப் பிரச்சினை ஏற்றுக் கொள்ளப்பட்டால், தற்போதைய அமர்வில் அந்தப் பொருள் பற்றிய எல்லா விவாதத்தையும் அது தடை செய்துவிடும்.

**திரு. சபாநாயகர் :** படிப்படியாக செல்ல வேண்டுமென்று நான் கருதுகிறேன். முதலாவது ஒழுங்குப் பிரச்சினையை முதலில் எடுத்துக் கொள்வோம். முதலாவது ஒழுங்குப் பிரச்சினை மசோதா விற்கு ஆதரவாக இருப்பதாக ஊகித்துக் கொண்டால், மதிப்புக்குரிய

உறுப்பினர் எழுப்பியுள்ள இரண்டாவது ஒழுங்குப் பிரச்சினையும் தகுதியானதே, எனவே அதை அவர் பின்னர் எழுப்பலாம்.

**திரு. ஜஸ்பத்ராய் கபூர் :** திரு. நசிருத்தின் அகமது எழுப்பியுள்ள ஒழுங்குப் பிரச்சினை மீதான விவாதமும் கூட இந்த அவையால் பரிசீலிக்கப்பட வேண்டிய ஒரு விஷயமாகும்; அந்தப் பொருள் பற்றி விவாதிப்பதற்கு இந்த அவை தகுதியுடையதுதானா என்பதே பிரச்சினை.

**திரு. சபாநாயகர்:** அந்தப் பிரச்சினையை முதலில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற வாதத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. பொறுக்குக் குழு தன்னிடம் ஆய்வுக்கு அனுப்பப்பட்ட மசோதாவை ஆய்வு செய்ததா, அல்லது வேறு ஒன்றைப் பரிசீலனை செய்ததா என்பதையும், எனவே அதனுடைய அறிக்கையைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமா, வேண்டாமா என்பதையும் அவைத் தலைவர்தான் முடிவு செய்ய வேண்டும். அது முடிவு செய்யப் பட்டதற்குப்பின்னர், தற்போதைய மசோதாவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வதற்கு இந்த அவைக்குத் தகுதியில்லை என்று கூறுவதற்கு எந்தக் குறிப்புகளையோ அல்லது எந்த சட்டத்தையோ அல்லது எந்த நடைமுறையையோ மதிப்புக்குரிய உறுப்பினர் சுட்டிக் காட்டுவதற்கு முற்றிலும் தகுதி உடையவராவார்: அதுதான் மேம்பட்ட வழியாகும். காலத்தைக் காப்போம்.

**திரு. ஜஸ்பத்ராய் கபூர் :** ஐயா, நான் ஒரு வார்த்தை கூறலாமா?

**திரு. சபாநாயகர் :** இல்லை, இல்லை, ஜஸ்பத்ராய் கபூர் அவர்களே.

**பண்டிட் தாகூர் தாஸ் பர்கவா :** ஐயா, சில விவரங்களையும், அந்த விவரங்களுக்குப் பொருந்துகின்ற சட்டத்தையும் மட்டும் உங்களிடம் எடுத்துக் கூற விரும்புகிறேன். உதாரணமாக, பொறுக்குக் குழுவின் முன்னே நடைபெற்றுள்ள நடைமுறைகள் இந்த அவையின் விதிகளை துஷ்பிரயோகம் செய்ததாகும் என்று விநயமுடன் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்த அவையின் தனி உரிமையை பொறுக்குக் குழுவும் சட்ட இலாகாவின் நடைமுறையும் மீறியுள்ளன.

இரண்டாவதாக, என்னுடைய விபரங்கள் சரியானவையென்றால் பொறுக்குக் குழு வேறு ஒரு மசோதாவை ஆய்வு செய்துள்ளது.

அவையினால் அனுப்பி வைக்கப்பட்ட மசோதாவை அல்ல. எனவே, இப்பொழுது எழும் பிரச்சினை ஒரு சட்டப் பிரச்சினையாகும்; அத்தகைய நடைமுறை சரியானதுதானா, மற்றும், பொறுக்குக் குழு விற்கு அனுப்பப்பட்ட மசோதாவின் மீதான அறிக்கையென்று இந்த அறிக்கையை சபை பரிசீலனை செய்ய வேண்டுமா, அல்லது, இது சட்டப்படி செல்லத்தக்கதல்லாதன, எனவே சட்டபூர்வமல்லாத ஓர் ஆவணமா? எனவே மிகவும் சம்பந்தப்பட்ட இரு வகைப்பட்ட பிரச்சினைகளை மட்டும் நான் எடுத்துக் கொள்கிறேன். சாராம்சம் சம்பந்தமாகக் கூட, உங்களுடைய அனுமதியுடன், இந்தப் பிரச் சினையும் சம்பந்தமுடையதுதான் என்று நீங்கள் தீர்ப்பளித்தால், பின்னர் மேலும் சிலவற்றை நான் கூறுவேன்.

இந்தப் பிரச்சினை இரு பாகங்களாகப் பிரிந்துள்ளது என்பது என்னுடைய தாழ்மையான கருத்தாகும். முதலாவதாக, இந்த அவையின் முன் சமர்ப்பிக்கப்பட்டுள்ள அறிக்கை, நடைமுறை சம்பந்தப்பட்ட கண்ணோட்டத்திலிருந்து ஒரு நல்ல அறிக்கைதானா? இரண்டாவதாக, அறிக்கை, மசோதாவின் எல்லை வரம்புக்கு அப்பால் செல்கிறதா? இரண்டாவது பிரச்சினைபற்றிப் பின்னர் அவையின் முன்னால் நான் பேச விரும்புகிறேன்.

முதலாவதாக, உங்களுடைய அனுமதியுடன் அவையின் முன்னே சில விவரங்களைச் சமர்ப்பிப்பதற்கு முன்னால், முதலாவது பிரச்சினை பற்றிப் பேசுவதற்கு விரும்புகிறேன். என்னுடைய தாழ்மையான விண்ணப்பம் என்னவெனில், பொறுக்குக் குழுவின் அறிக்கையிலிருந்து நமக்குக் கிடைத்துள்ளவை, மற்றும் நமக்கு வினியோகிக்கப்பட்டுள்ள ஆவணங்கள், நூலகத்திலிருந்து கிடைத் துள்ளவை ஆகியவற்றின்படி, இந்த மசோதா பொறுக்குக் குழுவின் ஆய்வுக்கு அனுப்பப்பட்டதற்குப் பின்னர், சட்ட இலாகா இந்த மசோதாவுக்கு பதிலாக வேறு ஒரு மசோதாவைத் தயாரித்து அனுப்பியுள்ளது, இந்த மசோதாவை பொறுக்குக் குழு ஆய்வு செய் துள்ளது என்ற முடிவுக்கு நான் வந்துள்ளேன். இந்த விவரங் களெல்லாம் முற்றிலும் சரியானவையா என்று நானறியேன். ஆனால் பொறுக்குக் குழுவிலுள்ள சில உறுப்பினர்களுடன் நான் ஆலோ சனை கலந்தேன். அவர்கள் இதுபற்றி என்னிடம் கூறினார்கள், மற்றும் அதே சமயத்தில் பொறுக்குக் குழுவின் அறிக்கையிலிருந்தும் கூட, உண்மையில் தோன்றுகிறது......

**திரு. சபாநாயகர்:** மதிப்புக்குரிய உறுப்பினர், ஏற்கனவே மதிப் புக்குரிய உறுப்பினர் திரு. நசிருத்தீன் அகமது கூறியுள்ளவற்றையே

அனேகமாக அப்படியே திரும்பக்கூறுகிறார் என்று அஞ்சுகிறேன். அதே விஷயம்தான் இது. எழுப்பப்பட்ட குறிப்புகளை மனதிற் கொண்டு, நானே அந்த அறிக்கை முழுவதையும் படித்தேன். திரு. நசிருத்தீன் அகமதுவின் உரையில் இல்லாத வேறு எந்த விவரங் களையும் இங்கு சமர்ப்பிப்பதற்கு மதிப்புக்குரிய உறுப்பினருக்கு முழு உரிமை அளிக்க விரும்பும் அதே பொழுதில், அதையே திரும்பக் கூறுவது வேண்டாம் என்று நினைக்கிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** கூறியதையே மீண்டும் கூற நான் விரும்பவில்லை. இந்த விவரங்கள் சரியானவையாக எடுத்துக் கொள்ளப்படுகின்றனவா என்பதை மட்டுமே நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். இறுதியில் மற்றொரு மதிப்புக்குரிய உறுப்பினர் எழுந்து, இந்த விவரங்களெல்லாம் தவறு என்று கூறினால், அப்பொழுது இந்த வாதம் முழுவதும் அடிப்பட்டுப் போகும். எனவே, இந்த விவரங்களெல்லாம் சரியானவை என்ற முடிவுக்கு நான் எப்படி வந்தேன் என்பதை உங்களுக்கு முன்னால் வைக்க விரும்பு கிறேன். அவை சரியானவை என்று நீங்கள் எடுத்துக் கொண்டால், இந்த அவைக்கும் உங்களுக்கும் நான் தொந்திரவு கொடுக்க விரும்ப வில்லை. உண்மையில், பொறுக்குக் குழுவின் அறிக்கையிலிருந்தே, பதிலுக்கு அனுப்பப்பட்ட மசோதா மட்டுமே பரிசீலிக்கப்பட்டிருக் கிறது என்று நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஏனெனில், பெரும்பான்மைக் குழுவின் அறிக்கையிலிருந்தும், அது போன்றே ஆட்சேபனையாளரின் அறிக்கையிலிருந்தும், வேறு எந்த மசோதா வும் பரிசீலிக்கப்படவில்லை என்று தோன்றுகிறது; குழுவுக்கு அனுப்பப்பட்ட மசோதா பரிசீலிக்கப்படவேயில்லை.

ஐயா, இப்பொழுது, டாக்டர் அம்பேத்கர் நம் முன்னால் ஓர் ஒப்பீட்டு அறிக்கையை வைத்திருக்கிறார். இந்த அட்டவணைகளை நீங்கள் தயை கூர்ந்து பார்வையிட்டால், இரண்டு பாகங்கள் இருப் பதைக் காண்பீர்கள் - ஒன்று, அசல் மசோதா இந்த மசோதாவி லிருந்து எவ்வாறு வேறுபட்டுள்ளது என்பதைக் காட்டுகிறது. அவர் கொடுத்துள்ள மற்றொரு அட்டவணையில் வரைவு மசோதாவுக் கும் பொறுக்குக் குழுவின் அறிக்கைக்கும் உள்ள வேறுபாடு காணப் படுகிறது. மறுவரைவு செய்யப்பட்ட மசோதாதான் பரிசீலிக்கப் பட்டுள்ளது, மூலமசோதா அல்ல என்பதை இதுவும் காட்டுகிறது. எப்படியிருந்த போதிலும், இதுதான் சரியானது என்று எடுத்துக் கொண்டு, மறுவரைவு செய்யப்பட்ட மசோதா மட்டுமே பரிசீலிக்கப் பட்டது என்பது ஏற்றுக்கொள்ளப்பட்டால், மறு-வரைவு செய்யப் பட்ட மசோதா பொறுக்குக் குழுவினால் பரிசீலிக்கப்பட முடியுமா,

அல்லவா என்ற கேள்வி உங்களுக்கு முன்னால் எழுகிறது. மற்றும் அவர்களின் இந்தச் செயல் இந்த அவையின் உரிமை மீறலுக்கு ஒப் பாகாதா என்பதும், பொறுக்குக் குழுவுக்கு இந்த அவை வழங்கி யுள்ள அதிகாரங்கள் துஷ்பிரயோகம் செய்யப்படவில்லையா என்பதும் உங்கள் முன் தோன்றியுள்ள கேள்வியாகும். ஐயா, இப் பொழுது இதற்குப் பின்னால் தவறான உள்நோக்கம் இருப்பதாக நான் கூறுவதாகக் கொள்ளக்கூடாது; இது தெரிந்தோ, தெரியாமலோ செய்யப்பட்டிருக்கக் கூடும். இது நல்ல நோக்கத்துடன் அல்லது கெட்ட எண்ணத்துடன் செய்யப்பட்டிருக்கக் கூடும். அதுபற்றி நான் கவலைப்படவில்லை. பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்ட அசல் மசோதா பொறுக்குக் குழுவால் பரிசீலிக்கப்படவேயில்லை என்ற மிக முக்கியமான உண்மையைப் பற்றித்தான் நான் கவலை கொள்கிறேன்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்** (ரயில்வே மற்றும் போக்கு வரத்துத் துறை இணை அமைச்சர்) : ஓர் ஒழுங்குப்பிரச்சினை - ஒரு பொறுக்குக் குழு ஒரு மசோதாவைப் பரிசீலனை செய்த முறையைப் பற்றி இந்த அவை விவாதிக்கலாமா என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன். அப்படியெனில், அந்தப் பொறுக்குக் குழுவின் எல்லா விவாதங்களையும் பற்றிய - சொல்லுக்குச் சொல்லான - முழு அறிக்கைகள் தேவைப்படும். அந்த அறிக்கையை நாம் நிராகரிக் கலாம், அல்லது ஏற்றுக்கொள்ளலாம். அல்லது அந்த அறிக்கை சம்பந்தமாக நாம் என்ன வேண்டுமானாலும் செய்யலாம்; ஆனால் பொறுக்குக் குழு அதை எவ்வாறு ஆய்வு செய்தது என்பது இங்கு பொருத்தமற்ற விஷயம், அது பற்றி விவாதிப்பதும்கூட இந்த அவையின் வழக்கமல்ல. இல்லாவிட்டால், ஒவ்வொரு வருங்காலப் பொறுக்குக் குழுவும் அதனுடைய நேர்மையை நாம் மதிப்பிடுவ தற்காக அதனுடைய விவாதங்களைப் பற்றிய சொல்லுக்குச் சொல்லான பதிவேட்டை நமக்குக் கொடுக்க வேண்டியிருக்கும்....

**திரு. சபாநாயகர்:** பல்வேறு ஒழுங்குப் பிரச்சினைகள் எழுப்பப்படுகின்றன என்று அஞ்சுகிறேன்; மிகவும் விரிவாகவும் அவை எழுப்பப்படுகின்றன. தற்போதைய பிரச்சினையைப் பொறுத்த மட்டிலும், இந்த அவையினால் அனுப்பப்பட்ட மசோதாவை பொறுக்குக் குழுவினால் பரிசீலனை செய்யப்படவேயில்லை என்பதுதான் நிலைமையானால், பொறுக்குக் குழு அதைப் பரி சீலனை செய்ததா இல்லையா என்ற பிரச்சினையை விவாதிப்பது முற்றிலும் தகுதி உடையதேயாகும் என்று நினைக்கிறேன். அப்படி

யெனில், பொறுக்குக் குழுவின் நடவடிக்கைகளை விவாதிப்பது எந்த அளவுக்கு அனுமதிக்கப்படக்கூடியது என்ற பிரச்சினை எழும்; இது சம்பந்தமாக என்னுடைய தற்போதைய கருத்து என்னவெனில், இந்த அவையோ அல்லது நானோ, ஒரு விவரம் - அறியும் குழுவாக அல்லது நீதிமன்றமாக அமர முடியாது; ஆனால், பொறுக்குக் குழு தனது அறிக்கையில் கூறியுள்ளதை நாம் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளலாம் - அவ்வாறு செய்வதற்கு நமக்கு உரிமை (தகுதி) உண்டு - எனவே விஷயம் ஏறத்தாழ ஊகத்திற்கு உரிய ஒன்றாகும். ஊகத்தின் அடிப்படையில், பொறுக்குக் குழு என்ன செய்தது என்பது பற்றி நாம் ஒரு முடிவுக்கு வரலாம். இது, பொறுக்குக் குழுவிலுள்ள ஒவ்வொரு உறுப்பினரின் சாட்சியத்தையும், கூடுதலான சாட்சியத்தையும் பதிவு செய்வதன் மூலமல்ல, என்னுடைய நண்பர் பண்டிட் பர்கவாவுக்கு அவர் சொல்லியது அனைத்தும் ஒருபுறமிருந்த போதிலும், வாதம் மேற்கொண்டு எவ்வகையிலும் முன்னுக்கு எடுத்துச் செல்லப்படவில்லை என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இதை, இந்த அவையின் உரிமைகள் மீறப்பட்டன, அல்லது நடைமுறை துஷ்பிரயோகம் செய்யப்பட்டது என்று கூறினாலும், சுருங்கக்கூறின் - பொறுக்குக் குழு ஒரு மாற்று மசோதாவைப் பரிசீலனை செய்தது, இந்த அவை அனுப்பிய மூல மசோதாவை அது பரிசீலனை செய்யவில்லை என்பதே வாதமாகும்; பொறுக்குக் குழுவின் அறிக்கையிலுள்ள - பெரும்பான்மை மற்றும் சிறுபான்மை அறிக்கை - சில கூற்றுக்கள் அல்லது கருத்துக்களை இது அடிப்படையாகக் கொண்டது. எனவே, இந்த ஆவணங்களிலிருந்து பார்க்கும் போது, மூலமசோதா, ஒருபோதும் பரிசீலனை செய்யப்படவில்லை. என்று அவர் ஊகிக்கிறார். சுருங்கக்கூறின், ஒழுங்குப் பிரச்சினை இதுவேயாகும். உரிமை மீறப்பட்டது அல்லது நடைமுறை துஷ்பிரயோகம் செய்யப்பட்டது என்ற பிரச்சினை எழும். அவர் ஊகிப்பது போல் பொறுக்குக் குழு செய்துள்ளது என்ற முடிவுக்கு நாம் வந்தால், அதேசமயத்தில் அவர் ஊகிக்கும் விதத்தில் பொறுக்குக் குழு குற்றம் செய்யவில்லை என்ற முடிவுக்கும் நாம் வந்தால், உரிமை மீறல், அல்லது நடைமுறை துஷ்பிரயோகம் செய்யப்பட்டது என்ற பிரச்சினை எழவே செய்யாது. பொறுக்குக் குழுவின் அறிக்கையிலிருந்து மதிப்புக்குரிய உறுப்பினர் வாசிக்கப்போகும் ஒவ்வொரு அம்சத்தையும் ஒரு வேளை அதைவிடக் கூடுதலாகவும் நான் கவனமாகப் படித்தேன் என்பதை மதிப்புக்குரிய உறுப்பினர்களுக்கு உறுதி கூற விரும்புகிறேன். அது குறித்து என் சொந்த முடிவுகள் இருக்கின்றன. இந்த அவையின் நேரத்தை வீணாக்குவதற்குப்

பதிலாக அந்த மசோதாவைப் பற்றி நான் என்ன அபிப்பிராயப் படுகிறேன் என்று கூறி, இதுபற்றி என் முடிவைத் தெரிவித்து, இத்துடன் முடித்துக்கொள்ள விரும்புகிறேன். இவ்விஷயத்தில் அதுதான் என் உணர்வு. (சில மதிப்புக்குரிய உறுப்பினர்கள்: ''மிகவும் சரி, ஐயா''). எது எப்படியிருந்த போதிலும் இந்த மசோதாவை இன்றைக்கு நாம் முடிக்கப் போவதில்லை. நாம் நிலைமையைத் தெளிவாக்கி, மேற்கொண்டு வாதங்களுக்குள் போகாமல், நான் ஒரு வேளை.....

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** விஷயங்கள் எவ்வாறு நடைபெற்றுள்ளன என்று உங்களிடமிருந்து கேட்டதற்குப் பின்னர், வாதங்களினுள் மேற்கொண்டு போவதற்கு நான் விரும்பவில்லை. ஆனால், எனக்குக் கிடைத்துள்ள சில தீர்ப்புகளை உங்களுக்கு முன்னால் வைக்க விரும்புகிறேன். பொறுக்குக் குழுவிடமிருந்து வந்துள்ள இந்த மசோதா முற்றிலும் தேவையற்றது, சட்டவிரோதமானது, குழுவின் அறிக்கை முழுவதையும் மாசுபடுத்துகிறது என்பதைக் காட்டுகிறது. மற்றும் அவையின் முன்னால் எந்த அறிக்கையும் இல்லை. இதுதான் என்னுடைய விண்ணப்பம். நீங்கள் அனுமதித்தால், சில தீர்ப்புகளை உங்களுக்கு முன் சமர்ப்பிக்கிறேன்.

**திரு. சபாநாயகர்:** ஆயினும், தீர்ப்புகள் சில விவரங்களுக்குப் பின்னால் வருகின்றன. இந்த விஷயத்தில், சொல்லப்போனால், பொறுக்குக் குழு மூலமசோதாவைப் பரிசீலிக்கத் தவறியுள்ளது என்று குற்றம் சாட்டப்பட்டுள்ளது. அது நிலைநாட்டப்பட்டால், பின்னர் அந்தத் தீர்ப்புகளைப் பரிசீலனை செய்வதற்கு நமக்குப் போதிய அவகாசம் இருக்கும்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** இந்த உண்மையை யாரும் மறுக்கவில்லை.

**திரு. சபாநாயகர் :** இதுதான் விஷயம் என்பதை மதிப்புக்குரிய உறுப்பினர் பார்க்கவேண்டும். நான் ஒரு தீர்ப்புக் கொடுக்கும்போது, எல்லா ஆவணங்களையும் படித்த பின்னர், அதை கவனமாகத் தயாரிக்கிறேன். நான் கூறியுள்ள விவரங்கள் ஏற்றுக் கொள்ளப் பட்டபின்னர், வேறு பிரச்சினைகள் ஏதாவது எழுந்தால், அப்பொழுது அந்த ஒழுங்குப் பிரச்சினைகளைப் பரிசீலிக்கலாம்.

**திரு. எம். திருமலராவ் (சென்னை : பொது) :** நீங்கள் உங்களுடைய தீர்ப்பை வழங்குவதற்கு முன்னால் அனுமானத்தின் பேரில்

*அல்லாமல் உண்மையை அறிந்து கொள்வதற்கு வேறு எந்த வழி முறையும் இல்லையா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *(சட்டத்துறை அமைச்சர்) : இந்த அவையினால் பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப் பட்ட அசல் மசோதா பொறுக்குக் குழுவின் முன்னால் ஒருபோதும் இருக்கவில்லை என்ற ஓர் அபிப்பிராயத்தை இந்த அவையில் ஏற்படுத்துவதற்கு என்னுடைய நண்பர் பண்டிட் பர்கவா முயன்றுள் ளார். இந்த அபிப்பிராயத்தைத் திருத்துவதற்கு, உங்களுடைய அனுமதியுடன் நான் ஒரு நிமிடம் குறுக்கிடலாமா? இது ஒரு கொச்சையான தப்பபிப்பிராயமாகும் என்று கருதுகிறேன். என் னுடைய மதிப்புக்குரிய நண்பர்........*

***திரு. சபாநாயகர் :*** *நிலைமையை நானே மிகவும் விவரமாக ஆராய்ந்தேன். என்னுடைய முடிவைப் படித்துக் காட்டுவதன் மூலம் நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.*

***பண்டிட் முகுத் பீஹாரிலால் பர்கவா?*** *(ஆஜ்மீர்-மீர்வாரா) : என்னிடத்தில் கூடுதல் விவரங்கள் உள்ளன.*

***திரு. சபாநாயகர் :*** *அமைதி, அமைதி!*

***பண்டிட் முகுத் பீஹாரிலால் பர்கவா :*** *தலைவரின் கவனத் திற்கு வராத ஒரு கூடுதல் விவரம் இருக்கிறது. மறு - வரைவு செய்யப் பட்ட மசோதா ஏதாவது அச்சிடப்பட்டுள்ளதா என்று கண்டறி வதற்காக நான் சட்ட இலாகாவிற்கு ஒரு கடிதம் எழுதினேன். ஒரு சில பிரதிகளே அச்சடிக்கப்பட்டன. அவை சபையின் நூலகத்தில் கிடைக்கும் என்ற தகவல் எனக்குக் கொடுக்கப்பட்டது. நான் அந்த மசோதாவைப்பார்த்தேன். பொறுக்குக் குழு கூடுவதற்கு முன்னதாக, 1948 ஜூலையில் மறு-வரைவு செய்யப்பட்ட ஒரு மசோதா அச்சிடப் பட்டது என்பது உண்மை. அந்த மசோதா பொறுக்குக் குழுவினால் ஷரத்து வாரியாகப் பரிசீலனை செய்யப்பட்ட பின்னர், அந்த மசோதாவும் அதனுடைய அறிக்கையும்தான் வெளிவந்திருக்கிறது. அந்த அறிக்கை இதைக் கூறுகிறது. எனவே, என்னுடைய விண்ணப்பம் என்னவெனில், தன்னிடம் அனுப்பப்பட்ட மசோதாவின்பால் பொறுக்குக் குழு தனது மனதை செலுத்தியதா, அல்லது, மூல மசோதாவைப் பரிசீலனை செய்ததற்குப் பின்னர், முற்றிலும் வேறு வடிவத்தில் டாக்டர் அம்பேத்கரின் கையெழுத்தின் கீழ், மறு-வரைவு*

செய்யப்பட்ட வேறு மசோதா அச்சடிக்கப்பட்டதா என்பதைக் கண்டறிய, மறு - வரைவு செய்யப்பட்ட மசோதாவை நாம் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன். இது ஒரு மிகவும் முக்கியமான ஆவணமும், கூடுதல் விவரமுமாகும். தீர்ப்புக் கூறவதற்கு முன்னால், இதை நான் சபா நாயகரின் கவனத்திற்குக் கொண்டு வருவதற்கு விரும்புகிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** அந்த மசோதாவின் ஒரு பிரதி என்னிடத்தில் இருக்கிறது.

**திரு. சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினர்களிடம் இல்லாத சில விவரங்கள் என்னிடத்தில் உள்ளன.

இந்து சட்டத் தொகுப்பின் மீதான பொறுக்குக் குழுவின் அறிக்கையை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற சட்ட அமைச்சரின் பிரேரணை தகுதியற்றது என, 1948 ஆகஸ்டு 31-ல் மதிப்புக்குரிய உறுப்பினர் நசிருத்தீன் எழுப்பி, வேறுசில உறுப்பினர்கள் ஆதரவு அளித்த ஒழுங்குப் பிரச்சினை ஒரு குறுகிய வட்டத்திற்குட்பட்ட விவரங்களை அடிப்படையாகக் கொண்டதாகும். எழுப்பப்பட்ட ஆட்சேபனை ஒரு நியாயச் சங்கிலி போன்று பின்வரும் வடிவத்தில் முன்வைக்கப்பட்டது:

> ''பொறுக்குக் குழு பரிசீலனை செய்ததானது, அசல் மசோதாவின் ஒரு 'பதிலி' - 'ஒரு திருத்தப்பட்ட வரைவு'' வடிவத்தில் முன்வைக்கப்பட்டதாகும். எனவே பொறுக்குக் குழு அதற்கு அனுப்பப்பட்ட மசோதாவைப் பரிசீலனை செய்யவில்லை, மாறாக, 'ஒரு புதிய ஆவணத்தை' ஆய்வு செய்தது. எனவே, பொறுக்குக் குழவின் தற்போதைய அறிக்கை, ஒரு புதிய ஆவணத்தின் மீதான ஒரு அறிக்கையாக இருப்பதால், மூல மசோதாவின் மீதான பொறுக்குக் குழுவின் அறிக்கை ஏதுமில்லை. எனவே, பொறுக்குக் குழுவிடமிருந்து வெளிவந்துள்ள மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற மாண்புமிகு சட்ட அமைச்சரின் பிரேரணை தகுதியற்றதாகும்.'' இதுதான் ஒழுங்குப் பிரச்சினையின் சாராம்சமாகும். (திரு. மகாவீர் தியாகி : ''அதுதான் உங்களுடைய தீர்ப்பா?''). விஷயத்தை சரியாக எடுத்துச் சொல்லியிருக்கிறேன் என்று நம்புகிறேன்.

ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பிய அல்லது ஆதரித்த திரு. நசிருத்தீன் அகமது பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா, மற்றும் திரு. விஸ்வநாத தாஸ் ஆகிய உறுப்பினர்களில் யாரும் பொறுக்குக்குழுவின் உறுப்பினர்கள் அல்ல, எனவே இயற்கையாகவே, பொறுக்குக் குழு கூட்டங்களில் எது பரிசீலனை செய்யப்பட்டது என்பது குறித்து அவர்களுக்கு நேரடியாகத் தெரியாது. எனவே, அவர்கள், பொறுக்குக் குழுவின் அறிக்கையிலுள்ள சில கூற்றுக்களை ஆதாரமாகக் கொண்டு, பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்ட மூலமசோதா, அவர்களால் பரிசீலிக்கப்படவில்லை என்று கருதினர்.

இவ்வாறு, எழுப்பப்பட்ட பிரச்சினையானது முற்றிலும் விவரங்கள் சம்பந்தப்பட்ட ஒன்றேயாகும். அதாவது பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்ட மசோதா, அதாவது அதிலுள்ள பல்வேறு சாராம்சமான ஷரத்துகள் - அவை அமைக்கப்பட்டுள்ள வடிவம் அல்லது வரிசைக் கிரமத்திற்கு அப்பாற்பட்ட முறையில் - பொறுக்குக் குழுவினால் பரிசீலிக்கப்பட்டனவா, அல்லவா; அவர்களுக்கு அனுப்பப்பட்ட மசோதாவின் சாராம்சமான ஷரத்துக்களின்பால் பொறுக்குக் குழுவினர் தங்கள் மனதை செலுத்தினார்களா, இல்லையா என்பதே எழுப்பப்பட்ட கேள்வியாகும்.

தங்களுக்கு அனுப்பப்பட்ட மசோதாவின் ஷரத்துக்களுக்குச் சேர்ப்பு செய்யவோ, சில ஷரத்துகளை அகற்றவோ, அல்லது அவற்றை மேம்படுத்தவோ பொறுக்குக் குழுவுக்கு உரிமை இருப்பதை யாரும் மறுக்கவில்லை; ஆனால் பொறுக்குக் குழுவினால் அவ்வாறு செய்யப்படும் சேர்ப்புகள், அகற்றல்கள் அல்லது மேம்பாடுகள் முதலியன அந்த மசோதாவின் எல்லை வரம்புக்கு உட்பட்டதாக இருக்கவேண்டும். எனவே, இந்த அம்சம் பற்றி நான் ஏதும் கூற வேண்டியதில்லை. ஏனெனில், மசோதாவின் வரம்புக்கு அப்பால் பொறுக்குக் குழு சென்றுவிட்டதாக எந்தப் பிரச்சினையும் எழுப்பப் படவில்லை.

எனவே, எனக்கு முன்னால் உள்ள எழுத்து மூலமான, மற்றும் வாய்மொழியான சாட்சியத்தின் வெளிச்சத்தில், ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பியுள்ள மதிப்புக்குரிய உறுப்பினர்களினால் வரையறுத்துக் கூறப்பட்டுள்ள, விபர அறிக்கையை இப்பொழுது நான் பரிசீலனை செய்ய முடியும்.

பிரேரணை செய்யப்பட்டுள்ள மசோதா எவ்வாறு வகுக்கப் பட்டது என்பது சம்பந்தமான விவரங்களை நான் சுருக்கமாகக் கூறு கிறேன். நோக்கங்கள் மற்றும் காரணங்கள் பற்றிய அறிக்கையில் கூறப்பட்டுள்ளபடி, மத்திய அரசு, 1944, ஜனவரி 20ம் தேதிய அவர் களின் தீர்மானத்தின்படி, இந்து சட்டம் பற்றிய ஒரு தொகுப்பை வரையறுக்கும் நோக்கத்திற்காக ஓர் இந்து சட்டத் தொகுப்புக் குழுவை நியமித்தது. சாத்தியமான வரை இது முழுமை பெற்றதாக இருக்க வேண்டும் என்றும் அது கூறியது. எல்லா மாகாணங்களுக் கும் இந்து சமுதாயத்தின் எல்லாப் பகுதிகளுக்குமான இந்து சட் டத்தின் வெவ்வேறு அம்சங்களையும் உள்ளடக்கிய ஓர் ஒன்று பட்ட மற்றும் ஒருசீரான சட்டத் தொகுப்புக்கு ஆதரவாக நாட்டில் பொதுஜன அபிப்பிராயம் வளர்ந்து வருவதை முன்னிட்டு, இது செய்யப்பட்டது. மேலும் இந்து சமூகத்தில் இன்றுள்ள நிலைமைகள் மற்றும் போக்ககுகளை முன்னிட்டும், இந்து சமுதாயம் வேகமாகத் தன்னை புதிய பணிக்கு ஏற்பத் தகவமைத்துக் கொள்ளுவதாகத் தோன்றுகிறது. இதற்குப் பொருத்தமான வகையில் சட்டத்தை மாற்று வதற்குப் பெரும் தேவை ஏற்பட்டுள்ளது என்றும் உணரப்பட்டது.

மசோதாவை பொறுக்குக் குழுவுக்கு அனுப்ப வேண்டும் என்ற பிரேரணை 1948 ஏப்ரல் 9ஆம் தேதி நிறைவேற்றப்பட்டபோது, மசோதாவின் சாராம்சம், அதனுடைய வடிவம், மற்றும் மசோதா வின் முன்வரைவைத் தயாரிப்பது ஆகியவை சம்பந்தமாக மதிப்புக் குரிய உறுப்பினர்கள் தங்கள் கருத்தை எடுத்துச் சொல்வதற்கு அவகாசமிருக்கவில்லை. இந்து சட்டக் குழு தயாரித்த மசோதாவின் முன் வரைவு, ஒரு சட்டத்தொகுப்பின் லட்சணங்களுக்கு ஏற்றதாக இருக்கவில்லை என்று சட்ட அமைச்சகம் உணர்ந்ததால், குறைபாடு களைப் போக்குவதற்காக மசோதாவின் முன்வரைவைத் திருத்தி வரைவதென்றும், சட்டத்தொகுப்பின் ஷரத்துக்கள் பற்றி ஒரு முழு மற்றும் பூரணமான சித்திரம் தரும்படிச் செய்வதென்றும் முடிவு செய்தது. எனவே அவர்கள், மூல மசோதாவின் பாகங்களையும் பிரிவுகளையும், தொடர்ச்சியான பிரிவுகளாகவும், தர்க்கரீதியான வரிசைக்கிரமமாகவும் மறு சீரமைக்கும் பணியை மேற்கொண்டனர். மேலும் பொறுக்குக் குழுவினால் பரிசீலனை செய்வதற்கு முறையாக இருக்கும் என்று அவர்கள் மேலும் சில யோசனைகளையும் கூறி யிருந்தனர். பொறுக்குக் குழுவினால் அவர்களது கூட்டங்களில் உருவாக்கப்படும் வகையில், அல்லது மாற்றங்களை அமைத்து வரையும்படி வரைவோருக்கு ஆணை பிறப்பிப்பதற்கு வகை செய்யும் ரீதியில் சட்ட அமைச்சகம் பொறுக்குக் குழுவின் முன்னால் ஒரு முறையான வடிவத்தை சமர்ப்பித்தது.

திருத்தப்பட்ட வடிவத்தில் சட்டத் தொகுப்பைச் சுற்றுக்கு விட்டபோது சட்ட அமைச்சகம் பொறுக்குக் குழு உறுப்பினர்களுக்கு உதவியாக ஓர் அட்டவணையையும், இந்து சட்டக் குழுவினால் தயாரிக்கப்பட்ட மூலமசோதாவில் உள்ள ஒரு பிரிவு திருத்தப்பட்ட தொகுப்பில் எங்கு அமைய வேண்டும் என்பதையும் வழங்கியிருந்தனர். இவ்வாறு பொறுக்குக் குழுவின் உறுப்பினர்களுக்கு முன்னால் எல்லா சமயங்களிலும் ஒவ்வொரு கட்டத்திலும் மூல மசோதாவில் அடங்கியிருந்த தொகுப்பின் ஷரத்துகளும் இருந்தன. மேலும் திருத்தப்பட்ட முன்வரைவில் சாராம்சம் சம்பந்தமாக யோசனை கூறப்பட்ட மாற்றங்களையும் பொறுக்குக் குழுவின் உறுப்பினர்கள் கவனிக்க வேண்டும் என்று சட்ட அமைச்சகம் தெரிவித்தது. எனவே, மசோதாவின் திருத்தப்பட்ட மற்றும் மூல வடிவத்தின் ஷரத்துகள் அனைத்தும் விவாதத்தின் எல்லாக் கட்டங்களிலும் பொறுக்குக் குழுவின் முன்னால் இருந்தன என்பது தெளிவு. மேலும் பொறுக்குக் குழுவின் விவாதங்களில் மூல ஷரத்துகளும், சட்ட அமைச்சகத்தினால் யோசனை கூறப்பட்ட திருத்த மசோதாவின் ஷரத்துகளும் ஒப்பீடு செய்யப்பட்டன.

மேலே கூறப்பட்ட விவரங்கள் சம்பந்தமான சான்று சம்பந்தப்பட்ட பிரச்சினையைப் பொறுத்த மட்டிலும், ஒழுங்குப் பிரச்சினை சம்பந்தமாகப் பேசிய பொறுக்குக் குழுவின் ஒரே உறுப்பினர் பண்டிட் பாலகிருஷ்ண சர்மா மட்டுமே. பண்டிட் பாலகிருஷ்ண சர்மா, சபையில், ''நாங்கள் பரிசீலனை செய்ய வேண்டுமென்று அவை எங்களைக் கேட்டுக்கொண்ட மசோதா எப்போதும் எங்கள் முன்னால் இருந்தது'' என்று கூறினார். பிரதான அறிக்கையும், அது போன்றே கருத்து வேறுபடும் குறிப்பு ஆகியவை அடங்கியுள்ள, பதிவாகியுள்ள சான்றும் அறிக்கைக்குப் போதிய அளவு ஆதரவாக உள்ளன. இந்த ஆட்சேபனையை எழுப்பிய மதிப்புக்குரிய உறுப்பினர்கள் பொறுக்குக் குழுவின் அறிக்கையின் சில பகுதிகளை அல்லது கருத்துவேறுபாட்டுக் குறிப்பை ஆதாரமாகக் கொண்டவர்கள் சில பகுதிகளை சந்தர்ப்ப சூழ்நிலைக்கு மாறாக எடுத்துக் கொண்டு விட்டதாகத் தோன்றுகிறது. பிரதான அறிக்கை இவ்வாறு கூறுகிறது:

> ''கீழே கையொப்பமிட்டுள்ள நாங்கள், மசோதாவை - திருத்தப்பட்ட நகலில் அல்ல - பரிசீலனை செய்ததற்குப் பின்னர், இப்பொழுது இவ்வாறு சமர்ப்பிக்கிறோம்'' இத்தியாதி என்று கூறுகிறது. இவ்வாறுதான் அவர்கள் தமது அறிக்கையைத் தொடங்குகின்றனர்.''

மசோதாவை - திருத்தப்பட்ட நகலை அல்ல - பரிசீலனை

செய்ததாக அவர்கள் கூறுகின்றனர். ஆனால் மேலும் அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றனர்:

> ''சட்டப் பேரவையில் அறிமுகம் செய்துவைக்கப்பட்ட இந்து சட்டத்தின் முன்வரைவு அது அறிமுகம் செய்து வைக்கப்படுவதற்கு முன்னால், இலாகா பூர்வமான தணிக்கை எதுவும் செய்யப்படவில்லை. சட்ட அமைச்சகம் தற்பொழுது ஒரு திருத்தப்பட்ட நகலை சமர்ப்பித்துள்ளது. இது, எங்களுடைய கருத்துப்படி, பல அம்சங்களில் கூடுதல் திருப்தி அளிக்கக் கூடியதாக இருக்கிறது. இந்தத் திருத்தப்பட்ட நகல், அசல் மசோதாவில் எத்தகைய சாராம்சமான மாற்றங்களையும் செய்யவில்லை; ஆனால் மூல மசோதாவின் கட்டமைப்பினுள்ள மசோதாக்கள் வழக்கமாக சட்டப் பேரவையில் அறிமுகம் செய்துவைக்கப்படும் வடிவத்தில் இருக்கும்படி மாற்றி அமைத்துள்ளது.''

எனவே, பொறுக்குக் குழு மூல மசோதாவின்பால் தனது மனதைச் செலுத்தி, அது திருத்தி அமைக்கப்பட்டுள்ளது - சாராம்சத்தில் அல்ல - வடிவத்தில் மட்டுமே என்ற முடிவுக்கு வந்துள்ளது என்பது தெளிவு. மூலமசோதாவைக் காட்டிலும் திருத்தப்பட்ட நகல் மேம்பட்டது என்று தாங்கள் ஏன் கருதுகிறோம் என்பதற்கான காரணங்களையும் அவர்கள் கூறுகின்றனர். பின்னர் அவர்கள் இவ்வாறு கூறுகின்றனர்:

> ''இதைத் தொடர்ந்து நமது விவாதங்களை மசோதாவின் திருத்தப்பட்ட நகல்மீது மட்டும் நடத்துவது என்று நாங்கள் முடிவு செய்தோம்."

''இதைத் தொடர்ந்து'' என்ற சொற்கள் முக்கியமானவை. மூலமசோதாவின் மற்றும் திருத்தப்பட்ட நகலின் சாராம்சமான ஷரத்துகளைப் பார்த்த பின்னர், திருத்தப்பட்ட நகலின் மீது விவாதம் செய்வதுதான் இயல்பானதும் கூடுதல் பொருத்தமானதுமாகும். இது மூல மசோதாவின் சாராம்சத்தை அபிவிருத்தி செய்யப்பட்ட வடிவமேயன்றி வேறல்ல. பொறுக்குக் குழு மேலும் இவ்வாறு கூறியது:

> ''ஒவ்வொரு பிரிவுக்கும் பக்கவாட்டில் மூலமசோதாவின் இதையொத்த பிரிவைச் சுட்டிக்காட்டும் குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன.''

தமது முடிவுகளை இறுதியாக்குவதற்கு, அவர்களது விவாதங்கள் திருத்தப்பட்ட நகலையே அடிப்படையாகக் கொண்ட போதிலும், தங்களது பார்வையில் மூலமசோதாவின் ஒவ்வொரு ஷரத்தையும் வைத்துக்கொண்டிருந்தனர் என்பதற்கு இது மேலும் ஒரு தெளிவான சான்று ஆகும். ஷரத்துகள் பற்றிய குறிப்புகளில் இது

மேலும் மிகவும் தெளிவாக்கப்பட்டுள்ளது. அதில் அவர்கள் மசோதாவின் பல்வேறு பாகங்களையும் ஷரத்துகளையும் ஆய்வுசெய்து, ஒவ்வொரு பாகம் அல்லது ஷரத்து சம்பந்தமாகவும் மூலமசோதாவின் இணையொத்த பாகத்தை அல்லது ஷரத்தைக் குறிப்பிடுகின்றனர்.

டாக்டர் பக்ஷி தேக் சந்த், மற்றும் பண்டிட் பாலகிருஷ்ண சர்மாவின் மாறுபட்டக் கருத்துக் குறிப்பு, ஓரிடத்தில், பொறுக்குக் குழு பரிசீலனை செய்ததானது திருத்தப்பட்ட நகலே அன்றி, மூல மசோதா அல்ல என்று கூறுகிறது. மேலே கூறப்பட்டதன் வெளிச்சத்தில் இதற்கு விளக்கம் கூறப்படவேண்டும். திருத்தப்பட்ட நகல் பரிசீலனை செய்யப்படுவதாக அவர்கள் குறிப்பிட்ட இடம், அவர்களது ஆட்சேபனை அம்சம் என்னவெனில், திருத்தப்பட்ட நகல் யோசனை கூறியுள்ள மாற்றங்கள், வடிவத்திலான மாற்றங்கள் மட்டுமல்ல, சாராம்சம் சம்பந்தப்பட்ட விஷயங்களிலும்கூடத்தான். அவர்களது விரிவான மற்றும் திறமையான குறிப்பில், மூலமசோதா பொறுக்குக் குழுவினால் பரிசீலனை செய்யப்படவில்லை என்று எந்த ஒரு குறிப்பையும் அவர்கள் கூறவில்லை என்பது நினைவு கூரத்தக்கது. திருத்தப்பட்ட நகல் யோசனை கூறியுள்ள மாற்றங்கள் நல்லவையா, அல்லவா என்பது பற்றித்தான் அவர்கள் தமது மாறுபட்ட குறிப்பில் கூறியுள்ளனர். எனவே, விவரங்களைப் பொறுத்த மட்டிலும், ஆவணங்களில் வெளியாகின்றபடி, பொறுக்குக் குழு அவர்களுக்கு அனுப்பப்பட்ட மசோதாவின் சாராம்ச பூர்வமான ஷரத்துக்களைப் பூரணமாகவும் உரிய முறையிலும் பரிசீலனை செய்துள்ளனர் என்பது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. எனவே, மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரின் தற்போதைய பிரேரணை தகுதி யுள்ளதும், முறையானதுமாகும்.

இப்பொழுது, விவரங்கள் பற்றிய முடிவு இதுவாக இருக்கும் போது, திரு. கபூரின் ஒழுங்குப் பிரச்சினை என்ன?

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர்:** இப்பொழுது நாம் அவையை ஒத்திப்போடலாம். இப்பொழுது நேரம் ஐந்து மணிக்கு மேலாகிறது.

**திரு. சபாநாயகர் :** இப்பொழுது அவை ஒத்திவைக்கப் படுகிறது.

*(பின்னர், 1949, பிப்ரவரி 18, வெள்ளிக்கிழமை காலை 10.45 மணி வரையிலும் பேரவை ஒத்திவைக்கப்பட்டது)*

(காலை 11.45 மணி)

## *இந்து சட்டத் தொகுப்பு - தொடர்ச்சி.

**திரு. துணை சபாநாயகர் :** இந்து சட்டம் பற்றிய விவாதத்தை இப்பொழுது நாம் மீண்டும் தொடருவோம்.

**திரு. ஜஸ்பத்ராய் கபூர்** (உ.பி. பொது) : நான் ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பலாமா?

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் :** எழுந்திருக்கிறார்.....

**திரு. துணை சபாநாயகர் :** திரு. கபூரால் ஓர் ஒழுங்குப் பிரச்சினை எழுப்பப்படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (சட்ட அமைச்சர்): அதைப்பற்றித்தான் கூறுவதற்கு நான் முன்வந்தேன். ஐயா, நிகழ்ச்சி நிரல் குறிப்பில் 16 வெவ்வேறு பிரேரணைகள் இருக்கின்றன. அவற்றில் சில, ஒழுங்குப் பிரச்சினைகளை எழுப்புகின்றன; வேறு சில, சாராம்சபூர்வமான பிரேரணைகள். என்னுடைய பிரேரணையின் மீது நான் பேசுவதற்கு முன்னதாக, அவற்றின் மீது நான் என் கருத்துக்களை வெளிப்படுத்தவிருக்கிறேன். ஆயினும் என்னுடைய நண்பர் ஏதாவது சொல்ல விரும்பினால், அவர் தாராளமாகக் கூறலாம்.

**திரு. துணை சபாநாயகர் :** அவருடைய ஒழுங்குப் பிரச்சினையை நாம் கேட்போம்.

**திரு. ஜஸ்பத்ராய் கபூர் :** ஐயா, முந்திய சந்தர்ப்பத்தில், பிரேரணை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட போது, ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புவதற்கு நான் எழுந்து நின்றேன். அப்பொழுது, என்னுடைய நண்பர் திரு. நசிருத்தீன் அகமது எழுப்பியுள்ள ஒழுங்குப் பிரச்சினை பைசலாக்கப்படும் வரையில் பொறுத்திருக்கும்படி மாண்புமிகு சபாநாயகர் எனக்கு ஆணையிட்டார். அந்த ஒழுங்குப் பிரச்சினை அன்றைய தினம் மாலை சரியாக ஐந்து மணிக்கப் பைசல் செய்யப்பட்டது, அதற்குப் பின்னர் சபையின்

---

* அ.நி. (சட்டம்) டி. தொகுதி II, பாகம் II 1949 பிப்ரவரி 24, பக். 821-52.

அமர்வு அன்றை தினம் முடிவுக்கு வந்தது. எனவே அந்த ஒழுங்குப் பிரச்சினையை இப்பொழுது எழுப்புவதற்கு, நீங்கள் தயை கூர்ந்து எனக்கு அனுமதியளிப்பீர்கள் என்று நம்புகிறேன். நான் அதை எழுப்புவதற்கு முன்னால், என்னுடைய நோக்கம்..... சபைக்கு நான் உறுதி கூற விரும்புகிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினர் தயவு செய்து தனது ஒழுங்குப்பிரச்சினையைக் கூறட்டும். எந்தவிதமான மன்னிப்புக் கோருவதற்கோ, வாதத்திற்கோ அவசியமில்லை. அந்த ஒழுங்குப் பிரச்சினையை நான் கேட்பதற்கு விரும்புகிறேன்.

**திரு. ஜஸ்வத்ராய் கபூர் :** என்னுடைய ஒழுங்குப் பிரச்சினை முதலாவதாக, இந்த அவையின் உறுப்பினர்களது உரிமைகளையும் தனிச் சலுகைகளையும் சம்பந்தப்பட்டதாகும்; இரண்டாவதாக, தற்போதைய அமர்வில், இந்து சட்டத் தொகுப்பு மசோதா போன்ற ஒரு முக்கியமான மற்றும் கருத்து வேறுபாட்டுக்குரிய நடவடிக்கையை விவாதிப்பதற்கு இந்த அவைக்குத் தகுதியாயிருக்கிறதா என்பதாகும்; அதுவும் இந்த அவையின் அதிக எண்ணிக்கையிலான உறுப்பினர் கள் சபையில் கலந்து கொள்ளவில்லை; கலந்துகொள்ள முடியாது, இது சொந்தக் காரணங்களுக்காக அல்ல, அல்லது கட்சிக் காரணங் களுக்காகவும் அல்ல, மாறாக நாட்டின் காரணங்களால் மற்றும் நாடு முழுமையின் நலனுக்காக; அவர்கள் பட்ஜெட் அமர்வுகளுக் காகத் தத்தமது மாநில சட்டப்பேரவைகளில் சுறுசுறுப்பாக ஈடுபட் டுள்ளனர். இந்த அவையில் கலந்துகொண்டு, இந்து சமுதாயம் முழுவதையும் பாதிக்கின்ற இந்தப் பிரேரணையின் விவாதத்தில் பங்கெடுத்துக் கொள்வதற்கு மிகவும் ஆவலாகவும், ஆர்வத்துடனும் இருந்தபோதிலும் அவர்களால் முடியவில்லை.

**மதிப்புக்குரிய உறுப்பினர்கள்:** இது ஓர் ஒழுங்குப் பிரச் சினையே அல்ல.

**திரு. துணை சபாநாயகர் :** இது ஓர் ஒழுங்குப் பிரச்சினையா, இல்லையா என்று முடிவு செய்வதற்கு நான் இங்கு இருக்கிறேன். நீங்கள் தயவு செய்து பொறுமையாக இருங்கள். அவர் தன்னுடைய வாக்கியத்தை விரைவில் முடித்துக் கொள்வார் என்று எதிர்பார்க் கிறேன்.

**திரு. ஜஸ்பத்ராய் கபூர் :** இந்த மசோதா பற்றிய விவாதம் தொடர வேண்டும் என்பது சம்பந்தமாக, இங்கு என்னுடைய நண்பர்

களில் பலர் மிகவும் பொறுமையிழந்துள்ளனர் என்பதை நான் அறிவேன். எனவே, ஐயா என்னுடைய நோக்கம், இந்த மசோதாவை சீர்குலைப்பதல்ல என்று முதலிலேயே இந்த அவைக்கு உறுதிகூற விரும்பினேன். அதனுடைய பல ஷரத்துக்கள் எனக்கு உடன்பாடான வையே. என்னுடைய நோக்கம் விஷயங்கள் சட்டபூர்வமாக நடை பெற வேண்டும் என்பதுதான். சரியான விஷயம் சரியான நேரத் தில், சரியான முறையில் நடத்தப்பெற வேண்டும். உங்களுக்குத் தெரியும்......

**திரு. துணை சபாநாயகர் :** ஒழுங்குப் பிரச்சினையை நான் அறிந்து கொண்டேன். இந்த மசோதாவை விவாதிப்பதற்கு இந்த அவை தகுதியுடையதல்ல என்று மதிப்புக்குரிய உறுப்பினர் கருது கிறார். இது முதலாவது விஷயம். இரண்டாவது விஷயம், இந்த அவையில் இருக்க வேண்டுமென்று அவர் விரும்புகிற சில உறுப் பினர்கள் இங்கு இல்லை. இந்த இரண்டில் எதுவும், இந்த மசோதா பற்றிய விவாதம் தொடர்ந்து நடைபெறுவதற்கு எதிரான ஓர் ஒழுங்குப் பிரச்சினை அல்ல. இது இறையாண்மை படைத்த ஒரு சட்டப் பேரவை. அது விரும்பும் எந்த மசோதாவையும் நிறைவேற்று வதற்குத் தகுதியுடையது. ஒழுங்குப் பிரச்சினையை நான் கேட்டறிந் தேன். அதற்கு ஆதரவாக மேற்கொண்டு எந்த வாதங்களையும் கேட்பதற்கு நான் விரும்பவில்லை. சில உறுப்பினர்கள் இங்கு இல்லாததைப் பொறுத்தமட்டிலும், மாகாணங்களிலிருந்தும், சுதேச சமஸ்தானங்களிலிருந்தும் பல உறுப்பினர்கள் இங்கு பிரசன்னமாகி யிருக்க முடியவில்லை என்பது மெய்யே. ஆனால் அவர்கள் எப் பொழுது வேண்டுமானாலும் இங்கு வந்து, கலந்து கொள்வதற்கு அவர்களுக்கு உரிமை இருக்கிறது.

**பாபு ராம்நாராயண் சிங்** (பீஹார் பொது) : ஐயா, நான் பேச விரும்புவதெல்லாம்......

**திரு. துணை சபாநாயகர் :** இந்த அவைத்தலைவர் மற்றும் இந்த அவையைப் பொறுத்தமட்டிலும், அத்தகைய எந்த ஆணை யும் விடுக்கப்படவில்லை, எனவே அவை தனது அலுவல்களைத் தொடர்ந்து நடத்துவதற்குத் தகுதியுடையதாகும். மதிப்புக்குரிய உறுப்பினர்கள் எந்த சமயத்திலும் இங்கு வந்து விவாதத்தில் பங்கெடுத்துக் கொள்ளலாம். இந்த ஒழுங்குப் பிரச்சினையை நான் நிராகரிக்கிறேன்.

**பாபு ராம்நாராயண்சிங் :** உங்களுக்கு எல்லா மரியாதையும் அளித்து.......

**மதிப்புக்குரிய உறுப்பினர்கள் :** அமைதி, அமைதி.

**திரு. துணைத் தலைவர் :** மேற்கொண்டு எதையும் நான் கேட்கமாட்டேன்.

**பாபு ராம்நாராயண்சிங் :** உங்களுடைய...... அளித்த முந்திய தீர்ப்பு...

**திரு. துணை சபாநாயகர் :** முந்திய தீர்ப்புகள் அனைத்தையும் நான் பரிசீலனை செய்தேன். அவை இப்பொழுது இங்கே என்னிட மிருக்கின்றன.

**திரு. வி.எஸ். சர்வாத்தே** (மத்திய பாரத்) : நானும் ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புவதற்கு விரும்புகிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** அது ஓர் ஒழுங்குப் பிரச்சினையா?

**திரு. பி.எஸ். சர்வாத்தே :** ஆம்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினர் தயவு செய்து ஒழுங்குப் பிரச்சினையை சுருக்கமாகக் கூறுவீர்களா?

**திரு. வி.எஸ். சர்வாத்தே :** நான் மிகவும் சுருக்கமாக எடுத்துக் கூறுகிறேன். என்னுடைய ஒழுங்குப் பிரச்சினை இதுதான் : இந்த மசோதாவின் நோக்கங்களுக்கு வெளியீடு சம்பந்தமான ஷரத்துக்கள் திருப்திகரமாக இல்லை. அந்த ஷரத்துக்கள் கடைப்பிடிக்கும்படி யாகத் தலைவர்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். விதி எண். 20ஐப் பற்றி நான் குறிப்பிடுகிறேன். அது இவ்வாறு கூறுகிறது: ''ஒரு மசோதா அறிமுகம் செய்து வைக்கப்பட்ட பின்னர், கூடிய விரைவில், அது ஏற்கனவே பிரசுரம் செய்யப்படாமலிருந்தால், உடனே கெஜட்டில் வெளியிடப்பட வேண்டும்.'' ஒரு பொறுக்குக் குழுவின் அறிக்கை திருத்தப்பட்ட மசோதாவுடன் சேர்த்து வெளியிடப்பட வேண்டும் என்ற ஒரு ஷரத்தும் இருக்கிறது. இது சம்பந்தமாக என்னுடைய விண்ணப்பம் இதுதான்: அந்த மசோதா முதலில் 1947 ஏப்ரலில் - சுதந்திர தினத்திற்கு முன்னால் வெளியிடப்பட்டது.

அதற்குப் பின்னர் இந்தியாவின் அரசியல் கட்டமைப்பு மாற்ற மடைந்தது; மேம்பட்ட முறையில் மாற்றமடைந்தது. நான் உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்பும் விஷயம் இதுதான் : அப்போதைய பிரிட்டிஷ்-இந்தியாவின் ஒரு பகுதியாக இல்லாத இந்திய சமஸ்தானங்கள் இந்த மசோதாவினால் பாதிக்கப்படவில்லை. அதற்குப் பின்னர் சில சமஸ்தானங்கள் இணைந்தன. சில சமஸ்தானங்கள் 1948 ஆகஸ்டில் எல்லா விஷயங்களிலும் இந்திய யூனியனுடன் இணைந்தன. இது மசோதா வெளியிடப்பட்டதற்குப் பின்னர் நடந்தது. இந்த சமஸ்தானங்களின் ஓர் உடன்பாடு 1948 ஆகஸ்டில் ஏற்பட்டது என்பதைத் தலைவர் அறிவார்.

அந்த உடன்பாட்டின் பயனாக, இப்பொழுது சமஸ்தானங்கள், மத்திய அரசு, தனது தனி அதிகார வரம்புக்குள் அல்லது கூட்டு அதிகார வரம்புக்குள் நிறைவேற்றுகின்ற எந்த சட்டத்திற்கும் தாமாகவே கட்டுப்பட்டவையாகும். எனவே, எந்த மசோதாவினாலும் பாதிக்கப்படும் சம்பந்தப்பட்ட சமஸ்தானங்களது மக்களின் உரிமைகளைப் பாதுகாப்பதும், காபந்து செய்வதும் தலைவரது கடமை என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இதனுடைய நோக்கம் இரண்டு வகைப்பட்டது. வெளியிடப்படுவதைக் கடமையாக்குகிற இத்தகைய ஷரத்து எந்த மசோதாவினாலும் பாதிக்கப்படும் வாக்காளர்கள் அல்லது மக்கள் அது குறித்து தமது பிரதிபலிப்புகளை, அபிப்பிராயங்களை மற்றும் தமது உணர்வுகளை வெளிப்படுத்துவதற்கு வகை செய்கிறது. இது ஜனநாயகத்தின் ஓர் அடிப்படையான கோட்பாடு ஆகும் - அதாவது, பாதிக்கப்படக்கூடிய மக்களுக்கு அது சம்பந்தமான தமது கருத்தை வெளிப்படுத்துவதற்கு ஒரு வாய்ப்பைக் கொடுத்தாலன்றி, எந்த ஒரு மசோதாவும் நிறைவேற்றப்படக்கூடாது. இரண்டாவதாக, இவ்வாறு வெளியிடுவதன் நோக்கம், இது குறித்துத் தமது தொகுதிகளின் வாக்காளர்கள் என்ன கருதுகிறார்கள் என்பதை இந்தப் பேரவையின் உறுப்பினர்கள் தெரிந்து கொள்வதற்கு ஒரு வாய்ப்பை ஏற்படுத்துவதாகும். இங்குள்ள உறுப்பினர்கள் தமது தனிப்பட்ட கருத்துக்களை எடுத்துக் கூற வேண்டியது அவர்களது கடமையாகும் என்பதை நான் எடுத்துக் கூறவேண்டிய அவசியமில்லை. முக்கியமான விஷயங்கள் விவாதத்திற்கு வரும்போது, அது சம்பந்தமாகத் தமது தொகுதி வாக்காளர்களின் கருத்துக்களை அவர்கள் பிரதிபலிக்க வேண்டும். விவரங்கள் அல்லது சிறிய பிரச்சினைகளைப் பொறுத்த மட்டிலும் தமது கருத்துக்களை எடுத்துக்கூறுவதற்கு உசிதம் போல் செய்ய அவர்களுக்குத் தன் விருப்புரிமை உண்டு. ஆனால் ஒரு

மசோதா வாழ்க்கை முழுவதையும், சமுதாயக் கட்டமைப்பு முழுவதையும் பாதிக்கும்போது, அத்தகைய விஷயங்களில், அத்தகைய ஜீவாதாரமான விஷயங்களில், தமது தொகுதி வாக்காளர்களின் கருத்துக்களைக் கண்டறிந்து, இங்கு அவற்றை சரியாகப் பிரதிபலிக்க வேண்டியது உறுப்பினர்களின் கடமையாகும். தாங்கள் என்ன கருதுகிறார்கள் என்று அவர்கள் கூறக்கூடாது. தமது தொகுதி வாக்காளர்கள் என்ன கருதுகிறார்கள் என்பதையே அவர்கள் கூற வேண்டும். இந்த நோக்கத்திற்காக, இந்த மசோதா வெளியிடப்பட வேண்டியது அவசியமாகும். கெஜட்டில் (அரசிதழில்) இந்த மசோதா வெளியிடப்பட்டது மெய்யே. ஆனால், இந்திய யூனியனுடன் சேர்ந்து கொள்ளுகின்ற சமஸ்தானங்களின் மற்றும் இணைந்து கொள்ளும் சமஸ்தானங்களின் மக்கள் ஆழமாக ஆய்வு செய்கின்ற நிலையிலுள்ள சமயத்தில் இது வெளியிடப்படவில்லை. இந்த மசோதாவுக்கு அது தேவையாகும். எனவே, அந்த மக்கள் சம்பந்தப்பட்ட வரையிலும் அது சரியாக வெளியிடப்பட்டதாகக் கருத முடியாது என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இப்பொழுது, அவர்களின் நலன்களை அவைத் தலைவர் பாதுகாக்கவிருப்பதால், மசோதா விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படுவதற்கு முன்னதாக அது வெளியிடப்படுவதற்கு அவைத்தலைவர் ஆணையிட வேண்டுமென்று நான் வேண்டிக்கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் எழுப்பியுள்ள ஒழுங்குப் பிரச்சினைக்கு என்னுடைய பதில் இரு அம்சங்களைக் கொண்டது. முதலாவதாக, அவையில் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன்னதாக, எந்த மசோதாவும் சுற்றுக்கு விடப்படுவதற்காக வெளியிடப்படுவதற்கு இந்த அவைக்கு ஒருபோதும் கட்டாயம் (கடப்பாடு) ஏற்பட்டதில்லை. விசேஷ சந்தர்ப்பங்களில் மட்டுமே, அவையில் ஒரு தீர்மானத்தின் வாயிலாகவோ, அல்லது அரசு ஒரு நிர்வாக உத்தரவின் மூலமோ, மசோதா மிகவும் முக்கியமானதாகையால், பொது மக்களின் கருத்து கேட்கப்பட வேண்டும் என்று விரும்பினால், பொதுமக்களின் கருத்து வரவேற்கப்படுகிறது. அத்தகைய உரிமையோ, சட்டப்பேரவை அல்லது அரசுக்கு அத்தகைய கடப்பாடோ ஏதுமில்லை; எனவே, அந்தக் கருத்து நிலையிலிருந்து பார்க்கும்போது, எழுப்பப்பட்ட ஒழுங்குப் பிரச்சினை, ஒழுங்குப் பிரச்சினையே அல்ல.

ஒழுங்குப் பிரச்சினை சம்பந்தமாக என்னுடைய இரண்டாவது விண்ணப்பம் என்னவெனில், இந்த மசோதாவின் செயல்பாட்டை

இந்தியாவின் மாகாணங்களுக்கு மட்டுமே என்று திட்டமிட்டு நாம் வரையறுத்துள்ளோம். மேலும், இந்த மாகாணங்களைப் பொறுத்த மட்டிலும், மூன்று தடவைகள் அபிப்பிராயம் கேட்டுப் பெறப் பட்டுள்ளது. எனவே நான்காவது தடவையாக, பொதுஜன அபிப் பிராயத்தைக் கோரிப் பெறுவதில் மேற்கொண்டு எந்தப் பயனும் ஏற்படப்போவதில்லை என்று கருதுகிறேன். இந்த மசோதாவை இந்திய சமஸ்தானங்களுக்கு விஸ்தரிக்கும் சந்தர்ப்பம் வரும்போது இந்த சட்டப்பேரவை - அதன் முன்பு அல்லது அன்றைய அரசின் முன்பு ஒரு முறையான பிரேரணை வைக்கப்பட்டால், இந்திய யூனியனுடன் இணைந்துள்ள சமஸ்தானங்களின் விருப்பங்களை யும் எண்ணங்களையும் கலந்தாலோசிப்பதற்கு கவனம் எடுத்துக் கொள்ளப்படும் என்பதில் ஐயமில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** மாண்புமிகு சட்டத் துறை அமைச்சர் கூறியதுடன் நான் உடன்படுகிறேன். அதாவது, இந்த மசோதாவின் வீச்சு, முதலாவதாக, இந்தியாவின் மாகாணங்களுக்கு மட்டுமே உரியதாகும்; இந்தியாவுடன் இணையும் சமஸ்தானங்களுக்கு இது விஸ்தரிக்கப்படுமா என்பது மிகவும் பிரச்சினைக்கு உரிய ஒரு விஷயமாகும். அப்படி விஸ்தரிக்கப்பட்டால் இந்தியாவுடன் இணை வதற்கான எந்த நிபந்தனைகள், நிலைமைகளின் அடிப்படையில் இது நடைபெறுகிறது என்பதைப் பார்க்க வேண்டும். அவை இந்திய யூனியனுக்குள் வருகின்றனவா, இல்லையா என்பதை அவை முடிவு செய்யவேண்டிய தருணம் வந்துவிட்டது. மற்றொரு விஷ யத்தைப் பொறுத்தமட்டிலும், இந்த அவையினால் ஒரு பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டாலொழிய, மசோதாவை சுற்றுக்கு விட வேண்டிய கட்டாயம் எதுவுமில்லை. பொறுக்குக்குழு இந்த விஷ யத்தைப் பரிசீலனை செய்தபின், அரசின் கெஜெட்டில் மீண்டும் வெளியிடப்படுவதை அவசியமாக்கும் வகையில் மசோதாவில் சாராம்சமான மாற்றங்கள் ஏதும் செய்யப்படவில்லை என்ற முடிவுக்கு வந்தது. இந்தக் காரணங்களினால், ஒழுங்குப் பிரச்சினையை நிராகரிக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, என்னுடைய பிரேரணையின்மீது நான் பேசத் தொடங்கும் முன்பு......... விரும்பத் தக்கது என்று நான் கருதுகிறேன்.

**திரு. பி. தாஸ்** (ஒரிஸ்ஸா : பொது) : எல்லாத் தரப்பிலிருந்தும் இடையூறு ஏற்படுகிறது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஒழுங்குப்

பிரச்சினையை எழுப்புகிறார்கள். திரு. நசிருத்தீன் அகமது ஆறு மாதங்களுக்கு முன்னர் ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பினார்.

**திரு. நசிருத்தீன் அகமது** (மேற்கு வங்கம் : முஸ்லீம்) : அது ஒரு வேறுபட்ட ஒழுங்குப் பிரச்சினை. என்னுடைய மதிப்புக்குரிய நண்பர்களுக்குச் சிறிது பொறுமை வேண்டும்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினர்கள் ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புவதற்கு முன்னால் தயவு செய்து நன்கு சிந்திக்க வேண்டும் என்று மட்டுமே நான் கூற முடியும். அது ஒரு தாமதப்படுத்தும் பிரேரணையாக மாறினால், அவையின் விமர்சனத்தை அவர்கள் எதிர்கொள்ள நேரிடும் என்பதை அவர்கள் சிந்திப்பார்கள் என்றும் எதிர்பார்க்கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** என்னுடைய ஒழுங்குப் பிரச்சினை தாமதப்படுத்தும் தன்மையுடையதல்ல.

**திரு. துணை சபாநாயகர் :** ஓர் ஒழுங்கு பிரச்சினையை எழுப்புவதற்கு எந்த மதிப்புக்குரிய உறுப்பினருக்கும் உரிமை உண்டு. ஒரு மதிப்புக்குரிய உறுப்பினர், நியாயமானதாகவும் முறையாகவுமுள்ள எத்தனை ஒழுங்குப் பிரச்சினைகளை வேண்டுமானாலும் எழுப்பலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஒழுங்குப் பிரச்சினைக்கு ஆட்சேபம் செய்வதுதான் தாமதப்படுத்தும் நோக்கமுடையதாகும். என்னுடைய ஒழுங்குப் பிரச்சினை இதுதான்: மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் இந்தப் பிரேரணை குறித்து ஏற்கனவே பேசிவிட்டார். பிரேரணையின் முதற் பாகத்தை அவர் பூர்த்தி செய்துவிட்டார். பின்னர் அடுத்த கட்டங்கள் தொடங்கின. விவாதத்தின் முடிவில் பதில் சொல்வதற்கு அவருக்கு உரிமையுண்டு. இந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படவேண்டுமென்று பிரேரணை செய்யப்பட்டு, 1948 ஆகஸ்டு 31ம் தேதியன்று அது சம்பந்தமான உரையும் நிகழ்த்தப்பட்டது. நிகழ்ச்சி நிரலில் திருத்தங்களின் ஒரு பட்டியலும் வழங்கப்பட்டுள்ளது. நாம் நேராக நிகழ்ச்சி நிரலை எடுத்துக் கொள்ள வேண்டும், பின்னர் ஒரு பிரேரணை செய்யப்படும்போது, மாண்புமிகு அமைச்சருக்கு, பதில் சொல்லும் உரிமையும் நிச்சயமாக உண்டு. முடிவில், பதில் சொல்வதற்கான ஒரு பொதுவான உரிமையும்

உண்டு. இந்தக் கட்டத்தில், பிரேரணை சம்பந்தமாக மாண்புமிகு அமைச்சர் ஓர் இரண்டாவது உரை நிகழ்த்த முடியாது.

**திரு. துணை சபாநாயகர் :** 1948 ஆகஸ்டு 31ம் தேதிய நடவடிக்கைகளிலிருந்து கீழ்வருவனவற்றை நான் காண்கிறேன்:

> ''மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (சட்டத்துறை அமைச்சர்) : ஐயா, நான் பிரேரணை செய்கிறேன்:'' இந்து சட்டத்தின் சில பிரிவுகளைத் திருத்துவதற்கும், தொகுத்தமைப்பதற்குமான மசோதா - பொறுக்குக் குழுவினால் அறிக்கை செய்தபடி விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.''
>
> திரு. நசிருத்தீன் அகமது (மே.வங்கம் : முஸ்லீம்) : ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை.
>
> திரு. சபாநாயகர்: மாண்புமிகு அமைச்சரின் உரையை முதலில் நான் கேட்கிறேன். பின்னர் ஒழுங்குப் பிரச்சினையை எடுத்துக் கொள்கிறேன்.
>
> மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நிகழ்ச்சி நிரலிலுள்ள இதர அரசுப் பணிகளின் அவசரத் தன்மையை முன்னிட்டும், அதற்கு முன்னுரிமை அளிக்கவேண்டுமென்று அரசு கருதுவதாலும், என்னுடைய பிரேரணைக்கு ஆதரவாக நான் உரை நிகழ்த்த விரும்பவில்லை; ஏனெனில், என்னுடைய பிரேரணைக்கு ஆதரவாக நான் ஓர் உரை நிகழ்த்தினேன் என்றால், அது நிச்சயமாக ஒரு விவாதத்திற்கு இட்டுச் செல்லும் என்பது தெளிவு, அது, அரசின் பெருமளவு நேரத்தை எடுத்துக்கொள்வதில் போய் முடியும். அவை முடிவடைவதற்கு ஏற்கனவே, ஒரு சில நாட்களே எஞ்சியுள்ளன. எனவே, இந்தப் பிரேரணை நிறுத்தி வைக்கப்பட்டு, பேரவையின் அடுத்த அமர்வில் மேற்கொண்டு பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படுவதற்கு அனுமதிக்குமாறு உங்களை வேண்டுகிறேன்.''

இதை முன்னிட்டு, மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் மேற்கொண்டு பேசுவதற்கு உரிமையுடையவராகிறார். இந்த ஒழுங்குப் பிரச்சினை எழுப்பப்பட்டதற்காக நான் மிக மிக வருந்துகிறேன். இது ஒரு தாமதப்படுத்தும் பிரேரணையாகும்.

**மண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நான் சமர்ப்பித்துள்ள பிரேரணைக்கு எதிராக சமர்ப்பிக்கப்பட்டுள்ள 16 பிரேரணைகள் சம்பந்தமாக நீங்கள் என்ன நடைமுறையைக் கடைப்பிடிக்கப் போகிறீர்கள் என்பது எனக்குத் தெரிந்தால் அது என்னுடைய பணிக்குப் பெருமளவு உதவிகரமாக இருக்கும். இதைத் தொடர்ந்த காலகட்டத்தில் அவற்றைப் பற்றி நான் பேசவிருக்கிறேன். இந்தப் 16 பிரேரணைகள் மூன்று வெவ்வேறு இனங்களில் அமைகின்றன.

பொதுஜனக் கருத்தைத் தெரிந்து கொள்வதற்காக இந்த மசோதா மேற்கொண்டும் சுற்றுக்கு விடவேண்டும் என்று சில பிரேரணைகள் கூறுகின்றன. சில பிரேரணைகள், இந்த மசோதாவை, இந்த மசோதா பற்றி ஏற்கனவே அறிக்கை சமர்ப்பித்த பொறுக்குக் குழு அல்லாத வேறு பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்ப வேண்டும் என்று கூறுகின்றன. ஏற்கெனவே அறிக்கை சமர்ப்பித்த அதே பொறுக்குக் குழுவிடம் மறு ஆய்வுக்காக இந்த மசோதா மீண்டும் அனுப்பப்பட வேண்டுமென்று சில பிரேரணைகள் கூறுகின்றன.

மேற்கொண்டு இரண்டு இதர பிரேரணைகள் ஒன்று - என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. பிரபு தயாள் ஹிம்மத் சிங்கா பெயரிலும், மற்றொன்று, என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. விஸ்வநாத தாஸ் பெயரிலும் வந்துள்ளன. இந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன்னால், இந்தியாவுடன் இணைய முன்வந்திருக்கும் சமஸ்தானங்களில் வாழும் மக்களிடையில் அது சுற்றுக்கு விட வேண்டும் என்று இந்தப் பிரேரணைகள் கூறுகின்றன. இந்த இரண்டு பிரேரணைகள் சம்பந்தமாக, அண்மையில் என்னுடைய மதிப்புக்குரிய நண்பர், திரு. வி.எஸ். சர்வாத்தே, ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பியிருந்தார். அதை நீங்கள் பைசல் செய்து விட்டீர்கள். எனவே, பிரேரணைகள் எண் 7 மற்றும் எண் 8 இன்றைய நிகழ்ச்சி நிரலிலிருந்து நீக்கப்பட்டு விட்டதாகக் கருதப்பட வேண்டும். இதர பிரேரணைகள் அப்படியே இருக்கின்றன. இந்தப் பிரேரணைகளை என்னுடைய பிரேரணையுடன் வைத்து ஏககாலத்தில் விவாதிக்கப்பட வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களா என்று நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அப்படியெனில், இறுதியில் ஒவ்வொரு பிரேரணையும் அவையின் முன்னே தனித்தனியாக வைக்கப்படலாம் அல்லது என்னுடைய பிரேரணைக்கு முன்னதாக இவற்றை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நீங்கள் கருதுகிறீர்களா; அதன் மூலம், அவற்றைப் பைசல் செய்து விட்டு, நான் சமர்ப்பித்துள்ள பிரேரணை மீதான என்னுடைய உரைக்கு இடமளிக்கலாம் என்று நீங்கள் கருதுகிறீர்களா? என்று நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

சமர்ப்பிக்கப்பட்டுள்ள பிரேரணைகள் சம்பந்தமாக நான் ஒன்றிரண்டு குறிப்புகளைக் கூறமுடியும். சில பிரேரணைகளை முன்மொழிந்துள்ளவர்கள், தாங்களாகவே அவற்றைப் பிரேரிப்பதில்லை என்று விருப்பம் தெரிவித்தாலொழிய அவற்றை நீங்கள் சபையின் முன் நிச்சயமாக வைப்பீர்கள் என்பதை நான் ஒப்புக்

கொள்கிறேன். சில பிரேரணைகள் உங்களுடைய உசிதத்தின் கீழ் இருக்கின்றன; அவை தாமதப்படுத்துவதற்கான பிரேரணைகள் அல்ல, அவை சில சாராம்சமான குறிப்புகளைக் கொண்டுள்ளன என்று நீங்கள் திருப்தியடைந்தாலொழிய, இந்தப் பிரச்சினைகளை ஆய்வு செய்த முந்திய சபாநாயகர்கள் கொடுத்துள்ள தீர்ப்புகளுக்கு ஏற்ப, இவற்றை சபையின் முன்வைக்கவேண்டிய அவசியமில்லை. ஏனெனில், அந்தப் பிரேரணைகளுக்கு சாராம்சமான ஆதாரங்கள் உள்ளன, அவை தாமதப்படுத்தும் பிரேரணைகள் அல்ல என்று சபாநாயகர் திருப்தியடைய வேண்டும். உதாரணமாக, அந்த மசோதா இப்பொழுது பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படக்கூடாது, ஒரு பிந்திய கட்டத்தில் அதைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளலாம் என்பது அந்தப் பிரேரணைகளில் ஒன்று ஆகும். இதுவரையிலும் சபாநாயகரின் தீர்ப்புகளின்படி, எது உங்களுடைய உசிதத்தின் கீழ் வரும்; என்னுடைய மதிப்புமிக்க நண்பர்கள் முன்வைத்த காரணங்கள் சாராம்சமான காரணங்கள் என்று நீங்கள் திருப்தியடைந்தால், நீங்கள் அந்தப் பிரேரணையை சபைக்கு முன் வைக்கலாம். உதாரணமாக, பொறுக்குக் குழுவின் மறு ஆயுவுக்கு விடப்பட வேண்டுமென்று ஒரு பிரேரணை அத்தகையவற்றில் ஒன்றாகும். தீர்ப்புகளின் இந்த இரண்டு தொகுதிகளை நீங்கள் தயவுசெய்து திருப்பிப் பார்த்தால் - நிச்சயமாக நீங்கள் ..........

**திரு. துணை சபாநாயகர் :** நான் செய்ய எண்ணியுள்ளது இதுதான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்த விஷயத்தில் உங்களுடைய வழிகாட்டுதலைப் பெற விரும்புகிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** இந்த விஷயத்தைப் பற்றியும் சமர்ப்பிக்கப்பட்டுள்ள பல பிரேரணைகள் பற்றியும் நான் ஆலோசித்தேன். பிரேரணைகள் எண் 1 எண் 2ஐப் பொறுத்தமட்டிலும் - பொறுக்குக் குழுவினால் திருத்தப்பட்ட மசோதா வாபஸ்பெறப்பட வேண்டும் என்று பிரேரணை எண் 1 கூறுகிறது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா** (கிழக்குப் பஞ்சாப் : பொது) : நான் இந்தக் கட்டத்தில் பிரேரேபிக்க விரும்பவில்லை; பிரேரேபிக்க எனக்கு உரிமையில்லை என்று அல்ல.

**திரு. துணை சபாநாயகர் :** அப்படியெனில் அது முறையானதா அல்லது முறையற்றதா என்ற பிரச்சினையைப் பரிசீலிக்க

வேண்டிய அவசியமில்லை. இரண்டாவது பிரேரணை என்ன வெனில்.....

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** இந்தக் கட்டத்தில் அதை நான் பிரேரேபிக்கவில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** 1951-ஆம் ஆண்டு பட்ஜெட் அமர்வு வரை மசோதாவைப் பரிசீலனை செய்வதை ஒத்திப்போட வேண்டும் என்ற மாஸ்டர் நந்தலாலின் திருத்தம் உள்ளது.

**மாஸ்டர் நந்தலால்** (கிழக்கு பஞ்சாப் : பொது) : நான் அதைப் பிரேரேபிக்கவில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** இந்த மூன்று வாபஸ் பெறல்கள் நிலைமையைத் தெளிவாக்கியுள்ளன. அவை எந்தப் பெயரால் அழைக்கப்பட்ட போதிலும், இந்த மூன்று பிரேரணைகளும் சாராம் சத்தில், விவாதத்தை ஒத்திப்போட வேண்டும் என்பதேயாகும். மாண்புமிகு சட்ட அமைச்சர் இந்த மசோதாவின் பிரேரணையாளர், தமது உரையைத் தொடங்குவதற்கு முன்னதாக இந்தப் பிரேரணை களின் பிரேரேணையாளர்கள் எழுந்து நின்று, இந்தப் பிரேரணை களை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்துவார்கள் என்று நினைத்தேன்; ஏனெனில், அவர்களது பிரேரணைகள் பைசல் செய்யப் படுவதற்கு முன்னால், மதிப்பிற்குரிய (மசோதாவின்) பிரேரணை யாளர் பேசுவதற்கு அனுமதிக்கப்பட முடியாது. எனவே, அவை பிரேரணை செய்யப்படாததால், நான் பேசாமல் இருந்துவிட்டேன். அவை வாபஸ்பெற்றுக் கொள்ளப்பட்டு விட்டன என்பது இப் பொழுது தெளிவாகி விட்டது. பிற பிரேரணைகள், அதாவது மீண்டும் சுற்றுக்கு விடப்பட வேண்டும், அல்லது பொறுக்குக் குழுவுக்கு மீண்டும் அனுப்ப வேண்டும் என்ற பிரேரணைகள் - அவற்றின் தன்மை எப்படியிருந்தபோதிலும் - விதிகளின்படி, எந்த நபரும் அதைப் பிரேரணை செய்வதற்குத் தகுதியுடையவராகிறார். அதுபற்றி அவைதான் முடிவு செய்ய வேண்டும்.

பொறுக்குக் குழுவின் பிரேரணைகளைப் பொறுத்தமட்டிலும் முதல் முதலாக, அவற்றின் தேவை பற்றி நான் திருப்தியடைய வேண்டும். அது தவிர, மீண்டும் சுற்றுக்கு விடுவதைப் பற்றிய ஒரு பிரேரணை இருக்கிறது. அது சம்பந்தமாக சில தேவைகள், நான் அறிந்தவரையில் எந்த விதியிலும் அல்லது தீர்ப்புகளிலும் வரையறுத்துக்

கூறப்படவில்லை. எனவே, இந்தக்கட்டத்தில், மசோதாவை முன் மொழிபவரைத் தம் உரையை நிகழ்த்தும்படி அனுமதிக்க நான் விரும்புகிறேன். அவர் தமது உரையை முடித்த பின்னர், பொறுக்குக் குழு மற்றும் சுற்றுக்கு விடுதல் சம்பந்தமான பிரேரணைகளை பிரசங்கம் இல்லாமல் அனுமதிக்கிறேன். பின்னர், எல்லாப் பிரே ரணைகள் மீதும் விவாதம் தொடர்ந்து நடைபெறும். அவற்றை ஒன்றுக்குப்பின் மற்றொன்றாக இந்த அவையின் முன் நான் வைக்கிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, உங்க ளுடைய வழிகாட்டுதலுக்கு நான் கடமைப்பட்டுள்ளேன். வழக்கம் போல், பொறுக்குக் குழுவினால் அறிக்கை செய்யப்பட்டபடி, ஒரு மசோதாவைப் பரிசீலனை செய்வதற்கான ஒரு பிரேரணையை முன்வைக்கும்போது, முதலாவதாக, பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப் பட்ட மூல மசோதாவில் பொறுக்குக் குழுவினால் செய்யப்பட்ட மாற்றங்களை அவையின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டியது பொறுக்குக் குழுவின் தலைவருடைய கடமையாகும். முதலாவதாக, அந்த நடைமுறையைக் கடைப்பிடிப்பதற்கு நான் உத்தேசித்துள்ளேன்.

ஐயா, மசோதாவின் முதல் பகுதி திருமணம் மற்றும் விவாக ரத்து பற்றியதாகும். மசோதாவின் இந்தப் பகுதியைப் பொறுத்த மட்டிலும் மணவாழ்க்கைக்குரிய உரிமைகளை மீட்டளிப்பது மற்றும் நீதிமன்றத் தீர்ப்பின்படி கணவன் - மனைவி பிரிந்து வாழ்வது சம்பந்தமான இரு ஷரத்துக்களை பொறுக்குக் குழு சேர்த்துள்ளது. இந்த ஷரத்துக்கள் குறிப்பாக, மூல மசோதாவில் இருக்கவில்லை. 1869ம் வருடத்திய இந்திய விவாகரத்து சட்டத்தைக் குறிப்பிடுவ தோடு மூலமசோதாவைத் தயாரித்தவர்கள் திருப்திதயடைந்து விட் டார்கள். அந்தச் சட்டம் மணவாழ்க்கைக்குரிய உரிமைகளை மீட்டளிப்பது மற்றும் நீதிமன்றத் தீர்ப்பின்படி கணவன் - மனைவி பிரிந்து வாழ்வது சம்பந்தமான ஷரத்துக்களைக் கொண்டிருந்தது. இந்த மசோதாவில் இந்திய விவாகரத்து சட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டாலே போதுமானதென்றும், அந்த சட்டத்திலுள்ள இந்த இரண்டு ஷரத்துகளை செயல்படச் செய்வதற்கு அதைப் பற்றிக் குறிப்பிட்டாலே போதுமென்றும் இந்த மசோதாவின் மூல நகலைத் தயாரித்தவர்கள் கருதினர்; எனவே அதன் விளைவாக இந்த ரண்டு விஷயங்களை இந்தச் சட்டத்தில் வெளிப்படையாகக் குறிப்பிட

* அ.நி. (சட்டப்பேரவை) டி. தொகுதி II, பாகம் II, 1949 பிப்ரவரி 24, பக்கம் 826-43.

வேண்டிய அவசியமில்லை என்றும் அவர்கள் கருதினர். பொறுக்குக் குழு இதற்கு மாறாக நினைத்தது. இது இந்து சட்டத்தின் ஒரு முழு தொகுப்பாக இருக்கப் போவதால், இதை சட்டத்தைப் பூர்த்தி யடையா வண்ணம் விட்டு வைப்பது தவறென்றும், எனவே சட்டத் தில் அதை வெளிப்படையாகக் குறிப்பிட வேண்டும் என்றும் கருதினர். எனவே, இந்த விஷயத்தை இந்திய விவாகரத்து சட்டத்தை குறிப் பிடுவதன் மூலம் அதை அமல்படுத்தச் செயவதற்கு விட்டு விடுவ தற்கு பதிலாக, இந்து சட்டத்திலேயே, இந்த விஷயங்கள் சம்பந்த மாக இந்திய விவாகரத்துச் சட்டத்தில் அடங்கியுள்ள ஷரத்துக்களை இந்த மசோதாவிலேயே சேர்த்துக் கொள்வது விரும்பத்தக்கது என்று அவர்கள் நினைத்து, இந்த இரு விஷயங்கள் சம்பந்தமான ஷரத் துக்களை சேர்த்து, திருமணம் மற்றும் விவாகரத்து சம்பந்தப்பட்ட பகுதியை பொறுக்குக் குழு விரிவுபடுத்தியது. மூலமசோதாவுக்கும், பொறுக்குக் குழுவினால் வரையப்பட்ட மசோதாவுக்கும் இடை யில் உண்மையில் மாற்றமில்லை என்பதை காணமுடியும். இந்திய விவாகரத்து சட்டத்தைக் குறிப்பிடுவதன் மூலம் செய்யப்பட்ட விஷயம், சட்டத்தில், இந்த விஷயங்கள் சம்பந்தமாகக் குறிப்பான பகுதிகளை சேர்த்ததன் மூலம் வெளிப்படையாகவும் ஆக்கபூர்வ மான முறையிலும் செய்யப்பட்டுள்ளது.

சுவீகாரம் எடுத்துக் கொள்வது சம்பந்தமாக, பொறுக்குக் குழு ஒரு சில புதிய மாற்றங்களைப் புகுத்தியுள்ளது. அவர்கள் செய்துள்ள முதலாவது மாற்றம், ஒரு தகப்பனார், தன்னுடைய மதத்தை மாற்றிக் கொண்டு இந்து அல்லாதவராக மாறிவிட்டதன் காரணமாக அவர் தகுதியிழந்தவராகிவிட்டால் ஒரு பையனை சுவீகாரம் கொடுப்பதற் குள்ள உரிமை தாயிக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. வேறு சொற்களில் கூறுவதெனில், தகப்பனார் இந்து மதத்திலிருந்து வேறு மதத்திற்கு மாறிச் சென்றுவிட்டால், அவர் தனது மகனை சுவீகாரம் கொடுப் பதற்கான உரிமை விஷயத்தில் தகுதியிழந்தவராகிறார் என்பது சட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. இதன் விளைவாக இந்த சூழ்நிலைமை களில், ஒரு பையனை சுவீகாரம் கொடுக்கும் அதிகாரம் தாயிக்குக் கொடுக்கப்படுகிறது. இது போன்றே, பையனின் தகப்பனார் உயி ருடன் இல்லாத நிலையில், அந்த விதவைத் தாயினால் தன் மகனை நிச்சயமாக சுவீகாரம் கொடுக்க முடியும். மீண்டும், விதவைத்தாய் இந்துவல்லாதவராக மாறிவிட்டால், மகனை சுவீகாரம் கொடுக்கும் தனது உரிமையை அவர் இழந்துவிடுகிறார் என்ற ஓர் இயலாமை யும் சேர்க்கப்பட்டுள்ளது.

பொறுக்குக் குழுவினால் செய்யப்பட்ட மற்றொரு மாற்றம், ஒரு பையனை சுவீகாரம் எடுத்துக் கொள்வதன் வெவ்வேறு முறைகள் சம்பந்தப்பட்டதாகும். இதுவரையிலும், சுவீகாரம் எடுத்துக்கொள் வதன் பல்வேறு முறைகள் இருந்துவருவதை அவை அறியும். ஸ்மிருதி களால் அங்கீகரிக்கப்பட்டுள்ள பிரதான சுவீகார வடிவமானது, **தாட்டகா** முறையிலான சுவீகாரமாகும். **தாட்டகா** முறையிலான சுவீகாரத்தோடுகூட, இந்தியாவின் பல்வேறு பாகங்களில் **கோதா** சுவீகாரம், **கிரித்திரிமா** முறையிலான சுவீகாரம் **துவையர்நுஷ்யாயான** சுவீகாரம் போன்ற வழக்கமான சுவீகார முறைகள் உள்ளன. சட்டத் தொகுப்பைத் தயாரித்துக் கொண்டிருக்கும்போது, மரபான பழக் கங்கள் வளர்வதற்கு இடமளிக்காதிருப்பது விரும்பத்தக்கது என்று பொறுக்குக் குழு கருதியது; ஏனெனில் மரபான பழக்கங்களை அனுமதிப்பதன் விளைவு சட்டத்தொகுப்பையே அரிப்பதற்கு இட்டுச் சென்று, சில காலத்திற்குப் பிறகு சட்டத் தொகுப்பையே செல்லாத தாக்கிவிடும். எனவே இந்த சட்டத்தின் கீழ் யாராவது சுவீகாரம் எடுத்துக் கொள்ள விரும்பினால், இந்த சட்டத் தொகுப்பின் ஷரத்து களுக்கு இசைவான முறையில்தான் சுவீகாரம் எடுத்துக்கொள்ள முடியும், அதற்கு **தாட்டகா** முறையான சுவீகாரம் மட்டுமே ஒரே வடிவமாகும், வேறு முறைகளில் சுவீகாரம் அனமதிக்கப்பட முடியாது என்று பொறுக்குக் குழு முடிவு செய்தது.

பின்னர், ஐயா, சுவீகாரம் எடுத்துக்கொள்வதற்கு முன்னதாக, யார் பெயரில் சொத்துக்கள் முதலீடு செய்யப்பட்டிருந்தனவோ, அந்த நபர்களை அந்த சொத்தின் உரிமையிலிருந்து விலக்குவதற்கு, சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்ட பையனுக்கு உள்ள உரிமைப் பிரச்சினைக்கு நாம் வருகிறோம். தற்போதுள்ள இந்து சட்டத்தின்படி, சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்ட பையன் - எந்தக் கட்டத்தில் அந்த சவீகாரம் நடைபெற்றிருந்தாலும் சரி - தகப்பனார் இறந்ததற்கு 40 ஆண்டுகளுக்குப் பிறகு கூட அவர் சவீகாரம் எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கக்கூடும் - அவனுடைய உரிமைகளில் காலம் எந்த மாற்றத் தையும் செய்வதில்லை - அவரை சுவீகாரம் எடுத்துக் கொண்ட விதவை, செய்திருந்த எந்த சொத்து மாற்றத்தையும் தள்ளுபடி செய்ய வழக்குப் பதிவு செய்வதற்கு அவருக்கு உரிமையுண்டு. இந்தக் குறிப்பிட்ட அம்சம் சம்பந்தமாக நிறைய வழக்குகள் நடை பெறுகின்றன. உண்மையில் இந்து சட்டத்தின் பல்வேறு அம்சங் களின் மீது, இந்துக்களிடையில் நடைபெறும் மொத்த வழக்குகளை ஒருவர் ஆய்வு செய்தால் சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்ட பையன் சொத்துக்களை மீட்டு எடுக்கும் பிரச்சினை மீதுதான் மிக அதிகமான

வழக்குகள் நடைபெற்று வருவதைக் காண முடியும் என்று நிச்சயமாகக் கருதுகிறேன். எனவே, இந்தப் பிரச்சினைக்கு நிரந்தரமானத் தீர்வுகாணப்பட வேண்டியது விரும்பத்தக்கதாகும். ராவ் குழு, சுவீகாரத்தை இரண்டு வகையாகப் பிரிக்கும் நடைமுறையைக் கைக்கொண்டது - தகப்பனார் மரணமடைவதற்கு மூன்றாண்டுகளுக்கு முன்னாலும், சட்டம் அமலுக்கு வருவதற்கு முன்னாலும் செய்யப்பட்ட சுவீகாரம்; மற்றும் சட்டம் இயற்றப்பட்டதற்குப் பின்னர் எடுத்துக் கொள்ளப்பட்ட சுவீகாரம், சுவீகாரம் எடுத்துக் கொள்ளும் தகப்பனார், இறப்பதற்கு மூன்றாண்டுகளுக்கு முன்னால் சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்டிருந்தால், இந்து சட்டத்தின் கீழ் சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்ட மகனுக்கு உள்ள மூல உரிமைகளுக்கு அந்தப் பையன் தகுதியுடையவனாகிறான் என்று அக்குழு வரையறுத்தது. ஆனால், (தகப்பனார் மரணமடைந்ததற்கு) மூன்றாண்டுகளுக்குப் பின்னர் சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்டிருந்தால், ஏற்கனவே செய்யப்பட்டிருந்த சொத்து மாற்றத்தைத் தள்ளுபடி செய்வதற்கு அவனுக்கு உரிமையில்லை.

இந்து சட்டத்தின்படி சுவீகாரம் செய்து கொண்டதன் விளைவாக ஏற்பட்ட இரண்டாவது விஷயம் என்னவெனில், அந்தப் பையன், விதவைத்தாயின் பெயரிலிருந்த சொத்து முழுவதையும் மீட்டு எடுத்துக் கொள்ள முடிந்தது. இதன் விளைவாக, அந்த சொத்திலிருந்து வரும் வட்டி முழுவதும் சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்ட பையனுக்கு வந்து சேர்ந்தது; அவன் ஓர் அர்த்தத்தில் ஓர் அந்நியனே யாவான்; அவன் சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்ட தந்தையின் குடும்பத்தினுள் வந்துவிட்ட கருத்து ரீதியான மாற்றத்தையும் பொருட்படுத்தாது, அவன் நடைமுறையில், இயல்பான குடும்ப உறுப்பினர்களுடனான தனது பந்தங்களை நீடித்துக் கொண்டிருந்தான். இதன் விளைவு என்னவெனில் சுவீகாரம் நடைபெற்றதற்குப் பின்னர், சுவீகாரம் எடுத்துக் கொண்ட தாய்க்கு, ஓர் இயல்பான மகனிடமிருந்து ஓர் இயல்பான தாய்க்குக் கிடைக்க வேண்டிய எந்த வகையான பாதுகாப்பும் பெறுவதற்குப் பதிலாக, புதிதாக சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்ட இந்தப் பையன் சொத்த முழுவதையும் எடுத்துக் கொண்டு ஓடிவிட்டான், அந்தத் தாய்க்கு ஜீவனாம்ச உரிமை தவிர வேறு எதுவும் கிடைக்கவில்லை. பெண்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது அது விரும்பத்தக்க நிலைமையல்ல என்று நாங்கள் நினைத்தோம். எனவே சில மாற்றங்கள் செய்யப்பட்டன. ராவ் குழுவில் முன்பு ஏற்றுக் கொள்ளப்பட்ட மூல வேறுபாடு (தனித்தன்மை) நீக்கப்பட்டு, வேறு ஒரு ஷரத்து

சேர்க்கப்பட்டது. அதன்படி, சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்ட மகனின் உரிமைகள், சுவீகாரம் எடுத்துக்கொண்ட தகப்பனாரின் மரணத்தேதியிலிருந்து அவனுக்குக் கிடைக்கும் என்பதற்குப் பதிலாக, சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்ட தேதியிலிருந்து கிடைக்கப் பெறும் என்று மாற்றப்பட்டது. எனவே, அவன் சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன்னதாக, செய்யப்பட்டுள்ள எந்தச் சொத்து மாற்றமும் அவனுடைய உரிமைக்கு அப்பாற்பட்டதாக்கப்பட்டது. அவனால் அதற்காக வழக்காட முடியாது.

நாங்கள் செய்த இரண்டாவது ஷரத்து என்னவெனில், சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்ட மகன், சுவீகாரத்தின் பயனாக, சுவீகாரம் எடுத்துக்கொள்ளும் தாய்க்கு சொத்தின் மீதுள்ள உரிமையைப் பூரணமாகப் பறிக்க முடியாது. மாற்றப்பட்ட வடிவத்தில் இது குறித்து மசோதா, கணவனை இழந்த மனைவியின் சொத்தில் ஒரு பாதி மட்டுமே, சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்ட மகனுக்குப் போய்ச் சேரும் என்று குறிப்பிடுகிறது. மற்றைய பாதி சொத்து, கணவனை இழந்ததாய், ஒரு மகனை சுவீகாரம் எடுத்துக்கொண்ட போதிலும், அந்தத்தாயின் வசத்திலேயே இருக்கும், அவர் அதைத் தொடர்ந்து அனபவித்து வருவார். இதன் விளைவாக, சுவீகாரம் எடுத்துக்கொள்வதைக் குழு அனுமதித்தது, ஏனெனில் குடும்ப வாரிசுகள் தொடர்ந்து நீடித்து இருப்பதற்காக சுவீகாரம் எடுத்துக் கொள்வது அவசியம் என்று இந்து சமுதாயம் கருதுகிறது. அதே சமயத்தில், சுவீகாரத்தின் விளைவாக அந்தத் தாய் முற்றாகப் பிச்சைக் காரியாக மாறாமல் இருப்பதற்கு நாங்கள் கவனம் எடுத்துக் கொண்டோம்.

**திரு. துணை சபாநாயகர் :** தேஷ்முக் சட்டத்தின் விளைவும் அதுதானே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இல்லை, அந்தச் சட்டத்தின்படி அவருக்கு ஜீவனாம்சம் மட்டுமே கிடைக்கும்.

**திரு. துணை சபாநாயகர் :** அவருக்கு சொத்தில் பாதிப் பங்கு கிடைக்கிறது

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்டவுடனே, சொத்து முழுவதும் மகனுக்குப் போய்ச் சேருகிறது.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை : பொது) : மகன் பின்னர்தான் வருகிறான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அது அவ்வாறு இருக்கக்கூடும். மகன் மைனராக இருப்பது மற்றும் பாதுகாவலரின் பொறுப்பு சம்பந்தமாக இப்பொழுது கூறுகிறேன். இது சம்பந்த மாக, மசோதாவின் இந்தப் பகுதியில் பொறுக்குக் குழு இரண்டு மாற்றங்களை மட்டுமே செய்தது. முதலாவது மாற்றம் தனது மைனர் மகனின் இயற்கையான பாதுகாவலர் என்ற வகையிலான இந்து தகப்பனாரின் அதிகாரம், அவர் லௌகிக வாழ்வைத் துறந்து சந்நியாசி யாகிவிட்டாலோ, அல்லது ஓர் இந்துவாக இல்லாமல் போய் விட்டாலோ அவரிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. மூல (ஒரிஜினல்) சட்டப்படி, தகப்பனார்தான் இயல்பான பாது காவலர்; அவருடைய மதத்தின் காரணமாகவோ, அல்லது வேறு எந்த வழியிலாவது அவரது நிலைமையில் என்ன மாற்றங்கள் ஏற்பட்ட போதிலும், அவர் தமது மைனர் மகனுக்கு தொடர்ந்து பாதுகாவலராக இருக்கிறார். இந்த சட்டத் தொகுப்பு இந்து சமுதா யத்தையும் அவர்களின் சட்டங்களையும் ஒன்றுபடுத்துவதை நோக்க மாகக் கொண்டதால், இந்த நிபந்தனையை, அதாவது தகப்பனார் ஒரு இந்துவாகத் தொடர்ந்து இருக்கும் வரையிலும் அவர் இயல் பான பாதுகாவலராகத் தொடர்ந்து இருக்க வேண்டுமென்று குழு கருதியது. சட்டத் தொகுப்பு அதனுடைய மாற்றப்பட்ட வடிவத்திலும் மற்றொரு மாற்றத்தைப் புகுத்தியது. அதாவது, ஓர் இந்து விதவைக்கு தனது கணவன் இறப்பதற்கு முன்னால் பாதுகாவலராக ஒருவரை நியமிக்காம லிருந்திருந்தால், அத்தகைய பாதுகாவலரை நியமிப் பதற்கு அதிகாரம் வழங்கியது. அவருக்கு அத்தகைய அதிகாரம் ஏதுமிருக்கவில்லை, இந்த அதிகாரத்தை பொறுக்குக் குழு அவளுக்கு வழங்கியது.

ஐயா, இப்பொழுது, வாரிசுரிமை பற்றிய மசோதாவை விளக்கும் பகுதிக்கு வருகிறேன். முதலில் ஆண்களுக்கு வாரிசுரிமை வழங்கப்படுவதில் செய்யப்பட்டுள்ள மாற்றங்களைப் பற்றிக் குறிப் பிடுகிறேன். முதலாவதாக இந்து சட்டத்தின் கீழ் ஒப்பந்தப்படியான வாரிசுகளின் வரிசை என்றழைக்கப்படுவதைப் பொறுத்தமட்டிலும், - ராவ் குழு இதை 1-வது வகையினத்தில் வைத்தது - பொறுக்குக் குழு எத்தகைய மாற்றத்தையும் செய்யவில்லை. ஒப்பந்தப்படியான வாரிசுகளின் வரிசையிலும் வாரிசுகளின் மரபிலும் அப்படியே வைக்கப்பட்டுள்ள அந்த விஷயம் மாற்றப்படவேயில்லை. ஆனால் ராவ் குழுவின் 1லிருந்து 4 வரையிலான ஷரத்துகளில் சேர்க்கப்

பட்டுள்ள நபர்களைப் பொறுத்தவரையில் வாரிசு வரிசை சம்பந்த மாகவும், வாரிசு முன்னுரிமையிலும் சில மாற்றங்கள் செய்யப் பட்டுள்ளன. குழு இரு கோட்பாடுகளையும், அதாவது நெருங்கிய உறவு மற்றும் இயல்பான அன்பு, விருப்பம் ஆகியவற்றைக் கடைப் பிடித்துள்ளது. அந்த அடிப்படையில்தான் பொறுக்குக் குழு மூல மசோதாவின் 1லிருந்து 4 வரையிலான ஷரத்துகளில் வகுத்தளிக்கப் பட்டுள்ள வாரிசுகளில் சில மாறுதல்களைச் செய்துள்ளது. பொறுக்குக் குழு மேலும் ஒரு விஷயத்தைச் செய்துள்ளது: அதாவது மரணமடைந் தவரின் வாரிசுகளாகக்கூடிய ஆண் வழி உறவினர் மற்றும் பிற தொடர்புள்ளவர்களின் எண்ணிக்கை அளவையும் குறைத்துள்ளது. மற்றும் பிற வாரிசுரிமைகளையும், உதாரணமாக, உறவினர்களல் லாத வாரிசுகள், சாம் பிரம்மச்சாரி குரு போன்றவர்களை அது நீக்கிவிட்டது. மூல மசோதாவில் வகை செய்துள்ளபடியான வாரிசு களின் எண்ணிக்கையையும் பொறுக்குக் குழு குறைந்துள்ளதற்கான காரணம் இதுதான். இந்தச் சட்டத் தொகுப்பின் கீழ் ஒவ்வொரு இந்துவுக்கும் ஓர் உயில் தயாரிப்பதற்கான உரிமையை நாம் கொடுத் துள்ளோம். ஒரு முக்கியமான சஞ்சிகையாகிய ஒப்பீட்டு சட்டங்கள் சஞ்சிகையில் ஒரு வகை விமர்சனம் செய்யப்பட்டுள்ளது. அதில் மிகவும் பிரபலமான வழக்குரைஞர் ஓர் உயில் தயாரிக்கும் உரிமையை நீங்கள் கொடுத்தால், மரணமடைந்தவருக்குப் பின்னால், பதினான்காவது படித்தர அளவு வரைக்கும் நீளும் நீண்ட வாரிசுகள் பட்டியலை வழங்குவது அவசியமற்றது என்று அவர் கூறியுள்ளார். மரணமடைந்த ஒருவர், பதினான்காவது படித்தரத்தில் உள்ள, தனக்கு உறவினரான ஒருவர் மேல் அக்கறை கொண்டிருந்தால், அவருடைய மரணத்தின்போது அவர் உயிருடனிருந்தால், அது சம்பந்தமாக அவர் ஓர் உயில் தயாரித்து, தான் அக்கறை கொண்டுள்ள அந்தக் குறிப்பிட்ட நபருக்கு தனது சொத்தில் ஒரு பகுதியைக் கொடுப்பது அவருடைய விருப்பத்தைப் பொறுத்த விஷயமாகும்.

மரணமடைந்தவர், தான் உயிருடனிருக்கும்போது, 14-வது படித்தரத்தில் உள்ள தனக்கு உறவுள்ள ஒரு நபரை நினைவு கொள்ள முடியாவிட்டால், உயில் எழுதாமல் இறந்து விட்டதனால் சொத்தில் ஒரு பங்கை அவருக்குக் கொடுக்க வேண்டுமென்பதற்கு எந்தக் குறிப் பிட்ட காரணமும் கிடையாது. பொறுக்குக் குழு இந்த ஷரத்தை சேர்த்ததற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

கணவனை இழந்தவர்கள் (விதவைகள்) சம்பந்தமாக, அவர் மறுமணம் செய்து கொண்டால், அவர் தனது வாரிசுரிமையை

இழக்கிறார் என்ற ஒரு தகுதியின்மையையும் பொறுக்குக் குழு ஏற்படுத்தியுள்ளது என்ற விவரத்தையும் நான் அவையின் கவனத் திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

மகளுடைய பங்கைப் பொறுத்தமட்டிலும் - மூலமசோதா விலேயே இது அமைந்துள்ளது என்பது மெய்யே - ஓரளவு ஒரு முக்கிய மாற்றத்தை பொறுக்குக் குழு செய்துள்ளது.

மகள், மகனுக்குக் கிடைக்கும் பங்கில் பாதி அளவுக்கு உரிமை உடையவள் என்று மூலமசோதா கூறியுள்ளது, மேலும் பெண்ணின் சீதனச் சொத்துக்கு வாரிசுரிமை வரிசையை நிர்ணயிக்கும்போது பங்கை நியாயமானதாக இருக்கச் செய்வதற்காக, அந்த நிலையில் மகள் எடுத்துக் கொள்ளும் சொத்தில் ஒரு பாதியை மகன் எடுத்துக் கொள்வான் என்றும் மூல மசோதா கூறியது. அதன்படி தகப்ப னாரின் சொத்தில் மகள் ஒரு பாதியையும் தாயாரின் சொத்தில் ஒரு பாதியையும் பெறுவதற்கும் வகை செய்தனர். அது ஒரு நேர்மையற்ற ஏற்பாடு என்று நான் கூறமுடியாது. ஆனால் எப்படியோ பொறுக்குக்குழு, அவர்களுடைய உற்சாகத்தில், தகப்ப னாரின் சொத்தில் மகளின் பாகத்தை ஒரு பாதியிலிருந்து ஒரு முழுப் பங்குக்கு, அதாவது மகனின் பங்குக்கு சமமாக உயர்த்திவிட்டனர்; அவர்களது தீர்ப்பின் சிறந்த (பெரும் பகுதி) பகுதிக்கு எதிராக அவர்கள் இவ்வாறு செய்தனர் என்று நான் கருதுகிறேன். (ஒரு மதிப் புக்குரிய உறுப்பினர் : (''மகனுக்கும் வழங்கப்பட்டுள்ளது''.) நான் அதை அறிவேன். பெண்களுக்கு வாரிசுரிமை கொடுப்பது சம்பந்த மாக, பொறுக்குக்குழு இரு மாற்றங்களை மட்டுமே செய்துள்ளது. தற்போதிருந்து வரும் விதியின்படி, ஒரு பெண்ணின் கணவர் - பெண்களுக்கு வாரிசுரிமை கொடுக்கும்போது - இந்து சட்டத்தின்கீழ் மிகவும் பின்னாலேயே வருகிறார். அந்த ஷரத்து பழைய ராவ் குழு வினால் சேர்த்துக் கொள்ளப்பட்டிருந்தது, அது அநீதியானது என்று பொறுக்குக் குழு கருதியது, ஏனெனில், அதனால் சீதனச் சொத்து அல்லது, ஒரு பெண்ணின் கைக்கு வருகின்ற சொத்து ஒருவேளை, பெருமளவுக்குக் கணவனிடமிருந்துவருவதாக இருக்கக்கூடும், மேலும் பெண்ணின் கைக்கு வரும் சொத்தக்குக் கணவன்தான் சொத்தின் பிரதான மூலாதாரமாக இருக்கும்போது, பெண் பிற வாரிசுகளுக்கு அது மாற்றிக் கொடுக்க வேண்டுமென்பது முறையாக இருக்காது. எனவே பொறுக்குக்குழு அந்த ஷரத்தில் மாற்றம் செய்து, சீதன சொத்தின் வாரிசுகளின் வரிசையில் கணவனையும் சேர்த்தது, எனவே இதன்படி, கணவன் இப்பொழுது, ஒரு பெண்ணின் வாரிசுகளோடு

சேர்ந்து சீதனச் சொத்தில் பங்கு பெறுகிறார். நான் ஏற்கனவே கூறியது போன்று, அதனால், தகப்பனாரின் சொத்தில் மகளின் பங்கை அதிகரித்ததால், அவர்கள், அதேசமயத்தில் தாயாரின் சீதனச் சொத்தில் மகனின் பங்கையும் மகளின் பங்குக்கு சமமானதாக்கினர்.

**திரு. துணை சபாநாயகர் :** அவர்கள் மகனையும் மகளையும் சமப்படுத்தினர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த அவைக்கு சொல்லக்கூடிய அளவிற்கு ஜீவனாம்சம் சம்பந்தமாக சட்டத்தில் எந்த மாற்றமும் செய்யப்படவில்லை.

இனி, கூட்டுக் குடும்பப் பிரச்சினைக்கு வருகிறேன். பொறுக்குக் குழுவிடமிருந்து வந்த அளவில், இந்த மசோதாவில் அடங்கியுள்ள ஷரத்துகளில், கூட்டுக் குடும்பம் சம்பந்தமான ஷரத்துகள் முற்றிலும் புதியவை என்று கூறப்பட்டது. அந்தக் கூற்றை இந்தச் சந்தர்ப்பத்தில் மறுத்துக் கூற நான் விரும்புகிறேன். பொறுக்குக் குழுவினால் எந்த மாற்றமும் செய்யப்படவில்லை. மிதாக்ஷரா கூட்டுக் குடும்பத்தின் ஷரத்துகள், ராவ் குழுவினால் வரையப்பட்ட மசோதாவில் ஆரம்பத்தில் இருந்தன. அது ஆகஸ்ட் 9ம் நாளன்று இந்த அவையில் சமர்ப்பிக்கப்பட்டது. அதை அவை ஏற்றுக்கொண்டு பொறுக்குக் குழுவுக்கு அனுப்பியது (மதிப்புக்குரிய உறுப்பினர்கள் : ஏப்ரல் 9). எனவே என்னுடைய முதலாவது வேண்டுகோள் என்னவெனில், இந்தப் பொறுக்குக் குழுவினால் எந்தப் புதிய மாற்றமும் செய்யப்படவில்லை. பொறுக்குக்குழு செய்ததெல்லாம், இரண்டு புதிய ஷரத்துகளைச் சேர்த்தது மட்டுமே - ஷரத்து எண் 88-ம் ஷரத்து எண். 89-ம். 88வது ஷரத்து புனிதமான கடப்பாடுகள் என்னும் கோட்பாடு பற்றிக் கூறுகிறது. 89வது ஷரத்து, கூட்டுக் குடும்பத்தின் கடன்களை கூட்டுக் குடும்பம் செலுத்த வேண்டிய கடமைப் பொறுப்பைப் பற்றிக் கூறுகிறது. இந்த ஷரத்துகளைச் சேர்த்தது அவசியமில்லைதான். ஏனெனில், கூட்டுடைமையின் மரபுரிமையில் இணை உரிமை பெற்ற சொத்தை நீங்கள் பிரிக்கும் போது, புனிதமான கடப்பாடுக் கோட்பாடு சம்பந்தமாக எந்த வெளிப்படையான ஷரத்தும் தேவையில்லை. ஏனெனில், எச்சவுரிமை (கூட்டுடைமையில் மறுபங்காளிக்குப்பின் எஞ்சியிருப்பவர்க்குரிய முழு உடைமை உரிமை) சொத்து இருக்கும் நிலையில்தான் புனிதமான கடப்பாடு தேவையாகும்; ஏனெனில் எஞ்சுநர் உரிமையின் மூலம் 'பி'யின் சொத்தை 'எ' எடுத்துக் கொள்ளும் போது, 'பி'யின்

சொத்து கடன்களுடன் கூடிய வில்லங்கம் இருந்தால், 'பி'யின் மீது ஒரு கடமையைச் சுமத்துவதற்குத் தனி கோட்பாடு எதுவும் தேவையில்லை; ஏனெனில் வாரிசுரிமையாக ஒரு நபர் ஓர் உடைமையைப் பெறும்போது, அவர் லாபம், (கடன்) சுமை இரண்டையும்தான் பெறுகிறார். ஆனால் மிதாக்ஷரா கோட்பாட்டின்படி, கூட்டுடைமையின் மரபுரிமையில் இணையுரிமை பெற்ற ஒவ்வொருவரும், மரணமடைந்தவருக்கு சொந்தமாயில்லாத சொத்தை, எஞ்சிவாழ்கிறவர் என்ற வகையில் பெறுகிறார். மிதாக்ஷரா கூட்டுக் குடும்பக் கோட்பாட்டில் உள்ளார்ந்து அமைந்துள்ள இந்த இரு விஷயங்களையும் சட்டத் தொகுப்பில் வெளிப்படையாகக் கூறியாக வேண்டும் என்றும், அப்பொழுதுதான், நீதித்துறை சார்ந்த வியாக்கியானம் என்னும் கேள்வி எழும்போது, எந்த வகையான தகராறுக்கோ, ஐயப்பாட்டுக்கோ, அல்லது கருத்து வேறுபாட்டுக்கோ, இடமில்லாமல் போகும் என்று பாட்னா உயர்நீதிமன்றமும், பம்பாய் உயர்நீதிமன்ற வழக்கறிஞர் குழுவும் நம்மை மிகவும் வலுவாக வற்புறுத்தியுள்ளன. சட்டத்தை வழக்கறிஞர்களுக்கு மட்டுமன்றி, சாதாரணக் குடிமக்களுக்கும் தெளிவாக்க வேண்டும் என்பது சட்டத் தொகுப்பின் குறிக்கோள்களில் ஒன்றாக இருப்பதினாலும், பாட்னா உயர்நீதிமன்றம் பம்பாய் உயர்நீதிமன்ற வழக்குரைஞர் குழு போன்ற செல்வாக்கு மிக்க அதிகாரம் படைத்தவர்களிடமிருந்து வந்த ஆலோசனை என்பதாலும், இந்த இரண்டு விஷயங்களை, அதாவது, புனிதமான கடப்பாடு என்ற மூலக்காரணத்தினால், கடன்களுக்குப் பணம் செலுத்தும் கடப்பாடு இல்லை, மற்றும் குடும்பத்தைச் சார்ந்த முதன்மையான கடன்களைச் செலுத்த வேண்டிய பொறுப்பு ஆகியவற்றை சேர்ப்பது விரும்பத்தக்கது என்று கருதினோம். இதைத் தவிர, வேறு மாற்றம் எதுவும் செய்யப்படவேயில்லை. மிதாக்ஷரா கூட்டுக் குடும்பம் சம்பந்தமாக, நாங்கள் அடிப்படையான மாற்றங்களைச் செய்துள்ளதாக என்னுடைய நண்பர்களுக்கு இன்னும் ஏதாவது ஐயப்பாடு இருக்குமானால், 86வது பகுதியை (பாகம் 5: கூட்டுக் குடும்பச் சொத்து) அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வரவிரும்புகிறேன். பொறுக்குக் குழுவிடமிருந்து வந்துள்ள புதிய மசோதாவின் 86வது பகுதி, சொல்லுக்குச் சொல் அதுவேயாகும். சில சாதாரண சொல் மாற்றங்கள் மட்டுமே செய்யப்பட்டுள்ளது. ராவ் குழுவினால் தயாரிக்கப்பட்ட மூலமசோதாவின் பக்கம் 12ல் பாகம் 3, ஏ பிரிவில் இதைக் காணலாம். அது போன்றே, கூட்டுச் சொத்து சம்பந்தமான 87வது பிரிவும், பக்கம் 12, 3ம் பாகம் ஏ, 2ம் பிரிவில் சொல்லுக்குச் சொல் அப்படியே உள்ளது. இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கும் யாரும், இது பொறுக்குக்குழு புதிதாகக் கண்டுபிடித்ததல்ல,

மாறாக, அவை ராவ் குழுவினால் வரையப்பட்ட மூல மசோதாவின் இணை பிரியாத பாகமேயாகும் என்று இந்த அவையில் நான் எடுத்துக் கூறியதை நிச்சயமாக ஏற்றுக் கொள்வார்கள். ராவ் குழுவின் அறிக்கையை (பக்கம் 13) சுட்டிக் காட்டுவதன் மூலம், இந்த அம்சம் சம்பந்தமாக இருக்கக்கூடிய மேற்கொண்டு எந்த ஐயப்பாட்டையும் அகற்றுவதற்கு விரும்புகிறேன். ராவ் குழு இவ்வாறு கூறுகிறது (பாரா 51) :

> ''சட்டத்தொகுப்பின் நகலின் உள்ளடக்கத்தை இப்பொழுது பார்க்கும்போது, பல்வேறு அளவில் வெளிப்பட்டுள்ள பிரதான பிரேரணைகள் சம்பந்தமான கருத்து வேறுபாடுகள்'' பின்வருவனவையே:
>
> (1) மிதாக்ஷரா மாகாணங்களில் பிறப்பின் காரணமான உரிமையும் எஞ்சியிருப்பவர் சொத்துரிமை பெறுவது என்னும் கோட்பாடும் ரத்து செய்யப்பட்டு, மிதாக்ஷராவுக்கு பதிலாக தாயபாகம் என்பது கடைப்பிடிக்கப் படுவது;
>
> (2) மகளுக்குப் பாதிப்பங்கை அளிப்பது;
>
> (3) இந்துப் பெண்ணின் வரையறைக்குட்பட்ட சொத்தை முழு உரிமை படைத்த சொத்தாக மாற்றுவது;
>
> (4) ஏகபத்தினி முறையை சட்டத்தின்படியான விதியாக 'அமலாக்குவது;
>
> (5) விவாகரத்துக்கான சில ஷரத்துகளைச் சேர்ப்பது.''

ராவ் குழு, தனது பணியை ஆற்றும்போது, தாங்கள் தயாரித்த சட்டத் தொகுப்பும், பின்னர் அவர்களால் உருவம் கொடுக்கப் பட்டதுமாகிய அது திட்டவட்டமான ஷரத்தைக் கொண்டிருந்தது. இந்த அவையினால் நியமிக்கப்பட்ட கூட்டுப் பொறுக்குக் குழுவும், ராவ் குழுவும் ஒரு நிர்வாக உத்தரவின் மூலம் இந்த அரசும் முன்பு சேகரித்த சாட்சியம் அடங்கியுள்ள தொகுதிகளைப் படித்த எவரும் சட்டத் தொகுப்பின் இந்தப் பகுதியின் மீது கவனம் செலுத்திய இந்த அவையிலோ அல்லது வெளியிலோ உள்ள எந்த நபரும், இந்தக் கூட்டுடைமையின் மரபுரிமையில் இணையுரிமை ரத்து செய்யப்படக்கூடாது என்று ராவ் குழு முடிவு செய்ததாகவோ அல்லது பிரேரணை வைத்துள்ளதாகவோ எத்தகைய தவறான மனப் பதிவையும் கொண்டிருக்கவில்லை என்பதைக் காண்பார் என்பது குறித்து எனக்கு எத்தகைய ஐயமுமில்லை. எனவே, இது பொறுக்குக் குழுவின் புதிய கண்டுபிடிப்பு அல்லவே அல்ல. இந்துச் சட்டத் தொகுப்பை பிரயோகம் செய்வது சம்பந்தமாக பொறுக்குக் குழு சில மாற்றங்களைச் செய்தது. மருமக்கதாயம் மற்றும் அலியசந்தானம் சட்டங்கள் பிரயோகமாகிற பிரதேசங்களுக்கு இந்த மசோதா விரிவு படுத்தப்படக் கூடாது என்று ராவ் குழுவின் மசோதா ஒரு ஷரத்தைக்

கொண்டிருந்தது எவ்வாறோ, பொறுக்குக் குழு தனது உற்சாகத்தில், நியாயத் தன்மையின் எல்லைகளை மீறி - இவ்வாறு கூறுவதில் நான் எத்தகைய மரியாதைக் குறைவையும் காட்டவில்லை - இந்த சட்டத்தொகுப்பு செயல்படுவதனின்றும் எந்தப் பிரதேசத்திற்கும் விதிவிலக்கு இருக்கக்கூடாது என்ற முடிவுக்கு வந்து பின்னர் அவர்கள் அந்த ஷரத்தை நீக்கிவிட்டார்கள்.

**திரு. துணை சபாநாயகர் :** ஒரு சீரான தன்மையின் பொருட்டு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது சரியாக அவ்வாறு செய்யப்பட்டதா, அல்லது தவறாக அவ்வாறு செய்யப் பட்டதா என்று எனக்குத் தெரியாது; ஒரு பிந்திய கட்டத்தில் இதை அவை பரிசீலனை செய்ய வேண்டும்.

**பண்டிட் முகுத் பீஹாரிலால் பர்கவா (ஆஜ்மீர் - மீர்வாரா) :** அந்தக் கருத்திலிருந்து மாண்புமிகு பேச்சாளர் வேறுபடுகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஒரு வேளை, பின் கட்டத்தில் நான் வேறுபடுவேன். நான் கருத்து எதுவும் இல்லாதவ னல்ல, ஆயினும் இன்னும் நான் திறந்த மனதுடன் இருக்கிறேன்.

**திரு. எச்.வி. காமத் (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் பொது) :** ஒன்றும் இல்லாத மனதல்ல!

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஒவ்வொரு பிரச்சினையிலும் என்று நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, சாதாரண மான நிலைமையில், நான் ஆற்றியது போன்ற ஓர் உரை, குறிப் பிட்ட சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமானது மட்டுமன்றி, போதுமானது மாகும் என்று பொதுவாகக் கருதப்படுகிறது. ஆனால், ஒரு பகுதி - பெரிய பகுதியாக இல்லாவிட்டாலும் இந்த அவையில் ஒரு பகுதி, மசோதாவின் சில பகுதிகள் சம்பந்தமாக ஓரளவு மன உறுத்தல் கொண்டுள்ளது என்ற உண்மையை மறைப்பது பயனற்றதாகும். இந்த அவைக்கு வெளியில் பலர் இந்த மசோதாவில் அக்கறை கொண்டுள்ளார்கள் என்பது மட்டுமன்றி இது குறித்து ஆழமாகக் கவலையும் கொண்டுள்ளனர் என்ற உண்மையையும் மறைக்க முடியாது. எனவே, இந்த மசோதா கொண்டுவரப்பட்டதிலிருந்து

நான் பார்த்தவரையில், பல பத்திரிகைகளில் வெளியாகியுள்ள கருத்து வேறுபாட்டு அம்சங்கள் சம்பந்தமாக, ஒரு சில பொதுவான விஷயங்களைக் கூறுவது சரியானது என்று நினைக்கிறேன். நீங்கள் அனுமதித்தால் கூறுகிறேன். இந்த விஷயத்தை பாகம் பாகமாகவும் பகுதி பகுதியாகவும் எடுத்துக் கொள்கிறேன். சர்ச்சைக்குரிய அம்சங்கள் என்று கருதப்பட்டுள்ளதாக நான் அறிகின்றவற்றை மட்டும் இங்கு எடுத்துக் கொள்கிறேன். திருமணம் மற்றும் விவாகரத்தை எடுத்துக் கொள்கிறேன். இங்கு சர்ச்சைக்குரிய மூன்று விஷயங்கள் இருப்பதைக் காண்கிறேன். சர்ச்சைக்குரிய முதலாவது விஷயம் என்னவெனில், ஒரு செல்லுபடியாகும் திருமணத்திற்கு சாதிகளை ஒழிப்பது ஓர் அவசியமான தேவை என்பதாகும். இரண்டாவது சர்ச்சைக்குரிய விஷயம், ஒருதார மணத்தைப் பரிந்துரைப்பது; சர்ச்சைக்குரிய மூன்றாவது விஷயம் விவாகரத்துக்கான அனுமதி.

சாதித் தடைக்கட்டுகளை ரத்து செய்வது என்ற முதலாவது சர்ச்சைக்குரிய விஷயத்தை எடுத்துக் கொள்கிறேன். இந்த மசோதாவைப் பொறுத்த மட்டிலும், புதியதற்கும் பழையதற்கும் இடையில் ஒரு வகையான சமரசத்திற்கு வருவதற்கு அது முயல்கிறது. இந்து சமூகத்தைச் சேர்ந்த ஒரு நபர், வைதீக முறையைப் பின்பற்றுவதற்கு விரும்பினால் - மணப்பெண்ணும் மணமகனும் ஒரே வர்ணத்தை, ஒரே சாதியை, அல்லது ஒரே உப-சாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தால் ஒழிய, அந்தத் திருமணம் செல்லாது என்று கூறுகிறது - அவருடைய விருப்பங்களை அமல் நடத்துவதை, அல்லது தனது தர்மம் என்று அவர் கருதுவதை அமல் நடத்துவதைத் தடுப்பதற்கு இந்தச் சட்டத்தொகுப்பில் எதுவும் இல்லை என்று இந்த மசோதா கூறுகிறது. அதே முறையில், சீர்திருத்தவாதியாக இருக்கின்ற, வர்ணம், சாதி அல்லது உப-சாதியில் நம்பிக்கையில்லாத ஓர் இந்து, தனது வர்ணத்திற்கு வெளியில், தனது சாதிக்கு வெளியில், தனது உப-சாதிக்கு வெளியில் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதற்குத் தேர்ந்தெடுத்தால், அந்தத் திருமணமும் செல்லுபடியாகும் என்று சட்டம் கருதுகிறது. எனவே, திருமணம் சம்பந்தப்பட்ட சட்டத்தைப் பொறுத்தவரையிலும் எத்தகைய நிர்ப்பந்தமும் சுமத்தப்படுவதில்லை. வழிவழியாக வருகின்ற மதக் கோட்பாடுகளில் நம்பிக்கை உடைய வைதிகர்களைப் பொறுத்தமட்டிலும், அவர்களுடைய தர்மத்தின்படி எது சரியென்று அவர்கள் நினைக்கிறார்களோ, அதைச் செய்வதற்கு அவர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள். தர்மத்தைப் பின்பற்றாத சீர்திருத்தவாதிகள், ஆனால் பகுத்தறிவைப் பின்பற்றுகிற, மனச்சாட்சியைப் பின்பற்றுகிறவர்களும்

தமது பகுத்தறிவையும் தமது மனச்சாட்சியையும் பின்பற்றுவதற்கு அனுமதிக்கப்படுகிறார்கள்.

**திரு. மகாவீர் தியாகி (உ.பி: பொது):** அவர்களது மனசாட்சி அவர்களை செலுத்தும் முறையில், தமது மதத்திற்கு வெளியிலும் திருமணம் செய்வதற்கு அவர்கள் அனுமதிக்கப்படுகிறார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நல்லது, அதற்கு நமக்கு மற்றொரு மசோதா தேவைப்படும். என்னுடைய மதிப்புக் குரிய நண்பர் திரு. தியாகி, திருமணமில்லாதவரா என்பது எனக்குத் தெரியாது. அவர் அவ்வாறிருந்தால், நான் அந்த மசோதாவை துரிதமாகக் கொண்டு வருகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி :** மற்றவர்களுக்கு வழிவிடுவதற்கு நான் விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எனவே, திருமணச் சட்டத்தைப் பொறுத்தவரையிலும், பழையதற்கும் புதியதற்கும் இடையில் ஒரு போட்டியிருந்தால் இந்து சமுதாயத்தில் என்ன ஏற்படும்? புதிய பாதையைப் பின்பற்றுகிறவர்கள் இறுதியாக வெற்றியடைவார்கள் என்று நம்புகிறோம். ஆனால், நான் கூறுவது போன்று, அவர்கள் அதை ஏற்றுக் கொள்ளாவிட்டால், இரு இணை யான திருமண முறைகள் இந்த நாட்டில் செயல்படுவதற்கு அனுமதிப்பதற்கு நாங்கள் மிகவும் திருப்தியடைகிறோம். எவரும் இந்தத் திருமண முறைகளில் எதையும் விருப்பப்படி தேர்வு செய்து கொள்ளலாம். இதில் எந்த சாஸ்திரமும் மீறப்படவில்லை; எந்த ஸ்மிருதியும் சிறிதும் மீறப்படவில்லை.

ஒருதார மணத்தைப் பொறுத்தமட்டிலும், இது ஒரு புதிய கண்டுபிடிப்பாக இருக்கலாம். ஆனால் நம்முடைய மரபான சட்டம், அல்லது நமது சாஸ்திரங்களைப் பொறுத்தமட்டிலும், ஓர் இந்துக் கணவன் எல்லாக்காலங்களிலும், பலதாரமணத்திற்குத் தடைக்கட்டு ஏதுமற்ற, தங்குதடையற்ற உரிமை பெற்றிருந்தான் என்பதை இந்த அவையில் எந்த உறுப்பினரும் சுட்டிக்காட்ட முடியும் என்று கருது கிறேன். ஆனால் எதார்த்தம் அதுவல்ல. இன்றும்கூட, தென் இந்தியா வின் சில பகுதிகளில், இதைக் கடைப்பிடிக்கும் மக்கள் இருக்கின் றனர். நாட்டுக் கோட்டை செட்டியார்களின் ஒரு பிரிவினர் - இந்த விஷயம் பிரிவி கவுன்சில் அறிக்கைகளிலேயே கூறப்பட்டுள்ளது.

வெறும் பராபரியான சாட்சியத்தை மட்டும் நான் சார்ந்திருக்க வில்லை. நாட்டுக்கோட்டை செட்டியார்களிடையில் - தனது மனைவியின் சம்மதத்தைப் பெறாமல் ஒரு கணவன் இரண்டாவது மனைவியைத் திருமணம் செய்துகொள்ள முடியாது. இரண்டாவதாக, அவ்வாறு சம்மதம் பெற்றுவிட்டால், அவர், அவளுக்கு (முதல் மனைவிக்கு) ஓரளவு சொத்தை ஒதுக்கவேண்டும். தமிழ் மொழியில் இது மாப்பு என்று அழைக்கப்படுகிறது என்று நினைக்கிறேன். அந்தச் சொத்து அவளுடைய முழு உடைமையான சொத்து ஆகும். அவளுடைய சம்மதத்தின்பேரில், கணவன் திருமணம் செய்து கொண்டு, அவளை மோசமாக நடத்தினால், ஒரு சுதந்திரமான வாழ்க்கையை நடத்துவதற்கு அவள் ஓரளவு பொருளாதாரத் தகுதியைத் தன் கைகளில் கொண்டிருக்கிறாள். பலதார மணத்திற்குத் தங்கு தடையற்ற உரிமை இல்லை என்பதைக் காட்டுவதற்காகவே இதை ஓர் உதாரணமாகக் கூறினேன்.

நான் கொடுக்க விரும்புகிற இரண்டாவது உதாரணம் கௌடில்யரின் அர்த்தசாஸ்திரத்திலிருந்து, இந்த அவையின் எத்தனை உறுப்பினர்கள் அந்தப் புத்தகத்தைப் படித்திருப்பார்களென்று எனக்குத் தெரியாது, பலர் படித்திருப்பார்கள் என்று நம்புகிறேன். அவர்கள் அதைப்படித்திருந்தால், ஓர் இரண்டாவது மனைவியைத் திருமணம் செய்யும் உரிமையை கௌடில்யர் பெருமளவு வரையறைக்குட்படுத்தியிருந்தார் என்பதை உணர்வார்கள். முதலாவதாக, எந்த நபரும் முதல் பத்து அல்லது பனிரெண்டு ஆண்டுகளுக்கு (இரண்டாவது மனைவியை) திருமணம் செய்துகொள்ள முடியாது; ஏனெனில், முதல் மனைவியினால் குழந்தைகளைப் பெற முடியாது என்பது குறித்து அவன் திருப்தியடைய வேண்டும். அது ஒரு எல்லை வரம்பு. இரண்டாவது திருமணம் செய்துகொள்ளும் உரிமை மீது கௌடில்யர் விதித்த இரண்டாவது வரையறை, திருமணத்தின்போது அவள் பெற்ற சீதனச் சொத்து முழுவதையும் கணவன் அந்தப் பெண்ணுக்குத் திருப்பிக் கொடுத்தாக வேண்டும். இந்த இரண்டு நிபந்தனைகளின் கீழ்மட்டுமே, கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம், ஓர் இந்துக் கணவனை இரண்டாவது தடவை திருமணம் செய்து கொள்ள அனுமதித்தது.

மூன்றாவதாக, நமது நாட்டிலேயே, பல்வேறு மாகாணங்களில் நிறைவேற்றப்பட்ட சட்டத்தில், ஒருதார மணம் விதிக்கப்பட்டுள்ளது. உதாரணமாக, மருமக்கதாயத்திலும், அலியசந்தானம் சட்டத்திலும், ஒருதார மணத்தை, மணவாழ்க்கையின் ஒரு விதியாக

விதிக்கப்பட்டுள்ளது. இதுபோன்றே, பம்பாயில் அல்லது சென்னையில், மற்றும் பரோடாவில் அண்மையில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களில் ஒருதார மணம்தான் சட்டமாகியுள்ளது.

நான் கொடுத்துள்ள உதாரணங்களிலிருந்து எந்த ஒரு மிகவும் தீவிரமான அல்லது புரட்சிகரமான மாற்றத்தையும் நாங்கள் செய்யவில்லை என்பதை அவை காணும் என்று நம்புகிறேன். நாம் மேற்கொண்ட நடவடிக்கைகளுக்கு முன்னுதாரணம் இருக்கிறது; இந்தியாவில் பல்வேறு சமஸ்தானங்களில் நிறைவேற்றப்பட்டுள்ள சட்டங்களிலும், கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் போன்ற பண்டைய சாஸ்திரங்களிலும் இதைக் காண முடியும். நான் இன்னும் ஒருபடி மேலே சென்று, உலகம் முழுமையின் முன்னுதாரணம் நமக்கு இருக்கிறது என்று கூறுவேன். மணவாழ்க்கை உறவுகளைப் பொறுத்த மட்டிலும் ஒருதார மணத்தைத்தான் மிகவும் பாராட்டத்தக்க கோட்பாடாக உலகம் அங்கீகரித்துள்ளது.

**திரு. தேசபந்து குப்தா (டில்லி):** முகம்மதிய சட்டம் என்ன கூறுகிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** முகம்மதிய சட்டத்தைப் பற்றி நாம் விவாதிக்கும்போது, அது பற்றிக் கூறுகிறேன்.

விவாகரத்துப் பிரச்சினைக்கு வருவோமானால், இது எவ்வகையிலும் ஒரு புதிய கண்டுபிடிப்பு அல்ல என்று அவைக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். சூத்திரர்கள் என்று அழைக்கப்படும் சமூகங்கள் விவாகரத்து வழக்கத்தைக் கொண்டுள்ளன என்பதை இந்த அவையில் அனைவரும் அறிவர். சூத்திரர்கள் என்று நாம் அழைப்பவர்களின் முழு மொத்தம் எவ்வளவு? இந்து சமுதாயத்தில் ஓர் அங்கமாக உள்ள சூத்திரர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு என்று யாரும் எப்பொழுதும் கணக்கெடுக்கவில்லை என்று கூறலாம். ஆனால் சூத்திரர்கள் இந்துக்களின் மொத்த மக்கட்தொகையில் நடைமுறையில் 90 சதவீதமாக இருப்பார்கள் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. 'மறு மலர்ச்சி' பெற்ற வர்க்கங்கள் என்று அழைக்கப்படுபவர்கள், இந்த நாட்டின் மொத்த மக்கட்தொகையில் அனேகமாக பத்து சதவீதத்திற்கும் அதிகமாக இருக்க மாட்டார்கள். மதிப்புக்குரிய உறுப்பினர்களைப் பார்த்து நான் கேட்கும் கேள்வி இதுதான்: 90 சதவீத மக்களின் சட்டத்தை இந்த நாட்டின் பொதுவான சட்டமாக நீங்கள் கொள்ளப் போகிறீர்களா,

அல்லது மக்களில் 10 சதவீதத்தினரின் சட்டத்தை 90 சதவீத மக்களின் மீது சுமத்தப் போகிறீர்களா? இது ஒரு எளிய கேள்விதான், ஒவ்வொரு உறுப்பினரும் இதற்கு பதில் சொல்லியாக வேண்டும், பதில் சொல்ல முடியும்.

'மறுமலர்ச்சி' அடைந்த வர்க்கங்களைப் பொறுத்தமட்டிலும், ஒரு காலத்தில், உதாரணமாக, நாரத ஸ்மிருதி அல்லது பராசர ஸ்மிருதி எழுதப்பட்ட காலத்தில், கணவன் தன்னைக் கைவிட்ட போது, மனைவி தனது கணவனை விவாகரத்து செய்ய முடியும் என்று ஸ்மிருதிகள் அங்கீகரித்தபோது, அவன் இறந்தபோது, அவன் **பரிவ்ரிஜா** எடுத்துக்கொண்டபோது, அவள் ஓர் இரண்டாவது கணவனைப் பெறுவதற்கு உரிமையுள்ளவளாயிருந்தாள். எனவே, இதைக் காட்டு வதற்கு பிற்கட்டத்தில், உங்களுடைய சாஸ்திரங்களிலிருந்து சில பகுதிகளை உங்களுக்கு வாசித்துக்காட்டுகிறேன். (ஓர் மதிப்புக்குரிய உறுப்பினர் : ''உங்களுடைய சாஸ்திரங்களா?'') ஆம், ஏனெனில் நான் வேறு சாதியைச் சேர்ந்தவன். இந்த நாட்டில் என்ன ஏற்பட்ட தென்றால், எப்படியோ, துரதிருஷ்டவசமாக, யாருக்கும் தெரியாமல், தன்னுணர்வற்ற வகையில், சாஸ்திரங்களின் வாசகத்தை வழக்கம் (மரபு) காலின்கீழ் போட்டு மிதிப்பதற்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என்பதைக் காட்டுவதற்கு சில பகுதிகளை நான் வாசித்துக் காட்டு கிறேன். எல்லா சாஸ்திரங்களும் சரியான வகைப்பட்ட மண வாழ்க்கை உறவுகளுக்கு ஆதரவாக இருந்துள்ளன. எனவே இந்த அவையில் நான் விண்ணப்பித்துக் கொள்வது என்னவெனில், திருமணச் சட்டம் அல்லது விவாகரத்தில் எந்தப் புதிய கோட்பாடு களும் அறிமுகம் செய்துவைக்கப்பட்டதைப் பொறுத்தமட்டிலும், செய்யப்பட்டது எல்லாம் நேர்மையானதும் அறிவுபூர்வமானது மாகும்; அவை முன்னுதாரணத்தின் - நமது சாஸ்திரங்களின் முன்னுதாரணம் மட்டுமல்ல, உலகம் முழுமையின் அனுபவத்தின் - ஆதரவைப் பெற்றுள்ளன.

சுவீகாரம் (தத்து எடுத்துக்கொள்வதை) பொறுத்தமட்டிலும், இதிலும் சர்ச்சைக்குரிய மூன்று அம்சங்கள் உள்ளன. சுவீகாரம் சம்பந்தமாக, சர்ச்சைக்குரிய ஓர் அம்சம் என்னவெனில், பழைய இந்து சட்டத்தைப்போன்று ஒரு செல்லுபடியாகும் சுவீகாரத்திற்கு, சாதியை இனங்கண்டு கூறுவதை நாம் ஒரு முன்தேவையாக்குவ தில்லை. திருமணம் சம்பந்தமாக நாம் பின்பற்றிய அதே விதியைத் தான் இது சம்பந்தமாகவும் நாம் பின்பற்றி வந்துள்ளோம். மீண்டும், இங்கும், ஒரு **பிராமணர்** ஒரு பிராமணப் பையனை சுவீகாரம் எடுத்துக்

கொள்ள விரும்பினால், அவர் தாராளமாக அதைச் செய்து கொள்ள லாம். ஒரு காயஸ்தர் ஒரு காயஸ்தப் பையனை சுவீகாரம் எடுத்துக் கொள்ளவிரும்பினால், அவ்வாறு செய்வதற்கு அவருக்கு எல்லா உரிமையும் உண்டு. ஆனால், அறிவொளி (பரந்த மனப்பான்மை) பெற்ற ஒரு பிராமணர், தன்னுடைய சொந்த சமூகத்திலல்லாது, ஒரு சூத்திரனை சுவீகாரம் எடுத்துக் கொண்டாலும் அதைச் செய் வதற்கு அவர் அனுமதிக்கப்படுகிறார். எனவே இதில் எத்தகைய திணிப்பும் கிடையாது.

**சேத் கோவிந்த தாஸ்** *(மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது) : அத்தகைய ஒரு பிராமணரை அறிவொளி பெற்றவர் என்று ஏன் நீங்கள் கருதுகிறீர்கள்?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** சரி, அதுபற்றி எனக்குத் தெரியாது, என்னுடைய கண்ணோட்டத்தில், அவர் நிச்சய மாக அறிவொளி பெற்றவர்தான். உங்களுடைய கண்ணோட்டத் தில் அவர் மிகவும் மோசமானவராக இருக்கலாம். ஆனால் அது ஒரு கருத்து வேறுபாடேயாகும்.

சுவீகாரம் எடுத்துக் கொள்வதற்கு முன்னால், கணவனை இழந்த மனைவி, செய்த எல்லா சொத்து மாற்றங்களையும் எதிர்ப் பதற்கு சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்ட மகனுக்கு உள்ள உரிமை யைக் கட்டுப்படுத்தும் உரிமை சம்பந்தமாக, இதில் எத்தகைய சர்ச்சைக்கும் இடமிருக்கமுடியும் என்று நான் கருதவில்லை. ஒரு பையன், சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்டவுடன், சுவீகாரம் எடுத்துக் கொண்ட தந்தை மரணமடைந்த சமயத்திலிருந்தே அந்தத் தந்தையின் மகனாகிறார் என்ற கருத்தை நாம் தொடர்ந்து கொண் டிருக்கவேண்டும் என்பதற்கு எந்தக் காரணமும் இல்லை. இது முற்றிலும் ஒரு கற்பனையேயாகும். இதற்கு எவ்வித மதிப்பும் இல்லை. இது ஒரு கற்பனை என்பது மட்டுமன்றி, இது பெருமளவு வழக்குகளையும், பெருமளவு சிரமங்களையும் ஏற்படுத்தும். எனவே, சொத்தை மாற்றிக் கொடுப்பதும் சுவீகாரமும் ஏக காலத்தில் நிகழ வேண்டும். இந்தக் கட்டத்தில் இது நாம் ஏற்றுக்கொள்ளக்கூடிய பிரேரணை அல்ல என்று எந்த உறுப்பினராவது கருதுவார் என்று நான் நினைக்கவில்லை. (திரு. பி. தாஸ் : ''நாங்கள் அனைவரும் ஏற்றுக்கொள்கிறோம்'').

இவ்வாறே, நான் கூறியது போன்று சுவீகாரம் எடுத்துக் கொள்ளப்பட்ட பையன், தாயைப் பூரணமாக சொத்துக்கு உரிமை

யில்லாதவளாக்கி, அவளை, சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்ட மகன் விரும்பித் தரக்கூடிய பராமரிப்புத்தொகைக்காகக் காத்திருக்கச் செய்வதற்கும், அவனை முற்றிலும் சார்ந்திருக்கச் செய்வதற்கும் மகனுக்குள்ள உரிமைக்கு ஒரு வரையறை உண்டு. அத்தகைய நிலைமையை எந்தக் காரணத்தைக் கொண்டும் நியாயப்படுத்த முடியும் என்று இந்த அவையின் எந்த உறுப்பினரும் கருதுவார் என்று நான் நினைக்கவில்லை. வைதீக சமூகம் மிகவும் போற்றிப் பேணுகின்ற, சுவீகாரம் எடுத்துக் கொள்ளும் உரிமையை நாம் பாதுகாப்பது சரியானதே என்று கருதுகிறேன். ஆனால், ஐயா, சுவீகாரம் ஏன் இருக்க வேண்டும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. சுவீகாரம் எடுத்துக்கொள்ளும் நம்மில் பெரும் பாலானவர்களின் பெயர்கள் வரலாற்றில் பதிவு செய்யப்படுவ தில்லை. தனிப்பட்ட முறையில் நான் கூட, வரலாற்றில் என் பெயர் பதிவாவதை நிச்சயமாக விரும்பவில்லை, ஏனெனில் என்னுடைய சாதனை ஒன்றுமில்லை. நான் இந்து சமூகத்தின் ஒரு அசாதாரண மான உறுப்பினன். ஆனால் பலருக்கும் வரலாற்றில் இடம் பெறுவ தற்கு சாதனைகள் ஒன்றும் இல்லை. எனவே, ஒரு மகனை சுவீகாரம் எடுத்துக்கொள்ளும் பணியில் அவர்கள் ஏன் இறங்க வேண்டும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை - அந்த மகன் ஒரு முட்டாள் பையனாக கல்வி அறிவில்லாதவனாக, எந்தப் பண்பாடும் இல்லாதவனாக இருக்கக்கூடும் - அவனுடைய சாத்தியப் பாடுகள் பற்றித் தெரியாமல், ஓர் அப்பாவிப் பெண்ணுக்கு அவனை வழங்கி, வளர்த்து, ஆளாக்குவதில் என்ன பயன்? அந்தப்பெண் கொண்டுள்ள எல்லா சொத்தையும் அவன் பறித்துக் கொண்டு போகக் கூடும். எனவே என்னுடைய வேண்டுகோள் என்னவெனில், சுவீகாரம் சம்பந்தமாக நீங்கள் உங்களுடைய பழமையான கருத்துக் களைப் போற்றிப் பேணுவதற்கு நிச்சயமாக விரும்பினால், தத்து எடுத்துக் கொள்ளப்பட்ட மகன், தாயின் வாழ்க்கைக்கு ஆதாரமாக உள்ள சொத்தை முற்றாக அவளிடமிருந்து பறித்துக் கொள்ளாம லிருப்பதற்கான ஷரத்தை இதில் சேர்க்க வேண்டும். அந்த எல்லை வரம்பு சர்ச்சைக்குரிய ஒரு விஷயமாக இருக்கும் என்று நான் கருத வில்லை.

வழக்கமான (மரபான) சுவீகாரத்தை ரத்து செய்யும் பிரச்சினை சம்பந்தமாக இரண்டு விஷயங்களை நான் கூறுவதற்கு விரும்பு கிறேன். இந்த அவை ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு பொதுவான வாதம் இருக்கிறது. அது இதுதான்: ஒரு சட்டத் தொகுப்பானது மரபான சட்டத்துடன் முரண்பாடானதாகும். அது ஓர் அடிப்படையான

நிலைபாடு ஆகும். ஒரு சட்டத் தொகுப்பு இருப்பதற்கு நீங்கள் அனுமதித்து, அதேசமயத்தில் வழக்கத்தையும் வளர்வதற்கு அனுமதித்து, வழக்கம் சட்டத் தொகுப்பிற்கு எதிராக வாதாடுவதற்கு அனுமதித்தால் ஒரு சட்டத் தொகுப்பு இருப்பதால் எந்தப் பயனும் இல்லை. ஏனெனில் ஒரு மரபு எப்போதும் சட்டத் தொகுப்பை அரித்துவிடும், சட்டத் தொகுப்பை செல்லுபடியாகாததாக்கிவிடும். **கிரித்திரிம்** சுவீகாரம் **கோதா** சுவீகாரம், **துவைமுஷாயன்** சுவீகாரம் போன்ற மரபான சுவீகாரம் என்ற இந்தக் குறிப்பான பிரச்சினை சம்பந்தமாக என்னுடைய விண்ணப்பம் என்னவெனில், இவை மெய்யாக, சுவீகாரம் அல்லவே அல்ல. பிரிவி கவுன்சில், தனது ஒரு தீர்ப்பில், சுவீகாரம் என்பது ஒரு மதச்சார்பான விஷயம் மட்டுமே என்று திட்டவட்டமாகக் கூறியுள்ளது. சுவீகாரம் எடுத்துக் கொள்ளப் பட்ட மகன் சொத்தைப் பெறுவது ஒரு இரண்டாந்தரமான விஷயமே யாகும். அவன் சொத்தைப் பெறலாம், பெறாமலிருக்கலாம். அவன் சொத்தைப் பெறாவிட்டாலும், அவனுடைய சுவீகாரம், ஒரு மதக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, செல்லத்தக்கதாகும். எனவே, என்னுடைய விண்ணப்பம் இதுதான்: இந்த மரபான சுவீகாரங்கள் எல்லாம், இந்த விவகாரத்தில் ஈடுபடும் இரண்டு குடும்பங்களுக்குள் சொத்தை வைத்துக் கொள்வதற்கான ஏற்பாடு களேத் தவிர வேறல்ல. என்னுடைய மதிப்பீட்டின்படி, நாம் அரசியல் சாசனத்தை ஏற்கனவே நிறைவேற்றியுள்ளதாலும், வழி காட்டும் கோட்பாடுகளில் சொத்துக்கள் ஒரு சிலரிடத்தில் குவிந்து போவதைத் தடுப்பதற்கு அரசு நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும் என்ற ஒரு விதியை அதில் சேர்த்திருப்பதாலும் **துவை முஷாயன்** போன்ற ஏற்பாடுகளின் மூலம் இருதரப்பினர், சொத்தைப் பகிர்ந்து கொள்வதற்கு ஒப்புக்கொண்டு, அதைத் தங்களிடமே வைத்துக் கொள்ளக் கூடாது. மேலும், உண்மையான சுவீகாரத்தை செய்ய விரும்பும் தரப்புகள், சட்டத்தினால் அனுமதிக்கப்பட்டுள்ள **தாத்தகா** சுவீகாரம் சம்பந்தமான விதிமுறைகளுக்கு உட்படாம லிருப்பதற்கு எவ்வித நியாயமுமில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** இப்பொழுது ஒரு மணி ஆகியுள் ளது. மாண்புமிகு அமைச்சர் மதிய உணவிற்குப் பிறகு தம்முடைய உரையைத் தொடரலாம்.

*(அதன் பின்னர் பிற்பகல் 2.30 மணி வரையில் மதிய உண விற்காகப் பேரவை ஒத்திவைக்கப்பட்டது.)*

---

மதிய உணவிற்குப் பிறகு பிற்பகல் 2.30 மணிக்க பேரவை மீண்டும் கூடியது. திரு. துணை சபாநாயகர், (திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்) தலைமை தாங்கினார்.

---

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கூட்டுடைமை சட்டம் சம்பந்தமான சர்ச்சைக்குரிய அம்சங்களை எடுத்துக்கொள்ள நான் விரும்பவில்லை. கூட்டுடைமையின் மரபுரிமையில் இணையுரிமை பெறுவதை ரத்து செய்வதற்கு இந்த மசோதா ஏன் விரும்புகிறது? மிதாக்ஷரா சட்டத்தினால் அது வழங்கப்பட்டுள்ளது. இப்பொழுது, ஐயா, நான் நன்கு சிந்தித்தபின், இந்த விஷயங்களை முறையாக விளக்குவதற்கு என்னால் முடியும். இந்தப் பிரச்சினையை மூன்று வெவ்வேறு நிலைகளிலிருந்து பரிசீலனை செய்யப்பட வேண்டிய அவசியமுள்ளது என்று கருதுகிறேன். ஒன்று சொத்தின் எவ்வளவு பாகம் 'கூட்டுடைமை, சொத்து' என்று அழைக்கப்படுவதன் எல்லை வரம்புக்குள் உட்படுத்தப்படுகிறது. கூட்டுடைமைச் சொத்து என்று அழைக்கப்படுவதில் அடங்கியுள்ள சொத்தின் அளவு, இந்தக் காலத்தில் ஒரு மனிதன் கொண்டிருக்கும் சொத்தின் ஒரு மிகப் பெரிய பாகமாக இருந்தால், இந்தப் பிரச்சினை சம்பந்தமாக ஆழ்ந்த கவனம் செலுத்த வேண்டுமென்பதில் சிறிதும் ஐயமில்லை. எனவே நாம் பரிசீலனை செய்யவேண்டிய பிரச்சினையின் முதல் அம்சம் இதுவே.

'கூட்டுடைமைச் சொத்து' என்றழைக்கப்படுவதை அப்படியே நீடித்துவைக்க வேண்டும் என்பது சம்பந்தமாக நாம் பரிசீலனை செய்ய வேண்டிய இரண்டாவது அம்சம் என்னவெனில், 'கூட்டுடைமைச்' சொத்தில் உரிமை உள்ள எவரும் சொத்தை மாற்றிக் கொடுப்பதற்கான உரிமையைத் தனிப்பட்ட முறையில் பெற்றிருக்கிறாரா என்பதாகும். மூன்றாவதாக, கூட்டுடைமைச் சொத்தைப் பிரிப்பதற்கு எந்தக் 'கூட்டுடைமையாளராவது' உரிமை பெற்றிருக்கிறாரா என்பதாகும். 'கூட்டுடைமைச்' சொத்து என்றழைக்கப்படும் பிரிவில் அடங்கியுள்ள சொத்து, சொத்தின் ஒரு சிறிய பாகமாக இருந்தால், வேறு விதமான பிரச்சினைகள் எழும் என்பது வெளிப்படை. இதுபோன்றே, எந்த ஒரு 'கூட்டுரிமையாள'ராவது தற்போதிருந்துவரும் இந்து சட்டத்தின்கீழ் சொத்தில் தனது பங்கை மாற்றிக் கொடுக்கும் உரிமையை ஏற்கனவே பெற்றிருந்தால், இந்தச் சட்டம் அல்லது இந்த மசோதா 'கூட்டுடைமைச்' சொத்தை ரத்து செய்கிறதா என்ற அடிப்படையான பிரச்சினையும் எழும் என்பது தெளிவு.

இதுபோன்றே, தற்போதுள்ள இந்து சட்டத்தின்படி, ஒரு 'கூட்டுரிமை யாளர்' சொத்தைச் சிதைப்பதற்கு உள்ளார்ந்த உரிமை பெற்றிருந் தால், இது சம்பந்தமாக என்னுடைய விண்ணப்பம் என்னவெனில், 'கூட்டுடைமையை' இந்த மசோதா உடைக்கிறது என்ற பிரச்சினை, இந்த அவையின் பெரும்பாலான உறுப்பினர்களும் வெளியிலுள்ள மக்களும் கருதியதற்கு மாறாக மிகவும் குறைவான முக்கியத்துவ முடையதாகிறது.

எனவே, முதலாவது பிரச்சினையை இப்பொழுது எடுத்துக் கொள்கிறேன்; ஒரு 'கூட்டுரிமையாளர்' - 'கூட்டுடைமையில்' அவரும் ஓர் உறுப்பினர் என்று இருந்தபோதிலும் கூட்டுடைமை அல்லாத சொத்தில் எந்த அளவுக்கு வைத்துக் கொள்ளலாம். இந்தப் பிரச்சினையில் கவனம் செலுத்தி, இந்து சட்டத்தின் கீழ் நிலைமை என்ன என்பதை அறிந்துள்ள என்னுடைய நண்பர்கள் ஒரு 'கூட் டுரிமையாளராகத்' தொடரும்போதே, ஒருவர் தனிச் சொத்தைக் கொண்டிருப்பதில் எத்தகைய தகுதி இழப்பும் இல்லை என்பதை அறிவார்கள். ஒரு 'கூட்டுரிமையாளர்' இருவகைப்பட்ட சொத்துக் களைக் கொண்டிருப்பதற்கு - கூட்டுரிமையாளருக்குச் சொந்தமான சொத்துக்கள் மற்றும் கூட்டுரிமையாளருக்குச் சொந்தமில்லாத, ஆனால் தனக்குச் சொந்தமான, அதாவது, கூட்டுடைமையில் மறு பங்காளிக்குப்பின் எஞ்சியிருப்பவர்க்குரிய முழு உடைமை உரிமை யில் கிடைக்கும் சொத்து அல்லாததையும் கொண்டிருக்கும் ஆற்றல் உடையவராக இருக்கக்கூடும்.

ஒரு 'கூட்டுரிமையாளர்' அவர் ஒரு கூட்டுரிமையாளராக இருந்தபோதும் சொத்தின் அளவு மற்றும் தன்மை குறித்து அவைக்கு ஒரு கருத்தை நான் கொடுக்க விரும்புகிறேன். இந்து சட்டம் சம்பந்த மாகத் தற்போது இருந்து வரும் புத்தகங்களிலிருந்து, ஒரு கூட்டுரிமை யாளர் அவர் ஒரு 'கூட்டுரிமையாளராக' இருப்பதையும் பொருட் படுத்தாது, கீழ்வரும் வகைப்பட்ட சொத்துக்களைக் கொண்டிருக்க முடியும்: முதலாவதாக, ஓர் இந்து தனது தகப்பனார், பாட்டனார், மற்றும் கொள்ளுப் பாட்டனார் அல்லாத ஒரு நபரிடமிருந்து வாரிசாகப் பெறும் சொத்து. தனது தகப்பனாரல்லாத, பாட்டனார் அல்லது கொள்ளுப்பாட்டனார் அல்லாத ஒரு நபரிடமிருந்து ஓர் இந்து சொத்தைப்பெற்றால், அவர் கையிலுள்ள அந்த சொத்து, தனிச் சொத்தாகும், அது 'கூட்டுரிமையாளரு'க்குச் சொந்தமான தல்ல. இரண்டாவதாக, தனது தாய்வழிப் பாட்டனாரிடமிருந்து வாரிசாகப் பெற்ற சொத்து; மூன்றாவதாக, தனது தகப்பனாரால்

தனக்குப் பரிசாக வழங்கப்பட்ட முன்னோர்களின் அசையும் சொத்துக்கள். நான்காவதாக, 'கூட்டுரிமை'யின் உறுப்பினராகிய ஒரு நபருக்கு அரசினால் வழங்கப்பட்ட சொத்து; அது அவருடைய தனிப்பட்ட சொத்தாகும், கூட்டுரிமைச் சொத்து அல்ல. ஐந்தாவதாக, குடும்பத்தினால் இழக்கப்பட்ட முன்னோர்களின் சொத்து, குடும்பச் சொத்தின் துணையின்றி மீட்டெடுக்கப்பட்ட சொத்து. அதுவும், முதலில் கூட்டுரிமைச் சொத்தாக இருந்தபோதிலும், பிறகு அவருடைய தனிச் சொத்து ஆகிறது. ஆறாவதாக, தனிச் சொத்திலிருந்து கிடைக்கும் வருமானம், அத்தகைய சொத்தின் வருமானத்திலிருந்து வாங்கப்பட்ட பொருள்கள். அவையும் தனிப்பட்ட சொத்தாகும். ஏழாவதாக, பாகப்பிரிவினையின் மூலம் ஒரு கூட்டுரிமையாளருக்குக் கிடைக்கும் பங்கு (அவருக்கு ஆண் குழந்தை இல்லாத போது). எட்டாவதாக, சுவீகாரம் எடுத்துக் கொள்ளக்கூடிய அதிகாரத்துடன் கூடிய விதவை இல்லாத போது, எஞ்சியுள்ள ஒரே 'கூட்டுரிமையாளர்' கொண்டுள்ள சொத்து. ஒன்பதாவதாக, ஒரு கூட்டுக் குடும்ப கூட்டுரிமையில் ஓர் உறுப்பினரின் தனிப்பட்ட வருமானம், மற்றும் பத்தாவதாக, கல்வியின் மூலமான ஆதாயங்கள். இந்தப் பத்து இனங்களில் உட்படுத்தப்பட்டுள்ள இவ்வளவு பெரும் அளவான சொத்து, இன்று, மிதாக்ஷரா சட்டத்தின் கீழ், ஒரு 'கூட்டுரிமையாளரின்' தனிச் சொத்தாகும். அது கூட்டுரிமையாளரின் சொத்து ஆவதில்லை.

ஒரு தெளிவான உதாரணத்தின் மூலம் இதை விளக்குகிறேன். நமது செயலகத்தில் நூற்றுக் கணக்கான எழுத்தாளர்கள் இருக்கிறார்கள்; சிலர் குறைவான சம்பளம் வாங்குகிறார்கள். சிலர், கேபினட் அமைச்சர்களின் சம்பளங்களைக் காட்டிலும் கூடுதலாக, பெருமளவு சம்பளம் - ரூ. 4000 வாங்குகிறார்கள். (மதிப்புக்குரிய உறுப்பினர்கள்: ''எழுத்தர்கள்?'' அவர்கள் எழுத்தர்களா?'') நான் அதிகாரிகளை அர்த்தப்படுத்துகிறேன். ஓர் அர்த்தத்தில், அவர்கள் மேல்தட்டு எழுத்தர்களாவார்.

இந்த அவையின் முன் நான் சமர்ப்பிக்க விரும்புகிற விஷயம் இதுதான்: கல்வி கற்றதன் மூலமான ஆதாயங்கள் என்ற வகையிலான இவ்வளவு பெரிய வருமானம் சில தனி நபர்கள் விஷயத்தில் ரூ. 4000ற்கு வருகிறது. ஒரு கூட்டுக் குடும்பம், அந்த சொல்லின் உண்மையான பொருளில் அவ்வாறிருந்தால், அந்தத் தொகை அந்தக் குடும்பத்தின் கூட்டுப்பராமரிப்புக்காக, அந்தக் கூட்டுக்குடும்பத்திற்கு உரியதாக வேண்டும். ஆனால் என்ன ஏற்படுகிறது? ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னர்தான் நிறைவேற்றப்பட்ட, கல்வியின்

பயனாகப் பெற்ற ஆதாயங்கள் சட்டத்தின் கீழ், இதே பேரவையே, உறுப்பினர்களை நான் குறிப்பிடவில்லை - கல்வியின் பயனாகப் பெற்ற ஆதாயங்கள் - இவை ஒரு கூட்டுக்குடும்பத்தின் வருமானத்தின் பிரதான பாகமாக அமைகிறது, மற்றும் குடும்பத்தின் வருமானத்திலிருந்துதான் அவருக்குக் கொடுக்கப்பட்ட அந்தக் கல்வியின் பயனாக அந்த உறுப்பினர் பெற்ற அந்த வருமானம், அவருடைய சொந்த மற்றும் தனிப்பட்ட வருமானம் என்று கூறியது, எனவே இந்த அவையின் முன்னே நான் தெரிவித்துக் கொள்வது இதுதான்: நான் குறிப்பிட்டதுபோன்று அவ்வளவு பெரிய வருமானம் - இந்த பத்து வெவ்வேறு இனங்களில் உட்படுத்தப்பட்டது - மிதாக்ஷரா மூல சட்டங்களைத் திருத்தப்பட்டதன் மூலம் தனிப்பட்ட சொத்தாக்கப் பட்டதற்குப்பின், 'கூட்டுரிமை'ச் சொத்தாக அமைவதற்கு மீதி சொத்து எவ்வளவு பாக்கியிருக்கும்? என்னுடைய விண்ணப்பம் என்னவெனில், 'கூட்டுரிமை'க்குள் அமைவதற்கு, மெய்யாகவே, மிக, மிகச் சொற்பமான அளவு சொத்தே மீதமிருக்கிறது. மற்றையப் பிரச்சினையை எடுத்துக் கொண்டு பார்க்கலாம். 'கூட்டுரிமை' யானது, மிகவும் குறுகியது, வரையறைக்குட்பட்டது. அது ஒரு கூட்டுக் குடும்பம் போன்றதல்ல, அது முற்றிலும் வேறு விஷயம் என்பதை உறுப்பினர்கள் புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன் - அந்த முறையானது, இந்துக்கள், சொத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்கு, நீடித்துவைத்துக் கொள்வதற்கு வகை செய்கிறது. அதைப் பிரிக்க முடியாது, குடும்பத்தின் எந்த உறுப்பினரும் பணத்தை வீண்விரயம் செய்ய முடியாது, இந்த அவைக்கு முன்னால் நான் வைக்க விரும்புகிற கேள்வி இதுதான்: தற்போதுள்ள மிதாக்ஷரா சட்டத்தின்கீழ், இந்த சொத்தை மாற்றிக் கொடுக்கப்பட முடியாது, வீண் விரயம் செய்ய முடியாது என்பது உண்மையா? இதற்கான விடை முற்றிலும் எதிர்மறையானதே. உங்களுக்கு இரண்டொரு உதாரணங்களைக் கொடுக்க விரும்புகிறேன். தகப்பனார் விஷயத்தை எடுத்துக் கொள்கிறேன். தகப்பனார், கூட்டுச் சொத்தை, முந்திய கடனுக்காக மாற்றிக் கொடுக்க முடியும். தகப்பனார் செய்ய வேண்டியதெல்லாம், முதலாவதாக, ஒரு கடனை உருவாக்கவேண்டும். உதாரணமாக ஒரு சொந்த பிராமிசரி பத்திரத்தின்பேரில், ஓர் ஆயிரம் அல்லது இரண்டாயிரம் ரூபாய்க்கான கடனை ஏற்படுத்த வேண்டும். அதைத் தொடர்ந்து, ஆறு மாதங்களுக்குப் பிறகு, 'கூட்டுரிமை'ச் சொத்து முழுவதையும் விற்பதற்கு அவர் உரிமை பெறுகிறார். முந்திய கடனைச் செலுத்துவதற்கு அது அவசியமானால், அவர் அந்த உரிமை பெறுகிறார். இப்பொழுது இந்த அவைக்கு நான் செய்து கொள்ளும் விண்ணப்பம் இதுதான்: முற்றிலும் முந்திய மற்றும்

சொந்த (தனிப்பட்ட) கடன்களை செலுத்துவதற்காகச் சொத்தை விற்பதற்கு ஒரு தகப்பனாருக்கு இவ்வளவு அதிகமான அதிகாரத்தை வழங்குவதா? சொத்தை மாற்றிக் கொடுப்பதைப் பொறுத்தமட்டிலும் தகப்பானருக்கும் சொத்தை நிர்வகிப்பவருக்கும் (மேலாளர்) இடையில் மிதாக்ஷரா சட்டம் வேறுபாட்டைச் செய்கிறது என்பதை இந்த அவை கவனத்தில் கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஒரு மேலாளர், சொத்தை மாற்றிக் கொடுப்பதற்கு ஒரு குடும்ப அவசியம் இருக்கிறது என்று நிரூபணம் செய்யப்பட்டாலொழிய அவ்வாறு நிரூபணம் செய்கின்ற வரையிலும், 'கூட்டுரிமைக்குச்' சொந்தமான ஒரு சொத்தை மாற்றிக் கொடுக்க முடியாது என்பது மெய்யே. ஆனால் ஒரு தகப்பனாரைப் பொறுத்தமட்டிலும், அத்தகைய கடப்பாடு ஒன்றும் கிடையாது. ஒரு தகப்பனார், தனக்கு தனிப்பட்ட முறையில் ஒரு கடனை உருவாக்கிக்கொண்டால், அவர் குடும்பத்தின் விவகாரங்களுக்கு ஏற்பட்டதல்லாத, முற்றிலும் சொந்த (தனிப்பட்ட) கடனுக்காக, அந்த சொத்தை மாற்றிக் கொடுப்பதற்கு அவர் உரிமை பெறுகிறார். மிதாக்ஷரா சட்டத்தின் கீழ், தகப்பனார் சொத்தை மாற்றிக் கொடுப்பதற்கு கொண்டுள்ள உரிமையின் மீது சுமத்தப்படும் ஒரே வரம்பு, அந்தக் கடன் கீழ்த்தரமானதாக, இழிவான நோக்கத்துடன் கூடியதாக இருக்கக்கூடாது. அது ஓர் ஒழுக்கமற்ற காரியத்திற்காக அல்லவென்றால், தகப்பானர் அந்த 'கூட்டுரிமை'ச் சொத்து முழுவதையும் மாற்றிக் கொடுக்க (விற்பதற்கு) முடியும். இதற்கு வரம்பே இல்லை.

இதுபோன்றே, மகனின் பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். இதுவும் மிதாக்ஷரா சட்டத்தின் கீழ் வருகிறது. அவன், தான் விரும்பும் எந்த சமயத்திலும் குடும்பச் சொத்தைப் பிரித்துக் கொடுக்கும்படிக் கேட்பதற்கு அவனுக்கு உரிமையுண்டு. சொத்தை மாற்றிக் கொடுப்பதற்கு எந்தக் 'கூட்டுரிமையாளரு'க்கும் உரிமையில்லை, சொத்து தொடர்ந்து 'கூட்டுரிமைச்' சொத்தாக இருக்க வேண்டும் என்று இந்து சட்டத்தின் விதி இருக்குமானால், கூட்டுரிமைச் சொத்தை அப்படியே கட்டிக்காக்க வேண்டும் என்ற வாதத்தை நான் நன்கு புரிந்து கொண்டிருக்க முடியும். ஆனால் நிலைமை அதுவல்ல. சொத்தைப் பிரிப்பது என்பதனுடைய வேர், கூட்டுரிமைச் சொத்தைக் கலைக்க வேண்டும் என்பதனுடைய வேர். கூட்டுரிமைக் கோட்பாட்டிலேயே உள்ளது, ஏனெனில் கூட்டுரிமைச் சட்டம்தான் ஆதிக்க உரிமையை, சொத்தைப் பிரிக்க வேண்டுமென்று கோருவதற்கும் சமுதாயம் முழுவதையும் சீர்குலைப்பதற்குமான உரிமையை பிறப்பிலிருந்தே வழங்குகிறது.

மூன்றாவதாக, ஒரு மகன் தனது சொத்தை மாற்றிக் கொடுக்கா விட்டாலும், அவன் தன் சொந்த நோக்கங்களுக்காக, அந்த சொத்தின் மீது ஒரு கடனை உருவாக்கமுடியும். மேலும், மிதாக்ஷரா சட்டத்தின் கீழ், முன்பணமாகக் கடன் கொடுத்தவர் அந்தக் கடனைத் திரும்பப் பெறுவதற்காக, 'கூட்டுரிமை'ச் சொத்தை பாகப்பிரிவினை செய்ய வேண்டுமென்று வழக்குத் தொடுப்பதற்கு அவருக்கு முழு உரிமை யுண்டு. எனவே, ஓர் அந்நியர், மிதாக்ஷரா சட்டத்தின் கீழ் 'கூட் டுரிமை'ச் சொத்தைப் பிரிப்பதற்கு உரிமையுள்ளவராகிறார். இந்த விஷயத்தைப்பற்றி கவலையடையும் என்னுடைய மதிப்புக்குரிய நண்பர்களை நான் இவ்வாறு கேட்க விரும்புகிறேன்: நில புலன் களின், சொத்துக்களின் ஒரு பெரும்பகுதி, 'கூட்டுரிமை' சொத்துக்கு வெளியில் இருக்கும் நிலைமையில், மற்றும் கூட்டுரிமைச் சொத்தைப் பொறுத்த மட்டிலும், எத்தகைய வரம்புமின்றி தகப்பனார் - ஒழுக்க மற்ற கடன் மட்டும் விதிவிலக்காக இருக்கும் - அதை மாற்றிக் கொடுப்பதற்கு உரிமையுடையவர் : மகன், தான் விரும்பும் எந்த சமயத்திலும் சொத்தைப் பிரிப்பதற்கு உரிமையுள்ளவன், அந்த சொத்தின் மீது ஒரு கடனை உருவாக்குவதற்கு மகனுக்கு உரிமை உண்டு, இது சொத்தை பாகப்பிரிவினை செய்வதற்கு வழக்குப் போடுவதற்குக் கடன் கொடுத்தவருக்கு வகை செய்கிறது - இது ஓர் உறுதியான அமைப்பு என்று, ஓட்டை உடைசல் இல்லாதது, நேர்மை யானது என்று கூற முடியுமா? என்னுடைய விண்ணப்பம் இதுதான்: தற்போதிருக்கும் நிலைமையில் 'கூட்டுரிமைச்' சொத்து சம்பந்தமான சட்டம், அதனுள் சீர்குலைவுக் கூறுகளைக் கொண்டுள்ளது. எனவே, பங்கு தனியாக வைக்கப்படவேண்டுமென்று சொல்வதன் மூலம் மசோதா மிகவும் தீவிரமானது எதையும் செய்யவில்லை. இன்றுள்ள நிலைமையில் ஒவ்வொருவரும் தனியாக வாழ்வதற்கு விரும்புவதை நாம் அனைவரும் அறிவோம். ஒரு தகப்பனார் இறந்தவுடனே, இன்றுள்ளபடி நிலவரங்கள் சட்டப்படி அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று மகன்கள் (உரிமை) கோருகிறார்கள். மசோதாவின் இந்தப் பாகத்தில் தீவிரமானது எதுவும் இல்லை.

ஆனால், ஒரு விஷயத்தை நான் கூறவேண்டும் - இது பொதுவாக உணரப்படுவதில்லை என்று நினைக்கிறேன். 'கூட்டுரிமை'க்கும் கூட்டுக் குடும்பத்திற்கும் இடையில் ஒரு வேறுபாட்டைக் காண வேண்டும் என்று கூறி நான் தொடங்கினேன். இந்த மசோதா 'கூட்டுரிமையை' அகற்றும் அதேபொழுதில் கூட்டுக் குடும்பத்தை நிலைநிறுத்துகிறது. கூட்டுக் குடும்பம் பராமரிக்கப்படுவதை அது தடுப்பதில்லை. ஒரே ஒரு விஷயம் என்னவெனில், மிதாக்ஷரா

சட்டத்தில் கூட்டுக் குடும்பமானது, தாயபாகா சட்டத்தின்கீழ் கூட்டுக் குடும்பம் எவ்வாறு கருதப்படுகிறதோ, அதே அடிப்படையிலும், அதே தன்மையிலுமே கருதப்படுகிறது. மிதாக்ஷரா சட்டம் வங்காளத்தில் அமலில் இல்லாததால், அங்கு கூட்டுக் குடும்பம் இல்லை யென்ற முடிவுக்கு வந்து விடக்கூடாது. கூட்டுக் குடும்பம் இருக்கவே செய்கிறது. ஒரே ஒரு வேறுபாடு என்னவெனில், கூட்டுக் குடும்பத்தின் உறுப்பினர்கள், கூட்டு நிலச் சொத்துரிமையாளர்கள் என்ற முறையில் தமது உரிமைகளைக் கொண்டிருப்பதற்கு பதிலாக, அவற்றை பொது நிலையிலான உரிமையாளர்களாக இருப்பார்கள். மிதாக்ஷராவில் தற்போதுள்ள சட்டத்திற்கும் மிதாக்ஷராவில் வருங்கால சட்டத்திற்கும் இடையிலுள்ள ஒரே வேறுபாடு இது மட்டுமேயாகும்.

இனி, பெண்களின் சொத்துரிமைப் பிரச்சினைக்கு வருகிறேன். இந்த விஷயத்தின் நுட்பங்களை (சிக்கல்களை) இந்த அவையின் எத்தனை உறுப்பினர்கள் அறிந்துள்ளனர் என்பது எனக்குத் தெரியாது. இந்த விஷயத்தை என்னால் ஆய்வு செய்ய முடிந்தவரையில், பெண்களின் சொத்துரிமைப் பிரச்சினையைப் போன்று இவ்வளவு சிக்கலான, இவ்வளவு திருக்குமறுக்கான (மறைபுதிரான) பிரச்சினை வேறு எதுவும் இந்து சட்டத்தில் இருப்பதாக நானறியேன் (ஒரு மதிப்புக்குரிய உறுப்பினர்: ''பெண்ணைப் போன்றே'') : பெண்ணைப் போன்றே சீதனம் என்றால் என்ன என்ற கேள்வியை நீங்கள் கேட்டால், அந்தக் கேள்விக்கு பதிலளிக்குமுன், நீங்கள் வேறொரு கேள்வியைக் கேட்டு, அதற்கு விடை காண வேண்டும். 'அவர் ஒரு கன்னிப்பெண்ணா' அல்லது 'அவர் திருமணமான பெண்ணா' என்று நீங்கள் முதலில் கேட்க வேண்டும். ஏனெனில், எந்தச் சொத்து சீதனம், எந்தச் சொத்து சீதனமல்ல என்பது பெண்ணின் தகுதியைப் பொறுத்துள்ளது. அவள் ஒரு கன்னிப் பெண்ணாக இருக்கும்பொழுது பெற்றிருந்தால் அது சீதனச் சொத்து ஆகும். தனது திருமணத்திற்குப் பிறகு அவள் அதைப் பெற்றிருந்தால், அது சீதனச் சொத்து ஆகாது. எனவே, இதைத் தொடர்ந்து, சீதனம் பெறுவதற்கான வாரிசுரிமை என்ன என்ற கேள்வியை நீங்கள் கேட்டால், சீதனம் ஒரு கன்னிப் பெண்ணுக்குச் சேர்ந்ததா அல்லது திருமணமான பெண்ணுக்குச் சேர்ந்ததா என்ற கேள்வியை மீண்டும் நீங்கள் கேட்க வேண்டும். திருமணமான பெண்ணின் சொத்துக்கு வாரிசுரிமைப் பிரச்சினைக்கு நீங்கள் வரும்போது, அவள் வங்காளப் பிரிவைச் சேர்ந்தவளா, அல்லது மிதாக்ஷரா பிரிவைச் சேர்ந்தவளா என்று மீண்டும் நீங்கள் கேட்க வேண்டும். அவள் மிதாக்ஷரா பிரிவைச் சேர்ந்தவளா என்ற கேள்வியை

நீங்கள் கேட்டால், ஒரு திட்டவட்டமான பதிலை நீங்கள் ஒருபோதும் பெற முடியாது. இதற்கு நீங்கள், மேலும் ஆய்வுசெய்து, அந்தப் பெண் மிதிலா பிரிவைச் சேர்ந்தவளா, பனாரஸ் (காசி) பிரிவைச் சேர்ந்தவளா, அல்லது வேறு ஏதாவது பிரிவைச் சேர்ந்தவளா என்று நீங்கள் மேலும் கேட்கவேண்டும், இது மிக மிகச் சிக்கலான விஷயம் ஆகும். அதே சமயத்தில், மதிப்புக்குரிய உறுப்பினர்கள் இரண்டு விஷயங்களை மனதில் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஒரு விஷயம்: பெண்களின் சொத்துடைமையைப் பொறுத்த மட்டிலும், பொதுவாகப் பார்க்கும் போது, அது இரண்டு வகையானதாகும்: ஒரு வகை, அவளுடைய **சீதனம்** என்றழைக்கப் படுகிறது; மற்றது கணவனை இழந்தவரின் (விதவையின்) சொத்து ஆகும். பிந்திய சொத்தானது, தனது குடும்பத்தின் ஓர் ஆண் உறுப் பினரிடரிருந்து அவள் வாரிசுரிமையாகப் பெறுவதாகும்; தற்போ திருந்து வரும் சட்டத்தின்படி, தன் வாழ்நாளின்போது மட்டும் அவள் சொந்தமாகக் கொண்டுள்ள சொத்து. அதன் பின்னர், ஆண் வாரிசுக்கு (உரிமை மீள்வரவாளருக்கு) சொந்தமானதாகிறது. இதுதான் நிலைமை.

எனவே, பெண்களின் சொத்துடைமையைப் பொறுத்தமட் டிலும், இரண்டு வெவ்வேறு வகைப்பட்ட வாரிசுரிமையும் இரண்டு வெவ்வேறு வகைப்பட்ட சொத்துக்களும் நம்மிடையே உள்ளன - சீதனச் சொத்து, விதவையின் சொத்து. சீதனச் சொத்தின் வாரிசு களும், ஓர் ஆண் உறுப்பினரிடமிருந்து அவள் வாரிசுரிமையாகப் பெறும் சொத்தின் வாரிசுகளும் வெவ்வேறானவர்கள். எனவே, இந்து சட்டத்தின் இந்தக் குறிப்பிட்ட பிரிவை சட்டத் தொகுப்பில் சேர்க்கும்போது, நாம் கவனிக்க வேண்டிய விஷயம் இதுதான்: தற்போதிருந்து வருவதைப் போல், சீதனச் சொத்து, விதவையின் சொத்து என்ற இரு பிரதான பிரிவுகளை நாம் அப்படியே பரா மரிக்கப் போகிறோமா? இரண்டாவதாக, இரண்டு வகைப்பட்ட வாரிசுரிமையை நாம் தொடர்ந்து பராமரிக்கப் போகிறோமா? சீதனச் சொத்துக்கு ஒருவகைப்பட்ட வாரிசுரிமை, விதவையின் சொத்துக்கு மற்றொரு வகைப்பட்ட வாரிசுரிமை? இந்த சட்டத்தை சட்டத்தொகுப்பில் சேர்ப்பதற்குத் தொடங்கும்போது, எழக்கூடிய இரு பிரதான கேள்விகள் இவைதான். சட்டத் தொகுப்பில் சேர்ப் பதைப் பொறுத்தமட்டிலும், தற்போதுள்ள குழப்பம் நீடிப்பதற்கு நாம் அனுமதித்தால், இதனுடைய நோக்கம் தோல்வியடையும் என்ற முடிவுக்குக் குழு வந்தது. ஒன்று முழுஉரிமையுடன் கூடிய சொத்தைக் கொண்டிருப்பதற்கு ஒரு பெண் தகுதியுடையவளல்ல

என்று நாம் முடிவு செய்யவேண்டும்; அல்லது ஒரு பெண் முழு உரிமை பெற்ற சொத்தைக் கொண்டிருக்க வேண்டும் என்று முடிவு செய்யவேண்டும். ஒரு பெண்ணுக்கு வாரிசுரிமை எப்படி என்பதையும் நாம் முடிவு செய்ய வேண்டும். அவை ஒரே சீராக இருக்க வேண்டுமா அல்லது வெவ்வேறாக இருக்க வேண்டுமா? சொத்துக்கான உரிமையைப் பொறுத்தமட்டிலும், அது ஒரே சீரானதாக இருக்க வேண்டும், அந்த ஒரே சீரான தன்மை பெண்ணுக்கு முழுச் சொத்துரிமை உண்டு என்பதை அங்கீகரிக்க வேண்டும் என்று குழு முடிவு செய்தது.

பெண்கள் முழு (தனி) உரிமையுடன் கூடிய சொத்தைப் பெறுவதற்கு எதிராக எப்போதும் கூறப்படும் வாதத்தை நான் பெருமளவு அறிவேன். பெண்கள் பிறவியிலேயே கூர்மதியற்றவர்கள் என்று கூறப்படுகிறது; அவர்கள் எப்போதும் பலவகைப்பட்ட மக்களின் செல்வாக்குக்கு ஆட்படுகிறவர்கள், எனவே, உலகில் பெண்களை பலவகைப்பட்ட தந்திரமான மனிதர்களின் (ஆண்களின்) செல்வாக்குகளுக்கு இரையாகும்படிவிடுவது மிகவும் அபாயகரமானதாகும்; அவர்கள், சொத்தைப் பைசல் செய்வதற்கு ஏதாவது ஒரு வழியில் பெண்களை ஆட்படச் செய்யக்கூடும்; இது அவர்களுக்கும், அவர்கள் எந்தக் குடும்பத்திலிருந்து வாரிசுரிமையாக சொத்தைப் பெற்றார்களோ அந்தக் குடும்பத்திற்கும் கேடு விளைவிப்பதாயிருக்கும் என்றும் கூறப்படுகிறது. இது சம்பந்தமாகக் குழுவினுடைய பார்வை (அல்லது கருத்து) மிகவும் எளிமையான ஒன்றேயாகும். சில விஷயங்களில் அல்லது சீதனச் சொத்து என்றழைக்கப்படும் சிலவகைப்பட்ட சொத்துக்கள் விஷயத்தில், பெண்களுக்கு முழு உரிமை வழங்குவதற்கு ஸ்மிருதிகள் தயாராக உள்ளன. தனது சீதனச் சொத்தின் மீது பெண்ணுக்கு முழு உரிமை உண்டு என்பதைப் பற்றி எத்தகைய ஐயப்பாடும் இல்லை. தான் விரும்பும் எந்த முறையிலும் அந்தச் சொத்தை அவள் செலவழிக்கலாம். அவைக்கு என்னுடைய விண்ணப்பம் இதுதான்: தன்னுடைய சீதனச் சொத்தைச் தான் விரும்புகிற சிறந்த முறையில் செலவிடுவதற்கு ஒரு பெண்ணை நம்புகிறோமென்றால் - மிதாக்ஷராவின் இந்த விதியை அகற்றுவதற்கு யாரும் ஒருபோதும் எந்த வாதத்தையும் எழுப்பவில்லை. சொத்தின் மற்றைய பாகத்தை, அதாவது, விதவையின் சொத்தை (அவள் வாரிசுரிமையாகப் பெற்றதை) அவளுடைய தனி முதல் சொத்தாக்கக் கூடாது என்று கூறுபவர்கள், தங்களுடைய வாதத்தை மெய்ப்படுத்துவதற்கான சான்றை அளித்தாக வேண்டும். பெண்கள், தாங்கள் கொண்டுள்ள சொத்தின் ஒரு குறிப்பிட்ட பாகத்தை (தம்

விருப்பப்படி) செலவழிப்பதற்குத் தகுதியுடையவர்களாக இருக்கும் அதே சமயத்தில், குறிப்பிட்ட வேறொரு பகுதியை செலவழிப்ப தற்கு அவர்களுக்குத் தகுதியில்லை என்று எதிர்ப்பாளர்கள் நிரூபணம் செய்தாக வேண்டும். இவ்விஷயத்தை மிகவும் கவனமாக ஆய்வு செய்தபின், குழு இந்த சங்கடத்திற்கு ஒரு திருப்திகரமான தீர்வு காண்பதற்குத் தவறியது. சில விஷயங்களில் பெண்கள், தங்கள் சொத்தை விற்பதற்கும் செலவழிப்பதற்கும் தகுதி உடையவர்களாக வும், கூர்மதி உடையவர்களாகவும் இருக்கிறார்களென்றால், மற்றைய சொத்தையும் பைசல் செய்வதற்கு அவர்கள் தகுதியுடையவர்கள் தான் என்றே கொள்ளவேண்டும் என்று குழு மிகவும் சரியான முடிவுக்கே வந்தது என்று கருதுகிறேன். இந்தக் காரணத்தினால்தான் பெண்கள் முழுச் சொத்துரிமையை இப்பொழுது பெற்றிருக்க வேண்டும் என்ற விதியைக் குழு இயற்றியது.

இந்தப் பிரச்சினையில் எழுகின்ற மற்றையக் கேள்வி, அதாவது, பெண்களின் சொத்து மகளின் பங்கு ஆகும் என்பது. இது ஒரு கூருணர்வுடைய பிரச்சினை என்று கூறுவது மிகவும் எளிமைப் படுத்திக் கூறுவதாகும். இது மிகவும் ஆர்வமூட்டும் பிரச்சினை யாகும். இன்று இந்த உலகிலும், இந்தியாவிலும் வைதீகமான, வைதீகமற்ற பலருக்குப் பெண் குழந்தைகள் பிறக்கவே செய்கின் றனர். பெண் குழந்தைகள் பிறக்காமல் போனால், இந்த உலகிற்கு என்ன ஏற்படும் என்பது எனக்குத் தெரியாது. அதேசமயத்தில் ஆண்குழந்தைக்கும் பெண்குழந்தைக்கும் பெற்றோர் ஒரேமாதிரியான நேசத்தையும் அன்பையும் நிச்சயம் செலுத்தவேண்டிய நிலையில், மகனுக்கும் மகளுக்கும் ஒரேமாதிரியான அன்பு செலுத்துவதற்கு அவர்கள் விரும்புவதில்லை. ஆனால் பொறுக்குக் குழுவினால் வகுத்தளிக்கப்பட்டுள்ள ஆலோசனைக்கு ஆதரவாக, அதே உயர்மட்ட வாதத்தை நான் உபயோகப்படுத்தப்போவதில்லை. நான் மிகவும் தாழ்ந்த தொனியிலேயே பேசப்போகிறேன். இந்த சபையில் நான் எடுத்துக் கூறப்போகும் முதலாவது விஷயம் இதுவே. வாரிசுகளில் மகளை சேர்த்தது இந்தக் குழுவினால் செய்யப்பட்ட ஒரு புதுமை அல்ல. மிதாக்ஷராவின் கீழும் தாயபாகாவின் கீழும் இருந்துவரும் வாரிசுரிமை சட்டத்தைத் தெரிந்துள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர்கள், அந்த இரண்டிலும் 'கச்சிதமான வரிசை' என்றழைக்கப்படுவதின் கீழ் மகள் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறாள் என்பதை ஒத்துக் கொள்வார்கள் என்று நம்புகிறேன். இந்து வாரிசுகள் பலவகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை உறுப்பினர்கள் அறிவார்கள். முதல்வகையினர் கச்சிதமான வரிசை என்று அழைக்கப்படுகிறார்கள்.

அதற்குப் பின்னர் பலவகையான வாரிசுகள் - சாபிந்தர்கள், சமனோடாக்ஸ், பந்துக்கள். பந்துக்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளார்கள்: ஆத்மபந்துக்கள், பித்ருபந்துக்கள், மாத்ருபந்துக்கள், கச்சிதமான வரிசையினர் மெய்யாகவே ஒரு தனிவகைப்பட்ட வாரிசுகளாவர். இவர்கள் கோத்ரஜா, சமனோதாக்கர்கள் மற்றும் பந்துக்கள் ஆகியவர்களைச் சுற்றியுள்ள வாரிசுரிமையின் அடிப்படைக் கோட்பாடுகளுக்குக் கறாராக உட்பட்டவர்கள் அல்ல. ஏனெனில் இவர்கள் கலப்பின வகையைச் சேர்ந்தவர்கள். அது ஒரு கலப்பு வகையினம். இது இரட்டை அஸ்திவாரத்தை அடிப்படையாகக் கொண்டது. இது உறவை அடிப்படையாகக் கொண்டது. சமய நற்றிறத்தையும் இது அடிப்படையாகக் கொண்டது. சபிந்தர்கள், சமனோதாக்கர்கள், பந்துக்கள் என்ற வகைகளை நிர்ணயிப்பதற்கு வகுத்தளிக்கப்பட்டுள்ள எந்த அளவுகோல்களுக்குள்ளும் அவர்கள் அடங்குவதில்லை.

மாலை 3 மணி

மிதாக்ஷரா, தாயபாகா ஆகிய இரு சட்டங்களையும் நீங்கள் எடுத்துக் கொண்டு பார்த்தால், கச்சிதமான வரிசை என்று அறியப்பட்டுள்ள வகையில் மகள் சேர்க்கப்பட்டுள்ளதை நீங்கள் காண்பீர்கள். மிதாக்ஷராவுக்கும் தாயபாகாவிற்கும் இடையில் உள்ள ஒரே வேறுபாடு இதுதான்: தாயபாகாவின்படி, நைவேத்தியம் செய்யும் திறமை வாரிசுரிமைக்குத் தேவையான கூறு ஆகும். இதன் விளைவாக, திருமணமாகாத மகளுக்கும் திருமணமாகி, திருமணமாகி, ஒரு மகனைக் கொண்டுள்ள மகளுக்கும், விதவையாக உள்ள மகளுக்கும் இடையே ஒரு விதியை உருவாக்குகிறது. திருமணமாகாத மகளுக்கும் திருமணமாகி, ஒரு மகனைக் கொண்டுள்ள மகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது. அதை அடுத்து, திருமணமாகியுள்ள மகளுக்கு அடுத்த உரிமை. திருமணமாகாத மகளுக்கு மூன்றாவது இடம். ஆனால் அது அந்த வகையினத்திற்குள்ளேயே அடங்கியிருக்கிறது; இதன் காரணம், திருமணமாகி, ஒரு மகனையும் கொண்டுள்ள மகள். நைவேத்தியம் செய்வதற்கு அங்கிருக்கிறாள். ஏனெனில், அவளுடைய மகன் நைவேத்தியம் செய்ய முடியும். திருமணமாகாத, மகன் இல்லாத மகள், நைவேத்தியம் செய்யும் சாத்தியப்பாடு பிரச்சினையே எழவில்லை. அதனால் தான் அவள் கீழ்நிலையில் வைக்கப்பட்டிருக்கிறாள். ஆனால் நான் வலியுறுத்த விரும்பும் விஷயமும், இந்த அவை கவனத்தில் கொள்ள வேண்டும் என்று நான் விரும்பும் விஷயமும் இதுதான். கச்சிதமான வரிசை வகையில் மகளைச் சேர்த்தது புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஒன்றல்ல. மிதாக்ஷரா, தாயபாகா ஆகிய இரண்டன்படியும் அவள்

எப்போதும் இருக்கிறாள். இந்த மசோதா செய்ய முயல்கின்ற ஒரே புதுமை, மகளின் அந்தஸ்தை உயர்த்துவதுதான். இந்த மசோதாவின் கீழ் அவள், மகன், விதவை, இறந்துபோன மகனின் மனைவி (விதவை), இறந்துபோன மகளின் மகனுடைய இறந்துபோன மகன், இறந்துபோன மகனின் இறந்துபோன மகனின் மனைவி (விதவை) ஆகியோருடன் அதே சமயத்தில் வாரிசு ஆகிறாள்.

விஷயம் என்னவெனில், ஆரம்பத்தில், குறிப்பாக, மிதாக்ஷரா சட்டத்தின் கீழ் எந்தப் பெண்ணுக்கும் எத்தகைய பங்கையும் பெறுவதற்கு உரிமையில்லை. 1937ல் இந்த சட்டம் மாற்றப்பட்டது. அதன்படி, மரணமடைந்தவரின் மனைவி (விதவை), முன்பே இறந்து போன மகனின், அவனுடைய பேரனின், கொள்ளுப்பேரனின் மனைவி (விதவை) ஆகிய அனைவரும் மகனுடன் கூடவே வாரிசுகளாக்கப்பட்டனர். விட்டுவிடப்பட்ட ஒருவர் மகள். முன்பே இறந்துபோன மகனுடைய, மற்றும் முன்பே இறந்துபோன மகனுடைய மகனுடைய மனைவிகள் (விதவைகள்) ஆகியோருடன் அதே மட்டத்தில் மகளை வைத்து ஆதரவு கொடுப்பதற்கு அப்பொழுதிருந்த அரசு தயாராக இல்லை. எனவே, இந்த ஒரே புதுமையை (மாற்றத்தை) தான் இந்த மசோதா செய்கிறது. இது வாரிசுகளின் வரிசைக்கு மகளையும் உயர்த்துகிறது. முதல் தடவையாக அவள் வாரிசு ஆக்கப்படுகிறாள் என்பதல்ல.

இனி அவளுடைய பங்கு பற்றிய பிரச்சினைக்கு வருகிறேன். ராவ் குழு சுட்டிக்காட்டியது போன்றும் சாஸ்திரங்களை அறிந்த பல சாட்சிகள் சுட்டிக்காட்டியது போன்றும், ஸ்மிருதிகளின்படி, மகள், மகனுடன் கூடவே ஏககாலத்தில் வாரிசு ஆவாள். மற்றும் அவள் தனது தகப்பனாரின் சொத்தில் நாலில் ஒரு பங்குக்கு உரிமை உடையவள். அது, யாக்ஞவல்கியவரிடமிருந்தும், மனுவிடமிருந்துமான ஒரு போதனை என்று ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஒரு சமயம் நான் 137 ஸ்மிருதிகளை எண்ணினேன்; நமது பண்டைக்கால பிராமணர்கள் ஸ்மிருதிகளை வரைவதில் ஏன் நேரத்தை செலவிட்டார்கள். வேறு ஏதாவது செய்வதற்கு ஏன் நேரத்தை செலவழிக்கவில்லை என்பதைக் கூறுவது சாத்தியமல்ல. அந்தப் பணி ஒரு தலையாய பணியாக அன்று இருந்துள்ளது என்றுதான் கருத வேண்டும். நான் குறிப்பிட்ட ஸ்மிருதிகளை எழுதிய இரு ஆசான்கள் - யாக்ஞவல்கியரும் மனுவும் - ஸ்மிருதிகளை வரைவதில் ஈடுபட்ட 137 பேர்களில் மிக உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் என்பதில் ஐயமில்லை. அவ்விருவரும் மகளுக்கு சொத்தில் நான்கில் ஒரு பங்குக்கு உரிமையுண்டு

என்று கூறியுள்ளனர். ஆனால் எப்படியோ, ஏதோ காரணத்தினால் தொன்றுதொட்டு வரும் பழக்கமானது அந்த போதனையின் பயன் திறத்தை அழித்து விட்டது; அவ்வாறில்லாமலிருந்திருந்தால், நமது ஸ்மிருதிகளின் அடிப்படையிலேயே மகள் நாலில் ஒரு பங்கைப் பெறுவதற்குத் தகுதி உடையவளாக இருந்திருப்பாள். பிரிவி கவுன்சில் கொடுத்த தீர்ப்புக்காக நான் வருந்துகிறேன். நமது சட்டம் மேம்பாடு அடைவதற்கான பாதையை அது மூடிவிட்டது. ஒரு முந்தைய வழக்கில், தொன்றுதொட்டுவரும் பழக்கம் சட்டத்தைப் புறந்தள்ளி விடும் என்று பிரிவிகவுன்சில் கூறியது; இதன் விளைவாக, நமது பண்டைய சட்டங்களைப் பரிசீலனை செய்வதும், நமது ரிஷிகளும் நமது ஸ்மிருதிகளை வரைந்தவர்களும் என்ன சட்டங்களை வகுத் தளித்துள்ளனர் என்று கண்டுபிடிப்பதும் நமது நீதித்துறைக்கு மிகவும் சாத்தியமற்றதாகியது. பிரிவி கவுன்சில், தொன்றுதொட்டு வரும் பழக்கம் போதனையைப் புறந்தள்ளிவிடும் என்று அந்த முடிவை வழங்காமலிருந்திருந்தால் ஏதோ ஒரு வழக்கறிஞர், ஏதோ ஒரு நீதிபதி, யாக்ஞவல்கியரின் இந்த போதனையையும், மனு ஸ்மிருதியையும் - தோண்டியெடுப்பது சாத்தியமாயிருந்திருக்கும் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை; இன்றைய தினம் பெண்கள், அவர்களது சொத்தில் குறைந்தபட்சம் நான்கில் ஒரு பங்கை - அதைக் காட்டிலும் அதிகமில்லாவிட்டாலும் கூட - அனுபவித்து வந்திருப் பார்கள்.

அசல் மசோதா மகளின்பங்கை ஒரு பாதியாக உயர்த்தி யிருந்தது. என்னுடைய பொறுக்குக் குழு மேலும் ஒரு படி முன்சென்று, அவளுடைய பங்கை முழுமையாக்கியது; மகனுடைய பங்குக்கு சமமானதாக்கியது.

பொறுக்குக் குழுவில் என்ன நடைபெற்றது என்பதையும், எந்த ஷரத்து எவ்வாறு முடிவு செய்யப்பட்டது என்பதையும் வெளிப் படுத்துவதற்கு எனக்கு உரிமையில்லை.

நான் திட்டவட்டமாக......

**திருமதி ரேணுகா ரே** (மே. வங்கம் : பொது) : ஒருமனதாக!

**திரு. துணை சபாநாயகர் :** இது மகனின் பங்கைப் போல் இருமடங்கு என்று கோரியதிற்கும், மசோதாவில் வகை செய்யப் பட்டுள்ள பங்கில் பாதியளவு என்பதற்கும் இடையிலான ஒரு சமரசமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இது ஒரு சமரச மல்ல. என்னுடைய பகைவர்கள், என்னுடைய உற்சாகமான ஆதர வாளர்களுடன் ஒன்று சேர்ந்து கொண்டனர். மசோதாவை - அது இருந்து வருவதைக்காட்டிலும் மோசமானதாகத் தோன்றச் செய் வதன் மூலம் அந்த மசோதாவை அவர்கள் இழிவுபடுத்த முடியும் என்று என்னுடைய விரோதிகள் நினைத்தனர்.

**திரு. எச்.வி. காமத்:** உங்களுக்கு விரோதிகள் இருக்கிறார் களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஆயினும் இதுதான் நிலைமை; அதாவது, மகளின் பங்கைப் பொறுத்தமட்டிலும், நாம் செய்யும் ஒரே புதுமை என்னவென்றால், அவளுடைய பங்கு அதிகரிக்கப்படுகிறது, மற்றும் அவளை மகன் அல்லது தாயின் (விதவை) வரிசையில் கொண்டுவருகிறோம். அதுவும் இவ்வாறு செய்வதில் நீங்கள் அனைவரும் மதிக்கின்ற ஸ்மிருதிகளின் போதனைக்கு நாம் திரும்பிச் செல்வது மட்டுமே என்ற என்னுடைய கருத்தை நீங்கள் ஏற்றுக் கொண்டால், ஒரு புதுமையாக இருக்காது.

மகளின் பங்கு பற்றிய இந்தப் பிரச்சினையை விவாதிப் பதில், நானும், சட்ட இலாகாவின் உறுப்பினர்களும் வாரிசு சம்பந்தப் பட்ட ஒவ்வொருமுறையையும் பரிசீலனை செய்தோம். முஸ்லீம் வாரிசுரிமை முறையை நாங்கள் ஆய்வு செய்தோம்; பார்ஸி வாரிசு உரிமையை நாங்கள் ஆய்வு செய்தோம். இந்திய வாரிசுச் சட்டத் தையும் வகுத்தளிக்கப்பட்ட வாரிசுரிமை வரிசையையும் நாங்கள் ஆய்வு செய்தோம். பிரிட்டிஷ் முறைப்படியான வாரிசுரிமையை யும் நாங்கள் ஆய்வு செய்தோம்; சொத்தில் மகளுக்கு ஒரு பங்கு கொடுக்கப்படுவதிலிருந்து விலக்கப்படுவதை எதிலும் நாங்கள் காணவில்லை. உலகில் மகள் விலக்கப்படும் எந்த முறையும் எங்கும் இல்லை.

இப்பொழுது, ஐயா, ஒரு பிரச்சினை இடைவிடாது முன் வைக்கப்படுகிறது - மகளுக்கப் பங்கு கொடுப்பதானது, குடும்பத்தை சீர்குலைப்பதாகும் என்று கூறப்படுகிறது. இந்த வாதத்தின் வலுவை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதை நான் வெளிப் படையாக ஒப்புக் கொள்கிறேன். ஒரு மனிதனுக்கு பன்னிரெண்டு

மகன்களும் ஒரு மகளும் இருக்கும் நிலைமையில், தகப்பனார் மரண மடைந்த நாளன்று பன்னிரெண்டு மகன்களும் சொத்தைப் பிரித்துக் கொள்வதென்று முடிவுசெய்து, தகப்பனாரின் மொத்த சொத்தில் பன்னிரெண்டில் ஒரு பங்கை ஒவ்வொருவரும் பெறும்பொழுது, பதின்மூன்றாவது குழந்தையான மகளும் தனக்கு ஒரு பங்கு வேண்டுமென்று கோரினால் பாகப்பிரிவினை மிகவும் மோசமாகப் போய்விடுமல்லவா?

பன்னிரண்டு பங்குகள் அல்லது 12 துண்டுகள் 13 துண்டு களைக் காட்டிலும் மேம்பட்ட நிலைமை அல்ல. சொத்து துண்டு துண்டாவதைத் தடுக்க வேண்டுமென்று விரும்பினால் நாம் வேறு ஏதாவது செய்ய வேண்டும், வாரிசுரிமை சட்டத்தின் மூலமாக அல்ல, மாறாக வேறு சட்டத்தின் மூலம்; அதன் வாயிலாக, ஒரு தேசியக் கண்ணோட்டத்திலிருந்து, தேசிய உற்பத்தியின் நிமித்தம் பயனற்றுப் போகாமலிருப்பதற்காக சொத்து துண்டு துண்டாகாமல் தடுக்கப் படும்.

**திரு. டி.ஏ. இராமலிங்கம் செட்டியார்** (சென்னை : பொது) : இந்து சட்டத் தொகுப்பு விவசாய நிலத்திற்குப் பொருந்துமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர் அம்பேத்கர் :** அது பொருந்தாது. நான் பொதுவாகக் கூறுகிறேன்.

இந்த அவையின் உறுப்பினர்களும் வெளியில் பொதுமக்களும் எழுப்பிய சர்ச்சைக்குரிய பல்வேறு அம்சங்கள் பற்றி நான் சொல்ல வேண்டியதை எனக்குத் தெரிந்த வரையில் சொல்லி முடித்து விட்டேன். பல்வேறு பிரச்சினைகளைப் பற்றி நான் கொடுத்துள்ள விளக்கங்கள், இந்த மசோதாவின்பால் நல்ல அபிப்பிராயம் இல்லாத உறுப்பினர்களின் அச்சங்களைப் போக்கும் என்று நம்புகிறேன். இது எந்த வகையிலும் ஒரு புரட்சிகரமான மசோதா அல்ல என்று அவர்கள் உணருவார்கள். இது ஒரு தீவிரமான மசோதாகூட அல்ல என்று நான் கூறுவேன். ஒரு முக்கியமான விவரம் சம்பந்தமாக, அதாவது ராவ் குழுவை அமைப்பது மற்றும் அதன் இயைபு சம்பந்தமாக இந்த அவையின் உறுப்பினர்களின் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். அந்தக் குழுவில் நான்கு உறுப்பினர்கள் இருந்தார்கள்; அறிக்கை யில் கையெழுத்திட்டவர்களில் இருவர், இந்து சமுதாயத்தின் தீவிர

உறுப்பினர்களே அல்ல. பல ஆண்டுகளாக நான் அறிந்துள்ள எனது நண்பர் திரு. கார்புரே, நான் அறிந்த மிகவும் பழமைவாத உறுப்பினர்களில் ஒருவராவார்.

**திரு. எச்.வி காமத் :** அரசியல் ரீதியாகவா, அல்லது சமூக ரீதியாகவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசியல் ரீதியாகவும் சமூக ரீதியாகவும் கூடத்தான், உண்மையில், சில சந்தர்ப்பங்களில் அவர் தொலைவிலிருந்து ஒரு குச்சியால் கூட என்னைத் தொடுவதற்கு மிகவும் கூச்சப்படுவார் என்று கூறுவதற்கு எனக்கு சிறிதும் தயக்கமில்லை. அவர் அவ்வளவு பழைமைவாதியாக இருக்கிறார். என்னுடைய நண்பர் திரு. டி.ஆர். வெங்கட் ராமசாஸ்திரி, தாராளமனப்பான்மை உடையவர்தான் என்பதில் ஐயமில்லை. ஆனால், நானறிந்தவரையில் அவர் நிச்சயமாக தீவிர மனப்பான்மை உடையவரல்ல, பழமைவாதக் கண்ணோட்டமுடைய இந்தப் பிரமுகர்கள் இந்த அறிக்கையில் கையெழுத்திட்டிருக்கிறார்களென்றால், அவர்கள் கையெழுத்திட்டுள்ள இந்த அறிக்கை புரட்சிகரமானதாக இருக்க முடியாது என்று நாம் நிச்சயமாகக் கருதலாம். மற்றும், இந்து சமுதாயத்தின் அடிப்படைகளுக்கு நிச்சயமாக அழிவு கரமாயிருக்காது. என்னைப் பொறுத்தவரையில் நான் மிகவும் பழமைவாதிதான்: சிலர் இந்த உண்மையை ஒப்புக்கொள்ளா விட்டாலும், உண்மையில் நான் மிகவும் பழமைவாதிதான். நான் சொல்வதெல்லாம், நான் ஒரு முற்போக்கான பழமைவாதி. ஒரு முக்கியமான உண்மையை இந்த சபைக்குச் சொல்ல விரும்புகிறேன், நம்மில் ஒவ்வொருவரும், குறிப்பாக, இந்த அவையின் பழமைவாத உறுப்பினர்கள், இதை அவசியம் மனதிற் கொள்ள வேண்டும். எட்மண்ட் பர்க் என்ற மாபெரும் அரசியல் தத்துவஞானி, பிரெஞ்சுப் புரட்சிக்கு எதிராக ஒரு பெரிய புத்தகத்தை எழுதினார். அதனுடைய தீவிரத் தன்மையும் புரட்சித்தன்மையும் அவருக்குப் பிடிக்காததே இதற்குக் காரணம். அதே சமயத்தில் அவர், மிகவும் பழமைவாதிகளான தனது சொந்த நாட்டு மக்களுக்கு ஒரு மிக முக்கியமான உண்மையைச் சொல்ல மறக்கவில்லை. இருப்பதைப் பாதுகாக்க விரும்புபவர்கள், அதைப் பழுதுபார்த்து சரிசெய்வதற்குத் தயாராயிருக்க வேண்டும் என்று கூறினார். நான் இந்த அவையைக் கேட்டுக் கொள்வதெல்லாம் இதுதான்: இந்து அமைப்பு, இந்து கலாசாரம், இந்து சமுதாயம் ஆகியவற்றை நிலை நிறுத்துவதற்கு நீங்கள் விரும்பினால், பழுது பார்ப்பது எங்கு அவசியமோ, அங்கு பழுது பார்ப்பதற்கு

நீங்கள் தயங்கக்கூடாது. இந்து அமைப்பில் அனேகமாக சிதிலமாகி விட்ட பாகங்களை பழுதுபார்ப்பதைத் தவிர அதிகமாக வேறு எதையும் இந்த மசோதா கோரவில்லை.

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, ஒரு விஷயத்தை நினைவுப்படுத்த விரும்புகிறேன். மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர், ஸ்மிருதிகளி லிருந்து சில வாசகங்களைக் கூறுவதாக வாக்குறுதி அளித்திருந்தார். அவர் அந்த வாக்குறுதியை நிறைவேற்றுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இறுதியில் நான் அதைச் செய்வேன், அதிருஷ்டவசமாக, திரு. துவாரக நாத் மித்தர் எழுதிய ''இந்துப் பெண்களின் உரிமைகள்'' என்கிற புத்தகத்தின் ஒரு பிரதி எனக்குக் கிடைத்துள்ளது. அதிலிருந்து சில வாசகங் களை உங்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். பெண்களுக்கு வேதங்கள் கொடுத்த உரிமைகளை ஸ்மிருதிகள் எடுத்துக் கொண்டு விட்டன என்றும், வேறு சில ஸ்மிருதிகள் அந்த உரிமைகளை மீண்டும் வழங்க முயற்சித்தன என்றும் அவை காட்டுகின்றன. என்னுடைய உரையின் போக்கில், அவற்றை எடுத்துக் கூறுகிறேன்.

**திரு. தேசபந்து குப்தா :** பொறுக்குக் குழுவின் முன் வைக்கப் பட்ட சான்றுகளை (சாட்சியத்தை) மாண்புமிகு அமைச்சர் இந்த அவையின் முன்வைத்து தெளிவுபடுத்துவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இரண்டு அமைப்பு கள் சாட்சியமளிப்பதற்காக எங்களிடம் வந்ததை மதிப்புக்குரிய உறுப்பினர்கள் அறிவார்கள். அவர்களுடைய சாட்சியத்தை எடுத்துக் கொள்வதென்று குழு முடிவு செய்தது. ஓர்அமைப்பு எங்கள் முன்வந்தது. மற்றொரு அமைப்பு எடுத்து மூலமாகத் தங்களுடைய சாட்சியத்தை அனுப்பியிருந்தது. தர்ம நிர்ணய மண்டல் என்பது அந்த அமைப்பின் பெயர். பொதுவாக, அவர்கள், இந்த மசோதா வில் உள்ள ஷரத்துகளுடன் முழு உடன்பாடு தெரிவித்துள்ளனர். எங்களிடம் வந்த மற்றொரு நபர் உடன்பாடு தெரிவிக்கவில்லை.

**திரு. துணை சபாநாயகர்:** பிரேரணையை முன் மொழி கிறேன்:

> ''பொறுக்குக் குழு அறிக்கை செய்தபடி, இந்து சட்டத்தின் சில பிரிவு களைத் திருத்துவதற்கும், சட்டமாக்குவதற்குமான இந்த மசோதா பரி சீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.''

இரு திருத்தங்கள் வற்புறுத்தப்படவில்லை. அடுத்த திருத்தம் பற்றி என்ன?

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஐயா, என்னுடைய திருத்தங் கள்எதையும் முன்மொழியும் நிலைமையில் இப்பொழுது நான் இல்லை.

**திரு. துணை சபாநாயகர் :** இந்த மசோதாவை முன்மொழிந் தவர் கூறிய யோசனைக்கு என்னுடைய பதிலில் ஏற்கனவே நான் கூறியது போன்று பிரேரணையை முன்மொழியும் சமயத்தில் பிரசங் கங்கள் ஏதுமின்றி அந்தப் பிரேரணைகளை முன்மொழிவதற்கு அனுமதிக்கிறேன். அனைத்துத் திருத்தங்களும் முன்மொழியப்பட்ட பிறகு, எவையெல்லாம் பொருத்தமாக உள்ளனவோ அவை அனு மதிக்கப்பட்டு அசல் பிரேரணையின் மீது போன்றே, அத்திருத் தங்கள் மீதும் விவாதம் நடைபெறும்.

**திரு. தேசபந்து குப்தா :** ஓர் ஒழுங்குப் பிரச்சினை. ஐயா, மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர், தம்முடைய திருத்தங்களை முன் மொழியும் நிலைமையில் தாம் இல்லை என்று கூறுவது அனுமதிக்கப் படுகிறதா?

**திரு. துணை சபாநாயகர் :** ஆம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, நான் ஆணையிடப்பட் டுள்ளேன்......

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர் :** யாரால்?

**திரு. நசிருத்தீன் அகமது :** முதலாவதாக, பிரசங்கம் செய் யாமல் என்னுடைய திருத்தத்தைப் பிரேரணை செய்யுமாறு நான் ஆணையிடப்பட்டுள்ளேன் (மதிப்புக்குரிய ஓர் உறுப்பனர் : ''உங்க ளுக்கு யார் ஆணையிட்டுள்ளார்கள்?''). மாண்புமிகு துணை சபா நாயகர் எனக்கு ஆணையிட்டுள்ளார். மதிப்புக்குரிய உறுப்பினர்கள் மிக மிகப் பொறுமையிழந்தவர்களாகக் காணப்படுகிறார்கள்.

**திரு. ஆர்.கே. சித்வா :** (மத்திய மாகாணங்கள் மற்றும் பீரார்: பொது): இல்லை, நமக்கு அவ்வாறு ஆணையிடப்படவில்லை. நீங்கள் பேசலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** பிரசங்கம் செய்யாமல் என்னுடைய திருத்தத்தை முன்மொழியுமாறு எனக்கு ஆணையிடப்பட்டுள்ளது என்று நான் மீண்டும் கூறுகிறேன். என்னுடைய மாண்புமிகு நண்பர் சட்ட அமைச்சரின் ஆற்றல் மிக்க உரையின் காரணமாக ஏற்கனவே நான் பேசுவதற்கு ஒன்றுமில்லாமல் அடங்கிவிட்டேன்....

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** நீங்கள் ஏற்கனவே உங்களுக்கு இடப்பட்ட ஆணையை மீறி வருகிறீர்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அறிவுக் கூர்மைமிக்க பெண்களும் என்மீது ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளனர். நான் எழுந்து நிற்பதற்கு முன்னால், மிகவும் சக்தி வாய்ந்த உறுப்பினர் பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா, தமது திருத்தங்களை முன்மொழியும் நிலையில் தாம் இல்லை என்று கூறினார்.

**திரு. துணை சபாநாயகர்:** தம்முடைய திருத்தத்தை முன் மொழிவதற்கு இத்தகைய முன்னுரை தேவையா?

**திரு. நசிருத்தீன் அகமது :** ஏற்கனவே நான் உரை நிகழ்த்த முடியாதபடி செய்யப்பட்டுவிட்டேன், அதனால்தான், நான் உரை நிகழ்த்தக்கூடாது என்று கேட்டுக்கொள்ளப்பட்டதற்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்தேன்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினர் பின்னர் பேசுவார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, பெருமளவு பதற்றத்துடன் முன்மொழிகிறேன்:

> ''1949 இறுதிக்குள் மேற்கொண்டு கருத்துக்களைப் பெறும் நோக்கத்திற்காக இந்த மசோதா சுற்றுக்கு விடப்பட வேண்டும்.''

**திரு. துணை சபாநாயகர்:** கீழ்வரும் திருத்தம் முன்மொழியப் பட்டுள்ளது:

> ''1949 இறுதிக்குள் மேற்கொண்டு கருத்துக்களைப் பெறும் நோக்கத்துடன் இந்த மசோதா சுற்றுக்கு விடப்படுகிறது.''

**திரு. பி. தாஸ் :** ஐயா, இது ஒரு தாமதப்படுத்தும் முயற்சியாக இருப்பதால், இது ஒழுங்கற்றது என்று நிராகரிக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை : தாமதப் படுத்தும் முயற்சிகள் சம்பந்தமாகக் காலையில் கூட ஒரு தீர்ப்புக் கூறப்பட்டது. ஐயா, அவை உறுப்பினரின் உரிமையாகும் என்று நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த மசோதா சம்பந்த மாக பல அம்சங்களில் நான் டாக்டர் அம்பேத்கருக்கு ஆதரவாக நிற்கின்றபோதிலும், தாமதப்படுத்தும் முயற்சிகள் அதிகாரத்தில் இல்லாத உறுப்பினர்களின் - தனிப்பட்ட உறுப்பினர்கள் மற்றும் கட்சிகளின் - தனி உரிமையாகும் என்று தெரிவித்துக் கொள்வதற்கு விரும்புகிறேன். இதைத் தடை செய்ய வேண்டாம். உறுப்பினர்கள் விரும்பினால் அலுவலைத் தாமதப்படுத்துவது அவர்களது ஜனநாயக உரிமையாகும். எனவே, ஒரு பிரேரணை, தாமதப்படுத்தும் முயற்சி என்று கருதப்படுவதன் நிமித்தம் அதற்கு அனுமதி மறுக்கக்கூடாது. தாமதப்படுத்தும் பிரேரணைகள் ஜனநாயக அவையின் சிறப்பு உரிமையாகும்.

**திரு. துணை சபாநாயகர் :** திரு. தியாகி கூறியதில் எந்த ஒழுங்குப் பிரச்சினையையும் நான் காணவில்லை. இதன்மீது முழு விவாதம் அனுமதிக்கப்பட வேண்டும் என்று அவர் விரும்புகிறார். திரு. பி. தாஸ் எழுப்பியுள்ள பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், அதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. எந்த விதியின் கீழும் அத்தகைய ஒரு பிரேரணை அனுமதிக்கப்படத்தக்கதல்ல என்று அவர் அர்த்தப்படுத்துகிறாரா? அப்படியெனில், அறிக்கை சமர்ப்பிக்கப் பட்ட பின்னர், நடைமுறை இதுதான். (மதிப்புக்குரிய ஓர் உறுப் பினர்: ''அவை என்ன விதிகள்?'') கடந்த கூட்டத்தொடரில் நாம் ஏற்றுக்கொண்ட விதிகள்.

அந்த விதி இவ்வாறு கூறுகிறது:

> ''அதற்குப் பொறுப்பாயுள்ள உறுப்பினர் மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படலாம் என்று பிரேரணை செய்தால், எந்த உறுப்பினரும், அந்த மசோதா மறு சமர்ப்பணம் செய்யப்பட வேண்டும், அல்லது சுற்றுக்கு விடப்படவேண்டும், அல்லது கருத்தை பெறவோ, அல்லது மேற்கொண்டு கருத்தைப் பெறவோ, மறு சுற்றுக்கு விடப்படவேண்டும் என்று ஒரு திருத்தத்தைப் பிரேரணை செய்யலாம்.''

எனவே விதிகளின்படி இத்தகைய பிரேரணை அனுமதிக்கப் படக்கூடியதே. இந்தப் பிரேரணைக்கு எவ்வாறு அனுமதி மறுக்கப்பட வேண்டும் என்பதை நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

***திரு. பி. தாஸ் :*** அந்த விதியை நான் அறிவேன். ஆனால், தாமதப்படுத்தும் பிரேரணைகள் எதுவும் அனுமதிக்கப்பட மாட்டாது என்று இன்று காலை வழங்கப்பட்ட ஒரு தீர்ப்பையே நான் வழிகாட்டியாகக் கொள்கிறேன். எனவேதான் நான் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பினேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** நான் ஒரு கருத்தைக் கூறுவதற்கு எனக்கு அனுமதி வழங்கப்படுமா? எனது நண்பர் திரு. பி. தாஸ் எழுப்பிய ஒழுங்குப் பிரச்சினை முற்றிலும் ஒரு சரியான ஒழுங்குப் பிரச்சினையேயாகும். ஏனெனில்.........

***மதிப்புக்குரிய உறுப்பினர்கள் :*** இல்லை.

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:*** துணை சபாநாயகர் ஒரு தீர்ப்பைக் கூறிவிட்டால், அதைக் கேள்வி கேட்க முடியாது.

***திரு. துணை சபாநாயகர் :*** மதிப்புக்குரிய உறுப்பினர்கள் எல்லோரும் ஒரே சமயத்தில் பேசமுடியாது. அவர்கள் எழுந்து நின்று, ஒவ்வொருவராகத்தான் பேசவேண்டும். மாண்புமிகு சட்ட அமைச்சர் பேசுவதை முதலில் கேட்போம். இந்த விஷயம் பற்றி ஒவ்வொரு உறுப்பினரும் பேசுவதற்கு அனுமதிக்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை: இந்த விவாதத்திற்கு அவர் ஒரு முறையான பங்களிப்புச் செய்ய வேண்டும். யாரும் பொறுமையிழக்க வேண்டிய தில்லை.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஐயா, அலுவல் விதிகளின் கீழ் அனுமதிக்கத்தக்க பிரேரணைகள் இரு வகைப் படும் என்பதை நீங்கள் நினைவு கூறுவீர்கள் : ஒரு வகைப்பட்ட பிரேரணைகள் - சபாநாயகர் அவற்றை அவைக்கு சமர்ப்பிப்பது; மற்றைய வகைப்பட்ட பிரேரணைகள், அவற்றை சபையின் முன் சமர்ப்பிக்கப்படுவதற்கு முன்னர், அவை முறைப்படியான பிரே ரணைகள்தானா என்று முதலில் சபாநாயகர் திருப்தியடைய வேண்டும். உதாரணமாக அவையை ஒத்திவைப்பதற்கான ஒரு பிரேரணையைக் குறிப்பிடுவதன் வாயிலாக நான் இதை விளக்கு கிறேன். விதிகளின்படி மதிப்புக்குரிய ஒவ்வொரு உறுப்பினரும் ஓர் ஒத்திவைப்புப் பிரேரணையை முன்மொழிவதற்கு உரிமை உண்டு. ஆனால், ஒரு குறிப்பிட்ட உறுப்பினர் ஓர் ஒத்திவைப்புப் பிரேரணைக்கு அறிவிப்புக் கொடுத்ததினால் மாத்திரமே

(அதனாலேயே) அதை அவைக்கு முன்னால் வைப்பதற்கு சபாநாயகர் அதிகாரம் பெற்றவராகி விடுவதில்லை; ஏனெனில், அந்தப் பிரேரணை அனுமதிக்கப்படத்தக்கது என்று சபாநாயகர் கருதினால் ஒழிய அந்தப் பிரேரணை சபையின் முன் வைக்கப்பட மாட்டாது. இதுபற்றி வேறு பல உதாரணங்களையும் நான் கூறமுடியும். இதுபோன்ற ஒரு பிரேரணையைப் பொறுத்தமட்டிலும், அதாவது, மசோதாவைப் பற்றி விவாதிப்பதை ஒத்திவைத்து, மேற்கொண்டு கருத்துக்களைப் பெறுவதற்காக சுற்றுக்கு விடப்பட வேண்டும் என்பதைப் பொறுத்த மட்டிலும் என்னுடைய வேண்டுகோள் என்னவெனில், இத்தகைய ஒரு பிரேரணை, சபாநாயகர் அதை அவையின் முன் வைப்பதற்கு முன்னால் அவர் அது குறித்து திருப்தியடைய வேண்டும் என்ற வகைப்பட்ட பிரேரணைகளில் அது அடங்கும். பொறுக்குக் குழு தனது அறிக்கையை சமர்ப்பித்ததற்குப் பின்னர், மசோதாவை விவாதிப்பது ஒத்திப்போடவேண்டும், அல்லது சுற்றுக்கு விடப்பட வேண்டுமென்பது, முதற் பார்வையிலேயே தாமதப்படுத்தும் முயற்சி யாகும். இந்தப் பிரேரணையை முன் வைக்கும் உறுப்பினர், அதற்கான சாராம்சமான காரணங்களை முன்வைத்து, முன்வைக்கப்பட்ட காரணங்கள் சாராம்சமானவை என்று சபாநாயகர் திருப்தியடைந்தால் ஒழிய, அத்தகைய பிரேரணை அனுமதிக்கப்பட மாட்டாது. இந்தப் புத்தகங்களில் பல தீர்ப்புகள் உள்ளன. ஆனால் புத்தகம் எண் 1ல் உள்ள தீர்ப்பு எண் 1ஐ கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இந்தப் பிரேரணை சம்பந்தமாக எந்த சாராம்சமான காரணங்களும் கூறப்படவில்லை.

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர்:** ஆனால் அவர் பேசவே இல்லையே.

**திரு. துணை சபாநாயகர் :** மாண்புமிகு சட்ட அமைச்சர் பேசி முடிக்கட்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்தப் புத்தகத்திலுள்ள ஒரு தீர்ப்பையே (எண். 1) உங்கள் கவனத்திற்குக் கொண்டு வந்தேன். வேறு பல தீர்ப்புகளும் உள்ளன. அது கூறுவதாவது:

> ''பருத்தி கலால்வரி ரத்து தீர்மானத்தின் மீதான விவாதத்தின்போது, தீர்மானத்தின் மீதான விவாதங்களை ஒத்திவைப்பதற்காக ஒரு பிரேரணை முன்மொழியப்பட்டது (நடைமுறையில் இதன் பொருள் இதை சுற்றுக்கு விடுவது அல்லது கைவிட்டு விடுவது என்பதேயாகும்.)

''சபாநாயகர், இந்தக் குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில், ஒரு முன்னுதாரணத்தை ஏற்படுத்தாமல், பிரேரணையை ஏற்றுக் கொள்ளும்போது பின்வருமாறு கூறினார்:

''அலுவலின் மற்றொரு பகுதியை முன்னுக்குக் கொண்டு வரப்படுவதற்கு வகை செய்வதற்காகவென்று மட்டும், முன்மொழியப்படவிருக்கிற ஒரு பிரேரணையைப் பரிசீலனை செய்வதை ஒத்திப்போடுவதற்கான ஒரு பிரேரணையை சபாநாயகர் அனுமதிக்க முடியாது''

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** இது ஒரு முன்னுதாரணம் அல்ல என்று தீர்ப்புக் கூறுகிறது. ஆனால் நீங்கள் அதை ஒரு முன்னுதாரணம் ஆக்குவதற்கு விரும்புகிறீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** 'நான் தீர்ப்பு அளிக்கிறேன், ஆனால் நான் ஒரு முன்னுதாரணத்தை உருவாக்கவில்லை' என்று சபாநாயகர் கூறுகிறார்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** இந்த விஷயத்தில் 'சபாநாயகரின் முடிவுகள்' என்ற பிரசுரத்தின் 81-வது பக்கத்தை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்; அதில், தாமதப்படுத்தும் தன்மை வாய்ந்தவை என்று கூறப்படக்கூடிய சில பிரேரணைகள் உள்ளன என்று கூறப்பட்டுள்ளது. சுற்றுக்கு விடுவது என்பது நிச்சயமாக அத்தகைய ஒன்று அல்ல. எனினும், தாமதப்படுத்தும் தன்மை வாய்ந்த பிரேரணைகள் இருக்கவே செய்கின்றன; ஆனால் அவற்றை அனுமதிப்பதா அனுமதிக்கக்கூடாதா என்பது சபாநாயகரின் உசிதப்படி செய்யும் உரிமைக்கும் அதிகாரத்திற்கும் உட்பட்டதாகும். இந்தப் புத்தகத்தின் 81வது பக்கத்தில் பிரேரணைகளை மீண்டும் சமர்ப்பிப்பது சம்பந்தமாக, ஆரம்பத்தில் தாமதப்படுத்தும் ஒரு பிரேரணை என்று அது கருதப்பட்டாலும், அதற்கப்பால் பொறுக்குக் குழுவில் ஏதாவது ஏற்பட்டிருந்தாலோ, அல்லது சில நிகழ்ச்சிகள் ஏற்பட்டிருந்தாலோ, அது தாமதப்படுத்தும் ஒரு நிகழ்ச்சியல்ல என்று கூறுவதற்கு சபாநாயகருக்கு முழு அதிகாரம் உண்டு. இப்பொழுது மதிப்புக்குரிய உறுப்பினரால் என்ன காரணங்கள் என்று கேட்கப்படவில்லை, அதற்கு முன்னதாக, என்னுடைய மதிப்புக்குரிய உறுப்பினர் எழுந்து நின்று இது ஒரு தாமதப்படுத்தும் பிரேரணை என்று கூறுகிறார். எடுத்த எடுப்பிலேயே, அது ஒரு தாமதப்படுத்தும் பிரேரணை என்று அவர் கூறுவது முற்றிலும் தவறாகும். சுற்றுக்கு விடும் பிரேரணை ஒரு தாமதப்படுத்தும் பிரேரணை அல்ல. பொறுக்குக் குழுவில் எதுவும் ஏற்படவில்லை அல்லது அந்தப் பிரேரணையைத் தாமதப்படுத்துவதை நியாயப்படுத்துவதற்கு

மேற்கொண்டு எந்த சம்பவங்களும் ஏற்படவில்லை என்ற முடிவுக்கு சபாநாயகர் வந்தாலொழிய, அந்தப் பிரேரணைகளில் எதுவும் தாமதப்படுத்துபவை என்று கூறுவதற்கு சபாநாயகருக்கு உரிமை யில்லை என்று கருதுகிறேன். விதிகளுக்கு உட்பட்ட சாதாரணப் பிரேரணைகளைத் தாமதப்படுத்தும் பிரேரணைகள் என்று கருதப் பட முடியாது.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, இப்பிரச்சினையை ஒரு நிமிடத்தில் முடித்துவிடலாம். மாண்புமிகு சட்ட அமைச்சர் சார்ந்து நின்ற முன்னுதாரணம், இந்த நிலைமைக்கு சிறிதும் பொருந்தக் கூடியது அல்ல. ''விவாதத்தை ஒத்திவைத்தல்'' என்பதே அதன் தலைப்பு...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பிரேரணை நிறைவேற்றப்பட்டால் இது விவாதத்தை ஒத்திப்போடுவதாகும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இல்லை, இது முற்றிலும் வேறானது என்று என்னால் எடுத்துக்காட்டமுடியும். ''பிரேரணை முன்மொழிய அனுமதிக்கப்பட்டால் விவாதம் ஒத்திவைக்கப்படும்.'' இந்த விவா தத்தை ஒத்திவைப்பதற்கு நான் முன்மொழியவில்லை, அதைத் திருத்தம் 2ன் கீழ் நிச்சயமாகச் செய்ய முடியும். அதாவது :

> ''பொறுக்குக் குழுவினால் அறிக்கை செய்தபடியான இந்த மசோதாவைப் பரிசீலனை செய்வது ஒத்திப்போடப்படுகிறது.''

விவாதத்தைத் தொடருவதும், பிரேரணையைப் பரிசீலனை செய்வதுமே என்னுடைய நோக்கம், என்னுடைய பிரேரணையுடன் கூடவே இதைப் பரிசீலனை செய்வதும் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று விரும்புகிறேன். டாக்டர் அம்பேத்கர் சார்ந்து நின்ற தீர்ப்பை மேற்கொண்டு ஒரு தடவை வாசிப்பதானது இதை முற்றிலும் தெளிவாக்கும்;

> ''பருத்தி கலால் வரி ரத்து செய்யப்படும் தீர்மானத்தின் மீதான விவா தத்தின்போது அத்தீர்மானத்தின் மீதான விவாதத்தை ஒத்திவைப்பதற்கான ஒரு பிரேரணை முன்மொழியப்பட்டது.
>
> ''இந்தக் குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் சபாநாயகர் பிரேரணையை ஏற்றுக் கொள்ளும்போது ஒரு முன்னுதராணத்தை ஏற்படுத்தாமல் இவ்வாறு கூறினார்: அலுவலின் மற்றொரு அயிட்டம் முன்னிடம் பெறச் செய்வதற்காக மட்டுமே ஒரு பிரேரணையைப் பரிசீலனை செய்வதை ஒத்திப்போடுவதற்கான ஒரு

பிரேரணையை சபாநாயகர் அனுமதிக்க முடியாது. அதற்காதரவாக சாராம்ச மான காரணங்கள் கூறப்பட வேண்டும்.''

நான் புரிந்துகொண்டபடி, அந்த சமயத்தில் அவையின் முன்னால் ஒரு பிரேரணை இருந்தது, அதேபொழுதில் முன்ன தாகவே, மற்றொரு பிரேரணை, ஒரு வேளை கூடுதல் ஆர்வமூட்டும் அல்லது கூடுதல் முக்கியமான பிரேரணையும் இருந்தது. பரிசீலனை யிலுள்ள ஒரு தீர்மானத்தின் விவாதத்தை ஒத்திப்போட வேண்டு மென்றும், அதனால் கூடுதல் ஆர்வமுள்ள பிரேரணையை எடுத்துக் கொள்ளலாமென்றும் ஓர் உறுப்பினர் முன்மொழிந்தார். ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல என்று கருதப்பட்ட முதலாவது பிரேரணையை ஒத்திவைப்பதற்கான ஒரு முயற்சி அது. இங்கு விவாதத்தை ஒத்திப் போடுவதற்கு நான் முன்மொழியவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இதுவெல்லாம் அதற்குத்தான் இட்டுச் செல்கிறது.

**திரு. நசிருத்தீன் அகமது:** இங்கு நாம் 52வது விதியின் விளக்கம் (வியாக்கியானம்) பற்றி அக்கறை கொண்டுள்ளோம். இந்த விதியின் வெளிப்படையான பொருள். இந்தப் பிரேரணை ஒழுங்கு முறையானது என்பதைக் காட்டும். அந்த விதியை நீக்காமல், இது ஒழுங்குமுறையானது அல்ல என்று கூற முடியாது.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு** (உ.பி.: பொது) : இந்த மசோதா பெருமளவு உணர்ச்சியைக் கிளப்பிவிட்டுள்ளது என்பது உண்மை. எந்தவகையிலாவது விவாதத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலம் அந்த உணர்ச்சியை மேலும் பெருக்குவது சிறிதும் விரும்பத் தக்கதல்ல. இந்த அவையின் ஒவ்வொரு பகுதியும், இது பற்றித் தமது கருத்தை வெளிப்படுத்துவதற்கு முழு வாய்ப்பு தமக்குக் கொடுக்கப்படுகிறது என்பதை உணரச் செய்வதற்கான ஒரே வழி விவாதத்தைத் தொடர அனுமதிப்பதேயாகும். நமக்கு முன்னால் உள்ள மசோதாவின் தகுதிகள் குறித்து தனிப்பட்ட கருத்துக்கள் எதுவாக இருந்தபோதிலும், என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. நசிருத்தீன் அகமதுவின் பிரேரணையை எதிர்ப்பதற்கு அது காரண மாக இருக்கக் கூடாது.

தற்போது பரிசீலனையில் உள்ள ஒரு விஷயத்துடன் சிறிதும் சம்பந்தமில்லாத ஒரு விஷயம் குறித்து சபாநாயகரின் ஒரு தீர்ப்பைப்

பற்றி டாக்டர் அம்பேத்கர் மேற்கோள் காட்டினார். முதலாவதாக, அந்தத் தீர்ப்பு ஒரு தீர்மானம் சம்பந்தமாகக் கொடுக்கப்பட்டதாகும், ஒரு மசோதா சம்பந்தமாக அல்ல. இரண்டாவதாக, ஒரு மசோதா வைப் பொறுத்தமட்டிலும், அந்த மசோதா சுற்றுக்கு விடப்பட வேண்டும் என்பது மட்டுமின்றி, அது மறு சுற்றுக்கு விடவேண்டும், மற்றும் அது ஒரு பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு விட வேண்டும் என்பதுமட்டுமின்றி, அது அதனிடம் மறுபரிசீலனைக்கு விடவேண்டும் என்றும் ஒரு பிரேரணை முன்மொழியப்படலாம் என்று விதிகள் தெளிவாகக் கூறுகின்றன. எனவே அதனுடைய வாசகம் முற்றிலும் தெளிவாக உள்ளது. எப்பொழுதெல்லாம் ஒரு மசோதா மறு பிரேரணைக்கு அல்லது மறு சுற்றுக்கு விடப்பட வேண்டுமென்று ஒரு பிரேரணை முன்மொழியப்பட்டாலும், அது தாமதப்படுத்தும் பிரேரணை என்ற காரணத்தின் பேரில் அது எதிர்க்கப்பட்டாலும், அது, விதிகளின்படி மிகவும் தெட்டத் தெளிவாக உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்டுள்ள உரிமைகள் முற்றிலும் செல்லாததாகிவிடும். திரு. நசிருத்தீன் அமகதுவின் பிரேரணை யைப் போன்ற ஒரு பிரேரணை நிராகரிக்கபடக்கூடும் என்று நாம் பொறுமையிழக்கலாம். அதை நிராகரிப்பதற்கு நாம் தயாராயிருக் கலாம், ஆனால் அது முன்மொழியப்படுவதற்கு அனுமதி மறுப் பதற்கு அது காரணமாயிருக்க முடியாது. இது மிகவும் ஒழுங்குமுறை யானதுதான் என்பது என்னுடைய தாழ்மையான கருத்து; மேலும் நாம் அனைவரும் மிகுந்த அக்கறை கொண்டுள்ள ஒரு சட்டத்தை நிறைவேற்றுவதற்காக, உறுப்பினர்களின் உரிமைகளை நாம் மட்டுப் படுத்தி விதிகளை, எந்த ஒரு குறிப்பிட்ட சமயத்திலும், பெரும் பான்மையாக இருப்பவர்களுக்கு சௌகரியமான முறையில் வியாக்கி யானம் செய்ய முயன்றால், நாம் பெரும் அநீதி இழைத்தவர்கள் ஆவோம்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** ஐயா, ஒரே ஒரு விஷயம் என்னவெனில், விதி 52(2)ன் கீழ், ஒவ்வொரு உறுப்பினருக்கும் உரிமையிருக்கிறது என்பதில் எவ்வித ஐயமுமில்லை. ஆனால் முக்கியமான விஷயமென்னவெனில், அது அனுமதிக்கப்படத் தக்கதா என்பதற்கு உட்பட்டதாகும், இது சபாநாயகரின் உசிதத் தன்மையைப் பொறுத்ததாகும். டாக்டர் அம்பேத்கர் கூறியதெல் லாம், கேள்விகளைக் கேட்பதற்கு நமக்கு உரிமையுண்டு என்பதில் ஐயமில்லை. ஆனால், அதனால் எல்லாக் கேள்விகளையும் நிகழ்ச்சி நிரல் தாளில் அச்சடிக்க வேண்டும் என்று நிச்சயமாக அர்த்த

மாகாது என்பதுதான். அது ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதா என்பதைப் பொறுத்துள்ளது. சபாநாயகரின் உசிதத்தன்மை உள்ள நிலையில், நாம் இப்பொழுது முடிவு செய்ய வேண்டியதெல்லாம், அது தாமதப்படுத்தும் தன்மையுள்ளதா என்பதை மாத்திரமேயாகும். திரு. நசிருத்தீன் அகமதை, அவருடைய காரணங்களைக் கூறும்படி நாம் கேட்கலாம். தமது பிரேரணையை முன்மொழிவதற்கு அவருக்கு நியாயமான காரணங்கள் இருப்பதாக நீங்கள் திருப்தியடைந்தால், அவரை அதை முன்மொழியும்படி அனுமதிப்பதற்கு உங்களுக்கு விருப்பத்தேர்வு அதிகாரம் உண்டு. எனவே, ஐயா, இப்பொழுது அவரை அதுபற்றிக் கேட்பதும் திருப்தியடைவதும் உங்கள் கையில் உள்ளது. அவருக்கு நியாயமான காரணங்கள் இருப்பதாக நீங்கள் திருப்தியடைந்தால், நிச்சயமாக அவர் அதை முன்மொழியலாம். டாக்டர் அம்பேத்கர் எழுப்பிய விஷயம் அதுதான். ஒவ்வொரு உறுப்பினருக்கும் பேசுவதற்கு உரிமையுண்டு, அவர் தமது வாய்ப்பைப் பெறலாம். நீங்கள் அக்கறை கொள்ள வேண்டியதெல்லாம் நடைமுறையைப் பற்றித்தான். அந்த நடைமுறையானது, ஒரு பிரேரணை அனுமதிக்கப்படத்தக்கதா என்பதேயாகும். அது உங்களுடைய விருப்பத்தேர்வுக்கு உட்பட்டதாகும். அவருடைய காரணங்களைக் கூறுமாறு நீங்கள் திரு. நசிருத்தீனைக் கேட்கலாம் என்று யோசனை கூறுகிறேன். அது ஒரு தாமதப்படுத்தும் தன்மை வாய்ந்த பிரேரணையா என்பதை இறுதியாக நீங்கள்தான் முடிவு செய்ய வேண்டும்; அது அவ்வாறு இருந்தால், நீங்கள் அதை ஒழுங்கற்றது என்று நிராகரித்து விடலாம். ஆனால் காரணங்களைப் பற்றி நீங்கள் திருப்தியடைந்தால், அப்பொழுது அதை முன்மொழிவதற்கு அனுமதிக்கலாம்.

**திரு. தாஜாமுல் உசேன்:** எழுந்தார் -

**பாபு ராம்நாராயண் சிங்:** ஐயா, எனக்கு ஒரு முக்கியமான விஷயம் பற்றிச் சொல்ல வேண்டியுள்ளது.

**திரு. துணை சபாநாயகர் :** ஒழுங்குப் பிரச்சினையைப் பற்றியா?

**பாபு ராம்நாராயண் சிங் :** ஆம், ஐயா.

**திரு. துணை சபாநாயகர் :** சரி, சொல்லுங்கள்.

**திரு. தாஜாமுல் உசேன் (பீஹார் முஸ்லீம்) :** ஐயா, நான்தான் முதலில் உங்கள் கவனத்தை ஈர்த்தேன். எனக்கும் ஓர் ஒழுங்குப் பிரச்சினை இருக்கிறது.

**திரு. துணை சபாநாயகர் :** இந்த ஒழுங்குப் பிரச்சினையைப் பைசல் செய்தபின், திரு. தாஜாமுல் உசேனின் ஒழுங்குப் பிரச்சினை கவனிக்கப்படும்.

**பாபு ராம்நாராயண்சிங் :** ஐயா, நீங்கள் ஏற்கனவே விதியை மேற்கோள் காட்டிவிட்டீர்கள். ஒரு விதிக்கு எதிராக எந்த சபாநாயகரும் நிச்சயமாகத் தீர்ப்புக் கொடுக்க முடியாது. விஷயம் இதுதான். சபையில் விவாதத்திலுள்ள ஒரு பொருளின்மீது கருத்துக்கள் வேறுபடலாம். இது மிகவும் இயல்பானதே. மக்களின் ஒரு பகுதியினர் அதை ஒரு வரப்பிரசாதமாகக் கருதலாம். மற்றைய பகுதியினர் அந்த விஷயத்தை ஓர் அபாயம் என்று, ஒரு பிளேக் நோய் என்று, ஒரு சாபக்கேடு என்று கருதக்கூடும். அதை ஒரு சாபக்கேடு என்று கருதும் பகுதிக்கு, பிரேரணையைத் தாமதம் செய்வதற்கு உரிமை இருக்கிறது என்பது மட்டுமன்றி, அதை ஒழித்துக் கட்டுவதற்கும் அதற்கு உரிமை இருக்கிறது. இங்கும்கூட, இந்தப் பகுதிக்கு பிரேரணையை முன்மொழிவதற்கு உரிமை இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். மற்றும் அவர்களுக்கு எல்லா சலுகைகளும் உரிமைகளும் இருக்க வேண்டும் என்று நீதி கோருகிறது.

**திரு. தாஜாமுல் உசேன் :** எழுந்தார் -

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினர் மற்றொரு ஒழுங்குப்பிரச்சினையை எழுப்புகிறார், அடுத்து அதற்கு நான் வருகிறேன்.

மதிப்பிற்குரிய உறுப்பினர் திரு. நசிருத்தீனே இந்த எல்லா ஒழுங்குப் பிரச்சினைகளையும் எழுப்பியிருக்கிறார், இன்று காலை அவர் ஒன்றைத் தொடங்கினார். நுட்ப விஷயங்கள் ஒரு புறமிருக்க, தனது பிரேரணையை சுற்றுக்கு விடவேண்டுமென்று கோருவதில் அவருடைய நோக்கம் என்ன, எத்தகைய முக்கிய பிரச்சினைகளை அவர் பார்வையில் கொண்டிருக்கிறார் என்று திரு. நசிருத்தீனை நாம் கேட்கலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் நினைக்கிறேன். இந்தப் பிரச்சினை....

**பண்டிட் ஹிருதய நாத் குன்ஸ்ரூ:** திரு. நசிருத்தீன் அகமது பதில் சொல்வதற்கு முன்பாக, மசோதாவை மீண்டும் சுற்றுக்கு விட வேண்டுமென்று முன்மொழிவதற்கு உள்ள உரிமை சபாநாயகரின் விருப்பத் தேர்வு அதிகாரத்திற்கு உட்பட்டது என்ற முடிவுக்கு நீங்கள் வந்துவிட்டீர்களா என்று நான் உங்களைக் கேட்கலாமா?

**மதிப்புக்குரிய உறுப்பினர்:** எழுந்தார் -

**திரு. துணை சபாநாயகர் :** அமைதி, அமைதி, உறுப்பினர்கள் அவைத்தலைவரை மதிக்கவேண்டும். நான் எழுந்து நிற்கும்போது, அவர்கள் தயவுசெய்து அமரவேண்டும். நான் போதுமான அளவு உறுப்பினர்களின் கருத்துக்களைக் கேட்டுவிட்டேன் என்று கருதுகிறேன். காரணங்களைக் கேட்பது அவைத் தலைவரின் விருப்பத்தின் பாற்பட்டதல்லவா? இப்படியோ, அல்லது அப்படியோ நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன் என்று இதற்குப் பொருளல்ல. நான் ஒரு முடிவுக்கு வருவதற்கு முயன்று கொண்டிருக்கிறேன். திரு. பாரதியின் கருத்தை நான் அறிந்தேன். விதிகளின்படி, ஒரு பிரேரணையை அனுமதிப்பதற்கும் அல்லது நிராகரிப்பதற்கும் அவைத் தலைவருக்கு உரிமை இருக்கிறதா என்ற பிரச்சினை ஒரு புறமிருக்க, இந்தப் பிரேரணை எந்தக் காரணங்களின் பேரில் - அவ்வாறு ஏதாவது இருந்தால் - அனுமதிக்கப்பட வேண்டும் என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். அதைக் கேட்டதற்குப் பின்னர், என்னுடைய தீர்ப்பை அளிக்கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அதற்கு என்னுடைய பதில் இரு பகுதிகளைக் கொண்டது. முதலாவது, சட்டப்படி, அந்தப் பிரேரணை ஏற்றுக்கொள்ளத்தக்கதா என்பது; இரண்டாவதாக, அந்தப் பிரேரணைக்கான காரணங்கள். அவை தகுதி பற்றிய விஷயங்களாகும். தற்போது, பிரசங்கம் செய்யவேண்டாம் என்று அவைத்தலைவர் என்னைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். மேலும் இந்தப் பிரேரணை ஏன் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்பதற்கு, தகுதிகள் மீதான வாதங்களைக் கூறவதற்கு நான் முற்றிலும் தடுக்கப்பட்டுள்ளேன். பிரேரணையின் சட்டபூர்வத் தன்மை மற்றும் ஏற்றுக்கொள்ளப்படும் தன்மை ஆகியவற்றுக்கும், சபையினால் அது ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு அடிப்படையான காரணங்களுக்கும் இடையில் ஒரு வேறுபாட்டைப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன், இந்தக் கட்டத்தில், நான் சமர்ப்பித்துள்ள பிரேரணையை அனுமதிப்பதற்கு, ஐயா, நான் எதும் கூற வேண்டாம் என்று நினைக்கிறேன்.

*திரு. துணை சபாநாயகர்:* இந்த விஷயம் சம்பந்தமாக நான் போதுமான அளவு கேட்டுவிட்டேன். இந்தப் பிரேரணை தாமதப் படுத்தும் தன்மை வாய்ந்தது என்கிற திரு. தாஸின் கருத்தைப் பொறுத்தமட்டிலும் இந்தப் பிரேரணை, மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் குறிப்பிட்ட பிரேரணையிலிருந்து பொருள் ரீதியில் வேறுபட்டது என்று கருதுகிறேன். அவர் அவைத்தலைவரின் தீர்ப்பு களை மேற்கோள்காட்டி, விவாதத்தை ஒத்திவைப்பது அல்லது தள்ளிவைப்பது சம்பந்தமான தீர்ப்பு எண். 1ஐ உதாரணமாகக் கூறினார். குறிப்பான நடைமுறை விதிகள் இல்லாத தள்ளிவைப்பதற்கான பிரேரணைகள் முன்மொழியப்படும்போது, அவற்றைத் தாமதப் படுத்தும் பிரேரணைகள் என்று கருதுவதும் என்ன சாராம்சமான காரணங்களின் பேரில் விவாதத்தை ஒத்தி வைப்பது அவசியமாகிறது என்று திருப்தியடைவதும் அவைத் தலைவரின் உசிதத்தைப் பொறுத்தது. சுற்றுக்கு விடவேண்டும் என்பதற்கு தற்போதைய பிரேரணையைப் பொறுத்தமட்டிலும், இதற்கு விதி 52(2)ல் வகை செய்யப்பட்டுள்ளது. ஒத்திவைப்புத் தீர்மானங்களின் ஒப்புமையை மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் குறிப்பிட்டார். ஆனால், ஒத்தி வைப்புத் தீர்மானங்கள் சம்பந்தமாக இங்கு திட்டவட்டமான விதிகள் வகுத்தளிக்கப்பட்டுள்ளன. அவை, ஒரு பிரேரணை, அடிப்படை யில் முறைப்படி இருக்கிறதா, இல்லையா என்ற ஒரு முடிவுக்கு வருவதற்கு சபாநாயகருக்கு அதிகாரம் வழங்குகின்றன. விதி 36ஐ நான் குறிப்பிடுகிறேன். கேள்விகளின் விஷயத்தில் போன்றே, ஒத்தி வைப்புப் பிரேரணைகளை முன்மொழிவதற்கான உரிமையும் சில நிபந்தனைகளைச் சார்ந்துள்ளது. ஒரு கேள்வியானது, விதிகளின் கீழ் வகைசெய்யப்பட்டுள்ள ஏதாவது ஓர் இனத்தின் கீழ் வந்தா லொழிய அதற்கு அனுமதி மறுப்பதற்கு சபாநாயகருக்கு உரிமை உண்டு. இதுபோன்றே ஒத்திவைப்புப் பிரேரணைகள் சம்பந்த மாகவும் ஆறு நிபந்தனைகள் இருக்கின்றன, இதுபற்றி சபாநாயகர் திருப்தியடைய வேண்டும். அனுமதி வழங்கப்பட வேண்டுமென்று கேட்பதற்கும் வகை செய்யப்பட்டுள்ளது. முதலாவதாக, இது அவைத்தலைவரின் விருப்பத் தேர்வைப் பொறுத்தது. ஒரு பிரேரணை பொது நலனுக்கு உகந்தது அல்ல, இது மிகவும் பழையது, இத்தியாதி என்று அவர் கருதலாம். இரண்டாவதாக, அதை அனுமதிப்பதற்கு அவர் முடிவு செய்தாலும் அந்தப் பிரேரணைக்கு, அவையின் குறைந்த பட்சம் இருபத்தைந்து உறுப்பினர்களின் ஆதரவு இருக்கிறதா என்று அவர் கேட்க வேண்டும், அதன் பிறகு அது முன்மொழியப்படு வதற்கு அனுமதி வழங்கப்படுகிறது. இத்தகைய நிலைமைகளுக்கு சிறந்த விதிமுறைகள் வகுத்தளிக்கப்பட்டுள்ளன. சுற்றுக்கு விட

வேண்டுமென்பதற்கான தற்போதைய பிரேரணை, மற்றவற்றைப் போன்ற அதே வகையினத்தில் வரவில்லை.

81-ம் பக்கத்தில் உள்ள 120-வது எண் தீர்ப்பைப் பொறுத்த மட்டிலும், அது பொறுக்குக் குழுவின் பிரேரணைகளைக் குறிப் பிடுகிறது. மறு சுற்றுக்கு விடப்பட வேண்டும் என்ற பிரேரணை யானது ஒரு தாமதப்படுத்தும் பிரேரணையாகும் என்று கூறும் அவைத் தலைவரின் தீர்ப்பு எதையும் ''அவைத் தலைவரின் முடிவுகள்'' என்ற இவ்விரு புத்தகங்களிலும், என்னால் காண முடியவில்லை. இந்த நிலைமைகளில் அவையின் அதிகாரங்களைக் கட்டுப் படுத்துவதற்கு நான் விரும்பவில்லை. இதனால், நான் பிரேரணையை அனுமதித்தால், அவை அதை ஏற்றுக்கொள்ளக் கடமைப்பட்டுள்ளது என்று இதற்கு அர்த்தமாகாது. அது முன்மொழியப்பட்டாலும்கூட, அவை, விவாதத்திற்குப் பிறகு திருப்தியடையாவிட்டால் அதை நிராகரிக்கலாம், இந்த சூழ்நிலைமை களில், இந்த அம்சம் சம்பந்தமாக முந்தையத் தீர்ப்புகள் தெளிவாக இல்லாததால், இந்தப் பிரேரணையை நிராகரிக்க நான் விரும்ப வில்லை. மதிப்பிற்குரிய உறுப்பினர் முன்மொழியலாம். மதிப்பிற் குரிய உறுப்பினர்கள், அவர்களவது பெயர்களில் உள்ள பிரேரணை கள் சம்பந்தமாகவும் மொத்தமாக விவாதம் நடைபெறும் என்று ஏற்கெனவே கூறியிருக் கிறேன். அடுத்த திருத்தம் பண்டிட் முகுத் பீஹாரிலால் பர்கவா மற்றும் ஜுன் ஜுன் வாலா பெயரில் உள்ளது.

**பண்டிட் முகுத் பீஹாரிலால் பர்கவா:** என்னுடைய மதிப்புக் குரிய நண்பர் திரு. நசிருத்தீன் அகமதுவினால் முன்மொழியப்பட்ட பிரேரணை சாராம்சத்தில் அதேதான். எனவே, நான் அவருடைய பிரேரணையை ஆதரிக்க விரும்புகிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** முன்மொழியாதிருப்பதற்கு அவர் காரணங்களைக் கூற வேண்டியதில்லை. திரு. ஜுன்ஜுன்வாலா என்ன சொல்லுகிறார்?

**திரு. பி.பி. ஜுன் ஜுன்வாலா** (பீஹார் பொது) : என்னுடைய நண்பர் திரு. பர்கவாவுடன் நான் சேர்ந்து கொள்கிறேன்.

**திரு. துணை சபாநாயகர்:** எனவே அவர் தமது பிரே ரணையை வற்புறுத்தவில்லை. எண் 7, மற்றும் 8வது பிரேரணை கள் முறையற்றவை என்று ஏற்கனவே கூறியுள்ளேன். மசோதாவின்

எல்லைவரம்பு மாகாணங்கள் சம்பந்தமானது மட்டுமே. இந்தியா வுடன் இணையும் சுதேச சமஸ்தானங்கள் இந்த வரம்புக்குள் இல்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்திய டொமினியனுக்குள் தம்மை முழுமையாக ஐக்கியப்படுத்திக் கொண்ட சுதேச சமஸ்தானங் களைப் பொறுத்தமட்டிலும், அவை வேறு நிலையில் உள்ளன. கிழைய சமஸ்தானங்கள் ஒரிஸா மாகாணத்துடன் இணைந்து கொண்டன. அவை இப்பொழுது இந்தியாவின் ஒரு பகுதியே. இந்த மசோதா அவற்றுக்கும் பொருந்தும்.

**திரு. துணை சபாநாயகர் :** அதை நான் இவ்வாறுதான் புரிந்து கொள்ள முடியும் - அவை ஒரு மாகாணத்தின் பகுதியாகி விட் டனவா, இல்லையா? அவை ஒரு மாகாணத்தின் பகுதிகள் என்றால், மசோதா அவற்றுக்கும் பொருந்தும். கெஜட்டின் (அரசிதழின்) பிரதி களை ஒவ்வொரு கிராமத்திற்கும், நாட்டின் ஒவ்வொரு மூலைமுடுக் குக்கும் அனுப்பப்பட வேண்டிய அவசியமில்லை. ஒரு சமஸ்தானம், ஒரு மாகாணத்தின் ஒரு பகுதியாயிருந்தால் அது, மாகாணத்தின் அனைத்து உரிமைகளையும் பொறுப்புகளையும் எடுத்துக் கொள் கிறது. இந்த மசோதா மீண்டும் சுற்றுக்கு விடவேண்டும் என்பதற்கு எந்தக் காரணத்தையும் நான் காணவில்லை. எனவே, 7வது எண் திருத்தம் முறையற்றது என்று நிராகரிக்கிறேன். எண் 8 திருத்தமும் முறையற்றது. 9வது எண் திருத்தத்தைத் திரு. பார்கவா முன்மொழி கிறாரா?

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** நான் அதை முன்மொழியப் போவதில்லை என்று ஏற்கனவே கூறியுள்ளேன்.

**திரு. துணை சபாநாயகர் :** அடுத்து, திரு. நசிருத்தீன் அகமது வின் திருத்தம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, நான் ஏற்கனவே முன்மொழிந் துள்ளதற்கு ஒரு மாற்றுத் திருத்தமாகப் பின்வருவதை முன்மொழி கிறேன்:

> ''முன்பு அனுப்பப்பட்ட அதே பொறுக்குக் குழுவுக்கு இந்த மசோதா மீண்டும் அனுப்பப்பட வேண்டும்; 1948 ஏப்ரல் 9 அன்று அதனிடம் அனுப்பப்பட்ட அசல் மசோதா சம்பந்தமாக, மேற்கொண்டு ஒரு கூடுதல் அறிக்கையை அது அனுப்ப வேண்டும்."

***திரு. துணை சபாநாயகர் :*** திருத்தம் முன்மொழிப்படுகிறது:

> "முன்பு அனுப்பப்பட்ட அதே பொறுக்குக் குழுவுக்கு இந்த மசோதா மீண்டும் அனுப்பப்பட வேண்டும்; 1948 ஏப்ரல் 9ம் தேதியன்று அதனிடம் அனுப்பப்பட்ட அசல் மசோதா சம்பந்தமாக, மேற்கொண்டு ஒரு கூடுதல் அறிக்கையை அது அனுப்பவேண்டும்."

***திருமதி ரேணுகா ரே:*** சபாநாயகரின் தீர்ப்பைக் கொண்டு பார்க்கும்போது இது முறையற்றது என்பது தெளிவு : இது சபாநாயகரின் தீர்ப்புக்கு எதிராகச் செல்கிறது.

***திரு. துணை சபாநாயகர் :*** மறு - சுற்றுக்கு விடும் பிரேரணை அவையின் முன்னால் இருக்கிறது, பார்க்கப் போனால், இந்த பிரேரணையையும் சபை ஏன் பரிசீலனை செய்யக்கூடாது?

***திருமதி ரேணுகா ரே:*** இது இதற்கு முந்தின நாள் சபாநாயகர் அளித்த தீர்ப்புக்கு எதிராகச் செல்கிறது.

***திரு. துணை சபாநாயகர் :*** இது சபாநாயகரின் தீர்ப்புக்கு எவ்வாறு எதிராகச் செல்கின்றது என்பதை அம்மையார் விளக்குவாரா?

***திருமதி ரேணுகா ரே :*** பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்ட அதே மசோதாதான் இது என்று சபாநாயகர் தீர்ப்பு வழங்கியுள்ளார். எனவே, பொறுக்குக் குழுவுக்கு அது மீண்டும் அனுப்பப்பட வேண்டுமென்ற பிரேரணை சரியானதல்ல. இந்த மசோதாவில் சாராம்சமான மாற்றம் ஏதுமில்லை.

***திரு. நசிருத்தீன் அகமது :*** இதில் பல சாராம்சமான மாற்றங்கள் இருக்கின்றன என்பதை என்னால் சுட்டிக்காட்ட முடியும்.

***திரு. துணை சபாநாயகர் :*** தயவு செய்து அவையில் இனி இது பற்றி யாரும் உரை நிகழ்த்த வேண்டாம். அம்மையார் உறுப்பினர் முன்வைக்கப்பட்ட வாதங்களைப் பொறுத்தமட்டிலும், நான் கருதுவது இதுதான்: பொறுக்குக் குழுவினால் பரிசீலனை செய்யப்பட்ட மசோதா, அதற்கு அனுப்பப்பட்ட மசோதாவினின்றும் வேறானதல்ல என்று சபாநாயகர் கூறினார் என்பது மெய்யே. ஆனால் மீண்டும் அனுப்பப்படுவது பல்வேறு இதர காரணங்களுக்காக, இருக்கலாம். எனவே, பிற காரணங்கள் சம்பந்தமாக ஏதாவது ஆட்சேபம் தெரிவிக்கப்பட்டால் ஒழிய .........

**திருமதி ரேணுகா ரே :** ''அசல் மசோதா'' என்ற சொற்கள் அங்கே இடம்பெற்றுள்ளன:

**திரு. துணை சபாநாயகர்:** அசல் மசோதா மற்றைய மசோதா வைப் போன்றதே. எனவே ''அசல் மசோதா'' என்று அவர் கூறி யுள்ளார். ''அசல்'' என்ற சொல்லை நாம் நீக்கிவிடலாம்.''

**திருமதி ரேணுகா ரே:** ''அசல்'' என்ற சொல் அங்கே இருக்கிறது என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். எனவே, இப்பொழுது நாம் அந்த சொல்லை பிரேரணையிலிருந்து நீக்க முடியாது.

**திரு. துணை சபாநாயகர் :** பொறுக்குக் குழுவிலிருந்து வெளி வந்த மசோதா அசல் மசோதா என்று சபநாயகர் தீர்ப்பளித்தார். எனவே, ''அசல்'' என்ற சொல்லைப் பயன்படுத்துவதில் தவறில்லை. அசல் மசோதா பொறுக்குக் குழுவினால் பரிசீலிக்கப்படவில்லை என்று ஆட்சேபம் எழுப்பப்பட்டது. பொறுக்குக் குழுவினால் பரிசீலிக் கப்பட்டது அசல் மசோதாதான் என்று மாண்புமிகு சபாநாயகர் தீர்ப்பளித்தார். எனவே மதிப்புக்குரிய உறுப்பினர் தமது திருத்தத் தில், அசல் மசோதா பொறுக்குக் குழுவுக்கு மீண்டும் அனுப்பப்பட வேண்டும் என்று குறிப்பிட்டிருந்தார். அம்மையார் முன்வைத்த வாதம் அவருடைய ஆட்சேபத்திற்கே எதிராக இருக்கிறது. இந்தப் பிரேரணையில் தவறானது எதையும் நான் காணவில்லை.

**திரு. ஆர்.கே. சித்வா :** பிரேரணை செய்தவரின் நோக்கம் மிகவும் வேறானது. அவர் இந்த மசோதாவை அசல் மசோதா என்று கருதவில்லை. எனவேதான் அவர், இதை மீண்டும் அதே பொறுக்குக் குழுவுக்கு அனுப்ப வேண்டும் என்று விரும்புகிறார்.

**திரு. எச்.வி. காமத்:** முன்மொழிந்தவரின் எண்ணம் தெளிவாக இருந்தபோதிலும், என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. நசிருத்தீன் அகமது, திருத்தத்தை வரையும்போது ஓரளவு எல்லை மீறிச் சென்று விட்டார் என்று நினைக்கிறேன். இந்த விஷயம் முழுவதையும் அவர் மறுபரிசீலனை செய்து, சில காலம் பொறுத்து இதை மீண்டும் கொண்டுவரும்படி அவருக்கு யோசனை கூறுகிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** ''அசல்'' என்ற சொல்லை உபயோகப் படுத்தியிருப்பது நிலைமையை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை

என்று கருதுகிறேன். அதற்கு மாறாக, அசல் மசோதாதான் பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்டது என்பது சபாநாயகரின் தீர்ப்பு. அதே மசோதாதான் திருத்தியமைக்கப்பட்ட வடிவத்தில் திரும்ப நமக்கு வந்து சேர்ந்தது. இதை ஓர் ஆட்சேபனையாக நான் ஏற்றுக்கொள்ள முடியாது. இந்த விஷயத்தின் மீது மேற்கொண்டு நேரத்தை செலவிடுவது சரியல்ல.

திருத்தம் எண். 13ஐ இனி முன்மொழியலாம்.

**பண்டிட் முகுத் பீஹாரிலால் பார்கவா:** என்னுடைய திருத்தம் சாராம்சத்தில் திரு. நசிருத்தீன் அகமது முன்மொழிந்ததைப் போன்றதே. நான் அதற்கு ஆதரவு தெரிவிக்கிறேன். என்னுடையதை முன்மொழியவில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** அப்படியெனில், பிற திருத்தங்களை முன்மொழிந்தவர்கள் பேசியதற்குப் பிறகு மதிப்பிற்குரிய உறுப்பினரின் முறை வரும்போது பேசவேண்டும்.

திருத்தம் எண். 14 முன்மொழியப்படவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** என்னுடைய திருத்தம் எண். 10 நிறைவேற்றப்பட்டால், பின்னர் என்னுடைய அடுத்த திருத்தத்தை முன்மொழிவதற்கு நான் எண்ணியுள்ளேன்.

**திருமதி ரேணுகா ரே :** ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புகிறேன். திருத்தம் எண். 15 சபாநாயகரின் தீர்ப்புக்கு எதிராக உள்ளது.

**திரு. துணை சபாநாயகர்:** சபாநாயகரின் தீர்ப்பு இந்த அம்சத்தை உட்கொண்டிருக்கவில்லை. பொறுக்குக் குழு செய்த மறு-ஏற்பாடு குறித்து இந்த அவை திருப்தியடையாமலிருக்கக் கூடும். எனவே இது பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்படவேண்டும் என்ற மூலப் பிரேரணை எடுத்துக் கொள்ளப்படலாம் இந்த விஷயம் சம்பந்தப்பட்ட மட்டிலும் ஒழுங்குப் பிரச்சினை எதுவும் இல்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, அப்படியானால் நான் பின் வருவதை முன்மொழிகிறேன்:

> ''பொறுக்குக் குழுவுக்கு இந்த மசோதா மீண்டும் அனுப்பி வைக்கப்படும். அதோடு, சபையில் சமர்ப்பிக்கப்பட்ட அசல் மசோதா மீது அறிக்கை

அனுப்ப வேண்டும் என்று அது கேட்டுக்கொள்ளப்பட வேண்டும். தனித் தனியாக சட்டமாக்கப்படுவதற்கு, தன்னிறைவான தனித்தனி பாகங்கள், அத்தியாயங்கள் ஆகியவற்றின் மூல ஏற்பாடு நிலை நிறுத்தப்படவேண்டும்.''

**திரு. துணை சபாநாயகர்:** இந்தத் திருத்தத்தை நான் அனுமதிக்க முடியாது என்று கருதுகிறேன். பாகங்கள் மற்றும் அத்தியாயங்களின் மறு - சீரமைப்புக்கு ஆட்சேபம் ஏதும் இருக்கமுடியாது என்ற நிலையில் இந்தத் திருத்தம் ஒழுங்கு முறையற்றது என்று தீர்ப்பளிக்கிறேன்.

**திரு. பி. தாஸ் :** ஐயா, அடுத்த திருத்தம் முன்மொழியப்படுவதற்கு முன்னர், ஓர் உறுப்பினர் ஐந்து திருத்தங்களை முன்மொழியலாமா என்பது குறித்து உங்களுடைய தீர்ப்பைக் கோருகிறேன்.

**திரு. துணை சபாநாயகர்:** மாற்றுத் திருத்தங்களுக்கு அறிவிப்புக் கொடுக்கப்படலாம். மதிப்பிற்குரிய உறுப்பினர் நீண்ட காலமாக இந்த அவையில் இருப்பவர் இதைத் தெரிந்திருக்க வேண்டும்.

திரு. நசிருத்தீன் அகமதுவின் அடுத்த திருத்தத்தில் ''1949, டிசம்பர் 31'' என்ற சொற்கள் மட்டுமே கூடுதலாக உள்ளன. அவர், திருத்தம் எண். 16ஐ முன்மொழிய வேண்டிய அவசியமில்லை என்று கருதுகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** அங்கு குறிப்பிடப்பட்டுள்ள பொறுக்குக் குழு வேறொரு பொறுக்குக் குழுவாகும்.

**திரு. துணை சபாநாயகர் :** இந்தத் திருத்தம் முன்மொழியப்படுவதை அனுமதிக்க முடியாது என்று கருதுகிறேன். இந்தப் பிரேரணைக்கு அறிவிப்புக் கொடுக்கும் சமயத்தில், மதிப்பிற்குரிய உறுப்பினர், பொறுக்குக் குழு உறுப்பினர்களின் பெயர்களைக் கொடுத்திருக்க வேண்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் இதை இரு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டேன். முதலில் பொறுக்குக் குழுவின் கருத்து இருக்கிறது. அது ஏற்றுக் கொள்ளத்தக்கதாயின்......

**திரு. துணை சபாநாயகர் :** இந்த வகைப்பட்ட ஒரு விஷயத்தில் முதலில் தனது கருத்தைத் தெரிவிக்கும்படி அவையைக் கேட்டுக் கொள்ள முடியாது. பொறுக்குக் குழுவுக்கான உறுப்பினர்களின்

பெயர்களை மதிப்பிற்குரிய உறுப்பினர், முன்னதாக அவைத் தலைவரிடம் கொடுக்காததால், அவருடைய திருத்தம் முறையற்றது என்று தள்ளுபடி செய்யப்படுகிறது.

பொதுப் பிரேரணை மீதான விவாதம் இப்பொழுது மீண்டும் தொடரலாம், சேத் கோவிந்த தாஸை இப்பொழுது பேசும்படி அழைக்கிறேன்.

**சேத் கோவிந்ததாஸ் :** அவைத் தலைவர் அவர்களே....

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** பொது விவாதத்தின்போது, திருத்தத்தை முன்மொழிந்த மதிப்புக்குரிய உறுப்பினருக்குத்தான் முதலில் பேசுவதற்கான உரிமை இருக்கிறது.

**திரு. துணை சபாநாயகர் :** இதை, மதிப்புக்குரிய உறுப்பினர் : அவைத் தலைவருக்கு விட்டுவிடட்டும். அவைத் தலைவருக்கு அலுவல் நடைமுறை தெரியும்.

**திரு. தாஜாமுல் உசேன்:** நீண்ட நேரமாக, ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புவதற்கு நான் முயன்று வருகிறேன். ஐயா, நான் மிகவும் சுருக்கமாக முடித்துக் கொள்கிறேன். மதிப்புக்குரிய உறுப்பினர் திரு. நசிருத்தீன் அகமது, கால்புள்ளி, அரைப்புள்ளி, முற்றுப்புள்ளி முதலிய கால்குறியீடுகள் பற்றி மிகவும் கருத்தாயிருப்பவர், இந்த மசோதா சுற்றுக்கு விடப்பட வேண்டுமென்ற இந்தத் திருத்தத்திற்கு அறிவிப்புக் கொடுத்துள்ளார். இது முற்றிலும் முறையற்றது. மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது திருத்தத்தின் வாசகத்தை ''இந்த மசோதா மறு சுற்றுக்கு விடப்பட வேண்டும்'' என்று அமைத்திருந்திருக்கவேண்டும். அதுதான் என்னுடைய ஒழுங்குப் பிரச்சினை. இது சம்பந்தமான விதி இவ்வாறு கூறுகிறது: ''பொறுக்குக் குழுவினால் அறிக்கை செய்யப்பட்டுள்ள மசோதா கருத்துப் பெறுவதற்காக அல்லது மேற்கொண்டு கருத்தைப் பெறுவதற்காக மீண்டும் அதனைப் பரிசீலனைக்கு விடவேண்டும், அல்லது மீண்டும் சுற்றுக்கு விட வேண்டும். எனவே, கால் புள்ளி மற்றும் முற்றுப் புள்ளி முதலியவை பற்றி மிகவும் அக்கறையுள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர், ''மேற்கொண்டு கருத்தைத் தெரிந்துகொள்வதற்காக மீண்டும் சுற்றுக்கு விடப்பட வேண்டும்.'' என்ற சொற்களைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். எனவே எனது ஒழுங்குப் பிரச்சினை என்னவெனில், இந்தத் திருத்தத்தின் சொல் அமைப்பானது விதிகளின்படி

இல்லாததால், இதை முறையற்றது என்று நிராகரிக்கப்படலாம் என்பதுதான்.

**திரு. துணைத் தலைவர்:** இந்தப் பிரேரணையை முன் மொழிந்துள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர் எப்போதும் காலக்குறியீடு களைப் பற்றி கவனமாக இருப்பவர், 'மறு' என்று சொல்லை முன் வைக்காத பிழையைச் செய்துள்ளார். இது வடிவம் சம்பந் தப்பட்ட விஷயம் என்று நான் முடிவு செய்ய முடியாது. ஆனால் சாராம்சம் சம்பந்தப்பட்ட விஷயம். சுற்றுக்கு விடுவதற்கான இந்தப் பிரேரணை, பொறுக்குக் குழுவின் அறிக்கை பெறப்பட்டதற்குப் பின் வந்துள்ளது. எனவே, இதன் பொருள், இப்பொழுதுள்ள சூழ்நிலைமையில், 'மறு-சுற்றுக்கு விடுவதாகும்.' நான் ஏற்கனவே தீர்ப்புக் கொடுத்து விட்டேன். இந்தத் தீர்ப்பு நிலையானது. சேத் கோவிந்த தாஸ் தொடர்ந்து பேசுவார்.

மாலை 4 மணி

**திரு. வி.எஸ். சர்வாத்தே :** திரு. துணைத் தலைவர் அவர்களே, மறு-சுற்றுக்கு விடுவதற்கான ஒரு பிரேரணையை நான் ஏற்கனவே கொடுத்துள்ளேன் என்பதை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். அது அந்த இரு பிரேரணைகளின் அடிப்படையிலானது. ஒன்றிணைந்த பட்டியலில் அது ஏன் விடுபட்டுப் போயிற்று என்பதை நானறியேன். இந்த இரு பிரேரணைகளும், 1948, ஆகஸ்டு 21ம் தேதி யிட்டவை. மேற்கொண்டு அவையின் நேரத்தை எடுத்துக் கொள் வதற்கு நான் விரும்பவில்லை. நான் பிரேரணையை வாசிக்கிறேன். மேற்கொண்டு விவாதத்திற்கு அது எடுத்துக் கொள்ளப்படலாம். அந்தப் பிரேரணை இதுவே:

> ''பொறுக்குக் குழுவினால் அறிக்கை செய்தபடியான இந்த மசோதா, மேற்கொண்டு கருத்துக்களைப் பெறுவதன் நிமித்தம் மறு சுற்றுக்கு விடப்பட வேண்டும்.''

**திரு. துணை சபாநாயகர் :** இந்தத் திருத்தத்திற்கான அறிவிப்பு எப்பொழுது கொடுக்கப்பட்டது?

**திரு. வி.எஸ். சர்வாத்தே :** 1948 ஆகஸ்டு 1ல் அறிவிப்புக் கொடுக்கப்பட்டது. இந்தத் திருத்தம் துணைப்பட்டியல் 2ன் ஒரு பாகமாகும்.

**திரு. துணை சபாநாயகர்:** பிரேரணை ஆகஸ்டு 1ல் கொடுக்கப் பட்டது. பொறுக்குக் குழுவினது அறிக்கையின் தேதி ஆகஸ்டு 12.

அனேகமாக, ஒரு வாரத்திற்குப் பின்னர் அது சபையின் முன் வைக்கப் பட்டது.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** ஆகஸ்டு 31ல் பிரேரணை சமர்ப்பிக்கப்பட்டது.

**திரு. துணை சபாநாயகர் :** பிரேரணை சமர்ப்பிக்கப்பட வேண்டிய அவசியமில்லை. இது அறிக்கை சம்பந்தப்பட்டதற்குப் பிறகு செய்யப்பட்டுள்ளது. கூட்ட அமர்வு முடிந்தவுடனே ஏற்கனவே கொடுத்த அறிவிப்புகள் அனைத்தும் காலாவதியாகிவிடுகின்றன. புதிய அறிவிப்புக் கொடுத்திருக்கப்பட வேண்டும். மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு இதனுடைய பிரதிகள் கிடைத்திருக்கின்றனவா என்று எனக்குத் தெரியவில்லை.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர் :** எனக்கு இதனுடைய பிரதி ஒன்று கிடைத்திருக்கிறது. இது ஓர் ஒன்றிணைந்த பட்டியல்: திருத்தங்களின் அறிவிப்பு.... இது அலுவலகத்திலிருந்து 1948 ஆகஸ்டு 28ல் அனுப்பப் பட்டுள்ளது. பட்டியலில் இருபத்திநான்கு திருத்தங்கள் கொடுக்கப் பட்டுள்ளன. திரு. சர்வாத்தேயின் திருத்தம் இந்தப் பட்டியலில் நான்காவதாக உள்ளது.

**திரு. துணை சபாநாயகர் :** இந்த அறிவிப்புகள் எல்லாம் கடந்த கூட்ட அமர்வுக்குக் கொடுக்கப்பட்டவையாகும். அந்த அமர்வின் முடிவில் இந்த அறிவிப்புகள் எல்லாம் காலாவதியாகி விட்டன. ஒவ்வொரு மதிப்பிற்குரிய உறுப்பினரின் மேஜையின் மீது தற்போது வைக்கப்பட்டுள்ள பிரதிகளில் அடங்கியுள்ள திருத்தங் கள் மட்டுமே பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். மற்றைய அறிவிப்புகள் காலாவதியாகிவிட்டன. எனவே, சேத் கோவிந்ததாஸ் மேற்கொண்டு விவாதத்தைத் தொடருவார்.

* **சேத்கோவிந்த தாஸ்** *(இந்தி உரையின் மொழியாக்கம்)* **:** திரு. துணைசபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின் ஆதரவாளர்களை யும், எதிர்ப்பாளர்களையும் நான்கு குழுக்களாகப் பிரிக்கலாம் என்று நினைக்கிறேன், எதிர்க்கும் குழுக்களில் ஒன்றில், சதியை (இறந்து போன கணவனின் உடலோடு சேர்ந்து தன்னையும் மனைவி எரித்துக்

★ அ.நி. (பேரவை) டி., தொகுதி II பாகம் II, 1949 பிப்ரவரி 24, பக். 861-71.

கொள்வதை அதாவது உடன்கட்டை ஏறுவதை) தடை செய்வதற்கான சட்டம் நிறைவேற்றப்பட்ட சமயத்தில் சில எதிர்ப்பாளர்கள் வெளிப் படுத்திய அதே கண்ணோட்டத்துடன் எதிர்க்கும் நபர்கள் உள்ள னர். விதவை மறுமணத்திற்காக, திரு. காலஞ்சென்ற ஈஸ்வர சந்திர வித்தியாசாகர் முயற்சியினால் நிறைவேற்றப்பட்ட இந்த சட்டமும், குழந்தைத் திருமணங்களைத் தடுப்பதற்காக திரு. சாரதா கொண்டு வந்த மசோதாவும் நிறைவேற்றப்பட்டு, சட்டமாகியுள்ளன. சாரதா மசோதாவின்போது, நான் மேலவையின் ஓர் உறுப்பினராக இருந்தேன். அப்போது இந்த மசோதாவை எதிர்த்தவர்களை நான் நேரடியாக (தனிப்பட்ட முறையில்) அறிவேன். அவர்கள், நமது வேதங்கள், சாஸ்திரங்கள், ஸ்மிருதிகள் ஆகியவற்றின் வாசகத்தில் கூறியுள்ளவற்றில் எந்த மாற்றமும் செய்யக்கூடாது என்ற கருத்தைக் கொண்டவர்கள். நான் அந்தக் குழுவைச் சேர்ந்தவனல்ல. நம்முடைய தர்மசாஸ்திரங்களின் குறிப்புகளிலிருந்தும் கூட, ஒரு ரிஷி அவ்வப் பொழுது ஒன்றைக் கூறுவதையும் மற்றொருவர் வேறொன்றைக் கூறுவதையும் காணமுடியும், இவ்வாறில்லாமலிருந்திருந்தால், நம் முடைய ரிஷிகள், நூற்றுக்கு மேற்பட்ட ஸ்மிருதிகளை எழுதியிருக்க மாட்டார்கள். இந்த ஸ்மிருதிகளை நீங்கள் படித்துப் பார்த்தால், ஒரு ஸ்மிருதியில் கூறப்பட்டுள்ள கோட்பாடுகள் மற்றொன்றில் அடங்கி யுள்ள கோட்பாடுகளிலிருந்து வேறுபடுவதை நீங்கள் காண்பீர்கள். அந்த ஸ்மிருதிகளில் ஒவ்வொன்றும் ஒரு வேறுபட்ட கோட்பாட்டை விளக்குகின்றன. நான் ஏற்கனவே கூறியபடி, இதுவரையிலும் கொண்டுவரப்பட்ட அனேகமாக அனைத்து சீர்திருத்தங்களையும் எதிர்த்தவர்களில் நான் ஒருவனல்ல.

இரண்டாவது எதிர்ப்புக்குழு, ஒருபுறத்தில், இந்த விவகாரங் களில் சீர்திருத்தங்கள் கொண்டுவருவதற்கு ஒரு தேவை இருப்பது தெளிவு என்று நம்புகிறது. ஆனால் மறு புறத்தில், இத்தகைய ஒரு சட்டம் இயற்றப்படுவதற்கு இது உகந்த சமயமல்ல என்று அது கருதுகிறது. புதிய தேர்தல்கள் நடைபெற்று, நம்முடைய புதிய பிரதி நிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர் மட்டுமே இதைக் கொண்டு வரவேண்டும் என்றும் அது கருதுகிறது. தற்பொழுது இந்து சட்டத் தில் எந்த மாற்றத்தையும் செய்வதற்கு பதிலாக, மூன்றாண்டு களுக்குப் பிறகு இதை நாம் செய்தாலும் எந்தத் தீங்கும் ஏற்பட்டு விடாது என்று நான் கூறவிரும்புகிறேன். இந்த விஷயம் சம்பந்தமாக நாடு முழுமையும், நாம் அனைவரும் சிந்திக்க வேண்டும். இங்கு

அமர்ந்திருப்பவர்கள் அனைவரும் சிந்திக்க வேண்டும். வருங் காலத்தில் இந்த அவையில் வந்து அமரப் போகின்றவர்களும் சிந்திக்க வேண்டும். எனவே, இத்தகைய ஒரு மசோதாவைக் கொண்டு வருவதற்கு இது பொருத்தமான காலமும் அல்ல, இடமுமல்ல என்று இரண்டாவது குழு முன்வைத்துள்ள வாதங்களில் பெருமளவு வலு இருக்கின்றது என்று கருதுகிறேன். இந்தக் காரணத்திற்காகவே, இந்த அம்சத்தை நாம் பரிசீலனை செய்ய வேண்டுமென்று வற்புறுத்து கிறேன்.

நான் கூறியது போன்று, இந்த மசோதாவின் ஆதரவாளர் களையும் கூட, இரு குழுக்களாகப் பிரிக்கலாம்; ஒரு குழு நம்முடைய பழைய சம்பிரதாயங்கள் (மரபுகள்) எதையும் பார்க்க விரும்புவ தில்லை; மற்றும் இந்த நாடு, ஓர் உன்னதமான கடந்தகாலத்தை யும், புகழ்மிக்க வரலாற்றையும், உயர்வான கலாசாரத்தையும், மகத்தான பாரம்பரியங்களையும் கொண்ட பண்டைய நாடுகளில் ஒன்று என்ற உண்மையை அங்கீகரிக்க விரும்புவதில்லை. இத்தகைய வகைப்பட்ட சீர்திருத்தவாதிகள், நம்முடைய கடந்தகாலப் பாரம் பரியம் என்ன, இன்று நமது நாட்டை நாம் எவ்வாறு புனர் நிர்மாணம் செய்யப் போகிறோம் என்பது பற்றிக் கவலைப்படுவதேயில்லை. இந்த சீர்திருத்தவாதிகள் மேலையக் கல்வியின் செல்வாக்குக்குப் பெருமளவு ஆட்பட்டிருக்கிறார்கள். நமது பண்டைக்கால வரலாறு, கலாசாரம் ஆகியவற்றுக்கும், சமூக சீர்திருத்தங்கள் துறையில் பண்டைய மரபுகளுக்கும்கூட சிறிதும் மதிப்பு அளிப்பதில்லை. இந்தப் பண்டைப் புகழ்பெற்ற நாட்டில் அத்தகைய வகைப்பட்ட சீர்திருத்தங்கள், அமலாக்கப்பட்டால், இந்த பாரத வர்ஷம் (இந்தியா) இனி ஒருபோதும் பாரத வர்ஷமாக இருக்காது, அது வேறொன்றாக மாறிவிடும் என்று கூற விரும்புகிறேன். இன்னொரு வகை சீர்திருத்த வாதிகள், சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட வேண்டியது அவசியம் என்று நம்புகிறார்கள்: ஆனால், நமது பண்டைய வரலாறு, கலா சாரம், மரபுகள் ஆகியவற்றுக்கு உரிய மதிப்புக் கொடுத்து, அந்தச் சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட வேண்டுமென்று விரும்புகிறார் கள். நான் முதல் குழுவில் சேர்ந்தவனல்ல, இரண்டாவது குழுவில் சேர்ந்தவன். சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட வேண்டியது மிகவும் அவசியமாகியுள்ளது என்பதை ஒத்துக்கொள்கிறேன்; ஆனால் இவையெல்லாம் இருந்தபோதிலும் நமது பண்டைய மரபுகள், பண்டையக் கலாசாரம், நாகரிகம் ஆகியவற்றை நம் பார்வையில் நிறுத்தி சீர்திருத்தங்களை நாம் செயலாக்க வேண்டும்.

நமது அரசியல் சாசனத்தை நாம் உருவாக்கிக் கொண்டிருக்கும் இந்த சமயத்தில், அடிப்படையான மற்றும் நீதிமன்றத்தில் முடிவு செய்யத்தக்க உரிமைகள் சம்பந்தப்பட்ட ஷரத்துகளை நாம் ஏற்கனவே நிறைவேற்றியுள்ள நிலையில், அடுத்த மே 16க்கும் ஆகஸ்டு 15க்கும் இடைப்பட்ட காலகட்டத்தில் நமது அரசியல் சாசனம் இறுதியாக ஏற்கப்பட்டுவிடும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் நிலைமையில், புதிய அரசியல் சாசனத்தின் விதிகளுக்கு இசைவான முறையில் இந்த மசோதா கொண்டு வரப்படுவது மிகவும் பொருத்தமாக இருக்கும். நம் நாட்டை ஒரு 'மதச்சார்பற்ற அரசு' என்று நாம் அழைக்கும்போது இந்த நாட்டிலுள்ள அனைவரும் - அவர்கள் எந்த மதத்தில் நம்பிக்கையுள்ளவர்களாக இருந்தபோதிலும், எந்த சமூகத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும் இந்து, முஸ்லீம் சீக்கியர், பார்ஸி முதலியவராக இருந்தாலும், அவர்களுக்கு சமமான குடியுரிமைகள் வழங்கப்பட வேண்டும் என்று ஒத்துக்கொள்கிறோம். எனவே, மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர், இந்துக்களை மட்டுமே சம்பந்தப்பட்டதல்லாத, இந்த நாட்டின் அனைத்துக் குடிமக்களுக்கும் பொருந்தக் கூடிய வகையில் ஒரு மசோதாவை இந்த அவையில் சமர்ப்பித்திருக்க வேண்டும் என்று கூறுவேன். இந்த நாடு ஒரு 'மதச் சார்பற்ற அரசு' என்று ஒத்துக் கொள்ளும் அதே சமயத்தில், ஓர் இந்து சட்டத் தொகுப்பு மசோதாவைக் கொண்டுவரும் கருத்து மிகவும் பொருத்தமற்றதாக எனக்குத் தோன்றுகிறது. பின்னர், இந்த மசோதாவை இப்பொழுது நாம் ஏற்றுக்கொண்டால், அது........ என்று நாம் ஒத்துக்கொள்ள வேண்டியிருக்கும்.

**திரு. ஆர்.கே. சித்வா :** மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் பண்டைய சாஸ்திரங்களைப்பற்றிக் குறிப்பிட்டார். அந்த சாஸ்திரங்களில் எது, இந்து சட்டத் தொகுப்பின் விதிகளுக்கு விரோதமானது என்பதையும் நீங்கள் சுட்டிக்காட்டலாம்.

**சேத் கோவிந்த தாஸ் :** இந்த மசோதாவை இப்பொழுது நாம் பார்த்தால், இதிலுள்ள பல ஷரத்துக்களை ஏற்றுக்கொள்வதற்கு எத்தகைய ஆட்சேபனையும் இருக்க முடியாது. இந்த மசோதா, ஒத்திப்போடாமல், சட்டமாக நிறைவேற்றப்படுமேயானால், இந்த ஷரத்துகளை, எத்தகைய சர்ச்சையிலும் இறங்காமல், நாம் இதை நிச்சயமாக ஏற்றுக்கொள்வோம். ஆனால் இதனுடன் கூடவே, இதிலுள்ள பல ஷரத்துகள், ஏற்றுக்கொள்ளப்பட்டால், பெருமளவு தீங்கை ஏற்படுத்தவல்லது, இதிலுள்ள பல ஷரத்துகள் சர்ச்சைக்குரிய தன்மை

வாய்ந்தவை என்று மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் அவர்களே இன்று ஒத்துக்கொண்டுள்ளார். இந்த சர்ச்சைக்குரிய பிரச்சினைகளைப் பற்றி அவரே போதுமான அளவு விளக்கி எடுத்துக்காட்டியுள்ளார்.

சர்ச்சைக்குரிய முதலாவது பிரச்சினை என்னவெனில், 'திருமணமும்' 'விவாகரத்தும்'. குறைந்தபட்சம் ஒரு விஷயத்தை ஏற்றுக் கொள்வதற்கு நான் தயாராயிருக்கிறேன்; சாதி முறையை ஒழித்துக்கட்டக் கூடியவகையில் நமது சட்டத்தில் ஏதாவது மாற்றம் செய்ய வேண்டும். ஏதாவது ஒரு பிராமணர் ஒரு சூத்திரரை அல்லது ஒரு சூத்திரர் ஒரு பிராமணரைத் திருமணம் செய்துகொள்ள விரும்பினால், அல்லது பிராமணர் மற்றும் சூத்திரர் என்ற பாகுபாட்டை ஒதுக்கித்தள்ளுவதென்றால், ஓர் இந்து ஒரு முஸ்லீமை அல்லது ஒரு முஸ்லீம் ஓர் இந்துவைத் திருமணம் செய்துகொள்ள விரும்பினால், அல்லது எந்த ஒரு சமூகத்தை (சாதியை) சேர்ந்த உறுப்பினர்களாவது வேறு சாதியைச் சேர்ந்தவர்களைக் கலப்புத் திருமணம் செய்து கொள்ள விரும்பினால், அத்தகைய திருமணங்களை நடத்துவதற்கு எத்தகைய தடையும் இருக்கக்கூடாது. சாதி அமைப்பு நமது நாட்டைப் பாழ்படுத்தியிருக்கிறது. இதன் விளைவாக நமது நாடும் சமுதாயமும் சிறு துண்டுகளாக, மிகச் சிறிய பகுதிகளாகக் கூடப் பிளவுபட்டுள்ளது. விளிம்பு மண்டலத்தில் இன்று இருந்துவரும் இயலாமைகளை நாம் அனைவரும் நன்கு அறிவோம். நாட்டில் ஏற்பட்டுள்ள பிளவின் காரணமாகவே இது நிலவுகிறது. மூத்த குடிமக்களும் இதை அறிவர். இன்றும் கூட அவர்கள் இத்தகைய திருமணங்களை மிகுந்த வெறுப்புடன் பார்க்கின்றனர்.

தங்களுடைய விருப்பங்களுக்கு மாறாக, தங்களுடைய மகன்களையும், மகள்களையும் திருமணம் செய்து கொடுக்கவேண்டியுள்ளது என்று அவர்கள் கூறுகின்றனர். ஆனால், அத்தகைய சுதந்திரம் கொடுக்கப்படுவதை நான் பூரணமாக ஆதரிக்கிறேன். 'விவாகரத்தை'க் கூட நான் ஆதரிக்கிறேன். எல்லாத் தீமைகளையும் அகற்றுவதற்கான பரிகாரம் என்று கருதப்படக்கூடிய 'திருமணச் சட்டத் தொகுப்பு' இதுவரையிலும் உருவாக்கப்பட (கண்டுபிடிக்கப்பட)வில்லை என்ற எதார்த்தம் ஒரு புறமிருக்க, கணவனும் மனைவியும் ஓர் இணக்கமான வாழ்வை வாழ முடியாமற் போனால், அவர்களுக்கு விவாகரத்து உரிமையை வழங்க வேண்டும் என்பதை இன்னும் நாம் அமலாக்க வேண்டியுள்ளது. மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர், இந்த நாட்டில் மக்களின் 90 சதவீதம் பேர்கள்

இடையில் விவாகரத்து முறை இருந்து வருகிறது. இந்த 90 சதவீதம் பேர் சூத்திரர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். என்னைப் பொறுத்த மட்டிலும் பிராமணனுக்கும் சூத்திரனுக்கும் இடையில் எந்த வேறுபாட்டையும் நான் காணவில்லை. அவர்களைச் சூத்திரர்கள் என்று அழைப்பதுகூட மிகப் பெரிய குற்றம் என்று உணருகிறேன்.

**மாண்புமிகு திரு. ஜகஜீவன்ராம்** (தொழிலாளர் நலத் துறை அமைச்சர்) : இது இந்து மதத்தின் அடிவேரையே வெட்டவில்லையா?

**சேத் கோவிந்த தாஸ்:** 90 சதவீதம் மக்களிடையில், சூத்திரர்களிடையில் விவாகரத்து இருந்து வருகிறது. இது விஷயமாகக் கூட, அவர்களின் பழக்க வழக்கங்கள், மரபுகள் ஆகியவற்றுக்கு சிறிதும் மதிப்புக்கொடுக்காமல் இந்த சட்டத்தை நாம் நிறைவேற்றினால், 90 சதவீத மக்கள்.....

**திரு. ராஜ்பகதூர்** (மத்சயா ஐக்கிய மாநிலம்) : ஐயா, ''தலக்'' (விவாகரத்து) என்ற சொல்லுக்கு இந்தி மொழியில் உள்ள நேர் இணைச் சொல்லைக் கூறும்படி மதிப்புக்குரிய உறுப்பினரை கேட்டுக் கொள்கிறேன்.

**சேத் கோவிந்ததாஸ்:** மதிப்புக்குரிய உறுப்பினர் இந்தி மொழியில் கூறப்படுவதன் விளைவுகளைப் புரிந்து கொள்ளவில்லை என்று நினைக்கிறேன். இந்தியில் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ள சொற்கள் அனைத்தும் இந்தியைச் சேர்ந்ததுதான் - 'தலக்'காக இருந்தாலும் வேறு எதுவாக இருந்தாலும் சரி, 'தலக்'கின் நேர் இணைச் சொல்லைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று அவர் இன்னும் விரும்புகிறார் என்றால், இதற்கு பதிலாக **''விவாஹ விச்செட்''** (மண வாழ்க்கை உறவுகள் சார்ந்த உரிமைகள் முறிப்பு) என்ற சொற்களைப் பயன்படுத்தலாம்.

அந்த 90 சதவீத மக்களிடையில் இருந்து வரும் மரபுகளையும் பழக்க வழக்கங்களையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, இந்த சட்டம் நிறைவேற்றப்படுமானால், அவர்களது மரபான முறையில் அவர்களால் விவாகரத்து செய்துகொள்ள முடியாது என்பது இதன் பொருளாகும், இதனால் அவர்களுக்குப் பல சிரமங்கள் ஏற்படும் என்று உங்களுக்கு சொல்லிக்கொண்டிருந்தேன். எனவே, இது, ஒரு மிகப்பெரிய இடர்ப்பாட்டைத் தோற்றுவிப்பது நிச்சயம். இது, ஒவ்வொருவருக்கும் திருமணம் செய்து கொள்வதற்கும், விவாகரத்து செய்வதற்கும் முழு

3

உரிமை கொடுக்கப்பட வேண்டுமென்று மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் வெளிப்படுத்திய விருப்பங்களுக்கே எதிராகச் செல்லும் எல்லா ஆண்களுக்கும், பெண்களுக்கும் அத்தகைய சுதந்திரம் முழுமையாகக் கொடுக்கப்படுவதை நான் ஆதரிக்கிறேன்.

நம்மிடையே உள்ள சாதி இந்துக்கள் என்று அழைக்கப்படும் 10 சதவீதம் மக்கள், அதாவது, பிராமணர்கள், க்ஷத்திரியர்கள் அல்லது வைசியர்கள், 90 சதவீதமாக உள்ள மக்கள் மீது ஒன்றைத் திணிக்க விரும்புகின்றனர். எண்ணிக்கையில் பத்து சதவீதமாக உள்ள நாம் - அறிவு ஜீவிகளாக உள்ளவர்கள் - 90 சதவீதமாக உள்ளவர்கள் மீது ஒரு சிலவற்றை சுமத்த விரும்புகிறோம். பிராமணர்களும், க்ஷத்திரியர்களும், வைசியர்களும் இந்த சுமையை வைக்கவில்லை, ஆனால் எவ்வாறோ இந்தப் பேரவைக்குள் வந்துவிட்ட நபர்கள்தான் அதைச் செய்கிறார்கள். என்னுடைய சகோதரிகள் திருமதிகள் ஜி. துர்க்கா பாய், ரேணுகா ரே, மற்றும் இந்த சபையில் அமர்ந்துள்ள இதர பெண் உறுப்பினர்கள், அல்லது பார்வையாளர் பகுதிகளில் அமர்ந்திருக்கும் சகோதரிகள் பெண்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறார்கள் என்ற கருத்தை ஏற்றுக் கொள்வதற்கு நான் தயாராக இல்லை என்றும் என்னுடைய சகோதரிகளுக்கு சொல்லிக் கொள்வதற்கு விரும்புகிறேன். இங்கு பிரசன்னமாயில்லாதவர்கள், பார்வையாளர் மாடங்களுக்கு வராதவர்கள், இங்கு அமர்ந்துள்ளவர்களைக் காட்டிலும் மேம்பட்ட முறையில் இந்த நாட்டைப் பிரதிநிதித்துவப்படுத்த முடியும் என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். சில உயர்சாதி மக்கள் தமது கருத்தைக் கீழ்சாதியினர் மீது திணிக்க விரும்புகின்றனர் என்று இன்று கூறப்படும் குற்றச்சாட்டு சரியானதல்ல என்பதை நாம் ஒத்துக் கொள்ளவேண்டும். ஆனால், பத்து சதவீத கல்வி கற்ற மக்கள், எஞ்சியுள்ள 90 சதவீத மக்களின்மீது தமது கருத்தைத் திணிப்பதற்கு விரும்புகின்றனர் என்பதே எதார்த்த நிலை. இந்த நாட்டிலுள்ள மக்களின் சித்தம் என்ன-என்பதைப்பற்றி எதுவும் அறியாதவர்கள், அவர்கள் மீது தங்களுடைய கருத்தைத் திணிக்கக்கூடாது. மக்களது விருப்பத்திற்கு மாறாக உள்ள எந்த சட்டத்தையும் இந்த அவை நிறைவேற்றுவதை நான் விரும்பவில்லை.

**திருமதி ரேணுகா ரே:** நாம் ஓர் அரசியல் சாசனத்தை தயாரித்து வருகிறோம் என்பதை 90 சதவீத மக்கள் அறிவார்களா?

**சேத் கோவிந்த தாஸ் :** மக்கள் நமக்கு ஆதரவாக இருக்கின்றனர் என்பதை நாம் அறிவோம். இது உங்களுடைய அக்கறை (கவலை)

மட்டுமே என்பதுபோல் பேசுவது சரியல்ல. அந்த அம்சத்தில் மக்க ளிடத்திலிருந்து ஒரு கட்டளையைப் பெற்று நாம் வந்துள்ளோம்.

இங்கு குறிப்பிடப்பட்ட மற்றொரு அம்சம் 'வாரிசுரிமை' சம்பந்தமானதாகும். வாரிசுரிமை சம்பந்தமான சட்டத்தில் தீவிர சீர்திருத்தங்களைச் செய்வதற்கு நாம் கடமைப்பட்டுள்ளோம் என்று கூறப்படுகிறது. வாரிசுரிமை முறையில் சீர்திருத்தங்களுக்கு நிறைய வாய்ப்பு இருக்கிறது என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். வாரிசு உரிமை வழங்கப்படாமல், அதன் காரணமாக மரபாக சொத்துரிமை பெறாமல் விலக்கப்பட்டால், பெண்களுக்கு மிகப்பெரிய அநீதி இழைப்பதற்கு ஒப்பாகும் என்பதையும் ஒத்துக்கொள்கிறேன். பெண் களுக்கு நிச்சயமாக வாரிசுரிமை வழங்கப்பட வேண்டும். எந்த அளவிற்குப் பெண்களுக்கு வாரிசுரிமை வழங்கப்பட வேண்டும் என்ற கேள்வி இப்பொழுது எழுகிறது. இதற்கு ஆதரவாக, மாண்பு மிகு டாக்டர் அம்பேத்கர், மனு மற்றும் யாக்ஞவல்கியரின் ஸ்மிருதி களிலிருந்து மேற்கோள்காட்டி, சொத்தில் நான்கில் ஒரு பங்கை மரபுரிமையாகப் பெறுவதற்கான உரிமையை இந்த ஸ்மிருதிகள் பெண்களுக்கு வழங்கியுள்ளன என்று சுட்டிக்காட்டியுள்ளார். மனு வும், யாக்ஞவல்கியரும் இந்த அபிப்பிராயங்களைக் கொண்டிருந்த போதிலும் கூட, வாரிசுரிமைத் துறையில் சில அபிவிருத்திகள் செய்யப்பட வேண்டியது அவசியம் என்று கூற விரும்புகிறேன். தாய்வழி ஆட்சி முறை இந்த நாட்டிலும், அல்லது உலகிலும்கூட இருந்து வந்த காலம் ஒன்று உண்டு. ஆனால், இன்றைய சமுதாயத் தில் தாய் வழிச் சமுதாய முறை மாற்றப்பட்டு தந்தை-வழி ஆட்சி முறை அமலில் இருந்து வருகிறது. இந்த நாட்டிலும், உலகிலும் தாய்-வழி ஆட்சிமுறை இருந்த வரையிலும், திருமணத்திற்குப் பின்னால் கணவன், மணமகளின் வீட்டில் வந்து தங்கியிருப்பது வழக்கமாக இருந்தபோது, தனது தந்தையின் சொத்தில், மகளுக்கு ஒரு பங்கு இருப்பது மிகவும் பொருத்தமானதாக இருந்தது. ஆனால் என்னுடைய கருத்தின்படி தந்தை-வழிச் சமுதாயமுறை நடைமுறை யில் இருந்து வரும்போது, பெண், தன் தந்தையின் வீட்டிலிருந்து வெளியேறி, தன் மாமனார் வீட்டுக்குச் செல்லும் நிலைமையில், தந்தையின் சொத்திலிருந்து எந்தப் பங்கும் அவளுக்குக் கொடுப்பது பொருத்தமாக இருக்காது. மருமகளுக்கு மாமனாரின் சொத்திலிருந்து பங்கு பெறுவதற்கு உரிமை வழங்கப்பட வேண்டுமென்பது என் னுடைய அபிப்பிராயமாகும். திருமணம் நிறைவு பெற்றவுடனே, மருமகளுக்கு, (தந்தையின் சொத்தில்) மகனுக்குக் கொடுக்கப்படும் அளவுக்கு சமமான பங்கு வழங்கப்பட வேண்டும். இன்று மகன்

முழு உரிமையை அனுபவிக்கிறான். எந்தப் பெண்ணாவது விதவை யானால், அவளுக்கு ஜீவனாம்ச உரிமை அதாவது உணவும் உடையும் பெறுவதற்கு மட்டுமே தகுதி உண்டு. நான் இதை முற்றாக எதிர்க்கிறேன். எனவே, சொத்தில் பங்கு பெறவதற்குப் பெண்களுக்கு, ஐயத்திற்கிடமின்றி, உரிமை வழங்கப்பட வேண்டும் என்று வற்புறுத்துகிறேன்; ஆனால் அது மாமனாரின் சொத்தில் பங்கு பெறுவதோடு மட்டுமே என்றும் தனது தகப்பனாரின் சொத்தில் அல்ல என்றும் வரையறுத்துக் கொள்ளப்பட வேண்டும்.

***திரு. மோகன்லால் கௌதம்*** *(உ.பி. பொது): மாமனார் இல்லாமற்போனால்?*

***சேத் கோவிந்ததாஸ் :*** *அப்படியெனில், கணவனின் வீட்டில்.*

***திரு. மோகன்லால் கௌதம் :*** *கணவர் இல்லாவிட்டால்?*

***சேத் கோவிந்ததாஸ் :*** *அப்படியெனில், மகனுடைய வீட்டில்.*

***திரு. மோகன்லால் கௌதம் :*** *மகனும் இல்லாவிட்டால்?*

***திரு. தாஜாமுல் உசேன்:*** *அவள் திருமணமே செய்து கொள்ளாமலிருந்தால், பிறகு அவள் என்ன செய்வாள்?*

***சேத் கோவிந்ததாஸ்:*** *அது ஒரு தனிப்பட்ட விஷயம். அவர்கள் ஏதாவது ஓர் ஆதாரத்திலிருந்து பெறுவார்கள். இங்கு மேற்கோள் காட்டப்பட்ட உதாரணத்தில் பன்னிரண்டு மகன்களும், பதிமூன்றாவதாக ஒரு மகளும் இருந்தால், தமது தகப்பனாரின் சொத்தைப் பகிர்ந்து கொள்வதற்கு பன்னிரண்டு மகன்களுக்கும் உரிமை இருக்கும்போது, அதே உரிமை பதிமூன்றாவது மகளுக்கு ஏன் அளிக்கப்படக்கூடாது? பன்னிரண்டு மகன்கள் எல்லோரும் தமது தந்தையின் வீட்டில் வாழ்கிறார்கள் என்று நான் கூறுவேன். பன்னிரண்டு மகன்களும் சொத்தைப் பிரித்துக் கொள்வது அதே இடத்தில்தான் நடைபெறுகிறது.*

***திரு. கிருஷ்ண சந்திர சர்மா*** *(உ.பி: பொது): மகளும் தகப்பனாரின் வீட்டிலேயே வசிக்க விரும்பினால்?*

***சேத் கோவிந்ததாஸ் :*** *மகள் மற்றொரு வீட்டை மேற்கொள்ள விருப்பதால், அவள் விஷயத்தில் இது பொருந்தாது. சொத்துக்கு*

மரபுரிமை (வாரிசுரிமை) சம்பந்தமாக சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ள மற்றொரு விஷயம் என்னவெனில், உயிலின் உள்ளடக்கத்திற்கேற்ப வாரிசுரிமை பொருந்திவராது. உயில்கள் எழுதப்படாத நிகழ்வுகளில் தகராறுகள் ஏற்படும். இது மட்டுமன்றி, வேறு வகையிலும் தகராறு கள் எழும். ஒரு புகழ்பெற்ற வழக்கறிஞராகிய மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர், இதுவரையிலும் அமலாக்கப்பட்ட உயில்களில் எவ்வளவு சதவீதம் நீதிமன்றங்களின் முன்கொண்டுவரப்பட்டுள்ளது, மற்றும் எவ்வளவு உயில்களின் மீது வழக்குகள் தொடுக்கப்பட்டுள்ளன என்ற உண்மையை அறிவார். உயில் அமலுக்கு வந்தால், மகன் களோ, அல்லது மகள்களோ, இந்த சட்டத்தின்படி சொத்தைப் பகிர்ந்து கொள்ள முடியாமற் போகும். இந்த சட்டம், அவர்களுக்கு வாரிசுரிமை வழங்குவதற்கு முற்படுகிறது. அந்த சொத்து முழுமை யும் வழக்கறிஞர்களால் விழுங்கப்பட்டுவிடும்.

பின்னர், மேலும் ஒரு நிகழ்வு ஏற்படும். சொத்தில் மகள் களுக்கும் வாரிசுரிமை வழங்கப்பட வேண்டுமென்று மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் விரும்புகிறார். தற்சமயம் பிரிக்கப்படாததாக உள்ள நமது சமுதாயத்தில், தகப்பன்மார்கள் உயிலைத் தயாரிக்கும் போது, தமது புதல்விகளுக்கு எதையும் மரபுரிமையாக வழங்க மாட்டார்கள்; புதல்வர்களுக்கு மட்டுமே வழங்குவார்கள். இவ்வாறு, இது பெண்களுக்கு வாரிசுரிமை வழங்க வேண்டுமென்று நீங்கள் விரும்பும் நோக்கத்தையே சிதறடித்துவிடும். வாரிசுரிமை சம்பந்த மாக, டாக்டர் அம்பேத்கரே ஒத்துக்கொண்டபடி, இது ஒரு மிகவும் சிக்கலான விஷயம் என்று கூற விரும்புகிறேன். நமக்கு அது அவ்வாறுதான் காணப்படுகிறது - நாம் சோஷலிஸ்டுகளாகவோ, கம்யூனிஸ்டுகளாகவோ இல்லாமலிருக்கலாம் - ஒருபுறத்தில், இந்த நாட்டில் தொழில்கள் வளர்க்கப்பட்டு வரவில்லை என்று தொழிலதி பர்கள் குரல் எழுப்பியுள்ளனர். மறுபுறத்தில், வாரிசுரிமை புறந் தள்ளப்பட்டுள்ளது. எனவே, தனிச் சொத்துரிமை முறையை ரத்து செய்வது நல்ல ஏற்பாடாக இருக்கும். இந்தத் தனியார் உடைமை ஒழிக்கப்பட்டு, ஒரு புதிய சமுதாயம் உருவானதற்குப் பின்னர் - அந்த சமுதாயத்தின் கட்டமைப்பு சோஷலிச மற்றும் கம்யூனிசக் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைய வேண்டுமென்று நான் கூறவில்லை - தனிப்பட்ட உடைமைகள் ஒழிக்கப்பட்டதற்குப் பின்னர் ஒரு புதிய வகைப்பட்ட சமுதாயம் கட்டியமைக்கப்பட வேண்டும் என்ற கருத்தை நான் உருவாக்கிக் கொண்டுள்ளேன். நமது தொழில் முதலாளிகள் இதில் கவனம் செலுத்துவார்களே யானால், இந்தச் செல்வம் இனி ஒரு போதும் தங்களுக்கு நிம்மதி

அளிக்கும் ஆதாரமாக இருக்காது என்பதை அவர்கள் காண்பார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. நானும் முதலாளித்துவ வர்க்கம் என்று கூறப்படும் அந்த வர்க்கத்தைச் சேர்ந்தவன்தான். ஆனால் இந்த, சேமித்து குவித்து வைக்கப்பட்டுள்ள செல்வத்திலிருந்து யார் மெய்யான மகிழ்ச்சியை, இன்ப வாழ்க்கையைப் பெறுகிறார்கள் என்பதை நாம் பார்க்கிறோம். அரை சேர், அல்லது முக்கால் சேர் உணவுடன் ஓர் ஏழைமனிதனை தெவிட்டச் செய்யும் அதேபொழுதில் 10 அல்லது 20 சேர் உணவைக் கொண்டு தனது வயிற்றை நிரப்பி ஜீரணிக்கக்கூடிய எந்த முதலாளியையும் நான் கண்டதில்லை. அதேபோன்று ஐந்து அல்லது ஆறு கெஜம் துணியை மட்டுமே ஒரு ஏழை அணிந்துகொள்ளும் அதேபொழுதில் ஒரே சமயத்தில் சுமார் 100, 200 அல்லது 400 கெஜம் துணியை அணிந்துகொள்கிற எந்த முதலாளியையும் நான் கண்டதில்லை.

**மாண்புமிகு மௌலானா அப்துல் கலாம் ஆசாத் (கல்வி அமைச்சர்) :** சிலர் அவ்வாறு அணிந்து கொள்ளவும் செய்கிறார்கள்!

**சேத் கோவிந்த தாஸ் :** நான் மாளிகைகளில் வசித்துப் பழக்கப் பட்டவன். எந்த ஒரு முதலாளியாவது தனது மாளிகையின் பெரிய கூடங்களில் ஒன்றில் தூங்க வைக்கப்பட்டால், அவரால் நிம்மதி யாகத் தூங்க முடியாது. தூங்குவதற்கு சுமார் 12க்கு 14 அடி பரப்புள்ள ஓர் அறைபோதும். தற்காலத்தில் செல்வம் பணக்காரர்களுக்கும்கூட துன்பம் ஏற்படுத்துவதாகி விட்டது. இது இல்லாதவர்கள் அதைப் பெறுவதற்கு விரும்புகிறார்கள்; அதைப் பெற்றிருப்பவர்கள் அதன் காரணமாகவே பெரும் இன்னல்களை அனுபவிக்கிறார்கள், அவர் களால் அமைதியாக வாழ முடியவில்லை.

**மாண்புமிகு மௌலானா அப்துல் கலாம் ஆசாத் :** நாம் அதைக் கைவிடவும் அவர்கள் விரும்பவில்லை!

**சேத் கோவிந்ததாஸ் :** அவர்கள் அதைக் கைவிட விரும்ப வில்லை. ஏனெனில், அந்தச் செல்வத்தை ஒதுக்கித் தள்ளுபவர் சமூகத்தில் பெரும் மதிப்புடன் பார்க்கப்படுகிறார்.

**திரு. சீதாராம் எஸ். ஜாஜூ (மத்திய பாரத்) :** இதைக் கைவிடு பவர், அல்லது தருமம் செய்பவரும் அதே அளவில் மதிக்கப்படு கிறார்.

**சேத் கோவிந்த தாஸ் :** அனைத்து முதலாளிகளும் திருடர்கள், கொள்ளைக்காரர்கள், வழிப்பறி செய்பவர்கள் என்று நமது சோஷலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளும் குற்றஞ்சாட்டுகிறார்கள். சில சோஷலிஸ்டுகளும், கம்யூனிஸ்டுகளும் இக்கருத்திலிருந்து வேறுபடக் கூடும். அவர்கள் எல்லோரும் இக்கருத்தைக் கொண்டிருப்பதாக நான் கூறமுடியாது. ஆனால் அவர்களில் பலர் இந்த செல்வத்தைப் பெற முடிந்தால், தமது சோஷலிஸ, கம்யூனிசக் கொள்கையைக் கைவிட்டு விடுவார்கள். செல்வத்தை சேமித்துக் குவித்து வைத்திருப்பவர்களை இன்றைய தினமும் கூட சமுதாயம் மதிக்கிறது. முதலாளிகளை எதார்த்தத்தில் கொள்ளைக்காரர்களாகவும் திருடர்களாகவும் பார்க்கும் வகையில் சமுதாயத்தின் கண்ணோட்டங்களையும் சீலங்களையும் நாம் சீரமைக்க வேண்டும். அப்பொழுதுதான், எந்த முதலாளியும் இந்த விலங்கைத் தனது கழுத்தைச் சுற்றி அணிய விரும்ப மாட்டார் என்று கூறுவேன். எனவே, வாரிசுரிமை என்ற இந்த சிக்கலான பிரச்சினைக்குத் தீர்வு காணும் நோக்கத்துடன், நமது மாண்புமிகு சட்ட அமைச்சர் டாக்டர் அம்பேத்கர், தனியார் உடைமை முறையை ரத்துசெய்ய முயலும் ஒரு சட்டத்தைக் கொண்டு வர வேண்டுமென்று வற்புறுத்துகிறேன். இதன் மூலம், இதற்கு இரையாகியுள்ள மக்களின் நிலைமையை மேம்படுத்த வேண்டும்.

**திருமதி ஜி. துர்க்காபாய் (சென்னை : பொது) :** நீங்கள் அதை எதிர்க்க மாட்டீர்களா?

**சேத் கோவிந்த தாஸ் :** இந்த மசோதாவில் உள்ள இந்த இரு அம்சங்கள் மட்டுமே பெருமளவு சர்ச்சைக்கு உரியவை என்று நான் கருதுகிறேன். இப்பொழுதுள்ள போக்கை மனதிற் கொண்டும், எத்தகைய சர்ச்சையிலும் ஈடுபடாமலும் புதிய சட்டப் பேரவை அமைக்கப்படுகின்றவரையிலும் இந்த மசோதாவை சட்டமாக்குவதை ஒத்திப்போட வேண்டுமென்பதே என்னுடைய அபிப்பிராயமுமாகும். இதற்கிடையில், இது சம்பந்தமாக மக்களின் கருத்தைக் கேட்டுப் பெறவேண்டும்; மக்களின் விருப்பங்களைத் தெரிந்து கொண்டபின்னர், புதிய தேர்தல்கள் நடத்தப்பட்டவுடனே இந்த மசோதாவை நாம் கொண்டுவரவேண்டும். இந்த மசோதாவை இந்து சட்டத் தொகுப்பு என்ற வடிவத்தில் நாம் முன்வைக்கக்கூடாது. நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகனுக்கும் உரிமைகளை வழங்குகிற அரசியல் சாசனத்தை நாம் நிறைவேற்றிய அதே முறையில், இதை நிறைவேற்றுவதே முறையான வழிமுறையாக இருக்கும்.

**டாக்டர் மனோமோகன் தாஸ்** (மேற்கு வங்கம் : பொது) : ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை, இத்தகைய விவாதத்தை அனுமதிப்பதற்குக் காலவரம்பு இல்லையா?

**துணை சபாநாயகர் :** காலவரம்பு இல்லை.

**சேத் கோவிந்த தாஸ்:** இந்த சொற்களுடன் நான் முடித்துக் கொள்கிறேன். நமது சமூக சட்டங்களில் சீர்திருத்தங்கள் செய்யப் படுவது மிக மிக அவசியம் என்று கருதுகிறேன். 'சதி' (உடன்கட்டை ஏறுதல்) அகற்றப்படுதல், விதவை மறுமணம், குழந்தைத் திருமணங் களைத் தடுத்தல் சம்பந்தமான சட்டங்களை நிறைவேற்றும்போது அவற்றை எதிர்த்தவர்களே, அதே முறையில் இந்த மசோதாவையும் எதிர்க்கிறார்கள் என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். அவர்கள் இதை எதிர்ப்பதன் மூலம் சரியான பாதையைக் கடைப்பிடிக்க வில்லை. ஆனால் இதோடு கூடவே, இந்த மசோதா, பொருத்தமான சமயத்தில் பிரேரேபிக்கப்படவில்லை என்பதையும் ஒத்துக்கொள் கிறேன். இதைப் பரிசீலனை செய்வதை தற்போதைக்கு நாம் ஒத்தி வைக்கவேண்டும். பொதுமக்களின் அபிப்பிராயத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்ட பின்னரே இதை நாம் பிரேரேபிக்க வேண்டும். இந்தச் சொற்களுடன், நான் இந்த மசோதாவை ஆதரிக்கவுமில்லை, எதிர்க்கவுமில்லை.

***திருமதி சுசேதா கிரபளபானி** (உ.பி. பொது) : ஐயா, முழு அதிகாரம் படைத்த ஒரு சட்டப் பேரவை நமக்கு ஏற்பட்டதிலிருந்து, இந்த இந்து சட்டத்தொகுப்பு மசோதாவைக் காட்டிலும் வேறு எந்த ஒரு மசோதாவும் கூடுதல் பரபரப்பையும், சர்ச்சையையும் தோற்று வித்ததில்லை. இந்த சர்ச்சை அனைத்தும் நியாயத்தையும், இந்து சட்டத்தில் கொண்டுவர உத்தேசித்துள்ள மாற்றங்களின் தகுதிகளை யும் அடிப்படையாகக் கொண்டிருந்திருக்குமேயானால், அது நன்மை யானதாக இருந்திருக்கும்; ஆனால், பெரும்பாலான சர்ச்சை பொருத்தமற்ற பிரச்சினைகளால் எழுப்பப்பட்டுள்ளது. மதத்திற்கு ஆபத்து என்ற வாதம்தான் மசோதாவிற்கு எதிரான பெரும்பகுதிப் பிரச்சாரத்திற்குக் காரணமாகும். இது இந்து மதத்தின் அடித்தளத் தையே உலுக்கிவிடும் என்று வாதிக்கப்பட்டுள்ளது. இத்தகைய வாதத்தை முன்வைப்பவர்கள் தமது சொந்த மதத்திற்கே பெரும் அநீதி இழைக்கிறார்கள்.

---

★ அ.நி. (சட்டப்பேரவை) டி. தொகுதி II, பாகம் II, 1949, பிப்ரவரி 24, பக். 866-924.

இந்து மதமானது தனிமனிதனின் ஆன்மீக விடுதலை, சுய-விமோசனத்தை நோக்கிய அவருடைய மனமாற்றம் ஆகியவற்றின் மீதே பிரதானமாக அக்கறை கொண்டுள்ளது. ஒரு தனி மனிதனின் சுய - நிறைவுக்கு வாய்மை, நீதி, அகிம்சை முதலிய சில தார்மீக மற்றும் ஆன்மீகக் கோட்பாடுகள் தேவைப்படுகின்றன. இவையெல்லாம் நமது வேதங்களில் பொதிந்துள்ளன. இவை மாற்றப்பட முடியாதவையும், அடிப்படையானவையுமாகும். காலங் காலமாக உருவாகி வந்துள்ள சமூக ஏற்பாடுகளும், நிறுவனங்களும், மரபுகளும், பழக்கவழக்கங்களும் மதமல்ல, இந்து சட்டத் தொகுப்பானது இந்து மதத்தை பாதிப்பதற்கு முயலவில்லை; இந்து சிவில் சட்டத்தை திருத்துவதற்கும் மாற்றியமைப்பதற்குமே முயல்கிறது. அவ்வப்பொழுது சட்டம் மாற்றமடைந்துள்ளது. அது மதத்திலிருந்து வேறானது, அது ஒருபோதும் மாற்றப்பட முடியாததோ, இறுகிப் போனதோ அல்ல. **தர்ம சாஸ்திரங்களின்** மூலாசிரியர்கள், குறிப்பிட்ட சமயத்தில் உள்ள சமுதாயத்தின் உணர்வுக்கு ஏற்ப, அவ்வப் பொழுது சட்டத்தை மாற்றியுள்ளனர். மாற்றங்களைச் செய்வதற்குள்ள உரிமையை **தர்ம சாஸ்திரம்** நன்கு அங்கீகரித்துள்ளது. பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவிற்கு வந்த பிறகுதான் இந்து சட்டம் இறுகிப்போயிற்று. தேக்கமடைந்து நின்றது.

அடிப்படைகள் மாறாமல் அப்படியே நிலையாக இருந்து வந்துள்ள அதே சமயத்தில், இந்து சமூக நிறுவனங்கள், மாறிவரும் சூழ்நிலைமைகளுக்கு ஏற்ப மாற்றமடைந்து வந்துள்ளன. தொடர்ந்து, நிலைமைக்குத் தன்னைத் தகவமைத்துக் கொண்டுவந்திருப்பதே இந்துமதத்தின் வலிமையும் சாரமும் ஆகும். இந்து சமுதாயம் தேக்கமடைந்து மாண்டுபோன நிலையிலிருக்கவேண்டும் என்று எண்ணினால் ஒழிய, மாறிவரும் சூழ்நிலைமைகளுக்குப் பொருந்துகின்ற வகையில் சட்டம் நிச்சயமாக மாற்றமடைய வேண்டும். ஸ்மிருதிகளும் மாற்றமடையாமல் இருக்கவில்லை என்பதையும் நாம் அறிவோம். வாரிசுரிமை, திருமணம் பற்றியவையல்லாது சட்டத்தின் இதர பிரிவுகளும் ஸ்மிருதிகளில் அடங்கியிருந்தன. இந்திய சட்டப்பேரவை இவற்றைப் பரிசீலித்துள்ளன, அவற்றில் சில, மாற்றப்பட்டுமுள்ளன. இந்து மதம் நிலை தடுமாறி வீழ்ந்து விடவில்லை. அது அந்த அதிர்ச்சியை வென்று மீண்டுள்ளது. இந்த மாற்றங்களின் அதிர்ச்சியை இந்து மதம் தாங்கி நின்று மீண்டுள்ளது

எனில், மேற்கொண்டு ஒரு சிறிய மாற்றத்தின் அதிர்ச்சியையும் இந்து சமுதாயமும் மதமும் நிச்சயமாக சமாளித்து நிற்கும்.

மகத்தான முக்கியத்துவம் வாய்ந்த சமூக சட்டங்களையும் நாம் நிறைவேற்றியுள்ளோம். உடன்கட்டை ஏறுதலை நாம் ஒழித்துக் கட்டியுள்ளோம்; குழந்தைத் திருமணத்தைத் தடைசெய்துள்ளோம்; தீண்டாமையையும் பெருமளவுக்கு ஒழித்துள்ளோம். இந்து மதம் மிகவும் பரந்த நோக்கும் தாராளமனப்பான்மையும் உள்ள மதமாகும். எனவே, மதத்திற்கு அபாயம் என்ற வாதம் அணுவளவும் ஏற்கத்தக்கதல்ல. இந்த தாராள மனப்பான்மையும் பரந்த நோக்கும் உள்ள மதத்தின் அரவணைப்புக்குள் பல்வேறு கருத்துக்கள், மரபுகள், பழக்கவழக்கங்கள் உள்ள மக்கள் அடைக்கலம் பெற்று வாழ்ந்துள் ளனர். இன்று எத்தகைய நிலையைக் காண்கிறோம்? நமது சொந்த மதத்திலேயே நாம் ஏன் நம்பிக்கை இழந்து மதத்திற்கு ஆபத்து என்ற கூக்குரல் எழுப்புகிறோம்? நம்மை எதிர்ப்பவர்கள் அனைவரும் வைதீகமானவர்களும் பிற்போக்காளர்களும் என்று நான் கூற விரும்பு வதாக இதற்குப் பொருளல்ல. உங்களுடைய கருத்தோட்டத்தை வலியுறுத்துவதன் வாயிலாக, இந்த வாதத்தை நீங்கள் முன்வைக்கும் போது உங்களுடைய மதத்திற்கே நீங்கள் அநீதி இழைக்கிறீர்கள் என்று சுட்டிக்காட்டுவதற்கு மட்டுமே நான் விரும்புகிறேன்.

இந்த மசோதா இப்பொழுது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கக்கூடாது என்பதும், மக்கள் இந்த மசோதாவின் ஷரத்து களைப் பரிச்சயம் செய்து கொள்வதற்கு நாம் போதிய அவகாசம் கொடுக்கவில்லை என்பதும் மற்றொரு வாதமாகும். நான் அறிந்த வரையில், இந்த மசோதா இந்த அவையின் முன்னும், நாட்டின் முன்னும் சுமார் கடந்த பத்தாண்டுகளாக இருந்து வந்துள்ளது. இந்த மசோதாவில் அடங்கியுள்ள சில நடவடிக்கைகள், வாரிசுரிமை மசோதா, திருமண மசோதா போன்றவை 1943ல் இந்த அவையில் அறிமுகம் செய்து வைக்கப்பட்டன என்று நினைக்கிறேன். இந்து சட்டம் சம்பந்தமானக் குழு 1944ல் அமைக்கப்பட்டது. அதனுடைய அறிக்கை 1945 அல்லது 1946ல் வெளியிடப்பட்டது என்று நினைக் கிறேன். மசோதாவின் முன்வரைவு பதிமூன்று இந்திய மொழி களில் மொழிபெயர்க்கப்பட்டது. இந்த வரைவு மசோதாவின் ஆயிரக் கணக்கான பிரதிகள் சுற்றுக்கு விடப்பட்டன.

இதற்குப் பின்னரும்கூட, இந்து சட்டத் தொகுப்பின் ஷரத்து களைப் பற்றி நமக்குத் தெரியவில்லையென்றால், அது நம்முடைய தவறே அல்லாமல் அரசின் தவறு அல்ல. தவிரவும், மசோதாவை ஒரே நாளில் நிறைவேற்றி விடமுடியாது. அதைப் பரிசீலனை செய் வதற்கு நமக்கு போதிய அவகாசம் தேவைப்படும். அதை விபரமாக ஆராய்வதற்குப் பெருமளவு காலம் தேவை. அந்த சமயத்தில் மக்க ளிடத்தில் செல்வதற்கும், மசோதாவின் ஷரத்துகளைப் பற்றி மக்கள் அறிந்துகொள்ளச் செய்வதற்கும், அவர்களது கருத்தைத் தெரிந்து கொள்வதற்கும் நமக்குப் போதிய வாய்ப்புக்கிடைக்கும். அடுத்த பொதுத் தேர்தல் வரையிலும் இந்த மசோதா ஒத்திப்போடப்பட வேண்டுமென்று ஒரு ரகசியப் பிரசாரம், ஒரு விநோதமான பிரசாரம் நடத்தப்பட்டுவருகிறது. அதை ஏன் ஒத்திப்போடவேண்டும்? நமது கட்சியின் செல்வாக்கை இது மோசமாக பாதிக்கக்கூடும் என்று காரணம் கூறப்படுகிறது. இத்தகைய வாதங்களைக் கூறுவது காங் கிரசுக்குப் பொருத்தமானதா அல்லது தகுதி உடையதா? நமது கடமைக்கு முன்னதாக நமது செல்வாக்கைப் பற்றி நாம் எப்போ தாவது கருதியிருக்கிறோமா? ஒரு மசோதா நியாயமானது என்று நாம் கருதினால், ஒரு மசோதா மக்களுக்கு நன்மை பயக்கக்கூடியது என்று நாம் கருதினால், அப்பொழுது அதை நிறைவேற்றுவதற்கு முன் செல்வது நமது கடமையாகும். அடுத்த தேர்தலில் வாக்கு களைப் பெறுவதற்காக ஒரு மசோதாவை தள்ளிப்போடுவது சரி யல்ல. இவ்வாறு செய்வது நேர்மையல்ல என்று கூட நினைக்கிறேன். மக்களின் நலனையே நாம் எப்போதும் மிகவும் உயர்வானதாகக் கருதிவந்துள்ளோம். இந்தக் கண்ணோட்டத்தை நாம் மேற்கொள்ளா விட்டால், இந்த மனோபாவத்தை நாம் மேற்கொள்ளாவிட்டால், எந்த தீவிர மாற்றத்தையும் நம்மால் கொண்டுவர முடியாது. நமது வாழ்க்கையின் எந்தத் துறையாக இருந்தாலும், ஒரு தீவிர மாற்றத்தைக் கொண்டுவருவதற்கு முயலும்போது, சில ஆதிக்க நலன்களையும் ஏதாவது நிலையான மரபையும் நிச்சயமாக நாம் எதிர்கொள்ள வேண்டியிருக்கும். இத்தகைய மாற்றங்களுக்கு நிச்சயமாக எதிர்ப்புக் குரல் இருக்கவே செய்யும். இதை முன்னிட்டு நாம் சீர்திருத்தத்தைக் கைவிட்டால் பின்னர் நம்மால் ஒருபோதும் எதையும் மாற்ற முடியாது.

ஒரு விஷயத்தை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்து சட்டத் தொகுப்பு மசோதாவுக்குப் பெருமளவு எதிர்ப்பு இருப்பதாக நிறையப் பேசப்பட்டுள்ளது. அதே சமயத்தில் இந்த மசோதாவுக்கு

அறிவார்ந்த, சிந்தனைபூர்வமான ஒரு பெருங்குழுவினர் ஆதரவு தெரிவித்துள்ளனர் என்பதையும் மிகவும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அந்த அறிவார்ந்த, சிந்தனை பூர்வமான குழுவில் இருப்பது பெண்கள் மட்டுமல்ல. இந்த நடவடிக்கையில் ஏராளமான சகோதரர்களும் நம்முடன் உள்ளனர். வரலாற்றில், பிற நாடுகளில் எப்பொழுதெல்லாம் ஒரு தீவிரமான மாற்றம் அறிமுகம் செய்து வைக்கப்பட்டதோ, எப்பொழுதெல்லாம் ஒரு சீர்திருத்தம் அமலுக்குக் கொண்டு வருவதற்கு முயலப்பட்டதோ, அப்பொழு தெல்லாம் ஒரு சிறிய உணர்வு பூர்வமான சிறுபான்மையினர்தான் அந்த லட்சியத்திற்காகப் பாடுபட்டனர், பொது மக்களுக்கு போதனை அளித்தனர், பிரசாரம் செய்தனர். அதற்கு சில காலத்திற்குப் பின்னர், பொது மக்கள் அதற்கு ஆதரவாகத் திரண்டனர். எனவே, இந்து சட்டத் தொகுப்பிற்கு எதிரான அபிப்பிராயம் ஓரளவு இருந்த போதிலும், நாம் மேற்கொள்ளும் முயற்சி நியாயமானதாகவும், சரியானதாகவும் இருந்தால், பொதுமக்கள் அபிப்பிராயம் நமக்கு ஆதரவாகத் திரளும் என்பதில் எனக்கு மிகவும் நிச்சயமான நம்பிக்கை உண்டு. அவர்கள் நம்முடன் வருவார்கள் என்பது மட்டுமன்றி, நாளடைவில் அவர்கள், நாம் நிறைவேற்றிய ஒரு நல்ல சட்டத்திற் காக நமக்கு ஆசியும் கூறுவார்கள் (மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்: ''அவர்கள் ஏற்கனவே நமக்கு ஆதரவாக உள்ளனர்.'') பெரும்பான்மை யோர் தங்களுக்கு ஆதரவாக உள்ளனர் என்றும் அவர்கள் கூறுகிறார் கள். எனவே, இதுதான் என்னுடைய பதில்.

சூடான விவாதத்திலும், சர்ச்சையிலும் இந்த மசோதாவில் இருப்பது வாரிசுரிமை மற்றும் திருமணம் சம்பந்தமான ஷரத்துகள் மட்டுமல்ல என்பதை நாம் பல சந்தர்ப்பங்களில் மறந்து விடுகிறோம். ஒரு சீரான மற்றும் முழு சட்ட அமைப்பை உருவாக்குவதற்கு நாம் முயன்றுள்ளோம். இந்த சட்டத்தில் அல்லது சட்டத் தொகுப்பில் காணப்படும் ஏராளமான முரண்பாடுகளையும், நேர்மையின்மை களையும், அநீதிகளையும் அகற்றுவதற்கு நாம் முயன்றுள்ளோம். உதாரணமாக, இன்று காலை டாக்டர் அம்பேத்கர் தமது அறிவார்ந்த உரையில், எவ்வாறு காப்பாளர் உரிமை, பராமரிப்பு, தத்து எடுத்தல் முதலியவை சம்பந்தமான ஷரத்துகள் சமுதாயத்திற்கு அனுகூலமாக இருக்கப்போகிறது என்று நம்மிடம் கூறினார். இந்த மசோதாவை முற்றாக எதிர்ப்பவர்கள், இந்த மசோதாவின் நல்ல பகுதியை, சர்ச்சைக் கிடமில்லாத பகுதியை மறந்து விட்டு, அவர்களாவது தாக்குதல் முழுவதையும் மசோதா முழுமையின் மீதும் தொடுக்கின்றனர்.

பெரும்பகுதி மக்களால் எதிர்க்கப்படுகின்ற வாரிசுரிமைப் பிரச்சினையை இனி எடுத்துக் கொள்வோம்.

**திரு. தாஜாமுல் உசேன் :** சுயநலக் கும்பலைச் சேர்ந்தவர்கள் தான் இதை எதிர்க்கின்றனர்.

**திருமதி சுசேதா கிருபளானி:** பெரும் பகுதியினர் இதை எதிர்க்கின்றனர். கூட்டுக்குடும்பம் பிரிவதற்கும், பெண்களுக்கு முழுமையான உரிமைகள் வழங்கப்படுவதற்கும் எதிராக அவர்கள் இரண்டு பிரச்சினைகளை எழுப்பியுள்ளனர். இரண்டாவது விஷயத்தை நான் முதலில் எடுத்துக் கொள்கிறேன். ஆண்களும் பெண்களும் சமத்துவமாக சரிநிகர் சமானமானவர்களாக, எல்லா சாதிகளைச் சேர்ந்த மக்களும் சமமாக இருக்கும் ஒரு சமுதாயத்தை ஏற்படுத்துவதற்கு நாம் விரும்புகிறோம். இவ்வளவு ஆண்டுகளாக நாம் கனவு கண்டுவந்த ஒரு முழுமையான ஜனநாயகத்தை ஏற்படுத்துவதற்கு முயன்று வருகிறோம். சமுதாயத்தில் பெண்களுக்கு சம அந்தஸ்து வழங்குவதற்கு நாம் உறுதி எடுத்துக் கொண்டுள்ளோம். பாலியல் பாகுபாடு அனைத்தையும் போக்குவதற்கு நாம் உறுதி பூண்டுள்ளோம். இந்த உறுதிமொழி, புதிய அரசியல் சாசனத்தை நாம் அமலுக்குக் கொண்டுவரும் சமயத்திலிருந்து தொடங்கும் என்பதில்லை. கராச்சி தீர்மானத்தில் இந்த உறுதிமொழிகளெல்லாம் அடங்கியுள்ளன என்பதை உங்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். அதற்குப் பின்னர், நாம் பதவியேற்றுக் கொண்டபோது, அப்பொழுதும் கூட, பாலின அடிப்படையில் எத்தகைய பாகுபாடும் இருக்கக்கூடாது என்று நாம் மீண்டும் வலியுறுத்தினோம். ஆண்களும் பெண்களும் சமமாகப் பணியாற்றவேண்டுமெனில், நாட்டின் சமமான பிரஜைகளாக அவர்கள் செயல்பட வேண்டுமெனில், நாட்டின்பால் தமது கடப்பாடுகளை அவர்கள் நிறைவேற்ற வேண்டுமெனில், பெண்களின் சொத்துரிமை விவகாரங்களில் இத்தகைய பாகுபாடான விதிகளை நாம் எவ்வாறு கொண்டிருக்க முடியும்? பெண்கள் சொத்தில் தமது முழுப் பங்கை பெற்றாலன்றி, நாட்டுக்குத் தமது கடப்பாடுகளை அவர்கள் நிறைவேற்றுவார்கள் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. நாம் எந்த மாற்றங்களைச் செய்யும்போதும் ஏற்கனவே நிலையாக இருந்துவரும் பழக்கவழக்கங்களும், நிலையான விதிகளும் பாதிக்கப்படுகின்றன என்பது மெய்யே. அது ஓரளவு குலைவையும், அசௌகரியத்தையும் ஏற்படுத்துகிறது என்பதும் உண்மையே. ஆனால் நாம் அதை சகித்துக்கொண்டு, அவை தவிர்க்க முடியாதவை என்று ஏற்றுக் கொள்ள வேண்டும். நமக்கு

ஏற்படும் அசௌகரியத்தின் முக்கியத்துவத்தை மிகைப்படுத்து வதற்கு நாம் முயலக்கூடாது. பெண்களின் சொத்துரிமையை ஸ்மிருதி கள் அங்கீகரிக்கின்றன என்று டாக்டர் அம்பேத்கரும் மற்றவர்களும் நமக்கு எடுத்துக் கூறியுள்ளனர். சட்டம் நமக்குக் கொடுத்ததை நடைமுறை நமக்கு மறுத்துள்ளது. நடைமுறையில் அந்த உரிமை ரத்து செய்யப்பட்டது. இன்று நாம் செய்ய முயல்வது இது மட்டுமே - இந்து மதம், அல்லது இந்து மரபு, அல்லது இந்து சட்டத்தின் அடிப்படைகளுக்கு விரோதமாக நாம் செல்லவில்லை. இந்து சட்டத் தினால் நமக்கு என்ன வழங்கப்பட்டதோ அதை தன்முனைப்பாக நமக்கு மறுக்கப்பட்ட அதை - மீண்டும் எடுத்துக் கொள்வதற்கு இப்பொழுது நாம் முயன்று வருகிறோம். நீங்கள் அதை எங்களுக்குக் கொடுக்கிறோம் என்று கூறலாம். இது சமுதாயத்தினால் இத்தனை ஆண்டுகளாக எங்களுக்கு மறுக்கப்பட்டு வந்துள்ளது. இது நீண்ட காலமாகத் தள்ளிப்போடப்பட்டு வந்துள்ளது. இதுதான் இப்பொழுது வழங்கப்படுகிறது, அவ்வளவுதான்.

தற்காலத்திற்கு நாம் வந்தால், 1937ம் வருட சட்டத்தின் படி, மனைவிக்கு, மருமகளுக்கு, பேரனின் மனைவிக்கு, இத்தியாதி - சொத்துரிமையை நீங்கள் வழங்கியிருக்கிறீர்கள். விடுபட்டுப் போன ஒரே நபர், அப்பாவி மகள்தான். இப்பொழுது இங்கு அது சேர்த்துக் கொள்ளப்பட வேண்டுமென்பது மிகவும் பொருத்தமானதே. எனவே, இதுபற்றி அதிகம் விவாதிப்பதற்கு என்ன இருக்கிறது என்பதை என்னால் பார்க்க முடியவில்லை. மற்றப் பெண்களுக்கு இந்த உரிமையை நாம் கொடுத்திருக்கிறோமென்றால், பெண்கள் கணவனின் தரப்பிலிருந்து சொத்தை வாரிசாகப் பெறுகிறார்கள் என்றால், தந்தையின் தரப்பிலிருந்தும் அவள் (மகள்) வாரிசாக சொத்தைப் பெறட்டுமே, அது மிகவும் இயற்கையானதும் சரியானது மாகும்.

மாண்புமிகு திரு. ஜகஜீவன்ராம் : பிற துறைகளிலும் அவள் வளர்ச்சியடைய வேண்டுமென்று அவர்கள் விரும்புகின்றனர்.

திருமதி சுசேதா கிருபளானி: கூட்டுக் குடும்பப் பிரச்சினை மிகுந்த உணர்ச்சியைக் கிளர்த்தியுள்ளது. ஏன் அத்தகைய உணர்ச்சி ஏற்பட்டுள்ளது என்பது எனக்குத் தெரியவில்லை. நான் சந்திக்கும் மக்களில் பெரும்பாலோர் கூட்டுக் குடும்பத்திலிருந்து வெளியே வந்து விடுவதற்கு ஆவலாக உள்ளனர். மகன்கள் தகப்பனாருடன் சேர்ந்து வாழ்வதற்கு விரும்பவில்லை. பெரும்பாலான குடும்பங்கள் நாடு முழுவதிலும் சிதறியிருப்பதை நான் காண்கிறேன். எனவே, கூட்டுக்

குடும்பம் வெகுவிரைவாக நொறுங்கிவிடும் ஓர் அமைப்பு என்று கருதுகிறேன். இன்று காலையில் டாக்டர் அம்பேத்கர் நமக்கு சுட்டிக்காட்டியது போன்று கூட்டுக் குடும்பத்தின் சட்டப்படியான நிலைமையும் கூட மிகவும் தவறானதாக இருக்கிறது. **மிதாக்ஷரா** முறையின் படியேகூட கூட்டுக்குடும்பத்தின் ஓர் உறுப்பினர், தனது விருப்பத்தை வெளிப்படுத்துவதன் மூலம் ஒரு பிரிவினையை ஏற்படுத்த முடியும்.

எனவே, நீங்கள் மிகவும் உரத்த குரலில் கூக்குரலிடும் கூட்டுக் குடும்பம் எங்கே இருக்கிறது?

கூட்டுக் குடும்பத்தில் பாதுகாப்பற்ற பெண்களுக்கு அளிக்கப் படும் பாதுகாப்புப் பற்றி நிறையப் பேசப்பட்டது. கடந்த காலத்தில் கூட்டுக் குடும்பத்தில் பாதுகாப்பற்ற பெண்களுக்குப் பாதுகாப்புக் கிடைத்தது என்பதை நானறிவேன். இப்பொழுதும்கூட சிலருக்குப் பாதுகாப்புக் கிடைக்கிறது. ஆனால் அதேசமயத்தில், நூற்றுக்கணக் கான பெண்கள், கூட்டுக் குடும்பத்தில் எத்தகைய பாதுகாப்பும் கிடைக்கப் பெறாதவர்களாக, சொந்தமாக எத்தகைய பொருளாதார வசதியும் இல்லாதவர்களாக இழிவும் அவமானமும் சூழ்ந்த வாழ்க்கையில் அவதிப்படுகிறார்கள் என்பதை நாம் அறிவோம். சமூகப் பணி செய்கிற எங்களில் பல பெண்கள், அத்தகைய எண்ணற்ற பெண்களை சந்திக்கின்றனர், எனவே, பெண்ணுக்கு அவளுடைய பங்கைக் கொடுப்பது சரியானது மட்டுமல்ல, நியாயமானது மட்டு மல்ல, நீங்கள் மிகவும் உரக்கப் பேசும் இந்து சமுதாயத்தை நீங்கள் பாதுகாக்க விரும்பினால், அவளுக்கு அந்தப் பங்கைக் கொடுப்பது மிக மிக அத்தியாவசியமாகும்.

மாண்புமிகு திரு. ஜகஜீவன்ராம்: அதற்கும் அதிகமாகவும் கொடுக்க வேண்டும்.

திருமதி சுசேதா கிருபளானி: அவ்வளவுக்கு நல்லதுதான். எங்களுக்கு இன்னும் கொஞ்சம் கூடுதலாகக் கொடுங்கள். கடந்த காலத்தில் எங்களுக்கு இதை நீங்கள் மறுத்திருக்கிறீர்கள். இப்பொழுது அதை சரிசெய்து விடுங்கள்.

திருமணத்தைப் பொறுத்தமட்டிலும், குழப்பத்தையும் நிச்சய மற்ற தன்மையையும் தவிர்ப்பதற்கு ஒரே சீரான நடைமுறையை அறிமுகப்படுத்துவதற்கே இந்த மசோதா முயல்கிறது. மரபான

சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்ட வர்க்கங்களுக்கு இது சிறிது சிரமத்தை ஏற்படுத்தக்கூடும். ஆனால் உத்தேசிக்கப்பட்டுள்ள, சடங்கு ரீதியான மற்றும் பதிவுத் திருமணங்களை மிகவும் ஏழ்மையான மற்றும் மிகவும் பிற்பட்ட வர்க்கங்களும் கூட நடைமுறைப்படுத்த முடியும். எனவே இது, எத்தகைய பெரிய சிரமத்தையும் ஏற்படுத்தும் என்று நான் நினைக்கவில்லை. சடங்கு ரீதியான திருமணங்களைப் பதிவு செய்வதில் ஓரளவு ஆட்சேபனை இருக்கிறது. இது முற்றிலும் மனோ ரீதியானதுதான், ஏனெனில் பதிவு செய்வது அனுமதிக்கப் படத்தக்கதே. நீங்கள் பதிவு செய்வதைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பவில்லையென்றால், நீங்கள் அதைப் பயன்படுத்தாதிருப் பதற்கு உங்களுக்கு உரிமை உண்டு.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** இது கட்டாயமாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கட்டாயமில்லை.

**திரு. தாஜாமுல் உசேன்:** கட்டாயமில்லையா, எது எப்படி யானாலும் சரி.

**திருமதி சுசேதா கிருபளானி :** நான் கூறுவது தவறாக இருந் தால் டாக்டர் அம்பேத்கர் என்னைத் திருத்துவார். அது ஒரு பாதுகாப் பாக அங்கே வைக்கப்பட்டிருக்கிறது. அவ்வளவுதான்.

சாதிக்கு வெளியில் மற்றும் ஒரே கோத்திரத்தில் செய்து கொள்ளப்படும் திருமணங்கள் பற்றிய பிரச்சினைக்கு வருவோம். எனக்கு முன்னால் பேசிய நண்பரின் பேச்சை நான் கேட்டுக் கொண் டிருந்தேன். ஒரே கோத்தரத்தைச் சேர்ந்தவர்களின் மற்றும் சாதிக்கு வெளியில் (கலப்பு மணம்) செய்யும் திருமணங்களை நாம் எவ்வாறு ஆட்சேபிக்க முடியும்? ஏனெனில் சமுதாயத்தில் மிகப் பெரிய எண்ணிக்கையில் அத்தகையத் திருமணங்கள் நடப்பதை நான் காண்கிறேன். அத்தகைய திருமணங்கள் இல்லாமலிருந்தால் சரிதான். ஆனால் மிக அதிக எண்ணிக்கையில் அத்தகைய திருமணங் கள் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது, ஒன்று முறையற்ற திருமணம் செய்துகொள்வதற்கு அவர்களை நாம் கட்டாயப்படுத்த வேண்டும், அல்லது இந்து மதத்திலிருந்து அவர்களை நாம் வெளி யேற்ற வேண்டும், அல்லது அவர்களை எங்காவது போகும்படி செய்ய வேண்டும், அல்லது அவர்கள் சிவில் பதிவு அலுவலகத் திற்குச் சென்று அதைச் செய்துகொள்ள வேண்டும். அது அவ்வாறு

இருக்கும்போது, அதை ஏன் ஏற்றுக்கொள்ளக்கூடாது? அது நடைமுறையாயிருக்கும்போது, அதை ஏன் அங்கீகரித்து, அதற்கு சட்டத் தன்மை கொடுக்கக்கூடாது? எனவே, இந்து சமுதாயத்தினுள் கலப்பு மணத்தையும் சகோத்தர திருமணங்களையும் அனுமதிக்கிற அளவிற்கு இந்திய சமுதாயம் மிகவும் பெருமளவிற்கு மாற்றமடைந்திருக்கும்போது, இந்தக் கட்டத்தில் அது சரியானதேயாகும்.

ஒருதார மணத்தைப் பொறுத்தமட்டிலும்கூட ஒட்டு மொத்தத்தில் சமுதாயம், ஒருதார மணத்தை ஏற்றுக் கொண்டது என்று நான் உணருகிறேன். பலதாரமணம் வெறுப்புடன் பார்க்கப்படுகிறது. சில சம்பவங்கள் ஏற்பட்ட போதிலும் கூட, பலதார மணத்திற்கு சமுதாயத்தில் ஆதரவில்லை. மேலும், இந்துக்களின் மிகப் பெரும்பான்மையோரிடையில் இருந்து வரும் தற்போதைய நடை முறையை நாம் அங்கீகரித்து, அதை சட்டபூர்வமானதாக்குகிறோம். மேலும், ஆண்களும் பெண்களும் சமமாக இருக்கின்ற ஒரு சமுதாயத்தை ஏற்படுத்துவதற்கு நாம் முயன்று வரும்போது ஆண்களுக்கும் பெண்களுக்கும் இரண்டுவிதமான ஒழுக்கமுறைகளை நாம் கொண்டிருக்க முடியாது. இதை அமலாக்குவதில் ஆண்கள் மகிழ்ச்சியடைய வேண்டும் என்று நினைக்கிறேன். ஏனெனில், ஒருதார மணத்தை அமலாக்குவதன் மூலம் ஆண்களின் ஒழுக்கத்தைப் பெண்களின் ஒழுக்கத்துடன் சமப்படுத்துகிறோம். இதற்காக ஆண்கள் நமக்கு நன்றி செலுத்த வேண்டும் என்று கருதுகிறேன்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** மிகவும் நன்றி. எளிதில் நமக்கு விவாகரத்து கிடைக்கும், நாம் மறுமணம் செய்துகொள்ளலாம்.

**திருமதி சுசேதா கிருபளானி:** விவாகரத்தைப் பொறுத்தமட்டிலும் வைதீகமான ஆண்கள், பெண்களின் மன உணர்ச்சிகளை நாம் மறுக்காத போதிலும், அவற்றை ஆய்வு செய்து பார்த்தால், நம்முடைய பண்டைக்கால வேத நூல்களில் விவாகரத்து இருக்கவே செய்தது என்பதை நாம் காண்கிறோம்.

விவாகரத்துக்கு நாம் அனுமதித்துள்ள காரணங்கள் மிகவும் நியாயமானவையும் நீதியின் பாற்பட்டவையுமாகும். மேலை உலகத்தின் சில பாகங்களில் இருப்பதைப் போன்று அற்பக் காரணங்களுக்காக நாம் விவாகரத்தை அனுமதிக்கவில்லை. மிகவும் கடுமையான நிலைமைகளில் மட்டுமே விவாகரத்தை கடைப்பிடிக்கும் வகையிலான ஒரு நடைமுறையை வகுப்பதற்கு நாம் கவனமெடுத்துக்

கொண்டிருக்கிறோம். விவாகரத்து அனுமதிக்கப்பட்டுள்ள பரோடா, திருவாங்கூர், கொச்சி, மலபார் ஆகியவற்றின் ஆவணங்களை நாம் பார்த்தால், மிகச் சொற்பமான நபர்களே, இந்த சட்டத்தைப் பயன் படுத்திக்கொண்டிருப்பதைக் காணலாம். மிகவும் அசாதாரணமான சூழ்நிலைமைகளில் மட்டுமே, மிகவும் சிக்கலான ஒரு நிலைமை யிலிருந்து மீள்வதற்கு, இது மக்களுக்கு உதவுகிறது. அற்பக் காரணங் களுக்காக நீதிமன்றத்திற்கு ஓடுவதோ, ஒரு மண வாழ்க்கையை முறித்துக் கொள்வதோ இந்து சமூகமரபல்ல. விவாகரத்து உரிமையை வழங்குவது இந்துக்களின் குடும்ப வாழ்க்கையை சீர்குலைப்பதற்கு ஒப்பாகும் என்று மக்கள் பயப்படுவது முற்றிலும் நியாயமற்றது.

இந்துக்களில் 90 சதவீதத்தினரிடையில் விவாகரத்து இருந்து வருகிறதென்றும், எனவே, அதை எஞ்சியுள்ள 10 சதவீதத்தினருக்கும் விரிவுபடுத்தினால் என்ன என்றும் இன்று காலையில் டாக்டர் அம்பேத்கர் கூறிய வாதத்தை எடுத்துக்கொள்கிறேன். 10 சதவீத விவாக ரத்து வழக்குகள் ஏற்படுகின்றன என்பதைப் பார்க்கும்போது, இது மிகவும் சரியானதும் நியாயமானதுமாகும். விவாகரத்து வழக்குள் ஏதும் இல்லாதிருந்தால், அப்பொழுது இதை நான் புரிந்து கொண் டிருக்க முடியும். ஆனால், நமது ஆண்களும் பெண்களும் விவாக ரத்தை விரும்பும்போதெல்லாம், அவர்கள் இந்து மதத்திலிருந்து வெளியேறி, முஸ்லீம்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ, ஆகிவிடு கின்றனர்; அவ்வாறு செய்வதன் மூலம் அவர்கள் அந்த மதங்களை அவமதிக்கிறார்கள், அவர்கள் அதைத் தமது சுயநலத்திற்குப் பயன் படுத்திக் கொள்ளுகிறார்கள். எனவே, தற்போது நிலவும் சூழ்நிலை களை அங்கீகரித்து, விவாகரத்துகளை நாம் அனுமதிக்க வேண்டும்.

ஐயா, பெண்களாகிய நாங்கள், எங்களுடைய உரிமைகளை வலியுறுத்தும்போது, நல்லதை, மிகவும் நல்லதை ஒருபோதும் நாங்கள் மறக்கவில்லை என்பதை என்னுடைய சகோதரர்களுக்குச் சொல்லவிரும்புகிறேன். இந்த விஷயத்தில் நாங்கள் மிகவும் பழமை வாதிகளாக இருந்திருக்கின்றோம். எங்களுடைய அரசியல் உரிமை களைப் பொறுத்தவரையிலும் கூட தவறானவை என நாங்கள் கருது கின்றவற்றை நாங்கள் ஒருபோதும் ஊக்குவித்ததில்லை. பிரிட்டிஷ் காரர்கள் இங்கே இருந்தபோதும் கூட நாம் எப்போதும் கூட்டுத் தொகுதிகளுக்காகவே நின்று வந்துள்ளோம். புதிய அரசியல் சாசனத் தில்கூட, எங்களுக்குத் தனித் தொகுதிகள் வேண்டும் என்று நாங்கள் ஒருபோதும் வலியுறுத்தியதில்லை. அவை சமுதாயம் முழுவதன் நன்மைக்கு எதிராகப் போகும் என்று நாங்கள் நினைக்காதிருந்தால் அவற்றை நாங்கள் வலியுறுத்தியிருப்போம். இந்தப் பெண்கள்

அனுகூலமடைவதாயிருந்தால், இந்து சமுதாயமும் அனுகூலமடையும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். இது அனைவரின் நன்மைக்காகத்தான். அதனால்தான் நாங்கள் இந்த அம்சத்தை வலியுறுத்துகிறோம்.

மொத்தத்தில் நமது ஆண்கள் மிகவும் ஒத்துழைப்பாக இருந்தார்கள், எங்களுக்கு உதவிகரமாக இருந்தார்கள் என்பதையும் இங்கு நான் கூறுவதற்கு விரும்புகிறேன். அவர்கள் எங்களுடைய முன்னேற்றத்திற்கு எதிராக இருந்ததில்லை. இது மகாத்மா காந்தியின் பிறருக்கு நன்மை செய்ய விரும்பும் மனோபாவத்தின் செல்வாக்கினால் இருக்கக்கூடும். பெண்களின் உரிமைகளக்கு மிகப் பெரிய ஆதரவாளர்களில் ஒருவராக காந்திஜி இருந்தார் என்பதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். அவர் ஏற்படுத்திய மரபு நமது ஆண்களால் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. காந்திஜியின் செல்வாக்கின் காரணமாக நமது தலைவர்களின் பரிவான கண்ணோட்டத்தின் காரணமாக, பிற நாடுகளின் பெண்கள் போராட வேண்டியிருந்ததுபோல் நாங்கள் அரசியல் உரிமைகளுக்காக ஒரு போதும் போராட வேண்டியதேற்பட்டதில்லை. அந்த நல்ல மரபுகளை நாம் பின்பற்றுவோம் என்றும், கடந்த காலத்தில் இருந்தது போன்று ஒத்துழைப்பு உணர்வை நாம் தொடர்ந்து கடைப்பிடிப்போம் என்றும், என்னுடைய சகோதர உறுப்பினர்கள் அனைவரும் இந்த மசோதாவை ஆதரிப்பார்கள் என்றும், இந்த மசோதாவைப் பெண்களுக்கு உரிமை வழங்கும் ஒரு மசோதா என்று பார்க்காமல், பெண்களுக்கு நீங்கள் நீதி வழங்கும் ஒரு நடவடிக்கை என்று கருதாமல், சமுதாயத்திற்கு நீதி வழங்கும் ஒரு மசோதா என்று கருதி ஆதரிப்பார்கள் என்றும் மிகவும் நிச்சயமாக நம்புகிறேன். இந்த நடவடிக்கையின் மூலம் இந்து சமுதாயத்தை ஆரோக்கியமானதாகவும், நலமளிக்கத்தக்கதாகவும் ஆக்குவதற்கு முயல்கிறோம். இந்து சமுதாயத்தில் நிறைய குறைபாடுகள் உள்ளன. நாம் இப்பொழுது சுதந்திரமாக இருக்கிறோம். இந்த உலகில் நாம் நம்முடைய அந்தஸ்தைப் பெற வேண்டுமெனில், நம்முடைய (வீட்டை) நாட்டை நாம் ஒழுங்குபடுத்தியாக வேண்டும். அதை நாம் செய்தாலொழிய சமுதாயத்தில் நம்முடைய இடத்தை (தகுதியை) நாம் பெற முடியாது. எனவே நாம் ஒன்றுபட்டு, வீட்டிலுள்ள குறைபாடுகளைத் திருத்துவோம். நான் உங்களுக்கு வேண்டுகோள் விடுக்கிறேன். இந்த நல்ல மசோதாவிற்கு உங்களனைவரின் ஆதரவு எங்களுக்குக் கிடைக்கும் என்று நிச்சயமாக நம்புகிறேன்.

*(இதன் பின்னர் சபை, 1949, பிப்ரவரி 25, வெள்ளிக்கிழமை காலை 10-45 வரை ஒத்திவைக்கப்பட்டது).*

---

## *இந்து சட்டத் தொகுப்பு (தொடர்ச்சி)

**திரு. துணை சபாநாயகர்:** மாண்பமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், 1948 ஆகஸ்டு 31ல் முன்மொழிந்த கீழ்வரும் பிரேரணையை மேலும் பரிசீலனை செய்வதை அவை இப்பொழுது தொடங்கும். அந்தப் பிரேரணையாவது:

> ''பொறுக்குக்குழு அறிக்கை செய்தபடி, இந்து சட்டத்தின் சில பிரிவுகளைத் திருத்துவதற்கும் அவற்றை சட்டத் தொகுப்பாக்குவதற்குமான மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படவேண்டும்.''
>
> பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா.

**திரு. நசிருத்தீன் அகமது** (மேற்கு வங்கம் : முஸ்லீம்) : ஐயா, நான் திருத்தங்களை முன்மொழிந்துள்ளேன். எனவே, என் வாதங்களை முன்வைப்பதும், பிறகு மற்றவர்கள் பேசுவதும் பொருத்தமாயிருக்கும் என்று நினைக்கிறேன். அதற்குப் பதிலாக, இப்பொழுது நான் அவர்கள் கூறுவதைக் கேட்டுவிட்டு, பிறகு நான் பேசுவதெனில், பதிலளிப்பதற்கு அவர்களுக்கு எப்படி வாய்ப்புக் கிடைக்கும்?

**திரு. துணை சபாநாயகர்:** பிரேரணைக்கு ஒரு திருத்தத்தை மொழிந்துள்ள மதிப்புக்குரிய உறுப்பினர் பிறகு பேசுவதுதான் பொருத்தமாக இருக்கும். அவ்வாறில்லாவிட்டால், பிறகு பதிலளிப்பதற்கு அவருக்கு வாய்ப்பில்லாமல் போய்விடும் என்பதை அவர் அறிவார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் பதிலளிக்க விரும்பவில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** அந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கும் பொழுது, மதிப்பிற்குரிய உறுப்பினர், தமது பிரேரணைக்கு ஆதரவானதும் எதிரானதுமான சில உரைகளைக் கேட்க வேண்டியது அவசியம், அப்பொழுதுதான் அவரால் அவற்றுக்கு பதில் சொல்ல முடியும். அவர் அந்த ஒரு தடவை (கடைசியாக) பேசினால் போதும். நான் பண்டிட் தாகூர்தாஸ் பர்கவாவைப் பேசுமாறு அழைத்தேன் (குறுக்கீடு). பேச்சாளர்களின் வரிசையை முறைப்படுத்துவது அவைத் தலைவரின் கடமையாகும். பண்டிட் தாகூர்தாஸ் பர்கவாவைப் பேச அழைத்தது சரியானதுதான் என்று கருதுகிறேன்.

---

★ அ.நி. (சட்டப் பேரவை) டி. தொகுதி II, பாகம் II, பிப்ரவரி 25, 1949, பக். 877-78.

*பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா (கிழக்கு பஞ்சாப் : பொது): (இந்தி உரைகளின் ஆங்கில மொழியாக்கம்) ஐயா, திரு. துணை சபாநாயகர் அவர்களே, இந்து சட்டத் தொகுப்பு மசோதா, இந்தியா முழுவதிலும்....

திரு. துணை சபாநாயகர் : தயவுசெய்து ஆங்கிலத்தில் பேசுங்கள்:

பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா : இந்த விஷயம் ஜீவாதார முக்கியத்துவம் உடையதாகையால், இந்தக் காரணத்திற்காகவே நான் இந்தியில் பேசுவதற்கு விரும்புகிறேன்.

டாக்டர் மனோ மோகன்தாஸ் (மேற்கு வங்கம் : பொது) : மாண்புமிகு கல்வி அமைச்சர் இந்துஸ்தானியில் பேசுவதை நாம் புரிந்து கொள்ள முடிகிறது. சேத்கோவிந்த தாஸோ அல்லது பண்டிட் தாகூர்தாஸ் பர்கவாவோ இந்தியிலோ அல்லது இந்துஸ்தானியிலோ பேசுவதிலிருந்து அது முற்றிலும் வேறுபட்டதாகும். 'கற்றுக்குட்டி களாகிய எங்களால் எது இந்துஸ்தானி என்பதை அறிய முடிய வில்லை.

திரு. துணை சபாநாயகர் : எந்த நிர்ணயிக்கப்பட்ட தரமும் இங்கு பின்பற்றப்படவில்லை. எவ்வாறு பேசினாலும் அது இந்துஸ் தானிதான்.

பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா : நான் என்னுடைய உரை யைத் தொடங்குவதற்கு முன்னதாக, (மதிப்பிற்குரிய உறுப்பினர் கள்): ''தயவு செய்து ஆங்கிலத்தில் பேசுங்கள்) மதிப்பிற்குரிய உறுப் பினர்கள் நான் ஆங்கிலத்தில் பேச வேண்டுமென்று விரும்புவதால், அவர்களுடைய விருப்பங்களுக்கு மதிப்புக் கொடுப்பதற்கு எனக்கு சிறிதும் தயக்கமில்லை. ஆனால், மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அனைவரும், ஒருவர் ஆங்கிலத்தில் பேசுவதைக் காட்டிலும் தமது சொந்தத் தாய்மொழியில் பேசினால் தமது கருத்துக்களை வெளிப் படுத்துவது எளிதாக இருக்கும் என்பதை அறிவார்கள். எனவே,

---

★ அ.நி. (சட்டப்பேரவை) டி. தொகுதி II, பாகம் II, பிப்ரவரி 25, 1949, பக். 898-936.

அவர்கள் அனுமதித்தால், நான் இந்தியில் பேசுவதற்கு விரும்பு கிறேன். ஆனால் நான் ஆங்கிலத்தில்தான் பேச வேண்டுமென்று அவர்கள் வலியுறுத்தினால், என்னுடைய உரையை ஆங்கிலத்தில் தொடங்குவதற்கு எனக்கு சிறிதும் ஆட்சேபனை இல்லை. (மதிப்பிற் குரிய உறுப்பினர்கள் : ''இந்தி, இந்தி''). மதிப்பிற்குரிய உறுப்பினர் களில் பெரும்பாலோர் நான் ஆங்கி லத்தில் பேச வேண்டுமென்று வலியுறுத்தாததால், நான் இந்தியிலேயே பேசுவதற்கு விரும்பு கிறேன்.

**திருமதி ஜி. துர்க்காபாய் :** (சென்னை : பொது) : தயவு செய்து எளிய இந்தியில் பேசுங்கள். அப்பொழுதுதான் எங்களாலும் புரிந்து கொள்ள முடியும்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** மிகவும் எளிய இந்தியில் பேசுவதற்கு முயல்கிறேன்: இந்து சட்டத்தொகுப்பு மசோதா குறித்து இந்த அவையில் பேசுவதற்கு நான் எழுந்து நிற்கும்போது, முரண் பட்ட பல சிந்தனைகள் என் மனதில் ஒன்றுடன் ஒன்று மோது கின்றன. இந்த இந்து சட்டத் தொகுப்பு மசோதா இந்து கலாசாரத் திற்கும், இந்து நாகரிகத்திற்கும் சாவுமணியடித்துவிடும் என்று பிரகடனம் செய்பவர்களில் நான் ஒருவனல்ல என்று ஆரம்பத்தி லேயே தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்து கலாசாரமும், இந்து சமுதாயமும், இந்து நாகரிகமும் என்றென்றும் (முடிவில் லாமல்), இந்த உலகின் முடிவுவரையிலும் நிலைத்து நிற்கும் என்று உறுதியாக நம்புகிறேன். இதற்கு எந்த விதத்திலும் நான் எதிரி யல்ல. இந்த மசோதாவோ அல்லது வேறு எந்த மசோதாவோ, இந்து கலாசாரத்திற்கோ அல்லது நாகரிகத்திற்கோ எத்தகைய தீங்கையும் ஏற்படுத்தும் என்று நான் சிறிதும் அச்சமடையவில்லை. நீண்ட காலமாக இந்து சமுதாயத்தினுள் நுழைந்துள்ள தீமைகள், இந்த அவையில் தனது உரையின் இறுதிப் பகுதியில் டாக்டர் அம்பேத் கரின் வேண்டுகோளில் அடங்கியிருந்த அந்தத் தீமைகள் அகற்றப் படும் என்றும், அந்த வேண்டுகோள் நிதான மனப்போக்குடன், மிகவும் சிந்தனை பூர்வமாகப் பரிசீலிக்கப்படும் என்றும் நம்புகிறேன். ஆனால், உண்மையில், இந்து சமுதாயம் பாதுகாக்கப்பட வேண்டு மெனில், சமுதாயத்தை சீர் செய்வதற்கான தேவை உணரப்படுமே யானால், அப்பொழுது இந்து சமுதாயம் பழுதுபார்க்கப்பட்டாக வேண்டும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

பகல் 12 மணி

இந்த மசோதா இந்து கலாசாரத்திற்கு சமாதி கட்டிவிடும் என்று கருதும் நபர்களை நான் பலமாக கண்டிக்கிறேன். பண்டைக் காலத்திய ஸ்மிருதிகளை எழுதியவர்களைப் போன்று அதே திறமையைக் கொண்ட, இந்தப் பேரவைக்கு அல்லது இந்த அவையின் மதிப்பிற்குரிய உறுப்பினர் களுக்கு நமது சாஸ்திரங்களிலோ அல்லது சட்டங்களிலோ எந்த மாற்றங்களும் செய்வதற்கு உரிமையில்லை என்று கூறப்படுவதை ஒரு வினாடி கூட ஏற்றுக்கொள்ளுவதற்கு நான் தயாராக இல்லை. காலத்தின் தேவைகளுக்கு ஏற்ப, சட்டங்களை உருவாக்குவதற்கு ஒவ்வொரு சமூகத்தின் உறுப்பினர்களுக்கும் பூரண உரிமை உண்டு என்று கருதுகிறேன். இது பழைய மரபாக இருப்பதால், அதன்படி தான் நாம் நடக்க வேண்டும் என்று இன்று யாராவது வேண்டுகோள் விடுத்தால், இந்தியா பரிசோதனை செய்து பார்க்காத எந்தப் பழக்க வழக்கமும் இல்லை என்று நான் கூறுவேன். இந்தியாவில் வாரிசு உரிமை முறை பிற பாகங்களில் உள்ளதற்கு மிகவும் வேறுபட்ட முறையில் இருந்து வருகின்ற சில இடங்கள் உண்டு. காசி பழங்குடி யினரிடையிலும், தெற்கு பஞ்சாபின் சில பாகங்களிலும் மரபுரிமை முறை முழுமையும் சொத்து முழுவதும் மகன்களைச் சார்ந்தது அல்ல, மாறாக மகள்களையே சார்ந்தது என்ற எதார்த்தத்தின் மீது சார்ந்துள்ளதை நாம் அறியமாட்டோமா? இந்தியாவின் சில பாகங் களில், பெண் தனது மாமனார் வீட்டுக்குச் செல்வதற்கு பதிலாக, கணவன், மனைவியின் குடும்பத்திற்குள் வந்து சேர்ந்து கொள்ளும் நடைமுறை இருந்து வருகிறது. வெவ்வேறு வகைப்பட்ட பழக்க வழக்கங்களும் சட்டங்களும் இருந்து வருகிற நாடாக இந்தியா இருந்து வருகிறது. நாம் முயன்று பார்க்காத எந்த சமூக முறையாவது இருக் கிறதா? நேற்றுதான், டாக்டர் அம்பேத்கர் சில ஸ்மிருதிகளில் மகன் களோடு மகள்களும் ஒரேமாதிரி வாரிசுகளாக அறிவிக்கப்பட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது என்று கூறினார். எனவே, இந்த விதி நீண்டகாலமாக இருந்து வந்துள்ளது. இதைத் தவிர, ஒரு புதிய சட்டம் என்று அழைக்கப்படக்கூடிய வேறு எந்த சட்டமும் இருப்பதாக நானறியேன். பல இடங்களில் இன்றும் கூட விவாகரத்து வழக்கம் இருந்து வருகிறது. பழைய ஸ்மிருதிகளை வாசித்துப் பார்க்கும்போது, அங்கும் கூட விவாகரத்து கூறப்பட்டுள்ளதைக் காண்கிறோம். பழைய ஸ்மிருதிகளில் கூறப்பட்டுள்ளது என்ற ஒரே காரணத்திற்காக பழைய லட்சியங்களுக்கு நாம் திரும்பிச் செல்ல வேண்டுமென்பதை ஏற்றுக் கொள்வதற்கு நான் தயாராக இல்லை. அந்த லட்சியங்கள் நமது தற்கால சமுதாயத்திற்குப் பொருத்த மாக இல்லையென்று நாம் நினைத்தால், அந்த லட்சியங்களை ஏன்

அப்படியே வைத்துக் கொண்டிருக்க வேண்டும்? இந்தியாவில் ஒரு காலத்தில் திருமணம் என்ற ஏற்பாடே நடைமுறையில் இருந்த தில்லை என்பதையும், மக்களுக்குத் திருமணங்களைப் பற்றி ஒன்றுமே தெரியாது என்பதையும் நான் அறிவேன். பண்டைய நாட்களில் நியோக் என்ற முறை இந்தியாவில் நீண்ட காலமாக இருந்து வந்துள்ளது. இந்து சட்டம் எட்டு வகையான திருமணங்களைப் பற்றிக் கூறுகிறது. அவ்வகைப்பட்ட சில திருமணங்களைத் திருமணம் என்றே அழைக்கப்பட முடியாது. அந்த லட்சியங்கள் தற்காலத்தில் மீண்டும் புகுத்தப்படவேண்டும் என்று யாராவது இன்று அறுதி யிட்டுக் கூறமுடியுமா? அவ்வாறு யாரும் கூறமாட்டார்கள் என்று நினைக்கிறேன். எனவே, பண்டைய நாட்களில் நடைமுறையில் என்ன இருந்து வந்தது, நமது முன்னோர்கள் தமது சொந்த சட்டங் களை இயற்றி எவ்வாறு சமுதாயத்தை முறைப்படுத்தி வந்துள் ளார்கள் என்ற பார்வையில் நமக்கு முன்னால் உள்ள பிரச்சினையைப் பரிசீலனை செய்ய நான் விரும்பவில்லை. தற்காலத்தில், நமது தேவைகள், நமது சட்டக் கருத்தமைப்புகள், நமது அவசியங்கள் ஆகியவற்றைப் பூரணமாகக் கணக்கில் எடுத்துக்கொண்ட பின்னர், நமக்கு என்ன தேவைப்படுகிறது என்பதுதான் இப்பொழுது எனக்கு முன்னால் உள்ள பிரச்சினையாகும். இந்த சட்டத்தொகுப்பு நாடு முழுமையிலும் பெருமளவு வெறுப்புணர்ச்சியையும், அமைதியின்மை யையும் கவலையையும் ஏற்படுத்தியுள்ளது. தங்களுக்கு ஆண்களைப் போன்ற சம உரிமைகள் உண்டு என்று சில பெண்கள் பிரகடனப் படுத்தியுள்ளனர். இந்த சட்டத் தொகுப்பு பெண்களுக்கு ஆதரவாக இருக்கிறது. பெண்களுக்கு உரிமைகள் இல்லை என்று சிலர் அறிவிக்கிறார்கள். இந்த மசோதா இங்கு பரிசீலனையில் இருக்கின்ற வரையில் பல்வேறு கோஷங்களுக்கோ அல்லது இந்த மசோதா பெண்களுக்கு ஆதரவாக இருக்கிறது அல்லது இது ஆண்களுக்கு ஆதரவாக இருக்கிறது என்ற குற்றச்சாட்டுகள் போன்றவற்றுக்கோ நாம் ஒருபோதும் முக்கியத்துவம் அளிக்கக்கூடாது என்று மிகத் தாழ்மையுடன் இந்த அவைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த மசோதா பொருத்தமானதா அல்லவா என்பது பற்றி நாம் நிதான மாக சிந்திக்க வேண்டும். தான் ஒரு பெண்ணுக்குப் பிறக்கவில்லை என்று எந்த ஆண் கூறமுடியும்? தான் ஓர் ஆணின் மகள் இல்லை யென்று எந்தப் பெண் கூற முடியும்? எனவே இது போன்ற ஒரு விஷயத்தில் நமது சகோதரிகளையும், நமது புதல்விகளையும், நமது அன்னைமார்களையும் அன்புடன் நடத்தமாட்டோமா? நம் முடைய அன்னைமார்களும், சகோதரிகளும், புதல்விகளும் தமது கணவன்மார்களுடனும், தமது சகோதரர்களுடனும், மகன்களுடனும்

முறையாக நடந்து கொள்ள மாட்டோம் என்று கோருகிறார்களா? எனவே இந்த விஷயத்தில் எந்தக் கசப்பான சர்ச்சையையும் ஏற்படுத்துவதற்கு அவசியமில்லை. இது ஒரு மிகவும் நுட்பமான பிரச்சினை என்பதை நான் அறிவேன். இதை நாம் சரியான முறையிலும், நிதானமான மனப்பாங்குடனும் பரிசீலனை செய்ய வேண்டும்.

இந்த அம்சத்தை மேற்கொண்டு நான் விவாதிப்பதற்கு முன்னால், ஒரு பிரச்சினையைப்பற்றி ஒரு சில விஷயங்களைக் கூறுவதற்கு விரும்புகிறேன். அப்பொழுதுதான், இந்த அவையின் மதிப்புக்குரிய உறுப்பினர்களும் குறிப்பாக என்னுடைய மதிப்புக்குரிய சகோதரிகளும், ஏதோ சில குறிப்பிட்ட கருத்துக்களுடன், நான் இந்த மசோதாவை எதிர்ப்பதாகவோ அல்லது ஆதரிப்பதாகவோ கருதாமல் இருக்கக்கூடும். ஆரம்பத்திலேயே ஒன்றைக் கூற விரும்புகிறேன். அசையா சொத்துக்கள் மற்றும் அசையும் சொத்துக்கள் ஆகிய இரண்டிலும் பெண்களுக்கு உரிய உரிமைகள் கொடுக்கப்படாத வரையிலும், அவர்களது ஆளுமை முழு வளர்ச்சியைப் பெறாது என்று நம்புகின்ற சிந்தனைப் பிரிவினரைச் சேர்ந்தவன் நான் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். பெண்கள் பொருளாதாரத்தில் பிறரை சார்ந்திருக்கும் நிலைமையை நான் மிகவும் பலமாக எதிர்க்கிறேன். இது சம்பந்தமாக சீதாஜி கூறியுள்ள சுலோகத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

मितं ददाति हि पिता मितं भ्राता मितं सुत:
अमितस्यतु दातारं भर्तारन्‌ का न पुजयेत ॥

நான் இராமாயணத்தை மிகவும் உயர்வாக மதிப்பவன். ஆனால், பெண்களை எப்பொழுதும் சார்பு நிலையிலேயே வைத்திருக்க வேண்டும் என்ற கோட்பாட்டை ஒரு கணமும்கூட ஏற்றுக்கொள்வதற்கு நான் தயாராயில்லை. ஒரு பெண் திருமணமாகின்ற வரையிலும் தனது தகப்பனாரின் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும், திருமணத்திற்குப் பிறகு தனது கணவனின் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும், அவர் ஒரு விதவையாகிவிட்டால் தனது மகனின் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும் என்று ஒரு சில ஸ்மிருதிகள் தீர்ப்பு அளித்திருப்பதை ஒரு கணமும்கூட ஏற்றுக்கொள்வதற்கு நான் தயாராயில்லை, ஸ்மிருதிகளின் இந்தத் தீர்ப்பை எதிர்க்கிறேன். இதற்குக் காரணம் இது பெண்களுக்கு வேதனையளிக்கிறது என்பதனால் அல்ல, இந்தியப் பெண்கள் ஒரு வலிமையான ஆளுமையைப் பெறுகின்ற வரையில், பொருளாதார ரீதியில் தமது நிலைமையை

மேம்படுத்திக் கொள்ளாத வரையில், சகலத்துறை வளர்ச்சியை அவர்கள் பெறாத வரையில் நம்முடைய வம்சாவளி மேம்பாடு அடையாது. ஆண்களைப் போலவே பெண்களுக்கும் அவர்களுடைய வளர்ச்சிக்கு அனைத்து வகைப்பட்ட வாய்ப்புக்களும் வழங்கப்பட வேண்டும். இந்தப் பிரச்சினையை ஒரு குறுகிய கோணத்தில் பார்ப்பது முற்றிலும் நியாயமற்றது என்று கருதுகிறேன். மிகவும் விவேகமான முறையில் நம்முடைய தேசம் முழுவதன் நன்மையையும் மற்றும் நாட்டின் நல்வாழ்வையும் முன்னேற்றத்தையும் கவனத்தில் கொண்டு இந்தப் பிரச்சினையை நாம் முடிவு செய்ய வேண்டும்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, நடைமுறையில் இருந்து வரும் சில பழக்கங்களிலும் சடங்குகளிலும் நாம் நம்பிக்கைவைத்து, அவற்றைப் பாதுகாத்தும் வந்திருக்கிறோம். ஆனால், இதனுடன் கூடவே, ''ஆண்களைப் போன்று சமஉரிமைகள் பெண்களுக்கு வேண்டும்'' என்பது போன்று தற்கால உலகில் எழுப்பப்பட்டு வரும் கோஷங்கள் சம்பந்தமாக நாம் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பது சம்பந்தமான நமது செயல்வழியையும் நாம் முடிவு செய்ய வேண்டும். இந்தக் கோட்பாட்டை நாம் முழுமையாக ஏற்றுக் கொள்ளாதவர்களாக இருக்கலாம். ஆனால் அவர்களுடைய வளர்ச்சிக்கு ஆண்களைப் போன்ற சம வாய்ப்பையும் வசதிகளையும் அளிப்பதற்குக் குறைந்தபட்சம் நாம் கடப்பாடு கொள்ள வேண்டும். இந்தக் கோட்பாட்டை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். எனவே, அசையும் சொத்துக்களிலும் அசையா சொத்துக்களிலும் பெண்கள் தங்களுடைய சட்டபூர்வமான உரிமைகளைப் பெற வேண்டும் என்று எவ்வித தயக்கமுமின்றி கூற விரும்புகிறேன். இதைப் பலமாக ஆதரிக்கிறேன். இந்த மசோதாவில், திருமணம் சம்பந்தமாக சாதி ஒழிப்பு மற்றும் தத்து (சுவீகாரம்) எடுத்துக் கொள்ளும் கோட்பாட்டையும் ஏற்றுக் கொண்டதற்காக டாக்டர் அம்பேத்கரை நான் பாராட்டவும் செய்கிறேன். இந்தப் பிரச்சினை எவ்வளவு முக்கியமானது என்பதை உங்களுக்கு எடுத்துக் கூறுவதற்கு என்னிடம் போதிய ஆற்றல் இல்லை. இந்தப் பிரச்சினையை, நாட்டைக் கட்டியமைக்கும் ஒரு பிரச்சினையாகக் காண்கிறேன். இது நம்முடைய வாழ்வா, சாவா என்ற ஒரு பிரச்சினையாகும். இது அடிப்படைக் கோட்பாடுகள் சம்பந்தப்பட்டதாகும். எந்த விஷயமாவது இந்தியாவைப் பாழ்ப்படுத்தியிருந்தால், அதனுடைய முன்னேற்றத்தைத் தடைப்படுத்தி, பாகிஸ்தானைத் தோற்றுவிப்பதில் ஒரு கருவியாகியதெனில், அது இந்த சாதி அமைப்புதான். நமது சமுதாயத்தினுள் நுழைந்து,

அதனுடைய ஜீவனை அரித்துக் கொண்டிருப்பது ஏதாவது இருக்கிற தெனில்: அது பிராமணர்களை மற்றவர்களுடைய விரோதியாக்கி யுள்ளது, ஜாட் இனத்தவரை, ஜாட் இனமல்லாதவர்களுடைய விரோதியாக்கியுள்ளது, க்ஷத்திரியர்களை இதர அனைத்து சமூகங் களுடையவும் விரோதியாக்கியுள்ளது - அது இந்த சாதி அமைப்பு மட்டுமேயாகும். ஒரு வர்க்கபேதமற்ற சமுதாயத்தை உருவாக்கும் பாதையை, நாட்டின் தந்தையாகிய மகாத்மா காந்தியினால் இந்த நாட்டுக்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ள பாதையைப் பின்பற்றுவதற்கு நாம் எவ்வாறு மறுக்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. இந்த நாட்டின் மக்களை ஐக்கியப்படுத்துவதற்குக் கருவியாக உள்ள இரண்டு விஷயங்கள் - சமபந்திபோஜனமும் கலப்புத் திருமணங் களுமாகும். கலப்புத் திருமணங்களைப் பொறுத்தமட்டிலும், இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணப்படாத வரையில் இந்தியாவில் தேச நிர்மாணம் சம்பந்தப்பட்ட பிரச்சினைக்குத் தீர்வு காணமுடியாது. எனவே, இந்தப் பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், நான் பலமாக இதை ஆதரிக்கிறேன்.

ஒருதார மணம் என்ற பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், எந்த ஒரு உறுப்பினரும் அதை எதிர்க்க மாட்டார். ஒருதார மணத் தின் விளைவுகளைப் பொறுத்தமட்டிலும், இது நிறைவேற்றப் படுவதானது, என்னுடைய பிரதேசத்தை மோசமாக பாதிக்கும் என்பது எனக்குத் தெரியும். ஏனென்றால், இன்றைய தினமும்கூட, சூழ்நிலைமைகளுக்கு ஏற்ப ஒருவர் இறந்துபட்டு, அவர் மனைவி விதவையாகும்போது, அவரை இறந்துபோனவரின் இளைய சகோ தரர் மறுமணம் செய்துகொள்கிறார். வருகின்ற காலத்தில், இந்தக் காலாவதியாகிப்போன வழக்கங்களை நாம் தொடரக் கூடாது என்பதை அறிவேன். இந்த வழக்கொழிந்த வழக்கத்தின் பாதிப்பு கள், அதனால் பாதிக்கப்படுவோருக்கு எடுத்துச் சொல்லி விளக்கப் பட்டால், அவர்கள், அதைக் கைவிடுவதற்கு உடனே ஒப்புக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

ஒருதார மணம் என்கிற பிரச்சினையையும், நான் யாரைப் பற்றிப் பேசுகிறேனோ, அந்த நபர்களையும் பொறுத்தமட்டிலும், இந்த நபர்கள், அவர்களின் தேவைகள், மற்றும் அறிவுக்கேற்ப, இந்தியாவில் விதவை மறுமணம் நடைமுறையில் இல்லாதபோது, அந்தக் காலத்தில் சிந்தித்து இந்தக் கோட்பாட்டை ஏற்றுக்கொண் டார்கள். ஒருதார மணம், சாதி அமைப்பை ஒழித்துக் கட்டுவது என்கிற பிரச்சினைகளையும் பெண்களுக்கு முழு உரிமைகளை வழங்கு வதையும் பொறுத்தமட்டிலும், நான் முழுமையாக அவற்றுக்கு

ஆதரவு அளிக்கிறேன் என்று எவ்விதத் தயக்கமும் இன்றித் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

விவாகரத்து பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும் இந்தியாவின் பெரும்பகுதியில் விவாகரத்து முறை அமலில் இருந்துவருகிறது. இந்நாட்களில் சிலருக்கு இந்த விவாகரத்து முறை மோசமானதாகத் தோன்றுகிறது. உண்மையில், நம்முடையதைப் போன்ற ஒரு நாட்டில், நமது வழக்கங்களுக்கு ஏற்ப பெண்கள் உடன்கட்டை ஏறுவது ஒரு பழக்கமாக இருந்த நாட்டில், விவாகரத்து முறைக்கு எதிர்ப்பு இருப்பது வியப்புக்குரியதல்ல. நம்முடைய நம்பிக்கைகளின்படி, திருமணமானது முறிக்கப்பட முடியாத ஓர் உறவுமுறையாகும்; எனவே இந்தக் கண்ணோட்டத்திலிருந்து, விவாகரத்து உரிமை வழங்கப்படக்கூடாது என்று கூறப்படுகிறது. ஆனால், விவாகரத்து முறை எப்பொழுதும் நம்முடைய நாட்டில் இருந்து வந்துள்ளது, இன்று வரையிலும் கூட இருந்து வருகிறது. ஆனால், சிலர் தங்கள் கண்களை மூடிக்கொண்டு நடக்க விரும்பினால், தங்களைச் சுற்றி உலகில் என்ன நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதைக் காண்பதற்கு அவர்கள் விரும்பாவிட்டால், அது அவர்கள் சொந்த விஷயம். இந்த முறை இந்த நாட்டின் 90 சதவீத மக்களிடையே இருந்து வருகிறது என்று டாக்டர் அம்பேத்கர் நம்மிடம் கூறினார். இந்தப்புள்ளிவிவரங்கள் குறைவாக மதிப்பிட்டுக் கூறப்பட்டிருக்கிறதேயன்றி மிகை மதிப்பீடு அல்ல. விவாகரத்துப் பிரச்சினை மற்றும் அது இந்தியாவில் நடைமுறையில் உள்ளதைப் பொறுத்தமட்டிலும், அதை நான் முழுமையாக ஆதரிக்கிறேன்; அது இன்றைய சமுதாயத்தில் பழக்கத்தில் இருந்து வருகிறது என்ற காரணத்தினால் அல்ல, மாறாக, அது நம்முடைய வழக்கங்களில் ஒன்றாகும் என்ற உண்மையினால்தான். எனவே, நான் விவாகரத்துக்கு ஆதரவு தெரிவிக்கிறேன்.

பொறுக்குக் குழுவிலிருந்து வந்துள்ள வடிவத்தில் இந்த இந்து சட்டத் தொகுப்பு மசோதாவில், அதனுடைய பிரதானக் குறைபாடு, அது போதிய அளவுக்கு முன் செல்லவில்லை என்பது தான். இதுவே இப்பொழுதுள்ள பிரச்சினையாகும்; உண்மையில், நமது நாட்டில் இருந்துவரும் பழக்கவழக்கங்களை முன்னிட்டு, பொறுக்குக் குழு யோசனை கூறியுள்ள சீர்திருத்தங்கள் மிக மிகக் குறைவானதாக உள்ளன; பஞ்சாபிலுள்ள மக்கள் அவ்வளவு பின்தங்கியவர்கள் அல்ல. சமூக சீர்திருத்தங்களைப் பொறுத்தமட்டிலும் பஞ்சாபிய மக்கள் இந்தியாவின் இதர பகுதி மக்களைக் காட்டிலும்

மிகவும் முன்னேற்றமடைந்தவர்கள், இந்தத் தொகுப்புச் சட்டம் அந்த அளவிற்குக் கூடச் செல்வதில்லை. அவர்களுக்கு இந்த சட்டத் தொகுப்பு சமூக சீர்திருத்தம் வகைப்பட்டதல்ல, அதற்குப் பதிலாக இது அவர்களைப் பின்னுக்கு இழுக்கிறது. இந்தச் சட்டத் தொகுப்பைப் பஞ்சாபின் கிராமப்புறப் பிரதேசத்தின் எந்த ஒரு இந்துவுக்கோ அல்லது சீக்கியருக்கோ காட்டினால், அவர் ''ஓ, ஐயா, நீங்கள் என்ன செய்கிறீர்கள்? எங்களைப் பெரிய அளவுக்கு நீங்கள் பின்னே தள்ளுகிறீர்கள். இவையெல்லாவற்றைவிடவும் நாங்கள் வெகுதூரம் முன்னேறியுள்ளோம். எங்களை நீங்கள் இன்னும் பின்னுக்கு இழுத்துச் செல்ல விரும்புகிறீர்களா'' என்று அவர் கூறுவார். இந்தச் சட்டத் தொகுப்பினால் பஞ்சாப் மக்களுக்கு எவ்வித அனுகூலமும் கிடைக்கப் போவதில்லை. தற்போதைய சட்டத் தொகுப்பு பொறுக்குக் குழுவிடமிருந்து வந்துள்ள வடிவத்தில், பஞ்சாப் மக்களின் தேவைகள் மிகவும் பின்னுக்குத் தள்ளப்பட்டு நிற்கின்றன, அவர்களின் தேவைகள் பின்தங்கி நிற்கின்றன என்பது மட்டுமன்றி, இந்த மசோதாவில் சில விஷயங்கள் தற்போதைய வடிவத்திலேயே அது இருக்குமானால், இதைத் தோற்கடிக்க வேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தும். நமது நிறுவனங்களை நாம் பாதுகாக்க விரும்பினால், மசோதாவின் இன்றைய வடிவத்தில் அவற்றைப் பாதுகாக்க முடியாது, அந்த வகையில் இந்த மசோதா தொல்லை கொடுப்பதாகிறது.

**திரு. மோகன்லால் கௌதம்** (உ.பி: பொது): இது சம்பந்தமாக ஏதேனும் உதாரணத்தைக் கூறுங்கள்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** நான் ஒரே ஒரு உதாரணத்தைக் கூறுகிறேன். இந்த முன்னுரைக்குப் பின், ஐயா உங்களுடைய அனுமதியின்பேரில், இந்த மசோதாவிற்கு எதிரான என்னுடைய ஆட்சேபனைகளை எழுப்ப விரும்புகிறேன், அதோடு, எந்த அளவிற்கு இதை நான் ஆதரிக்கிறேன் என்பதையும் கூறுகிறேன். இந்த மசோதாவிலுள்ள பல ஷரத்துக்கள் விஷயத்தில் யாருக்கும் எந்த ஆட்சேபனையும் இருக்க முடியாது, இந்த மசோதாவின் எல்லா ஷரத்துகளையும் எதிர்ப்பதாக ஒரு சிலர் மட்டுமே கூறுவார்கள். ஆனால், ஐயா, நீங்கள் இந்த மசோதாவைப் படித்துப் பார்ப்பீர்களேயானால், பொறுக்குக் குழுவின் 17 உறுப்பினர்களில் 11 பேரிடமிருந்து ஆட்சேபனைக் குறிப்புகள் வந்திருப்பதை நீங்கள் காண்பீர்கள். அவர்கள் யார்? அவர்களில் திருமதி அம்மு சுவாமிநாதனும், திருமதி ரேணுகா ரேயும் உள்ளனர். அவ்விருவரின் ஆட்சேபனைக் குறிப்புகளும் இங்கு உள்ளன.

**திருமதி ரேணுகா ரே (மேற்கு வங்கம் : பொது) :** இந்தக் குறிப்புகள் அடிப்படைக் கோட்பாடுகள் மீது அல்ல.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** நான் அதற்கு வருகிறேன். உண்மையைக் கூறுவதெனில், கருத்து மாறுபாட்டுக் குறிப்புகள் எழுதியுள்ள இந்தப் பதினோரு உறுப்பினர்களும், தேர்வுக் குழுவிலிருந்து வந்துள்ள வடிவத்திலான இந்த மசோதாவை எதிர்க்கவே செய்துள்ளனர். கருத்து மாறுபாட்டுக் குறிப்புகளை எழுதியவர்கள் யார் யாரென்ற பட்டியலை நான் தெரிவிக்கிறேன். கருத்து மாறுபாட்டுக் குறிப்புகளில் ஒன்று பக்ஷி தேக் சந்தினுடையது. அவர் தன் வாழ்நாள் முழுவதும் சமூக முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டு வந்துள்ளவர். சமூக சீர்திருத்தங்களுக்காக எந்த அளவுக்குச் செல்வதற்கும் தயாராயிருப்பவர். அவரும் ஒரு கருத்துமாறுபாட்டுக் குறிப்பு எழுதியிருக்கிறார் என்றால், நாம் எங்கு செல்கிறோம் என்று சிந்திக்க வேண்டும். இந்தக் கருத்துமாறுபாட்டுக் குறிப்புகளை நாம் கவனமாகப் படித்துப் பார்த்தால், 17 உறுப்பினர்களில் குறைந்தபட்சம் 11 பேர் பொறுக்குக் குழுவிலிருந்து வெளிவந்துள்ள வடிவத்திலான இந்த மசோதாவை பலமாக எதிர்க்கிறார்கள் என்பது தெளிவாகத் தெரியும். இந்த முன்னுரைக்குப் பின் இந்த மசோதாவுக்கு எதிராக தாமதப் படுத்துபவை என்று பொதுவாகக் கருதப்படுகிற, பிரேரணைகளை நான் முன்மொழிவதற்கு ஏன் தயாராயிருக்கிறேன் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

**திரு. தாஜாமுல் உசேன்** (பீஹார்: முஸ்லீம்) ஐயா, நான் ஒரு தகவல் பிரச்சினையை எழுப்ப விரும்புகிறேன். தேர்வுக் குழுவின் 17 உறுப்பினர்களில் 11 பேர் கருத்து மாறுபாட்டுக் குறிப்புகள் எழுதியிருப்பதாக மதிப்புக்குரிய உறுப்பினர் குறிப்பிட்டார். அவர்கள் இந்த மசோதாவை எதிர்க்கிறார்கள் என்றால், நாம் இதை நிறைவேற்றுவதற்காகப் பொறுக்குக் குழு எவ்வாறு இந்த மசோதாவைப் பரிந்துரை செய்தது என்பதை மதிப்புமிகு உறுப்பினர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஐயா, திரு. துணை சபாநாயகர் அவர்களே, என்னுடைய கருத்தின்படி இது ஒரு தகவல் தெரிந்து கொள்ளும் பிரச்சினையுமல்ல, ஓர் ஒழுங்குப் பிரச்சினையும் கூட அல்ல. ஐயா, நீங்களே இந்த மசோதாவைப் படித்துப் பார்க்கலாம். திரு. பாரதியும் கருத்து மாறுபட்டுக் குறிப்பு ஒன்றை எழுதியுள்ளார்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை : பொது) : என்னுடையது இந்த மசோதாவுக்கும் ஒரு சிறிது முன்னே செல்லுகிறது. இந்த மசோதாவின் எல்லையை விரிவுபடுத்துவதற்கு நான் விரும்புகிறேன். அதுதான் என்னுடைய கருத்து மாறுபாட்டுக் குறிப்பு.

**திரு. துணை சபாநாயகர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் ஒவ்வொரு கூற்றையும், ஒவ்வொரு சொற்றொடரையும் தொடர்ந்து விளக்கிக் கொண்டே போவதா? இது தேவையில்லை.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** இல்லை ஐயா, நான்....

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினரின் கருத்து வேறுபாட்டுக்குறிப்பு அச்சாகி உள்ளது. அவர் ஏதாவது விளக்கம் கூற விரும்பினால், அவருடைய முறை வரும். ஒருவர் பேசும்போது தொடர்ந்து, குறுக்கிடுவதும், மதிப்பிற்குரிய பிற உறுப்பினர்களும் ஒரே சமயத்தில் எழுந்து நிற்பதும் நல்லதல்ல.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** ஐயா, நான் கூறலாமா....?

**திரு. துணை சபாநாயகர் :** அமைதி, அமைதி.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** ஐயா, தனது கருத்தை சபையின் முன் விளக்க வேண்டிய தொந்தரவை திரு. பாரதிக்கு நான் கொடுக்க மாட்டேன். நானே அவருடைய கருத்தை இங்கு எடுத்துக் கூறுகிறேன். தான் இந்த மசோதாவின் அடிப்படையான கோட்பாடுகளுக்கு எந்தவகையிலும் எதிராளி அல்ல என்பதே திரு. பாரதியின் குறிப்பு ஆகும். இதன் தர்க்கரீதியான விளைவாக, வரையறைக்குட்பட்ட சொத்துக்களை சொந்தமாகக் கொண்டுள்ள எல்லாப் பெண்களுக்கும் உரிமை கொடுக்கப்பட வேண்டும். அவர்களை உடனே அவற்றின் முழுமுதல் சொந்தக்காரர்களாக்கிவிட வேண்டும் என்று அவர் விரும்புகிறார். நான் சரியாகச் சொல்கிறேன் என்று நினைக்கிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** நான் பதிலளிப்பதற்கு அனுமதிக்கப்படவில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் பண்டிட் பர்கவா தொடர்ந்து பேசலாம்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஐயா, இந்தக் காரணத்திற்காகவே, தேர்வுக் குழுவின் பல உறுப்பினர்கள், தேர்வுக் குழுவிலிருந்து வெளிவந்துள்ள வகையிலான மசோதாவின் வடிவம் சம்பந்தமாகத் தமது கருத்துவேறுபாட்டுக் குறிப்புகளை எழுதியுள்ளனர் என்று கூறிக்கொண்டிருந்தேன். இந்தக் கருத்து வேறுபாட்டுக் குறிப்புகள் எந்த நோக்கத்துடன் எழுதப்பட்டன என்பது குறித்து நான் பின்னர் கூறுகிறேன்; ஆனால் என்னுடைய உரையின் நடுவில் யாரும் குறுக்கிட வேண்டாம் என்று விரும்புகிறேன்.

ஐயா, சமூக சீர்திருத்தங்கள் சம்பந்தமாக இந்த மசோதா ஓரளவுக்குத்தான் செல்கின்றது என்ற போதிலும், அதற்கப்பாலும் செல்வதற்கு நான் தயாராகயிருக்கிறேன் என்று கூறிக் கொண்டிருந்தேன். இருந்தபோதிலும், இந்த மசோதாவைப் பூரணமாக ஆதரிக்கும் நிலையில் இன்னும் நான் இல்லை. இது இயல்பானதே. டாக்டர் அம்பேத்கரும் கூட - அவருடைய நல்லெண்ணத்தினால்தான் இந்த மசோதா இந்த வடிவத்தைப் பெற்றுள்ளது, மேலும் அவர் நிகழ்த்திய உரை குறித்து ஒவ்வொரு இந்தியனும், குறிப்பாக, ஒவ்வொரு இந்துவும் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். அவரும் கூட இந்த மசோதாவின் எல்லா ஷரத்துக்களையும் ஆதரிக்கவில்லை. எனவே, சில இடங்களில் பொறுக்குக் குழு நியாய-விரோதமாக நடந்து கொண்டுள்ளது என்று அவரே கூறியுள்ளார். இதைக் காட்டிலும் கூடுதல் கடுமையான சொற்களைக் கூறுவதற்கு நான் விரும்பவில்லை. ஆனால் அவரும் இந்த மசோதாவுக்கு எதிராக இருக்கிறார் என்று நான் கூறுகிறேன். இவ்வாறு, 12 கருத்து வேறுபாட்டுக் குறிப்புகள் உள்ளன. எனவே 17 உறுப்பினர்களில் 12 பேர் இந்த மசோதாவிற்கு எதிராக இருக்கிறார்களென்றால், இத்தகைய நிலைமையில், திரு. நசிருத்தீன் அகமது முன்மொழிந்துள்ள திருத்தத்திற்கு ஆதரவு கொடுப்பதற்கு நான் விரும்புகிறேனென்றால், இந்த அவை வியப்படையக்கூடாது. இதற்கான காரணம் மிகவும் தெளிவானது. நீங்கள் யாரும் என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளக்கூடாது என்று விரும்புகிறேன். இந்த மசோதாவின் பல பிரிவுகளை நிறைவேற்றுவதில் ஒரு நிமிஷம் கூடத் தாமதிக்கக் கூடாது என்று கருதுகிறேன். இந்தப் பிரேரணை தாமதப்படுத்தும் எண்ணம் கொண்டதாக இருக்குமேயானால், அவருக்கு நான் ஆதரவளித்திருந்திருக்க மாட்டேன். என்னுடைய பல பிரேரணைகளும் கூட தாமதப்படுத்தும் நோக்கம் கொண்டவை அல்ல. இந்தப் பேரவையில், அதாவது பேரவையின் இந்த அமர்வில் இந்த மசோதா நிறைவேற்றப் போவதில்லை என்பதை நான் அறிவேன். இந்த

மசோதாவை நிறைவேற்றுவதற்கு பேரவையின் ஒரு சிறப்புக் கூட்டம் கூட்டப்பட வேண்டியிருக்கும். அடுத்த கூட்டம் சுமார் 6 மாதங்களுக்குப் பின்னர் வரும். இந்த 6 மாத காலத்தில் நான் எழுப்பும் ஆட்சேபனை குறித்து வெகு எளிதில் முடிவு செய்து விடலாம். ஐயா, உங்களுடைய அனுமதியுடன், இந்த மசோதா மீண்டும் தேர்வுக் குழுவிற்குத் திருப்பி அனுப்பப்படுவதை நான் விரும்பவில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். இத்தகைய பிரேரணைக்கு என்னுடைய காரணங்கள் வேறுபட்டவை. இந்த மசோதா எப்படியாவது ஒரு முடிவுக்கு வந்துவிடும் என்று நான் விரும்புவதாக, ஒரு வேளை சில மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் நினைத்துக் கொண்டிருக்கக் கூடும். இந்த மசோதாவை முடக்கு வதற்கு நான் விரும்பவில்லை. இது நிறைவேற்றப்பட வேண்டும் என்றுதான் விரும்புகிறேன். இந்த மசோதாவின் எல்லா நல்ல அம்சங்களும் ஏற்றுக் கொள்ளப்படவேண்டும் என்று விழைகிறேன். எனவே இந்த மசோதாவை நிதானமான மனதுடன் பார்க்க வேண்டியது அவசியமாகும். சூடான வாதங்களில் ஈடுபட வேண்டிய அவசியமில்லை. எனவே, நான் கூற வேண்டியிருப்பவற்றையெல் லாம் நீங்கள் பொறுமையாகக் கேட்க வேண்டும் என்று விரும்பு கிறேன். இதை டாக்டர் தவறாக எடுத்துக் கொள்ள மாட்டார் என்று கருதுகிறேன். இதையெல்லாம் மிகவும் பணிவாகத் தெரிவித்துக் கொள்வதற்கு விரும்புகிறேன், எதிர்ப்பு உணர்வுடன் அல்ல. ஆனால் நான் கூற விரும்புகின்றவற்றைக் கூறுவதற்கு எனக்குத் துணிவு வேண்டும். மற்றவர்கள் இதை, தாராள மனதுடன் இல்லாவிட் டாலும் குறைந்தபட்சம் நியாயமான முறையில் வியாக்கியானம் செய்யவேண்டும் என்று விரும்புகிறேன். இவை யாவற்றையும் மிகவும் மரியாதையுடன் தெரிவித்துக் கொள்கிறேன், இதை மிகவும் முக்கியமானதாகவும் கருதுகிறேன். புதிய தேர்தல்கள் நடத்தப்பட வேண்டியுள்ளது என்பதை மதிப்பிற்குரிய ஒவ்வொரு உறுப்பினரும் அறிவார்கள் என்பதை தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். தற்போ துள்ள உறுப்பினர்கள் அனைவரும் மறைமுகத் தேர்தல் மூலமாகவே இங்கு வந்துள்ளனர். நமக்குப் பிறகு இங்கு வரவிருக்கும் உறுப் பினர்கள் நேரடித்தேர்தல் மூலமும், வயது வந்தோர் வாக்குரிமை மூலமும் வருவார்கள். அரசியல் நிர்ணய சபையில் நிறைவேற்றப் பட்டுள்ள தீர்மானத்தின்படி, தேர்தல்கள் 1950ல் நடைபெறும். அப்பொழுதுதான், நான் அதை, ஐயா, நீங்களே கூறியபடி, முழு இறையாண்மை படைத்த அவை என்று கூறுவேன். இருந்தபோதிலும், பண்புடைமைக் கோட்பாட்டிற்கேற்ப, 30 கோடி மக்களின் அன்றாட வாழ்க்கை சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தை நாம் முடிவு செய்வதற்குப் பதிலாக, நேரடித் தேர்தல் வாயிலாகவும், வயது வந்தோர் வாக்குரிமை 3

மூலமும் வரப்போகின்றவர்கள் இந்தப் பிரச்சினை குறித்து முடிவு செய்ய வேண்டும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இதுதான் சரியான வழிமுறையாக இருக்கும் என்று நினைக்கிறேன். **பண்புடைமை என்ற கோட்பாட்டின் அடிப்படையில் இதைத் தெரிவித்துக் கொள்வதற்கு விரும்புகிறேன்.** இந்தப் பேரவை அரசியல் சாசனத்தைமட்டுமே உருவாக்க முடியும் என்று சிலர் கருதுகின்றனர். நேற்றைய தினம் முன்வைக்கப்பட்ட அதே வாதம்தான் இது. ஒரு சொத்தை 12 மகன்களுக்கு இடையில் பிரித்துக் கொள்ளும்போது துண்டு துக்காணியாக அது சிதறாதபோது, ஒரு மகளையும் அந்த சொத்துப் பிரிவினையில் சேர்த்துக் கொள்ளும் போதும் அது அவ்வாறு சிதறாது என்று கூறப்பட்டது. ஆனால் ''ஒரு தவறு மற்றொன்றை நியாயப்படுத்த முடியாது'' என்று கூறுகிறேன்.

அரசியல் சாசனத்தை உருவாக்குவதற்குக் கூட, இந்தப் பேரவை தகுதியுடையதல்ல என்று திரு. மோகன்லால் கௌதம் கூறினார். அவருடைய கருத்துக்களை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் நீங்கள் அதை ஏற்றுக் கொள்கிறீர்கள் என்றால், அந்தத் தவறை மீண்டும் ஏன் செய்கிறீர்கள்? இது மிகவும் தவறானது. நீங்கள் இந்தக் கருத்தைக் கொண்டிருக்கவில்லையென்றால், அது வேறு விஷயமாகும். அரசியல் சாசனத்தை உருவாக்கும் இந்தப் பேரவை இறையாண்மை படைத்த ஒரு அவையாகும். இது முற்றிலும் சட்டப்பூர்வமானதே. இதே முறையில், இந்த அவை அது விரும்பும் எந்த சட்டங்களையும் இன்று நிறைவேற்றுவதற்கு முழு அதிகாரம் படைத்ததாகும்.

இருந்தபோதிலும், இந்த விஷயத்தில் நாம் அவசரப்படக் கூடாது என்று பண்புடைமை உணர்வும் தகவுப் பொருத்த உணர்வும் நம்மைக் கோருகின்றன. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நாம் இந்தக் கோட்பாடுகளைக் கடைப்பிடித்து வந்துள்ளோம்; எனவே, அடுத்த 6 மாதங்களில் வானம் உடைந்து நம் தலைமீது விழுந்து விடாது, எனவே அவசரக் கோலத்தில் உடனே இந்த மசோதாவை நாம் நிறைவேற்ற வேண்டிய அவசியமில்லை என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். எனவே, ஐயா, உங்களுடைய கருத்து வேறுபாட்டுக் குறிப்பில் நீங்கள் எழுதியிருந்தது போன்று: இந்த 12 பேர்களில், இராசி வட்டத்திலுள்ள 12 ராசிகள் - அவற்றில் நீங்களும் ஒருவர் என்பதை மிகவும் பணிவுடன் நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்; உங்களோடு கூட பாபுராம் நாராயண் சிங்கும் 11ம் பக்கத்தில் கீழ்வருமாறு கூறியுள்ளார்:

''உறுப்பினர்கள் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். வாக்காளர்களிடமிருந்து அவர்களுக்கு அதிகாரம் வழங்கப்படவில்லை. பெருமளவிலான அபிப்பிராயமும், பெரும்பான்மையோரும் மசோதாவின் பெரும்பாலான ஷரத்துக்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்துள்ளனர். இந்த மசோதா இந்து சமுதாயத்தின் அடிப்படையான கட்டுமானத்தை மாற்றுவதற்கு முயல்கிறது.''

நேரடித் தேர்தல் மூலமாக, இந்தப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள், இங்கு வந்த பின்னர், இந்த விஷயத்தில் முடிவு செய்வதற்கு அவர்களுக்கு வாய்ப்புக் கொடுக்கப்பட வேண்டும் என்று நீதி கோருகிறது என்று மிகவும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நமது மிகவும் மதிப்பிற்குரிய, மற்றும் நாட்டின் ஒரு மெய்யான தலைவருமாகிய டாக்டர் இராஜேந்திரப் பிரசாத்தும் இந்தக் கோட்பாட்டை ஒத்துக் கொண்டு, இந்த மசோதா முழுமையாக, எதிர்வரும் பிரதிநிதித்துவப் பேரவையின் முன்னால் சமர்ப்பிக்கப்பட வேண்டும் என்று ஒரு கடிதமும் எழுதியுள்ளார்.

**திரு. தாஜாமுல் உசேன்:** கவர்னர் - ஜெனரல் என்ன எழுதியிருக்கிறார்?

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஐயா, கவர்னர் - ஜெனரலைப் பற்றி நீங்கள் கூறுவதெல்லாம் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. மூத்தோர்களின் கருத்தை நான் மிகவும் உயர்வாகக் கௌரவிக்கிறேன், மதிக்கிறேன் என்பதை மிகவும் மரியாதையுடன் இங்கு தெரிவித்துக் கொள்வதற்கு விரும்புகிறேன். இந்த விஷயம் இன்று எனக்கு அக்கறையுள்ளதாகும். எங்கோ தொலைதூரக் கிராமத்தில் வாழும் ஒவ்வொரு பெண்ணுக்கும் அக்கறையுள்ளதாகும். இதனால் ஒவ்வொருவரும் பாதிக்கப்படுவார்கள். எனவே ஒவ்வொருவருக்கும் தன்னுடைய கருத்தைச் சொல்வதற்கு உரிமை உண்டு. நான் ஏற்றுக் கொள்ளாதது என்னவெனில், நேற்றைய தினம் என்னுடைய மதிப்புக்குரிய சகோதரி திருமதி சுசேதா கிருபளானி, இந்த முறையில் நூற்றாண்டுகள் கடந்து போகும் என்று கூறியிருந்தார்கள். இந்த மசோதா கடந்த பத்தாண்டுகளாக நிலுவையிலிருந்து வந்துள்ளது. இது 1941ல் தயாரிக்கப்பட்டது. இந்த வாதம் என்னைக் கவரவில்லை. இந்த நாட்டில் எழுத்தறிவு எந்த அளவில் இருக்கிறது என்று கேட்க விரும்புகிறேன். இந்த நாட்டின் பெண்கள் எவ்வளவு பேர் எழுத்தறிவு பெற்றவர்களாக உள்ளனர்? இந்த அவையின் உறுப்பினர்களாகவுள்ள என்னுடைய மதிப்பிற்குரிய சகோதரிகளுக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன்: அவர்களுடைய கருத்தை நான் உயர்வாக

மதிக்கிறேன்; ஆனால், கிராமங்களிலும் நகரங்களிலும் வாழ்கின்ற அவர்களின் ஆயிரக்கணக்கான சகோதரிகள் இந்த விஷயத்தில் தங்களுடைய அபிப்பிராயத்தைக் கூறுவதற்கு உரிமை பெற்றிருக் கிறார்களா! இந்தக் காரணத்திற்காகவே இங்குள்ள என்னுடைய மதிப்பிற்குரிய சகோதரிகள் இந்த விஷயத்தில் பொறுமையையும் ஓரளவு அடக்கத்தையும் கடைப்பிடிக்க வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். தங்களுடைய அபிப்பிராயத்தை எடுத்துக் கூறுவதற்கு அவர்களுக்கு முழு உரிமையுண்டு. அவர்களின் கருத் துக்களும் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டுமென்று நான் கூறினால், அதைக் குற்றமாகக் கருதமுடியாது. நகரங்களிலும் கிராமங்களிலும் வாழும் மக்களுக்கு இந்த மசோதா எதைப்பற்றியது. அதன் ஷரத் துக்கள் யாவை என்பதெல்லாம் தெரியாது என்று மிகவும் மரியாதை யுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் ''கேளுங்கள்'' ''கேளுங்கள்'' என்றனர்: இந்த மசோதா வின் ஷரத்துக்களை ஆராயாதவர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள். இந்த அவையின் பல உறுப்பினர்கள் இதனுடைய முக்கியத்துவம் என்ன என்பதை இன்னும் உணரவில்லை.

**திருமதி ஜி. துர்க்காபாய் :** இந்த நாட்டின் பெண்கள், சீர்திருத் தத்திற்கான உங்களுடைய இதர மசோதாக்களின் ஷரத்துக்களைப் புரிந்து கொள்வதற்குத் தகுதியுடையவர்களாக இருக்கின்றார்கள் என்று நீங்கள் கருதும்போது இந்த மசோதாவின் ஷரத்துக்களை அவர்களால் புரிந்துகொள்ள முடியும் என்று நீங்கள் நினைக்க வில்லையா?

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** இந்தக் குறுக்கீட்டை நான் வரவேற்கிறேன், ஏனெனில், இது மெய்யான விஷயத்தை விளக்கு வதற்கு எனக்கு ஒரு வாய்ப்பைக் கொடுத்துள்ளது. ஐயா, முன்பு ஒரு காலத்தில், 'சதி' (உடன்கட்டை ஏறுவது தடுப்பு) மசோதா, விதவை மறுமண மசோதா, சாரதா சட்டம் முதலியன நிறைவேற்றப் பட்டன. இன்று இந்த அவையின் முன்னால் உள்ள இந்த மசோதா வும் அதே வகைப்பட்டதே. இது சாதாரண மக்களின் அபிப்பிரா யத்தை கவனத்தில் எடுத்துக் கொண்டு நிறைவேற்றப்படக்கூடிய வற்றினின்றும் உயர்ந்த மட்டத்தில் உள்ள ஒன்றாகும் என்று திருமதி துர்க்காபாய் கருதுகிறார்.

**திரு. தாஜாமுல் உசேன்:** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புவதற்கு எனக்கு அனுமதி தருவீர்களா?

**திரு. துணை சபாநாயகர் :** தயவு செய்து அந்த ஒழுங்குப் பிரச்சினை என்னவென்று கூறுங்கள்.

**திரு. தாஜாமுல் உசேன்:** ஐயா, என்னுடைய ஒழுங்குப் பிரச்சினை இதுதான்: மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர், இந்த வகையில் அவை முழுவதையும் அவமதித்துள்ளார்; அவர் பேசியதை நீங்கள் கேட்டீர்கள். இந்து தொகுப்புச் சட்ட மசோதாவைப் புரிந்து கொள்ளாத உறுப்பினர்களும் இந்த அவையில் இருக்கிறார்கள் என்று அவர் கூறுகிறார். இது இந்த அவையை அவமதித்திற்கு ஒப் பாகும். இதுகுறித்து சபாநாயகரின் தீர்ப்பு வேண்டும்.

**திரு. துணை சபாநாயகர்:** இந்த ஒழுங்குப் பிரச்சினையில் விஷயம் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. மதிப்பிற்குரிய உறுப் பினர் அர்த்தப்படுத்துவதெல்லாம், இந்த மசோதாவின் முழு விளைவுகளையும் மக்களின் வெவ்வேறு பகுதியினர் வெவ்வேறு விதமாகப் புரிந்து கொள்ளக்கூடும் என்பதுதான். மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்று அவர் விரும்பும் முறையில் அவை புரிந்து கொள்ளப்படவில்லை என்று அவர் கருது கிறார்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** ஐயா, இதைத் தவிர, இந்த அவையின் பிற மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் புரிந்து கொண்டிருப் பதைக் காட்டிலும் கூடுதலாக, இந்த மசோதாவின் ஷரத்துக்களை நான் புரிந்து கொண்டிருப்பதாகக் கூறுவதற்கு நான் தயாராயில்லை. நான் அவ்வாறு உரிமை கொண்டாடவில்லை. என்னைப் பொறுத்த மட்டிலும், இந்த மசோதாவின் அனைத்து ஷரத்துக்களையும், அனைத்து விதிகளையும், அனைத்து விளைவுகளையும் நான் பூரண மாகப் புரிந்துகொள்ளவில்லையென்று கூறுவதற்கு நான் தயாரா யிருக்கிறேன் இதை அனைத்து மதிப்பிற்குரிய உறுப்பினர்களைப் பற்றியும், குறிப்பாக என்னைப் பற்றியும் நான் கூற முடியும். இங்குள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர்கள், வழக்கறிஞர்களாக இல்லாத வர்கள், தாங்கள் இந்த மசோதாவைப் பூரணமாகப் புரிந்து கொண் டுள்ளதாகக் கூறமுடியும். ஆனால் இங்குள்ள வழக்கறிஞர்கள், பொறுக்குக் குழுவிலிருந்து வந்துள்ளபடியான மசோதாவின் அனைத்து ஷரத்துகளையும் தாங்கள் புரிந்துகொண்டுள்ளதாக நம்பிக்கையுடன் கூற முடியாது. **இந்த அவையில் எனக்கு அனுமதி யில்லை,** ஆனால் நான் அனுமதிக்கப்பட்டால், திரு. தாஜாமுல் உசேனிடம் இரண்டு அல்லது மூன்று கேள்விகள் கேட்க விரும்புவேன்;

அவர் புரிந்து கொள்கிறாரா இல்லையா என்று அவர் பதிலளிக்க வேண்டும். அவையை அவமதிக்க வேண்டும் என்பது சிறிதும், என்னுடைய எண்ணமல்ல. அது என்னுடைய நோக்கம் அல்லவே அல்ல என்று மிகவும் மரியாதையுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்...

**திரு. துணைத் தலைவர் :** ஒவ்வொரு பிரஜையும் சட்டத்தைத் தெரிந்திருப்பார் என்று அநுமானிக்கப்படுகிறது. மதிப்பிற்குரிய ஒவ்வொரு உறுப்பினரும் இந்த மசோதாவைப் படித்திருப்பார் என்று அநுமானிக்கப்படுகிறது. மதிப்பிற்குரிய உறுப்பினர் தொடர்ந்து பேசலாம்.

*பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:* இந்த முன்னுரைக்குப் பின்னர், ஐயா, திரு. நசிருத்தீன் அகமதின் திருத்தத்தை நான் ஏன் ஆதரிக்கிறேன் என்பதை உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விழைந்தேன். ஐயா, உங்களுடைய கனிவான பார்வைக்கு சில விபரங்களை சமர்ப்பித்திருந்தேன். இந்த அவை அவ்வளவு பிரதிநிதித்துவம் வாய்ந்ததல்ல. ஒரு சில மாதங்களில் ஒரு புதிய அவை ஏற்படப் போகிறது. எனவே, இந்த மசோதா பற்றிய விவாதத்தைப் புதிய அவை ஏற்படுகின்ற வரையில் ஒத்திப்போடுவது முறையாக இருக்கும்.

என்னுடைய வேண்டுகோளுக்கு ஆதரவாக இன்னும் வலுவான ஒரு வாதம் என்னவெனில், ஐயா, இன்று சொத்து என்பதில் இரு வேறுவகைகள் அடங்கியுள்ளன என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். ஒன்று நிலங்கள், மற்றயது வீடுகள். நிலவுடைமையைப் பொறுத்த மட்டிலும், இந்த மசோதா அதை பாதிப்பதில்லை. பிரதானமாக ஒரு விவசாய நாடாகவும் 90 சதவீத மக்கள் கிராமங்களில் வசிக்கும் நிலைமையுடைய இந்தியா போன்ற ஒரு நாட்டில், வாரிசுரிமையின் மீது இதனுடைய பாதிப்பு எவ்வாறிருக்கும்? ஒரு நபரின் மரணத்திற்குப்பின்னர், அவருடைய நிலங்கள் ஒரு சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்டதாக இருக்கும்; கிராமத்திலுள்ள அவருடைய வீடு மற்றொரு சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்டதாக இருக்கும். எனக்கு என்ன ஏற்படும்? எனக்கு டில்லியில் ஏதாவது சொத்து இருந்தால், இந்த சொத்து ஒரு சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்டதாக இருக்கும்; பகதூர்கரிலுள்ள என்னுடைய நிலவுடைமைகள் மற்றொரு சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்டதாக இருக்கும். பகதூர்கரில் என்னுடைய வயலில் கட்டப்பட்டுள்ள என்னுடைய வீடு ஒரு சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்டதாக இருக்கும். டில்லியிலுள்ள என்னுடைய

வீடு மற்றொரு சட்டத்தின் ஆளுகைக்குட்பட்டதாக இருக்கும். இது ஒரு சீரானதா? இத்தகைய விஷயம் நீடித்து நிலைத்திருக்குமானால், இதன் விளைவு என்னவாக இருக்கும்? பகதூர்கரில் ஒரு வாரிசு நியமிக்கப்படுவார். அவரை இந்து சட்டம் அங்கீகரிக்காது. பின்னர், வாரிசாக நியமிக்கப்படும் அந்த சிறுவன் பகதூர்கரில் உள்ள நிலவுடைமையை வாரிசாகப் பெறுவார். ஆனால் மரணமடைந்தவரின் குடியிருப்பு வீட்டுக்கு வேறொருவர் உரிமை பாராட்டுவார். பையனுக்கு நிலவுடைமைச் சொத்து கிடைக்கும், ஆனால் வீட்டின் மீது அவனுக்கு உரிமை கிடைக்காது. அப்படியெனில் அந்த சிறுவன் எங்கே போவான்? இந்த மசோதாவின் விளைவு, நிலவுடைமைச் சொத்தின் மீது இது பிரயோகமாகாது. பொருளாதார உடைமைகளை உருவாக்குகின்ற, மற்றும் சராசரி மனிதனின் நிலவுடைமைச் சொத்து பங்குபோடப்படுவதற்கு இடமளிக்காத ஒரு மசோதாவை டாக்டர் அம்பேத்கர் நிறைவேற்ற விரும்புகிறார் என்று நினைக்கிறேன். ஆனால் இந்தச் சட்டம் எப்பொழுது அமலுக்கு வரும், ஜமீந்தாரி முறை எப்பொழுது ஒழிக்கப்படும் என்பதை நான் அறியேன்.

**திருமதி ரேணுகா ரே:** அத்தகைய ஒரு மசோதாவை நீங்கள் உடனேயே பிரேரணை செய்யலாம்.

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:*** என்னுடைய மதிப்பிற்குரிய சகோதரி நினைப்பதைப் போன்று, எண்ணங்கள் அவ்வளவு எளிதாக இந்த உலகில் நிறைவேற்றப்படுவதில்லை. ஒரு மசோதாவைப் பிரேரணை செய்வதன் மூலமாக மட்டுமே இந்த எண்ணம் நிறைவேற்றப்பட்டு விடுவதில்லை. இந்த மசோதா நாட்டின் நன்மைக்கானதாகும். ஆனால் எத்தனைத் தடங்கல்களை இந்த மசோதா சமாளிக்கவேண்டியுள்ளது? நில மசோதாவுக்கு எவ்வளவு நேரம் தேவைப்படும்? அது எப்போது நிறைவேற்றப்படும்? அந்த மசோதாவின் மூலம் ஒவ்வொருவருடைய உரிமைகளும் பறிக்கப்படும். இது மாகாண அரசின் அதிகாரத்திற்குட்பட்டது. நிலங்கள் பிரச்சினை சம்பந்தப்பட்ட மட்டிலும், அரசியல் சாசனத்தின் கீழ் இதுவும் மத்திய அரசின் அதிகாரத்தின் கீழ் வரக்கூடும். இதற்கு வழிசெய்யும் வகையில் நமது அரசியல் சாசனத்தில் மாற்றங்கள் செய்யப்பட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இந்த மசோதா நிறைவேற்றப் பட்டால், இது வீடு (குடியிருப்பு) சம்பந்தமான சொத்தை பாதிக்கும்

அதே சமயத்தில், நிலவுடைமைச் சொத்து இதன்கீழ் வருவதில்லை என்ற குறைபாடு இதிலிருப்பதை நான் காண்கிறேன். ஒரு பெருங்குழப்பமான விஷயமாகும். அசல் மசோதாவில் இப்பொழுது ஒரு மாற்றம் செய்யப்பட்டுள்ளது; அதன்படி இப்பொழுது இந்த மசோதா மத்திய அரசின் நிர்வாகத்தின் கீழ் உள்ள பகுதியில் உள்ள நிலங்களுக்கும் பொருந்தும். அதாவது ஆஜ்மீர் - மீர்வாரா மற்றும் டில்லியில் உள்ள குடியிருப்பு மற்றும் நிலவுடைமைச் சொத்துக் களுக்கும் இது பொருந்தும். இதர மாகாணங்களில் இந்த மசோதா நிலங்களுக்குப் பொருந்தாது. டில்லியிலும் ஆஜ்மீர் - மீர்வாரா விலும் இது கிராமப்புறச் சொத்துக்களுக்கும், நகர்ப்புறச் சொத்துக் களுக்கும் பொருந்தும். இது இந்த மசோதாவின் ஒரு பெரிய குறை பாடாகும். இது மசோதாவின் அடிப்படையையே தகர்க்கிறது.

இந்த மசோதா தங்களை எவ்வாறு பாதிக்கும் என்பதை மக்கள் இன்னும் உணரவில்லை. இந்தக் காரணத்தினால்தான், இந்த மசோதாவுக்கு முழு விளம்பரம் கொடுக்கப்படவில்லை என்று நான் தெரிவித்திருந்தேன். இந்த மசோதாவின் மூலமாகத் தமது வாரிசுரிமைச் சட்டத்தில் மிக முக்கியமான அடிப்படையான மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன, இந்த மாற்றங்கள் இந்தியா விலுள்ள ஒவ்வொரு குடும்பத்திடமும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தும் என்பதை இன்று மக்கள் தெரிந்திருப்பார்களேயானால், இந்த மசோதா சட்டமாக்கப்படக் கூடாது என்று வலியுறுத்தி ஏராளமான மக்கள் டில்லிக்கு சாரிசாரியாக வந்து மனுக்கள் தருவார்கள் என்பதில் ஐயமில்லை. இந்த உண்மையைப் பலர் அறிய மாட்டார் கள். இதனை இந்த அவையின் உறுப்பினர்கள் அறிவார்கள். வழக்கறிஞர்கள் சங்கங்களும் பத்திரிகைகள் படிக்கும் சிலரும் அறிவார்கள். இத்தகையவர்கள் எண்ணிக்கை எவ்வளவு சொற்ப மானது என்பதை நீங்கள் புரிந்துகொள்ள முடியும். இந்து சமுதாயம் முழுவதையும் பாதிக்கக்கூடிய இத்தகைய மசோதா போதிய அளவு சுற்றுக்கு விடப்படவில்லை; மக்களின் அபிப்பிராயமும் அறியப்பட வில்லை. ஒரு குழு அமைக்கப்பட்டது. அது சில இடங்களுக்குச் சென்று கருத்துகளைக் கேட்டறிந்தது. அந்தக் குழுவின் அறிக்கை என்னிடம் உள்ளது. இந்தக் குழுவின் உறுப்பினர்கள் எங்கெல்லாம் சென்றார்கள், அவர்கள் எவர்களுடைய கருத்துக்களைச் சேகரித்துப் பதிவு செய்தார்கள் என்பதை நீங்கள் பார்ப்பீர்களேயானால் அவர்கள் மேல்மட்டத்திலுள்ள, கல்வி கற்ற சிலரது அபிப்பிராயங்களை

மட்டுமே கேட்டறிந்தார்கள் என்பதையும் நாட்டின் மிகப் பெரும் பான்மையினரது கருத்தை அவர்கள் கேட்டறியவில்லை என்பதையும் காண்பீர்கள்.

இதில் கல்வி கற்றவர்கள் என்ற பிரச்சினையே இல்லை. இந்த மசோதாவிற்கு, தமது பொறுப்புக்களைப் பூரணமாக உணர்ந் துள்ள ஒவ்வொரு தாயும் தகப்பனும் தங்களுடைய அபிப்பிராயங் களைக் கூறலாம். இதனால் ஒவ்வொருவரும் பாதிக்கப்படு கிறார்கள், எனவே ஒவ்வொரு நபரும் தனது அபிப்பிராயத்தைக் கூறுவதற்குத் தகுதி யுடையவர்தான். தவிரவும், மூல மசோதாவில் பொறுக்குக் குழு செய்துள்ள மாற்றங்களைப்பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். பேரவை உறுப்பினர்களுக்கு மட்டுமே இந்த மாற்றங்களைப் பற்றிய தகவல் தெரியும். இதர மக்களுக்கு, பொறுக்குக் குழு என்ன மாற்றங்களைச் செய்துள்ளது என்பது தெரியாது. பொறுக்குக் குழு இந்த மசோதாவில் மாற்றங்களைச் செய்துள்ளதால் இது சுற்றுக்கு விடப்பட வேண்டியது மிகவும் அவசியம் என்ற பிரச்சினை எழுகிறது. மக்களின் பழக்க வழக்கங்களில் - பாதிக்கப்படும் மக்களின் பெரும்பான்மையோரின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளாத வரையில், எந்தச் சட்டமும் தீவிர மாற்றங்களைச் செய்யக்கூடாது என்ற பழைய பிரச்சினையை ஒருபக்கம் ஒதுக்கிவையுங்கள். இன்று அறிமுகம் செய்து வைக்கப்படும் மசோதாவில் பொறுக்குக் குழு ஜீவாதார முக்கியத்துவமுடைய மாற்றங்களைச் செய்துள்ளது, அதுகுறித்து எல்லோருக்கும் முழுத் தகவல்கள் கிடைக்க வேண்டும். இந்தக் காரணத்திற்காக மட்டும்தான், இது சுற்றுக்கு விடப்பட வேண்டியது கூடுதல் அவசியமாகிறது.

இந்த மாற்றங்களைப் பற்றி நான் எதுவும் கூறுவதற்கு முன்னால், ஒரு விஷயத்தை அவையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். சட்டத்தின் உருவகமாக இருக்கும் சட்ட இலாகாவே, - அதனுடைய பெயரே கூட சட்ட இலாகா என்றிருக்கிறது - இவர் களே சட்டத்தை மதிப்பதில்லை என்று கூறுவதற்கு நான் வருந்து கிறேன். இந்த நபர்களே இத்தகைய ஒரு நடைமுறையை ஏற்படுத் தும்போது - இதை அவர்கள் ஏற்படுத்தியிருக்கவே கூடாது - நான் இவ்வாறுதான் கூற வேண்டும்.

گر کفر از کعبه فیزد کجا بود مسلمانے

உங்களுக்கு முன்பாக இந்தப் பொறுப்பில் இருந்தவரால் முடிவு செய்யப்பட்ட பிரச்சினையை நான் தொடர விரும்பவில்லை. அந்தப் பிரச்சினை முடிவு செய்யப்பட்டு விட்டது. அந்தத் தீர்ப்பு எனக்கு இறுதியானது. அதை நான் ஆட்சேபிக்கவில்லை. என்னுடைய கருத்துப்படி அந்தத் தீர்ப்பு சரியானதல்ல என்பதை நான் அறிவேன் என்றபோதிலும், அந்தத் தீர்ப்பை நான் உயர்வாக மதிக்கிறேன். அதுகுறித்து எத்தகைய ஐயப்பாடும் எழுப்ப நான் விரும்பவில்லை.

*திரு. தாஜாமுல் உசேன்:* சபாநாயகரின் தீர்ப்பு தவறானது என்று அவையினுள் யாரும் கூற முடியாது.

*திரு. துணை சபாநாயகர்:* மதிப்பிற்குரிய உறுப்பினர் திரு. பர்கவாவைப் புரிந்து கொள்ளவேயில்லை என்பதற்காக நான் வருந்துகிறேன். அந்தத் தீர்ப்பை அவர் ஒத்துக்கொள்ளவில்லை என்றுதான் கூறுகிறார். ஆனால் இங்கு அவர் அதைக் கேள்வி கேட்க முடியாது. எந்த உறுப்பினரும் தன்னளவில் சிந்திப்பதற்கும், தமது அபிப்பிராயப்படி, தாம் அதை ஏற்றுக்கொள்ளவில்லை என்று கூறுவதற்கும் உரிமையுண்டு. ஆனால், அந்தத் தீர்ப்பு அவரையும் கட்டுப் படுத்தும். இதில் தவறு ஒன்றும் இல்லை என்று கருதுகிறேன்.

*பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:* என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் திரு. தாஜாமுல் உசேன், ஏதாவது ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பும்போதெல்லாம் ஒரு நிமிஷமும் கூட அது நிலைத்து நிற்பதில்லை என்பதற்காக மிகவும் வருந்துகிறேன். நானும் கூட பதிலளிப்பதற்கு வகை செய்யக்கூடிய அத்தகைய ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புமாறு நான் விழைகிறேன். இந்த மசோதா, நிலங்களுக்குப் பொருந்துமா அல்லவா என்று இந்த சமயத்தில் அவர் மற்றொரு மதிப்பிற்குரிய உறுப்பினரிடம் விவாதித்துக் கொண்டிருப்பதாக நான் அறிவேன்; ஆனால் அவர் பாசாங்கு செய்து, இந்தத் தொகுப்பு மசோதாவைத் தான் புரிந்து கொண்டுள்ளதாகக் கூறுகிறார். அவைத்

தலைவரின் தீர்ப்பின் மீது நான் வேறு கருத்துக் கொண்டிருக்கிறேன் என்று கூறினால், நான் பூரணமாக என்னுடைய உரிமைகளுக்கு உட்பட்டே இவ்வாறு கூறுகிறேன், என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். மாண்புமிகு அவைத் தலைவரின் தீர்ப்பில் தொடப் படாத ஒருசில பிற அடிப்படையான விஷயங்களை எடுத்துக் கூற விரும்புகிறேன். குறிப்பாக, அரசியல் சாசனத்தை உருவாக்கும் அவையாகிய இந்த அவை நம்முடைய விஷயங்கள் எதையும் நாட்டில் எந்த நீதிமன்றத்தின் முன்னும் வைக்க முடியாது. ஒரு குறிப்பிட்ட சட்டத்தை நிறைவேற்றுவதற்காக இந்த அவை தனது கோட்பாடுகளைக் கைவிடுமேயானால், நாம் நமது பொறுப்புக் களைக் கைவிடும் தவறு செய்தவர்களாவோம். பொறுக்குக் குழு இந்த மறு வரைவு செய்யப்பட்ட மசோதாவில், நாம் புரிந்துள்ள தவறுகள் மூன்று வகைப்பட்டவையாகும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். முதலாவதாக, ஒரு மசோதா அவையின் முன்னால் விவாதத்திற்கு வரும்போது, அவையின் உடைமையாகும் போது, அவையில் முன்மொழியப்படும்போது, அதற்குப் பிறகு, எந்த உறுப்பினராவது, அவர் எவ்வளவு பெரிய மனிதராக இருந்த போதிலும், அவர் எவ்வளவு நல்லவராக இருந்தபோதிலும், அவை யின் ஒப்புதல் இன்றி, அதில் ஒரு காற் புள்ளியைக் கூட அவர் மாற்றமுடியாது. அதில் ஏதாவது அச்சுப்பிழைகள் இருந்தால் அது வேறு விஷயம். அதுவும்கூட ஒரு சாராம்சமான தவறாக இருந்தால், அது மீண்டும் அச்சடிக்கப்பட்டு மறு விநியோகம் செய்யப்பட வேண்டும்; மீண்டும் சுற்றுக்கு விடப்பட வேண்டும்; பின்னர், அது திரும்பவும் அவையில் அறிமுகப்படுத்தப்பட்டதற்குப் பின்னர், எந்தக் குழுவின் ஆய்வுக்கும் விடப்பட முடியும். ஐயா, மிகவும் மரியாதை யுடன் நான் தெரிவித்துக் கொள்ளவிரும்புவது என்னவெனில், இரண்டு அல்லது மூன்று சட்ட நுணுக்க அம்சங்களை உங்களுடைய கனிவான பரிசீலனைக்கு முன்வைக்க விரும்புகிறேன். இந்த அம்சங் களைப் பற்றி மற்றைய மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு மிகவும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புவதென்னவெனில், இந்த சட்ட நுணுக்கங்களைக் கைவிடுவதன் மூலம் எவ்வளவு அநீதி விளைவிக்க முடியும் என்பதைத்தான். டாக்டர் அம்பேத்கருக்கு இது பற்றி நான் கூற வேண்டியதில்லை, ஏனெனில் அவர் இதை அறிவார். எனவே, இந்தச் சட்ட நுணுக்கவாதிகளைக் கை கழுவுவதன் வாயிலாக அநீதியும், சட்டத்திற்குப் புறம்பான விஷயங்களும் ஏற் படுவதைத் தவிர, அனுகூலமான விஷயங்கள் எதுவும் ஏற்படாது

என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். திரு. ஆஸ்லோ என்பவர் பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் மிகவும் புகழ்பெற்ற ஒரு பேச்சாளராக இருந்தார். சட்ட நுணுக்க விதிகளுக்குப் புறம்பாக எந்தப் பணியும் புரியக்கூடாது என்று அவர் கூறியிருந்தார். சிறுபான்மையோரின் பாதுகாப்புக்காக, அவை முழுமையின் பாதுகாப்புக்காகச் சட்ட நுணுக்க விதிகள் இருக்கின்றன. இந்த விதிகள் அடிப்படையான தன்மை வாய்ந்தவையாகும்; அவற்றின் வரம்புகள் மீறப்படும் போது தவறுகளைத் தவிர வேறெதையும் நாம் சாதிக்க முடியாது. 'மே'யினுடைய நாடாளுமன்ற நடைமுறையில் இந்தக் கோட்பாடு வரையறுத்துக் கூறப்பட்டுள்ளது. அது நாடாளுமன்றங்களின் தாய் அமைப்பின் மரபு ஆகும். மசோதா அறிமுகப்படுத்தப்பட்டவுடனே, அது, அதை முன் மொழிந்த உறுப்பினரின் கைகளை விட்டுப் போய் விடுகிறது, அவையின் அதிகாரத்திற்குள் வந்து விடுகிறது என்பது மரபாகும். 'மே'யின் நாடாளுமன்ற நடைமுறையின் சொற்களை நான் மொழிபெயர்த்துக் கொண்டிருக்கிறேன். விரைவில் அதை உங்களுக்கு வாசித்துக் காட்டுகிறேன்.

**திரு. துணைத் தலைவர் :** எந்த மதிப்பிற்குரிய உறுப்பின ராவது, அவர் தான் முன்மொழிபவராக இருந்தபோதிலும், மசோதா அவையில் முன்வைக்கப்பட்டவுடனே, அதை மாற்றுவதற்கு அவருக்கு உரிமையில்லை என்பதை இந்த அவையில் யாரும் சந்தேகிக்க வில்லை என்று கருதுகிறேன். அதே மசோதா பொறுக்குக் குழுவில் பரிசீலனை செய்யப்பட்டது என்பதுதான் மாண்புமிகு சபாநாய்கரின் தீர்ப்பு என்று புரிந்துகொண்டிருக்கிறேன். எனவே அந்த நிலைக்கு ஆதரவாகப் பேச வேண்டிய அவசியமில்லை என்று கருதுகிறேன். மற்றொரு மசோதா - அசல் மசோதாவுடன்.கூட, பொறுக்குக் குழுவின் முன்னே அவர் வைத்த வேறு முன்வரைவு பரிசீலனை செய்யப் பட்ட போதிலும் - பொறுக்குக் குழுவில் பரிசீலனை செய்யப் பட்டதாக மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் கூறவில்லை. மதிப்பிற்குரிய எந்த உறுப்பினரும் அவ்வப்பொழுது திருத்தங் களை அனுப்புவதற்கு பதிலாக, பொறுக்குக் குழுவின் முன்னால் திருத்தங்களை முன்வைப்பதற்கு உரிமையுள்ளவராதலால், அவ ருடைய கூற்றுப்படி, அவர் தமது திருத்தங்கள் அனைத்தையும் அச்சடித்து குழுவின் முன்னால் அவற்றை வைத்தார். அதுதான் மாண்புமிகு சபாநாயகரின் தீர்ப்பு ஆகும். அதைத் தவிர்த்து, மதிப் பிற்குரிய உறுப்பினர் மேற்கொண்டு தொடர்ந்து பேசலாம். ஓர் உறுப்பினர், அவரே அந்த மசோதாவைப் பிரேரணை செய்தவராக

இருந்தபோதிலும், அவை அதை விவாதத்திற்கு ஏற்றுக் கொண்ட பின்னர், அந்த மசோதாவை மாற்றுவதற்கு அந்த உறுப்பினருக்கு உரிமையில்லை என்ற 'மே'யின் நாடாளுமன்ற நடைமுறையின் நிலையை யாரும் சந்தேகிப்பதற்கில்லை. இது செய்யப்படவில்லை என்று, மாண்புமிகு சபாநாயகர் கூறியுள்ளார். நாம் அதற்குக் கட்டுப் பட்டவர்கள்; இல்லாவிட்டால் மதிப்பிற்குரிய உறுப்பினர், தொடர்ந்து பேசலாம்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** உங்களுடைய அபிப்பிரா யத்தைக் கேட்டதற்குப் பின்னர், என்னுடைய நம்பிக்கையில் நான் மேலும் உறுதியடைந்துள்ளேன். இந்த சர்ச்சை சம்பந்தமாக, உண்மை யில் எந்தத் திருத்தங்களும் பொறுக்குக் குழுவின் முன்னால் வர வில்லை என்பது எவ்வாறாகவாவது நிரூபிக்கப்பட்டால், மறு வரைவு செய்யப்பட்ட மசோதா பரிசீலிக்கப்பட்டிருக்க வேண்டிய தில்லை என்பது ஏற்றுக்கொள்ளப்படவேண்டும் என்று நீங்கள் முடிவு செய்துவிட்டீர்கள். இந்தக் காரணத்திற்காக, அந்தத் தீர்ப்பை மீண்டும் உங்களுக்கு முன்னால் மேற்கோள் காட்ட வேண்டிய அவசிய மில்லை என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஐயா, 1873ம் வருடத்திய ஹன்சார்ட் தொகுதி 215ல் ஒரு தீர்ப்பை நான் கண்டு பிடித்துள்ளேன். அதில் 302ம் பக்கத்தில் ஓர் உறுப்பினர் ஒரு மசோதாவைப் பிரேரணை செய்வதாக அறிவிப்புக்கொடுத்திருந்து, அந்த மசோதாவும் அச்சடிக்கப்பட்டிருந்தால், இரண்டாவது வாசிப் புக்கு முன்னதாக அந்த மசோதாவில் அந்த உறுப்பினர் எந்த மாற்றங்களையும் செய்ய முடியாது என்று வரையறுத்துக் கூறப்பட் டுள்ளது. அவர் ஏதாவது மாற்றங்கள் செய்தால், அப்பொழுது, மாண்புமிகு சபாநாயகர், அந்த மசோதா வாபஸ் பெறப்பட்டுவிடும் என்று தீர்ப்புக் கூறினார். மேற்கொண்டு அந்த மசோதா விவாதிக்கப் பட முடியாது.

**திரு. துணை சபாநாயகர்:** சட்டத்தின் நிலை ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. இதற்கு ஆதரவு திரட்ட வேண்டிய அவசியமில்லை; மாற்றங்கள் செய்வதற்கு அவருக்கு உரிமையில்லை என்ற சட்டத்தின் நிலையை மாண்புமிகு சட்ட அமைச்சர் மறுப்பார் என்று நான் நினைக்கவில்லை....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (சட்ட அமைச்சர்) :** இல்லை.

**திரு. துணை சபாநாயகர் :** .... பொறுக்குக் குழுவினால் ஏற்றுக் கொள்ளப்பட்டதைத் தவிர வேறு எந்தக் கால் புள்ளியோ, அல்லது அரைப் புள்ளியோ.... ஆனால் பொறுக்குக் குழுவின் முன்னால் விஷயங்களை முன்வைப்பதற்கு அவருக்கு உரிமையுண்டு. அதுதான் சபாநாயகரின் தீர்ப்பு என்று நினைக்கிறேன். மதிப்பிற்குரிய உறுப் பினர் தொடர்ந்து பேசலாம்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** ஐயா, மற்றைய அசல் மசோதா அவையின் முன் வைக்கப்பட்டால், அப்பொழுது எனக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை என்பதை மிகவும் மரியாதையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த மசோதா இந்த முறையில் அவை யில் பரிசீலனை செய்யப்பட்டிருந்தால், யாருக்கும் எந்த ஆட்சேபனை களும் இருந்திருக்க முடியாது. இந்த முறையில் அறிமுகம் செய்து வைக்கப்பட்டதற்குப் பின்னர், இந்த மசோதா ஒவ்வொரு ஷரத் தாக, ஒவ்வொரு சொல்லாகப் பரிசீலனை செய்யப்பட்டிருக்க வேண்டும். இந்த நடைமுறை கடைப்பிடிக்கப்படாமல், மசோதா பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்டதென்றால், மேலும் பொறுக்குக் குழுவில் அது ஷரத்து வாரியாக, ஒவ்வொரு சொல்லாகப் பரிசீலனை செய்யப்படாத நிலையில், முதலாவது மசோதா மதிப் பிற்குரிய உறுப்பினரின் முன்னால் இருந்ததா, அல்லது அது அவரது சட்டைப் பையில் இருந்ததா, அல்லது அவர் அதைத் தனது வீட்டில் வாசித்துவிட்டு இங்கு வந்திருக்கிறாரா என்று கேட்க விரும்பு கிறேன். ஐயா, நாடாளுமன்ற நடைமுறையை உங்களுடைய கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். பொறுக்குக் குழுவின் எந்த ஒரு உறுப்பினரும் இதற்கு எதிராக எந்த உரிமையும் பாராட்ட முடியாது. வலுவான காரணங்கள் எனக்கு இருக்கின்றன, ஐயா, அவற்றின்பால் உங்களுடைய கவனத்தை ஈர்ப்பதற்கு விரும்புகிறேன். முதலாவதாக, ஒருவேளை, பெரும்பான்மை அறிக்கையில் அது வரையப்பட்டிருக்கக்கூடும்:

> ''நமது விவாதத்தை இந்த மறு வரைவு செய்யப்பட்ட மசோதாவின் மீது மட்டும் என கட்டுப்படுத்திக் கொண்டோம்.''

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** நான் குறுக்கிடலாமா? இது சரியல்ல.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** மூல மசோதா ஷரத்துவாரி யாகவும், சொல்லுக்குச் சொல்லும் பரிசீலிக்கப்படவில்லை. மாண்பு மிகு சபாநாயகர் முன்பு கூறியதுபோன்று, ஜனரஞ்சக உணர்விலும், திரு. பாலகிருஷ்ண சர்மா அவையில் சமர்ப்பித்த உணர்விலும், இந்த

மசோதா நமக்கு முன்னால் இருந்தது அப்படியெனில் எனக்கு இந்த மசோதாவுக்கு எதிராக எந்த ஆட்சேபனையும் இல்லை. திரு. பாலகிருஷ்ண சர்மாவும் மாண்புமிகு சபாநாயகரும் கூறியவற்றை யெல்லாம் நான் ஏற்றுக்கொள்கிறேன்.

*(இந்தி உரைகளின் ஆங்கில மொழிபெயர்ப்பு முடிந்தது)*

**திருமதி ஜி. துர்க்காபாய்:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை. அவர் சபாநாயகரின் தீர்ப்பையே எதிர்க்கிறார்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறிய ஒவ்வொரு வார்த்தையையும் நான் புரிந்து கொள்ள முடியவில்லை யாயினும், அவரை நான் புரிந்துகொள்கிறேன். சபாநாயகரின் தீர்ப்பைப் பாதுகாப்பதற்கு நான் கடமைப்பட்டுள்ளேன். நான் இன்று கூறுவதை, என்னைத் தொடர்ந்து வருகிற அவைத்தலைவர் மாற்றக்கூடும் என்பது பற்றி நான் கவலைப்படவில்லை. சபாநாய கரின் தீர்ப்பு இருக்கவே செய்கிறது. மதிப்பிற்குரிய உறுப்பினர் ஓரிரு விஷயங்கள் பற்றி வலுவாகப் பேசியபோதிலும், இந்த மசோதா வைப் பரிசீலிப்பதற்கு நாட்டுக்கு ஒரு வாய்ப்பு வழங்கப்படுவதற்கு அவை ஒத்துக் கொள்ளச் செய்ய வேண்டுமென்று அவர் விரும்பு கிறார் என்பதை நான் புரிந்துகொள்கிறேன். அவர் பொருள்படுத்துவது அதுமட்டுமே. (மதிப்பிற்குரிய உறுப்பினர் ''இல்லை, இல்லை.'' சபாநாயகரின் தீர்ப்புக்கு எதிராகப் போவதற்கு நான் எண்ணங் கொள்ளவில்லை என்று நான் உடனடியாகக் கூற முடியும்.) இந்த அவையால் பரிசீலிக்கப்படுவதற்காக முன்வைக்கப்படும் எந்த வாதங்களும் வரவேற்புக்குரியவையே. ஆனால் சபாநாயகரின் தீர்ப்பைக் கேள்வி கேட்கும் உணர்வில் அல்ல.

**டாக்டர் மனோ மோகன்தாஸ்:** ஒரு தகவல் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்; மதிப்பிற்குரிய உறுப்பினர் அடுத்த பத்து நிமிடங்களும் பேசுவாரா என்று தெரிவியுங்கள். ஏனெனில், இந்துஸ் தானியைப் புரிந்துகொள்ள முடியாத நாங்கள் எங்கள் ஓட்டல் களுக்குத் திரும்பிப் போகலாம்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** நான் பேசுவது உங்களுக்குப் புரியவில்லை என்று நீங்கள் கூறிவிட்டதாலும் நான் கூறும் ஒவ்வொரு சொல்லும் உங்களாலும் அவையினாலும் புரிந்துகொள்ளப்பட வேண்டும் என்று நான் விரும்புவதாலும், என்னுடைய அரைகுறை ஆங்கிலத்தில் பேசுகிறேன்.

**திரு. டி.ஏ. ராமலிங்கம் செட்டியார் : (சென்னை: பொது):** இந்தி தெரியாதவர்களைப் பற்றி இதுவரையிலும் நீங்கள் பரிவு காட்டவில்லை. அவர்கள் பெரிய எண்ணிக்கையில் இங்கு இருக்கிறார்கள். நீங்கள் அவர்களைப்பற்றிக் கவலைப்படாவிட்டால் அவர்கள் காதுகொடுத்துக் கேட்க நீங்கள் விரும்பவில்லையென்றால், அது உங்கள்பாடு.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** ஆங்கிலத்தில் பேசுவதென்று நான் ஏற்கனவே முடிவு செய்துவிட்டேன். என்னுடைய நண்பரின் உத்தரவுகள் அதற்குத் துணையானவையே. ஆனால், நீங்கள் இப்பொழுது கூறியவற்றுக்குப் பின்னால், நான் தொடர்ந்து ஆங்கிலத்திலேயே பேசுகிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** கேட்கப்பட்டதெல்லாம் இந்துஸ்தானியில்தான் கேட்கப்பட்டுள்ளது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** நான் கூறியவை எல்லாவற்றையும் திரும்பக் கூறப்போவதில்லை. ஏனெனில், அது சாத்தியமல்ல. எதிர்காலத்தில், நான் சொல்ல வேண்டியிருப்பதை முதலில் எழுத்து மூலம் கொடுத்துவிடுகிறேன். எனவே எதையும் திரித்துக் கூற முயற்சி செய்வதாக என் மீது குற்றம் சாட்டப்பட முடியாது.

**திரு. தாஜாமுல் உசேன் :** கூறியதையே மீண்டும் கூறக்கூடாது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** தாஜாமுல் உசேன் எனக்கு உத்திரவிட வேண்டாம். அவர்......... விரும்பவில்லை என்றால்.....

**திரு. தாஜாமுல் உசேன் :** நான் சபாநாயகரைப் பார்த்துப் பேசுகிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** திரு. தாஜாமுல் உசேன், விவேகமற்ற குறுக்கீடுகளைச் செய்வதை நான் விரும்பவில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** திரு. தாஜாமுல் உசேன் மீண்டும் மீண்டும் குறுக்கிடுவது குறித்து வருந்துகிறேன். அவையைப் பாது காப்பதற்கு இங்கு நான் இருக்கிறேன். எனவே கூறியதையே திரும்பக் கூறவேண்டாம். இந்த முறையில் நாம் அதிக நேரத்தை செலவழிப்பது துரதிருஷ்டமாகும்.

*பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :* நான் கூறியதையே மீண்டும் கூற விரும்பவில்லை. மாண்புமிகு சபாநாயகர் அவருடைய தீர்ப்பைக் கூறிய விதமானது - ஐயா, அந்தத் தீர்ப்பு இறுதியான சொல் அல்ல என்று நான் கருதியபோதிலும் நான் அதை மதிக்கிறேன். அதற்கு எதிராக நான் ஒரு வார்த்தைகூடப் பேசமாட்டேன்.

*திரு. தாஜாமுல் உசேன் :* இந்த சபையில் அதுதான் கடைசி வார்த்தை.

*பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:* இவற்றால் நான் இகழ்ச்சியடைய மாட்டேன். அவை தனது சொந்த ஆணையையே திருத்தியமைக்க முடியும் என்று கருதுகிறேன். 'சபாநாயகரின் தீர்ப்புகள்' என்ற நூலிலிருந்து, இது சம்பந்தமாக ஒரு தீர்ப்பை மேற்கோள் காட்ட விரும்புகிறேன். அதே சமயத்தில், இந்தக் கட்டத்தில், அந்த உத்தரவை (தீர்ப்பை) மறு ஆய்வு செய்யுமாறு துணை சபாநாயகரைக் கேட்பதாக இந்த அவை நினைக்க வேண்டாம். நான் அவ்வாறு செய்யவில்லை. அவை பொறுமையிழக்க வேண்டாம். ஆனால், ஒரு தடவை வழங்கப்பட்ட தீர்ப்பு மீண்டும் திருத்தப்படக் கூடாது என்று எங்கே விதி இருக்கிறது என்று கேட்க விரும்புகிறேன். அத்தகைய விதி எதுவும் கிடையாது. கொடுக்கப்பட்ட தீர்ப்பைத் திருத்த வேண்டுமென்று நான் முயற்சி செய்யாததால், இந்தப் பிரச்சினை எழவில்லை. நான் கூறிக்கொண்டிருந்தது என்னவெனில், இந்த மறு வரைவு செய்யப்பட்ட மசோதாவோடு இந்த மசோதா பரிசீலனை செய்யப்பட்டதானது உண்மையான அர்த்தத்திலோ அல்லது ''பரிசீலனை செய்யப்பட்டது'' என்று நாம் புரிந்து கொள்கிற தொழில்நுட்ப அர்த்தத்திலோ அல்ல என்று சபாநாயகர் தீர்ப்புக் கூறியிருந்தார் என்பதைத்தான் ''பரிசீலனை செய்யப்பட்டது'' என்ற சொல்லை நாம் பயன்படுத்தும் தொழில்நுட்ப அர்த்தத்தில் இந்த மசோதா ஒருபோதும் பரிசீலனை செய்யப்படவில்லை என்பதை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

*திரு. மோகன்லால் கௌதம்:* இது அவர் இந்துஸ்தானியில் பேசியதையே மீண்டும் கூறியுள்ளார் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

*திரு. துணை சபாநாயகர்:* முழு விளைவையும் புரிந்து கொள்வதற்கு இது எனக்கு உதவுகிறது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** இந்தப் பூர்வாங்கக் குறிப்புகள் இல்லாமல், என்னை நீங்கள் புரிந்து கொள்ளும்படி என்னால், செய்ய முடியாது, என்னைத் தெரிந்தவர்கள், இதைக்காட்டிலும் அதிகமாக என்னால் செய்ய முடிந்திருக்காது என்பதை உணருவார்கள்.

உண்மையில், மறு வரைவு செய்யப்பட்ட மசோதாதான் மெய்யாகப் பரிசீலனை செய்யப்பட்டது - தொழில்நுட்ப ரீதியில் இவ்வாறு கூறப்படுகிறது - என்று உங்களை ஏற்றுக்கொள்ளச் செய்வதற்காகக் கூறினேன். சிலவாதங்களை முன்வைப்பதற்கு விரும்புகிறேன் என்று கூறினேன்: முதலாவதாக, ''மறு வரைவு செய்யப்பட்ட மசோதாவோடு எங்களுடைய விவாதங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டோம்,'' என்று அறிக்கை கூறுகிறது. ஐயா, இரண்டாவதாக, பக்ஷி தேக்சந்த், மற்றும் பாலகிருஷ்ண சர்மா ஆகியோரின் கருத்து மாறுபாடு குறிப்பு அதே விஷயத்தைத்தான் கூறுகிறது. மேற்கொண்டு அதை வாசிப்பதற்கு நான் விரும்பவில்லை, ஏனெனில் உறுப்பினர்கள் அதை வாசித்துள்ளனர். அதை மீண்டும் வாசிப்பது காலவிரயமாகும். திரு. பாலகிருஷ்ண சர்மா பேசியபோது, மாண்புமிகு சபாநாயகர் கனிவுடன் அதை ஏற்றுக்கொண்டார். அவர் மீண்டும் தனது உரையில், ''மறு வரைவு செய்யப்பட்ட மசோதா மீது மட்டுமே நாம் கவனம் செலுத்தினோம்'' என்று அவர் கூறினார்; நீங்கள் அறிக்கையைப் பார்த்தால், அறிக்கையிலேயே சில குறியீடுகள், உதாரணமாக, 99-வது ஷரத்தில், மறுவரைவு செய்யப்பட்ட மசோதா மட்டுமே பரிசீலனை செய்யப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

**திரு. துணை சபாநாயகர்:** இதைப் பொறுத்தமட்டிலும் மதிப்பிற்குரிய உறுப்பினர் எதை வலியுறுத்துகிறார் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** திரு. கே.சி. சர்மா என்ன கூறினார் என்பதை நான் கேட்கவில்லை, என்பதற்காக வருந்துகிறேன்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் :** அமைதி, அமைதி.

**திரு. தாஜாமுல் உசேன் :** உட்காருங்கள்!

**திரு. துணை சபாநாயகர்:** நீங்கள் அனுமதித்தால், நான் விளக்கம் கூற முற்படுகிறேன். இரண்டு பிரச்சினைகள் நம்முன் இருக்கின்றன. இந்த மசோதாவின் மீது நாம் விவாதத்தைத் தொடரக் கூடாது என்பதுதான் பிரச்சினை எனில், அந்தப் பிரச்சினை முடிவு செய்யப்பட்டுவிட்டது. மசோதா பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப் பட்டுள்ளது. இந்த மசோதாவும் சமர்ப்பிக்கப்பட்ட பிற திருத்தங் களும் பொறுக்குக் குழுவுக்கு முன்னால் இருந்தன என்றும், சபாநாயகர் கூறியுள்ளார். எனவே இப்பிரச்சினையைப் பொறுத்த மட்டிலும், சபாநாயகரின் தீர்ப்புக்கு அப்பால் செல்லும் நிலைமை யில் நான் இல்லை என்று என்னால் உடனடியாகக் கூறமுடியும். உரிமை வழக்கு விசாரணை முறைச் சட்டத்தில் இதுபோன்ற ஒரு சம்பவம் சம்பந்தப்பட்ட பிரச்சினையைத் தவிர, ஒரு தீர்ப்பு வழங்கப் பட்டுள்ளது. அதே சம்பவத்தில், அதற்கு அப்பால் செல்லுவது விரும்பத்தக்கதல்ல. வேறு சிலவற்றுக்கு அது ஒரு முன்னுதாரண மாக இருக்காது: வேறு எதன் தொடர்பாகவும் அது வரும்போது, முந்திய தீர்ப்புக்குப் புறம்பாகச் செல்வதற்கு சபாநாயகருக்கோ அல்லது இந்த அவையின் உறுப்பினர்களுக்கோ, உரிமையுண்டு அல்லது தற்சமயத்திற்கு அவையின் தலைவராக யார் பொறுப்பு வகித்தாலும், முந்திய தீர்ப்புக்கு அப்பால், செல்வதற்கு உரிமை யுண்டு. இந்தக் கட்டத்தில், அதே பிரச்சினையின் பரிசீலனையில், அதற்கு அப்பால் செல்வதற்கு நான் தயாராயில்லை. இந்த சூழ்நிலை யில், எந்த நோக்கத்திற்காக இந்த வாதங்கள் எழுப்பப்படுகின்றன என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினரைக் கேட்க விரும்புகிறேன். சில காலத்திற்கு முன்னர் நான் புரிந்துகொண்ட இரு மசோதாக்களும் அவையின் முன் இருந்தபோதிலும் மூல மசோதாவைப் பரிசீலனை செய்யவில்லை. மற்றையதைத்தான் பரிசீலனை செய்தது என்ற நிலைமையில், மசோதாவை சுற்றுக்கு விடவேண்டும் என்ற பிரே ரணையை ஏற்றுக்கொள்ளும்படி அவையை ஒத்துக் கொள்ளச் செய் வதற்கே இந்த வாதங்களெல்லாம் எழுப்பப்பட்டன. எனவே, இது ஓர் ஒழுங்குப் பிரச்சினை என்பதாக அல்ல, மாறாக அவையை ஏற்றுக்கொள்ளச் செய்யும் நோக்கத்திற்காகவே, என்று நான் புரிந்து கொள்ள முடியும். அந்தக் காரணத்திற்காகவே, 'மே'யின் நாடாளு மன்ற நடைமுறையிலும் பிற தீர்ப்புகளும் மேற்கோள் காட்டப்பட வேண்டிய அவசியமில்லை. சட்டம் சம்பந்தமான விஷயத்தைப் பொறுத்தமட்டிலும், போதிய அளவு ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. மதிப்பிற்குரிய உறுப்பினரை, சாத்தியப்பட்டால், அவருடைய வாதத்தின் இந்தப் பகுதியை முடித்துக்கொண்டு, வேறு விஷயங்கள் பற்றிப் பேசுமாறு வேண்டிக்கொள்கிறேன்.

**திரு. ஆர்.கே. சித்வா** (மா.பி. மற்றும் பேரார் : பொது) : ஐயா, முந்திய பேச்சாளர் பண்டிட் த்ாகூர் தாஸ் பர்கவா சபாநாயகரின் தீர்ப்பு இறுதியானதல்ல என்று கூறினார். ஐயா, இதை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** இது சம்பந்தமாக மேற்கொண்டு அவைக்குத் திரும்ப அனுப்பி வைக்கப்பட வேண்டும், நான் ஏற் கனவே கூறியது போன்று, இது தாமதப்படுத்தும் உத்தி அல்ல. நான் விரும்புவதெல்லாம், சட்டத்திற்கு உகந்ததாகவும், அடிப்படை யாகவே சரியானதுமான ஒரு நடைமுறையை அவை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது மட்டுமே ஆகும். நான் இந்த அவையின் ஓர் உறுப்பினர் என்ற வகையில், பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்படும் மசோதா, சட்டத்தின் தேவைக்கு ஏற்ப அது அங்கு பரிசீலிக்கப் படுமாறு செய்வதற்கு எனக்கு உரிமை உண்டு. இதிலிருந்து தப்பித்துச் செல்ல முடியாது. எனவே, அதே பொறுக்குக் குழுவுக்கு அது மீண்டும் அனுப்பி வைக்கப்படுவதனின்றும் தப்பிக்க முடியாது. இந்தக் காரணத்தைத்தான் உங்களிடம் எடுத்துக்கூற விரும்புகிறேன். பார்க்கப்போனால், வரி செலுத்துவோர், இந்த அவையின் நடவடிக்கைகளின் ஒவ்வொரு நிமிடத்திற்கும் பணம் செலுத்த வேண்டியுள்ளது. எனவே, தாமதப்படுத்தும் அல்லது இடையூறு செய்யும் கண்ணோட்டத்தை நான் வெறுக்கிறேன். அதே பொழுதில்....

**திரு. தாஜாமுல் உசேன் :** இருந்தபோதிலும் நீங்கள் அவ்வாறு தான் செய்கிறீர்கள்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** அவர் மீண்டும் சபாநாய கரின் தீர்ப்பையே குறிவைத்துக் கொண்டிருக்கிறார்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** மேலும் ஒரு சிறிது நேரம் அவை பொறுமையுடன் எனது பேச்சைக் கேட்கும் என்று நம்பு கிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர், மேலும் சற்று நேரம் எடுத்துக் கொள்ளப் போகிறாரா?

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஆம், ஐயா.

*(அவை மதிய உணவுக்குக் கலைந்தது)*

---

*(மதிய உணவுக்குப் பின் அவை இரண்டரை மணிக்கு மீண்டும் கூடியது)*

*திரு. துணை சபாநாயகர் (திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்) தலைமைப் பீடத்தில் அமர்ந்திருந்தார்.*

---

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஐயா, அவை மதிய உணவுக்குக் கலைந்தபோது ஒரு பொறுக்குக் குழுவின் செயல்பாடுகள் - மசோதா வின் வாசகத்தை ஷரத்து வாரியாக, தேவைப்பட்டால் சொல்லுக்குச் சொல் பரிசீலனை செய்ய வேண்டும், என்று உங்களுடைய கவனத் திற்கு நான் சமர்ப்பித்துக் கொண்டிருந்தேன். மே'யின் நாடாளுமன்ற நடைமுறையை இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

**திரு. துணை சபாநாயகர்:** வேறு விஷயத்தைப் பற்றிப் பேசும்படி மதிப்பிற்குரிய உறுப்பினரை வேண்டிக்கொள்கிறேன். ஏனெனில் நான் ஏற்கனவே ஒரு தீர்ப்பை வழங்கிவிட்டேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** நான் உங்களுடைய தீர்ப்பை மதிக்கிறேன். அவைத்தலைவர் கொடுத்த தீர்ப்பை மாற்றப் போவ தில்லையென்று ஏற்கனவே நீங்கள் கூறிவிட்டீர்கள். அதை மாற்ற வேண்டுமென்று நானும் விரும்பவில்லை. உண்மையில், துரதிருஷ்ட வசமாக, என்னைப் பூரணமாகப் புரிந்துகொள்ளச் செய்வதற்கு என்னால் முடியவில்லை. முன்வரைவு பரிசீலிக்கப்பட்டபோது, இந்த மசோதா பொறுக்குக் குழுவிடம் இருந்தது என்று அவைத் தலைவரின் தீர்ப்பு கூறுகிறது. நான் அதைக் கேள்வி கேட்கவே யில்லை. என்னுடைய கேள்வி எல்லாம், பொறுக்குக் குழுவின் பணி அவர்கள் மூல மசோதாவை ஷரத்துவாரியாகவும், சொல் லுக்குச் சொல்லும் பரிசீலனை செய்திருக்கவேண்டும் என்பதுதான். அதுமட்டுமல்ல. சபை எவ்வாறு கடப்பாடு உடையதோ, அது போன்றே பொறுக்குக் குழுவும் மசோதாவை ஷரத்து வாரியாக வும், சொல்லுக்குச் சொல்லும் பரிசீலனை செய்திருக்கவேண்டும் என்பதுதான்.

**திரு. துணை சபாநாயகர் :** சபாநாயகரின் தீர்ப்பின் படி, மூல மசோதாவும், திருத்தப்பட்ட முன்வரைவும் அங்கிருந்தன. பொறுக்குக் குழு அதை ஷரத்து வாரியாகப் பரிசீலனை செய்தது என்று நாம் கருதிக்கொள்வோம். அடுத்து என்ன? இதனுள் நாம் போக வேண்டிய

தில்லை, அவ்வாறு செய்வது தகுதி உடையதல்ல என்பதுதான் கேள்வியா? அவ்வாறுதான் எனில், அதுபற்றி ஏற்கனவே தீர்ப்புக் கூறப்பட்டு விட்டது. ஒரு தடவை தீர்ப்புக் கூறப்பட்டு விட்டால், மீண்டும் அதனுள் செல்வதற்கு எங்கே உரிமையிருக்கிறது?

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:*** விவரம் சம்பந்தமான ஒரு பிரச்சினை. இரு மசோதாக்களும் எடுத்துக் கொள்ளப்பட்டு, ஒன்றாகப் பரிசீலனை செய்யப்பட்டதா என்பது குறித்து பொறுக்குக் குழுவின் உறுப்பினர்கள் தயவுசெய்து தெளிவுபடுத்தும்படி மீண்டும் கேட்டுக் கொள்கிறேன். இது சரியென்று வைத்துக் கொண்டால், மூல மசோதா வின் ஒவ்வொரு ஷரத்தும், பரிசீலனை செய்யப்படாத வரையில், சட்டத்தின் தேவைக்கும் நடைமுறைக்கும் இசைவாக நடந்து கொள்ளப்பட்டதாகக் கருத முடியாது.

***திரு. எச்.வி. காமத்:*** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் பொது): பொறுக்குக் குழுவின் தகுதி பற்றிய பிரச்சினைக்கு அவைத் தலைவர் இறுதியாக முடிவு கூறிவிட்டாரா?

***திரு. துணை சபாநாயகர் :*** அந்தப் பிரச்சினைக்கு நானே முடிவு காண முயல்கிறேன். எப்பொழுதெல்லாம் சிரமமாக இருப் பதாக நான் உணருகின்றேனோ அப்பொழுதெல்லாம் மதிப்பிற் குரிய உறுப்பினர் திரு. காமத்தை நான் உதவிக்கு அழைக்கிறேன்.

மேற்கொண்டு என்ன நடைபெறப் போகிறது என்பதை அறிய ஆவலாக இருக்கிறேன் என்று ஏற்கனவே கூறியுள்ளேன். இரண்டு மசோதாக்களும் அங்கிருந்தன என்றும் மற்றைய முன்வரைவு மசோதா ஷரத்துவாரியாகப் பரிசீலிக்கப்பட்டது என்றும் இப்போதைக்கு நான் கருதிக் கொள்கிறேன். அடுத்தது என்ன? சட்டப்படியான ஆட்சேபனை என்ன?

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:*** என்னுடைய நிலையை விளக்கு வதற்கு எனக்கு இரண்டு அல்லது மூன்று நிமிடங்கள் வழங்குமாறு உங்களைக் கேட்டுக்கொள்கிறேன் பிரச்சினையின் மற்றொரு அம்சமும் உள்ளது. மூலமசோதா ஷரத்துவாரியாகவும், சொல்லுக்குச் சொல்லும் பரிசீலனை செய்யப்பட வேண்டும் என்பது ஓர் அடிப் படையான விதி என்பதோடல்லாமல் மசோதா முழுமையும் இப்படித்தான் பரிசீலனை செய்யப்பட வேண்டும் - மூல மசோதாவின் ஒவ்வொரு ஷரத்தும் பரிசீலனை செய்யப்பட வேண்டும்; பின்னர்

புதிய ஷரத்து, பின்னர் அட்டவணை, பின்னர் புதிய அட்டவணை பரிசீலனை செய்யப்பட வேண்டும். நாடாளுமன்ற நடைமுறை இதைக் கூறுகிறது. அடுத்த கேள்வி, இதன் விளைவு என்ன? இதைத் தொடர்ந்து என்ன ஏற்படும்? இதுதான் உங்கள் முன்னால் உள்ள பிரச்சினை. இது தொடர்பாக, நடைமுறை மற்றும் சட்டத்தின் பொதுவான கோட்பாடுகளையும், இதில் சம்பந்தப்பட்டுள்ள குறிப் பான அம்சத்தையும் உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். பொதுவான நடைமுறையைப் பொறுத்தமட்டிலும், சட்டத்தின் விதி மிகவும் தெளிவாக உள்ளது. ஒரு குறிப்பிட்ட நடைமுறை கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்று எந்த ஒரு சட்டமும் அல்லது எந்த நடைமுறையும் அல்லது பொதுவான கோட்பாடும் தேவைப்படுத்தும்போது, அந்த நடைமுறை கடைப்பிடிக்கப்பட்டா லொழிய, அதுவரையிலும், அது செல்லத்தக்கதாக செய்யப்பட்ட தாகக் கருதப்பட முடியாது. இந்தக் கோட்பாட்டுக்காக, பிரிவி கவுன்சிலின் மற்றொரு ஆணையை நான் மேற்கோள் காட்டுகிறேன். அது பிரிவி கவுன்சிலின் 1936ம் வருடத்திய ஆணை, பக்கம் 253.

**திரு. துணை சபாநாயகர் :** அடுத்த நடவடிக்கையையும் நான் கருதிக் கொள்கிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினரின் வாதத்தைத் தான் நான் படிப்படியாக எடுத்துக்கொள்கிறேன். பொறுக்குக் குழு இதைப் பரிசீலனை செய்யவில்லை, அல்லது வேறு மசோதாவைப் பரிசீலனை செய்தது என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் இந்த விஷயத்தை ஆய்வு செய்வதற்கு எனக்கு அதிகார வரம்பு இல்லை என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் கூற விரும்புகிறார் என்பது தெளிவு. இது குறித்து சபாநாயகர் ஏற்கனவே தீர்ப்புக் கொடுத்து விட்டார் என்று நான் கூறவிரும்புகிறேன். சபாநாயகர் தீர்ப்பு அவர் கூறியுள்ள விஷயத்தை உட்படுத்தவில்லை என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் என்னைத் திருப்திப்படுத்த முடிந்தால், நான் அவர் கூறுவதைக் கேட்கிறேன். என்னைப் பொறுத்தமட்டிலும், நான் அதை கவனமாகப் பரிசீலனை செய்தேன், அது சபாநாயகரின் தீர்ப்புக்கு உட்பட்ட விஷயமாகத்தான் இருக்கிறது என்று நம்புகிறேன். எனவே, மேற்கொண்டு காலவிரயம் செய்யாமல் மேற்கொண்டு பேசுமாறு மதிப்பிற்குரிய உறுப்பினரைக் கேட்டுக் கொள்கிறேன். இதுபற்றி ஏற்கனவே அதிக காலம் கடந்துவிட்டது. பேசுவதற்கு வேறு பேச்சாளர் களும் காத்துக் கொண்டிருக்கிறார்கள். மதிப்பிற்குரிய உறுப்பினர் இந்தப் பிரச்சினையை சாத்தியமான அளவு விரைவில் முடித்துக் கொண்டு, அவர் விரும்பினால் வேறு பிரச்சினையைப் பற்றிக் கூறும் படி, கேட்டுக்கொள்கிறேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** சபாநாயகரின் முந்திய தீர்ப்பு இந்தப் பிரச்சினையை உட்படுத்தவில்லை என்று நான் தாழ்மையாகத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். மறுவரைவுதான் பரிசீலிக்கப்பட்டதால், பிரேரணை முன்வைக்கப்பட அனுமதிக்கப்பட முடியாது என்ற ஒரு விஷயத்தை மட்டுமே நசிருதீன் அகமது எழுப்பினார். அதுதான் விஷயம். ஷரத்துவாரியாக விவாதிக்க வேண்டும் என்பது சம்பந்தமாக நான் வற்புறுத்தி வரும் விஷயம் விவாதிக்கப்படக்கூட இல்லை. இதன் விளைவு இப்படித்தான் இருக்கும். அதாவது, ஒரு மசோதா பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்படும். நீங்கள் இந்த அடிப்படையான விதியைக் கடைப்பிடிக்கவில்லையென்றால், வேறு எந்த அமைச்சராவது, இந்த மசோதாவுக்குப் பிறகு, ஒரு மறுவரைவை முன்வைத்து, அதைப் பரிசீலனை செய்யப்படச் செய்யமுடியும்; மசோதா ஷரத்துவாரியாகப் பரிசீலனை செய்யப்படவேண்டும் என்ற இந்த அடிப்படையான விதியின் மெய்யான நோக்கம் தோற்கடிக்கப்பட்டுவிடும். மசோதாவில் எந்த மாற்றமும் செய்வதற்கு எந்த நபருக்கும் உரிமையில்லை என்பதற்கு இது போதுமான காரணமாகும். இதற்கு, ஐயா, நான், காமன்ஸ் சபையில் சபாநாயகரின் தீர்ப்பை (ஹன்சார்ட், தொகுதி 215, பக்கம் 301) உங்களுக்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இது சம்பந்தமாக நீங்கள் என்னுடன் உடன்படுவதானால், மற்றும் குழுவில் இது ஷரத்து வாரியாகப் பரிசீலக்கப்பட வேண்டும் என்பதையும் ஒத்துக்கொள்வதாயிருந்தால் இந்த மசோதா அதே தேர்வுக் கமிட்டியிடம் மீண்டும் அனுப்பப்பட வேண்டும் என்பது முற்றிலும் தெளிவாகும். பொறுக்குக் குழு இரண்டு மணி நேரம் எடுத்துக் கொள்ளட்டும் - அந்த அறிக்கை இந்த அமர்வில் வரக்கூடாது என்பதை நான் விரும்பவில்லை - அவர்கள் இரண்டு மணிநேரம் இதற்காக செலவழிக்க வேண்டும். மூலமசோதாவை ஷரத்து வாரியாக பரிசீலிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். பின்னர் நாம் அதை விவாதிப்போம். இந்த அம்சத்தை சபாநாயகர் கவனத்தில் எடுத்துக்கொள்ளவேயில்லை என்று நான் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த அம்சத்தை நீங்கள் தயவு செய்து கவனிக்குமாறு உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்.

இது சம்பந்தமாக மேற்கொண்டு காலவிரயம் செய்ய வேண்டாம் என்று நீங்கள் என்னைக் கேட்டுக் கொண்டிருப்பதால், இதை ஒதுக்கிவிட்டு, பிற அம்சங்களை எடுத்துக்கொள்கிறேன். இப்பொழுது பிரச்சினை என்னவெனில், இதனுடைய விளைவு என்னவாகும்? நான் ஏற்கனவே கூறியது போன்று ஒரு விஷயம் என்னவெனில், நாம்

விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இது போன்ற ஒரு விஷயத்தில் விதிகள் அடிப்படையான விதிகளாகும். அவற்றை மீற முடியாது. அப்படியெனில், அதனுடைய மெய்யான விளைவு என்ன? அதை நான் உங்களுக்கு எடுத்துக்கூறுவதற்கு விரும்புகிறேன். இப்பொழுது மூல மசோதாவின் ஷரத்துக்களுக்கும் பொறுக்குக் குழுவிலிருந்து வெளிவந்துள்ள மசோதாவிற்கும் இடையிலுள்ள வேறுபாடுகள் அல்லது முரண்பாடுகள் நடைமுறை சம்பந்தப்பட்டவை மட்டு மல்ல, மிகவும் சாராம்சமான விஷயங்கள் சம்பந்தப்பட்டவையு மாகும். பக்ஷி தேக் சந்தும், பண்டிட் பாலகிருஷ்ண சர்மாவும் கொடுத் துள்ள கருத்து மாறுபாட்டுக் குறிப்பில், உண்மையில், மறுவரைவு செய்யப்பட்ட மசோதாவில் மிகவும் தீவிரமான மாற்றங்கள் செய்யப் பட்டுள்ளனவென்று கூறி, அந்த மாற்றங்களின் உதாரணங்களும் கொடுக்கப்பட்டுள்ளன என்று சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அனைத்து சாராம்சமான மாற்றங்கள் குறித்தும் அவர்கள் தங்கள் குறிப்பில் கூறிவிட்டதாக நான் திருப்தியடையவில்லை. அந்த அம்சத்தை யும் தாங்கள் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று உங்களை கேட்டுக்கொள்கிறேன். நான் என்னுடைய உரையைத் தொடங்கிய போது, பொறுக்குக் குழுவிலிருந்து வெளிவந்த நிலையில் மறுவரைவு செய்யப்பட்ட மசோதா பரிசீலிக்கப்பட்ட பிறகு பல மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. அவை (பஞ்சாபில் இல்லாத) நிறுவனங்களுக்கு நிச்சயமாக அழிவுகரமானவை என்பதை உங்களுடைய கவனத் திற்கு கொண்டுவந்தேன். ஒரு வாரிசை நியமிக்கும் நிறுவனத்தைப் பற்றி முதன் முதலில் உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஒரு வாரிசை நியமிப்பது சம்பந்தமாக, மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரின் கருத்துக்களை நாம் அறிவோம். வாரிசுகளை சுவீகரிப்பது ஒரு செயற்கையான விவகாரம் என்றுதான் நினைத் ததாக அவரே கூறினார். நானும் அவ்வாறுதான் நினைக்கிறேன். மசோதா பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்டபோது, திருமதி ஹன்ஸா மேத்தா நிகழ்த்திய உரை நமக்கு நினைவிருக்கிறது. அவர்களும் சில விமர்சனங்களைக் கூறினார்கள். தற்போதைய மசோதாவின்படி, 'டிபேட்' வடிவத்திலல்லாது வேறு எந்த வடிவத்திலும் எந்த நபரும் ஒரு வாரிசை சுவீகரித்துக் கொள்ள முடியாது. ஆனால் மூல மசோதா வின்படி, கிரித்ரிம் மற்றும் கோடா வடிவங்களிலான சுவீகார முறை களும் அனுமதிக்கப்படத்தக்கவை. சுவீகாரத்தைப் பொறுத்தமட்டில், ஒரு மகனை சுவீகாரம் எடுத்துக்கொள்வதென்பது வெறும் கட்டுக் கதையே. அத்தகைய ஒரு மகன் எவ்வாறு ஒரு மெய்யான மகனாக முடியும்? ஆனால் இந்து சட்டம் அதற்கு வகை செய்கிறது, அதில் நம்பிக்கை உள்ளவர்களுடன் எனக்கு எவ்விதத் தகராறும் இல்லை.

ஆனால் சொத்துக்கு வாரிசுகளை நியமிப்பது சம்பந்தமாக, நோமினிஸ் ஹெரிடிஷியோ என்ற வகையில் ரோமானியர்கள் செய்தது போன்று, பஞ்சாபிலுள்ள மக்களுக்கு அதுபோன்ற பழக்கவழக்கங்கள் இருந்தால், அவற்றின் மீது கை வைப்பதற்கு யாருக்கும் உரிமையில்லை. நம்முடைய நிறுவனங்களின்படி, ஒரு வாரிசை நியமிப்பதில், அதனுடைய விளைவைப் பொறுத்தமட்டிலும், அது சுவீகாரத்தைப் போன்றதே என்ற போதிலும், அதில் மதரீதியான பயனுடைமை எதுவும் இல்லை; குறிப்பான சடங்குகள் எதுவும் இல்லை. வயது சம்பந்தப்பட்ட பிரச்சினையும் இல்லை. அந்த மகன், சுவீகாரம் எடுத்துக்கொண்ட குடும்பத்தில் ஒன்றிணைந்து கொள்வதில்லை, அவர் தொடர்ந்து தன்னுடைய குடும்பத்திலேயே இருந்து வருகிறார். இது சம்பந்தமாகப் பல்வேறு விதிகள் உள்ளன. இந்த அம்சம் சம்பந்தமாகப் பஞ்சாப் உயர்நீதிமன்றம் நூற்றுக் கணக்கான தீர்ப்புகளைக் கொடுத்துள்ளது. அந்த அமைப்பு பொதுமக்களின் மனதில் மிகவும் பலமாகப் பதிந்துள்ளது. இந்த சட்டத் தொகுப்பில் நீங்கள் அதை அனுமதிக்காவிட்டால், குறைந்தபட்சம் ஒரு கோடி மக்களின் பழக்கவழக்கத்தை நீங்கள் தலையிட்டு மாற்றுவதாகிவிடும். இந்து சட்டத் தொகுப்பின்படி, வேறு எந்த வகைப்பட்ட சுவீகாரமும் அனுமதிக்கப்பட மாட்டாது. தற்போதைய மசோதாவில் அதற்குத்தான் வகை செய்யப்பட்டுள்ளது. அது போதிய அளவு முன் செல்வதில்லை. பழக்க வழக்கத்தைப் பொறுத்தமட்டிலும், அங்கீகரிக்கப்பட்டுள்ள அளவைத் தவிர, அதற்கு மேல் பழக்க வழக்கம் நிராகரிக்கப்பட்டுள்ளது.

டாக்டர் அம்பேத்கர் இந்த மசோதா பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்படும் சமயத்தில் நிகழ்த்திய உரையைப் படித்தபோது, அவருடைய கண்ணோட்டம் மிகவும் நியாயமானது என்று எனக்குப் பட்டது, மேலும், பழக்கவழக்கம் பற்றி அவர் கூறிய சில கருத்துக்கள், இந்த மசோதாவிலுள்ள ஷரத்துக்களுக்கு மிகவும் எதிரானதாக இருந்ததையும் கண்டேன். ஐயா, இந்த சட்ட இலாக்கா குழுவில் நமது சட்ட அமைச்சரும் உறுப்பினராக இருந்தாரா என்பதே எனக்கு மிகவும் ஐயப்பாடாக இருக்கிறது. மசோதாவில் மாற்றங்கள் செய்த நபர்கள் யார் என்பது எனக்குத் தெரியாது; அதே சமயத்தில், டாக்டர் அம்பேத்கர் - எனக்குத் தெரியாவிட்டாலும் - அங்கிருந்திருக்க மாட்டார் என்று நான் பெரிதும் ஐயுறுகிறேன்; ஏனென்றால் 90 சதவீத மக்களின் பழக்க வழக்கங்கள் பாதிக்கப்படக்கூடாது என்பதில் அவர் - நான் ஆர்வத்துடன் இருப்பது போன்றே மிகவும் ஆர்வத்துடன் இருந்தார் அவருக்குத் தெரியாமல் போயிருந்திருக்கலாம் -

அதை அவர் பாராட்டியிருந்திருக்கமாட்டார்; அல்லது பொறுக்குக் குழுவின் உறுப்பினர்களல்லாத வேறு சில நபர்கள் அங்கு இருந்திருக்கக் கூடும். அவர்கள் மசோதாவின் முகத்தையே முற்றாக மாற்றி விட்டார்கள். அவ்வாறு செய்வதற்கு அவர்களுக்கு உரிமையில்லை; மற்றைய மசோதாதான் பரிசீலனை செய்யப்பட்டுள்ளது - மூல மசோதா அங்கிருந்ததென்றும், அது பரிசீலனை செய்யப்பட்டதென்றும் கூறுவது கட்டுக்கதையாகும். ஐயா, 1948 ஏப்ரல் 9ம் தேதி நடவடிக்கைகளின் 3652ம் பக்கத்தை பார்க்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். அதில் டாக்டர் அம்பேத்கர் இவ்வாறு கூறியிருந்தார்.

''மரபான சட்டத்தை இந்த மசோதா கவனத்தில் எடுத்துக் கொள்ளவில்லை என்பது அவருடைய இரண்டாவது விமர்சனமாகும். பிரிவி கவுன்சிலின் சில தீர்ப்புகளை அவர் சுட்டிக்காட்டினார். இன்றைய தினம் இந்த சமயத்தில் பிரிவி கவுன்சிலின் அதிகாரத்தை சுட்டிக்காட்டுவது அவசியமற்றதாகும் என்று நான் நினைத்திருக்கவேண்டும். ஏனெனில், நீண்ட வரிசையான முடிவுகளால் அது நன்கு நிலைநாட்டப்பட்டுள்ளது; அதாவது இந்துக்களைப் பொறுத்தமட்டிலும் 'ஸ்மிருதி'யின் வாசகத்தைக்காட்டிலும் பழக்கவழக்கம் தான் மேலோங்கிநிற்கும். நாம் அனைவரும் இதை அறிவோம். ஆனால் நாம் என்ன செய்துகொண்டிருக்கிறோம்? நாம் செய்துகொண்டிருப்பது இதுதான். புதிய பழக்கவழக்கத்தின் வளர்ச்சியை நாம் தடுத்து வருகிறோம். இப்போதிருந்து வரும் பழக்க வழக்கங்களை நாம் அழித்து வரவில்லை. இருந்து வரும் பழக்க வழக்கங்களை நாம் அங்கீகரிக்கிறோம். ஏனெனில், இந்து சமூகத்தில் இருந்து வரும் விதிகளும் சட்டமும் பழக்கவழக்கங்களின் விளைவேயாகும். பழக்கவழக்கங்களிலிருந்தே அவை தோன்றியுள்ளன; அவை இப்பொழுது மிகவும் உறுதியாக நிலைபெற்று விட்டதால், ஒரு சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் அவற்றுக்கு உண்மையில் அரசியலில் உருவமும் உயிரும் கொடுக்க முடியும் என்று நாம் கருதுகிறோம்.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், ஸ்ரீஜத் ரோஹிணி குமார் சௌதுரியின் உரையை சுட்டிக்காட்டினார்.** அவர் மேலும் இவ்வாறு கூறினார்:

பழங்குடி மக்களின் பிரச்சினையை நாம் கவனத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. அவர்களின் வாழ்க்கை பெருமளவிற்கு மரபான சட்டத்தின்படி நடந்து வருகிறது என்பதில் ஐயமில்லை. இந்தச் சட்டத் தொகுப்பில் இந்து என்பது யார், இந்து அல்லாதவர் யார், யாருக்கு இந்தச் சட்டம் பொருந்தும், என்பது சம்பந்தமான வரையறையை எனது நண்பர் படித்திருந்தால், அதில் வரும் ஒரு ஷரத்தை அவர் கவனித்திருப்பார். அது, முஸ்லீம்கள், பார்சிகள் அல்லது கிறிஸ்தவர் அல்லாதவர்கள் இந்துக்களாகக் கருதப்படவேண்டும் என்று மட்டுமே கூறுகிறது. அவர்கள் இந்துக்கள் என்பதல்ல. இதன் விளைவு என்னவெனில், ஒரு பழங்குடி நபர், தான் ஒரு இந்து அல்ல என்ற கூறுவதற்கு விரும்பினால், தன்னுடைய கூற்றுக்கு ஆதரவாக, தான் இந்து அல்ல என்று சான்று வழங்குவதற்கு இந்த சட்டத்தொகுப்பின் கீழ் அவருக்கு முழு உரிமையுண்டு, நீதிமன்றம் அந்த சான்றை ஏற்றுக்கொண்டால், இந்த மசோதாவில் அடங்கியுள்ள எதுவும் நிச்சயமாக அவரைக் கட்டுப்படுத்தாது.

நிலைமை இதுதான்: என்னுடைய பழக்கவழக்க மரபுகள் நல்லவை என்று நான் ஏற்றுக்கொண்டால், என்னைக் கட்டுப் படுத்துகிற பழக்க வழக்கத்திற்கு ஏற்ப, என்னுடைய வாரிசுகளை நான் நியமித்தால், அப்பொழுது, டாக்டர் அம்பேத்கரின் கருத்துப்படி, நான் ஓர் இந்து அல்ல. அது தான் எனக்கு சிரமமானது. ஒன்று, நீங்கள் இந்த ஒரு கோடி மக்களுக்கு வசதி செய்து கொடுத்து, அவர்களுடைய பழக்க வழக்கங்களை ஏற்றுக்கொள்ள வேண்டும், அல்லது...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (சட்ட அமைச்சர்) : எனது நண்பரை இடைமறிப்பதற்கு எனக்கு விருப்பமில்லை. ஆனால் என்னுடைய உரையின் அந்தப் பகுதியைப் பற்றி அவர் கொடுக்கும் வியாக்கியானத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை என்று சொல்லி யாகவேண்டும். அது முற்றிலும் வேறு ஒரு விஷயத்தைக் குறிப்ப தாகும்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** நான் தவறாகக் குறிப்பிட் டேன் என்பதையறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். ஒரு கோடி மக்கள் இந்து சட்டத்தின் செல்வாக்கின் கீழிருந்து வெளியே செல்வதை டாக்டர் அம்பேத்கர் விரும்பவில்லை என்பதை அறிந்து திருப்தி அடைகிறேன். ஆனால் அதே சமயத்தில் நான் சமர்ப்பிக்கும் வாதம் இதுதான். இந்த மரபு நல்லது என்றால் - இது நல்லது என்று நான் உரிமை கொண்டாடுகிறேன், ஏனென்றால், இந்த சட்டத் தொகுப் பிலேயே கொடுக்கப்பட்டுள்ள வரையறுப்பின்படியே, இந்தப் பழக்க வழக்கம் பண்டைக் காலத்தியதும், நியாயமானதுமாகும்; பொதுக் கொள்கை அல்லது ஒழுக்கத்திற்கு எதிரானதல்ல - இந்த மரபு சட்டத் தொகுப்பினால் அங்கீகரிக்கப்பட்டிருக்க வேண்டுமென்று நான் அறுதியிட்டுக் கூறுகிறேன். ஆனால் இந்த மரபு அங்கீகரிக்கப்பட வில்லை. மூலமசோதாவினால் ஓரளவுக்கு கிரித்திரிமா வடிவம் ஒரு சிறந்த முறை என்று ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. ஆனால், இத்தகைய சுவீகாரத்தைத் தவிர, வேறு எந்த சுவீகார வடிவமும் அங்கீகரிக்கப்பட மாட்டாது என்று தற்போதைய மசோதா கூறுகிறது. இது சில விதிகளின் ஆளுகைக்கு உட்பட்டது என்று டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார். அந்த விதிகள் யாவை? ஒரு நபர் 15 வயதுக்கு மேல் ஆகியிருக்கக்கூடாது. அவர் சுவீகாரம் எடுத்துக்கொள்ளப் படுவதற்கு வேறு ஒருவரால் அளிக்கப்பட்டிருக்க வேண்டும். அவர் திருமணம் செய்து கொண்டவராக இருக்கக்கூடாது. தற்போதுள்ள சுவீகாரச் சட்டத்தின்படியே கூட, இந்த விதிகள் அங்கே இல்லை. உதாரணமாக ஓர் இந்துவின் மகளும், மருமகனும் இறந்துபோனால்,

மகளுடைய மகன் சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட முடியாது. பெற்றோர்கள் இல்லையானால் மருமகனும் (ஒன்றுவிட்ட மகனும்) கூட சுவீகாரம் எடுத்தக் கொள்ளப்பட முடியாது என்ற விதி நடைமுறையில் இல்லை; மேலும் அமலிலுள்ள சட்டத்தின்படி ஒரு நபர் சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்படுவதற்கு முன்னால் திருமணமானவராக இருக்க வேண்டுமென்ற அவசியம் இல்லை என்பதும் எல்லோரும் அறிந்ததே. இது போன்றே வயதைப் பற்றியும் எனவே, இந்த முறை களெல்லாம் அவை தற்போதைய நிலைமைகளுடன் பொருந்திவராத வகையில் மாற்றப்பட்டுள்ளன; அல்லது அவை, நமக்கு உபயோகமாயிரா, அல்லது நம்மைக் கட்டுப்படுத்தாது என்ற வகையில் மாற்றப்பட்டுள்ளன.

நமக்கு ஒரு சிவில் சட்டத் தொகுப்பு வேண்டும் என்று அரசியல் நிர்ணய சபையில் நாம் தீர்மானம் நிறைவேற்றினோம். இது இந்து சட்டத்தொகுப்பாக இல்லாவிட்டாலும், ஒரு சிவில் சட்டத் தொகுப்பை உருவாக்கும் பொறுப்பு டாக்டர் அம்பேத்கரிடம் கொடுக்கப்பட்டிருந்த போதிலும் (அரசியல் சாசனம் நிறைவேற்றப் பட்ட பிறகு அவருக்கு அத்தகையப் பொறுப்புக் கொடுக்கப்படும் என்று நான் கருதுகிறேன்) இந்த சிவில் ஏற்பாட்டை - அதாவது ஒரு வாரிசை நியமிப்பதை - சிவில் சட்டத் தொகுப்பிலும் அவர் நிச்சயமாக சேர்த்துக் கொள்வார். ஒரு நபர், அவரைத் தமது வாரிசாக நியமிப்பவர்களுக்கு - அவர்களின் வயதான காலத்தில் உதவக்கூடும், நான் சமர்ப்பிப்பது என்னவெனில், உண்மையில், மூல சட்டத் தொகுப்பைக் காட்டிலும் மறுவரைவு மிகவும் மோசமானது என்பதற்கு, இந்த அம்சமே போதுமானதாகும். மேலும், மூல மசோதாவின்பால் முழு கவனம் செலுத்தப்படவில்லை. முழு கவனம் செலுத்தப்பட்டிருந்தால், இந்த அம்சம் பரிசீலிக்கப்பட்டிருந் திருக்கும். இது ஷரத்து வாரியாகப் பரிசீலிக்கப்பட்டிருந்தால் இந்த நிலைக்கு நாம் வந்திருக்க மாட்டோம்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** மசோதாவின் இந்தப் பகுதி, மிகவும் பரிசீலிக்கப்பட்டது என்று கூறுவேன்.

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:*** ஐயா, மூலமசோதா பரிசீலிக்கப் பட்டது என்பது குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இனி ஒரே ஒரு சட்ட நுணுக்க அம்சம் எஞ்சியிருக்கிறது. அது என்னவெனில், அது ஷரத்து வாரியாகப் பரிசீலிக்கப்படவில்லை, என்பதுதான். அது அவ்வாறு செய்யப்படவில்லை என்பதற்கு உள்ளார்ந்த சான்று

உள்ளது. இதன் விளைவு என்ன? உதாரணமாக, சில ஷரத்துகள் விடுபட்டுப் போயிருந்தால் என்னாவது? அந்த ஷரத்துகள் எவ்வாறு பரிசீலிக்கப்பட்டன? கவனம் முழுவதும் மற்றைய மசோதாவின் முன்வரைவின் மீது இருந்தபோது, அந்த ஷரத்துகள் பரிசீலிக்கப்பட்டிருக்க முடியாது. இது ஒரு சட்ட நுணக்க விஷயம் அல்ல....

**திரு. துணை சபாநாயகர் :** பொறுக்குக் குழு என்ன செய்திருந்த போதிலும், அது இந்த அவையைக் கட்டுப்படுத்தாது, என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் அறிவார். பொறுக்குக் குழு ஒரு பரிந்துரையை அனுப்பியுள்ளது: அதை ஏற்றுக் கொள்வதோ அல்லது ஏற்றுக் கொள்ளாமல் நிராகரிப்பதோ மதிப்பிற்குரிய உறுப்பினரின் உரிமை அவர் அதை ஏற்றுக்கொள்ளவில்லையென்றால் அதை ஏற்றுக்கொள்ள வேண்டாமென்று அவர் அவையைக் கேட்டுக் கொள்ளலாம். அது குறித்து நாம் மீண்டும் விவாதிக்கவேண்டியதில்லை. பார்க்கப்போனால் சில உறுப்பினர்கள் அங்கு இருந்தனர். அவர்கள் எதைப் பரிசீலித்தார்கள். எதைப் பரிசீலிக்கவில்லை என்பதைப் பற்றி விவாதிப்பது சரியல்ல. ஒரு ஷரத்தை நாம் ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது அல்லது ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது குறித்து மதிப்பிற்குரிய உறுப்பினர் அவையில் பேசுவது நல்லது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஐயா, உங்களுடைய ஆலோசனையை நான் ஏற்றுக் கொள்கிறேன். பொறுக்குக் குழுவின் முன்னால் என்ன நடந்தது என்பது குறித்து இனிமேல் நான் பேச மாட்டேன்: உங்களுடைய அனுமதியுடன் இந்த ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் கூறுகிறேன். மூலமசோதா பரிசீலனை செய்யப்பட மாட்டாது, பதிலி மசோதா தான் பரிசீலிக்கப்பட வேண்டும் என்ற மோசடியில் பொறுக்குக் குழு உடந்தையாயிருந்தபோதிலும் நம்மை அது கட்டுப் படுத்தாது. குற்றம் சாட்டப்பட்டுள்ள ஒருவர் ஒரு குற்றவியல் நீதிமன்றத்தின் முன்னால் சட்டத்திற்குப் புறம்பான ஒரு குறிப்பிட்ட நடைமுறையில் ஈடுபட்டால், அப்பொழுது அது அவரைக் கட்டுப் படுத்தாது. இது சம்பந்தமாக நான் சில தீர்ப்புகளை மேற்கோள் காட்டட்டுமா? குற்றம் சாட்டப்பட்டுள்ள ஒருவரை, குற்றவியல் தண்டனை சட்டத்தின் 107வது பிரிவின் கீழ் கட்டுப்படுத்துவதற்கு நல்ல சான்று அல்லது பிரிவு இருக்கிறதா என்று தெரிந்து கொள்வதற்கு அந்தப் பிரச்சினையை நீதிமன்றம் ஆராய வேண்டியது அவசியமாகும். ''அந்த சாட்சியத்துடன் கட்டுப்படுத்திக் கொள்வதற்கு நான் உடன்படுகிறேன்'' என்று குற்றம் சாட்டப்பட்டுள்ளவர் கூறுகிறார். ''நீ கட்டுப்படுகிறாய்'' என்று நீதிமன்றம் கூறுகிறது.

ஆயினும் சரியான நடைமுறை கடைப்பிடிக்கப்படவில்லை என்றும் ஒரு தவறான நடைமுறையுடன், குற்றம் சாட்டப்பட்டவர் ஒத்துப் போவது உத்தரவை சட்டபூர்வமாக்காது என்றும் மேல்முறையீடு நீதிமன்றம் தீர்ப்பு அளிக்கிறது.

**திரு. துணை சபாநாயகர் :** பொறுக்குக் குழுவின் அறிக்கையைத் துண்டு துண்டாகக் கிழிப்பதோடு மதிப்பிற்குரிய உறுப்பினர் திருப்தியடையவில்லையா? அவர்கள் ''குற்றவாளிகள்'' என்று அவரும் கூறவேண்டுமா?

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஒரு பொறுக்குக் குழுவைக் கட்டுப்படுத்துகிற நடைமுறை சம்பந்தமான அடிப்படையான விதிகளைப் புறக்கணித்த குற்றம் புரிந்தவர்கள் இன்று இந்த அவையின் முன்னால் குற்றம் சாட்டப்பட்டு நிற்கின்றனர். என்னுடைய சில நண்பர்களுக்கு மகிழ்ச்சியளிக்காத சில விஷயங்களைக் கூற வேண்டியிருப்பதற்கு நான் வருந்துகிறேன். ஆயினும், மிகுந்த தன்னடக்கத்துடனும், இந்த அவையின் உரிமைகளையும் மதிப்பையும் பாதுகாக்கும் நோக்கத்துடன் அதை நான் செய்யவேண்டியுள்ளது. இத்துடன் இந்த அம்சத்தை விட்டுவிட்டு, இரண்டாவது அம்சத்திற்கு வருகிறேன்.

திருமணம், மற்றும் விவாகரத்து ஆகிய மிகவும் முக்கியமான பிரச்சினைகளைப் பற்றி இந்தச் சட்டத்தொகுப்பு என்ன கூறுகிறது? தற்போது இது சம்பந்தமான நிலவரம் என்ன? பஞ்சாபில் திருமணத்திற்குக் குறிப்பான சடங்குகள் எதுவும் கிடையாது. அவை கரேவா, சதர், மற்றும் அந்தாஸி திருமணங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இத்திருமணங்களில் மாப்பிளை வழங்கும் வளையல்களை மணப்பெண் அணிந்து கொள்கிறாள், அல்லது மாப்பிள்ளை, மணப் பெண்ணுக்கு சதரை அணிவிக்கிறார்; இத்துடன் திருமணச் சடங்கு முடிந்து விடுகிறது (திரு. மகாவீர் தியாகி: ''அருமையான திருமணம்.'') அத்தகைய ஒரு நடைமுறையைக் கைக்கொள்வது திரு. தியாகிக்கு மிகவும் எளிதானதாக இருக்கலாம். இது ஒரு சமயச் சடங்கு சார்ந்த அல்லது சிவில் திருமணம் கூட அல்ல. மேலும், மூல சட்டத் தொகுப்பில், தப்பித்துக் கொள்ளும் ஒரு வழி இருந்தது. அத்தகைய நபர்கள் நீதிமன்றத்திற்கு வந்து தங்களைப் பதிவு செய்து கொள்ளலாம். மாற்றப்பட்டுள்ள விதிகளின்படி திருமணம் சமயச் சடங்கு ரீதியாகச் செய்யப்பட்டிருந்தாலொழிய அதைப் பதிவு செய்ய முடியாது. உங்களுக்கு முன்னால் எடுத்துக் கூறவேண்டிய வேறு

விஷயங்களும் இருக்கின்றன. ஆனால் பலருக்கு என்ன ஏற்படுகிறது என்பது சம்பந்தமாகவும், சாதாரண மனிதனின் கண்ணோட்டத்திலிருந்து எது பரிசீலிக்கப்படவில்லை என்பது சம்பந்தமாகவும் நான் சில பொதுவான கருத்துக்களைக் கூறுவதற்கு விரும்புகிறேன்.

கிராமப்புறப் பகுதிகளில் மக்கள் எழுத்தறிவில்லாதவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் ஏழையாக இருக்கிறார்கள். சட்டநுணுக்கங்கள் அவர்களுக்குத் தெரியாது. விவாகரத்து பிரச்சினையைப் பற்றி மக்களின் 90 சதவீதத்தினருக்காகத் தாம் பேசுவதாக டாக்டர் அம்பேத்கர் கூறியபோது, அவர் பேசுவது உண்மையைத் தவிர வேறொன்றும் அல்ல என்பதை நான் அறிவேன். இந்தத் தொண்ணூறு சதவிகிதம் சம்பந்தமாக - இன்று விவாகரத்து எவ்வாறு ஏற்படுகிறது? அவர்கள் மனு எழுதும் ஒருவரிடம் சென்று தங்களை விடுவித்துக் கொள்ளும் ஒரு கடிதத்தைப் பெறுகின்றனர். மற்றொரு வழி என்னவெனில் அவர்கள் ஒன்றாகக் கூடி, பெண்ணுக்கு எதிராக ஒரு குற்றப்பத்திரிகையை வெளியிடுகின்றனர்.

மாண்பமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: கூடியிருப்பவர்களுக்கு நிறைய மதுபானம் வழங்குவார்கள்!

பண்டிட் தாகர்தாஸ் பர்கவா: அது அவ்வாறிருக்கலாம், ஆனால் அது சடங்கின் ஒரு பாகமல்ல, ஐயா, தற்போதைய சட்டமென்ன? நமது தலைவர்கள் உங்களுக்கு என்ன செய்திருக்கிறார்கள்? நான் ஏழை மக்களின் ஒரு பிரதிநிதி. நானும் அவர்களில் ஒருவன். ஆனால் டாக்டர் அம்பேத்கர், தானும் அவர்களில் ஒருவர் என்று தன்னுடைய விரலால் சுட்டிக்காட்டினால், நான் அதை ஒத்துக்கொள்ளாவிட்டால், அவர் என்னை மன்னிப்பீராக! டாக்டர் அம்பேத்கர் இங்கே ஒரு சுவர்க்கத்தில் வாழ்கிறார்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : பல ஆண்டுகள் நான் அபிவிருத்தி அறக்கட்டளைக் குடிசைகளில் வசித்துள்ளேன். அவர்கள் வாடகையாக மூன்று ரூபாய் விதித்திருந்தனர்.

பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா : உங்களுடைய காலின் கீழ் போட்டு அவர்களை நீங்கள் மிதித்து விடலாம். உங்களுடைய கட்டைவிரலின் கீழ் அவர்களை நீங்கள் நசுக்கிவிடலாம். ஆனால் ஐயா, நாளொன்றுக்கு ரூ. 1, அல்லது ரூ. 1.50 பெறும் எந்த ஏழை கிராமவாசியும் ஒரு வழக்குரைஞரின் உதவியில்லாமல் ஒரு மாவட்ட நீதிபதி

யிடம் போக முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? டாக்டர் அம்பேத்கர் ஒரு வழக்குரைஞர். இந்த உலகம் என்னைப்போன்ற வழக்கறிஞர்கள் நிறைந்ததாக இருக்கலாம் - வேறு யாரும் இருக்க வேண்டியதில்லை - என்று அவர் விரும்புகிறார். இந்த மக்களுக்கு எல்லாம் அப்பொழுது என்ன ஏற்படும்? ஒரு திருமணத்தைக் கலைக் கவோ, அல்லது விவாகரத்து பெறவோ அவர்கள் ஒரு மாவட்ட நீதிபதியிடம் போவார்களா? (மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் : ''அசாத்தியம்''). இது போதுமானதல்ல. அவர் ஓர் உத்தரவை (தீர்ப்பைப்) பெற்றாலும்கூட, அது ஓர் உயர்நீதிமன்றத்தினால் ஊர்ஜிதம் செய்யப்பட வேண்டும். இது பஞ்சாபைப் பொறுத்தமட் டிலும், சிம்லாவிலுள்ள உயர்நீதிமன்றத்திற்குப் போகவேண்டும். இப்பொழுது இந்த நடைமுறை மக்களுக்குத் தெரியாது. அந்த மக்கள் மீது இது ஒரு மாபெரும் கொடுமையாகும். பம்பாயில் 'மரைன் டிரைவில்' வசிக்கும் அல்லது கல்கத்தாவிலும், டில்லியிலும் மாளிகை களில் வாழ்பவர்களுக்காக நீங்கள் சட்டமியற்றுகிறீர்கள். உங்க ளுடைய இதயத்தில் ஒரு மென்மையான இடத்தில் நீங்கள் வைத்துள்ள அந்த ஏழை மக்களுக்காக அல்ல.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** விவாகரத்தை சிரமமாக்கு வதற்கு அவர் விரும்புகிறார். நீங்கள் அதை எளிதாக்குவதற்கு விரும்பு கிறீர்களா?

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** அதை அவர்கள் சிரமமான தாக்குவதற்கு விரும்புகிறார்கள் என்பது மற்றொரு பதிலாகும். விவாக ரத்தை எளிதாக்குவதற்கு நான் விரும்பவில்லை. திட்டவட்டமாக இல்லை. ஒரே ஒரு நிபந்தனை பேரில் மட்டுமே நான் விவாகரத் துக்கு ஆதரவு தெரிவிக்கிறேன். விவாகரத்து ஏற்படக்கூடிய நிலைமை கள் உருவாவதைத் தடுக்கக் கூடிய வகையில் நீங்கள் சட்டங்களை இயற்ற வேண்டும். கற்பும், குடும்ப வாழ்க்கையின் தொடர்ச்சியும் நமது பண்பாட்டின் அச்சாணியாகும். ஆனால் விவாகரத்துக்கு நான் உடன்படுகிறேனென்றால் அதற்குக் காரணம் கணவனால் கைவிடப் பட்டு மிகுந்த தொல்லைப்படும் பல பெண்களை நான் பார்க்கிறேன். அதன் காரணமாகத்தான், விவாகரத்துக்கு நான் ஒத்துக்கொள்கிறேன். முற்றிலும் எழுத்தறிவில்லாத ஓர் ஏழை மனிதன் எவ்வாறு ஒரு வழக் குரைஞரை ஏற்பாடு செய்து கொண்டு ஒரு மாவட்ட நீதிமன்றத்திற்கு அல்லது உயர்நீதிமன்றத்திற்குச் செல்ல முடியும்? இதை ஏற்றுக் கொள்வது சாத்தியமேயில்லை. 1869ம் வருடத்தய இந்தப் பழைய

சட்டம், பஞ்சாபின் அல்லது இந்தியாவின் வேறு எந்தப் பகுதியின் ஏழைமக்களுக்காக இயற்றப்படவில்லை. அப்போதைய ஆட்சியாளர்களைப்போன்ற அதே சமயத்தினரான கிறிஸ்தவர்களுக்காக இது சட்டமாக்கப்பட்டது. அவர்களுக்கும் இந்த மக்களுக்கும் இடையில் நிறைய வேறுபாடு உள்ளது மசோதாவின் 38லிருந்து 50 வரையிலான ஷரத்துக்களை நீங்கள் பரிசீலனை செய்தால், மிகவும் சிக்கலான மற்றும் இடர்மிக்க நடைமுறை வகுத்தளிக்கப்பட்டுள்ளது. அதைக்கடைப்பிடிப்பது மிகவும் சிரமானது என்ற முடிவிற்கு நீங்கள் வருவீர்கள். நீங்கள் ஆழமாக சிந்தித்தால், அந்த ஷரத்துக்களை நிறைவேற்றினால், இந்து சமுதாயம் முழுமையும் உங்களுக்கு எதிராகக் கலகக்கொடி தூக்குவதை நீங்கள் காண்பீர்கள். உங்களுடைய சட்டத்தின்படி, ஒரு நபர் தனது அத்தையின் (தகப்பனாரின் சகோதரி) மகளைத் திருமணம் செய்துகொண்டால், அந்தத் திருமணம் நல்ல திருமணமாகக் கருதப்படும்; ஆனால், அவர் தனது தாய்மாமனின் மகளைத் திருமணம் செய்தகொண்டால், (பம்பாயின் சில பகுதிகளில் இது நடைமுறையில் உள்ளது என்று நான் அறிகிறேன்). (மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்: ''சென்னையிலும்'') ஆனால் நம்மைப் பொறுத்தமட்டிலும், இது மிகவும் முறை தவறிய உடல்உறவு சார்ந்த குற்றமாகக் கருதப்படுகிறது. இரண்டுக்கும் இடையில் பெரிய வேறுபாடு இருக்கிறது. (திரு. மகாவீர்தியாகி : ''அந்த நபர் கொல்லப்பட்டுவிடக்கூடும்''). திரு. தியாகி ஒன்றும் தவறாகக் கூறிவிடவில்லை. கிழக்கு பஞ்சாபின் அனைத்து கிராமங்களிலும் இது உண்மையிலேயே நடைபெறுகிறது. நான் மிகவும் உணர்ச்சிவசப்பட்டுப் பேசுகிறேன். ஏனெனில் இதற்குக் காரணம், நான் அழுத்தமாகப் பேசுவதற்கு விரும்புகிறேன் என்பதினால் அல்ல; மாறாக, இதை உண்மை என்று நான் கருதுகிறேன். இது செய்யப் படுவதற்கு நீங்கள் அனுமதித்தால், அந்த நபர் கொல்லப்பட வேண்டும், யாரும் அவருடன் தொடர்புகொள்ளமாட்டார். (திரு. தாஜாமுல் உசேன்: ''ஏதாவது கட்டாயம் இருக்கிறதா?'') ஒரு நபர் தனது சகோதரியையோ அல்லது தாயாரையோ மணந்தால், அதில் ஏதாவது கட்டாயம் இருக்கிறதா? இது, ஒரு உதவும் மசோதாவா? இது சமுதாயத்தின் மிகவும் ஜீவாதாரமான அம்சங்களுக்குள் செல்கிறது. இது சகிக்கத்தக்கதல்ல. சில மக்கள் சம்பந்தமாக இந்தப் பழக்கவழக்கம் இருக்கிறது என்ற காரணத்தினால், இந்த நிலைமையுடன் ஒத்துப் போவது என்பது நமக்கு சாத்தியமற்ற விஷயமாகும். அந்த மக்கள் பாதுகாக்கப்படக்கூடாது என்று நான் சொல்லவில்லை. அவர்களுக்குத் தனியாக ஏற்பாடு செய்யலாம்.

*திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :* திட்டவட்டமாக அதற்கு வகைசெய்யப்பட்டிருக்கிறது. ஷரத்து 7(5)ஐப் பார்த்தால் அது தெரியும். தரப்புகள் ஒருவருக்கொருவர் பகைமை பாராட்டிக் கொண்டிருக்கக் கூடாது.

*பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :* ஒரு நபர், தனது அத்தையின் மகளைத் திருமணம் செய்து கொள்ள முடியுமா என்று நான் பணி வுடன் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். நான் விதிகளைப் பார்த்துள் ளேன். இந்த விஷயங்களில், சட்டம் மாற்றப்பட்டுள்ளது என்பதை உங்களுடைய கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்; நமது நிலைமைகளுக்குப் பொருந்துகின்ற வகையில் சட்டம் மாற்றப்பட்டா லொழிய, இந்த மசோதாவை ஆதரிப்பது எங்களுக்கு சிரமமான விஷயமாகும். அது செய்யப்பட முடியும். பொறுக்குக் குழுவில் திருத்தங்களைப் பிரேரேபிக்கலாம். மசோதாவின் குரல்வளையை நெரிக்கவோ அல்லது அது ஒழித்துக் கட்டப்படவோ நான் விரும்ப வில்லை.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த அவையில் ஒரு திருத்தத்தின் வாயிலாகவும் அதைச் செய்யலாம்.

*மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:* நீங்கள் அதை ஏற்றுக் கொள் வீர்கள் என்று நான் நம்புகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* எந்த நியாயமான திருத்தத்தையும் ஏற்றுக் கொள்வதற்கு நான் தயாராயிருக்கிறேன்.

*பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :* நான் மிகவும் மகிழ்ச்சியடை கிறேன். இந்த அளவிற்கு இந்த மசோதாவை ஆதரிப்பதற்கு நான் உடன்படுகிறேன்.

*திரு. தாஜாமுல் உசேன் :* மதிப்பிற்குரிய உறுப்பினர், இன்றே முடித்துக் கொள்வதற்கு எண்ணியுள்ளாரா?

*திரு. துணை சபாநாயகர் :* இந்த மசோதாவால் பாதிக்கப்படும் மற்ற நபர்களைக் காட்டிலும், மதிப்பிற்குரிய உறுப்பினர் இதில் அக்கறையுள்ளவராகத் தோன்றுகிறது. நான் இதை கவனித்து வந்திருக்கிறேன். மதிப்புக்குரிய உறுப்பினர் எப்பொழுது முடிப்பார் என்று நான் அவரைக் கேட்க முடியாது. கூறியதையே மீண்டும்

கூறாமல், ஒரு நியாயமான நேரத்தை எடுத்துக்கொள்வது அவரைப் பொறுத்த விஷயமாகும்.

***பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா :*** தேவைக்கு அதிகமாக ஒரு நிமிஷத்தையும் கூட எடுத்துக் கொள்வது என்னுடைய நோக்கமல்ல. நான் சொன்னதையே திருப்பிக் கூறினால், உடனே நிறுத்திக் கொள்ளும் படி எனக்கு உத்தரவிடலாம். முப்பது கோடி மக்களின் வாழ்க்கைகளை பாதிக்கின்ற ஒரு மசோதா விவாதத்தில் இருக்கும் போது பல நாட்கள் அதைப் பரிசீலிப்பது அதிகமானதல்ல.

மாலை 3 மணி

பொறுக்குக் குழுவினால் வகுத்துத் தரப்பட்டுள்ள ஷரத்துக்களுக்கும் இது சம்பந்தமாக மிகவும் கேந்திரமான விஷயங்களுக்கும் இப்பொழுது நான் வருகிறேன். வாரிசுரிமை மற்றும் பராமரிப்பு சம்பந்தமாக இருந்தாலும் சரி, அவை சம்பந்தமாக நமது கண்ணோட்டம் எதுவாக இருக்க வேண்டும். இது குறித்து நான் ஆழமாக உணர்கிறேன். நான் ஏற்கனவே கூறியது போன்று, இந்தியப் பெண்களுக்கு அசையா சொத்துக்கள் மற்றும் அசையும் சொத்துக்களின் மீது உரிமைகள் வழங்கப்படுவதை நான் ஆதரிக்கிறேன், அப்பொழுதுதான் அவர்கள் பொருளாதார ரீதியில் சுதந்திரமாய் இருக்க முடியும். ஆனால், அதே சமயத்தில், தகப்பனாரின் சொத்தில் மகளுக்கு ஒரு பங்கு கொடுப்பதை எதிர்க்கிறேன். ஒரு திருமணமாகாத மகளைப் பொறுத்தமட்டிலும் அதை நான் விரும்புகிறேன். அவள் திருமணம் செய்து கொள்ளாத வரையிலும், மகனைப் போன்றே மகளுக்கும் சொத்தில் முழுப் பங்கு உண்டு.

ஆனால் அவள் திருமணம் செய்து கொண்டவுடனே நிலைமை வேறாகிவிடுகிறது. நமது சட்டத்தில் ஒரு வெற்றிடம் இருப்பதைப் பார்க்கிறேன். ஆனால், ஒரு பெண் ஓர் ஆணைத் திருமணம் செய்து கொள்ளும்போது, அவர்கள் காதலால் ஒன்றிணையும்போது, சொத்திலும் அவர்கள் ஒன்றிணையலாம் என்று சட்டமாக்குவதன்மூலம் அந்த வெற்றிடத்தை இட்டு நிரப்பலாம். இறுதியாக அந்த ஆணும் பெண்ணும் கூட்டு உடைமையாளர்களாகிறார்கள். பின்னர் கணவனின் தந்தை மரணமடையும்போது, அவர்களிருவரும் சம அளவில் அந்த சொத்தைப் பெறலாம். மேலும், சொத்துக்கள் மாற்றி ஒப்படைக்கப் படுவது ஒரு குறிப்பிட்ட வழியில் நடைபெறலாம். அதன்படி ஒரு வேளை, சம பங்குக்கான கோரிக்கை முழுமையாகத் திருப்தி செய்யப்படாமல் போகக்கூடும். ஆனால் இது போன்ற ஒரு விஷயத்தில்

ஒவ்வொரு பிரச்சினையையும் சீர்தூக்கிப் பார்ப்பதில், நமது சகோதரிகளுக்கு சமநிலையான சரியான ஆலோசனை கிடைப்பதாக கருத முடியாது. அவர்கள் கையாளும் அளவுகோல் சரியானதல்ல.

பராமரிப்பு சம்பந்தமாக அவர்களுக்கு உள்ள சட்டங்களுக்கும் ஷரத்துகளுக்கும் சமமானவற்றை வேறு எங்கும் காணமுடியாது என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஐயா, வாரிசுரிமைப் பிரச்சினையையும், பராமரிப்புப் (ஜீவனாம்சம்) பிரச்சினையையும் ஒன்றாகக் கருத வேண்டும். அவற்றை ஒன்றாகக் கருதாவிட்டால், அந்த ஷரத்துகளின் முழுத் தன்மைகளையும் எய்த முடியாது. பராமரிப்பைப் பொறுத்தமட்டிலும் ஒரு கணவரின் அல்லது ஓர் ஆணின் கடமைகள், பெண்களுக்கு வரையறுக்கப்பட்ட கடமைகளினின்றும் மிகவும் வேறானவையாகும். பாரமரிப்பு சம்பந்தமான அத்தியாயத்தின்படி, கணவனால் பராமரிக்கப்படுவதற்கு மனைவிக்கு உரிமையுண்டு. ஆனால் மனைவியால் பராமரிக்கப்படுவதற்கான உரிமை கணவனுக்கு உண்டா? உரிமைகள் சமமானவை அல்ல என்று மட்டுமே நான் கூறுகிறேன். உரிமைகள் சமமானதாக இருக்க முடியாது என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். அவை பன்முகப்பட்டவை. பெண்களும் ஆண்களும் வாழ்க்கையில் வெவ்வேறு பணிகளைச் செய்யவேண்டியுள்ளது. இந்த அடிப்படையில், பெண் தனது முழு உரிமையைப் பெறும்படியாகச் செய்ய வேண்டும்; முற்றிலும் சம உரிமை அல்ல.

மீண்டும், ஐயா, வயது வராத ஒரு மகனைப் பராமரிப்பதற்குத் தந்தைக்கு உரிமை உண்டு; ஆனால் மகளைப் பொறுத்த மட்டிலும், ஐயா, ஒரு மகளின் உரிமைகள் என்ன? மகள் விதவையானால், அல்லது திருமணம் செய்துகொண்டுவிட்டால், அல்லது திருமணம் செய்துகொள்ளாமலிருந்தால், ஒவ்வொரு நிலையிலும், மகளின் வயது என்னவாக இருந்தபோதிலும், அவளைப் பராமரிக்க வேண்டியது முற்றிலும் கடப்பாடு ஆகும். உண்மையில் பராமரிப்புக்கான விதிகளைப் பொறுத்தமட்டிலும் ஒவ்வொரு வழியிலும் பெண்கள் பாதுகாக்கப்பட வேண்டுமென்றும், அவர்களுக்கு எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப்பட வேண்டுமென்றும் பிரேரணையை முன் வைத்ததற்காக நான் டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டுவதற்கு நிச்சயமாக விரும்புகிறேன். ஆனால் இந்தப் பயனுள்ள ஷரத்து இருக்கும்போது, தந்தையின் சொத்தில் பெண்களும் ஒரு பங்கைப் பெறவேண்டும் என்ற மற்றைய விஷயமும் இருக்கிறது.

பழைய காலத்தில், ஒரே சமயத்தில் சொத்து பிரித்துக் கொடுக்கப் பட்டதென்றும், மகளுக்கு நான்கில் ஒரு பங்கு கிடைத்ததென்றும் நாரதர் கூறியுள்ளார். அந்தக் காலத்தில் சமூக வாழ்வின் அடிப்படை என்ன என்பதும், இன்றுள்ளதைப் போன்ற குடும்ப அமைப்பு இருந்ததா என்பதும் எனக்குத் தெரியாது. இந்து சட்டத்தின் சில வாசகங்களில் இந்த அம்சம் பற்றிக் கூறப்பட்டுள்ளதா என்பதும் எனக்குத் தெரியாது. அது ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு நிலைபாடு அல்ல. ஏககாலத்தில் ஆண், பெண் வாரிசுரிமை என்பது திருமண மாகாத பெண்ணை மட்டுமே குறிப்பதாகும் என்று சிலர் கூறுகின் றனர். ஆனால் அது ஒருபுறமிருக்க, இந்தக் காலத்தில், இது சரியான தென்று கருதப்பட்டால், முக்கிய கேள்வி என்னவெனில், இன்று, ஆயிரமாண்டுகளுக்கும், அதற்கு மேலாகவும், தந்தைவழி தத்து வத்தைக் கடைப்பிடித்துக்கொண்டுவந்துள்ள நிலையில், மகளுக்கும் ஒரு பங்கு கொடுக்கப்படவேண்டும் என்ற நிலையை நாம் ஏற்றுக் கொள்வது நியாயமானதா? குடும்பத்தில் என்ன ஏற்படும்? தந்தை உயிருடன் இருக்கிறவரையில் புதல்வர்கள் வியாபாரத்திலோ, அல்லது வயலிலோ, அவருடன் சேர்ந்து பணியாற்றுகின்றனர். அவர்கள் ஒன்றுபட்டு செல்வத்தைத் தோற்றுவிக்கின்றனர். முதிய வயதில் தந்தை இறந்து போகும்போது, தகப்பனார் பெயரிலுள்ள அந்த சொத்து, மகன்கள் மற்றும் தகப்பானரின் கூட்டு முயற்சிகளின் பயனாக உருவாக்கப்பட்டதாகும். இப்பொழுது, அத்தகைய சொத்தில், அதை உருவாக்கியதில், மகளுக்குப் பங்கில்லை என்ற நிலையில் - ஒருவேளை அவள் வேறு இடத்தில் குழந்தைகளைப் பெற்றெடுத்துக் கொண்டிருந் திருப்பாள் - மகளும் ஒரு பங்கைப் பெறவேண்டும் என்று கூறுவது நியாயமல்ல.

நான் கூறுவதைத்தவறாகப் புரிந்துகொள்ள வேண்டாம் - மகளுக்கு முழு உரிமைகள் கொடுக்கப்படக்கூடாது என்பது என் நோக்கமல்ல. அவற்றை அவள் அடையட்டும். ஆனால், மிகவும் அடிப்படையான தன்மையை உடைய இந்தப் புதுமை - நம் நாட்டில் ஒவ்வொரு இல்லத்தையும் பாதிக்கக் கூடியதை நாம் செய்ய வேண்டுமா? என்னுடைய மக்களை நான் நன்கு அறிவேன். ஒரு ஜாட் இனத்தைச் சேர்ந்த சௌதுரி ரணவீர சிங், அவருடைய மருமகன், குடும்பத்தில் எவ்வாறு வரவேற்கப்படுவார் என்பதை அறிவார். நான் நாற்பதாண்டுகளாக வழக்குரைஞராக இருந்து வருகிறேன். சுயமாக சம்பாதித்த சொத்தைப் பொறுத்தமட்டிலும், மகன்கள் இல்லாத நிலையில், அந்த சொத்தில் மகள் ஒரு பங்கைப் பெறுகிறாள் என்பதை நானறிவேன். இந்தப் புதுமை கிராமங்களில் புகுத்தப்பட்டால், சொத்து

சம்பந்தமாக, முடிவற்ற தகராறு இருந்துவரும். ஒவ்வொரு இல்லத்திலும், மருமகனும், தந்தையும், மருமகனின் தாயாரும் அத்தையின் மகனுடனும், அவருடைய குடும்பத்துடனும் வசிப்பதற்கு அனுமதிக்கப்பட்டால், ஓர் அசாத்தியமான நிலைமையை அது உருவாக்கும். இது ஏற்படுவது நாம் நம்முடைய புதல்விகளை நேசிப்பதில்லை என்பதனால் அல்ல. அவர்களுக்காக நாம் எல்லாம் செய்கிறோம். எங்களுடைய பகுதியில் ஒரு புதல்வி, தனது பெற்றோர்களைக் காணப் பிறந்தகத்திற்கு வருகிறாள் என்றால், மகளின் பேரில் உள்ள அன்பின் காரணமாக, எப்போதும் அவளுக்கு ஏதாவது வழங்கப்படும்.

**திருமதி ரேணுகா ரே :** இந்த நாட்டில் மகள்களே பிறக்கக் கூடாது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** இதற்கு டாக்டர் அம்பேத்கர் என்ன கூறுவார் என்பதை நான் அறிவேன். 'மகனுக்கு பதிலாக மகள்கள் தான் பிறக்க வேண்டும்.' என்று அவர் கூறுவார். பல ராஜபுத்ரர்களிடையில் - மகள்கள் - பெண் குழந்தைகள் கொல்லப்பட்டதை நாம் அறிய மாட்டோமா? அது ஏற்படுவதை நான் விரும்பவில்லை. அது அநாவசியமான, தவறான காரியமாகும். நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நாம் அத்தகைய சமுதாயத்தில் வாழ்ந்து வந்துள்ளோம் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

மகனைக் குடும்பத்தின் அச்சாணியாக நாம் கருதி வந்துள்ளோம். மகன் இல்லாமல், குடும்பத்தில் மகள் ஒரு பொருட்டாகக் கருதப்படுவதில்லை. மகன்தான், ஒரு மனிதனை நரகத்திற்குச் செல்லாமல் காப்பாற்றுகிறான். நாம் முஸ்லீம்களைப் போலிருந்தால் நிச்சயமாக அதை ஏற்றுக்கொள்வோம். ஆனால் அது மிகவும் சிரமமானதாகும். திருமதி ரேணுகா ரே குறுக்கிட்டதானது, என்னுடைய வாதத்திற்கு வலு சேர்க்கவே செய்கிறது - அதாவது மக்களின் கண்ணோட்டங்களையும் அவர்களது மனப்பாங்கையும் பொறுத்த மட்டிலும், இத்தகைய ஒரு புத்தமைவானது அழிவையே ஏற்படுத்தும். இது என்னுடைய தாழ்மையான கருத்தாகும். இதில் ரேணுகா ரே, என்னை ஆதரிக்கவே செய்கிறார்.

**திரு. கிருஷ்ணசாமி பாரதி:** அவர் நாட்டின் எந்தப் பகுதியிலிருந்து வருகிறார் என்பது எனக்குத் தெரியாது ஆனால் பஞ்சாபில் உள்ள வழக்கம் அவருக்குத் தெரியாது என்று தோன்றுகிறது. வேறு

எந்த மாகாணத்திலும் நிலைமைகள் இது போன்று இல்லை, எதனால் இந்த நிலைமைகள் ஏற்பட்டுள்ளன? ஆயிரக்கணக்கான ஆண்டு களாக, குடும்பம் பற்றிய நமது கொள்கையும், நமது தத்துவமும், நமது கண்ணோட்டமும் திட்டவட்டமாக பஞ்சாபில் உள்ளதைப் போன்று இருந்துவந்துள்ளதே இதற்குக் காரணமாகும். மருமகன்கள் முற்றும் மேசாமானவர்கள் அல்ல மகன்களும் அதேபோன்று மோச மானவர்கள் அல்ல.

**திரு. மஹாவீர் தியாகி** *(உ.பி.: பொது)* : மைத்துனர்தான் முக்கிய மானவர்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ஒரு பழமொழி பின்வருமாறு இருக்கிறது:

*(உருது பழமொழியின் மொழிபெயர்ப்பு).*

*(பூசலின் காரணங்கள் பின்வருமாறு:*

*1) கிராமத்தின் கழிவுகள் கொட்டப்படுவதற்குள்ள இடத்தில் வீடுகட்டுதல்; (2) கிராமத்திற்குப் பொதுவாக உள்ள இடத்திற்கு அருகில் ஒரு வயல்; மற்றும் (3) கிராமத்தில் மருமகன் வசிப்பிடம்)*

மற்றொரு பழமொழி :

*(உருது பழமொழியின் மொழிபெயர்ப்பு)*

*(எமன், மருமகன், தாய்வழி மருமகன், சௌக்கிதார் மற்றும் பொற்கொல்லர் ஆகியவர்களை நம்ப முடியாது. நீங்கள் விரும்பினால் முயன்று பாருங்கள்).*

இதுதான் உண்மை. எந்த நபரையாவது பஞ்சாபுக்குப் போகச் சொல்ல, அங்கு சீக்கியர்களையும், ஜாட்களையும் கண்டறியச் சொல் லுங்கள்.

இந்த மசோதாவைப் பொறுத்தமட்டிலும், இது அறிமுகம் செய்து வைக்கப்பட்டபோது, அதனுடைய நோக்கங்கள் மற்றும் காரணங்கள் பகுதியில் கீழ்வரும் வாசகம் இருந்தது எனக்கு நினை விருக்கிறது:

''இந்த மசோதா, இந்து சட்டத்தின் எல்லாப் பிரிவுகளிலும், எல்லா மாகாணங்களுக்கும், எல்லாப் பகுதிகளுக்கும் ஒரு சீரான தன்மையை வழங்குவதை நோக்கமாகக் கொண்டுள்ளது. இந்து சட்டத்தின் பழைய சிக்கலான, இடரான, மற்றும் வெவ்வேறான ஷரத்துகளும் எளிதாக்கப்பட்டிருக்கின்றன. இந்த மசோதாவின் பெரும்பாலான ஷரத்துகள் அனுசரித்துப் போகிற அல்லது உதவுகின்ற தன்மையுடையவை; சமுதாயத்தின் வைதீக மான பகுதியின்மீது எத்தகைய கட்டாயத்தையும் அல்லது கடப்பாட்டையும் திணிப்பதில்லை. அதனுடைய ஒரே பயன், இந்துக்களின் ஆண்களும் பெண்களும் அவர்கள் விரும்பும், வாழ்க்கையை வாழ்வதற்கான சுதந்திரம் பழைய வழிகளைக் கடைப்பிடிக்க விரும்புபவர்களின் இதுபோன்ற சுதந்திரத்திற்கு எவ்வகையிலும் பாதிப்பு ஏற்படாமல் வழங்கப்படும்.''

ஐயா இப்பொழுது, இந்த உணர்வில்தான் டாக்டர் அம்பேத்கர் நேற்றுப் பேசினார். இரு பகுதிகளும் - அறிவொளி பெற்றவர்களையும், அறிவொளி பெறாதவர்களையும் அனுசரித்துப் போகவேண்டும் என்று நாம் விரும்புகிறோம். அவரிடம் நான் தாழ்மையாக சமர்ப்பித்துக்கொள்வது என்னவென்றால், அதைப் பொறுத்த மட்டிலும் அவர் கூறுவது சரியானதே; ஆனால் சமூக வாழ்க்கைப் பாதையில் அறிவொளி பெற்றவர்களாகவோ, அல்லது அறிவொளி பெறாதவர்களாகவோ இருந்தாலும் சரி - அத்தகைய எளிய மக்களுக்கு இந்த மசோதாவில் நீங்கள் சரியான ஷரத்துகளை வழங்கவில்லை. 'இந்த பூமியில் அவர்களும் வாழ்வதற்கு தயவுசெய்து அனுமதியுங்கள்' என்று பணிவன்புடன் டாக்டர் அம்பேத்கரை வேண்டிக் கொள்கிறேன்.

ஐயா, தற்பொழுது, இந்த மசோதாவை சட்டப் புத்தகத்தில் ஏற்றுவதன் நோக்கமே, முற்போக்கானவற்றுக்கு இடமளிப்பதற்கு உதவும் சில அம்சங்கள் அதில் இருப்பதால்தான். மேலும், அது பழக்க வழக்கங்களை அங்கீகரிக்கிறது. நிலையாக இருந்துவரும் உரிமைகளும் சட்டத்தின் ஷரத்துகளும் ஈவிரக்கமற்ற முறையில் மாற்றப்பட வேண்டுமென்று ஒருபோதும் கருதப்படவில்லை. அவ்வாறு செய்தால், சமுதாயம் முழுவதிலும் அது பகை உணர்வை ஏற்படுத்திவிடும். நமது அனைத்துப் பழக்கவழக்கங்களும் நமது அனைத்துப் பேணி வளர்க்கப்பட்ட அமைப்புகளும் இந்த மசோதாவினால் நசுக்கப் பட்டு வருகின்றன.

பிற ஷரத்துக்களைப் பற்றிப் பேசும்பொழுது, வாரிசுரிமையைப் பொறுத்தமட்டிலும், நிலைமை இன்னும் கூடுதல் வியப்பேற் படுத்தக் கூடியதாக இருக்கும்.

ஐயா, இப்பொழுது, மிதாக்ஷராவைப் பொறுத்தமட்டிலும், இரத்த உறவுதான் அடிப்படை என்பதை நாம் அறிவோம். தயாபாக்ய சட்டத்தைப் பொறுத்தமட்டிலும், மத சம்பிரதாயம் தான் வாரிசுரிமைக்கு அடிப்படையாகும். வாரிசுரிமைக்கு மற்றொரு அடிப்படையை டாக்டர் அம்பேத்கர், தயை கூர்ந்து நமக்கு அளித் திருக்கிறார். அவர் செய்வது தவறென்று கூறமாட்டேன். அவர் சரியான காரியத்தையே செய்கிறார். இயற்கையான அன்பையும் நேசத்தையும் எடைபோடும் அளவுமானி என்ன என்று எனக்குத் தெரியவில்லை, அன்பையும் நேசத்தையும் கூட ஒருவேளை புரிந்து கொள்ள முடியும். இயற்கையான அன்பு என்ன என்பது எனக்குத் தெரியாது. எங்களுடைய (நம்முடைய) கருத்தமைப்புகளின்படி, சகோதரர் நமக்கு மிகவும் நேசத்திற்குரியவர் நம்முடைய புனித மான ராமாயணத்தில் லட்சுமணனிடம் சகோதரத்துவம் ஆழமாகப் பொதிந்துள்ளது. 'தந்தையுடன் பிறந்த சகோதரர்கள், பெற்றோர் களைப் போன்றே நமக்கு மிகவும் நேசத்திற்குரியவர்கள். ஆனால் இந்து சட்டத்தொகுப்பில் சகோதரர்கள் மற்றும் தந்தையின் சகோ தரர்களின் நிலை என்ன? அந்த நிலை எவ்வாறு பாதிக்கப்பட்டுள் ளது, அவர்கள் எப்படி ஒதுக்கப்பட்டிருக்கிறார்கள், வாரிசுகளின் பட்டியலில் அவர்கள் எந்த நிலையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை உங்களுக்கு நான் சொல்லுவதெனில், நீங்கள் வியப்பில் ஆழ்ந்து போவீர்கள். மரபுரிமை சம்பந்தமாக ஓர் இந்துவுக்குப் பொருந்தச் செய்யப்பட்டுள்ள ஏழாவது அட்டவணையை நீங்கள் தயவுசெய்து பார்த்தால், முதல் ஷரத்தில் ஏழுவகைப்பட்ட மக்கள் அடங்கியிருப்பதை நீங்கள் காண்பீர்கள்.

ஐயா, இயற்கையான அன்பும் நேசமும் என்ற இந்தப் புதிய கோட்பாடு, இந்த ஷரத்தினால் எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். முதலாவதாக, மகன்; விதவைத் தாய்; மகள்; இதை நான் நன்கு புரிந்துகொள்ள முடியும். பின்னர், 'முன்பே இறந்துபோன மகளின் மகன்'; இதைக்கூட நான் அனுமதிக்கிறேன். பின்பு வருவது, 'முன்பே இறந்து போன மகனின் மனைவி (விதவை). ஐயா, இயல்பான அன்பு மற்றும் நேசம் சம்பந்தப்பட்ட சட்டத்தின்கீழ் மகள், மகன் அல்லது தந்தையின் சகோதரருக்கு பதிலாக அவருக்கு (விதவைக்கு) முன்னுரிமை கொடுக்கப்படுகிறது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை. இயல்பான அன்பு என்ற பிரச்சினையைப் பொறுத்த மட்டிலும், முன்பே இறந்து போன மகனின் விதவை. அல்லது

முன்பே இறந்துபோன ஒரு மகனின், முன்பே இறந்துபோன மகளின் மகன் ஏற்றுக்கொள்ளப்பட முடியும் என்று நான் கருதவில்லை. அவர்களுக்கு வகை செய்தால் இந்த மசோதா ஒரு தவறான கருத்து நிலையை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பது என்னுடைய அபிப்பிராயம். பெண்களுக்கு வேறு எங்கும் வகை செய்யப்படா விட்டால், அவர்களுக்கு வகை செய்வதற்குத்தான் இந்த மசோதா என்றால், என்னால் புரிந்துகொள்ள முடியும். அவர்கள் விரும்பியது ஒரு விதவையை அல்ல, மாறாக, முன்பே இறந்துபோன ஒரு மகனின் மனைவி, அல்லது மகனின் மனைவி என்றால், நான் அதைப் புரிந்துகொள்ள முடியும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது சட்டத்தின் படியேயாகும். என்னுடைய மதிப்புக்குரிய நண்பர், 1937ம் வரு டத்திய பெண்கள் சொத்துரிமைச் சட்டத்தைப் படித்தால், இந்த நபர்கள் ஏககாலத்தில் அந்தப் பிரிவில் வைக்கப்பட்டுள்ளார்கள் என்பதை அவர் புரிந்து கொள்வார்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** டாக்டர் அம்பேத்கரின் நண்பர் இதை மிகவும் நன்றாகவே அறிவார். ஆனால் 1937ம் வருட சட்டத்தில் அந்த ஷரத்து சேர்க்கப்பட்டபோது, அதில் 'மகள்' சேர்க்கப் படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், நான் அவ்வாறுதான் கூறினேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** மகள் தகப்பனாருக்கும், மாமனாருக்கும் கூட வாரிசாக வருவதற்கு வகை செய்வதற்கு நீங்கள் இதை சேர்க்கவிரும்புகிறீர்கள். இது முற்றிலும் நியாயமற்றதாகும். ஒரு புதிய சட்டத்தொகுப்பை நீங்கள் உருவாக்கும்போது, இதற்கு நீங்கள் ஏன் வகை செய்யவில்லை என்பதை என்னால் அறிய முடியவில்லை. நீங்கள் உருவாக்கும் சட்டங்களில் எல்லா உரிமைக் கோரிக்கைகளும் திருப்திகரமாகப் பூர்த்தி செய்யப்பட்டிருக்க வேண்டும். 1937ம் வருட சட்டம் இருந்துவந்தபோது, இந்த ஷரத்து களை நீங்கள் எவ்வாறு உருவாக்கினீர்கள்? இந்தக் குழு இதைச் செய்தது நியாயமானதென்று நான் கருதவில்லை. ஒவ்வொரு உரிமைக் கோரிக்கையையும் திருப்தி செய்யும்வகையில் அவர்கள் ஒரு முழு சட்டத் தொகுப்பை வழங்கியிருக்க வேண்டும். அவ்வாறு இல்லாததை நீங்கள் நியாயப்படுத்த முடியாது. எனவே அந்த

சட்டத்தின் கீழ் நீங்கள் பாதுகாப்பைத் தேடிக்கொண்டீர்கள். ஐயா, அதுதான் நிலை.

மூல மசோதாவின் 2வது ஷரத்தைப் பார்க்கும்போது, 'தாய்' மேம்பட்ட வாரிசாகக் கருதப்பட்டார், ஏனெனில் 'தாய்' ஒரு தனி ரகமானவர், தாய் மட்டுமே வாரிசானார். இங்கு இயல்பான அன்பை நான் புரிந்து கொள்ள முடியும். இப்பொழுது தந்தையும் தாயுடன் சேர்த்துவைக்கப்பட்டுள்ளதால், அவர்கள் ஒன்றாக வருகிறார்கள். ஆனால் நீங்கள் மேற்கொண்டு முன் சென்றால், நான் வலியுறுத்துவதை நீங்கள் நன்கு புரிந்துகொள்வீர்கள். இரண்டாவது அம்சத்திற்கு வரும்போது, மகனின் மகளையும் மகளின் மகளையும் பார்க்கிறீர்கள். **மிதாக்ஷரா** சட்டத்தில் மகனின் மகளுக்கு சிறப்பிடம் உண்டு. **மிதாக்ஷரா**வின்படி, அவர் விருப்பமான வாரிசுகளில் ஒருவராவார். ஐயா, இப்பொழுது என்ன ஏற்படுகிறதெனில், மூலமசோதாவில், முதலாவது பிரிவில், மகளின் மகன் தாய்க்கும் தந்தைக்கும் முன்னதாக வைக்கப்பட்டார். இப்பொழுது, மகளின் மகன் அடிமட்டத்திற்குத் தள்ளப்பட்டு விட்டார். நீங்கள் மேற்கொண்டு முன் சென்றால், ஐயா, 4வது பிரிவில் சகோதரனும் சகோதரியும் வருகிறார்கள். ஐந்தாவது பிரிவில் சகோதரரனின் மகன், சகோதரியின் மகன், சகோதரரின் மகள் - எல்லோரும் வருகிறார்கள். சகோதரரின் மகன், சகோதரியின் மகனுக்கும் சகோதரியின் மகளுக்கும் சமமாக்கப்பட்டிருக்கிறார்கள் என்றுதான் கூறமுடியும். இந்த, சமத்துவம் பைத்தியக்காரத்தனமாக முன்னெடுத்துச் செல்லப்பட்டிருக்கிறது என்றுதான் கூறவேண்டும். நம்முடைய குடும்பங்களில் ஒரு சகோதரர் யார், சகோதரரின் மகன் யார் என்பதை நாம் அறிவோம். இது ஓர் அமைப்பின், அல்லது குடும்பம் என்ற நிறுவனத்தின் விளைவு ஆகும். இதை நாம் கடந்த 1000 ஆண்டுகளாகப் பார்த்துவருகிறோம். இந்தத் தீவிரமான மோதலில் இருந்து நாம் விலகிச் செல்ல முடியாது. ஒவ்வொரு நபரும் உங்களுக்கு எதிராகக் கலகத்தில் இறங்கச் செய்யும் வகையில் இந்த மசோதாவில் நீங்கள் ஷரத்துகளை ஏற்படுத்தியிருக்கிறீர்கள். ஏனெனில் இந்தப் புதுமைகளை நடைமுறையில் உத்தரவு போட்டு அமலுக்குக் கொண்டுவர முடியாது. இந்த மசோதாவின் ஷரத்துகளின்படி ஒவ்வொரு இந்துவும் - ஆணும் பெண்ணும், ஓர் உயில் எழுதுவதற்கு முழு உரிமை பெற்றவர்கள், வருங்காலத்தில் ஒவ்வொரு ஆணும் பெண்ணும் இந்த மரபுரிமையின் முழு எஜமானர்களாவர். நீங்கள் என்னுடைய கையில் பெண்களுக்கு பாதகமான ஓர் அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறீர்கள். அது பெண்களின் நலனுக்கு பாதகமான முறையில் உபயோகப்படுத்துவதை நான் விரும்பவில்லை.

பார்க்கப்போனால், ஒரு தந்தை, மரணமடையும்போது மகன்களின் அதிகாரத்தின்கீழ் இருப்பார்கள். மேலும், உயிலின் மூலம் தந்தை மகள்களுக்கு மரபுரிமை அளிக்காமலிருக்க மகன்கள் பார்த்துக் கொள் வார்கள். நான் இதைக் கூறும்போது, எனக்கு ஒரு மகள் இருக்கிறாள் என்பதையும், என்னுடைய மகன்களுக்கு நான் சொத்தில் பங்குக்கு வகை செய்யும்போதே மகளுக்கும் வகை செய்திருக்கிறேன் என்பதை யும் தெரிவித்துக் கொள்வதற்கு விரும்புகிறேன். என்னுடைய மகன் களுடன் நான் வசித்துவரும் வீட்டிலும், என்னுடைய மகன்களின் மனைவிமார்கள் வசித்துவரும் வீட்டிலும் மகளும் அவளுடைய கணவரும், அவளுடைய மாமனாரும், மாமியாரும், அவளுடைய மூத்த மைத்துனரும் வந்து, சில அறைகளில் தங்கிக்கொள்வதை நான் விரும்பவில்லை. அது ஒரு அசாத்தியமான நிலைமையாகும்.

*திரு. துணை சபாநாயகர் :* இந்த மசோதாவின் கீழ் மாமனாரும் மாமியாரும் பாதுகாக்கப்படுவதற்கு அதிக வாய்ப்பில்லை.

*பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :* அவர்கள் மருமகனுடன் சேர்ந்து வரமுடியும். இதுபோன்ற ஒரு விஷயம் நடைபெறுவதற்கு நிறைய வாய்ப்பு இருக்கிறது என்பதைக் காட்டுகிறேன். மகளின் வீட்டில் தண்ணீரைக் கூடத் தொடுவதற்கு விரும்பாத தகப்பனார் மகளினுடைய, மற்றும் அவளுடைய கணவனுடைய சொத்தைப் பெறுவார். அது குறித்து பின்னர் கூறுகிறேன்.

இந்த முறையில் பெண்கள் தமது உரிமைகளை இழக்கின்ற பெரும் அபாயம் இருக்கிறது என்று மட்டுமே கூறிக்கொள்ள விரும்பு கிறேன். தகப்பனார் மரபுரிமையாக வரும் மகளின் உரிமையைப் பறிக்கிறார். பிரிவு I-ன் படி அவள் வாரிசு அல்ல. அவள், மகனுடைய மனைவி என்ற வகையில் மாமனாரின் சொத்துக்கு வாரிசு ஆவ தில்லை; ஆனால், அவள் ஒரு விதவை என்ற வகையில் மட்டுமே வாரிசு ஆகிறார். அப்பொழுது அவளுடைய நிலை என்ன? என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவளுக்கு ஒரு பெரிய இழப்பு ஏற்படும். ஐயா, பெண்களுக்கு அவர்களுடைய முழு உரிமைகள் கிடைக்கவேண்டுமென்று விரும்புகிறேன். நான் முன்வைக்கும் கொள்கையை - அது குறித்து நான் அதிக சிந்தனை செலுத்தவில்லை - அதை அவை முழுமையின், மற்றும் டாக்டர் அம்பேத்கரின் ஆலோ சனைக்கு சமர்ப்பிக்கிறேன். இது மற்றவர்களின் நலன்களை எவ்வாறு பாதிக்கும் என்று எனக்குத் தெரியவில்லை - இதில் குறைபாடுகள்

இருக்கக்கூடும், அதைப் பற்றி நான் உத்தரவாதம் கூறமுடியாது - அதே சமயத்தில், தற்போதுள்ள ஏற்பாட்டை விட அது ஒரு மேம்பட்ட ஏற்பாடாக இருக்கும் என்று கருதுகிறேன். திருமணமாகாத மகள், மகனுடன் கூடவே, ஏக காலத்தில் சம அளவில் வாரிசாகிறாள் என்பதுதான் கோட்பாடு ஆகும். பெண், திருமணத்திற்குப் பின்னால், கணவனின் சொத்தில் கூட்டு உடைமையாளராகிறார், அவளுடைய சொத்தில் கணவன் கூட்டு உடைமையாளராவதைப் போன்றே அப்பொழுது இருவரும் கணவனின் குடும்பத்தில் வாரிசுகளாகின் றனர்.

ஐயா, அப்பொழுது, சகோதரனின் மகனின் நிலை என்னவாகும்? சகோதரியின் மகனுடைய நிலை என்னவாகும்? அவர்கள் இருவரும் ஒரே அந்தஸ்தில் உள்ளனர். சகோதரனின் மகன் ஒருவேளை, அதே வீட்டில், அல்லது அடுத்த வீட்டில் வசிப்பவராக இருந்து அன்றாடம் சேவை புரிந்து வருவார்; சகோதரியின் மகள் அலகாபாத்தில் அல்லது சென்னையில், அல்லது வேறு எங்காவது வசிப்பவராக இருக்கக்கூடும். அவர்கள் எவ்வாறு சம அந்தஸ்தில் உள்ளவர்களாக இருக்க முடியும்? பிற ஷரத்துகளைப் பற்றியும் கருத்துக் கூற வேண்டுமென்று அவை விரும்பினால், நான் முற்றிலும் தயாராக இருக்கிறேன். மாற்றங்களைப் பற்றியும், அவை எவ்வாறு நம்மை பாதிக்கின்றன என்பது பற்றியும் என்னிடம் முழுமையான குறிப்புகள் இருக்கின்றன. ஆனால் அவற்றைப் பற்றி பேச முற்பட்டால், இதர உறுப்பினர்கள் பேசுவதற்கான வாய்ப்பைப் பறிக்கும் முறையில் இந்த அவையின் நேரத்தை எடுத்துக் கொண்டு விடுவேன்.

**மதிப்புக்குரிய உறுப்பினர்கள் :** நீங்கள் தொடர்ந்து பேசலாம்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** பிரிவு (2)ல் இந்த ஷரத்து, இரத்த உறவு கண்ணோட்டத்திலிருந்தோ அல்லது மத சம்பிரதாய அடிப்படையிலிருந்தோ, அல்லது, இயல்பான நேசம் மற்றும் அன்புக் கண்ணோட்டத்திலிருந்தோ கூட, நன்கு ஆதாரப்பட்டதல்ல என்பதைக் காட்டும் பல கருத்தோட்டங்கள் இருக்கின்றன.

அடுத்து, பெண்ணின் வாரிசுரிமைப் பிரச்சினைக்கு வருகிறேன். இந்து சட்டத்தொகுப்பு அமலுக்கு வந்ததற்குப் பின்னர், பெண், தகப்பனாரின் சொத்துக்கும் கணவனின் சொத்துக்கும் வாரிசு ஆகிறார். உதாரணத்திற்கு, அந்தப் பெண் கணவனையும் குழந்தைகளையும் விட்டுவிட்டு மரணமடைகிறார் என்று வைத்துக்கொள்வோம்.

அப்பொழுது கணவனுக்கு உரிமை வழங்கப்படுகிறது. பின்னர் குழந்தைகளும் வாரிசாகிறார்கள். அதுவரையிலும் நல்லதுதான். பின்னர், கணவனும் குழந்தைகளும் இல்லாதபோது, யார் வாரிசு ஆகிறார்கள்? அந்தப் பெண்ணின் தந்தையும் தாயும்தான். இவர்கள் - இவர்களைப் போன்று லட்சக்கணக்கானவர்கள் இருக்கிறார்கள் - மகளின் வீட்டிலிருந்து தண்ணீரைக் கூடத் தொடுவதற்கு விரும்பாத வர்கள் - இவர்கள்தான் அந்த சொத்தைப் பெறுவார்கள். (**திரு. எல். கிஷர்ணசாமி பாரதி:** ''ஏன்?'') இதை உங்களால் புரிந்துகொள்ள முடியாது. இதுதான் எனக்குச் சிரமமானது. இதை உங்களால் உணர முடியாது. ஐயா, தந்தை, மகளை மருமகனிடம் ஒப்படைத்தவுடனே, தந்தை, அதற்கப்புறம் ஒருபோதும் மகளின் வீட்டுக்குப் போக மாட்டார். அவளுடைய வீட்டில் உணவருந்த மாட்டார், அவளுடைய வீட்டில் தண்ணீர்கூடக் குடிக்கமாட்டார், இவ்வாறு, தூய்மை பரா மரிக்கப்படுகிறது, அதாவது எந்தப் பெண்ணும், எந்தப் பொரு ளாயத ஆதாயத்திற்காகவும் திருமணம் செய்துகொடுக்கப்படுவ தில்லை என்ற நோக்கம் நிலைநிறுத்தப்படுகிறது. அதுதான் அடிப் படை. மகள் திருமணம் செய்து கொடுக்கப்பட்டுள்ள கிராமத்திற்குக் கூட பலர் போகமாட்டார்கள். உண்மைகளை உள்ளவாறே நாம் அங்கீகரிக்கவேண்டும். அவர்களுக்கு அது தெரியாது என்று கூறுவது பயனற்றது. அவர்களுக்கு அது தெரியாமலிருப்பது சாத்தியமே. பெண் ணினால் வைத்துவிட்டுப்போன சொத்து மாமனாருக்குப் போய்ச் சேருவது ஏற்படவே செய்யும். அது ஒரு சகித்துக்கொள்ள முடியாத நிலைமையேயாகும். ஒரு பெண் கணவனோ, குழந்தைகளோ இல்லாமல், தந்தையும் தாயும் கூட இல்லாமல் இறந்து போனால், என்ன ஏற்படும்? இது ஒரு முக்கியமான அம்சமாகும். அந்தப் பெண் தன் தகப்பனாரிடமிருந்து சொத்தை வாரிசுரிமையாகப் பெறுகிறார். கணவன், குழந்தைகள், தகப்பனார், அல்லது தாயார் இல்லாத நிலை யில் அந்தச் சொத்து அவளுடைய தந்தையின் மகனுக்குப் போய்ச் சேராது. நிலைமையைத் தெளிவாக விளக்குகிறேன். சொத்து 'ஏ'வின் குடும்பத்துக்குச் சேர்ந்ததாகும். அந்தச் சொத்து 'ஏ'வின் குடும்பத் திற்கு, பெண்ணின் சகோதரனுக்கு, ரத்த உறவுடைய சொந்த சகோ தரனுக்கு போய்ச் சேராது; ஆனால், அந்த சொத்து, இங்கு நீங்கள் கொடுத்துள்ள பட்டியலிலுள்ள கணவனின் குடும்பத்தைச் சேர்ந்த நூற்றுக்கணக்கானவர்களுக்குப் போய்ச்சேரும். அந்தப் பெண் மரண மடைந்து விட்டதாலும், கணவன், குழந்தைகள், தகப்பனார், தாயார் யாருமே இல்லாத நிலையில் அந்தச் சொத்து அவளுடைய சகோதரர் அல்லது சகோதரனின் மகன், அல்லது மற்றவர்களுக்குப் போய்ச் சேராது, மாறாக, அது கணவனின் குடும்பத்திற்குப் போய்ச் சேரும்.

அது ஏன் அவ்வாறு சேர வேண்டும்? ஏனெனில், உங்களுடைய பொறுக்குக் குழு, நீண்டகாலமாக சமூகம் முழுவதன் மீதும் செல்வாக்குச் செலுத்திவரும் நோக்கங்களிலிருந்து தங்களை விடு வித்துக்கொள்ள இயலவில்லை. (**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** ''இப்பொழுதுள்ள நிலைமை என்ன?'') அது பற்றி நமக்கு கவலை யில்லை. தற்போதைய நிலை உங்களுக்கே நன்றாகத் தெரியும். அது சீதனம்; மகளால் அது வாரிசுரிமையாகப் பெறப்படுவதில்லை. நிலைமை வேறுபட்டது. ஒரு குடும்பத்தின் சொத்து, அந்தப் பெண் ணின் சகோதரனுக்கு வாரிசுரிமையாகக் கிடைப்பதில்லை, மாறாக, அது வேறு நபர்களுக்குப் போய்ச் சேருகிறது. இந்த நிலைமையை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் இதுதான் நிலைமை என்பதை நீங்கள் உணரவேண்டும். இதற்கு நீங்கள் நிவாரணம் காணலாம், இதற்கு நிவாரணம் காண வேண்டுமென்று உங்களை இறைஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். இந்தப் பிரச்சினையை நீங்கள் மறுபரிசீலனை செய்ய வேண்டியது அவசியமாகும். இது உங்களுடைய பரிசீலனைக்கு நான் முன்வைக்கும் பிரச்சினைகளில் ஒன்று ஆகும். வாரிசுரிமைப் பிரச்சினை பற்றி இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். உங்களுக்கு முன்னால் வைக்கப்படவேண்டிய வேறு பல ஆலோசனைகளும் உள்ளன.

இனி, பைசல் செய்யும் அதிகாரம் சம்பந்தமாக பேச வரு கிறேன். பெண்களில் சொத்து சம்பந்தமாக, எல்லைக்குட்பட்ட உரிமைகள் இருக்கும் நிலைமையில் மிகுந்த இடர்ப்பாடுகள் இருப் பதை நான் புரிந்துகொள்கிறேன். கூட்டுக் குடும்பத்தைப் பொறுத்த மட்டிலும், அது இந்த மசோதாவின் கீழ் நசுக்கப்படுவதற்கு முயற்சி செய்யப்படுகிறது. கூட்டுக் குடும்பம் சிதைந்து வருகிறது. அது நொறுங்கி வருகிறது. நீண்ட காலத்திற்கு முன்பிருந்தே, சில சூழ் நிலைகள் இந்து கூட்டுக் குடும்பத்தின் விதியை நிர்ணயித்து, அது நீடித்திருக்க முடியாமல் செய்துள்ளன. ஐயா, அது மறைந்துவருவது குறித்து நான் கண்ணீர் சிந்துவதற்கு விரும்பவில்லை. இந்த இந்து கூட்டுக் குடும்பத்தைக் கொல்வதில் வருமான வரிச் சட்டம்தான் மிகப்பெரிய எமனாக வந்துள்ளது. இந்து கூட்டுக் குடும்பம் நீண்ட காலம் இருக்க முடியாது என்பதை நான் அறிவேன். ஆனால் இந்த மசோதாவைப் பொறுத்தமட்டிலும், வருங்காலத்தில் அவர்கள் பொதுவாக வாடகைக்கு குடியிருப்பவர்களாக இருப்பார்கள் என்று அது கூறினால், எனக்கு எந்தவிதமான ஆட்சேபனையுமில்லை. மற்றைய மசோதாவில் இது கொடுக்கப்பட்டிருந்தது, இந்த மசோதா விலும் இது கொடுக்கப்பட்டுள்ளது. நான் ஓர் எதார்த்தவாதி. எனவே,

என்னுடைய புனிதமான, பண்டையக் கூட்டு இந்துக் குடும்பம் மறைந்து போகிறதே என்று ஓலமிட மாட்டேன். அந்தக் காலத்தில் கூட்டுக் குடும்பம் மிகவும் பயனுள்ளதாக இருந்தது. இப்பொழுது நாம் கூட்டுறவு விவசாயம், சொத்துக்களை கூட்டுறவு முறையில் உடைமையாகக் கொள்வது முதலியவற்றுக்குத் திரும்பி வந்து கொண்டிருக்கிறோம். அதே சமயத்தில், நாம் சமூக இன்ஷுரன்ஸ் முதலியவற்றையும் வழங்கி வருகிறோம். பழைய இந்துக் கூட்டுக் குடும்பம்செயல்பட்டு வந்த கோட்பாடுகளுக்கே நாம் திரும்பிச் செல்லும் வகையில் இவற்றையெல்லாம் நாம் செய்துவருகிறோம், அது இன்றைய விவாதத்திற்கு அப்பாற்பட்ட விஷயமாகும். சட்டத்தைப் பொறுத்த மட்டிலும், நாட்டின் பொதுவான சூழ் நிலைமைகளைப் பொறுத்தமட்டிலும், கூட்டுக் குடும்பத்தையும் பொறுத்தமட்டிலும்........ இவ்வாறு கூறமுடியும் என்று நான் நினைக்க வில்லை.

**மாண்புமிகு திரு. ஜகஜீவன்ராம்** (தொழிலாளர் நலத்துறை அமைச்சர்): அது ஓர் இழக்கப்பட்ட இலட்சியமாகும்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** ஐயா, நீங்கள் என்ன கூறிய போதிலும், இங்கு இலட்சியம் என்ற பேச்சுக்கே இடமில்லை. சட்டம் இந்து கூட்டுக் குடும்பத்தைக் கொல்ல வேண்டும் என்ற கருத்தை நான் விரும்பவில்லை.

திருமணத்தைப் பொறுத்தமட்டிலும், ஐயா, நான் மேலும் சில கருத்துக்களைக் கூறியாக வேண்டும். இது மிகவும் சிரமமான விஷயம்.

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர்:** அது முன்பு விவாதிக்கப் பட்டுள்ளது.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** நான் முன்பு சில ஆலோ சனைகளை வைத்திருக்கிறேன்.

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர்:** இது இரண்டாவது திருமணம்.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** ..... எனக்கு நல்ல ஆதரவாளர் கள் இருப்பதைப் பார்க்கிறேன்.

**மாண்புமிகு திரு. ஜகஜீவன்ராம்:** நீங்கள் சட்ட அமைச்சருடன் கூடவே இருக்கிறீர்கள்.

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :*** திருமதி அம்மு சுவாமிநாதன். திரு. சிவராவ் மற்றும் திருமதி ரேணுகா ரே பின்வருமாறு எழுதினார்கள்:

> ''இந்து திருமண வடிவங்கள் பற்றிய சட்டத்தொகுப்பின் IIம் பாகத்தின் 6வது ஷரத்து சம்பந்தமாக நாங்கள் இதைச் சுட்டிக்காட்ட வேண்டியுள்ளது: அதாவது, நாட்டின் சில பாகங்களில் நீண்ட காலமாக இருந்துவரும் மரபுகள் அல்லது வழக்கங்கள் செல்லத்தக்க திருமணங்கள் என்று அங்கீகரிக்கின்றன. அவை இந்த பாகத்தின் ஷரத்துகளின் கீழ் மதசடங்கு ரீதியான அல்லது சிவில் திருமணங்கள் என்ற இனத்தின் கீழ் வரமாட்டாது எனவே அத்தகைய திருமணங்களை செல்லத்தக்கதாக்குவதற்கு 6-வது பிரிவின் முடிவில் ஒரு ஷரத்தை ஒரு காப்பு வாசகத்தைச் சேர்க்க வேண்டுமென்று ஆலோசனை கூறுகிறோம்.''

இது என்ன? திரு. பாரதி இந்தியாவின் எந்த பாகத்திலிருந்து வருகிறாரோ அங்கு இதே மாதிரி சிக்கல் இருக்கிறது என்று நான் புரிந்து கொள்கிறேன்.

***திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :*** அதிருஷ்டவசமாக நான் அந்தப் பகுதியிலிருந்து வரவில்லை நான் தமிழ்நாட்டிலிருந்து வருகிறேன். அவர்கள் மலபாரிலிருந்து வருகின்றனர்.

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :*** சுவீகாரம் என்ற பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், இந்த ஆட்சேபனை குறிப்பிலும் அது போன்ற ஒரு விஷயத்தைப் பார்க்கிறேன். எனவே இது பஞ்சாபில் மட்டுமல்ல. திருமணம், விவாகரத்து, சுவீகாரம் சம்பந்தப்பட்ட விதிகள் வைதீக விதிகளிலிருந்து வேறுபட்ட விதிகள் உள்ள பிற பாகங்களிலும் அவ்வாறு இருக்கிறது. அவை அனைத்தும் பாதுகாக்கப் படவேண்டும்; ஆட்சேபனைக் குறிப்புகள் எழுதியுள்ள உறுப்பினர்கள் இந்தக் கருத்துக்களைக் கூறியதில் தங்களுடைய தொகுதிகளை மிகவும் நன்றாகவே பிரதிநிதித்துவப்படுத்தியுள்ளனர் என்பதை அறிய மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

மதச் சடங்கு ரீதியான திருமணங்களைப் பற்றி நான் கூறிக் கொண்டிருந்தேன். மதச் சடங்கு ரீதியில்லாத திருமணத்தைப் பொறுத்த மட்டிலும், அது குறித்து ஒரு வார்த்தை கூட நான் கூற வில்லை. அது பாதுகாக்கப்பட வேண்டுமென்று விரும்புகிறேன். மதச் சடங்குரீதியான திருமணங்கள் சம்பந்தமாக, குழு செய்துள்ள குளறுபடி விளக்க இயலாத ஒன்றாகும். சிவில் திருமணத்தை எவ்வாறு இந்த அத்தியாயத்தில் சேர்ப்பது என்பதை என்னால் புரிந்துகொள்ள

முடியவில்லை. அது ஒரு சிவில் திருமணம் என்றால், அது சிவில் சட்டத்திற்குரிய ஒரு விஷயமாகும். 1872ம் ஆண்டு சட்டம் நம்மிடம் உள்ளது. அது மிகவும் குறைபாடு உள்ள ஒரு சட்டமாகும். அதைச் சரிசெய்வதற்கு ஒரு மசோதாவைச் சமர்ப்பித்திருக்கிறேன். மற்ற எல்லா முறைகளிலான திருமணங்களைச் செல்லுபடியாக்குவதற்கான மசோதாவை ஒரு சில தினங்களுக்கு முன்னால் இந்த அவையில் நான் சமர்ப்பித்தேன்; இந்தச் சிவில் சட்டத்தை சேர்த்துக் கொள்வதைக் காட்டிலும் மிகவும் அதிகமாக அது நம்மைப் பாதுகாக்கும். இந்தியா முழுவதற்குமான ஒரு சிவில் சட்டத்தை நான் ஆதரிக்கிறேன். எல்லா வற்றிற்கும் விதிகள் ஒரேமாதிரியாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அதைச் செய்வது நமது கடமையாகும். ஆனால் சிவில் திருமணத்தை இதில் ஏன் நாம் சேர்க்கவேண்டும்? அந்தச் சட்டத்தின் தீய விளைவுகளை அகற்றுவதற்கென்றால், அப்பொழுது மற்றையப் பாதை நமக்கு முன் இருக்கிறது. இந்த சிவில் சட்டத்தில் மற்றும் புதிய வகைப்பட்ட திருமணத்தில் என்ன ஏற்படுகிறது? இது மதச் சடங்கு ரீதியிலான திருமணமோ அல்லது சிவில் திருமணமோ அல்ல, மாறாக பதிவு செய்யப்படும் மதரீதியிலான திருமண மாகும்; இதில் மதச் சடங்கு அடிப்படையில் திருமணம் நடைபெற்ற போதிலும், ஆரம்பத்தில் இது, நெருங்கிய உறவினர்களுக்கு இடை யிலான, தடை செய்யப்பட்ட திருமணமாக இருந்தால், நீங்கள், பதிவு செய்யும் ஓர் அதிகாரியிடம் சென்று, அதை செல்லத் தக்கதாக்குவதா?

**திருமதி ஜி. துர்க்காபாய் :** அது விருப்பத்தின்பால் பட்டது தான்!

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :** நான் பதில் கூறிவிட்டேன். அது விருப்பத்தின் பாற்பட்டதாக இருக்கக்கூடும், ஆனால் விஷயம் அத்துடன் முடிந்து விடுகிறதா? திருமணம் நடக்கும் போது ஐந்து நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்படவேண்டுமென்று இந்துச் சட்டத் தொகுப்பு கூறுகிறது, இல்லாவிட்டால் திருமணம் அனுமதிக்கப்பட மாட்டாது. ''மதச் சடங்கு ரீதியிலான திருமணம் சம்பந்தப்பட்ட நிபந்தனைகள்'' என்பதே அந்தச் சொற்களாகும். இதன் பொருள், அடிப்படையான விஷயங்களில், ஒரு ஷரத்து மீறப்பட்டவுடனே, அந்தத் தவறின் விளைவுகளிலிருந்து மீள்வதற்கு, அந்த சட்டம் உங்க ளுக்குப் பாதுகாப்புத் தருவதற்கு அனுமதிக்கிறீர்கள். நெருங்கிய உறவினர்களுக்கு இடையிலான திருமணம் தடைசெய்யப்பட்டிருப் பதைப் பொறுத்தமட்டிலும் இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டில், நாம் எதிர்பார்க்கிற ஒரு சீரான சட்டத்தை உருவாக்குவது மிகவும் சிரமமானது என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அத்தகைய ஒரே சீரான தன்மையை ஏற்படுத்துவது ஓர் அதிசய மாகும் என்று கூறப்பட்டுள்ளது அந்த அதிசயத்தை ஏற்படுத்திய தற்காக டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டுகிறேன். டாக்டர் அம்பேத்கர் அந்த அதிசயத்தை நடத்திக் காண்பித்து வருகிறார். இந்த அதிசயம் நடைமுறைப்படுத்தப்படுவதற்கு ஆதரவாக நான் நிற்கிறேன். ஸ்தல விஷயங்களில் சட்டச் சிக்கல்கள் இருக்குமே யானால், அதில், தற்காலத்திலுள்ள நிலைமைக்கும், நாம் ஏற்படுத்த விருக்கும் நிலைமைக்கும் இடையில் உள்ள மோதல், மிகவும் அதிக மானதும், மிகவும் தீவிரமானதுமாகும். இந்த முரண்பாடு தவிர்க்கப் படும் வகையில் விஷயங்களை ஒழுங்குபடுத்தும்படி இந்த அவை யைக் கேட்டுக்கொள்கிறேன்.

ஐயா, பஞ்சாபில் எனது ஊருக்கு அருகில் ஒரே கோத்தி ரத்தைக் கொண்டுள்ள பல கிராமங்கள் இருக்கின்றன, அவர்கள் ஒரு பொதுவான மூதாதையரிலிருந்து வந்ததாக நம்புகின்றனர். அந்த மக்களைப் பொறுத்தவரையில் மரபு வழியை மூன்று அல்லது ஐந்துடன் கட்டுப்படுத்தும் நெருங்கிய உறவினர்களிடையிலான திருமண உறவு முறை போதுமானதல்ல. இது மேலும் விரிவுபடுத்த வேண்டுமென்று கூறுவதற்கு விரும்பவில்லை. அதே சமயத்தில் இது ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல, இந்தத் திருமண முறையை அனுமதிக்கும்படி நீங்கள் எங்களைக் கேட்டால் இதனுடன் நாம் ஒரு போதும் ஒத்துப்போக முடியாது. எங்களைப் பொறுத்தமட்டிலும் இது ஒரு அசாத்தியமான நிலைமையாகும். இதை நீங்கள் அனுமதித் தால், பஞ்சாபில் நீண்ட காலமாக இருந்து வந்துள்ள எங்களுடைய சமூக அமைப்பின் ஆணிவேரையே நீங்கள் வெட்டுவதற்கு ஒப்பாகும். இந்தியா முழுமைக்கும் கூட இதுதான் என்னுடைய கருத்தாகும். இந்தியாவின் இதர பகுதிகளுக்காக நான் பேச முடியாதுதான், ஏனெனில் சில கனவான்கள் அது குறித்து கேள்வி மேல் கேள்வி கேட்பார்கள். இந்தியா முழுமையிலும் இதே நிலைமைதான் என்று நான் கருதுகிறேன். எப்படியிருந்தபோதிலும், இது குறித்து நான் வறட்டுப் பிடிவாதமாக இருக்கவில்லை. ஆனால், நாம் சட்டமாக்கப் போவது மிகவும் தவறான ஒரு விதியாகும். அதாவது திருமணம் செய்து கொள்ளும் தம்பதிகள் நெருங்கிய உறவினர்களாக இருக்கக் கூடாது என்ற 7வது விதியின் நிபந்தனைகள், பதிவு செய்யப்படும், மதசடங்கு ரீதியிலான திருமணங்கள் சம்பந்தமாக விலக்களிக்கப் பட வேண்டும். சாரதா சட்டத்தைப் பொறுத்தமட்டிலும், இந்து சட்டத்தின் படியும், நமது கோட்பாடுகளின்படியும் ஒரு திருமணம் நடைபெற்றுவிட்டதற்குப் பின்னர், எப்போதுமே கலைக்கப்பட

முடியாததாகும். இந்த விதியிலிருந்து நாம் ஒரு மாற்றம் செய்கிறோம். சட்டங்கள் மற்றும் மரபுகளின் படியான திருமணத்தைக் குலைப்பதற்கு நாம் வழிவகை செய்து கொண்டிருக்கிறோம். ஏனெனில், விதி 3 நீக்கப்பட்டிருக்கும் நிலைமையில், நீங்கள் ஒரு நபர் மீது குற்றம் சாட்டி, தண்டனை கொடுத்து சிறைக்கு அனுப்பலாம். ஒரு நபர் சரியான வயதை எட்டுவதற்கு முன்னரே திருமணம் செய்து கொண்டால், அபராதம் விதிப்பதற்கு பதிலாக, அவர் சிறைக்கு அனுப்பப்பட வேண்டும் என்று ஒரு மசோதாவை இந்த அவையில் சமர்ப்பித்திருக்கிறேன். அவர் சுதந்திரமாக விடுபடுவதற்கு அனுமதிக்கப்படும் வகையில் தன் விருப்பு அதிகாரம் வழங்கப்படக்கூடாது. நாடு முழுவதும் சாரதா சட்டத்தை எதிர்த்து விதி 3 கடைப்பிடிக்கப்படுமேயானால், திருமணம் தவிர்க்கப்படக் கூடியதாகும் என்று தற்போதைய ஷரத்து காட்டுகிறது. இது கடந்த 20 ஆண்டுகளுக்கு மேலாகவே நாம் ஏற்றுக் கொள்ளாத கோட்பாடுகளுக்கு எதிராகச் செல்வதாகும்.

இந்து சட்டத் தொகுப்பின் பிரதான ஷரத்துகளைப் பொறுத்த மட்டிலும், இந்த அவையின் கவனத்திற்குக் கொண்டுவருவதற்காக நான் அவற்றை சுருக்கமாக எடுத்துக் கூறினேன். ஏனெனில், மேலும், இந்த மசோதா முறியடிக்கப்பட மாட்டாது என்றும் கருதினேன். ஷரத்து வாரியான விவாதம் நடைபெறும்போது அதுபற்றி விளக்குகிறேன்.

தொகுத்துக் கூறுவதெனில், இந்த அவையைப் பொருத்தமட்டிலும், இந்த மசோதாவை சுற்றுக்கு விடுவது பொருத்தமாக இருக்கும்; ஏனெனில் அதனால் நாம் எதுவும் இழக்கப் போவதில்லை, உண்மையில் அதனால் நமக்கு நற்பயனே கிடைக்கும். இதனால் பொதுமக்கள் அபிப்பிராயத்தைக் கலந்து ஆலோசித்ததாகவும் இருக்கும். தாங்கள் புறக்கணிக்கப்படவில்லை என்று மக்களும் உணருவார்கள். உண்மையில் பொறுக்குக் குழுவிடமிருந்து வந்த பிறகும் கூட பல திருத்தங்கள் முன்மொழியப்பட்டன. பொறுக்குக் குழுவுக்கு சமர்ப்பிக்கப்படுவதற்கு முன்பும்கூட, சாதாரண மக்களுக்கு இது குறித்து எதுவும் தெரியாது. என்ன சொல்லப்பட்டிருந்தபோதிலும், மக்கள் அதை அறிவார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன். இந்த அறிக்கையைத் தயாரித்த இரு நபர்களைப்பற்றி டாக்டர் அம்பேத்கர் நம்மிடம் கூறியிருந்தார். அவர்கள் மிகவும் நல்லவர்கள் என்றும் கூறியிருந்தார். அவர்கள் மிகவும் முன்னேற்றகரமான கருத்துக்களைக் கொண்டவர்கள் என்று கருத முடியாது. உயர்நீதிமன்ற நீதிபதிகளின் மிகப்

பல கருத்துக்கள் என்னிடம் உள்ளன. அன்றாடம் மேலும் மேலும் அபிப்பிராயங்கள் வந்து கொண்டிருக்கின்றன. இவர்கள் அனைவரும் அதற்கு எதிராக உள்ளனர். இந்து சட்டக் குழுவின் அறிக்கையில் அச்சிடப்பட்டுள்ள சான்றுகளிலிருந்து அவற்றை இங்கு வாசித்துக் காட்ட விரும்பவில்லை. உங்களுடைய அனுமதியோடு, இந்த அறிக்கையின் 13-வது பக்கத்தைக் குறிப்பிடவிரும்புகிறேன். அதில் பெண்களுக்கான ஃபதேசந்த் கல்லூரி முதல்வர் குமாரி சுப்ருல்லின் சாட்சியம் அடங்கியுள்ளது. அவர் இவ்வாறு கூறியுள்ளார்.

> "திருமணமாகாத மகள், திருமணத்திற்குப் பக்குவமடையாதவள், அல்லது திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை என்று உறுதிபூண்டிருப்பவள் ஆகியோரும் மகனைப் போன்று அதே பங்கைப் பெற வேண்டும், மற்றும் மகனைப் போன்ற அதே கடப்பாடுகளுக்கு அவளும் உட்படுத்தப்பட வேண்டும். திருமணம் செய்துகொண்ட மகளுக்கு சொத்தில் எந்தப் பங்கும் இருக்கக்கூடாது. திருமணமாகாத மகள் திருமணம் செய்து கொண்டு விட்டால், அவளுடைய பங்கு அவளுடைய சகோதரர்களுக்குப் போய்ச் சேர வேண்டும்."

சாட்சியங்களைப் பதிவு செய்வதற்குக் குழு லாகூரிலிருந்த போது, அறக்கையில் இவ்வாறு கூறப்பட்டது:

> "உண்மையில், பஞ்சாபில் இந்தக் குழுவின் கூட்டத்திற்கு நான் தலைமை வகித்துக் கொண்டிருந்தபோது லாகூரில் இந்தக் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்த கமர்ஷியல் மியூசியம் ஹாலுக்குள் சுமார் 500 பெண்கள் கூப்பிய கரங்களுடன் பிரவேசித்து "மருமகனை குடும்பத்திற்குள் கொண்டு வந்து எங்களுடைய பிழைப்பை பாழாக்கிவிடாதீர்கள்" என்று கூறினார்.

தொழிலைப் பொறுத்தமட்டிலும், தொழில் செய்வோர் மீது இது எத்தகைய விளைவை ஏற்படுத்தும் என்று தயவு செய்து சிந்தித்துப் பாருங்கள். நீங்கள் தூற்றப்படுவீர்கள். ஒரு தந்தையும் அவருடைய மகன்களும் ஒரு சுபிட்சமான தொழிலை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். தந்தை இறந்து விடுகிறார். அந்தத் தொழில் அனைவரின் கூட்டு முயற்சிகளால் நடத்தப்பட்டு வருகிறது; பின்னர் மருமகன் உள்ளே நுழைகிறார். அப்போது அந்தத் தொழிலுக்கு என்ன நேரும்? அது சின்னாபின்னமாகிவிடும். அறிக்கையின் 139வது பக்கத்தை அவைக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். எல்லாப் பெண்களும் இதற்கு ஆதரவாக இருக்கிறார்கள் என்று கூறுவது தவறாகும். ஆயிரக்கணக்கான அறிவார்ந்த பெண்கள் இதை ஆதரிக்க வில்லை. ஏனெனில், மகளுக்கு எந்த உரிமைகளும் கொடுப்பதற்கு அவர்கள் விரும்பவில்லை என்பதினால் அல்ல. என்னைப் பொறுத்த

மட்டிலும், அது போன்றே என்னைப் போல் சிந்திப்பவர்களைப் பொறுத்தமட்டிலும் மகளுக்கு முழு உரிமையும் கொடுக்கப்படக் கூடாது என்று நாங்கள் கூறவில்லை. பெண்களும் ஆண்களைப் போல் அதே அந்தஸ்துக்கு உயரவேண்டுமென்றும், அதே உரிமை களை அடைய வேண்டுமென்றும்தான் நாங்கள் விரும்புகிறோம். இவ்விஷயத்தில் டாக்டர் அம்பேத்கருடன் நான் ஒன்றுபட்டு நிற் கிறேன். அவரைப் போன்றே நான் ஒரு முற்போக்குப் பழமைவாதி. அந்த சொற் பிரயோகத்தை நான் மிகவும் விரும்புகிறேன். நான் முன்னேற்றமான சிந்தனை உடையவர்களின் வரிசையைச் சேர்ந்தவ னல்ல. டாக்டர் அம்பேத்கர் கூறியது போன்று இந்த மசோதா புரட்சிகரமானதோ அல்லது தீவிரமானதோ அல்ல. இந்த மசோதா சில விஷயங்களை அலசுகிறது. ஆனால் இது அபிவிருத்தி செய்யப் பட வேண்டும். இன்று இந்து சமுதாயத்தில் ஒருவகையான ஆத்ம சோதனை நடைபெற்று வருகிறது. சீரழிவு ஏற்பட்டுள்ளது என்பதை அதனால் பார்க்க முடிகிறது. டாக்டர் அம்பேத்கர் கூறியபடி அந்தச் சீரழிவை சரி செய்ய வேண்டியது நமது கடமையாகும். எனவே, இந்தக் கண்ணோட்டத்திலிருந்து, நமது சகோதரிகளுக்கும் புதல்விகளுக்கும் நீதி வழங்குவதற்கு நாங்கள் விரும்பவில்லை என்று யாரும் நினைத்துவிடவேண்டாம். இதுபோன்ற ஒரு மனப் பதிவை நமது சகோதரிகளும் புதல்விகளும் ஏற்படுத்திக் கொள்வார் களேயானால், அது முற்றிலும் தவறாகும். ஐயா, உங்களுடைய நல்லெண்ணத்தை நான் நன்கு அறிவேன். அவர்களுடைய உரிமை கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்றுதான் நீங்களும் விரும்பு கிறீர்கள். எனவே இந்தக் கண்ணோட்டத்திலிருந்து இதைப் பார்க்கக் கூடாது என்று தெரிவத்துக் கொள்கிறேன். இந்த மசோதா சுற்றுக்கு விடப்பட வேண்டும் என்று விரும்புகிறேன். அடுத்த தேர்தலுக்குப் பிறகு இதை எடுத்துக் கொள்ளலாம், அப்பொழுது இந்த அவை கூடுதல் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக இருக்கும். இந்த அவை இன்று பூரணமாகத் தகுதி வாய்ந்ததில்லையென்றோ, அரசுரிமை படைத்த தில்லையென்றோ, நான் கருதவில்லை. இந்த மசோதாவை விவா திப்பதைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்று இந்த அவை வற்புறுத்தினால், அதில் தவறு ஏதுமில்லை. ஆனால் இந்த மசோதா விவாதிக்கப்பட்டு, சம்பந்தப்பட்ட ஒவ்வொரு பகுதியினருக்கும் நியாயம் வழங்கப்பட வேண்டும் என்று விரும்புகிறேன். அதே சமயத்தில், ஒரு வழக்குரைஞர் என்ற முறையிலும் இந்த அவையின் ஓர் உறுப்பினர் என்ற முறையிலும் நான் விரும்புவது என்னவெனில், இந்த மசோதா பொறுக்குக் குழுவினால் மீண்டும் ஆய்வு செய்யப்பட

வேண்டுமென்று விரும்புகிறேன். அது இரண்டு மணி நேரம் நடை பெற்றாலும் பரவாயில்லை. அப்பொழுதுதான் இந்தக் குறைபாடு களெல்லாம் களையப்பெற்று, அசல் மசோதா ஷரத்து வாரியாகப் பரிசீலனை செய்வது சட்டபூர்வமாக்கப்படுவதற்கு வழி செய்யும். அப்பொழுது, பொறுக்குக் குழு விரும்பினால் இந்த மசோதாவே அகற்றப்பட்டுவிடலாம். ஒவ்வொரு பொறுக்குக் குழுவிலும் செய்யப் படுவதுபோல் மூல மசோதா, சட்டத்தின் தேவைக்கேற்ப ஆய்வு செய்யப்பட்டதாகவோ, அல்லது திருத்தங்கள் முன்மொழியப்பட்ட தாகவோ, ஒவ்வொரு பொறுக்குக் குழுவிலும் செய்யப்படுவது போல் வழக்கமான முறையில் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகவோ கூறுவது முற்றிலும் தவறாகும் என்று வலியுறுத்துகிறேன். இது செய்யப்படவில்லை. அடிப்படையிலேயே தவறான முறையில் இந்த விஷயம் கையாளப்படுவதை அனுமதிக்காதிருக்க நாம் மிகவும் உஷாராக இருக்க வேண்டும். என்னுடைய ஆட்சேபனை சரியானதென்று டாக்டர் அம்பேத்கர் திருப்தியடைந்தால், இந்தப் பிரச்சினையைப் பரிசீலனை செய்யும்படி அவரை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். ஏழை பஞ்சாப் மக்களின் கருத்தையும் தயவுசெய்து கவனத்தில் எடுத்துக்கொள்ளும்படி அவரை வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். அவர்களுக்கு இந்து சட்டக்குழுவில் பிரதிநிதித் துவம் இல்லை.

***மதிப்புக்குரிய உறுப்பினர்கள்:*** டாக்டர் பக்ஷி தேக் சந்த அக்குழுவில் இருக்கிறாரே!

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா :*** இந்த பொறுக்குக் குழுவில் உறுப்பினராக இருந்த டாக்டர் தேக் சந்ததைப்பற்றி நீங்கள் கூறுகின் றீர்களென்றால், அவருக்கு உரிய மரியாதையை நீங்கள் அளிக்கிறீர் களென்றால் நான் மிகவும் மகிழ்ச்சி அடைவேன். இந்த ஆட் சேபனைக் குறிப்பை அவர் எழுதாமல் இருந்திருந்தால் நீங்கள் எங்கே இருந்திருப்பீர்கள்? நீங்கள் அவரை ஒரு மனிதர் என்று ஏற்றுக் கொண்டு, அவருடைய கருத்துக்களுக்கு மதிப்பு அளிக்க வேண்டும் என்று ஏற்றுக்கொண்டால், அவருடைய கருத்துக்களைக் கடைப் பிடியுங்கள். இது என்னுடைய வேண்டுகோள். நான் டாக்டர் பக்ஷி தேக் சந்த் எழுதியவற்றின் ஓர் ஊது குழல் அல்லது ஒலிபெருக்கி மட்டுமேயாகும். அவர், தனது குறிப்பில் ஒரு வாரிசை நியமிப் பதற்கு நீங்கள் அனுமதிக்க வேண்டும் என்றும், இன்று ஏற்பட்டு வருவது போல், அதே முறையில் விவாகரத்தை நீங்கள் அனுமதிக்க

வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டுள்ளார். மதச் சடங்கு ரீதியில் அல்லாத திருமணங்களைப் பற்றியும் அவர் குறிப்பிட்டுள்ளார். இந்த எல்லா அம்சங்களிலும் அவருடைய பெயரே நீங்கள் குறிப் பிடும்போது, தனது ஆட்சேபனைக் குறிப்பில் அவர் கறியுள்ளவற்றை நீங்கள் தயவுசெய்து கடைப்பிடிக்க வேண்டுமென்று உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. துணைத் தலைவர் :** திருமதி ரேணுகா ரே.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, என்னுடைய கோரிக்கை கவனிக்கப்படவேயில்லை!

**திரு. துணை சபாநாயகர்:** மதிப்புக்குரிய உறுப்பினரின் கோரிக்கை கவனிக்கப்படாமல் போகாது.

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் சொல்ல வேண்டிய சில விஷயங்கள் இருக்கின்றன. அவற்றுக்கு பதில்கள் கிடைக்கப் பெற வேண்டும்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினர் தமது கருத்துக்களைத் தாராளமாகக் கூறலாம். அதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, நான் அதை விரும்பவில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினரின் முறை இப்பொழுது இல்லை என்று ஏற்கனவே தீர்ப்புக் கூறியுள்ளேன். திருமதி ரேணுகா ரேயை இப்பொழுது பேச அழைக்கிறேன்.

***திருமதி ரேணுகா ரே :** இப்பொழுது இந்த அவையின் பரி சீலனையிலுள்ள மசோதா, அல்லது, அதில் அடங்கியுள்ள கோட் பாடுகள், 1943லிருந்து இந்த சட்டப் பேரவையின் முன்னால் இருந்து வருகின்றன; மேலும் இந்த மசோதாவில் அடங்கியுள்ள இந்த மாற்றங்களுக்கான இடைவிடாத கோரிக்கைகள், இந்த நாட்டுக்கு முன்னால், அதைக்காட்டிலும் நீண்ட காலமாகவே இருந்து வரு

★ அ.நி. (சட்டப்பேரவை) டி. தொகுதி II, பாகம் II, பிப்ரவரி 25, 1949, பக். 925-929.

கின்றன. 100 ஆண்டுகளுக்கு முன்னதாகவே ராஜாராம் மோகன் ராய், ''பெண்களின் சொத்துரிமை மற்றும் அவர்களின் திருமண உரிமைகள்'' பற்றி ஓர் ஆய்வுக் கட்டுரையை எழுதினார். அதன் மூலம் இந்தப் பிரச்சினை முதன் முதலாகப் பொதுமக்களின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. 1931, 1932லிருந்து பெண்களின் சட்டப்படியான இயலாமைகளை அகற்ற வேண்டியதன் அவசியமும் ஒரே சீரான மற்றும் சர்வாம்சச் சட்டத்தொகுப்பின் அவசியமும் அப்படிக் காட்டப்பட்டது. இந்த விஷயம் சம்பந்தமாக பல மசோதாக்கள் சட்டப் பேரவை முன் சமர்ப்பிக்கப்பட்டிருந்ததாலும், தனித்தனியான சட்டங்கள் சட்டத்தில் பல முரண்பாடுகளை ஏற்படுத்துவதாலும், மற்றும் இதுபற்றி இடைவிடாத கோரிக்கை இருந்து வந்தனாலும், அன்றைய இந்திய அரசு, இந்து சட்டக் குழுவை நியமிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது, இது இந்து சட்டம் பற்றிய ராவ் குழு என்று பரவலாக அறியப்பட்டிருந்தது. இந்தக் குழுவின் அறிக்கையின் பயனாகத்தான் எழுதப்படாமல் இறந்து போன நிலைமையிலான வாரிசுரிமை மற்றும் திருமணம் சம்பந்தமான இரு மசோதாக்கள் 1943ல் முன்மொழியப்பட்டன. அந்த சமயத்திலும், இப்பொழுது தலைதூக்கியுள்ள எதிர்ப்பு முன்னணிக்கு வந்தது. அந்த எதிர்ப்பின் சாராம்சம் இப்பொழுது இருப்பதைப் போன்றதேயாகும். ஆனால் அணுகுமுறை மிகவும் வேறுபட்டதாக இருந்தது. அணுகுமுறை, இயற்கையாகவே வேறுபட்டதாக இருந்தது. ஏனெனில், அது ஓர் அன்னிய அரசிடம் சமர்ப்பிக்கப் பட்டதாகும். அவர்கள் அந்நிய அரசின் ஆர்வமான ஆதரவாளர்களாக இருந்தார்கள் என்ற கருத்தின் பேரில் அந்த அணுகுமுறை கையாளப்பட்டது. அப்பொழுது காங்கிரஸ்தான் இதற்காகக் கிளர்ச்சி செய்துவந்தது. இந்தியப் பெண்கள் கொண்டுவந்த கோரிக்கைக்கு ஆதரவு தெரிவித்தது. எனவே இதற்கு அரசு எந்த முக்கியத்துவமும் தரவேண்டியதில்லை என்று அரசு விசுவாசிகள் கூறி வந்தனர். நான் ஆதாரமில்லாமல் இந்தக் கூற்றுக்களைக் கூறவில்லை. இந்த நாட்டின் தேசியப் பத்திரிகைகள் அந்த எதிர்ப்புக்கு அதிக வாய்ப்புத் தரவில்லை என்பது மெய்யே. இருந்தபோதிலும் எதிர்ப்பாளர்கள் பல பிரசுரங்களை வெளிக் கொண்டு வந்து, நமது தேசியத் தலைவர்களை வரைமுறையற்றுத் திட்டித் தீர்த்தார்கள். நமது பேரன்புக்குரிய தலைவர் மகாத்மா காந்தியைக் கூட அவர்கள் விட்டு வைக்கவில்லை. 'இந்து' என்ற ஒரு வார இதழ் வெளிவந்து கொண்டிருந்தது. அதில் இந்த மசோதாக்களைத் தாக்கி எழுதப்பட்டது. இந்த நாட்டின் தேசத் தலைவர்கள் இவற்றுக்கு ஆதரவாக உள்ளனர்

என்ற காரணத்தினாலும், அவர்களின் ஆலோசனையின்படியும் செல்வாக்கின் கீழும் இவை கொண்டு வரப்படுகின்றன என்ற காரணத்தினாலும் இந்த மசோதாக்கள் எதிர்க்கப்பட்டன. இந்த அம்சத்தோடு கூடவே, இந்த நாட்டின் பெண்கள், அவர்களை மேலும் பிளவுபடுத்தி, அவர்களிடையே பிணக்கை ஏற்படுத்த நடைபெற்ற சூழ்ச்சிகளுக்கு இரையாக தயாராயில்லை என்பதை அரசு கண்டவுடனே, பெண்கள் தனித் தொகுதிகளை எதிர்க்கின்றனர், மற்றும் இந்த நாட்டின் விடுதலை இயக்கத்தின் முன்னணியில் இருந்தவர்களுக்கு ஆதரவாக உள்ளனர் என்பதையும் உணர்ந்தபோது அன்னிய அரசு அதிகாரத்தில் உள்ள நிலையில், பெண்களின் நிலையை அபிவிருத்தி செய்து, அவர்களின் உரிமைகளை வழங்குகின்ற இந்த வகைப்பட்ட சட்டம் நிறைவேற்றப்படும் என்பதற்கு அதிக நம்பிக்கை இருக்கவில்லை. அப்பொழுதுதான் ஒரு தேசிய அரசு ஏற்படுகின்ற வரையில் காத்திருக்க வேண்டியது அவசியம் என்பதை நாங்கள் உணர்ந்தோம். அதற்குப் பின்னர், அரசு இந்து சட்டக் குழுவை நியமித்தது மசோதாக்கள் மீண்டும் சுற்றுக்கு விடப்பட்டன. இந்தக் குழு நாட்டில் சுற்றுப் பயணம் செய்து, 1946ல், இடைக்கால அரசு பதவிக்கு வந்த பின்னர், ஆயிரக்கணக்கான தனி நபர்கள் மற்றும் அமைப்புகளின் கருத்துக் களைக் கேட்டறிந்து 1947ல் தற்போதைய சட்டப் பேரவையில் இந்த மசோதா, மீண்டும் அறிமுகம் செய்துவைக்கப்பட்ட போது அதைத் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளை இங்கு மீண்டும் எடுத்துக் கூறப்போவதில்லை, ஏனெனில் அவற்றையெல் லாம் இந்த அவையின் உறுப்பினர்கள் நன்கு அறிவார்கள். ஆனால், அவற்றுக்கு எதிர்ப்பு சாராம்சத்தில் பழையதே, குணாம்சத்திலும் அதுவே - ஒரு புதிய அணுகுமுறையைக் கொண்டிருந்தது என்பதை மட்டுமே சுட்டிக்காட்டுவதற்கு விரும்புகிறேன். அந்த நாட்களில் காங்கிரசுக்கு எதிராக இருந்தவர்கள் யார் என்பதை நான் தெரிந்து கொள்வதற்கு விரும்புகிறேன். இன்று அவர்கள், 'இந்து சட்டத் தொகுப்பு மசோதா, நிறைவேற்றப்படுமேயானால், தேர்தலில் நீங்கள் தோற்றுப்போவீர்கள் என்று கூறினார்கள். அவர்களை நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். அவர்கள் திட்டமிட்டு விடுதலை இயக்கத் திற்கு எதிராகச் செயல்பட்டபோது, அவர்கள் அதை ஆதரிக்கவு மில்லை, அதற்குப் பரிவுகாட்டக் காட்டவுமில்லை - அவர்களையும் பொருட்படுத்தாது, காங்கிரஸ், தேர்தலில் வாகை சூடியது, நாட்டின் விடுதலையை அடைந்தது. இந்த நிலையில், அவர்கள் தேர்தலில் வெற்றிபெற மாட்டார்கள் என்று இன்று காங்கிரசுக்குக் கூறுவதற்கு இவர்கள் யார்? அவர்களில் யாராவது இன்று நாட்டின் சட்டப்

பேரவைகளுக்குள் வருவார்களேயானால், அது காங்கிரசின் தயவினால்தான் நடக்கும், நாளையும் அவ்வாறுதான் நடக்கும்.

இப்பொழுது தலைதூக்கியுள்ள எதிர்ப்பு, முன்பு போன்ற அதே குணாம்சத்தைக் கொண்ட இந்த எதிர்ப்பு, பல உபாயங்களைக் கையாண்டுள்ளது. அது பல்வேறு வகைப்பட்ட தந்திரங்களைக் கையாண்டுள்ளது. கவர்னர் ஜெனரலின் பெயர் உபயோகப்படுத்தப் பட்டதை இந்த சபை அறியும். அது ஒரு மோசடி என்று கண்டறியப் பட்டுள்ளது. இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு முன்னால், கல்கத்தாவில் ஒரு செய்தித் தாளில், இரண்டு அல்லது மூன்று நன்கு அறியப்பட்ட எதிர்ப்பாளர்களின் பெயர்களுக்குப் பின்னர், சியாமப் பிரசாத் முகர்ஜியின் பெயரை நான் பார்த்தேன். சிறிய அடைப்புக் குறிகளுக்குள் ''(உத்தரப்பாராவைச் சேர்ந்தவர்)'' என்ற சொற்களைப் பார்க்கின்றவரையில் நான் ஓரளவு வியப்படைந்தேன். ஐயா, அது தவறான வழிகாட்டும் நோக்கம் கொண்டவை என்பது தெளிவு. அதைப்பற்றிக் கேள்வி கேட்டிருந்தால், அவர்கள் ''உத்தரப்பாராவைச் சேர்ந்தவர்'' என்பதைச் சுட்டிக்காட்டியிருந்திருப்பார்கள். எதிர்ப்பாளிகள் உபயோகப்படுத்தும் உபாயங்களும், தந்திரங்களும் இவையே. உண்மையான கருத்து வேறுபாடுகள் உள்ளவர்களை நாம் கேள்வி கேட்பதில்லை என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால், இன்று பயன்படுத்தப்படும் இந்த வகைப்பட்ட தந்திரங்கள்.....

**திரு. நசிருத்தீன் அகமது :** ஒரு தகவல் தேவை, அது டாக்டர் சியாமப் பிரசாத் முகர்ஜி அல்லவா?

**திருமதி ரேணுகா ரே:** இல்லை, அவர் மத்திய அரசின் கேபினட் அமைச்சர் அல்ல. அவர் எந்த சியாமப்பிரசாத் முகர்ஜி என்பது எனக்குத் தெரியாது.

**திரு. நசிருதீன் அகமது:** அவர் ''இந்துமகா சபையின் தலைவர் டாக்டர் சியாமப் பிரசாத் முகர்ஜி என்று நினைத்தேன்.

**திருமதி ரேணுகா ரே :** அது அவ்வாறு அல்ல. அவர் ''உத்தரப் பாராவைச் சேர்ந்தவர்'' அவர்கள் இத்தகைய தந்திரங்களைக் கையாளுகிறார்கள், திரு. நசீருத்தீன் அகமது கூட ஏமாந்து விட்டார். வைதீக எதிர்ப்பாளர்கள், மகளின் வாரிசு உரிமைகளை அங்கீகரிக்

கின்ற ஒரு சமூகத்தின் உறுப்பினர்களிடையிலிருந்து தமது மிகப் பெரிய ஆதரவாளனைப் பெற்றார்கள். மதிப்புக்குரிய திரு. நசீருதீன் அகமது. தமது சொந்தப் பெண்கள் அனுபவித்துவரும் உரிமை களைத் தமது இந்து சகோதரிகளுக்கு மறுப்பது மிகமிக வியப்புக் குரியதாகும்.

''எதிர்த் தரப்பினர் எல்லா இடங்களிலும் - குறைந்தபட்சம், டில்லியில் - தந்திகளையும், சுற்றறிக்கைகளையும், சுவரொட்டி களையும் கொண்டு எப்படி விளம்பரப்படுத்துகிறார்கள்? அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினர்களுக்குத் தந்திகள் வந்து குவிவது எப்படி? அதேபொழுதில் இந்த மசோதாவின் ஆதரவாளர்கள் அவ்வாறு ஏதும் செய்வதில்லையே?'' என்று சிலர் கேட்கிறார்கள். ஐயா, இந்த மசோதாவை ஆதரிப்பவர்கள், சமூக நல்வாழ்வு அமைப்பு களின் பிரதிநிதிகளுமாவர்; அவர்கள் நாட்டின் நன்மைக்காகப் பாடுபடுபவர்களுமாவர். இன்று அவர்கள் வசமுள்ள எந்த நிதிகள் சம்பந்தமாகவும் ஒரு தேசிய அவசர நிலைமை இருக்கும்போது, தந்திகளையும், கடிதங்களையும் அனுப்புவதற்கு அத்தகைய நிதிகளை அவர்கள் பயன்படுத்திக் கொள்வது சரியா, முறையானதுதானா என்று அவர்கள் பரிசீலனை செய்வதில்லை. அந்த நிதிகளை அகதி களின் புனர் வாழ்வுக்காகப் பயன்படுத்த முடியும். இந்த அவையில் அரசியல் நிர்ணய சபையின் ஓர் உறுப்பினருக்கு ஒரு தந்தி அனுப்பு வதற்கு ரூ. 165 செலவாகிறது. அந்தப் பணத்தைக் கொண்டு ஓர் அகதிப் பெண்ணுக்கு மூன்று மாதங்களுக்கு, புனர் வாழ்வுக்காகத் தொழிற் பயிற்சி அளிக்க முடியும். அந்தத் தந்திகள் உங்களுக்கு அனுப்பப்பட வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களா? இந்த நடைமுறை முற்றிலும் தவறானதென்று கருதுகிறேன். நாம் சுவரொட்டி களையும், சுற்றறிக்கைகளையும், தந்திகளையும் அனுப்பாமலிருந் திருந்தால், மாற்றங்களுக்கான கோரிக்கை தொடர்ந்து இருந்து வரவில்லையென்று பொருள் படாது.

மசோதாவின் ஷரத்துகளைப் பற்றிய மாண்புமிகு சட்ட அமைச் சரின் உன்னதமான, தெளிவான பகுப்பாய்வுக்குப் பின்னர், அதுபற்றி மிகவும் விரிவாக நான் பேசப்போவதில்லை. அது சிறிதும் அவசிய மற்றதாகும். இந்த நாட்டில் ஒற்றுமை மிகவும் விரும்பத்தக்கதாகும். மற்றும் இந்துக்களுக்கு ஒரே சீரான, மற்றும் சர்வாம்சமான சட்டத் தொகுப்பும் அவசியமாகும். இந்த நாட்டில் பெரும்பான்மையாக உள்ள அவர்களுக்கு இது நிச்சயமாக ஓர் அவசியமாகும்.

ஒரு தார மணம் சம்பந்தமாக நான் கேட்க விரும்புகிறேன். இந்த அவையில் அல்லது இந்த நாட்டில் ஒருவர் தமது சொந்த, சகோதரி அல்லது மகள் மீண்டும் திருமணம் செய்துகொண்ட ஒரு மனிதனின் முதல் மனைவியாக இருக்கும் கதிக்கு மனப்பூர்வமாக விரும்புவாரா? பலதார மணம் மிகவும் வழக்கமான ஒன்றாக இல்லை என்பது மெய்யே. மொத்தத்தில் நாட்டில் அது அரிதாகவே உள்ளது. ஆனால் அண்மை ஆண்டுகளில் பலதாரமணம் அடிக்கடி நடைபெறுவதை நாம் கண்டுள்ளோம், இது இந்தியப் பெண் இனத்திற்கு நிரந்தரமான அவமானத்திற்குரியதாகும். அத்தகைய ஆண்களுக்கு இரண்டாவது மனைவிகளாக இருப்பதற்கு சில பெண்கள், அதைத் தெரிந்தும், விருப்பத்துடன் உடன்படுகிறார்கள். அத்தகைய ஆண்களின் முதல் மனைவிகளாக இருக்கும் பெண்களின் குறைகளையும் பரிதாபமான நிலைமையையும் சீர்செய்வதற்கு சட்டம் முன்வர வேண்டும் என்ற விஷயத்தை விவரிக்க வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

கலப்பு மணம் மற்றும் ஒரே கோத்திரத்தில் நடைபெறும் திருமணம் ஆகியவற்றைப் பற்றிக் கூறுவதெனில், நமது அரசியல் சாசனத்தின் அடிப்படை உரிமைகளில், சாதி, பாலினம் மற்றும் பிறவற்றின் காரணமான அனைத்துப் பாகுபாடுகளும் போகவேண்டும் என்று நாம் கூறும்போது, அனுமதிக்கப்படக்கூடிய ஒன்றாகிய கலப்பு மணம், அதை நோக்கிய ஒரு முதல் நடவடிக்கையேயாகும் என்பது நிச்சயம்.

**திரு. துணைத் தலைவர்:** சாதி போக முடியும், பாலினம் எவ்வாறு போக முடியும்?

**திருமதி ரேணுகா ரே:** 'சாதி மற்றும் பாலினம் சம்பந்தமான பாகுபாடு' என்றுதான் நான் கூறினேன்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்புக்குரிய உறுப்பினர் தொடர்ந்து பேசலாம்.

**திருமதி ரேணுகா ரே :** இந்த சட்டத் தொகுப்பில் உள்ள விவாகரத்து ஷரத்தைப் பொறுத்தமட்டிலும், இதிலுள்ள நிபந்தனைகள் குறிப்பிட்ட வரம்புக்குட்பட்டவையாகும் என்பதை ஒத்துக் கொள்கிறேன். இல்லம் தான் சமுதாயத்தின் மையக்கருவாகும். மேலும் திருமணத்தின் பிரதான (அடிப்படையான) காரணம், அது குழந்தை

களின் பாதுகாப்பிற்காகத்தான் என்று நம்புகிறேன்; எனவே அற்பக் காரணங்களுக்காக விவாகரத்துகள் அனுமதிக்கப்படக்கூடாது. ஆனால், மிகுந்த சிரமங்களைத் தோற்றுவிக்கும் மெய்யான காரணங்களின் பொருட்டு விவாதத்துக்கு அனுமதிக்கலாம். 1943லிருந்து, திருமணச் சட்டம் முதல்முதலில் அறிமுகம் செய்து வைக்கப்பட்ட போது, எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்தன; பலர் தங்களுடைய புதல்விகளுடன் என்னிடம் வந்தனர்; பெண்கள் எவ்வளவு மோசமான, பயங்கரமான கஷ்டங்களை அனுபவிக்கின்றனர் என்பதை எனக்குக் காட்டினர். ஆண்களுக்கும் பெண்களுக்கும் அத்தகைய ஒரு ஷரத்து இல்லாவிட்டால், அது உண்மையான தேவைகளைத் திருப்திப்படுத்தாது. ஐயா, இந்த அம்சத்தைப் பற்றிப் பேசும்போது நான் சிறிது விபரமாகக் கூறுகிறேன்; நான் கூறிய எதிர்ப்பாளர்கள், சட்டத்தையோ, அல்லது சட்டத் தொகுப்பின் ஷரத்துகளையோ, புரிந்துகொள்ள முடியாத பல பெண்களிடம் சென்று அவர்களுடைய புதல்விகளே தாங்கள் விவாகரத்து செய்யப்படக்கூடிய வகையில் சட்டங்களைக் கொண்டுவர முயல்கிறார்கள் என்று சொல்லி வருகின்றனர். இது ஒரு அனுமதி தருகிற நடவடிக்கை மட்டுமேயாகும் என்பதை அவர்கள் உணருவதில்லை; பாதிக்கப்பட்ட நபர் மட்டுமே விவாகரத்தைக் கோரமுடியும். அவருக்குத்தான் ஜீவனாம்சத்திற்கும் வகை செய்யப்பட்டுள்ளது. இவைகளெல்லாம் கூறப்படவில்லை. நூற்றுக்கணக்கான பொதுக் கூட்டங்களில் இந்த விஷயங்கள் என்னுடைய கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டன; நான் இந்த விஷயத்தை விளக்க வேண்டியதேற்பட்டது. இந்தப் பேரவையின் பெண் உறுப்பினர்களும் அதே விஷயத்தைக் கூறுவார்களென்று கருதுகிறேன். மிதாக்ஷரா கூட்டுக் குடும்பத்தைப் பொறுத்தமட்டிலும், மாண்புமிகு சட்ட அமைச்சர் கூறியதற்கு மேல் மேற்கொண்டு ஒரு வார்த்தை கூடுதலாகச் சொல்வதற்கு எந்தத் தேவையுமில்லை என்று கருதுகிறேன் அவர் அதை முழுமையாக விவரித்துக் கூறியுள்ளார்.

மகளின் வாரிசுரிமைப் பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், எதிர்த்தரப்பினர், அதைத்தான் மையப்படுத்துகின்றனர். இது இயல்பானதுதான். ஏனெனில், இது அவ்வளவு குருட்டுப் பிடிவாதமல்ல என்பதையும், அவ்வளவு கண்மூடித்தனமான துவேஷம் அல்ல என்பதையும் நிரூபணம் செய்கிறது, மாறாக, ஆதிக்கவாதிகள்தான் எதிர்க்கின்றனர். மாண்புமிகு சட்ட அமைச்சர் ஏற்கனவே இந்த அம்சம் பற்றிப் பேசியிருக்கிறார். ஆயினும் நான் மேலும் ஒன்றிரண்டு விஷயங்கள் கூறுவதற்கு விரும்புகிறேன். மகளின் வாரிசுரிமையை அங்கீகரிப்பதன் மூலமே, ஒரு பெண்ணின் பொருளாதார அந்தஸ்தை

மாலை 4 மணி

நிர்ணயிக்க முடியும். என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் சேத் கோவிந்த தாஸ் நேற்று இந்த விஷயத்தைப் பற்றிப் பேசும்போது ''நமக்கு எதற்கு வாரிசுரிமை வேண்டும்?'' என்று கேட்டார். எவ்வளவு தூரம் இதனை நம்புகிறார் என்று எனக்குத் தெரியாது. எல்லோருக்கும் சம வாய்ப்பு என்பதை நாம் விரும்பினால், அதில் நம்பிக்கை இருந்தால், செல்வத்தில் ஏற்றத்தாழ்வுகள் போக வேண்டுமென்று நாம் விரும்பினால், வாரிசுரிமையாகப் பெற்ற சொத்தும் போவதற்கான நேரம் வரும். நிச்சயம் வரவேண்டும் என்று நானும் ஒத்துக்கொள்கிறேன். ஆனால் அந்த நேரம் வரும் வரையில், ஆனால் அதுவரையிலும், மகளுக்கும் மகனுக்கும் வேறுபாடு இருந்தால், அந்த வேறுபாடானது அந்தஸ்தில் உள்ள வேறுபாடு என்றுதான் பொருள். மகளின் அந்தஸ்தை அங்கீகரிக்க வேண்டும். அவள் ஒரு மகள், ஒரு பெண் என்ற வகையில் ஓர் இயல்பான வாரிசு ஆவார். நான் இதைக் கூறுவது, ஒரு தத்துவார்த்தக் கண்ணோட்டத்திலிருந்து மட்டுமல்ல, உயில் எழுதாமல் இறந்து போகின்றவரின் வாரிசுகளைப் பற்றியும் நாம் விவாதித்துக் கொண்டிருக்கிறோம். என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் பண்டிட் பர்கவா என்ன கூறியிருந்தபோதிலும், ஒரு மாமனார் செய்வதைப் போலல்லாது, ஒரு தகப்பனார் தனது மகளை தனக்கு வாரிசல்ல என்று கூறமாட்டார் என்பது மிகவும் இயல்பானதாகும். ஒரு கூட்டுக் குடும்பத்தில், ஒரு பெண்ணின் உரிமைகள், கடந்துபோன ஆண்டுகளில் மிகவும் பயனுள்ள நோக்கத்திற்கு சேவை புரிந்திருக்கக்கூடும். ஆனால், தற்போதுள்ள நிலைமைகளில், அண்மை ஆண்டுகளில் அதைப் பற்றி அவ்வளவு நிச்சயமாகக் கூறமுடியாது. என்னுடைய மதிப்புக்குரிய நண்பர், சுசேதா கிருபளானி நேற்றைய தினம் கூறிய ஒரு விஷயத்தை ஆமோதிக்க விரும்புகிறேன். சமூக ஊழியர்களாக இருக்கும் ஆண்களும் பெண்களும் இந்த நாட்டில் காப்பகங்களில் உள்ளவர்களைப் பற்றிய ஒரு பகுப்பாய்வு மேற் கொண்டால் இந்தப் பெண்களில் எவ்வளவு பேர் கூட்டுக் குடும்பத்திலிருந்து வெளியேற்றப் பட்டவர்கள் என்பதை அறிவார்கள். தங்களுடைய வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டு தங்களுடைய சொந்தப் பிழைப்புக்கு சம்பாதிப்பதற்கு பயிற்சி இல்லாத இந்தப் பெண்கள், அவமானகரமான ஒரு வாழ்க்கை வாழும்படியான நிர்ப்பந்தத்திற்குள்ளாகிறார்கள். இது இந்து சமுதாயம் எதிரிட வேண்டிய ஒரு பிரச்சினையாகும். இந்து சட்டங்களை உருவாக்கியவர்கள் இத்தகைய ஒரு நிலைமை ஏற்படும் என்று எண்ணியிருக்க மாட்டார்கள் என்று நிச்சயமாகக் கூறுவேன்.

பெண்கள்தான் எந்த ஓர் இனத்தினருக்கும் தாய்மார்கள்; அதனுடைய பெண்கள் பொறுப்புள்ள தாய்மார்களாகவும் உணர்வுபூர்வமான பிரஜைகளாகவும் ஆகின்றவரையில் எந்த இனமும் முன்னேற முடியாது. கல்வி கற்ற பெண்கள் சம்பந்தமாக பெருமளவு பிரச்சாரம் நடத்தப்பட்டு வந்துள்ளது. விரல் விட்டு எண்ணத்தக்க கல்வி கற்ற பெண்கள்தான் இந்த இந்து சட்டத் தொகுப்பை விரும்புகின்றனர்; மிகவும் தயக்கமுடன் மென்மையான இந்த சீர்திருத்த மசோதாவை விரும்புகின்றனர் என்று கூறப்படுகிறது. ஐயா, பெண்களைப் பொறுத்தமட்டிலும், அது விரல்விட்டு எண்ணத்தக்கவர்களே, ஏனெனில் பார்க்கப்போனால், இந்த நாட்டில் கல்வி கற்றவர்கள் 15 சதவீதம் பேர்களே, கல்வி கற்ற பெண்கள் இப்பொழுதும் கூட 3 அல்லது 4 சதவீதமானவர்களே. எனவே, பெண்களைப் பொறுத்தமட்டிலும், அவர்கள் விரல்விட்டு எண்ணத்தக்கவர்களே. ஆனால், அவர்களுக்குப் பின்னால் - இன்றுமட்டுமல்ல, கடந்த பல பத்தாண்டு காலத்திலிருந்தே, பெருமளவான அறிவொளி பெற்ற, முற்போக்கான ஆண்கள் இருந்து வருகிறார்கள். பெண்களுக்கு வாக்குரிமை கோரும் இயக்கமோ, பெண்ணிய இயக்கமோ இந்த நாட்டில் இல்லையென்றால், அதற்கு இந்த நாட்டின் பெண்கள் மட்டும் பொறுப்பல்ல - இதற்குக் காரணம் கடந்த பல பத்தாண்டுகளாக, அவர்களுக்காகப் பாடுபடுபவர்கள் அறிவொளி பெற்ற ஆண்களாகத் தான் இருந்து வந்துள்ளனர். இன்னும் அதே நிலைமை நீடிக்கிறது, இந்த அவையிலுள்ள பெரும்பான்மையோரும் எங்களுக்கு ஆதரவாக உள்ளனர் என்று நிச்சயமாக நம்புகிறேன். இந்தக் கோரிக்கை இந்த நாட்டின் கல்வி கற்ற பெண்களிடமிருந்து வரவில்லை; மாறாக, இந்தியா முன்னேற வேண்டும் என்று விரும்பகிற அனைவரிடமிருந்தும் வந்துள்ள கோரிக்கையாகும் இது ஏனெனில், பெண்கள் உணர்வுபூர்வமான பிரஜைகளாகாமல், சமுதாயத்தில் அவர்களுக்கு உரிய இடத்தை எடுத்தக் கொள்ளாமல், நாம் முன்னேறிச் செல்வது சாத்தியமல்ல.

ஐயா, அடிமைகள், அவர்களது அடிமைத் தளைகள் அகற்றப்பட்டபோது எதிர்த்தார்கள் என்பது நன்கு தெரிந்ததே. பண்ணையடிமைகள் விடுதலையை எதிர்த்தார்கள் என்பதும் உண்மையே. இன்னும் என்னவெனில், நம்முடைய நாட்டிலேயே, கேடுகெட்ட காங்கிரஸ் கிளர்ச்சிக்காரர்கள்தான் சுதந்திரத்தை விரும்புகிறார்கள் என்றும், சாதாரணப் பொது மக்கள் அடிமைத்தளத்திலேயே திருப்தியுடன் இருப்பதற்கு மிகவும் விருப்பமாக இருக்கிறார்கள் என்றும்

பிரிட்டிஷ்காரர்கள் கூறினார்கள். இன்று பெண்களிடையில் பரிதாபத்துக்குரிய திருப்தி இருப்பதைப் பற்றி நீங்கள் கூறினால் அது மெய்யே. பல பெண்கள் இன்னும் உணர்வு பெறவில்லை என்பது முற்றிலும் உண்மையே. ஆனால் நீங்கள் அவர்களை விழிப்படையச் செய்யாததற்கு, அவர்கள் உணர்வு பெறும்படி நீங்கள் செய்யமாட்டீர்கள் என்பதும், சுதந்திரச் சூழ்நிலையில் ஒரு புதிய இந்தியாவைக் கட்டியமைப்பதற்கு இன்று நம்முன் உள்ள கூட்டுப் பணியில் ஆண்களுடன் அவர்கள் சமநிலை வகிக்கக் கூடாது என்று நீங்கள் கருதுவதும்தான் அதற்குக் காரணமா? இந்த நாட்டின் பெண்கள் இல்லாமல் முன்னோக்கி ச் செல்வது சாத்தியம் என்று உணருகிறவர் யாராவது இருக்கிறார்களா என்று கேட்கிறேன்.

நான் முடிப்பதற்கு முன்னதாக, என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா கூறியதைப் பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் கூறுவதற்கு விரும்புகிறேன். அவர் கூறியுள்ளதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை என்று நான் கூறியாக வேண்டும். இன்று காலையில் அவர், இந்த சட்டப் பேரவையின் தகுதியைப் பற்றி ஐயப்பாடு தெரிவித்தார். பிற்பகலில், அவர் பேசி முடிப்பதற்கு சற்று முன்னால் அவர் கூறினார்....

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** இந்த சட்டப் பேரவையின் தகுதியை குறித்து நான் ஒருபோதும் ஐயம் எழுப்பியதில்லை.

**திருமதி ரேணுகா ரே :** எனவே, அவர் கடைசியாகக் கூறியது தான் சரியானது என்று ஏற்றுக்கொள்கிறேன். 11 பேர்களுடைய ஆட்சேபக் குறிப்புகளைப் பற்றி அவர் நிறையப் பேசினார். ஆனால் இந்த ஆட்சேபக்குறிப்புகள் பலவும் சிறு பிரச்சினைகளைப் பற்றியவை என்பதையும், வழக்கமாக எல்லா மசோதாக்களுடனும் இத்தகைய ஆட்சேபனைக் குறிப்புகள் சேர்க்கப்பட்டிருக்கும் என்பதையும், எனவே அதனால் அந்த மசோதாக்கள் மறு சுற்றுக்கு விட வேண்டுமென்று அர்த்தமல்லவென்பதையும் அவர் அறிவார். இந்த அவையும் அறியும். இந்த அரசியல் நிர்ணயசபை இந்தியாவின் அரசியல் சாசனத்தை வரைவதற்குத் தகுதியுடையதல்ல என்று அவர் கூறியபோது இரண்டு தவறுகள் ஒரு சரியானதாகாது என்று பண்டிட் பர்கவா இன்று காலையில் கூறினார். இது அவ்வளவு தவறானதெனில், அந்தத் தவறான பேரவையில் அவர் எவ்வாறு தொடர்ந்து இருக்கிறார் என்பது எனக்கு வியப்பாக இருக்கிறது. அவரை நான் மறுத்துப் பேசப் போவதில்லை. மேலும் இன்று

பிற்பகலில் அவர் பேசிய அனைத்தைப் பற்றியும் நான் மீண்டும் பேசப் போவதில்லை. ஏனெனில், அவர் பேசுவதற்கு முன்பாகவே, மாண்புமிகு சட்ட அமைச்சர் மிகவும் திறமையாக பதில் கூறியுள்ளார், அவற்றில் சிலவற்றை பண்டிட் பர்கவாவே மறுத்துள்ளார்.

கடைசியாக ஒரு விஷயத்தைக் கூற விரும்புகிறேன். இந்த மென்மையான, தயக்கத்துடன் கூடிய சீர்திருத்த மசோதாவால் இந்து சமுதாயத்திற்கே ஆபத்து ஏற்பட்டுள்ளது என்று ஒரு கூக்குரல் எழுந்துள்ளது. இந்து சமுதாயத்திற்கு ஆபத்து ஏற்பட்டுள்ளது என்று நானும் கூட நினைக்கிறேன், அதற்கு மிகக் கடுமையான ஆபத்து ஏற்பட்டுள்ளது - அதைக் கட்டுப்படுத்தித் தளையிடுவோரால் அந்த ஆபத்து ஏற்பட்டுள்ளது. காலங்கடந்து போன பழக்க வழக்கங்களை மாற்றுவதற்கு அனுமதிக்காதவர்களிடமிருந்து ஆபத்து வருகிறது மாறாக, அவர்கள் நமது சமுதாயத்தின் உயிர் நாடியான ரத்த ஓட்டத்தை உறைய அனுமதிக்கிறார்கள். இந்து சமுதாயத்தைப் பற்றி இன்று மிகவும் கவலைப்படுவதாகத் தோன்றுகிறவர்கள் சிறிது சிந்தித்துப் பார்ப்பார்களேயானால், மாண்புமிகு சட்ட அமைச்சர் கூறியுள்ளதை அவர்கள் ஒத்துக் கொள்வார்கள். அதாவது, நீங்கள் உயிர் பிழைக்க விரும்பினால் இந்து சமுதாயத்தைப் பழுதுபார்த்து சரி செய்யவேண்டும். இந்து சமுதாயத்தின் காவலர்கள் என்று தங்களை மார்தட்டிக் கொள்வதற்கு அவர்களுக்கு யார் அதிகாரம் தந்தார்கள்? நூற்றாண்டு நூற்றாண்டாக மாறிவரும் காலத்துடன் இணைந்து தானும் மாறி வரும் இந்து சட்டத்தைக் கட்டுப்படுத்தி தளையிடுவதற்கு விரும்புகிறவர்களை இந்து சமுதாயத்தை மற்றும் இந்து சட்டத்தை விளக்கிக் கூறும் ஆர்வலர்கள் என்று நான் கருதவில்லை. அதை மேம்படுத்தி, நமது முன்னோர்களின் பண்பாட்டுக்கும் பராம்பரியத்திற்கும் இசைவாக மீண்டும் அதைக் கொண்டு வர விரும்புகிறவர்களை, அதற்கு எதிராக இருப்பவர்களாக நான் கருதவில்லை. அதைக் கட்டுப்படுத்தித் தளையிடுபவர்கள் இந்து சமுதாயத்தின் நண்பர்களல்ல, மாறாக விரோதிகள் என்று கருதுகிறேன். கடந்த பல ஆண்டுகளின்போது இந்துக்கள் அடிமைகளாயிருந்து சீரழிந்த பல நூற்றாண்டுகளின்போது இந்து சமுதாயம் தான் இழந்தவற்றையெல்லாம் திரும்பப் பெறவேண்டுமென்றால், இந்த நாட்டில் இன்று நிலவுகின்ற சுதந்திரச் சூழலுக்கு இசைவாக இது தன்னை சரி செய்து கொள்ள வேண்டும். ஆண்களும் பெண்களும் நாட்டுக்கு சம அளவில் பங்காற்றுவதற்கு முன்வரவேண்டும். இந்த நாட்டின் சமூக சட்டங்களில் சமத்துவம் இல்லாவிட்டால், சமுதாயத்தில் சமத்துவம் இருக்க முடியாது. எனவே, இன்று இந்த சட்டத் தொகுப்பை எதிர்ப்பவர்கள், இதுபற்றிச் சிறிது கூடுதலாகச் சிந்திக்க

வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர்கள் அவ்வாறு செய்யா விட்டால், இந்து சமுதாயமும், இந்து சட்டமும் பின்தங்கிப் போய் விடக்கூடும், ஏனெனில் முன்னேற்ற பவனி தொடர்ந்து நடைபெற வேண்டும். இந்தியா அடிமைத்தனத்திற்கோ அல்லது பிறருடைய ஆதிக்கத்தின் கீழோ பின்னோக்கிப் போகப் போவதில்லை.

*திரு. பி.எஸ். சர்வாத்தே (மத்திய பாரத்) : இந்த மசோதாவைப் பற்றி அறிவு சார்ந்த முறையிலும் தெளிவாகவும் விளக்கமளித்த தற்காக, டாக்டர் அம்பேத்கருக்கு என்னுடைய பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்வதற்கு விரும்புகிறேன். ஒரு பேராசிரியர் என்ற வகையிலும் வழக்கறிஞர் என்ற வகையிலும் அவர் சிறப்பாகப் பேசினார். மசோதாவின் பல ஷரத்துகளைப் பொறுத்தமட்டிலும், ஒருவர் சிலவற்றை ஒத்துக்கொள்ளலாம், சிலவற்றுடன் கருத்து மாறுபடலாம், உடன்படும் அம்சங்களைப் பற்றியோ, அல்லது வேறுபடும் அம்சங்களைப் பற்றியோ அதிகம் பேசவேண்டிய தருணம் இதுவல்ல. பொதுவான விவாதத்தில் சில பொதுவான கோட்பாடு களைப்பற்றி மட்டும் கூறுவதற்கு விரும்புகிறேன். இந்தக் கோட்பாடு களில் இந்த மசோதா, இதுவரையிலும் இந்து சட்டத்திற்கு பின்னால் அடங்கியிருந்த கண்ணோட்டங்களுக்கு அடிப்படையாகவே எதிர் திசையில் செல்கிறது என்பது என்னுடைய தாழ்மையான கருத்தாகும்.

இந்து சமுதாயத்தின் ஒரு கணிசமான பகுதி இந்த மசோதா விற்கு எதிராக இருந்து வந்துள்ளது. அதை மறுக்க முடியாது. அதை மறைக்கவும் முடியாது. இது, ''மதத்திற்கு ஆபத்து'' என்ற கூக்குர லாகும் என்று சிலர் கூறக்கூடும்; இது மன உணர்ச்சி அடிப்படை யிலானதாகும்; இது அர்த்தமற்றது என்று கூறக்கூடும். அதே சமயத் தில், 20 கோடிக்கு மேற்பட்டவர்களின் ஒரு சமுதாயத்தை ஜீவா தாரமான முறையில் பாதிக்கின்ற ஒரு சட்டத்தை இயற்றுவதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டிருப்பவர்கள், நின்று நிதானித்து, இத னுடைய சாராம்சத்தைப்பற்றி யோசிப்பது அவசியமாகும். இவ்வளவு அதிகமானபேர் - அறிவார்ந்த, கல்விஞானமுடையவர்கள் - இதை எதிர்ப்பதற்கு அந்த மசோதாவில் என்ன இருக்கிறது என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

*(இந்தக் கட்டத்தில், திரு. துணை சபாநாயகர், தலைமைப் பீடத்திலிருந்து எழுந்து சென்றார், பின்னர், திரு. எஸ்.வி. கிருஷ்ண மூர்த்தி ராவ் (தலைவர் பட்டியலில் உள்ளவர்களில் ஒருவர்) அவைத் தலைவராக அமர்ந்தார்).*

---

★ அ.நி. (சட்டப்பேரவை) : டி. தொகுதி II, பாகம் II, பிப்ரவரி 25, 1949; பக். 929-34.

இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். நான் குறிப்பிடும் முதல் அம்சம் கூட்டுச் சொத்தின் தன்மையில் ஏற்பட்டுள்ள மாற்றமாகும். கூட்டுச் சொத்தின் இணை வாரிசு உரிமை அம்சம், அதற்குப் பின்னால் சில மிகவும் உன்னத மான கருத்துக்களைக் கொண்டிருக்கிறது என்று நான் தெரிவித்துக் கொள்வத்கு விரும்புகிறேன். இணை வாரிசு உரிமை என்றால், ஒரு சமுதாய அக்கறை இருக்கிறது. இணை வாரிசுரிமை என்றால், இணை நலன் என்பதை இந்த அவையின் ஒவ்வொரு உறுப்பினரும் அறிவார். ஒவ்வொரு நபருக்கும் அனுபவிப்பதற்கு முழுமையான உரிமை இருக்கிறது என்று பொருளாகும். அதேபொழுதில் அந்த நபருக்குத் தனிப்பங்கு கிடையாது, சொத்தை யாருக்கும் மாற்றிக் கொடுப்பதற்கு உரிமையில்லை என்பதும் இதன் பொருளாகும். நவீனகால சமுதாயத்தின் முழுப் போக்கும், சமுதாயத்தின் சிந்தனைப் போக்கும் இந்தத் திசைவழியில்தான் இருக்கிறது. கம்யூனிஸ்டுகளை நாம் கண்டனம் செய்யக்கூடும், ஆனால், கம்யூனிசம் அதனுடைய தூய்மையான வடிவத்தில், சில விஷயங்கள் களையப்பட்ட வடிவில் நிச்சயம் ஏற்படும், ஏற்படத்தான் செய்யும். இந்த அம்சத்தில் கம்யூ னிசம் என்றால் என்ன? நான் புரிந்துகொண்டுள்ளபடி, அதன் பொருள் ''ஒன்வொரு மனிதனும் அவனது சக்திக்கு ஏற்றபடி உழைக்க வேண்டும், ஒவ்வொருவரும் அவரது தேவைக்கேற்பப் பெற வேண்டும்.'' வேறு சொற்களில் கூறுவதெனில், ஒரு மனிதன் தனது கையிலுள்ள செல்வத்தைக் குறைந்தபட்சமாக அனுபவிக்க வேண்டும், அவன் தனது தனித்தன்மையைக் களையவேண்டும். சொத்தில் தனக்குத் தனியுரிமை இருப்பதாக அவன் ஒருபோதும் கருதக்கூடாது. இதுதான் அடிப்படையான கண்ணோட்டமாயிருந் தால், முற்போக்கான சிந்தனை உலகம் இந்தத் திசையில் நகர்ந்து கொண்டிருக்கிறதென்றால், எதிர்திசையில் செல்வது தவறாகும் என்பது ஒப்புக்கொள்ளப்படும் என்று நம்புகிறேன். அத்தகைய ஒரு கருத்தை வளர்ப்பதற்கும், இந்தக் கருத்தைப் பேணி வளர்க்கும் அமைப்புகளை ஊக்குவிப்பதற்கும் எல்லா முயற்சியும் செய்யப்பட வேண்டும். டாக்டர் அம்பேத்கர் தமது உரையில், இந்த கூட்டு வாரிசுரிமைக் கருத்தைக் குலைப்பதற்கு ஸ்மிருதிகாரர்களும் மற்றவர் களும் இதுவரையிலும் செய்த முயற்சிகளை விபரமாக எடுத்துக் கூறினார். இது இவ்வாறுதான் இருக்கிறது என்று கருதிக்கொண்டால், இப்பொழுது எதிர் திசையில் முயற்சி செய்யப்பட வேண்டும் - குலைக்கும் நிகழ்ச்சிப் போக்கைப் பூர்த்தி செய்வதற்கல்ல, மாறாகக் கூட்டுவாரிசுரிமை சொத்தைக் காப்பாற்றுவதற்காக.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** இது சாத்தியமேயல்ல.

**திரு. வி.எஸ். சர்வாதே** : சாத்தியமில்லையா? ஆம், முயற்சி செய்யப்படாததெல்லாம் "அசாத்தியம்" என்று கூறி தவிர்க்கப்படுகிறது.

நீங்கள் முயற்சி செய்தால், இந்த உலகில் எதுவுமே சாத்தியமற்றதல்ல. எனவே இப்பொழுது கூட்டுவாரிசு சொத்துரிமை அமைப்பு ஒத்துக்கொள்ளப்படுகிறது என்று தெரிவித்துக் கொள்கிறேன். கூட்டு சொத்து வாரிசின் ஒவ்வொரு தனிப்பட்ட நபரும் அவருக்கு அதில் தனிப்பட்ட பிரத்தியேக நலன் இல்லாவிட்டாலும், அவர் அதிலுள்ள தனது தனிப்பட்ட நலனை யாருக்கும் மாற்றிக் கொடுக்க முடியாவிட்டாலும் - பொதுச் சொத்தைப் பூரணமாக அவர் அனுபவிக்கலாம். எனவே இதைப்பற்றி விவாதிக்க முயலும்போது, இந்தக் கூட்டு வாரிசுரிமைக் கருத்தை முழுமையாக எடுத்துக் கொள்ள வேண்டும். மிதாக்ஷராவினால் உருவாக்கப்பட்ட இந்தக் கூட்டுச் சொத்துரிமைக் கருத்து இதுதான் என்று தோன்றுகிறது: அதாவது உயிருடன் இருப்பவருக்கு உரிமை இருக்கிறது, ஒவ்வொரு குடும்பமும் ஒரு யூனிட், ஒரு தனிநபரல்ல. இதன் பொருள், குடும்பம், அதைச் சேர்ந்த தனிநபர்கள் இறந்துபட்டபோதிலும் தொடருகிறது என்பதுமாகும். ஒருவர் ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் சம அளவில் சொத்தை அனுபவிப்பதற்கு அவருக்கு உரிமை உண்டு. இந்த அர்த்தத்தில் பாலின சமத்துவம் இருக்கிறது. எனவே, குடும்பத்தின் சொத்து (எதுவாக) எவ்வளவாக இருந்தபோதிலும் குடும்ப உறுப்பினர்களாக உள்ள நபர்களுக்கு அது போய்ச்சேரும் என்று ஏற்படுகிறது. எனவே ஒரு மகள், மற்றொரு குடும்பத்தின் உறுப்பினராக இருந்தால், அவர் முந்தையக் குடும்பத்தின் உறுப்பினராக இருக்க முடியாது, எனவே, அவசியமாகவே, அவர் அந்தக் குடும்பத்தில் எந்த உரிமையையும் அனுபவிக்க முடியாது. இது ஒரு மகளின்பால் புறக்கணிப்போ, அநீதியோ அல்லது அன்பு இல்லாமையோ ஆகாது. கூட்டுக் குடும்பம் என்பதன் கருத்தே இதுதான்: அதில் யார் உறுப்பினராக இருந்தாலும், விதவையாக இருந்தாலும் ஆணாகவோ, பெண்ணாகவோ இருந்தாலும், அவர் அக்குடும்பத்தின் உறுப்பினராக தொடர்ந்து இருக்கும் வரையிலும் அவர் குடும்பத்தின் சொத்தை அனுபவிக்கிறார், அதை மாற்றிக் கொடுப்பதற்கு யாருக்கும் உரிமை இல்லை. கூட்டுக் குடும்பத்தின் சொத்தைப் பிரிவினை செய்க்கூடாது, மற்றும் கூட்டுக் குடும்பத்தின் எந்த நபரோ அல்லது தனி நபரோ, குடும்பத்தின் சொத்தை யாருக்கும் மாற்றிக் கொடுப்பதற்கு எந்த உரிமையும் கிடையாது என்ற ஷரத்து சேர்க்கப்பட்டிருந்தால் நான் வரவேற்றிருப்பேன். அது, சரியான திசை வழியில் மிகவும் வரவேற்கத்தக்கதாக இருந்திருக்கும். அது கூட்டுக் குடும்ப அமைப்புக்கு அடிப்படையாக உள்ள கருத்துக்கு ஏற்றதாக இருந்திருக்கும்.

குடும்பம்தான் சமுதாயத்தின் ஓர் யூனிட்டாக எடுத்துக் கொள்ளப்படுகிறதேயன்றி, ஒரு தனி நபரையல்ல. இந்தக் கண்ணோட்டத்திலிருந்துதான், என்னுடைய எந்த சகோதரியும், தான் மோசமாக நடத்தப்பட்டதாகக் கருதவேண்டிய அவசியமில்லை; ஏனெனில் அவரும் அவருடைய சகோதரரும் அந்த அம்சத்தில் சம உரிமைகளைக் கொண்டிருக்கின்றனர். எனவே, இந்தியா போன்ற ஒரு பரந்த நாட்டில் சமூக யூனிட்டுகள் மீது தனித்தனிப் பரிசோதனைகள் இருந்தால் எதுவும் இழக்கப்பட்டுவிடாது என்று மாண்புமிகு டாக்டர் அம்பேத்கருக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஒரு தனி நபர் ஒரு யூனிட்டாக இருக்க வேண்டுமென்று விருப்பப்பட்டால் அந்தப் பரிசோதனை எங்காவது முயற்சி செய்து பார்க்கப்படலாம். கூட்டுக் குடும்பம்தான் சமுதாயத்தின் ஒரு யூனிட்டாக இருக்க வேண்டுமென்றால் அந்தப் பரிசோதனையும் சில இடங்களில் தொடர்ந்து நடத்தப்படலாம். சமுதாயத்தில் பல்வேறு பரிசோதனைகள் நடத்தப்பட வேண்டிய அளவுக்கு நம் நாடு போதுமான அளவு ஒரு பெரிய நாடாகும். இரண்டும் தொடரட்டும், மக்கள் தாங்கள் பின்பற்றுவதற்கு விரும்புகிற சட்டத்தை அல்லது அமைப்பைத் தெரிந்தெடுத்துக் கொள்ளட்டும். இந்தியாவின் 20 கோடி மக்களுக்கு ஒரேசீரான சட்டத்திற்கு பதிலாக, இந்த நாட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட அமைப்புகள் இருந்தால் அதனால் நமக்கு எந்த இழப்பும் ஏற்பட்டுவிடப்போவதில்லை.

இது தொடர்பாக, அம்பேத்கர் கூறிய ஒரு விஷயத்தைப் பற்றி நான் குறிப்பிட விரும்புகிறேன். அவருடைய அறிவாற்றலுக்காக அவரைப் பாராட்டுகிறேன். மதிப்புடன் அவருடைய உரையைக் கேட்டேன். ஏனெனில் அவருடைய வாதங்களின் நலனுக்காக, யார் மீதும் அவர் ஒருபோதும் சாடியதில்லை. அவருடைய தாக்குதல்கள் கனமானவை, ஆனால் அவை நேர்மையாகவும் நிதானமாகவும் இருந்தன. ஆனால் அன்றைய தினம் அவருடைய தெளிவான உரையின்போது பழங்காலத்திய பிராமணர்கள் 137 ஸ்மிருதிகளை உள்ளடக்குவதில் ஏன் ஈடுபட்டிருந்தனர் என்று தனக்குத் தெரியவில்லை என்று கூறி, அவர்களுக்கு வேறு நல்ல வேலையிருக்கவில்லையா என்ற வினவினார். மாண்புமிகு அமைச்சர் இதைக் கூறும்போது, அவருடைய வரலாற்று ரீதியான பார்வை ஒரு நிமிடம் அவரை விட்டு அகன்றுவிட்டிருந்தது. இந்த 137 ஸ்மிருதிகள் ஒரே சமயத்தில் எழுதப்பட்டவை அல்ல என்று அவருக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். குறைந்தபட்சம் 250 ஆண்டுகளை உள்ளடக்கிய காலகட்டத்தில் அவை எழுதப்பட்டவையாகும். இவ்வாறு சராசரியாக,

ஒவ்வொரு ஸ்மிருதியையும் எழுதுவதற்கு சுமார் 20 ஆண்டுகள் பிடித்திருக்கும். ஒவ்வொரு தலைமுறைக்கும் ஒன்று என்பது இதன் பொருளாகும். ஆனால் இங்கு என்ன ஏற்படுகிறதென்றால், ஓராண்டு காலத்தில் மாண்புமிகு டாக்டர் ஒன்றுக்கு அதிகமான ஸ்மிருதி களை உருவாக்குகிறார். எனவே அந்த அவமதிப்பான சொற்களை அவர் கூறியிருக்க வேண்டியதில்லை. அவருடைய வாதத்தை விளக்கு வதற்கு அது சிறிதும் அவசியமற்றதாகும்.

ஐயா, நான் கூட்டுக் குடும்பச் சொத்தைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தேன். கூட்டுக் குடும்பத்தின் சொத்தின் அடிப்படை யான கோட்பாடு என்னவெனில் அது கட்டுப்படுத்தப்பட்ட முறை யில் அதை அனுபவிப்பதற்கு அனுமதிக்கிறது என்பதுதான் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

ஐயா, இந்து பண்பாடு என்றால் என்ன, இந்து சமயம் என்பது என்ன என்று அடிக்கடி கேட்கப்படுகிறது, பேரறிஞர்களே இதைப்பற்றி விளக்குவதற்கு அச்சப்படும்போது, என்னைப் போன்ற பிறருக்கு இதுபற்றி அவசரப்பட்டுக் கூறுவது சிரமமானதாகும். இருந்தபோதிலும், ஒருவர் சில சமயங்களில் தற்காலிக முயற்சிகள் செய்ய வேண்டியுள்ளது. அந்த முயற்சியை இப்பொழுது மேற் கொள்கிறேன். தற்போது விவாதத்திலுள்ள பொருளைப் பொறுத்த மட்டிலும், இந்துக்கள் தங்களுக்கு முன்னால் வைத்துக் கொண் டிருக்கிற அடிப்படையான அம்சங்கள், அனுபவிப்பதன் மீது நெடு கிலும் கட்டுப்பாடு இருக்கவேண்டும் என்பதாகும் என்று கருது கிறேன். அதாவது, அனுபவிப்பதை ஊக்குவிப்பது அல்ல, மாறாக அனுபவிப்பதன் மீது கட்டுப்பாடு இருக்க வேண்டும் என்பது அவர் களின் விதியாகும்; அவர்களது கருத்தின்படி சமூகத்தின் நலனுக்காகத் தனி நபர் தன்னை இழக்க வேண்டும் என்பதாகும்.

இனி, கட்டுப்பாடு என்ற கோட்பாட்டைப் பிரயோகிக்கும் போது, திருமணம் சம்பந்தமான அத்தியாயம் முழுவதையும் மாற்றி யமைக்க வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொள்கிறேன். இந்த அம்சத்தில், தொண்ணூறு சதவீத மக்கள், மரபாக, விவாகரத்து உரிமை பெற்றிருப்பதால், நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள் என்று கேட்கப்பட்டுள்ளது. 90 சதவீதத்தினரின் வழக்கத்தை எஞ்சியுள்ள பத்து சதவீதத்தினர் மீது சுமத்தப்போகிறீர்களா என்று கேட்கப்படு கிறது. இந்த வகைப்பட்ட ஒரு வாதம் திறமையான ஒரு வார்த்தை ஜாலமே தவிர வேறல்ல, ஆனால் தர்க்கரீதியானதல்ல, நாம்

பரிசீலனை செய்ய வேண்டியதும், மாண்புமிகு டாக்டர் பரிசீலனை செய்யவேண்டியதும் என்னவெனில், மரபு என்ன என்பதையல்ல, மாறாக, எது நன்மையானது, எது அனுகூலமானது என்பதைத்தான். அங்கு என்ன இருக்க வேண்டும் என்பதைத்தான் நாம் பரிசீலனை செய்யவேண்டும். அதுதான் தொடர்ந்து அளவு கோலாக இருந்து வந்துள்ளது. அதுதான் தொடர்ந்தும் அளவுகோலாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் முரண்பாடுதான் ஏற்படும். உதாரண மாக, 90 சதவீத மக்களிடையில் குடிக்கும் பழக்கம் இருக்கிறது. நாம் நிச்சயமாக மது விலக்கைத் தடுப்பதற்காக நிற்கவில்லை. குடிக்கும் பழக்கம் இருக்கிறது என்பதை மறுக்க முடியாது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அது ஒரு மரபு அல்ல.

திரு. வி.எஸ். சர்வாதே: சரிதான், நீங்கள் அவ்வாறு நினைக் கலாம். அந்த வகையில் என்னுடைய சிந்தனையை வெளிப்படுத்து வதற்கு எனக்கு சுதந்திரம் இருக்கிறது. (ஒரு மதிப்புக்குரிய உறுப் பினர் : ''90 சதவீத்தினர் குடிகாரர்களாக இல்லை.'') அதை சமூகத் தில் ஒரு பழக்கம் என்று கூறுவது ஒரு விஷயம், அவர்களைக் குடி காரர்கள் என்று கூறுவது வேறு விஷயம். அதுதான் வேறுபாடு. ஒரு பழக்கம் இருந்து வருகிறது, எனவே அதைச் சட்டத்தின் வாயிலாகத் தொடரச் செய்யவேண்டும் என்பது சரியான வாதமாகாது, அது நன்மையானதா, அல்லவா என்று வாதிக்க வேண்டும். இந்தக் கண்ணோட்டத்திலிருந்து நாம் பரிசீலனை செய்தால், திருமணம் முறிக்கப்பட வொண்ணாதது என்று இந்து சமூகத்தின் ஒரு குறிப் பிட்ட பகுதி கூறுகிறதெனில், தரப்புகள் விரும்பும்பொழுது, அவர் களை ஏன் நிர்ப்பந்தித்து, திருமணம் முறிக்கப்பட வேண்டும் என்று ஏன் சொல்ல வேண்டும்? இந்த மசோதாவில் அது அவசியமாகக் கூறப்படவில்லை. கட்டாயம் ஏதும் இல்லை. விருப்பத் தேர்வு தான் இருக்கிறது என்று வாதிக்கலாம். விருப்பத்தேர்வு எப்போதும் இருக்கிறது. மது அருந்தும் கடைக்கு போவதும், போகாமலிருப் பதற்கும் ஒரு குடிகாரனுக்கு விருப்பத் தேர்வு உண்டு. விருப்பத் தேர்வு எப்பொழுதும் உண்டு, இருந்தபோதிலும் அந்த நபர், மது அருந்தும் ஒரு கடை இருக்கும்போது, அங்கு போகவே செய்கிறார், எனவே சட்டத்தின் மூலம் மதுக்கடை மூடப்படவேண்டும். அது சமுதாயத்தின் ஒரு குறிப்பிட்ட பகுதிக்குப் பிரயோகப்படுத்துவது எனில், அதை நான் வரவேற்றிருப்பேன். திருமணம் சம்பந்தமான சட்டத்தில் ஒருதார மணம் இருக்க வேண்டும். நான் அதை ஒப்புக்

கொள்கிறேன். நான் அதற்கு மேலும் சென்று கட்டுப்பாடு கண்ணோட்டத்திலிருந்து, பார்த்தால், பெண்களோ, ஆண்களோ இரண்டாவது திருமணம் செய்து கொள்ளக்கூடாது என்று நான் கூறுவேன். அது ஒரு வரவேற்கத்தக்க ஷரத்தாக இருக்கும். ஆனால் அதற்கு மாறாக, நாம் கடைக்கோடி எதிர் நிலைக்குச் சென்று, ஒவ்வொரு திருமணமும், விருப்பப்பட்டால் கலைக்கப்படக் கூடும் என்ற நிலையை எடுத்துள்ளோம். இது விரும்பத்தக்கதல்ல என்று கருதுகிறேன். ஒரு குறிப்பிட்ட காலத்தில் விவாகரத்தைப் பண்டைக் கால இந்துக்கள் அனுமதித்தார்கள், என்பதில் ஐயமில்லை. முதலில் வரலாற்று நிலைமை எதுவாக இருந்தபோதிலும், பின்னர் அது தடை செய்யப்பட்டது. குடும்பத்தின் ஒற்றுமை கட்டிக் காப்பாற்றப் பட வேண்டும் என்பது இதற்குக் காரணமாக இருந்திருக்கக்கூடும் என்று நினைக்கிறேன். ஒரு தடவை திருமணம் நடந்துவிட்டால், அது கலைக்கப்படக் கூடாது என்று அவர்கள் விரும்பினர், அப்பொழுதுதான் வேறு ஒரு பெண் அந்தக் குடும்பத்திற்குள் வராமல் செய்யமுடியும்; மற்றும் குடும்பத்திலுள்ள பெண் வெளியில் போக முடியாமலும் செய்ய முடியும். சாத்தியமானவரையில் அந்த தற்செயல் நிலைமை தவிர்க்கப்பட வேண்டும். ஒரு திருமணம் கலைக்கப்படுவதற்கு ஏன் அனுமதிக்கப்படவில்லை என்பதற்கான காரணங்களில் இதுவும் ஒன்றாக இருந்திருக்கக்கூடும். எனவே, என்னுடைய யோசனை இதுதான். திருமணம் என்ற பகுதியில் இரண்டு பாகங்கள் இருக்கட்டும்: தங்களுடைய திருமணங்கள் கலைக் கப்படவேண்டும் என்று விரும்புபவர்கள், சிவில் திருமணச் சட்டத் தின்படி அவர்கள் திருமணம் செய்துகொள்ளட்டும், இங்கு நீங்கள் உருவாக்கும் ஷரத்தின்படி, அவர்கள் விருப்பத்தின் பேரில் சுதந்திர மாக திருமணத்தைக் கலைத்துக்கொள்ளட்டும். மற்றைய பாகத்தில் மதச் சடங்குகளின்படி திருமணம் செய்துகொள்ளட்டும்; அதில் திருமணத்தைக் கலைத்துக் கொள்வதற்கு இடமில்லை. இது, இரு தரப்பினரையும் திருப்திப்படுத்தும் என்று நினைக்கிறேன். என் னுடைய பணிவான யோசனை இதுதான். திருமணம் கலைக்கப் படுவதை ஏன் கட்டாயப்படுத்த வேண்டும்.

**திரு. மகாவீர் தியாகி :** அப்படியெனில், திருமணம் செய்து கொள்வதற்கு முன்பாகவே, பிரிந்து போவது பற்றி அவர்கள் முடிவு செய்ய வேண்டும்.

**திரு. வி.எஸ். சர்வாத்தே :** மதிப்புக்குரிய என்னுடைய நண்பர் என்னைப் பூரணமாகத் தவறாகப் புரிந்து கொள்ளுகிறார் என்று

கருதுகிறேன். நான் கூறுவதென்னவெனில், தங்களுடைய திருமணங்கள் கலைக்கப்படக்கூடாது என்று விரும்புபவர்கள், மதச் சடங்குகளின் படியான உரிமைகளின் படித்திருமணம் செய்துகொள்ள வேண்டும்; வருங்காலத்தில் தங்களுடைய திருமணங்கள் கலைக்கப்படுவதை விரும்புபவர்கள், சிவில் திருமணச் சட்டத்தின்படி திருமணம் செய்து கொள்ளட்டும்.

**திரு. தாஜாமுல் உசேன் :** திருமணத்திற்கு முன்பே விவாகரத்து வேண்டும் என்று என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் அர்த்தப்படுத்துகிறாரா?

**திரு. வி.எஸ். சர்வாத்தே :** சிவில் (பதிவுத்) திருமணம் என்றால் விவாகரத்து செய்து கொள்ளலாம் என்று பொருளல்ல பிரிந்து போவதோ, விவாகரத்தோ இதன் பொருளல்ல, சிவில் திருமணம் என்று நான் கூறும்போது அது திருமணம்தான், அது விவாகரத்து என்று பொருள்பட முடியாது.

**திரு. மகாவீர் தியாகி:** அது திருமணம் என்றுங் கூட பொருள் படாது.

**திரு. தலைவர் :** அமைதி, அமைதி, மதிப்புக்குரிய உறுப்பினர் தமது உரையைத் தொடரட்டும்.

**திரு. வி.எஸ். சர்வாத்தே :** ஐயா, என்னுடைய விண்ணப்பம் இதுதான். மக்களின் சில பகுதியினர் விரும்பாத சில விஷயங்களைத் திணிக்கப் போகிறோமா என்பது குறித்து நாம் தெளிவாக இருக்க வேண்டும். அதற்கும் அப்பால் சென்று, மதச் சடங்கு ரீதியான திருமணங்கள் மதச் சடங்கு ரீதியானவை என்று நீங்கள் ஒப்புக் கொண்டால், அத்தகைய திருமணத்திற்கான நிலைமைகளை ஏற்படுத்துவதற்கு மதம் ஒரு சோதனையாக இருக்கட்டும் என்று நான் கூறுவேன். குழந்தைத் திருமணங்களையும், வயதுக்கு வராதவர்களின் திருமணங்களையும் மதம் அனுமதிக்கிறதென்றால், அவை அனுமதிக்கப்படட்டும். அது ஒரு முரண்பாடாகும்; முதலாவதாக, திருமணம் மதத்தின்படி நடைபெற வேண்டும் என்று கூறிவிட்டு, பின்னர் அது மதத்தின்படியும் இருக்கவேண்டும், இந்த மசோதாவில் கூறியுள்ளபடியும் நடைபெற வேண்டும் என்று கூறுவது முரண்பாடாகும். எனவே, ஒன்று மதச் சடங்குகளின்படி திருமணம் நடைபெறுவதை அனுமதிக்க வேண்டும், அல்லது, நீங்கள் விரும்பா

விட்டால், மதச் சடங்கு ரீதியான திருமணங்களை அனுமதிக்க வேண்டாம். அப்படியெனில், எல்லாத் திருமணங்களும் சிவில் (பதிவுத்) திருமணங்களாக இருக்க வேண்டும் என்று கூறுங்கள். மதச் சடங்கு ரீதியான திருமணங்கள் அனுமதிக்கப்படும் என்று நீங்கள் கூறினால், மதச் சடங்குகள்படி திருமணங்கள் நடத்தப்பட வேண்டும். இது என்னுடைய தாழ்மையான கருத்தாகும்; மேலும் மசோதாவின் 7-வது பிரிவின் ஷரத்துகளைப் பொறுத்தமட்டிலும், அவை மதச் சடங்கு ரீதியானவை அல்ல. மதச் சடங்குகளோடு, வேறு சில விஷயங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. எனவே, மதம் அனுமதிக்கப் படுகிறதெனில் கறாராக மதத்தின்படி இருக்கவேண்டும். நான் உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவருகிற இரண்டாவது விஷய மாகும் இது. இதை எளிதாகச் செய்து விடலாம். இது திருப்தி ஏற்படுத்தும், மற்றும் தற்போதிருந்து வரும் அதிருப்திக்கான காரணங் களைப் பெருமளவுக்கு அகற்றிவிடும். கோட்பாடுகளின் ரீதியில் மட்டுமே பார்க்கும்போது, என்னுடைய எளிய யோசனை இதுதான். இந்த சட்டத்திலேயே, சமுதாயத்திலும் கூட்டுக் குடும்பத்திலும் கூட்டுவாரிசுரிமை தொடர்வதை அனுமதிக்கவேண்டும். இதனால் எந்த இழப்புமே ஏற்பட்டுவிடாது, இந்த நாட்டில் முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகள் ஆகியோர் இருக்கிறார்கள் - பார்சிகள் ஒரு சிறு சமூகத்தினரே. ஆயினும் அவர்கள், தமது சொந்த வாரிசுரிமை சட்டத்தைக் கொண்டிருப்பதற்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்றால், ஒரு பெரிய பகுதி கூட்டு வாரிசுரிமையைப் பெற்றிருப் பதை அவர்கள் விரும்பினால் என் அனுமதிக்கக்கூடாது? இந்தக் கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்படுமேயானால், மசோதாவின் முன் வரைவு முழுவதிலும் அதற்கேற்ப மாற்றங்களைச் செய்ய முடியும்.

என்னுடைய மற்றொரு விண்ணப்பம் என்னவெனில் கருத் தறிவதற்காக மசோதா மீண்டும் சுற்றுக்கு விடப்பட வேண்டும் என்பதாகும். இங்கு, அவைத் தலைவர் ஏற்கனவே கொடுத்துள்ள தீர்ப்பைப் பற்றி நான் குறிப்பிட விரும்பவில்லை. அப்பொழுது ஏற்பட்ட பிரச்சினை, மசோதா பற்றிய விதிகள் வெளியிடப்பட்டது போது மானதா, என்பதேயாகும். அது போதுமானது என்று தீர்ப்பு வழங்கப் பட்டது. ஆயினும் இதனால் மசோதா மீண்டும் சுற்றுக்கு விடப் படுவது, விரும்பத்தக்கதுதானா என்ற பிரச்சினையை எழுப்புவதி னின்றும் என்னைத் தடுப்பதில்லை. அது பார்க்காமல் விட்டுவிடப் பட்டுள்ளது என்று நான் கருதுகிறேன். அந்த மசோதா நிறைவேற்றப் படுமேயானால், டாக்டர் அம்பேத்கர் அதற்கு மாறாக என்ன கூறிய போதிலும், தானாகவே அது சமஸ்தானங்களுக்கும் பொருந்துவதாகி

விடும். மாகாணங்களுடன் இணைந்துவிட்ட சமஸ்தானங்களின் எல்லாப் பிரதேசங்களுக்கும் மற்றும், தங்களுக்காக சட்டமியற்று வதற்கு மத்திய அரசுக்கு அதிகாரம் இருக்கவேண்டுமென்று ஒத்துக் கொண்டுள்ள எல்லாப் பிரதேசங்களுக்கும் கூட அது பொருந்துவ தாகும்.

**திரு. சீதாராம் எஸ். ஜாஜு (மத்தியபாரத்):** இந்திய சமஸ் தானங்களுக்கும் அது பொருந்துவதற்கு என்ன ஆட்சேபம்?

**திரு. வி.எஸ். சர்வாத்தே :** அது பொருந்த வேண்டும் என்று தான் நான் கூறுகிறேன். நான் அதை ஆதரிக்கிறேன். மதிப்புமிக்க உறுப்பினர்கள் என்னைப் பேச அனுமதிக்காமல், நான் கருதுவதாக அவர்களே நினைத்துக்கொண்டு ஏன் குறை கூறுகிறார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்த மசோதா இந்திய சமஸ்தானங்களுக்கும் பொருந்த வேண்டும் என்றுதான் நான் கூறிக் கொண்டிருந்தேன். அது அவ்வாறு பொருந்துவதானால், - அது பொருந்த வேண்டுமென்றுதான் நான் மிகவும் விரும்புகிறேன் - அங்கே ஓர் அடிப்படையான உரிமை தோன்றுகிறது, உங்களுடைய மசோதா பொருந்துகின்ற ஒவ்வொரு பெரிய பிரதேசத்திற்கும், அதனுடைய கருத்தைத் தெரிவிப்பதற்கு அனுமதிக்க வேண்டும், அதுதான் நீதியாகும். இந்தப் பெரிய பிரதேசங்களில் இந்த மசோதா வெளியிடப்படவில்லை. எனவே அந்தப் பிரதேசங்களிலுள்ள மக்கள் இந்த மசோதாவை ஆழமாகப் பரிசீலிப்பதற்கு அவர்களுக்கு சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அவ்வாறு சந்தர்ப்பம் கிடைத்திருந் தால், அவர்கள் மசோதாவை ஆழமாகப் பரிசீலித்திருப்பார்கள். இப்பொழுது, தங்களுக்கும் இந்த மசோதா பொருந்தும் என்பதை அவர்கள் அறியும்போது, மசோதாவும் அங்கு வெளியிடப்பட்டால், அவர்கள் தங்கள் கருத்தை வெளிப்படுத்தும் நிலைமையிலிருப் பார்கள். தங்களை பாதிக்கின்ற எந்தச் சட்டம் சம்பந்தமாகவும் தமது கருத்தை வெளிப்படுத்துவதற்கு அவர்களுக்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கப்பட வேண்டியது ஒவ்வொரு நபருடைய அடிப்படை யான உரிமையாகும். மேலும், அவர்களுடைய ஒவ்வொரு பிரதி நிதியும், இங்கு வாக்களிப்பதற்கு முன்னால், அந்த மக்களுடைய கருத்தை அறிய வேண்டியது கடமையாகும். எனவே சமஸ்தானங் களின் பிரதிநிதிகளின் கண்ணோட்டத்திலிருந்தும், சமஸ்தானங் களின் மக்களின் கண்ணோட்டத்திலிருந்தும் பார்க்கும்போது, தமது அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்கு அவர்களுக்கு சிறிது அவகாசம் கொடுக்கவேண்டும் என்பது நியாயமானதேயாகும். எனவே நான்,

ஒரு இடைப்பட்ட யோசனையைக் கூறுகிறேன். அதாவது இந்தக் கூட்டத்தொடரில் இந்த மசோதா முடிவுக்கு வராவிட்டால், அத்தகைய நிலைமையில் - அவ்வாறு ஏற்படலாம் என்று நான் நினைக்கிறேன் - பின்னர் ஒரு சிறப்புக் கூட்டத்தொடரில் இதை விவாதத்திற்கு எடுத்துக் கொள்வது விரும்புத்தக்கதாக இருக்காதா என்பதை இந்த மசோதாவை முன்மொழிந்த மதிப்புமிக்க உறுப்பினர் யோசிக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன்; இதற்கு இடைப்பட்ட காலம் அதாவது இரண்டு, அல்லது மூன்று அல்லது நான்கு மாத காலம் அந்த மக்களின் கருத்தை அறிவதற்குப் போதுமானதாக இருக்கும் என்று கருதுகிறேன். இது நியாயமானதாக இருக்குமென்றும், மசோதாவை வெளியிடுவதுதான் ஷரத்துக்களின் உணர்வுக்கு ஏற்றதாக இருக்குமென்றும் கருதுகிறேன். நீதிக்கு இது தேவைப்படவில்லையா என்பதை உணரும்படி நான் இந்த அவைக்கு வேண்டுகோள் விடுகிறேன். இந்த சட்டத் தொகுப்பைப் பற்றி எல்லாம் கூறப்பட்டு விட்டதாகக் கருதிக்கொள்ளக்கூடாது. மிகவும் தாழ்ந்த நிலையிலுள்ளவரும் கூட சில நல்ல யோசனைகளை முன் வைக்கக்கூடும். அவை நன்கு கற்றறிந்த டாக்டருக்குப் பயனுள்ளதாக இருக்கக் கூடும். இவ்வாறு வாய்ப்புக் கொடுக்கப்பட்டால், அது நீதியின் தேவைகளையும் பூர்த்தி செய்யும், பயனுள்ளதாகவும் இருக்கக் கூடும்.

இந்த வேண்டுகோளுடன் நான் முடித்துக் கொள்கிறேன், ஐயா.

**திரு. கே.வி. காமத் :** திரு . தலைவர் அவர்களே....

**திரு. பி. தாஸ்** (ஒரிசா : பொது): ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை, ஐயா, ஒரு பிரம்மச்சாரி, திருமணம் செய்து கொள்ளாதவர், ஒரு மகனைக் கூடப்பெறாதவர், தன்னுடைய முன்னோர்களுக்குத் தர்ப்பணம் செய்ய முடியுமா, இந்த மசோதாவின் மீது உரை நிகழ்த்தி, விவாதத்திற்குப் பங்களிக்க முடியுமா?

**திரு. தலைவர் :** இதில் ஒழுங்குப் பிரச்சினைக்கு ஏதுமில்லை. அவர் ஓர் இந்துவாக இருக்கிறவரையிலும் அவர் பேசலாம்.

★**திரு. எச்.வி. காமத் :** ஐயா, ஒழுங்குப் பிரச்சினைக்கு நானும் பதிலளிக்கறேன். இரண்டு வழக்கறிஞர் நண்பர்களும், ஒரு பெண் நண்பரும் பேசியதற்குப்பின்னர், நான் ஒரு இடர்ப்பாடுடன் பேச வேண்டியுள்ளது. என்னுடைய மதிப்புமிக்க நண்பர்கள் பண்டிட்

★ அ.நி. (சட்டப்பேரவை) டி. தொகுதி II, பாகம் II, பிப்ரவரி 25, 1949, பக். 934-36.

தாகூர்தாஸ் பர்கவா மற்றும் திரு. சர்வாதேயின் சட்ட ரீதியான வாதங்களோ, அல்லது என்னுடைய மதிப்புமிக்க நண்பர் திருமதி ரேணுகாரேயின் இனிமையான நியாய வாதமோ, என்னிடத்தில் இல்லை. வழக்கறிஞர்களைப் பொறுத்தமட்டிலும், என்னுடைய மாண்புமிக நண்பர் சட்ட அமைச்சரே கவனித்துக் கொள்வார், இன்று, அவர்களுடைய உரைகளின்போது எழுப்பப்பட்ட வாதங் களுக்கு அவர் பதிலளிப்பார். திருமதி ரேணுகா ரேயைப் பொறுத்த மட்டிலும், நான் பொதுவாக அவருடன் உடன்படுகிறேன், எனவே அவருடைய வாதங்கள் எதையும் எடுத்துக்கொண்டு, அவற்றுக்கு எதிர்வாதம் புரிய வேண்டிய அவசியமில்லை.

என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. பி. தாஸ், நான் எழுந்து நின்றபொழுது, ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பினார். அந்த ஒழுங்குப் பிரச்சினையே எனக்கு ஆதரவாக இருக்கிறது என்று கருதுகிறேன். இந்த மசோதாவின் மீது இந்த அவையில் பேசுவதற்கு எனக்கு உள்ள ஒரே ஆதார உரிமை, எனக்கு மனைவியோ, குழந்தையோ, அல்லது பெயரிட்டுச் சொல்லும் அளவிற்கு சொத்துக் களோ எனக்கு இல்லை. எனவே இந்தப் பிரச்சினை சம்பந்தமாக நான், மன உணர்ச்சிகளினால் பாதிக்கப்படாமல் பாரபட்சமில்லாத மனப்பாங்குடன் பேசமுடியும். இந்த மசோதாவின் பெரும்பாலான ஷரத்துகள் திருமணம், சொத்து, தத்து எடுத்துக்கொள்ளுதல், வாரி சுரிமை ஆகியவை சம்பந்தப்பட்டவையேயாகும். இந்த ஷரத்துகள், நம்முடைய பெரும்பாலான தத்துவஞானிகளின் இரண்டு சொற்கள் **காமினி, காஞ்சன்** என்பவை சம்பந்தப்பட்டவையே என்று தொகுத்துக் கூறிவிடலாம். இந்த இரண்டில் இதுவரையிலும் எதனாலும் பாதிக்கப் படாத நான், இந்த மசோதா மீது சொந்த நலன் சம்பந்தமில்லாத முறையில் அக்கறையில்லாத முறையிலல்ல - ஒரு சில கருத்துக்கள் கூறுவதற்கு உங்களின், அவையின் அனுமதியைக் கோருகிறேன். இந்த நூற்றாண்டு, கிறிஸ்துவுக்குப் பிந்திய இருபதாம் நூற்றாண்டு; ஆசியாவிலும், ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் பெண்கள் வரலாற்று மேடையில் எழுச்சியுற்றதைக் கண்டது. இந்தியாவும் நமது இந்து சமுதாயமும் இந்த உலக ரீதியான நிகழ்வுப் போக்குக்கு விதிவிலக்கல்ல. ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையிலான உறவுகள் - அனைத்துப் புரட்சிகர எழுச்சிகளுடனும் விதிவசமாக ஒன்றிணைந்திருந்தன. இவை நமது காலத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டு மற்றும் அதனுடைய நீண்ட கடந்த காலத்திலிருந்து பிதிரார்ஜிதமாகப் பெற்ற பழைய சமுதாயங்களை கிழித்துத் திறந்து

வருகின்றன மற்றும் அவற்றை மாற்றி வருகின்றன. நமது யுகம் பெண்களின் இயக்காற்றலினால் புகழ் பெற்றுள்ளது; அவர்கள் ஆண்களுடன் கூட உலகத்தில் தலைகீழ் மாற்றங்களை ஏற்படுத்தி வருகின்றன. (ஒரு மதிப்புக்குரிய உறுப்பினர்: ''ஆனால் நீங்கள் இதற்கு ஓர் விதிவிலக்கு'') உலக மறு நிர்மாணத்திற்கான திட்டங்களை வகுப்பதற்கும் உதவியுள்ளனர். பெண்களின் - ஏழை, விஷய ஞானமற்ற, எழுத்தறிவற்ற பெண்களின் குறிப்பிடத்தக்க, வீரம் செறிந்த சாதனைகளை - சத்தியாகிரஹம் என்னும் அகிம்சைப் போராட்டத்திலும், நெருப்பு ஜுவாலை வீசும், ரத்தம் சிந்தும் போராட்டத்திலும் கூட அவர்களின் சாதனைகளைப் பெருமையுடனும் மன நிறைவுடனும் நினைவு கூராதவர்கள் ஆத்மா மரணமடைந்தவர்களேயாவர். தொட்டில் ஆட்டும் கை ஆயுதத்தை ஏந்தவும் வலிமை படைத்ததென்பதையும், தேவைப்படும்போது ஆக்கிரமிப்பாளருக்கு எதிராக மென்மையான முறையில் ஆசிகூறும் வகையில் உயர்ந்து நிற்பதற்கும் வல்லவள் என்பதையும் எடுத்துக் காட்டியுள்ளது. பிற நாடுகளையும், பிற சூழ்நிலைகளையும் ஒரு பக்கம் தள்ளிவைத்துவிட்டு, நமது சொந்த நாட்டில், இந்தியாவில் பெண்கள், எவ்வாறு, ஆண்களோடுகூட, நவீனப் போர்முறைகளைப் பற்றி ஏதும் அறியாதிருந்தபோதும், லத்தி, துப்பாக்கிரவை, சிறைவாசம் ஆகியவை பரிச்சயமில்லாத நிலைமையிலும், ஆயிரக்கணக்கில் அவர்கள் எவ்வாறு மகாத்மா காந்தி மற்றும் நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் பதாகையின்கீழ் திரண்டார்கள் என்பதை நாமனைவரும் அறிவோம். இந்த வரலாற்றைப் பற்றி விவரமாகக் கூறுவதற்கு நான் அறிவேன். வேகமாக வளர்ச்சியடைந்துவரும் சமூக, பொருளாதார மாற்றத்தின் இந்தப் பின்னணியில்தான், இந்த அவையின் முன்னே கொண்டுவரப்பட்டுள்ள மசோதாவை நாம் பார்க்க வேண்டும். ஏனெனில் எந்தச் சட்டமும் சூனியத்தில் செயல்படவோ, அல்லது உருவாக்கப்படவோ முடியாது; மற்றும் எந்தச் சட்டமும் அது பிறப்பெடுத்த சமூகச் சூழ்நிலையிலிருந்து தனிமைப்பட்டு இருக்க முடியாது. அல்லது அதை, அதனின்றும் தனிமைப்படுத்திப் பார்க்கவும் முடியாது. சுருங்கக்கூறின் ஒரு குறும்புக்காரரின் கேலியான கூற்றைக் கொண்டு இந்தக் காலத்தைத் தொகுத்துக் கூறலாம். இன்று பெண்கள் நாடாளுமன்றத்தில் உட்காருகிறார்கள், பேருந்துகளில் நிற்கிறார்கள் என்று அவர் கூறினார். ரத்தினச்சுருக்கமாகக் கூறுவதெனில், தற்காலத்தில் ஏற்பட்டுள்ள புரட்சிகரமான மாற்றம் இதுதான். ஐயா, நான் ஏறத்தாழ ஓர் அரசியல் பிரசாரகர் என்று உணர்கிறேன். இந்த மசோதா குறித்து ஒரு சில கருத்துக்களை முன்வைக்கிறேன்.

இந்த அவையிலுள்ள என்னுடைய மதிப்புக்குரிய உறுப்பினர்கள் - இந்த மசோதாவினால் உடனடியாக பாதிக்கப்படாதவர்கள், இந்த மசோதாவில் இவ்வளவு அதிகமான அக்கறை எடுத்துக் கொண்டுள்ளது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். ஐயா, என்னுடைய மதிப்புமிக்க நண்பர், வலிமைமிக்க பண்டிட் நசிருத்தீனுக்கு, இந்த அடைமொழி முற்றிலும் பொருத்தமற்றதல்ல என்று நான் நினைக்கிறேன். ஐயா, மவுண்ட் பேட்டனை 1947 ஆகஸ்டு 15ல் ''பண்டிட்'' என்று அழைக்கப்பட முடியுமென்றால், திரு. நசிருத்தீனை ஒரு ''பண்டிட்'' என்று அழைப்பதற்கு பர்மாவின் லார்டு மவுண்ட் பேட்டனைக் காட்டிலும் கூடுதல் உரிமை உண்டு. பல நண்பர்கள் இந்த மசோதாவில் அக்கறை செலுத்தி வருகிறார்கள், இதைக் காலத்தின் ஒரு மகிழ்ச்சிகரமான அடையாளம் என்றும் வருங்காலத்திற்கு ஒரு நல்ல நற்குறியென்றும் நான் வரவேற்கிறேன். ஏனெனில், இன்று நாம் ஓர் ஒன்றுபட்ட சமுதாயமாக சரியான வழியில் சென்று கொண்டிருக்கிறோம்; விரைவில் நமது நாடு முழுமைக்கும் ஒரு சீரான சிவில் சட்டத்தை நாம் கொண்டிருப்போம்.

இந்த சபையிலும் வெளியிலும் உள்ள உறுப்பினர்கள், முழுமையாக இந்த மசோதாவுக்கு ஆதரவாக இல்லாதவர்கள், இது சம்பந்தமாக முழு மூச்சாக செல்வதற்கு விரும்பாதவர்கள், குறைந்தபட்சம் அவர்களில் சிலராவது ஸ்மிருதிகள், சாஸ்திரங்கள், மற்றும் நமது தர்மம் சம்பந்தமாக ஒரு நிலையை மேற்கொள்ளுகின்றனர். நல்லது, ஐயா, தர்மம் என்றால் என்ன? இந்தப் பிரச்சினையை நாம் முடிவு செய்யாவிட்டால், இந்த மசோதா சம்பந்தமாக இந்த நாட்டில் சிலர் மேற்கொள்ளும் நிலையை நாம் புரிந்துகொள்ளவோ அல்லது நிராகரிக்கவோ முடியாது. தர்மம்! இது ஒரு வெறும் சடங்கு, வெளிப்பூச்சு அல்லது சடங்காச்சாரங்களின் தொகுப்பு மட்டுமா? அல்லது அதைக் காட்டிலும் ஆழமான, ஆன்மா, இதயம், மனம் மற்றும் உணர்வு சம்பந்தப்பட்ட ஒன்றா? தர்மம்! சமஸ்கிருதத்தில் இந்தச் சொல்லின் பிறப்பியல் தர்மம் என்பது உலகம் ஆதாரப்பட்டு நிற்கும் ஒன்றாகும். **எனிதம் தார்யதே ஜகத்** உலகம் - ஜகத் - ஆதாரப்பட்டு நிற்பதுதான் தர்மம்.

ஒரு சில சடங்குகளை, சடங்காச்சாரங்களை, பெயரளவிலான சம்பிரதாயங்களை கடைப்பிடிப்பதானது தர்மத்தில் அடங்கியுள்ளதா, அல்லது, அது அதைக் காட்டிலும் ஆழமான ஒன்றா என்று நாம் கேட்க வேண்டாமா?

தர்மத்துடன் இடைத்தொடர்புள்ள, அல்லது பிணைந்துள்ள **ஸ்மிருதிகளைப்** பொறுத்தமட்டிலும், என்னுடைய மாண்புமிகு நண்பர் டாக்டர் அம்பேத்கர், ஒரு வேளை 137 **ஸ்மிருதிகள்** இருக்கக் கூடும் என்று அன்றைய தினம் கூறினார். நான் கூறுவது தவறா யிருந்தால் அவர் என்னைத் திருத்தட்டும். அவற்றை அவர் எண்ணி யுள்ளார் என்று நான் நம்புகிறேன். **உபநிடதங்களைப்** பொறுத்த மட்டிலும், அவை 108 இருப்பதாகவும், இன்னும் அந்த அளவுக்கு இதுவரையிலும் கண்டறியாத தோண்டியெடுக்கப்படாத உபநிட தங்கள் இருப்பதாகவும் கூறப்படுகிறது. **ஸ்மிருதிகளைப்** பொறுத்த மட்டிலும் டாக்டர் அம்பேத்கருக்குத் தெரிந்தவை 137. இப்பொழுது 138வது **ஸ்மிருதி**யும் நமக்குக் கிடைத்துள்ளது. அவர் என்னை மன்னிப் பாராக, நான் இதை வேடிக்கையாகக் கூறவில்லை. ஏனெனில், இந்த மசோதாவும், புரட்சிகரமானதாக இல்லாவிட்டாலும், நமது இந்து சமூக உறவுகளில் மாற்றங்களைப் புகுத்தியுள்ளது. எனவே, நமக்காக ஏற்கனவே எழுதப்பட்ட பிற இந்து சமூகத் தொகுப்பு களுக்கும், சமூக வாசகங்களுக்கும் பிரயோகிக்கப்பட்ட அதே சொல்லை நான் பிரயோகிக்க முடியும். இதை நாம் 138வது ஸ்மிருதி என்று அழைக்கலாம். இதை பீமஸ்மிருதி என்று நான் அழைக் கிறேன். இதை **பீமஸ்மிருதி** என்று அழைப்பதற்காக டாக்டர் அம்பேத்கர் என்னை மன்னிப்பார் என்று நம்புகிறேன். இந்த மசோதாவைத் தயாரித்து, அதை அவையில் சமர்ப்பிப்பதில் முடி வடைந்துள்ள இந்த இயக்கத்தின் மற்றொரு ஆதரவாளரின் பெயரை நான் சேர்த்துக் கொள்வதெனில், நான் இதை **நரசிம்மா** என்று அழைப்பேன். ராவ் குழுதான் இந்த மசோதா தோற்றுவிக்கப் பட்டிருப்பதற்குக் காரணமாகும். இறுதியாக நான் இதை பீம ஸ்மிருதி என்று அழைக்கமாட்டேன். மாறாக, பீம நரசிம்ம ஸ்மிருதி என்று அழைக்கிறேன்.

நமக்கு முன் உள்ள மசோதாவிற்கு வருவோம். ஸ்மிருதிகள் நன்கு அறியப்பட்டவைகளாக இருந்தபோதிலும், அவை அவற்றுக் கிடையிலேயே வேறுபடுகின்றன. அதே ஸ்மிருதிகாரம், சில சமயங் களில், வெவ்வேறு வாசகங்களில் வேறுபடுகின்றன. ஒரு கவிஞரும் கூட தனது கவிதைகளில் முரணில்லாமல் இல்லை. ஷேக்ஸ்பியர் ஒரு நாடகத்தில், பெண்களைப்பற்றி, ''நொய்மையே, உன் பெயர் தான் பெண்'' என்று குறிப்பிட்டார், மற்றொரு நாடகத்தில், ஒரு பெண்ணை தன்னுடைய தொடையிலேயே காயங்களை ஏற்படுத்திக் கொள்ளும் அளவிற்கு வலுவானவள் என்று குறிப்பிடுகிறார். புரூட் டஸின் போர்ஷியாவை நான் குறிப்பிடுகிறேன்! நம்மடைய சொந்த

நாட்டையே எடுத்துக்கொண்டால், புகழ்பெற்ற கவிஞரும் தத்துவ ஞானியுமான துளசிதாசர் இவ்வாறு கூறினார்: ஒரு பட்டிக்காட்டான், ஒரு தற்குறி, ஒரு விலங்கு, ஒரு சூத்திரன், மற்றும் ஒரு பெண் - இவர்கள் அனைவரும் அடிக்கப்பட வேண்டியவர்கள்.

**திரு. ராஜ்பகதூர் :** (மத்திய ஐக்கிய தேசங்கள்) : இந்த நன்கு அறிமுகமாகியுள்ள கவிதைவரிகளுக்கு திரு. காமத் கொடுத்துள்ள வியாக்கியானம் முற்றிலும் தவறானதாகும் என்று இந்த அவைக்குத் தெரிவித்துக் கொள்வதற்கு விரும்புகிறேன்.

**திரு. காமத் :** என்னுடைய நண்பர் பேசுவதற்கு வாய்ப்புப் பெறும்போது இது குறித்து அவருடைய வியாக்கியானத்தை வழங்குவார் என்று நம்புகிறேன்.

**திரு. ராஜ் பகதூர் :** இதன் பொருள் அறிவாழமற்ற, நாகரிகமற்ற ஒரு சூத்திரனும் ஒரு விலங்கைப் போலுள்ள பெண்ணும் கண்டிக்கப்பட வேண்டியவர்கள் என்பதுதான். இதன் பொருள் அறிவாழமற்ற சூத்திரனும் மிருகத்தனமான பெண்ணும் கண்டனத்திற்குரியவர்கள் என்பதுதான்.

**திரு. காமத்:** ஆனால், நமக்கு சட்டத்தை வழங்கிய மனு, பெண்கள் மதிக்கப்படும்பொழுது கடவுளர்கள் மகிழ்ச்சியடைவார்கள் என்று கூறுகிறார்.

பல்வேறு ஸ்மிருதிகளும் சாஸ்திரங்களும் ஒரு பக்கமிருக்க, நமது சொந்த சாஸ்திரம் - இந்துவுக்கு மிகவும் மகத்தான சாஸ்திரம் - என்ன கூறுகிறது? பகவத் கீதை ஸ்ரீ கிருஷ்ணனால் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்யப்பட்ட பொழுது, இந்துக்களிடையில் இருந்த பல்வேறு பழக்க வழக்கங்கள் மக்களின் சில பகுதிகளை இழிவு படுத்துவதாயிருந்தன. அது சம்பந்தமாக ஸ்ரீகிருஷ்ணா, நன்கு அறிமுகமாகியுள்ள வாசகங்களில் ஒன்றில், எந்த ஒரு மனிதனுடைய மிக உயர்ந்த இலட்சியம் பற்றி, அர்ஜுனனிடம் இவ்வாறு திட்டவட்டமாகக் கூறினார்:

**திரு. தலைவர் :** மதிப்புக்குரிய உறுப்பினர் திங்களன்று தனது உரையைத் தொடரலாம்.

*(பின்னர் அவை ஒத்திவைக்கப்பட்டு, மீண்டும் 1949 பிப்ரவரி 28, திங்களன்று காலை 10-45 மணிக்குக் கூடும் என்று அறிவிக்கப் பட்டது).*

---

## *இந்து திருமணங்களை செல்லத்தக்கதாக்கும் மசோதா

### பொறுக்குக் குழுவின் அறிக்கை சமர்ப்பிக்கப்படுவதற்கான கால அவகாசம் நீட்டிக்கப்படுதல்

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா** (கிழக்குப் பஞ்சாப் - பொது) : நான் கீழ்வருவதைப் பிரேரணை செய்கிறேன்.

> ''இந்துக்கள், சீக்கியர்கள், ஜைனர்கள் மற்றும் அவர்களின் வெவ்வேறு சாதிகள், உப-சாதிகள் இடையிலான திருமணங்களை செல்லுபடியாக்கும் இந்த மசோதா சம்பந்தமான பொறுக்குக் குழுவின் அறிக்கையை சமர்ப்பிப்பதற்காக நிர்ணயிக்கப்பட்டுள்ள கால அவகாசம் 1949, மார்ச் 25 வரையில் நீட்டிக்கப்படுகிறது.''

நிகழ்ச்சி நிரல் அறிவிப்பில் இங்கு கொடுக்கப்பட்டுள்ள தேதி மார்ச் 11. ஆனால் உங்களுடைய அனுமதியுடன் அதை மார்ச் 25 என்று திருத்துவதற்கு விரும்புகிறேன். ஏனெனில், மாண்புமிகு சட்ட அமைச்சர் அப்பொழுது டில்லிக்கு வெளியே போகிறார், இது சம்பந்தமாக அவரால் அதிக நேரம் ஒதுக்க முடியாது. எனவே இந்தத் திருத்தத்துடன் நான் இந்தப் பிரேரணையை முன்மொழிகிறேன்.

இந்த மசோதா இந்த அமர்விலேயே இந்த அவையில் சமர்ப்பிக்கப்படவேண்டுமென்று நான் மிகவும் ஆவலாக இருக்கிறேன். எனவே, மார்ச் 25க்குள் தேர்வுக்கமிட்டி தனது அறிக்கையை சமர்ப்பிக்கும்படி செய்ய வேண்டுமென்று மாண்புமிகு சட்ட அமைச்சரையும், இந்த மசோதாவுக்குப் பொறுப்பாக உள்ள அதிகாரிகளையும் கேட்டுக்கொள்கிறேன். அரசக்கு என்னுடைய வேண்டுகோளுக்கு ஆதரவு அளிக்கும்படியும் இந்த அவையை விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் இந்த மசோதா மிகவும் முக்கியமான ஒன்றாகும். இந்த அமர்விலேயே இது நிறைவேற்றப்படலாம்.

**திரு. ஆர்.கே. சித்வா** (மத்திய மாகாணங்கள் மற்றும் பீரார் : பொது): இந்த விஷயம் நிச்சயமாகப் பொறுக்குக் குழுவின் கைகளில் தான் உள்ளது. இதில் இந்த அவை என்ன செய்ய முடியும்? அறிக்கையை வழங்குவதை விரைவுபடுத்துமாறு என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் பொறுக்குக் குழுவை வேண்டிக் கொள்ளட்டும். அவர்கள் அதை மகிழ்ச்சியுடன் செய்வார்கள் என்று கருதுகிறேன்.

---

★ அ.நி. (சட்டப் பேரவை) டி. தொகுதி II, பாகம் II, 1949 பிப்ரவரி 28, பக். 940.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** அந்தத் தேதியை நீட்டிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அறிக்கை உரிய காலத்தில் கிடைக்குமாறு சட்ட அமைச்சர் பார்த்துக் கொள்ள வேண்டுமென்று ஆவலாக உள்ளேன். இதில் இந்த அவை எனக்கு ஆதரவளிக்க வேண்டும்.

**திரு. தலைவர் :** பிரச்சினை என்னவெனில்:

இந்துக்கள், சீக்கியர்கள், ஜைனர்கள் மற்றும் அவர்களது பல்வேறு சாதிகள், உப-சாதிகள் இடையிலான திருமணங்களை செல்லுபடியாக்குவதற்கான மசோதா சம்பந்தமான பொறுக்குக் குழுவின் அறிக்கை சமர்ப்பிக்கப்படு வதற்கான கால அவகாசம் 1949 மார்ச் 25 வரையில் நீடிக்கப்படுகிறது'' இந்த பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## இந்து சட்டத் தொகுப்பு - விவாதம் தொடர்ச்சி.

**திரு. தலைவர் :** இந்து சட்டத் தொகுப்பு மசோதா பற்றிய விவாதத்தை அவை இப்பொழுது தொடர்ந்து நடத்தும்.

*திரு. எச்.வி. காமத் (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் பொது) : திரு. தலைவர் அவர்களே, வெள்ளிக்கிழமையன்று பிற் பகலில் இந்த அவை ஒத்திவைக்கப்பட்டபோது ஸ்ரீகிருஷ்ணனைப் பற்றி நான் கூறிக்கொண்டிருந்தேன். மானிட வாழ்வின் மிக உயர்ந்த குறிக்கோளைப் பொறுத்த மட்டிலும் கூட, கீதையில் ஸ்ரீகிருஷ்ணன் ஆணையும் பெண்ணையும் முற்றிலும் சமத்துவத் தரத்தில் வைத் திருந்தார். இந்துக்களுக்கு கீதைதான் புனிதமான ஸ்மிருதியாகும். ஆக உயர் சாஸ்திரமாகும். எல்லாத் தத்துவ ஞானத்தின், எல்லா மதங்களின் சாராம்சமாகும். அந்த நன்கு பிரபலமான பாடலில் ஸ்ரீகிருஷ்ணன் இவ்வாறு கூறுகிறார்.

''ஸ்திரியோ வைசேயஸ்தத சூத்ரஸ்தெம யாந்தி பரம்காதிம்''

அதாவது ''பெண்கள், வைசியர்கள், மற்றும் சூத்திரர்கள் - அந்தக் காலத்தின் அடித்தட்டிலுள்ள மற்றும் ஒடுக்கப்பட்டுள்ள வர்கள் அல்லது சாதிகள் - அவர்களும் கூட பிராமணர்களுடனும் மற்றும் இதரர்களுடனும் சமத்துவமாக, சமநிலையில் உள்ளவர்களே.''

---

★ அ.நி. (சட்டப் பேரவை) டி. தொகுதி II, பாகம் II, 1949 பிப்ரவரி 28, பக். 940-56.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை: பொது) **:** திரு. காமத் அவர்களே, நீங்கள் கூறுவது மிகவும் சரி.

**திரு. எச்.வி. காமத் :** மோட்சமும் பரகதியும் பொறுத்தமட்டிலும், அதைப் பெண்களும் அடைவதற்கு எவ்விதத்திலும் தடை இல்லை. இன்றைய தினம் சில ஆண்களும் சில சாமியார்களும் கூட - மதத்தலைவர்கள், ஆன்மீகத் தலைவர்கள் என்று அழைக்கப்படுகின்றவர்கள் - ஆண்களும் பெண்களும் சமத்துவமற்ற நிலையில்தான் வைக்கப்பட வேண்டும் என்று கருதுகின்றனர். எல்லா அம்சங்களிலும் அவர்கள் ஒன்றுபோல் இல்லை என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன்...

**மௌலானா ஹஸரத் மோகனி** (உ.பி. பொது) **:** அவர்கள் எவ்வாறு சமமாக இருக்கிறார்கள்?

**திரு. எச்.வி. காமத் :** அவர்கள் சமமற்றவர்கள் என்று கூறுவதும், அந்த வாதத்திற்கு முட்டுக்கொடுப்பதற்காகக் கற்பனைக் கெட்டாத காரணங்களைக் கூறுவதும் எனக்கு அதிர்ச்சி ஏற்படுத்துகிறது. அன்று ஒரு சாமியார் பேசுவதைக் கேட்கும் துரதிருஷ்டம் எனக்கு ஏற்பட்டது. ஆணும் பெண்ணும் சமத்துவமற்றவர்கள் என்று அவர் குறிப்பிட்டார். அவ்வாறு கூறுவதற்கு என்ன காரணங்கள்? அவர் கூறியது விசித்திரமாயிருந்தது - நான் சொல்வதை அவை ஏற்றுக்கொள்ளும் - ஓர் ஆண் மீசையை வளர்க்கிறார், பெண்ணுக்கு அது இல்லை, என்று கூறினார். நான் தமாஷாக இதைக்கூறவில்லை. ஐயா, அந்த சுவாமிஜி பேசிய கூட்டத்தில் என்னுடைய நண்பர்கள் பலரும் இருந்தனர். அவர் மிகவும் ஆழ்ந்த உணர்வுடன் இதைக் கூறினார். ஆண் மீசையை வளர்க்கிறார், பெண்ணால் அது முடியாது. ஒரு பெண்ணால், அதிகபட்சமாகப் போனால், மூன்று நான்கு அல்லது ஐந்து குழந்தைகளை ஓராண்டில் பெற முடியும் என்று அவர் கூறினார்.

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர் :** ஓராண்டிலா?

**திரு. எச்.வி. காமத் :** அவள் ஒரு சமயத்தில் மூன்று பிள்ளைகளை நான்கு குழந்தைகளை அல்லது ஐந்து குழந்தைகளைப் பெறுகிறாளா என்பதைப் பொறுத்து இருக்கிறது, ஐயா, ஆயினும் ஆண், ஒரு நூறு அல்லது அதற்கு மேலும் அதிகமான குழந்தைகளுக்குத் தகப்பனாவதற்கு வல்ல உள்ளாற்றல் உள்ளவன் என்று அவர் தொடர்ந்து பேசினார். ஐயா, இது ஒரு விசித்திரமான வாதம் என்று எனக்குப் படுகிறது.

ஆண் - பெண்ணின் சமத்துவம் பற்றி நாம் பேசும் பொழுது, அதை நாம் ஓர் ஆன்மீக அடிப்படையில் கருதுகிறோம். அதை ஸ்ரீகிருஷ்ணர் கீதையில் இவ்வாறு கூறுகிறார்:

''ஸர்வபூதஸ்தம் ஆத்மானம் ஸர்வபூதானி சாத்மனி''

அதுதான் அடிப்படை, அதுதான் அளவுகோல், மனிதர்களின் அல்லது, ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலான சமத்துவத்திற்கு அதுதான் அளவுகோலாகும்.

மனிதர்களின் சமத்துவத்திற்கு - அவர்கள் உயர்வானவர்களோ தாழ்ந்தவர்களோ, ஏழையோ, பணக்காரனோ, ஆணோ, பெண்ணோ இதுதான் சோதனை, இதுதான் அளவுகோல், இதுதான் தரம், இதுதான் அளவுகோல்.

யோ மாம் பஸ்யதி ஸர்வத்ர
சர்வம் ச மயி பஸ்யதி

உயர்ந்தவர்களோ தாழ்ந்தவர்களோ, செல்வந்தர்களோ ஏழையோ, ஆணோ, பெண்ணோ மனிதர்களிடையேயான சமத்துவத்திற்கு இதுதான் பிரமாண சூத்திரம், படித்தரம் அளவுகோல்.

ஐயா, சுவாமிஜி விளக்கிய அசமத்துவம் என்ற கருத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. அதே சமயத்தில் பெண் - இன்று அவர்களில் சிலர் செய்வதைப்போல், புகைபிடிப்பது மது அருந்துவது ஆகியவற்றின் மூலம் சமத்துவத்தை அடைவது என்பதையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை. ஐயா, அதன் மூலம் அவர்கள் ஆணுடன் சமத்துவம் தேடுகிறார்கள் என்றால், அதுவும் வெறுக்கப்பட வேண்டிய ஒன்றேயாகும். அதுபோன்றே, பெண்கள் பற்றிய முற்போக்கான - மேற்கத்திய அர்த்தத்தில் முற்போக்கான கருத்தமைப்பையும் நான் ஆதரிக்கவில்லை - அவர்கள் மேலைய கருத்தமைப்பை ஒருவேளை, அதேபோன்று பின்பற்றும் முயற்சியில், முற்போக்காக இருப்பதாகக் கருதிக்கொண்டு நடன அரங்கு நடனம் மற்றும் பிற மேலையப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றக்கூடும். ஐயா, இதுவும் ஆண்களுடன் சமத்துவத்தைப் பெறுவதற்கான வழியல்ல என்று கருதுகிறேன்.

**திருமதி பூர்ணிமா பானர்ஜி (உ.பி.: பொது)** : இது இந்து சட்டத் தொகுப்பில் சேர்க்கப்படவில்லை அவள், ஒரு பங்காளியில்லாமல் தனியாகவா நடனமாடுகிறாள்?

திரு. எச்.வி. காமத் : அதை நான் அறிவேன். ஆனால் இங்கு நாம் ஆண்-பெண் சமத்துவத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருக் கிறோம். ஐயா, இங்கு நம்முடைய மகத்தான அறிஞரும் தத்துவ ஞானியும் இந்து தர்மம் பற்றியும், இந்து வாழ்க்கை முறைப் பற்றி யும் நன்கு கற்றுணர்ந்து தகுதி பெற்றவருமான டாக்டர் சர்வபள்ளி ராதாகிருஷ்ணன் இவ்வாறு கூறுகிறார்:

> ''நவீன காலப்பெண், நான் அவ்வாறு கூறலாமென்றால், தனது சுய மரி யாதையை இழந்து வருகிறாள். அவள் தனது சொந்த தனித்தன்மையை யும், தனிச்சிறப்பையும் மதிப்பதில்லை, மாறாக, அவள் ஆண்களைப் பார்த்து அதேபோன்று நடக்க முயன்று, தன்னையறியாமலேயே அவனுக்குப் புகழ்மாலை சூட்டுகிறாள். அவள் வேகமாக ஆண்தன்மை அடைந்து கொண்டும், யாந்திரீகமாகவும் ஆகிவருகிறாள்.

திரு. ஆர்.கே. சித்வா (மத்தியப்பிரதேசம் மற்றும் பேரார் : பொது) : நவீன கால மனிதனை (ஆணைப்) பற்றி என்ன?

திரு. எச்.வி. காமத்: ஐயா, நமது பெண்கள் இதை மனதில் ஏற்றிக்கொண்டு, ஆண்களுடன் சமத்துவத்தைப் பெறுவதற்கு அத்தகைய முயற்சிகளில் இறங்க மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

திருமதி அன்னிமாஸ்கரீன் (திருவாங்கூர் சமஸ்தானம்) : நவீனகால ஆண் அதைக் காட்டிலும் எந்த வகையிலும் மேம்பட்ட வனாக இருக்கிறானா என்ற கேள்வியை நான் கேட்கலாமா?

திரு. எச்.வி. காமத்: இந்தக் கேள்விக்குப் பெண்கள்தான் பதில் சொல்ல வேண்டும்.

ஐயா, எனவே ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையிலான சமத்துவத்தைப்பற்றி நான் பேசும்போது எனக்குமுன்னால் சீதா, சாவித்திரி, தமயந்தி, கார்கி, மைத்ரேயி, உபயபாரதி ஆகியோரின் உதாரணங்கள் உள்ளன. இந்தப் பெண்களைப் பற்றிய பண்டைய வரலாற்றையும், நம்முடைய பண்டைய வேதகாலத்திலும், அதற்குப் பின்னரும்கூட இந்தப் பெண்கள் வகித்த ஸ்தானங்களைப்பற்றியும் நமது சொந்தப் பண்டைய வரலாற்றிலிருந்து படிப்பதற்கு எனக்கு அனுமதி அளிப்பீர்களா? இன்று இந்து சட்டத் தொகுப்பை எதிர்க்கும் பலரும் அதனைத்தான் சார்ந்துள்ளனர். வேதகாலத்திலும் உபநிடத காலத்திலும், சமுதாயத்தில் பெண்கள் மிகவும் உயர்ந்த இடத்தை வகித்துவந்தனர் என்று கூறப்படுகிறது. உபநிடத காலத்தின் மிகவும் அசாதாரணமான திறமை வாய்ந்த பெண்களில் மைத்ரேயியின் பெயர்

பிரதானமாகக் காட்சியளிக்கிறது. அவருடைய ஆன்மீக மனத்தின் ஒளி இன்றும்கூட உலகத்தைப் பிரகாசிக்கச் செய்கிறது. தங்களுடைய அறிவுக்கூர்மைக்காக இரண்டு பெண்கள் தனிச் சிறப்புடன் பிரகாசிக்கின்றனர். வரலாற்றுக்கு முந்திய காலத்தில், ஓர் அகில இந்திய சமய மாநாடு நடைபெற்றது; மற்றொரு மாநாடு புத்தர் காலத்திற்குப் பின்னால் நடைபெற்றது. இந்த நாட்டில் அனைத்து வகைப்பட்ட மாநாடுகள் நடத்தப் பெறுவது ஒரு மரபாக இருந்து வந்துள்ளது, எனவே இதற்கு விதிவிலக்கல்ல. அம்மாநாடுகள் கூட்டப்பெற்றது வெறும் தத்துவார்த்த விவாதத்திற்காக அல்ல; மாறாக, நாட்டின் ஆன்மீக வாழ்வுக்கு அடிப்படையாக இருக்கவேண்டிய கோட்பாடுகளை நிறுவுவதற்கேயாகும். முதலாவது மாநாட்டில் யாக்ஞவல்கிய முனிவர் - நமது சட்டங்களை உருவாக்கியவரைப் போன்றவர் அறிவுரை பகன்றார்; இரண்டாவது மாநாட்டில் மகத்தான சங்கராச்சாரியர் அறவுரை போதித்தார். முதலாவது மாநாடு, அதாவது யாக்ஞவல்கியர் மாநாடு, ஜனகமகாராஜனால், மாபெரும் ஜனகரால், கர்மயோகியால் கூட்டப்பெற்றது. அதில் இந்தியா முழுவதிலுமிருந்து காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரையிலுள்ள கைபர் கணவாயிலிருந்து சொர்ரபுஞ்சி வரையிலுமுள்ள முனிவர்கள் கலந்துகொண்டனர். அப்பொழுது பெண்களின் சார்பில், சிறுமைப்படுத்தப்பட்டவர்களின் கோரிக்கைகளை முன்வைத்துப் பேசுவதற்கு கார்கி துணிச்சலாக எழுந்து நின்றபோது, அந்த முனிவர்கள் வாயடைத்துப் போயினர். ஐயா, அந்த லட்சியத்தை நோக்கி நமது பெண்கள் முன்னேறிக்கொண்டிருக்க வேண்டும். அவர்கள் நிச்சயம் முன்னேறுவார்கள் என்று நான் நம்புகிறேன். ஆனால் சிறிது காலத்தில் கார்கி தோற்கடிக்கப்பட்டாள், ஆனால், உறுதியான போராட்டத்திற்குப் பிறகே அவள் தோல்வியடைந்தாள்.

இரண்டாவது மாநாட்டில், சங்கராச்சாரியாரின் மாநாட்டில், இந்த முக்கியத்துவம் வாய்ந்த கூட்டத்தில் தலைமை தாங்கும் பொறுப்பு மந்தன மிஷ்ராவின் மனைவி, உபயபாரதிக்கு ஏற்பட்டது. இப்பொழுது, இது மிகவும் முக்கியமானதாகும் - என்னுடைய பெண் நண்பர்கள் இதை கவனிக்க வேண்டும் - உலகத்தின் வரலாற்றில், ஒரு முக்கியமான கூட்டத்திற்கு ஒரு நீதிபதியாக ஒரு பெண் தேர்வு செய்யப்பட்ட தனியொரு உதாரணம் கூட அதுவரையில் கிடையாது அந்தப் பெண் தனது சிறப்பான அறிவாற்றலையும் தகுதியையும் வெளிப்படுத்தினார், அவர் உபயபாரதி - சங்கராச்சாரியாருக்கு ஆதரவாகத் தீர்ப்புக் கூறினாள். (மதிப்புக்குரிய உறுப்பினர்கள் : கேளுங்கள், கேளுங்கள்!) இதன் விளைவாக, அவளுடைய

கணவர் ஒரு சந்நியாசியானார் தனது எதிராளியின் சிஷ்யரானார். அவருடைய கருத்து, அதற்கப்புறம், நாட்டின் தலையாய சமயமாக அங்கீகரிக்கப்பட்டது. ''உண்மையில், (ராமகிருஷ்ண மடத்தினால் வெளியிடப்பட்ட ''இந்தியாவின் கலாசாரப் பாரம்பரியம்'' என்ற நூலிலிருந்து நான் வாசிக்கிறேன்). விடுதலை பெற்ற மனதுடன் கூடிய, படைப்புச் சிந்தனையர்ளர்களான மூல நூலாசிரியர்கள் அல்ல, மாறாக, யாந்திரீக எண்ணங்கொண்ட விமர்சகர்கள் - திக்ககரர்கள் - ஸ்மிருதிகளை எழுதியவர்கள் அல்ல - திகாஸ்களை எழுதியவர்கள்தான், பெண்களின் உரிமைகளை ஒடுக்குவதற்கு முனைந்தனர். அவர்களை (பெண்களை) அறிவில்லாதவர்களுடனும் பிரமைகளுடனும் கூட்டுச் சேர்ந்தவர்களாக அவர்கள் கருதினர், என்று அந்த நூலாசிரியர் எழுதினார்.

ஐயா, இப்பொழுது, இந்த மசோதாவை எதிர்க்கும் நமது நண்பர்களில் பலர் - இந்த சபையிலுள்ளவர்களை நான் குறிப்பிட வில்லை, வெளியிலுள்ளவர்களைக் குறிப்பிடுகிறேன் - தர்மத்தின் பேரால் தங்கள் நிலையை எடுக்கின்றனர். அன்று நான் இந்தக் கேள்வியை முன்வைத்தேன்: ''தர்மம் என்றால் என்ன?'' இந்து சட்டத் தொகுப்பு - எதிர்ப்புக் கமிட்டி வெளியிட்டுள்ள பிரசுரங் களில் ஒன்று, நமக்கு சில புத்திமதிகள் கூறத் துணிகிறது. அது என்ன? அவர்கள் பழைய சுலோகத்தை மேற்கோள் காட்டுகின்றனர். அது திட்டவட்டமாக எதில் கூறப்பட்டுள்ளது என்று எனக்கு நினைவில்லை - ஆனால் பஞ்சதந்திரத்தில் அது மேற்கோள் காட்டப் படுகிறது:

''நசாசபா யாத்ரா நா சாந்தி விருத்தஹ<br>விருத்தநாடயே நா வதந்தி தர்மம்''

''அது விருத்தஹர்கள் இல்லாத சபாவோ அல்லது பேரவையோ அல்ல''

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர் :** ஆனால் அத்தகைய பலர் இங்கே இருக்கிறார்கள்!

**திரு. எச்.வி. காமத் :** தர்மத்தைப்பற்றிப் பேசாத மனிதர் விருத்தா அல்ல. ஐயா, இந்த இந்து சட்டத்தொகுப்பு - எதிர்ப்புக் கமிட்டியைச் சேர்ந்த நமது நண்பர்கள் ''விருத்தா'' என்பதன் பொருளை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பதற்காக நான்

வருத்தப்படுகிறேன் - யார் விருத்தா, யார் விருத்தா அல்ல என்பதை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. மகாபாரதத்தில் ஒரு கதை இருக்கிறது: 12 வயதான சரஸ்வத முனி என்ற ஒரு சிறுவன், நாட்டில் பஞ்சம் ஏற்பட்டிருந்தபோது, வயதான ரிஷிகள் அனைவரும் சரஸ்வதி நதிக்கரையில் உண்ணாவிரதம் மேற்கொண்டு, தவம் செய்து வந்தவர்கள் - தங்களுடைய உயிர்க்களைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பி அங்கிருந்து வேறிடங்களுக்குப் பெயர்ந்து சென்றனர் - அப்பொழுது இந்த சிறுவன் அங்கிருந்து ஓடிப்போகாமல் தனது தாய் சரஸ்வதியுடன் அங்கேயே உறுதியாகத் தங்கி வந்தான். அதனால்தான் சரஸ்வதி அவனுக்குக் காலையிலும் பகலிலும், இரவிலும் மீன் உணவு அளித்து போஷித்தாள். அதனால்தான் சரஸ்வத் பிராமணர்கள் இன்றும் கூட மீன் சாப்பிட்டு வருகின்றனர். இந்த பிராமணச் சிறுவன் பஞ்சத்தைப் பொருட்படுத்தாது. அங்கேயே வைராக்கியத்துடன் இருந்தான். அந்தப் பிரதேசத்தில் பல ஆண்டுகள் பன்னிரெண்டு ஆண்டுகள் பஞ்சம் நிலவியதாகவும், ஆனால் இளம் சிறுவன் சரஸ்வத் முனி உலகில் எல்லா சரஸ்வத் பிராமணர்களின் தோற்றுவாயான அந்த சிறுவன் தொடர்ந்து அங்கேயே இருந்து வந்தான் என்று அந்தக் கதை தொடர்கிறது. பஞ்சம் முடிந்த பிறகு, தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஓடிப்போன ரிஷிகள், ஒருவருக்குப் பின் ஒருவராக, கொஞ்சங் கொஞ்சமாக, சரஸ்வதி நதியின் கரைகளுக்கு, பஞ்சத்தினால் தடைப்பட்டு போன தங்கள் தவத்தை மீண்டும் தொடர்வதற்குத் திரும்பி வந்தனர். அங்கு அந்த 24 வயது இளைஞன்மீது ஆதிக்கம் செலுத்த அவர்கள் முயன்றனர். பஞ்சம் தொடங்கியபோது அவன் 12 வயது சிறுவனாக இருந்தான், பஞ்சம் முடிந்தபோது அவன் 24 வயது வாலிபனாகியிருந்தான். அவர்கள் அவன்மீது ஆதிக்கம் செலுத்தத்தொடங்கினர். ''நீ எங்கள் காலடியில் உட்கார வேண்டும்; எங்கள் உத்தரவுகளின்படி நடக்க வேண்டும்; எங்களிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும்; எங்களுடைய சீடனாக வேண்டும்'' என்று அவர்கள் கூறினர். ''கேவலம், உங்களுக்கு அவமானமாக இல்லை, முனிவர்கள், ரிஷிகள், தவ சிரேஷ்டர்கள் போல் நீங்கள் பாசாங்கு செய்கின்றீர்கள், உயிருக்கு பயந்து ஓடினீர்கள், மரணத்தைக் கண்டு அஞ்சி ஓடினீர்கள். நீங்கள் தான் என் காலடியில் உட்கர்ந்து கற்றுக்கொள்ள வேண்டும்''. இவ்வாறு 24 வயதான அந்த இளைஞன் 70, 80 வயதான அந்த முதியவர்களிடம் கூறினான். மகாபாரதம் மேலும் இவ்வாறு கூறுகிறது:

''நா தெனா விருதோ பவதி யெனஸ்ய பலிதம் ஷிராஹ்
யோ வை யுவபியாத்யா நஸ்தம் தேவா ஸ்தவிரம் விதூஹ்''

(ஒரு மனிதன் தனது நரைமுடியின் காரணமாக மட்டுமே ஒரு விருத்தன் அல்ல ஓர் இளைஞன்கூட, நன்கு கற்றறிந்தவன், கடவுள்களால் விவேகி என்று அழைக்கப்படுகிறான்).

விருத்தி அடைந்தவனே விருத்தன். உண்மையில் ''விருத்தா'' என்ற சொல் முதியவன் என்று தவறாக மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. இதன்பொருள், விருத்தியை எய்தினவனே, அதை விவேகம், வளர்ச்சி, அபிவிருத்தி என்று நீங்கள் கூறலாம் - அதுதான் விருத்தி..... இங்கு நமது நண்பர்கள் இவ்வாறு கூறுகிறார்கள்.

*''நா சா சபா யாத்ரா நா சாந்தி விருத்தா -*
*விருத்தா நா தே யே நா வதந்தி தர்மம்''*

''விருத்தி'' அல்லது விவேகம் என்ற அந்தப் பொருளிலும் இங்கு என்னுடைய நண்பர்களில் பலர், அந்தத் தகுதிக்கு ஏற்றவர்களாக இருப்பார்கள். ஆனால் என்னுடைய நண்பர்கள் அந்த சுலோகம் முழுவதையும் மேற்கோள் காட்டாமல் நின்று விட்டார்கள். அவர்கள்.

*''நா சா சபா யாத்ரா, நா சாந்தி விருத்தாஹ்,*
*விருத்தா நா தேயே நா வதந்தி தர்மம்''*

என்று கூறுவதுடன் தொடங்குகிறார்கள். ஆனால் தர்மம் என்றால் என்ன? அந்த சுலோகம் பின்னர், தர்மம் என்பது என்ன என்று கூறுகிறது. அவர்கள் சுலோகத்தின் பின்வரும் பகுதியை சௌகரியமாக விட்டுவிடுகிறார்கள். அந்த சுலோகம், மேலும் பின்வருமாறு கூறுகிறது.

*''தர்மா சா நா யாத்ரா நா சத்யமாஸ்டி'',*

சத்தியம் இல்லாத இடத்தில் தர்மம் இல்லை. எனவே, தர்மம் சம்பந்தமாகத் தங்களுடைய நிலையை மேற்கொள்ளுகின்றவர்கள் சம்பந்தமாக என்னுடைய தாவா என்னவென்றால், இந்து தர்மம் என்பது என்ன என்பதை அவர்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையென்பதுதான்.

நம்முடைய மாபெரும் அறிஞரும் தத்துவ ஞானியுமான டாக்டர் சர்வபள்ளி ராதாகிருஷ்ணன், இந்த விஷயம் சம்பந்தமாக, குறிப்பாக இந்து தர்மம் சம்பந்தமாக என்ன சொல்கிறார் என்பதை

இந்த அவைக்கு எடுத்துக் கூறுவதற்கு மீண்டும் உங்களுடைய அனுமதியைக் கோருகிறேன் அவர் நமக்கு இவ்வாறு கூறுகிறார்:

> ''ஒரு சீரான, நிலையான, மாற்றப்பட முடியாத இந்து மதம் என்று ஒன்றுமில்லை. நம்பிக்கை அம்சத்திலோ அல்லது நடைமுறையிலோ ஆனாலும் சரி அத்தகையது எதுவுமில்லை. இந்துமதம் ஓர் இயக்கம்; ஒரு நிலை அல்ல; ஒரு நிகழ்வுப் போக்கு, ஒரு விளைபயன் அல்ல; ஒரு வளரும் பாரம்பரியம் (மரபு), ஒரு நிலையான ஞானோதயமல்ல. வருங்காலத்தில் சிந்தனைக் களத்திலோ அல்லது வரலாற்றுக் களத்திலோ ஏற்படும் எந்த அவசர நிலையையும் அது சமாளிக்கும் என்று நம்புவதற்கு அதனுடைய கடந்தகால வரலாறு நமக்கு ஊக்கமூட்டுகிறது.....

இந்த முன்னறிவிப்பு இன்று மெய்யாகிவருவது குறித்து நாம் மகிழ்ச்சியடைகிறோம். ஐம்பதாண்டுகளுக்கு முன்னால் சுவாமி விவேகானந்தர்தான், வேதாந்தம் மனித சமுதாயத்தின் மதமாகுமென்று கூறினார் - நம்முடைய மகான்களால், ரிஷிகளால், முனிவர்களால் உலகத்திற்கு வழங்கப்பட்ட வேதாந்தம் அது. ராதாகிருஷ்ணன் மேலும் இவ்வாறு கூறுகிறார்:

> ''நமது பண்டைய சமயத்தைப் புதிய கண்களுடன் பார்ப்பதற்கு நாம் தொடங்கியுள்ளோம். நமது சமுதாயம் ஒரு ஸ்திரமற்ற சமநிலையில் இருப்பதாக நாம் உணர்கிறோம். நிறைய விஷயங்கள் காலாவதியாகிப் போய், நோயுற்றுள்ளன. அவற்றை அகற்றியாக வேண்டும்.

ஐயா, இங்கு நமது பெரும்பாலான நண்பர்கள் அவர்களது சொந்த வழியில் இந்து சிந்தனை மற்றும் நடைமுறையின் தலைவர்களாக இருக்கிறார்கள், அது குறித்து நான் நிச்சயமாக இருக்கிறேன் -

> ''இந்து சிந்தனை மற்றும் நடைமுறையின் தலைவர்கள், இந்து மதத்தின் அடிப்படையான கோட்பாடுகளை சரண் செய்வதல்ல, மாறாக, ஒரு கூடுதல் சிக்கலான மற்றும் நோயுண்ட சமூக அமைப்பின் தேவைகளுக்கு ஏற்ப, அவற்றை மீண்டும் வலியுறுத்த வேண்டும், இதுவே காலத்தின் தேவை என்று உணர்ந்தனர்.

அவர் மேலும் கூறுகிறார்:

> ''இத்தகைய ஒரு முயற்சி, இந்து சமயத்தின் வரலாற்றில் பல தடவை நிகழ்ந்த ஒரு நிகழ்வுப் போக்கு மீண்டும் ஏற்படுவதேயாகும். இசைவாக்கிக் கொள்ளும் பணி நடைபெற்று வருகிறது. வேர்கள் ஆழமாக உள்ளபோது, வளர்ச்சி மெதுவாக உள்ளது. ஆயினும் இருளில் ஒரு சிறிய மெழுகுவர்த்தியை ஏற்றுபவர்கள் வானம் முழுவதும் சுடர்விட்டுப் பிரகாசிக்க உதவுவார்கள்.''

இந்து தர்மம் பற்றிய இந்த விளக்கவுரையை இந்த மசோதாவை எதிர்க்கின்ற, தர்மத்தின்பேரால் இந்த மசோதாவைப் பரிசீலனை

செய்வதைக் கூட எதிர்க்கின்ற என்னுடைய நண்பர்கள் படிக்க வேண்டுமென்று நான் பரிந்துரை செய்கிறேன். 'தர்மத்திற்கு ஆபத்து' அல்லது 'சமுதாயத்திற்கு ஆபத்து' என்ற இந்தக் கூக்குரலானது, கடந்த காலத்தில் சமுதாயத்தை சீர்திருத்துவதற்காக செய்யப்பட்ட ஒவ்வொரு முயற்சியையும் தடைசெய்ய விரும்பியவர்களால் எழுப்பப்பட்டது யாருக்குத் தெரியாது, யார் நினைவுகூராமல் இருக்கிறார்கள்? இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால், தீண்டாமைக்கு எதிராக இயக்கம் தொடங்கப்பட்டபோது நம்மவர்கள் சிலர், உயர்வர்க்க, பழமைவாத இந்துக்களும்கூட, இந்து மதத்திற்கு ஆபத்து, சமூகமுறைமைக்கு ஆபத்து சமுதாயம் கட்டுக்குலையப் போகிறது என்று கூறவில்லையா? இருந்தபோதிலும் நாம் மிகவும் தேவைப் பட்ட அந்த சீர்திருத்தத்தை உறுதியாகக் கடைப்பிடிக்கவில்லையா? இந்து சமுதாயம் எல்லோரும் சமம் என்ற அடிப்படையில் பரிணாம வளர்ச்சி அடைவதை விரைவுபடுத்துவதற்கு நாம் உதவவில்லையா? இந்த முயற்சிகளின் உச்ச நிலையாக, நகல் அரசியல் சாஸனத்தில், தீண்டாமையைத் தடைசெய்தும், எந்த உருவத்திலும் அல்லது வடிவத்திலும் அதை சட்டவிரோதமாக்கியும் ஒரு விதியை நாம் ஏற்றுக்கொள்ளவில்லையா? வைதீகப் பண்டிதர்கள் எது இந்து தர்மம் என்று உரிமை கொண்டாடி வந்தபோதிலும் அதைப் பொருட் படுத்தாது நம்மால் அதைச் செய்ய முடிந்ததென்றால், சட்டமியற்றுவதற்கோ, அல்லது சமூக உறவுகளையும் தனிநபர் சட்டத்தையும் முறைப்படுத்துவதற்கும் நாம் ஏன் முன் செல்லக் கூடாதென்பதற்கு எந்தக் காரணத்தையும் என்னால் காண முடியவில்லை.

ஐயா, மீண்டும், குழந்தைத் திருமணத்தைத் தடை செய்த சாரதா சட்டத்திற்கு எதிராக, இந்து தர்மத்திற்கு ஆபத்து, இந்து மதத்திற்கும் இந்து சமுதாயத்திற்கும் ஆபத்து என்ற காரணங்கூறி, எதிர்ப்புத் தொடங்கப்பட்டது மதிப்புக்குரிய உறுப்பினர்களுக்கு நினைவிருக்கும் என்று நம்புகிறேன். கடந்த நூற்றாண்டில், இறந்து போன கணவனின் உடலுடன் மனைவி (விதவை)யையும் சேர்த்து எரியூட்டும் 'சதி' வழக்கம் ஒழிக்கப்படுவதற்கு முயற்சி செய்யப் பட்டபோது முன்னேற்றத்தின் பாதையில் தடைக்கல்லை வைக்கும் இதே பிற்போக்காளர்கள்தான், இந்து தர்மம் உடன்கட்டை ஏறுவதை (சதி) இந்து தர்மம் அனுமதிக்கிறது என்று அதைக் கண்டனம் செய்து, அது பெண்ணுக்கு உயர்ந்த விமோசனத்தை அளிக்கிறது என்றும், எனவே நீடித்துத் தொடரவேண்டும் என்றும் கூறினர். அவர்களின் கிளர்ச்சியையும் தடங்கலையும் பொருட்படுத்தாது அது போன்ற மிகவும் தேவைப்பட்ட சீர்திருத்தங்கள் அமலுக்குக் கொண்டு வரப்பட்டன.

இந்த மசோதா கிராமப்புற மக்களுக்கு எட்டவில்லை யென்றும், அப்பாவியான கிராமப்புற மக்கள் இதைக் காணவில்லை, அல்லது படிக்கவில்லை அல்லது பரிசீலனை செய்யவில்லை என்றும் அன்று பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா கூறினார். இந்த சபையில், இதுபற்றி விவாதம் செய்வதற்கு முன்னால் இந்த மசோதா குறித்து அவர்களது பிரதிபலிப்புகளைத் தெரிந்து கொள்வதற்கு அவர் ஆர்வம் காட்டினார். அவர் அவ்வாறு கூறியபோது அவரே இந்த சபையில் முன்மொழிந்த சில மசோதாக்களை அவருடைய சொந்த ஹிஸ்ஸார் தொகுதி விவசாயிகளே பார்க்கவில்லை, என்ற உண்மையை அவர் மறந்து விட்டார். அவருடைய ஆலோசனையின் பேரில் நமது மசோதாக்களின் பிரதிகளை நம் நாட்டின் ஒவ்வொரு கிராமத்திற் கும், குக்கிராமத்திற்கும் குடும்பத்திற்கும் சுற்றுக்கு விடப் போகி றோமா என்று நான் வியப்படைகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி (உ.பி. : பொது):** இந்த நாட்களில் விவசாயிகள் எல்லாம் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை.

**திரு. எச்.வி. காமத் :** இப்பொழுதெல்லாம் விவசாயிகள் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுவதில்லை என்று திரு. தியாகி கூறுவதைக் கேட்க நான் வியப்படைந்தேன். அவர்கள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லையென்றால், கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவேண்டியவர்கள் வேறு யார்?

**மதிப்புக்குரிய உறுப்பினர்கள் :** நீங்கள்தான்.

**திரு. எச்.வி. காமத் :** இந்தப் பாராட்டுக்காக உண்மையில் நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன் ஐயா, அண்மை வருங்காலத் தில், நான் மட்டுமன்றி, இந்த அவையிலுள்ள என்னுடைய அனைத்து நண்பர்களும் என்னைப் போன்றே சம அளவில் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவேண்டியவர்களாக இருப்பார்கள் என்று நான் நம்பு கிறேன்.

ஐயா, பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா கூறியுள்ள சில கருத்துக் களுக்கு நான் ஆதரவு தெரிவிக்கும் அதே சமயத்தில் பாதிக்கப்பட்ட மக்களிடையில் சுற்றுக்கு விடப்படவில்லை. அல்லது முறையாக வெளியிடப்படவில்லை என்ற காரணத்தின் பேரில், இந்து சட்டத் தொகுப்பு மசோதாவை அவர் எதிர்ப்பது பொருத்தமற்றதல்ல என்று நான் கருதுகிறேன். அந்த வாதம் முற்றிலும் ஏற்றுக்கொள்ளப்பட

முடியாததாகும். அப்படிப் பார்த்தால், கோடிக்கணக்கான மக்களின் வாழ்க்கையை பாதிக்கின்ற, இங்கு நிறைவேற்றப்படுவதற்கு முயற்சி செய்யப்படும் ஒவ்வொரு மசோதாவும், அவர்களுக்கு, அவர்கள் தங்களுடைய அங்கீகாரத்தையோ அல்லது எதிர்ப்பையோ, பதிவு செய்வதற்காக அவர்களுக்கு அனுப்பப்பட்டாக வேண்டும். ஐயா, இப்பொழுது, சமத்துவம் என்ற இந்த எரிச்சலூட்டும் பிரச்சினைக்குத் திருப்திகரமான முறையில் நான் தீர்வு கண்டுவிட்டேன் என்று நம்புகிறேன். ஐயா, ஆண்களும் பெண்களும் ஆன்மீக மட்டத்தில் சமமானவர்கள். கீதை, ஸ்மிருதிகள் - மற்றும் ஸ்ரீகிருஷ்ணனே இந்த சமத்துவக் கோட்பாட்டை போதித்துள்ளார்.

ஐயா, சொத்து சம்பந்தமான பிரச்சினையை எடுத்துக் கொண்டால், பெரும்பாலான தத்துவஞானிகள், அரசியல், சமூக, அல்லது வேறுவகைப்பட்டவர்களின் கூற்றுப்படி, உலகில் அனேகமாக, அனைத்துத் தீமைகளுக்கும் அடிப்படையான காரணமாக இருந்து வந்துள்ளது. இது சம்பந்தமாக சேத் கோவிந்ததாஸ் முன்வைத்த கருத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன் - இப்பொழுது அவர் இந்த அவையில் இல்லை - தனிச் சொத்துரிமை ஒழிக்கப்பட்டால், அது சிறந்ததாக இருக்கும். இது செய்யப்பட்டால் வழக்குகள் கூட பெருமளவு குறைந்துவிடும். பண்டைய காலத்தில் நமக்கு சட்டங்களை வழங்கிய மற்றும் ராஜியத் தலைவர்களில் மகத்தானவர்களில் ஒருவர் - மனுவோ, யாக்ஞவல்கியரோ அல்ல - ஆனால் ஒரு படைத் தளபதி மற்றும் அரசியல்மேதை - பீஷ்ம பிதாமகர் தனது கோட்பாட்டை மகாபாரதத்தின் இரண்டு பர்வங்களில் - அதாவது **சாந்தி பர்வம்** மற்றும் **அனுசாஸனிக** பர்வத்தில் விளக்கியுள்ளார். அதில் அவர் யுதிஷ்டிரருக்கு சொத்துக்களைப் பற்றி இவ்வாறு கூறுகிறார்:

*அகின்சசனிகா சுத்தஸ்யா ந துலியமிகியா*
*லக்ஷ்யாயே அகின்சன்யாம்சா ராஜ்யம்சா துலாயா*
*சமதோலயம் அத்யரிசியத தரித்ரியம் ராஜ்யதாபி*
*குரதிகம் நித்யதிவிகோனோஹி தாமவன்*
*மிருத்யே ரஸ்யகதோ யாத.*

தனது ராஜ்யத்தையும் விருப்பபூர்வமாக தான் ஏற்றுக் கொண்ட வறுமையையும் துலாக்கோலில் எடை போட்டுப் பார்த்ததாகவும், இந்த விருப்பபூர்வமான வறுமையே, ராஜ்யத்தை விட அதிக எடையுள்ளதாக இருந்ததாகவும் கூறுகிறார். ஏனெனில், ''மணிமுடியைத் தாங்கிக் கொண்டிருப்பவர் எப்பொழுதும் சங்கடப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும்.'' ஒரு மனிதன் சொத்துடையவனாக இருந்தால், அவன் மரணத்தைக் கண்டு பயப்படுகிறான்.

மனைவியும் கணவனும் அன்பினால் ஒன்றுபட வேண்டும் என்பது மட்டுமன்றி, சொத்திலும் ஒன்றுபட வேண்டும். சில சமயங்களில் அன்பு (காதல்) மட்டுமே அவர்களின் ஒரே சொத்தாக ஏற்பட்டு விடுகிறது. கணவனுக்கும் மனைவிக்கும் எந்த சொத்தும் இல்லாமலும் போகக்கூடும். அவர்களின் பரஸ்பர அன்பே அவர்களின் ஒரே சொத்தாக இருக்கக்கூடும். ஆனால், ஐயா, வாழ்க்கையின் கடும் எதார்த்தத்தை இன்று நாம் எதிரிட வேண்டும். ஆயினும், இது சம்பந்தமாக பண்டிட் பர்கவாவின் சொந்த அனுபவத்தைக் கேட்க புத்துணர்ச்சி ஏற்படுகிறது. ஆண்களும், பெண்களும் கணவன்மார்களும் மனைவிமார்களும் பண்டிட் தாகூர்தாஸ் பர்கவாவும் அவருடைய மனைவியையும் போன்றே அதே மகிழ்ச்சியான நிலையிலிருந்தால் இந்த உலகம் வாழ்வதற்கு ஒரு மகிழ்ச்சிகரமான இடமாக இருக்கும். ஆயினும், இன்று, நூற்றுக்கணக்கான உதாரணங்களில் மனைவிக்கும் கணவனுக்கும் இடையிலான உறவுகள், அவை இருக்கவேண்டிய அல்லது நாம் விரும்புவதுபோல் மகிழ்ச்சிகரமாக இல்லை. (குறுக்கீடு). ஐயா, என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. பி. தாஸைப் போன்ற நண்பர்கள் என்னிடத்தில் கூறிய விவரங்களிலிருந்தே நான் பேசுகிறேன். இந்தத் துறையில் அனுபவமுள்ள என்னுடைய மதிப்புக்குரிய நண்பர்கள் என்னிடம் கூறியவற்றிலிருந்தே இந்த விவரங்கள் எனக்குக் கிடைத்தன.

நமது இந்து சட்டத்தொகுப்பு மசோதா இந்த அம்சத்தில், ஒரு பெண்ணுக்குத் தனது சொத்தில் முழு உரிமை பெற்றிருப்பதற்குத் தகுதி உண்டு என்று வகை செய்கிறது. தர்மம் மற்றும் இந்து சட்டத்தொகுப்பு மசோதாவை எதிர்க்கின்றவர்கள் தங்கள் நிலைக்கு வேதகாலம் மற்றும் பண்டையக் காலத்தை அடிப்படையாகக் கொள்கிறார்கள். மத்திய காலத்தில்தான் இந்து மதம் வீழ்ச்சியடைந்து வந்தபோது தான் பெண்களின் சொத்துரிமைக்குக் கட்டுப்பாடு ஏற்பட்டது. வேதகாலத்தில் பெண்களின் சமூக அந்தஸ்து பொதுவாக உயர்வாக இருந்தது.

**திரு. தலைவர் :** பலர் பேசுவதற்கு விரும்புகிறார்கள். மதிப்புக்குரிய உறுப்பினரை சாத்தியமான அளவு சுருக்கமாகப் பேசும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** நான் சுருக்கமாக முடித்துக் கொள்வதற்கு முயற்சி செய்கிறேன். ஆனால் இது மிகவும் பெரிய விஷயமாக இருப்பதால், சுருக்கமாகக் கூறுவது சிரமமானது.

3

**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர் (சட்ட அமைச்சர்) :** திரு. காமத் பேசுவதற்கு நிறைய சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. குறைந்த பட்சம் 130 பிரிவுகள் இருக்கின்றன.

**திரு. எச்.பி. காமத் :** இன்று சில விஷயங்களை சொல்லாம விருப்பதற்கு நான் விரும்பவில்லை. வேதகாலத்தில், பெண்களின் சமூகநிலை உயர்வாக இருந்தது என்று நான் கூறிக்கொண்டிருந் தேன். ஒரு திருமணமாகாத மகளுக்கு அவளுடைய தகப்பனாரின் சொத்தில் ஒரு பங்கு வழங்கப்பட்டது, திருமணமான மகளுக்கு அதில் ஏதும் கொடுக்கப்படவில்லை, ஆனால், அவளுடைய திருமணத்தின் போது போதுமான வரதட்சிணை கொடுக்கப்பட்டது. எனவே இந்த அம்சத்தில் என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா முன்வைத்த வாதத்தை இந்த அவையும் மாண்புமிகு அமைச் சரும் பரிவுடன் பரிசீலனை செய்யவேண்டும் என்று நான் நினைக் கிறேன்; ஏனெனில் அடிப்படையாகவே நானே சொத்தை எதிர்ப் பதால், சொத்து நிலைமையை இன்றுள்ளதைக் காட்டிலும் மோச மாக்குவதன் மூலம் எந்தப் பயனும் ஏற்படப்போவதில்லை என்று நான் நினைக்கிறேன். 12 மகன்களும் ஒரு மகளும் கொண்ட ஒரு இந்து குடும்பத்தின் சொத்து சம்பந்தமான ஒரு உதாரணத்தை டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்டார். அவர் அந்த உதாரணத்தைக் குறிப்பிடலாம், ஆனால் 12 மகள்களும் ஒரு மகனும் கொண்ட மற்றைய உதாரணத்தை நான் மேற்கோள் காட்டுகிறேன். இந்தக் குடும்பம் சம்பந்தமாக, இந்து சட்டத் தொகுப்பு மசோதா பிரயோ கிக்கப்பட்டால் என்ன ஏற்படும்? குடும்பச் சொத்து அனைத்து மகள்கள் மற்றும் ஒரு மகன் இடையில் பிரித்துக் கொள்ளப்பட வேண்டும். மகன், வீட்டின் ஒரு மூலையில் ஒதுக்கப்படுவான். மகள்கள் திருமணமானபின், தங்கள் கணவன்மார்களையும் அந்த வீட்டுக்குள் கொண்டுவருவதற்கு உரிமையுண்டு. வீட்டின் ஒரு பகுதியை ஓர் அந்நியருக்கு விற்பதற்கும் அவர்களுக்கு உரிமை யுண்டு. எனவே அந்த சிறிய மகன் ஒரு சுண்டெலியைப் போன்று அங்கும் இங்கும் சுற்றித் திரிய வேண்டும். அவன் வசிப்பதற்கு சௌகரியமான ஒரு மூலையும் கூடக் கிடைக்காது.

ஐயா, எனவே, சொத்து என்னும் இந்தப் பிரச்சினை ஒரு மிகவும் தொல்லையான பிரச்சினையாகும்; ஒரு மகள், தானே சொத்தைப் பெறுவதற்கு பதிலாக, சொத்தின் பங்குக்கு ஈடாக, ரொக்கமாகவோ, நகைகளாகவோ பெற்றுக் கொள்வதற்கு அனுமதிக் கப்படுவாளா, அல்லது அவள் எதை அடைய விரும்புகிறாளோ

அதைப் பெற்றுக் கொள்வதற்கு - பண்டைக் காலத்திலும் வேத காலத்திலும் செய்ததைப் போன்று அனுமதிக்கப்படுவது குறித்தும் நாம் பரிசீலனை செய்ய வேண்டும். திருமணம் நடைபெறும் சமயத்தில் சொத்தில் பங்கு பெறுவது இல்லை, மாறாக, சொத்தில் பங்கு கொடுப்பதற்கு பதிலாக, அவளுக்குப் போதுமான அளவு வரதட்சிணை கொடுக்கப்பட்டது.

*(பின்னர் சபை, மதிய உணவுக்காக இரண்டரை மணி வரை ஒத்திவைக்கப்பட்டது).*

---

*(மதிய உணவிற்குப் பிறகு பேரவை இரண்டரை மணிக்கு மீண்டும் கூடியது.)*

*திரு. எஸ்.வி. கிருஷ்ண மூர்த்தி ராவ் சபாநாயகராக அமர்ந்திருந்தார்.*

**திரு. தலைவர் :** விவாதத்தை நாம் தொடருவதற்கு முன்னால் நான் ஓர் ஆலோசனை கூறவதற்கு விரும்புகிறேன். பட்டியலில் சுமார் 25 பெயர்கள் இருக்கின்றன. இது ஒரு முக்கியமான மசோதாவாகும். இந்த சட்டத்தின் மீது அதிகப்படியான உறுப்பினர்கள் தங்களுடைய கருத்துக்களைக் கூறுவதற்கு விரும்புவார்கள். எனவே, மதிப்புக்குரிய உறுப்பினர்கள் சாத்தியமான அளவு சுருக்கமாகவும் மசோதாவிற்கு ஆதரவாகவோ, அல்லது எதிராகவோ பொருத்தமான விஷயங்களைப் பற்றி மட்டும் பேசும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**பாபுராம் நாராயண் சிங்** (பீஹார் : பொது) : ஐயா, என்னுடைய பெயரையும் பட்டியலில் சேர்த்துக் கொள்ளலாம்.

**திரு. பி. தாஸ்** (ஒரிசா: பொது) : என்னுடைய பெயரை அனுப்ப வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. சபாநாயகரின் பார்வை என் மீது விழும் என்று நினைத்தேன்.

**திரு. தலைவர்:** அதனால்தான் சாத்தியமான வரையில் சுருக்கமாகப் பேசும்படியும், மசோதாவிற்கு ஆதரவாகவோ அல்லது எதிராகவோ முக்கியமான அம்சங்களை மட்டுமே குறிப்பிடும்படியும் நான் மதிப்புக்குரிய உறுப்பினர்களுக்குக் கூறி வருகிறேன்.

பேசுவதற்கு விரும்புகின்ற உறுப்பினர்கள் தயவு செய்து சீட்டு எழுதி அனுப்புங்கள்.

**திரு. தாஜாமுல் உசேன்** (பீஹார்: முஸ்லிம்) : ஐயா, என்னுடைய பெயர் பட்டியலில் இருக்கிறதா என்று நான் தெரிந்து கொள்ளலாமா? துணை சபாநாயகரிடம் நேற்று, கடந்த வெள்ளிக் கிழமையன்று நான் பேசினேன்.

**திரு. தலைவர்:** பரவாயில்லை, ஒரு புதுச் சீட்டு எழுதி அனுப்புங்கள்.

**திரு. எச்.வி. காமத் :** என்னுடைய சிற்றுரையின் தொடர்ச்சியை, விட்ட இடத்திலிருந்து நான் மீண்டும் தொடங்குவதற்கு முன்னால், என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் பண்டிட் தாகூர் தாஸ் பர்கவாவை விட மிகவும் குறைவான நேரத்தையே எடுத்துக் கொள்வேன், என்று உங்களுக்கு உறுதி கூற விரும்புகிறேன்.

**திரு. தலைவர் :** நீங்கள் ஏற்கனவே ஒரு மணி நேரம் பேசி விட்டீர்கள்.

**திரு. எச்.வி. காமத் :** என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் பண்டிட் தாகூர்தாஸ் பர்கவாவை விடக் குறைந்த நேரம் என்று தான் நான் கூறினேன்.

நான் சொத்து பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். சொத்தை ஒதுக்கீடு செய்வதற்கான அடிப்படை, சகுந்தலாவிற்கு விடையளித்த பின் கண்வர் எடுத்துக்கூறிய கோட்பாடுதான். கண்வர் இவ்வாறு கூறினார்.

"ஆர்த்தோ ஹி கன்யா பரக்கியா ஈவா தமாதியா சம்பிரஷ்யா
பரிகிரஹிது ஜாடோ
மமயாம் விஷதா பிரகமம் பிரத்யார்பிதார்யாசா இவான்தராத்மோ"

முதலாவது வரி "ஆர்தோஹிகன்யா" என்றால், சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தது போல், ஒரு பெண் மற்றொருவருடைய சொத்து என்று பொருள் அல்ல. ஒரு பெண், திருமணமானவுடன், தந்தையின் வீட்டிலிருந்து பிரிந்து சென்றுவிடுகிறாள் என்பது இதன் பொருள் இந்த அடிப்படையில்தான் அவள் மற்றொரு வீட்டினுள்

புகுகிறாள், பண்டைக் காலத்தில், அதாவது வேத காலத்திலும், அதற்குப் பின்னரும், மகளுக்கு சொத்தில் எந்தப் பங்கும் தரப் படவில்லை, ஆனால் போதிய அளவு வரதட்சிணை வழங்கப் பட்டது. மீண்டும், வேதகாலத்திலும், ஸ்மிருதிகாலத்திலும் தகப்ப னாருக்கு மகன் இல்லாதபோது மட்டுமே அவர் தனது மகளைப் புத்திரிகா என்று நியமிக்கிறார், அத்தகைய ஒரு மகள் மகனுக்கு சமமாவாள். இந்தக் கோட்பாட்டை நமது புதிய சட்டத்தை உரு வாக்குகிறவர்களும் பரிசீலனை செய்வது அவசியம். இந்தக் கோட் பாட்டின் சாராம்சத்தை அவர்கள் இந்த சட்டத்தில் இணைப்பதற்கு முயற்சி செய்யலாம்.

விவசாய சொத்தைப் பூரணமாக இதிலிருந்து விலக்க வேண்டு மென்று நான் விரும்புகிறேன். ஆளுநர்களின் மாநிலங்களைப் பொறுத்தவரையில், இது ஏற்கனவே விலக்கப்பட்டுள்ளது. அத்தி யாயம் 1-ன், 7ம் பாகம், 94வது பிரிவு இவ்வாறு கூறுகிறது. ''இந்த பாகம் ஆளுநர்களின் மாகாணங்களில் உள்ள விவசாயநிலத்திற்குப் பொருந்தாது;'' நிலத்தைத் துண்டுபோடுவதற்கு எதிராக ஏற்கனவே ஒரு கூக்குரல் இருந்து வருகிறது. இது சம்பந்தமாக நாம் மெதுவாகத் தான் செல்ல வேண்டும், அப்பொழுதுதான் இந்தத் தீமை மேற் கொண்டு உக்ரமாகாமல் தடுக்க முடியும். உண்மையில் நிலம் முழுவதும் தேசவுடைமையாக்கப்பட்டால், அப்பொழுது எந்த சிரமமும் ஏற்படாது, இந்தப் பிரச்சினை இறுதியாகத் தீர்வு காணப் படாமல் நிலுவையில் இருக்கின்ற வரையில், விவசாய நிலத்தை, ஆளுநர்களின் மாகாணங்களில் மட்டுமன்றி, மத்திய அரசினால் நிர்வாகம் செய்யப்படும் பிரதேசங்களிலிருந்தும், சட்டத்தின் இந்த பாகம் செயல்படுவதனின்றும் நாம் விலக்க வேண்டும்.

இப்பொழுது, மனித சமுதாயத்தை ஆரம்ப காலத்திலிருந்து பதற்றமடையச் செய்து வந்த மாபெரும் பிரச்சினைக்கு - திருமணம் மற்றும் விவாகரத்து என்ற பிரச்சினைக்கு வருகிறேன். இந்தப் பிரச் சினையில், நாம் கடைப்பிடிக்கவேண்டிய கோட்பாடு - இந்தப் பிரச்சினையில் சட்டமியற்றும்போது இது ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்- ''திருமணம் இலகுவாக இருக்க வேண்டும், ஆனால் விவாகரத்து சிரமமானதாக இருக்க வேண்டும்'' - என்பதாக இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன். இந்த ஆரோக்கியமான விதி சட்டமியற்றுவதில் ஏற்றுக்கொள்ளப்பட்டால், நமது பல சங்கடங் களை இது தீர்த்து விடும்.

**சர்தார் பூபேந்தர் சிங் மான்** (கிழக்குப் பஞ்சாப் : சீக்கியர் தொகுதி): உங்களுடைய விஷயத்தில் விவாகரத்தை விடவும் திருமணம்தான் கூடுதல் சிரமமானதாகும்.

**திரு. எச்.வி. காமத் :** ஒரு விதிக்கு எப்பொழுதும் விலக்குகள் உண்டு. நான் அவற்றில் ஒன்று என்று நினைக்கிறேன்.

ஒரு சமீபத்திய வரலாற்று உதாரணத்தை மேற்கோள் காட்டுவதற்கு நான் அனுமதிக்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஜெர்மனியில் ஹிட்லர், 1932ல் தேர்தலில் போட்டியிட்ட போது, அவருடைய தேர்தல் கோஷங்களில் ஒன்று, ''ஒவ்வொரு ஜெர்மன் குடிமகனுக்கும் ஒரு வேலை, ஒவ்வொரு ஜெர்மன் பெண்ணுக்கும் ஒரு கணவன்.'' இந்த கோஷம், அதாவது ஒவ்வொரு ஜெர்மன் பெண்ணுக்கும் ஒரு கணவனை வாக்குறுதி அளித்ததானது அவருக்கு லட்சக்கணக்கான பெண்களின் ஓட்டுகளைக் குவியச் செய்தது என்று எனக்கு ஞாபகம். இது, திருமணம் இலகுவாக இருக்கவேண்டும், விவாகரத்து கடினமானதாக இருக்கவேண்டும் என்று நான் உங்களுக்கு முன்னால் வைக்க முயன்ற கோட்பாட்டை முழுமையாக நிரூபணம் செய்கிறது. என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா, அன்றைய தினம், இந்தப் பொருளைப்பற்றிப் பேசும்போது, இதைக் குறிப்பிட்டு, நாட்டின் பல்வேறு பாகங்களில் வெவ்வேறு பழக்க வழக்கங்கள் இருக்கின்றன. அவற்றுக்கேற்ப விவாகரத்து செய்யப்படலாம் என்று கூறினார். மேலும் ஒரு எளிமையான வழக்கம் இருப்பதைப் பற்றி எனக்குக் கூறப்பட்டது, அதன்படி, 'தலக்' என்று கணவன் மூன்று தடவை சொல்லிவிட்டால் மனைவியை விவாகரத்து செய்து கொள்ளலாமாம். அது போன்று ஒரு வழக்கம் இருக்கலாம், எனக்குத் தெரியாது. அதனால்தான் விவாகரத்து இலகுவாக இருக்கக்கூடாது என்று நான் கூறினேன், எனக்குச் சொல்லப்பட்டது, தனிப்பட்ட முறையில் நானும் அவ்வாறுதான் நினைக்கிறேன். நவீனகால நாடுகளில் ஒன்றாகிய, சோவியத் யூனியன், இந்த நூற்றாண்டின் இருபதாம் ஆண்டுகளின் துவக்கத்தில் திருமணம், விவாகரத்து ஆகிய இரண்டையும் சம அளவில் இலகுவாக்கியது. ஆனால், அனுபவத்தின் அடிப்படையில் ஒரு சமூக யூனிட் என்ற வகையில் குடும்பம் ஒரு கம்யூனிஸ்ட் நாட்டிலும் கூட பாதுகாக்கப்பட வேண்டும், பலப்படுத்தப்பட வேண்டும் என்று அவர்கள் கற்றுக்கொண்டனர். எனவே, இப்பொழுது, திருமணம் இலகுவாக இருந்தபோதிலும், விவாகரத்து மிகவும் அசாத்தியமானதாகும். எனவே, சில பழக்க வழக்கங்கள்

பிரபல்யப்படுத்தப்பட வேண்டும், நிலைநிறுத்தப்பட வேண்டும் என்று பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா கூறியதை ஏற்றுக்கொள்வதற்கு நான் எவ்வளவுதான் இசைவாக இருந்தபோதிலும், விவாகரத்து சம்பந்தமாக, இது பற்றிய நடைமுறை மிகவும் கடினமானதாக இருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன், அப்பொழுதுதான் ஒரு சமூக யூனிட் (அங்கம்) என்ற வகையில் பலப்படுத்தப்படும், பாதுகாக்கப்படும்.

இந்தப் பொருள் சம்பந்தமாக, மேலும் ஒரு கருத்தை நான் தெரிவிக்க விரும்புகிறேன்: ஐயா, சில காரணங்களால் ஒரு திரு மணத்தை முறிப்பது அவ்வளவு விரும்பத்தக்கதாக இருக்காது. மேலும் தம்பதிகளில் ஒருவர், கணவரோ அல்லது மனைவியோ அதற்கு ஒத்துக்கொள்ளாமலுங்கூட இருக்கக்கூடும். இதற்கு உதாரணங்கள் உண்டு. அத்தகைய சம்பவங்களில், கணவன் வேறு மனைவியைத் திருமணம் செய்துகொள்வதற்கு மனைவி ஒத்துக்கொள்ளும்போது, - மனைவி அதே வீட்டில் அல்லது வேறு வீட்டில் குடியிருக்கும் நிலைமையில், இங்கே குறிப்பிடப்பட்ட காரணங்களைப் பொருட் படுத்தாது, மற்றையத்தரப்பு சம்மதம் தெரிவிக்கும்போது, முதல் திருமணத்தை முறிக்காமலேயே, தம்பதிகளில் ஒருவர் வேறு திருமணம் செய்துகொள்வதை அனுமதிக்காமலிருப்பதற்கு எந்தக் காரணத்தையும் என்னால் பார்க்க முடியவில்லை. டில்லியில், ஒரு பிரமுகர் ஒரே சமயத்தில் - ஒரு வேளை வெவ்வேறு வீடுகளில் இருக்கக்கூடும் - பல மனைவிகளுடன் வசித்து வருவதை நாம் அறிவோம்.

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர் :** யார் அது?

**திரு. எச்.வி. காமத்:** தயவுசெய்து இங்கு பெயர்கள் வேண்டாம்.

**திரு. தாஜாமுல் உசேன் :** என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை; மதிப்புக்குரிய என்னுடைய நண்பர் பலதார மணத்தை ஒத்துக்கொள்கிறாரா?

**திரு. எச்.வி. காமத் :** நான் இது மட்டுமே கூற முடியும்.

**திரு. தாஜாமுல் உசேன்:** திருமணமாகாத ஒரு நபர்தான் அவ்வாறு கூறமுடியும்.

**திரு. எச்.வி. காமத் :** சில சமயங்களில், திருமணம் நடைபெற்று நீண்ட காலமாகியுள்ள ஒரு தம்பதியர் - திருமணத்தின் நோக்கம் பயனற்றுப் போய்விட்டபோதிலும்கூட, தன் மனைவியுடன் திருமண பந்தத்தை முறித்துக் கொள்வதை இந்து மனம் ஏற்றுக்கொள்ள முடிவ தில்லை. எனவே அன்பு மற்றும் மனித நேயம் என்ற கண்ணோட் டத்திலிருந்து, புதிய சட்டம், கணவன் மற்றொரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்வதற்கு வகை செய்ய வேண்டும். இதற்கு முதல்மனைவியிடமிருந்து அனுமதி வாங்கலாம். அவள் சம்மதித் தால், நீதிமன்றம் குறுக்கே நிற்கக்கூடாது. ஆனால் பண்டிட் தாகூர் தாஸ் பர்கவா கூறியது போன்று, திருமணத்தின் லட்சியமானது சொத்திலும் அன்பிலும் ஒன்றாக இருக்க வேண்டும். நான் அதற்கு மேலும் சென்று, அவர்கள் இரண்டு மனங்களைக் கொண்டிருந்த போதிலும், சிந்தனை ஒன்றாக இருக்க வேண்டும், அவர்களின் இரு இதயங்களும் ஓர் இதயம் போல் துடிக்க வேண்டும் என்று கூறுவேன்.

**திருமதி ஹன்ஸா மேத்தா (பம்பாய் : பொது) :** பலதார மணத்தில் இரண்டுக்கும் மேற்பட்ட இதயங்கள் இருக்கும்.

**திரு. எச்.வி. காமத் :** கணவனுக்கு ஆட்சேபமில்லையானால், பல கணவர் மணத்திற்கு நான் எதிரியல்ல.

**திருமதி பூர்ணிமா பானர்ஜி :** மிகவும் தாராளம்தான்!

**திரு. எச்.வி. காமத் :** என்னுடைய நிலை சமத்துவம் என்ற கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது ஆண், பெண் இரு வருக்குமே கடைக்காடி எல்லை வரையில் நான் செல்கிறேன். ஆரியர்களின் துவக்க காலத்தில் - அதாவது வேதகாலம், உபநிடத மற்றும் ஸ்மிருதிகாலத்தில் பெண்கள் என்னென்ன உரிமைகளை அனுபவித்தார்களோ, இந்த உரிமைகளெல்லாம் பிந்திய மத்திய காலத்தில் பயன்படுத்தாமற் போயின. மற்றும் அமலாக்கப்பட வில்லையென்பது நமது வரலாற்றில் - நமது நீண்ட கால மற்றும் பண்டைய இந்து வரலாற்றில் ஒரு வருந்தத்தக்க சம்பவம் அல்லது நிகழ்ச்சியாகும். இந்த சட்டத் தொகுப்பு நன்கு செயல்படுமென்றும் - இருளார்ந்த மத்திய காலத்தில் இழக்கப்பட்ட சுவர்க்கத்தை, நவீன காலத்தில் பெண்கள் மீண்டும் பெறுவார்கள் என்று நான் நம்பு கிறேன்.

வெளியிலுள்ள ஒரு நண்பரிடமிருந்து ஒரு சிறிய எச்சரிக்கை எனக்கு வந்துள்ளது. அவர் கடவுளின் பெயராலும், தேசப்பிதா

மகாத்மா காந்தியின் பெயராலும், நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் பெயராலும் தயவுசெய்து இந்த மசோதாவிற்கு ஆதரவாக ஓட்டளிக்க வேண்டாம் என்று என்னைக் கேட்டுக் கொண்டுள்ளார். அதே வாதம், இந்த மசோதாவிற்கு ஆதரவாக வாக்களிப்பதற்கும் நன்கு பொருந்தும் என்று நான் நினைக்கிறேன். நான் கூற முடியும்...

**திரு. பி.எல். சோந்தி** (கிழக்கு பஞ்சாப் : பொது) : அந்த நண்பர் ஆணா, பெண்ணா?

**திரு. எச்.வி. காமத்:** நான் கூறுகிறேன், நான் துணிவுடன் கூறுகிறேன்: ஆணையும் பெண்ணையும் தோற்றுவித்த கடவுளின் பெயரால், ஆண் - பெண் சமத்துவத்திற்காக நின்ற தேசப்பிதா மகாத்மா காந்தியின் பெயரால், ஆண்கள்/பெண்களின் பூரண விடுதலைக்காகப் பாடுபட்ட, மற்றும் அதை சாதித்த, தேவைப்படும் போது பெண்களைப் போர்க்களத்தில் இறக்கவும் செய்த நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸின் பெயரால்; கடவுளின் பெயராலும், காந்திஜி யின் பெயராலும், சுபாஷ் சந்திரபோஸின் பெயராலும், இந்த மசோதா ஒரு முன்னேற்றகரமான மசோதா என்று நான் நினைக்கிறேன். இந்த சட்டத்தினால் இந்து சமுதாயம் மேலும் புகழ்பெறும்.

மேலும் ஒரே ஒரு கருத்து மட்டும் நான் கூற வேண்டியுள் ளது. என்னுடைய மாண்புமிகு நண்பர், டாக்டர் அம்பேத்கர், அன்று தனது பேருரையில், உரிய காலத்தில் சீரடைய வேண்டும், இல்லா விட்டால் அழிந்து போகும் என்று குறிப்பிட்டார்: நாம் சீர் செய்ய வேண்டும். உண்மையில் நாம் சீர்செய்து கொண்டிருக்கிறோம். நாம் சீரமைக்க வேண்டிய காலம் வந்துவிட்டது இல்லாவிட்டால், சமுதாயம் இரண்டாகப் பிளவுபட்டுப் போகும். உரிய காலத்தில் போடப்படும் ஒரு தையல், எப்போதும் ஒன்பது கிழிசல்கள் ஏற் படாமல் பாதுகாக்கும்: இல்லாவிட்டால் பாகுபாடு மேலும் மேலும் அதிகரித்து, இறுதியில் சமுதாயம் இரண்டாகப் பிளந்து போய்விடும்.

ஐயா, வெள்ளிக்கிழமையன்று, **மகா சிவராத்திரி**க்கு முந்தின நாள் நான் பேசத் தொடங்கினேன். என்னுடைய சுருக்கமான உரையை **மகா சிவராத்திரி**க்கு மறு நாள் முடிக்கிறேன். இந்த நாள் நமது காலத்தின் மகத்தான பெண்களில் ஒருவரின் மகாசதி அன்னை கஸ்தூரிபாயின் புனிதமான நினைவு நாளாகும். மற்றொரு மகத்தான மனிதர் சுவாமி தயானந்த சரஸ்வதியின் புனிதமான நினைவு நாளு மாகும். அவர்களின் ஆன்மாக்கள் - அன்னை கஸ்தூரிபாய் மற்றும்

சுவாமி தயானந்த சரஸ்வதியின் ஆன்மாக்கள் நமது பணியில் நமக்கு உத்வேகமூட்டி, நம்முடைய கடினமான பணியில் நமக்கு உதவும் என்று நான் நம்புகிறேன். ஆணும் பெண்ணும் வாழ்க்கையின் புனிதப் பயணிகளாக ஒன்றாகப் பயணம் செய்வார்கள், அர்த்த மற்றும் காமத்தை எய்துவதற்குத் தமது வாழ்க்கைகளை அர்ப்பணித்தும், புனிதமாக்கிக் கொள்வார்கள் என்றும் நான் நம்புகிறேன். கடவுளைப் பிரார்த்திக்கிறேன். அர்த்தமும் காமமும் தர்மத்தில் வேர் கொண்டுள்ளன; இவை மோட்சம் என்னும் இலட்சியத்திற்கு - அடிமைத் தளையிலிருந்து விமோசனத்திற்கு - உயிர் வாழும் கடவுளின் இலட்சியத்திற்கு இட்டுச் செல்கின்றன. இதில்தான் நாம் வாழ்கிறோம், நடமாடுகிறோம், உயிருடன் ஜீவிக்கிறோம். இதில் அனைத்து ஆண்களும், அனைத்துப் பெண்களும், அனைத்துப் படைப்பும் சமம், சுதந்திரமானவை, புனிதமானவை.

हरिओऽम् तत्सत् । ब्रह्मार्पणमस्तु

**திரு. நசிருத்தீன் அகமது** (மேற்கு வங்கம்: முஸ்லிம்) : நான் மேலும் மேலும் காலப்பொருத்தமற்றவனாகி வருகிறேன் என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மூல மசோதாவை எதிர்க்கும் பணியை நான் மேற்கொண்டேன். ஆனால் இதுவரையில் நான் பேசவில்லை. உரிய நேரத்தில் நான் வெளியே தள்ளப்பட்டுவிடக்கூடும். நிறையப் பேச்சாளர்கள் இருக்கிறார்கள். நாளைய தினம் 4 மணிக்கு விவாதத்தை முடிவுக்குக் கொண்டுவரும் பிரேரணை முன்மொழியப் படலாம் என்று எனக்குத் தெரியவருகிறது.

**திரு. தலைவர்:** திரு. நசிருத்தீன் அகமதுவைப் பேசுவதற்கு வாய்ப்பு அளிக்காமல் தள்ளுவது அசாத்தியம். மதிப்புக்குரிய உறுப்பினருக்கு ஒரு வாய்ப்புக் கிடைக்கும். திரு. ஜுன்ஜுன்வாலாவை இப்பொழுது பேச அழைக்கிறேன்.

**திரு. பி.பி. ஜுன்ஜுன்வாலா** (பீஹார் : பொது) : நான் மற்றொரு சமயம் பேசுவதற்கு விரும்புகிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** அவர் ஒன்றோ இப்பொழுது பேசவேண்டும், அல்லது அவர் பிறகு பேச முடியாது. விதிகளின்படி, ஓர் உறுப்பினர் பேசுவதற்கு அழைக்கப்பட்டால், அவர் பேசியாக வேண்டும். இல்லாவிட்டால், அந்தப் பொருளைப் பற்றிப் பேசுவதற்கு அவர் வாய்ப்பை இழந்துவிடுவார்.

**திரு. தலைவர் :** பாபுராம் நாராயண் சிங்

**பாபுராம் நாராயண் சிங் :** இந்த அவையின் முன் விவாதத்திற்கு வந்துள்ள தீங்கு விளைவிக்கும் மசோதாவை எதிர்ப்பதற்கு என்னுடைய பங்கையாற்ற நீங்கள் மிகவும் கனிவுடன் இன்று எனக்கு வாய்ப்புக் கொடுத்ததற்காக, திரு. தலைவர் அவர்களே, உங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஐயா, நான் ஒரு வைதீக நபர் அல்ல என்பதை ஆரம்பத்திலேயே சொல்லிவிடுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நீங்கள் பழைமை வாதியல்ல, நீங்கள் அவ்வாறு அல்ல என்பதை நானறிவேன்!

***பாபுராம் நாராயண் சிங் :** பழமை அனைத்தையும் தாமதமின்றி உடைத்தெறிய வேண்டுமென்று விரும்புகிறவர்களில் நானும் ஒருவன். ஆனால் யாவும் விவேகத்துடன் செய்யப்பட வேண்டும். ஒரு காரியம் செய்யப்பட வேண்டியிருக்கும்போது, அது எப்பொழுது செய்யப்பட வேண்டும், அது எவ்வாறு செய்யப்பட வேண்டும் என்று நாம் மதிப்பீடு செய்வது அவசியமாகும் என்று விவேகம் கோருகிறது. அவரை வியந்து பாராட்டுகிறவர்களில் நானும் ஒருவன் என்று என்னுடைய மாண்புமிகு நண்பர் டாக்டர் அம்பேத்கருக்கு சொல்லிக் கொள்கிறேன். அவர் நம்முடைய நாட்டில் பெருமைக் குரியவர் என்று உணர்கிறேன்; அவர் என்னுடைய பெருமைக்குரியவரும்கூட. ஆனால், இத்தகைய அறிவாற்றல் மிக்க ஒரு மனிதர், இத்தகைய ஒரு பயனற்ற, தீயப் பணியில் ஏன் ஈடுபட்டிருக்கிறார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஐயா, இது ஓர் அரசு மசோதா. சட்டத்தை அவர்கள் எவ்வாறு புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது. சட்டம் என்பது மக்களின் சித்தம் சட்ட அடிப்படையில் வெளிப்படுத்தப்பட்டிருப்பது தவிர வேறல்ல. சட்டம் என்றால் என்ன என்பதை அரசு புரிந்து கொள்ளாதது குறித்து நான் வருத்தப்படுகிறேன். இந்த மசோதா இந்த அவையின் முன்னால் வந்திருக்கவே கூடாது என்று இந்த நாட்டின் பெரும்பான்மையான மக்கள் கருதுகின்றனர் என்று கூறுகிறேன்.....

**மதிப்புக்குரிய ஓர் உறுப்பினர் :** இல்லை, இல்லை.

**பாபுராம் நாராயண் சிங் :** ஒரு பொதுக் கருத்துக் கணிப்பு நடத்தினால் நீங்கள் இதைக் காண்பீர்கள்.

---

★ அ.நி. (சட்டப்பேரவை) டி. தொகுதி II, பாகம் II, பிப்ரவரி 28, 1949, பக். 950-53.

*திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:* நாம் இங்கு அவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறோம்.

*பாபுராம் நாராயண்சிங் :* வெளித் தோற்றத்தில் இந்துத் தொகுப்புச் சட்ட மசோதா என்ற ஒரு மசோதா இருப்பதாகவும் அது பற்றி இந்த அவையில் ஒரு விவாதம் நடைபெற்றுக் கொண் டிருப்பதாகவும் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் இந்து சமுதா யத்தை சீர்குலைப்பதற்கு ஒரு சதி நடைபெற்று வருகிறது என்றே சொல்லவேண்டும். இது இந்து சமுதாயத்தின் மீது படையெடுப் பதற்கு ஒரு தயாரிப்பைப் போன்றதாக உணருகிறேன். இந்த இந்து சமுதாயம் இந்த உலகில் எவ்வளவு காலமாக இருந்து வருகிறது, பொலிவுற்று வந்துள்ளது என்று யாரும் சொல்ல முடியாது. இந்த உலகம் படைக்கப்பட்ட காலத்திலிருந்தே, சூரியனும், சந்திரனும் தோற்றுவிக்கப்பட்ட காலத்திலிருந்தே, மனித இனம் தோற்றுவிக்கப் பட்ட காலத்திலிருந்தே இந்து சமுதாயம் வாழ்ந்து, பொலிவுற்று வந்துள்ளது என்று என்னால் கூற முடியும். இந்தக் காலகட்டங் களின் போதெல்லாம், இந்த இந்து சமுதாயத்திற்கெதிராக எண் ணற்ற படையெடுப்புகள் நடைபெற்றுள்ளன. முதலில் புத்தர் வந்தார். ஒரு சமயம், இனி இந்து சமுதாயம் இல்லாமல் போய் விடுமோ என்றுகூடத் தோன்றியது, ஆனால் உலக மகா குரு சங்கராச் சாரியார் தோன்றி, புத்தமதத்தை இந்த நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்து, இந்து சமுதாயத்தைத் திரும்பவும் நிலைநிறுத்தினார். பின்னர் இஸ்லாம் வந்தது, அதுவும் புத்த மதத்தைப் போன்று ஒரு படையெடுப்பே. ஆனால் அது ஒரு ராணுவப் படையெடுப்பாக வும் இருந்தது. ஆனால் இஸ்லாமும் இந்த நாட்டில் தோற்று விட்டது என்று கூறுவேன்.....

*டாக்டர் மனோ மோகன்தாஸ்* (மே.. வங்கம்) : இஸ்லாம் நம்மைக் காப்பாற்றியது, நீங்கள் இஸ்லாமின் பாதுகாப்பைப் பெற்றீர்கள்.

*பாபு ராம்நாராயண்சிங் :* இஸ்லாம் பாதுகாப்பாளனாக மாற முடியவில்லை; ஆனால் இஸ்லாம் கூட இந்த நாட்டில் தோற்று விட்டது. இஸ்லாமின் கோட்பாட்டின்படி குரானில் சாதி அமைப்பு இல்லை, ஆனால் இஸ்லாமைப் பின்பற்றியவர்களிடையே பல வகைப்பட்ட சாதி அமைப்பு உருவாகியது.

அவ்வாறே, ஜைனமதம், சீக்கிய மதம் ஆகியவையும் வந்தன; ஆரம்பத்தில் அவை யாவும் இந்து சமயத்திற்கு எதிரான படையெடுப்பு

களேயாகும், ஆனால் காலப் போக்கில், அவை சகிப்புத்தன்மை உடையவையாகி, இந்து சமுதாயம் மற்றும் சமயத்துடன் வளர்ச்சி யடையவும், மலர்ச்சியுறவும் முயன்றன. இந்த சமயத்தில் இதுவும் ஒரு வகைப்பட்ட படையெடுப்பேயாகும். ஆனால் இந்தப் படை யெடுப்பு இதற்குப் பின் உள்ள சக்தி சர்வாதிகார சக்தியாக இருந்த போதிலும் இது ஒரு ஜனநாயகப் படையெடுப்பாகும்.

என்னுடைய சில நண்பர்கள், இந்த மசோதாவை சட்ட மாக்குவதற்கு இந்த அவைக்கு உள்ள அதிகாரத்தைப்பற்றி ஒரு விவாதம் நடந்ததாக ஏற்கனவே கூறினார்கள். இந்த வகைப்பட்ட ஒரு மசோதாவை சட்டமாக்குவதற்கு இந்த அவைக்கு அதிகார மில்லை என்பது உண்மை. இது குறித்து எனக்கு நம்பிக்கை இருக் கிறது. இது ஓர் அரசியல் நிர்ணய சபையும் அல்ல.....

***மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :*** அப்படியென்றால் இது என்ன?

***பாபுராம் நாராயண் சிங் :*** இது அரசியல் நிர்ணயசபையின் ஒரு பகுதி. இந்த அவையின் பெரும் எண்ணிக்கையிலான உறுப் பினர்கள் உத்தரவின்படியோ அல்லது சம்பிரதாயத்தின்படியோ இந்தப் பேரவையில் கலந்து கொள்ளக்கூடாதென்று கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள்....

***திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :*** அதனுடன் இந்த அவை நேரடியாக சம்பந்தப்பட்டதல்ல. அது இந்த அவை சம்பந்தப்பட்ட விஷயமுமல்ல என்று அவைத் தலைவர் ஏற்கனவே கூறியிருக்கிறார்.

***பாபுராம் நாராயண் சிங்:*** அவைத் தலைவரின் தீர்ப்பு எப்படி யிருந்தபோதிலும் நான் அதற்கு எதிராகப் பேசவில்லை, அவைத் தலைவரின் தீர்ப்புக்கு நான் தலைவணங்குகிறேன். ஆனால் இந்த மசோதாவை சட்டமாக்குவதற்கு இந்த அவைக்குத் தகுதியிருக் கிறதா, அதிகாரமிருக்கிறதா என்பதைப்பற்றி உலகிற்கு எடுத்துக் கூறுவதற்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். நாட்டின் அரசியல் சட்டத்தை உருவாக்கும்படிதான் அரசியல் நிர்ணயசபைக்கு நாடு ஆணையிட்டுள்ளது. ஆனால் அந்த அரசியல் சாசனம் நிறைவு அடை யாதவரையில், அல்லது அமலுக்கு வராத வரையில், அரசு தொடர்ந்து பணியாற்ற வேண்டும். அந்நிய ஆட்சியாளர்களுடன் ஒரு தாறு மாறான உடன்பாட்டின் வாயிலாக, பட்ஜெட்டையும், நாட்டை

நிர்வகிப்பதற்குத் தேவையான வேறு எந்த முக்கிய சட்டத்தையும் நிறைவேற்றுவதற்காக இந்த ஏற்பாடு செய்து கொள்ளப்பட்டுள்ளது. ஆனால் இது போன்ற ஒரு மசோதா, விவாதத்திற்கோ அல்லது சட்டமாக்குவதற்கோ, இந்த அவையின் முன் வந்திருக்கவே கூடாது. இதற்கு எதிராக நாடு முழுவதிலும் பெருமளவு கூக்குரல் எழுந் துள்ளது.

ஆணுடன் பெண்ணுக்கு சமத்துவம் என்ற கூட்டுக் குரலை இந்த அவையிலும், வெளியிலும் நான் கேட்கும்போது அதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை....

**திரு. தாஜாமுல் உசேன் :** இந்த அவையை அமைப்பதையே (அவர்) எதிர்க்கும்போது, அதனுடைய குழுவில் உறுப்பினராக இருப்பதற்கு மதிப்பிற்குரிய உறுப்பினர் ஏன் ஒப்புக் கொண்டார் என்று அவரைக் கேட்கலாமா?

**பாபு ராம்நாராயண் சிங் :** பலர் குழப்பமடைந்துள்ளார்கள். இந்த மசோதா பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்டது. இதன் பொருள், இந்த மசோதாவின் கோட்பாட்டை அவை ஏற்றுக் கொண்டது என்பதாகும். ஆனால், இதனால் ஒவ்வொரு உறுப்பினரும் இந்த மசோதாவை ஏற்றுக் கொண்டாரென்றோ, அல்லது இந்த மசோதாவின் கோட்பாட்டை ஏற்றுக் கொண்டார் என்றோ அர்த்த மல்ல. இந்த மசோதாவில் பல கோட்பாடுகள் அடங்கியுள்ளன; இந்த அவையைப் பொறுத்தமட்டிலும், அது ஏதேனும் ஒன்றையோ அல்லது எல்லாவற்றையுமோ ஏற்றுக் கொண்டதாக யாரும் கூற முடியாது...

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** இது பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்டிருக்கிறதென்றால், அது கோட்பாட்டை ஏற்றுக் கொள் கிறது என்று பொருள்.

**பாபு ராம்நாராயண் சிங்:** ஆண் - பெண் சமத்துவம் பற்றி நான் பேசிக்கொண்டிருந்தேன். நமது சாஸ்திரங்களின்படி ஆண் பூரணமானவன் அல்ல; அது போன்றே பெண்ணும் பூரணமானவள் அல்ல. நமது சாஸ்திரங்களின்படி பெண் அர்தங்கி என்று அழைக்கப் படுகிறாள், அதேபோல் ஆணும் பூரணமானவன் அல்ல....

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** ஆண் எவ்வாறு அழைக்கப் படுகிறார்?

***பாபு ராம்நாராயண் சிங்:*** ஆணும் பாதியே. நான் உங்களுக்குக் கூறுவேன்.....

***பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா*** (மே. வங்கம், பொது): ஐயா, மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் இது போன்ற ஒரு முக்கியமான மசோதா குறித்துப் பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில், அவையில் பேசுவது விசித்திரமாக இருக்கிறது; ஏராளமான விமர்சனங்களும், ஒருவர் பேசும்போதே மற்றொருவர் அதே சமயத்தில் தொடர் விமர்சனங்கள் செய்வதும், சிரிப்பலைகளும் ஏககாலத்தில் நிகழ்கின்றன. இது இந்த அவையின் கௌரவத்திற்கு உகந்ததல்ல. ஒருவருடைய பேச்சை விரும்பாத உறுப்பினர்கள், குறைந்தபட்சம் அமைதியாக இருக்க வேண்டும், அப்பொழுதுதான் அவருடைய பேச்சைக் கேட்க விரும்புபவர்கள், குறைந்தபட்சம் செவிமடுத்துக் கேட்கவாவது முடியும்.

***திரு. அவைத் தலைவர் :*** பேச்சாளர் தொடர்ந்து பேசுவதற்கு மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தயவு செய்து அனுமதிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

***பாபுராம் நாராயண் சிங் :*** ஐயா, என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் மைத்ரா எனக்குக் கொடுத்துள்ள ஊக்கத்திற்காக அவருக்கு நன்றி செலுத்துகிறேன். சமத்துவம் பற்றி நான் பேசிக் கொண்டிருந்தேன். உலகின் நோக்கங்களைப் பொறுத்த மட்டிலும், மற்றும் மனித இனம் தொடர்ந்து இருந்து வருவதைப் பொறுத்தமட்டிலும் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் சமத்துவம் அல்லது அசமத்துவம் என்ற பேச்சுக்கே இடமில்லை. யாரும் கையை பாதத்துடன் ஒப்பிட முடியாது. கை அதிகப்பயனுள்ளதா அல்லது பாதம் அதிகப் பயனுள்ளதா, இந்தக் கண் அதிகப்பயனுள்ளதா, அல்லது அந்தக் கண் அதிகப் பயனுள்ளதா? ஆணும் பெண்ணும் ஒருவரே. ஒன்றுக்கு மேற்பட்டதல்ல. சட்டத்தைப் பொறுத்தமட்டிலும், சட்டம் அவர்களுக்கு உதவி செய்யாது என்று நாடு முழுவதிலுமுள்ள என்னுடைய சகோதரிகளுக்கு கூறிக் கொள்கிறேன். எல்லோருக்கும், பெண்களுக்கும் எது உதவ முடியும் என்றால் அன்புதான், அன்பைத் தவிர வேறில்லை. தம்பதிகளுக்கிடையில் அன்புதான், அவர்களை மகிழ்ச்சியுடன் வைத்திருக்கும் ஒரே அம்சமாகும். அவர்கள் விவாக ரத்துக்கான உரிமையைப் பெற்றுக் கொள்ளலாம். ஒரு பெண் இன்று விவாகரத்து செய்யப்பட்டுவிடலாம். இதர பெண்கள் அடுத்த நாள்

பிற்பகல் 3 மணி

திருமணம் செய்துகொள்வதற்காக வரக்கூடும். ஒரு தாரம் என்பது பலதாரமாகலாம், ஓர் ஆண் இரண்டாவது மனைவியைத் திருமணம் செய்வதற்கு நீங்கள் அனுமதிக்க மாட்டீர்கள். முதல் மனைவி விவாகரத்து செய்யப்படுவாள், இரண்டாவது நாள் அவன் திருமணம் செய்து கொள்கிறான். மூன்றாவது நாள் அந்த மனைவியையும் விவாக ரத்து செய்துவிடுவான். நான்காவது நாள் அவன் மீண்டும் திருமணம் செய்து கொள்வான். இந்த நிகழ்வுப்போக்கு தொடரும். தூய்மையான அன்பைப் பொறுத்த மட்டிலும், மக்களின் குணநலன் மிகவும் முக்கியமானதாகும். இந்த நாட்டில், மக்கள் முதலில் குணநலனை இழந்துவிட்டார்கள். இதன் பின்னர் மற்ற எல்லாவற்றை யும் இழந்துவிட்டார்கள். எனவே, இந்த விஷயத்தில் நாம் செய்வ தெல்லாம், நமது குண நலனைத் திரும்பப் பெறுவதாகும். கையின் முக்கியத்துவத்தை பாதத்தின் முக்கியத்துவத்துடன் ஒப்பிடக்கூடாது. எனவே, ஆணின் முக்கியத்துவத்தை பெண்ணின் முக்கியத்துவத் துடன் ஒப்பிட முடியாது. நான் ஒரு விஷயத்தைச் சொல்ல முடியும். நம்முடைய சாஸ்திரத்தின்படி, அவர்கள் (பெண்கள்) பெண் தெய்வங் கள் லக்ஷ்மி - நமது சமுதாயத்தில் பெண்கள் லட்சுமி, சரஸ்வதி, கிருஹலட்சுமி என்றழைக்கப்படுகிறார்கள். அவர்கள்தான் எல்லாம். பெண்ணுடன் ஆணை நான் ஒப்பிடுவதென்றால், உலகில் ஆணைக் காட்டிலும் பெண் கூடுதல் முக்கியத்துவமுடையவள் என்று என்னால் கூற முடியும்.

நான் இதை மேலும் விளக்க முடியும். உலகிலிருந்து எல்லா ஆண்களையும் அகற்றினாலும் அல்லது கொன்றாலும், அப்பொழுதும் உலகம் தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக்கும். (மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் : 'ஒரு நபரைத் தவிர') ஓர் ஆண் கூட இல்லை. உலகில் எல்லா ஆண்களும் கொல்லப்பட்டால் கூட, அப்பொழுதும் உலகம் தொடர்ந்து செயல்பட்டு வரும், மனித இனம் தொடர்ந்து இருந்து வரும் (மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்: 'கேள்வி'). நான் இதை விளக்க முடியும். என்னுடைய கூற்றைக் கேள்வி கேட்கும் நண்பர்கள் இருக்கிறார்கள். சரி, ஐயா, இன்று நீங்கள் எல்லா ஆண்களையும் கொன்றுவிட்டாலும், லட்சக்கணக்கான ஆண்கள் பெண்களின் கருப்பையில் இருப்பார்கள். எனவே உலகத்தைப் பொறுத்தமட் டிலும், பெண்கள் நிச்சயமாகக் கூடுதல் முக்கியமானவர்களாவர். ஆனால் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் சமத்துவத்தைப் பேசு கின்றவர்கள் உண்மையில் பெண்ணை ஆணிடமிருந்து பிரிப் பதற்கு விரும்புகின்றனர். தம்பதிகளை மகிழ்ச்சிகரமாக இருப்பதற்கு உதவி செய்வதற்கு பதிலாக, அவர்கள் உண்மையில் அழிவுகரமான

பாதையில் செல்கின்றனர். அவர்களின் முக்கியத்துவம் இருக்கவே செய்கிறது என்று நான் கூறுகிறேன். அவர்கள் லட்சுமியாவர். அதே சமயத்தில், ஆணைப் பெண்ணுடன் ஒப்பிடுவது மிகவும் சிரமமான தாகும். இயற்கை ஆணையும் பெண்ணையும் சிருஷ்டித்துள்ளது. அவர்களின் பணிகள் வெவ்வேறானவை, அவர்களது கடமைகள் வெவ்வேறானவை. அவர்களது செயல்பாடுகள் வெவ்வேறானவை. எனவே அவர்கள் இருவரையும் ஒப்பிடுவதில் என்ன பயன்? இந்த விஷயத்தில் எந்தவித ஒப்பீடும் மெய்யாக நிற்க முடியாது.

இந்த மசோதாவின் ஷரத்துகளைப் பற்றி எனது நண்பர்கள் பேசினார்கள். தந்தையின் சொத்தில் மகளின் பங்கு சம்பந்தமாக ஒன்றிரண்டு அம்சங்களை மட்டும் நான் குறிப்பிட விரும்புகிறேன். முதன் முதலில் நான் ஒரு மகன், பின்னர் ஒரு சகோதரன், பின்னர் ஒரு கணவன், பின்னர் ஒரு தந்தை, இத்தியாதி விதிவிலக்கு இல்லாம லில்லை. என்னால் சொல்ல முடியாது. ஆனால், அனேகமாக ஒவ்வொரு இந்து தந்தையும் - நானும் ஒரு இந்து தந்தைதான் என் னுடைய மகள்களையும் இங்கேயும் அங்கேயும் திருமணம் செய்து கொடுத்துவிட்டேன். ஒவ்வொரு இந்து தந்தையும், தனது சொந்தக் குடும்பத்தைக்காட்டிலும் அந்தஸ்திலும், செல்வத்திலும் இதர பல விஷயங்களிலும் உயர்ந்ததாக உள்ள ஒரு குடும்பத்தில் தனது மகளைத் திருமணம் செய்து கொடுப்பதற்கு ஆவலாக இருக்கிறார். தற்பொழுது, தந்தையின் சொத்தில் மகளின் பங்கு பற்றிப் பேசுகிறார் கள். இது சம்பந்தமான நகைச்சுவையும் இருக்கிறது. மகள் ஒவ்வொரு விதத்திலும் மதிக்கப்படுகிறாள். வரதட்சிணை வாயிலாக தந்தை யின் சொத்தில் ஒரு பங்கும் அதை நீங்கள் ஒரு பங்கு என்று அழைக் கலாம் - கொடுக்கப்படுகிறாள், இத்தியாதி. பங்கு என்ற பிரச்சினை வரும்போது, இவ்வாறு தான் ஏற்படும்: என்னுடைய இடத்திற்கு (வீட்டிற்கு) சாதாரணமாக, ஒரு விருந்தாளியாக நீங்கள் வந்தால், என்னுடைய நண்பர் என்ற முறையில் என்னுடைய விருந்து உபசாரத்தை நீங்கள் பெறக்கூடும். ஆனால் உரிமை என்ற வகையில் நீங்கள் வந்தால், நீங்கள் எந்த விருந்துபசாரத்தையும் என்னிட மிருந்து பெறமாட்டீர்கள் என்று நினைக்கிறேன். சட்டம் யாருக்கும் உதவி செய்யாது என்று என்னுடைய நண்பர்களுக்கு நான் கூறு கிறேன். தந்தையின் சொத்தில் மகளுக்கான உரிமை உருவாக்கப் பட்டவுடனே, அன்பு என்ற அம்சம் முழுவதும் போய்விடும் என்று நினைக்கிறேன். எனது நண்பர் காமத் - அவர் யோசனை கூறிய பல விஷயங்களை நான் ஒத்துக்கொள்ள முடியாவிட்டாலும் - ஒரு விஷயத்தை அவர் கூறினார். ஒரு குடும்பத்தில் ஒரு மனிதனுக்கு ஒரு

மகளும், இரண்டு அல்லது மூன்று மகள்களும் இருக்கிறார்கள். மகள் தொலை தூரத்தில் (பல மைல்களுக்கு அப்பால்) திருமணம் செய்து கொடுக்கப்படுகிறாள். சொத்து சொற்பமானதாக இருக்கக் கூடும். திருமணத்திற்குப் பின்னால், மருமகன், தனது மாமனாரின் வீட்டுக்கு, சொத்தில் பங்கு கேட்க, அல்லது ஒரு பங்குதாரராக வருகிறார். அப்பொழுது அவர் மதிக்கப்பட மாட்டார். எல்லாமே ஒரு முறையான வழியில் இயற்கையான முறையில் உருவாக வேண்டும். இந்த மசோதா சட்டமாக்கப்பட்டால், ஏராளமான சிக்கல் களும், சட்ட வழக்குகளும் ஏற்படக்கூடும். தூய்மையான அன்பு என்பது நமது சமுதாயத்தில் கொல்லப்பட்டுவிடும்.

எனவே, இந்த விஷயத்தை அமைதியாக, நிதானமான முறை யில் பரிசீலனை செய்யுமாறு இந்த அவையின் ஒவ்வொரு உறுப் பினருக்கும் வேண்டுகோள் விடுகிறேன். இந்த அவையில் பலதரப் பிலிருந்தும் யோசனை கூறப்பட்டிருப்பதைப் போன்று, நானும் முன் கூறியது போன்று, இந்த மசோதாவை சட்டமாக்குவதற்கு இந்த அவை தகுதியுடையதல்ல. இந்த மசோதா இன்றைய தினமே நிறை வேற்றப்பட்டுவிடும் என்று அவர்கள் எவ்வாறு இவ்வளவு ஆர்வ மாக இருக்கிறார்கள். ஓராண்டு அல்லது இரண்டு ஆண்டுகள் காத்திருப்பதற்கு உங்களுக்கு ஏன் துணிவில்லை? புதிய தேர்தல் களைக் கண்டு அவர்கள் அஞ்சுகிறார்கள் என்று நான் கூறலாமா?

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** இல்லை, அப்படியில்லவே இல்லை.

**பாபு ராம்நாராயண் சிங் :** இவ்வளவு நீண்ட காலமாக இந்து சமுதாயம் அதே பழக்க வழக்கங்கள், எல்லாம் அதே மாதிரியாக, வாழ்ந்து, மலர்ச்சியடைந்து வந்துள்ளது. எனவே, அப்படியிருக்கும் போது, என்னுடைய நண்பர் திரு. நசிருத்தீன் கூறியது போன்று, மசோதாவை நாம் சுற்றுக்கு விடுவதால் வானம் இடிந்து விழுந்து விடப் போவதில்லை. இந்த மசோதவை நிதானமான முறையில் பரிசீலனை செய்யுமாறு இந்த அவையின் ஒவ்வொரு உறுப்பினரை யும் கேட்டுக் கொள்கிறேன். அடுத்த தேர்தலைப் பற்றி நண்பர்கள் பயப்படக்கூடும். காங்கிரஸ்காரர்களாகிய நமக்கு வாக்குகள் கிடைக் காமற் போகக்கூடும். அந்தக் கேள்வி இப்பொழுது எழவில்லை. நாம் நமக்கும், நம்மை இங்கு அனுப்பிய தொகுதிக்கும் மக்களுக்கும் உண்மையானவர்களாக நடந்துகொள்ள வேண்டும்.

எனவே, இந்த மசோதாவை என்னுடைய முழு பலத்துடனும் எதிர்க்கிறேன். இந்த மசோதா பொது மக்களின் கருத்தைத் தெரிந்து கொள்வதற்காக சுற்றுக்கு விடப்படவேண்டுமென்ற என்னுடைய நண்பர் 'பண்டிட்' நசிருத்தீன் அகமதுவின் பிரேரணையை உச்சரிக்கிறேன்.

***திரு. எச். சித்தவீரப்பா** (மைசூர் சமஸ்தானம்) : இந்தப் பிரேரணையை முன்மொழியும்போது, மிகவும் தெளிவான உரை நிகழ்த்தியதற்காக மாண்புமிகு சட்ட அமைச்சரை பாராட்டுகிறேன். இந்த மசோதா மிகவும் முக்கியமான வகையில் இந்து சமுதாயத்தை பாதிக்கிறது என்று நிறையப் பேசப்பட்டுள்ளது. இந்த நாட்டின் ஒரு பகுதியிலிருந்து, அதாவது மைசூரிலிருந்து வருகிறேன். இந்த மசோதா அமலாக்க விரும்புகிற சில அடிப்படையான விஷயங்கள் அங்கு ஏற்கனவே அமலிலிருந்து வருகின்றன. உதாரணமாக, சுவீகாரம் எடுத்துக் கொள்வது சம்பந்தமான சட்டம், மகளின் பங்கு பற்றிய சட்டம், மற்றும் வேறு பல விஷயங்களும் இருந்து வருகின்றன. தற்போதைய மசோதாவுடன் எல்லா விஷயங்களிலும் ஒத்ததாக இல்லாமலிருக்கலாம். ஆயினும் இந்தக் கோட்பாடு அங்கே இருக்கிறது. நாங்கள் ஏற்கனவே 1934-லேயே இந்து பெண் உரிமைகள் முறைப்படுத்தல் மசோதாவை இயற்றியுள்ளோம். கடந்த 14 ஆண்டுகளாக அந்த சட்டம் மைசூரில் அமலில் இருந்து வருகிறது. ஆனால் அங்கு எந்தப் பொதுவான கொந்தளிப்பும் ஏற்படவில்லை. இதுசம்பந்தமாக சட்ட வழக்குகள் ஏதும் அதிகம் ஏற்படவில்லை. அது போன்றே இங்கு சில மதிப்புக்குரிய உறுப்பினர்கள் பயப்படுவதுபோன்று, இந்து சமுதாயத்தில் எத்தகைய சீர்குலைவும் அங்கு ஏற்படவில்லை. உண்மையில் தற்பொழுது அங்கு அமலிலுள்ள மசோதா தேவைப்படும் அளவுக்கு உரியதாக இல்லை என்று எங்களுடைய அனுபவத்திலிருந்து நாங்கள் புரிந்து கொண்டுள்ளோம். எனவே தற்போதிருந்து வரும் சட்டத்தில் மேற்கொண்டு அபிவிருத்தி செய்வதைக் கண்டறிவதற்காக மற்றொரு குழு அமைக்கப்பட்டுள்ளது.

அவைக்கு முன்னால் உள்ள மசோதா இந்து சமுதாயத்தின் சாதி அமைப்பை அல்லது வேறு சில அடிப்படையான நம்பிக்கைகளை அல்லது கோட்பாடுகளை பாதிக்கிறது என்று கூறப்பட்டது. சரி, ஐயா, சில இந்து இலக்கியங்களைப் படித்ததிலிருந்து எனக்குத்

★ அ.நி. (சட்டப்பேரவை) டி., தொகுதி II, பாகம் II, பிப்ரவரி 28, 1949, பக். 953-56.

தெரிந்தது என்னவெனில், நாம் வேத காலத்தை - அதாவது கி.மு. 2000-1400 - ஆராய்ந்து அப்பொழுது இருந்த இந்து சமுதாயத்தையும் ஆராய்ந்தால், அப்பொழுது இந்த நான்கு சாதிகளில் எதுவும் இருந்ததாக நாம் பார்க்க முடியாது. பிறந்த ஒவ்வொரு மனிதனும் தனது குணம் அல்லது காமத்திற்கு ஏற்ப தனது வாழ்நாளில் அனைத்து வர்ணங்கள் அல்லது ஆசிரமங்கள் வழியாகச் செல்லவேண்டும். ஒரு சிறுவன், இருபது வயதை அடையும் வரையில், வீட்டு வேலைகளைச் செய்து, தனது குருவுக்குக் கீழ்ப்படிந்து நடந்து, அவனுக்கு ஆணையிடப்படும் பிற வேலைகள் அனைத்தையும் செய்ய வேண்டும். அவன் சூத்திரன் என்று அழைக்கப்பட்டான். இருபது வயதுக்குப் பிறகு, அவன் திருமணம் செய்து கொள்வதற்கு அனுமதிக்கப்பட்டான். குடும்பத்தைப் பராமரிப்பது அவனுடைய பொறுப்பாக்கப்பட்டது; பின்னர், அவன் மீது சுமத்தப்படும் கடமைக்கு ஏற்ப, அவன் வைசியன் என்று அழைக்கப்பட்டான். சில காலத்திற்கு அவன் வாழ்க்கையை அனுபவித்து 40 வயதை அடைந்ததற்குப் பின்னர், ஒவ்வொரு மனிதனும் நாட்டைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் ஏற்படும்போது, அவன் ஒரு க்ஷத்திரியனின் கடமையைச் செய்ய வேண்டியேற்படுகிறது. ஒரு குறிப்பிட்ட வயதை, அதாவது 60 வயதை எட்டிய பிறகு, பெருமளவு வாழ்க்கையை அனுபவித்த பிறகு, அவனுடைய அனுபவத்தின் மற்றும் கல்வியின் பயனாக, அவன் சீடர்களுக்கு போதிக்கும் பணியையும், விவேகத்தின் (அறிவின்) பிற கடமைகளையும் மேற்கொள்ளும்போது அவன் ஒரு பிராமணன் என்று பிராமணனின் குணத்தைப் பெற்றவன் என அழைக்கப்பட்டான்.

எனவே, இந்த நாட்டில், இந்த சாதி அமைப்பு ஒரு வேறுபட்ட முறையில் தோன்றியது, ஒரு வேறுபட்ட முறையில் வளர்ச்சியடைந்தது. ஆனால் இன்று, சுமார் 13,000 சாதிகளும், இன்னும் கூடுதல் எண்ணிக்கையிலான உப-சாதிகளும் இருக்கின்றன, இவை வெவ்வேறு மரபுகளையும், வெவ்வேறு பழக்க வழக்கங்களையும் இன்னும் என்னவெல்லாமோ கொண்டுள்ளன.

இன்று அரசியல் ஒற்றுமையைப் பொறுத்தவரையிலும் நாம் ஒன்றாக இருக்கிறோம். எந்த ஒரு சீரான விதிமுறைகளையோ அல்லது எந்த ஒரு சீரான நமது சட்டங்களோ இருக்க வேண்டுமென்று, நாம் விரும்பினால், ஒரு குறிப்பிட்ட தரத்தை வழங்கக் கூடிய ஏதாவது சட்டத் தொகுப்பு மிகவும் அத்தியாவசியமாகும். நம்மால்

கொண்டுவரப்படும் சட்டத்தில், எந்த ஷரத்துகள் அவசியமானவை, எவை அவசியமற்றவை என்று நாம் பரிசீலனை செய்யலாம். ஆனால் அத்தகைய ஒரு சட்டத் தொகுப்பு அவசியமே இல்லையென்று நாம் கூறினால், நாம் ஓரளவு பகுத்தறிவைப் பிரயோகப்படுத்தினால், நாம் யாரும் அந்த நிலையை ஏற்றுக் கொள்ள முடியாது. இந்த நாட்டில் வெவ்வேறு மத நம்பிக்கைகளைக் கொண்டுள்ளவர்களை - துவைதம், அத்வைதம் - நாம் பார்க்கிறோம். ஏக பத்தினி விரதத்தையும், பலதாரங்களையும் கொண்டுள்ளவர்களும் இந்த நாட்டில் இருக்கிறார்கள். சில இடங்களில் ஒரு மனைவி பல கணவர்களையும் கொண்டிருக்கிறாள். இத்தகைய சூழ்நிலைகளில் வாரிசுரிமை, திருமணம் மற்றும் வேறு பலவற்றுக்கும் ஒரு சீரான சட்டத் தொகுப்பு நமக்கு அவசியமில்லையா? பிரிட்டிஷ்காரர்களின் ஆட்சிக் காலத்தில் சமய நடுநிலைமை அல்லது தலையிடாமை என்ற போர்வையின் கீழ், இந்து சமுதாயத்தில் உள்ள எந்தத் தீமைகளையும் அகற்றுவதற்கு அவர்கள் ஒருபோதும் கவலைப்பட்டதில்லை; அந்தத் திசை வழியில் எந்த சீர்திருத்தத்தையும் அவர்கள் ஒருபோதும் முயற்சி செய்ததில்லை. உண்மையில் வாரன் ஹேஸ்டிங்ஸ் மீது பர்க் குற்றம் சாட்டி குற்றவாளிக் கூண்டில் ஏற்றிய போது, அவருக்கு எதிராக சாட்டப்பட்ட குற்றங்களில் ஒன்று, தன்னுடைய சொந்த ஆதாயத்திற்காக அவர் சாதிச் சட்டங்களைப் பயன்படுத்திக் கொண்டார் என்பதாகும். சாதி அமைப்பு தமது சொந்த நன்மைக்கு மிகவும் பொருத்தமானது என்று பிரிட்டிஷ்காரர்கள் கண்டனர். எனவே, அவர்கள் சமுதாயத்தில் தேவைப்பட்ட சீர்திருத்தங்கள் எதையும் கொண்டு வருவதற்கு ஒரு போதும் முனையவில்லை. ஆனால், நாம் சுதந்திரமடைந்துள்ள போது; மிகவும் தேவைப்படும் சீர்திருத்தத்தைக் கொண்டு வருவதற்கு முயலக் கூடாது என்பதற்கு அது காரணமாகாது. நாம் மேற்கொண்டு முன்னே செல்வதாக சிலர் கூறினர். இது போன்ற ஒரு மசோதாவை இவ்வளவு சீக்கிரமாக நாம் ஏன் எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும், இன்னும் கொஞ்ச காலத்திற்கு நாம் ஏன் காத்திருக்கக் கூடாதென்றும் அவர்கள் கேட்டனர். என்னுடைய கருத்து என்னவெனில்; இந்த சீர்திருத்தம் ஏற்கனவே நீண்ட காலம் தாமதமாகியுள்ளது. இன்னும் மிகவும் முன்னதாகவே இது கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும்; ஆனால் நாம் ஓர் அடிமை நாடாக இருந்தோம், நம்முடைய விதியை நிர்ணயிப்பவர்களாக நாம் இருக்கவில்லை. இப்பொழுது இது ஏற்கனவே மிகவும் காலதாமதமாகியுள்ள ஒரு விஷயமாகும், என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த அவை தகுதியுடையதா என்றெல்லாம் வேறு பல ஆட்சேபணைகளும் எழுப்பப்பட்டன. உண்மையில், இந்தப் பிரேரணையை முன்மொழிந்த மாண்புமிகு, கற்றறிந்தவர், இந்த விரும்பத்தக்க மாற்றத்தைக் கொண்டுவருவதற்கு நாம் எவ்வாறு தகுதியுடையவர்கள் என்று தெளிவாக விளக்கியுள்ளார். எனவே, குறிப்பாக வேறு பல பேச்சாளர்களும் இருப்பதால், இந்த அவையின் நேரத்தை நான் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை.

விவாகரத்துக் கோட்பாட்டைப் பொறுத்த மட்டிலும், அது மிகவும் விவாதிக்கப்பட்ட ஒரு விஷயம் என்று கருதுகிறேன். இந்து சமுதாயத்தில் அதிக எண்ணிக்கையுள்ள மக்களை மெய்யாகவே கிளர்ச்சி அடையச் செய்கின்ற ஒரு விஷயமாகும் இது. சமயச் சடங்கு ரீதியான திருமணமாக இருந்தாலும் அல்லது வேறு எந்த வகைப்பட்ட திருமணமாக இருந்தபோதிலும், எந்த சூழ்நிலையிலும் அது ரத்து செய்யப்பட முடியாத திருமண பந்தமாக இருக்கக் கூடாது என்பது எனது விருப்பமாகும். மக்களுக்குக் கட்டுப்பாடற்ற சுய விருப்பத்தைக் கொடுப்பதற்கு பதிலாக, இதை முன் மொழிந்த மாண்புமிகு அமைச்சரை, இந்த அம்சத்தை கவனத்தில் எடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன், அதாவது, ஒரு காலவரம்பு நிர்ணயிக்கப்படலாம் - உதாரணமாக ஐந்தாண்டுகள் அல்லது மூன்றாண்டுகள் - இந்த அவை எதை அங்கீகரிக்கிறதோ அதன்படி - அந்தக் காலகெடுவுக்குள் திருமணம் செய்துகொண்டுள்ள மக்கள் தமது முரண்பாடுகளைப் போக்கிக்கொள்வதற்கு வல்லதாக இருக்க வேண்டும். ஒருவரை மற்றொருவர் புரிந்து கொள்வதற்குப் போதிய அவகாசம் இருக்கும். இவ்வளவுக்குப் பின்னரும், அவர்களால் இணக்கமாகப் போக முடியாவிட்டால், திருமண பந்தத்தை முறித்துக் கொள்வது அவசியப்படலாம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** சோதனை அடிப்படையிலான திருமணம் என்று நீங்கள் கூறுகிறீர்களா?

**திரு. எச். சித்தவீரப்பா:** சோதனை அடிப்படையிலான திருமணமல்ல, ஆனால், யாரும் விவாகரத்தின் அனுகூலம் அல்லது சாதகத்தைப் பெறுவதற்கு முன்னால், ஒரு குறிப்பிட்ட காலகட்டம் நிர்ணயிக்கப்பட வேண்டும். அந்தக் காலகட்டத்திற்கு முன்னால், திருமணமான எந்தத் தம்பதிகளும் விவாகரத்துக்கு அனுமதிக்கப் படக்கூடாது.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** அது ஆங்கிலேயர் சட்டம் அங்கு அவர்கள் மூன்றாண்டுகள் என்று நிர்ணயித்திருக்கிறார்கள்.

**திரு. எச். சித்த வீரப்பா :** மேலை நாடுகளின் அனுபவத்தை நாம் பார்ப்போம். உதாரணமாக, அமெரிக்காவை எடுத்துக் கொள்வோம். லிண்ட்சே என்ற ஒரு புகழ்பெற்ற விவாகரத்து நீதிமன்ற நீதிபதியின் அனுபவம் நமக்கு முன்னால் இருக்கிறது. எப்பொழுதாவது, யாராவது அவர் முன்னால் விவாகரத்து கோரிப் போனால், அவர் இவ்வாறு கூறுவது வழக்கம். ''நீங்கள் ஒரு மாதம் அல்லது இரண்டு மாதங்களுக்கு ஒன்றாகச் சேர்ந்து வாழ்ந்துவிட்டு, பிறகு மீண்டும் என்னிடம் வாருங்கள். அதற்குப் பின்னரும், நீங்கள் விவாகரத்து செய்துதான் தீரவேண்டுமென்று நீங்கள் உணர்ந்தால், பிறகு நீங்கள் அதற்காக விண்ணப்பிக்கலாம்.'' ஒரு நீதிபதியின் அனுபவம் என்னவெனில் மக்கள் தாங்கள் பரஸ்பரம் பிரிவதற்கு முயலும் போதெல்லாம், அவர்கள் ஒருவரையொருவர் புரிந்து கொள்வதற்கு முயற்சி செய்யவில்லை என்று கூறுகிறார். ஒருவர் மற்றொருவரை மதிப்பீடு செய்வதற்கு சந்தர்ப்பம் ஏற்பட்டால், அவர்கள் பிரிந்து போவதற்கான இந்த தீவிர முறையைக் கையாளாமல் போகக்கூடும். எனவே, விவாகரத்து சம்பந்தமாக அத்தகைய ஏதாவது ஒரு கால கட்டத்தை நிர்ணயிக்க வேண்டும் என்று கருதுகிறேன்.

சொத்துக்களைத் துண்டாக்கும் கொள்கையைப் பொறுத்த மட்டிலும், விவசாய நிலம் இந்த மசோதாவால் பாதிக்கப்படவேயில்லை. அந்த அளவுக்கு அது நல்லதே.

**சி.எச். ரணவீர சிங் :** (கிழக்கு பஞ்சாப் : பொது) : மைய அரசின் நிர்வாகத்தின் கீழ் உள்ள பிரதேசங்களில் அது பாதிக்கப்பட்டுள்ளது.

**திரு. எச். சித்த வீரப்பா :** இல்லை. அது அவ்வாறு இல்லை. மைய அரசின் நிர்வாகத்தின் கீழ் உள்ள நிலம் மட்டுமே பாதிக்கப் பட்டுள்ளது. அது ஒரு மிகவும் சிறிய நிலப்பரப்பாகும். இந்த விவசாய நிலத்தைப் பொறுத்த மட்டிலும், நமது சொந்த விவசாயத்தின் நலனுக்காகவும், உணவைப் பொறுத்த மட்டிலும் நமது சொந்த வாழ்வுக்காகவும் நாம் விவசாய சீர்திருத்தத்தை மேற்கொள்ள வேண்டிய திருமணம் வந்துவிட்டது. அது மட்டுமின்றி, வாரிசுரிமை சம்பந்தமாகவும், குடும்பத்தின் முதல் மகனுக்கு உள்ள சொத்துரிமை சட்டம் போன்ற ஒரு சட்டம் உருவாக்கப்படவேண்டிய நேரமும்

வந்துவிட்டது. இந்த நாட்டின் 90 சதவீத மக்கள் கிராமங்களில் வாழ்கின்றவர்கள், அவர்களின் சொத்து பெரும்பாலும் விவசாயம் சம்பந்தப்பட்டது என்பதாலும், 90 சதவீத மக்களின் சொந்த சொத்து, இந்த சட்டத்தின் செயல்பாட்டிலிருந்து விலக்கப்படுவதாலும் நிலம் துண்டு துண்டாக்கப்படும் கொள்கை தர்க்கரீதியானதோ அல்லது பகுத்தறிவுக்கு உகந்ததோ அல்ல என்று கருதுகிறேன்.

பழக்க வழக்கம் சம்பந்தமாக, என்னுடைய சில நண்பர்கள், பழக்க வழக்கம்தான் எப்போதும் சட்டத்தை செலுத்துகிறது என்றும் எனவே சட்ட சம்மதம் உள்ள எந்தப் பழக்க வழக்கமும் ஏற்றுக் கொள்ளப்படவேண்டும் என்றும் கூறினார்கள். வழக்குரைஞர்களாக அனுபவம் உள்ள நம்மில் பலர், எந்த நன்மை செய்யும் சட்டத்தின் பலனையும் கலைப்பதற்கு பழக்க வழக்கம் எவ்வாறு சௌகரிய மாகப் பயன்படுகிறது என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார்கள். இந்தத் தீமைக்கு முடிவு கட்ட முடியும் என்று நினைக்கிறேன். இதற்கு என்னால் ஓர் உதாரணத்தைக் கொடுக்க முடியும். இந்திய தண்டனைச் சட்டத்தில் உள்ள ஒரு ஷரத்தின்படி, எந்த ஒரு பெண்ணாவது ஒழுக்கக் கேடான நோக்கத்திற்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டால் அது ஒரு குற்றமாகும். அவ்வாறு அர்ப்பணித்துக் கொள்வதன் அடையாளங்கள், அந்தப் பெண்ணின் கழுத்தில் சில மணிகளைக் கட்டுவதாகும். இப்பொழுது வழக்கறிஞரின் புத்திக்கூர்மை, மணி களைக் கட்டும் பழக்கவழக்கத்தைக் கண்டுபிடிக்க முடிந்துள்ளது. தார்மீக நோக்கங்களுக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் சம்பவங்களுக்குக் கூட அந்தப் பழக்க வழக்கத்தை இப்போது பிரயோ கிக்கிறார்கள். இது தவிர, பழக்கவழக்கத்தை முன்னிட்டு நீதிமன்றத் தில் வழக்குகள் தொடுக்கப்படுவதையும் நாம் அறிவோம். இதற்காக எவ்வளவு பெருந்தொகைகள் செலவழிக்கப்படுகின்றன, குறைந்த பட்சம் முந்திய ஆட்சிக் காலத்தின் போதாவது அவ்வாறு செய்யப் பட்டது. ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் ஒரு தீர்ப்பை பெறுவதற்காக மக்கள் ஏராளமான தொகைகளை செலவழிப்பது வழக்கம். இருவேறு தீர்ப்புகளைப் பிரித்துக் காட்டுவதற்காக நீதிபதிகளுக்காகப் பணத்தை விரயம் செய்கின்றனர். இன்று இந்த மசோதா மிகவும் எளிமை யானது மிகவும் தெளிவாக இருக்கிறது. எந்த வழக்கறிஞரிடமும் போகாமலேயே, எந்த நபரும் சுமார் நான்கு அணா செலவழித்தும் சட்டம் சம்பந்தமாகத் தனது நிலைமை என்ன என்பதைத் தெரிந்து கொள்ள முடியும்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா :** ஒருவர் நான்கு அணாவில் எல்லாவற்றையும் சமாளிக்க முடியும் என்று கூறுகிறீர்களா?

**திரு. எச். சித்த வீரப்பா:** அது மிகவும் சாத்தியமே. அதற்கு ஒரு நாள் வரும். அதற்காகவும் நாம் முயற்சி செய்ய வேண்டும். உண்மையில், இந்த நீதிமன்றத் தீர்ப்புகள் சில சொத்து உரிமைகளையும், பிறவற்றையும் எவ்வாறு பாதிக்கின்றன என்பதை நாம் பார்த்து வருகிறோம். ஒரு நீதிபதி ஒரு முடிவுக்கு வருகிறார். அது சில காலத்திற்கு சட்டமாக இருக்கும். நாளைய தினம் அவர்கள் ஏதாவது ஒரு ஆவணத்தை வாசகத்தை அல்லது ஸ்மிருதியை, அல்லது அத்தகைய ஏதாவது ஒரு பழைய ஆவணத்தைக் கண்டு பிடிப்பார்கள். அப்போது இந்த சட்டம் ரத்து செய்யப்படுகிறது என்று நமக்குக் கூறுவார்கள். இதன் விளைவு இந்து சட்டத்தில் எதுவும் நிலையானதல்ல. உண்மையில் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் கடந்த 150 ஆண்டுகளில் ஒன்றன்பின் ஒன்றாகப் பல தீர்ப்புகள் வந்துள்ளன. இருந்தபோதிலும், இந்து சட்டத்தில் எதுவும் நிலையாக இல்லை என்று அவர்கள் கூறுகிறார்கள். எப்பொழுது நமக்கு ஒரு நிலையான வடிவத்தில் சட்டம் வகுக்கப்படுகிறதோ அப்பொழுது தான் அதனை சாதாரண மனிதன் புரிந்து கொண்டு, தன்னுடைய நிலை திட்டவட்டமாக என்ன என்பதை அவன் புரிந்து கொள்ள முடியும். உண்மையில் பணம் வைத்துக் கொண்டிருக்கும் ஒருவர் கொஞ்சம் பணத்தைக் கொடுக்க விரும்பும்போது, தனது வாரிசுகள் யார், யாருக்குப் பங்குகள் இருக்கின்றன என்பதை அவர் திருப்திப்படுத்திக் கொள்ள வேண்டும். இதன் விளைவாக அவர் ஒரு விவசாய நிலத்தின்மீது ரூ. 1000 கடன் கொடுக்கக் கூடியவர், ரூ. 500 மட்டுமே கொடுக்கிறார். எனவே, எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், இந்த மசோதா ஓர் ஆரோக்கியமான மசோதா என்று நான் நம்புகிறேன். எனவே இதற்கு என்னுடைய முழுமனதான ஆதரவை வழங்குகிறேன்.

**திரு. தலைவர் :** நாளைய தினம் கேள்வி நேரத்திற்குப் பின்னர் விவாதம் தொடரும்.

## *இந்து சட்டத் தொகுப்பு (தொடர்ச்சி)

+**திருமதி ஜி. துர்க்காபாய்** (சென்னை : பொது) : மாண்புமிகு சட்ட அமைச்சர் முன்மொழிந்த பிரேரணையை நான் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஆதரிப்பதற்காக எழுந்து நிற்கிறேன். பொறுக்குக் குழுவிலுள்ள சர். பி.என். ராவுக்கும் அவருடைய சகாக்களுக்கும் என்னுடைய ஆழ்ந்த நன்றியைத் தெரிவிக்க வேண்டும் என்றும் உணருகிறேன். இந்த மசோதாவுக்கு அடிப்படையாக உள்ள அறிக்கையைத் தயாரிப்பதற்கு அவர்கள் பெருமளவு பாடுபட்டுள்ளனர்.

இந்து சட்டத்தை நிர்ணயித்துக் கூறுவதற்கான இந்த மசோதா சட்டப்புத்தகத்தில் ஏறும்போது அது இந்த நாட்டின் சமூக வரலாற்றில் ஒரு மாபெரும் மைல்கல்லாக இருக்கும். இந்த மசோதாவின் முக்கிய ஷரத்துகளை விரிவாக விவாதிப்பதற்கு முன்னால், ஒரு விஷயத்தை வலியுறுத்துவதற்கு விரும்புகிறேன்: இந்த மசோதாவின் ஷரத்துகள் அனுமதியளிக்கிற அல்லது உதவுகின்ற தன்மை வாய்ந்தவை என்ற உண்மையை உறுப்பினர்கள் அறிவார்கள். இந்துக்களின் வைதீகப் பகுதியினர் மீது அவை எத்தகைய கடப்பாட்டையோ அல்லது நிர்ப்பந்தத்தையோ சுமத்தவில்லை. அவற்றின் ஒரே விளைவு இந்துக்களின் வளர்ந்துவரும், மற்றும் உரிமை கோரும் ஆண்கள், பெண்களுக்கு, பழைய வழிகளைக் கடைப்பிடிப்பதற்கு அவர்களது சுதந்திரத்தை எவ்வகையிலும் பாதிக்காமலும் அல்லது குறைவுபடுத்தாமலும் அவர்கள் வாழ்வதற்கு விரும்புகின்ற வாழ்க்கையை வாழ்வதற்கு சுதந்திரத்தை வழங்குவதாகும்.

இந்த மசோதாவுக்கு எதிராக எழுப்பப்பட்டுள்ள ஒன்றிரண்டு பிரதான ஆட்சேபனைகள் சம்பந்தமாக மட்டும் என்னுடைய கருத்தைக் கூறவிரும்புகிறேன். முதலாவது ஆட்சேபனை விதிகளை ஒழுங்குபடுத்தி தொகுப்பதற்கான முயற்சியையே எதிர்ப்பதாகும். இந்து சட்டத்தின் பல கோட்பாடுகள் இப்பொழுது நன்கு

★ அ.நி. (சட்டப்பேரவை) டி, தொகுதி II, பாகம் II 1949, மார்ச், பக். 991-1030
\+ அதே தொகுதி, பக். 991-95.

நிலையாக உள்ளனவென்றும், எனவே இந்த நிலையான சட்டத்தை நிலையற்றதாக்கும் ஒரு சட்டத் தொகுப்பு சிறிதும் தேவையில்லையென்றும் வாதிக்கப்படுகிறது. மற்றைய ஆட்சேபனை என்னவெனில், தலைமுறை தலைமுறையாகக் கைமாற்றிக் கொடுக்கப்பட்டு வந்துள்ள இந்து சட்டத்தின் கோட்பாடுகளைப் பாதுகாப்பதற்கு மாறாக, சட்ட விதிகளை ஒழுங்குபடுத்தும், தொகுப்பாக்கும் முயற்சியானது இந்து சமுதாயத்திற்கு மிகவும் அந்நியமான கோட்பாடுகளைப் புகுத்துவதில் போய் முடியும் என்பதாகும். ஸ்மிருதிகள், ஸ்ருதிகள் மற்றும் மகத்தான புகழ்வாய்ந்த முனிவர்களின் சட்டத்தை மாற்றுவதற்கு சட்டப் பேரவைக்கு உரிமையில்லை என்று கூறப்பட்டது. இந்து சட்டத் தொகுப்புக்கு எதிரான மற்றொரு குற்றச்சாட்டு என்னவெனில், அது புரட்சிகரமான தன்மையுடைய மாற்றங்களைப் புகுத்துவதற்கு முயல்கிறது என்றும் எனவே, அது ஸ்மிருதிகளும் தர்மமும் வகுத்தளித்துள்ள சட்டத்தை ஒழித்துக் கட்டி விடும் என்பதுமாகும். இந்த ஆட்சேபனைகளுக்கெல்லாம் என்னுடைய பதில் என்னவெனில், இந்து சட்டத்தின் பல கோட்பாடுகள் இப்பொழுது நன்கு நிலைத்திருப்பதால், இந்தக் கோட்பாடுகளையெல்லாம் ஒரு முறைப்படியான, எளிதில் புரிந்து கொள்ளத்தக்க சட்டத் தொகுப்பை உருவாக்குவது அவசியமாகும். இன்றுள்ளபடி இந்து சட்டம் நெளிவுசுழிவற்றதாக இல்லாமல் இறுகிப்போனதாக இருக்கிறது. அதேபொழுதில் திட்டவட்டமாகவும் இல்லை. பல நீதித் துறைத் தீர்ப்புகளும், முன் உதாரணங்களும் அவற்றின் பயன் தன்மையை இழந்துவிட்டன. ஓர் ஆங்கிலேய நூலாசிரியர் கூறுவது போன்று, இந்த விஷயம் சம்பந்தமான வழக்குச் சட்டம் ஓர் அடர்ந்த காடு மாதிரி உள்ளது. அதில் மரம் எங்கே வனம் எங்கே என்று பார்ப்பது சாத்தியமல்ல. அவ்வப்போது பல்வேறு உயர்நீதி மன்றங்கள் அடுத்தடுத்து அளித்த முரணான தீர்ப்புகள் உள்ளன. மிகச் சிக்கலான சில சட்டப் பிரச்சினைகள் மீது பிரிவு கவுன்சில் எடுத்த முடிவுகள் கூட புராதன ஆணையுரிமைக்கும் நவீன உணர்வுக்கும் ஏற்புடையனவாக இல்லை என்று பரவலாகக் கருதப்படுகிறது. ஒரு சீரான, ஒருங்கிணைக்கப்பட்ட சட்டம் இந்து சமுதாயத்துக்கு ஒரு வரப்பிரசாதமாக இருக்கும்; ஏனென்றால் சட்டத்துறை மாணவர்களுக்கும் வழக்கறிஞர்களுக்கும் கணிசமான நேரத்தை அது மிச்சப்படுத்தும்; இல்லையெனில், சட்டத்தை முற்றிலுமாக கிரகித்துக் கொள்வதற்கு அவர்கள் பல ஆண்டுகள் எடுத்துக்கொள்ள

வேண்டியிருக்கும். ஒரு சாதாரணக் குடிமகன்கூட சட்டத் தொகுப்பை படித்துப் பின்வருமாறு தனக்குள் கூறிக்கொள்ள முடியும்: ''எனது உரிமைகள், சலுகைகள், கடமைகள் ஆகியவற்றின் மொத்த அடிப்படையே இந்தத் தொகுப்பிற்குள் இருக்கிறது.'' ஒரு சட்டத் தொகுப்பு நீதிபதிகளின் நேரத்தையும் உழைப்பையும் இயன்ற மட்டும் குறைக்கும்; நீதி வழங்குவதை துரிதப்படுத்துவதையும் அது ஊக்குவிக்கும். ஒரு சட்டத் தொகுப்பு இல்லையெனில், நீதி இல்லை என்பது என் கருத்து.

மிகவும் புரட்சிகரத் தன்மையுடைய மாற்றங்களை இது கொண்டுவந்துள்ளது என்ற ஆட்சேபனையை பிரதானமாக மாற்றத்தை விரும்பாத சில சுயநலக் கும்பல்கள் எழுப்புகின்றன. நாட்டின் எதிர்கால நலன்களை அடைவதற்காக இன்றைய சில நலன்களைத் தியாகம் செய்வது எப்பொழுதும் வரவேற்கத் தக்கதாகும் என்று இவர்கள் வாதிடுகின்றனர். உண்மை என்னவெனில் இந்தப் பாதையில் இந்தச் சட்டத் தொகுப்பு உண்மையில் தேவையான அளவு போகவில்லை: இது என் கருத்து.

விவசாயச் சொத்தின் பெரும் பகுதி இந்தச் சட்டத் தொகுப்பின் பார்வையிலிருந்து விலக்கி வைக்கப்படுகிறது. எனவே, ஒரு சீரான சட்டம் வேண்டுமென்ற உங்களுடைய நோக்கம் முறியடிக்கப்படுகிறது என்று வலியுறுத்தப்படுகிறது. இந்த நோக்கம் தோற்கடிக்கப் படும்போது, ஒரு சட்டத்தொகுப்பை ஏன் கொண்டுவர வேண்டும்? இந்த ஆட்சேபத்திற்கு என் பதில் இதுதான்: இந்தச் சட்டத் தொகுப்பின் நோக்கம் எல்லா இந்துக்களுக்கும் ஒரு சீரான சட்டத்தை வழங்குவதே அன்றி, எல்லாவிதமான சொத்துக்களுக்கும் ஒரு சீரான சட்டத்தை வழங்குவது அல்ல. வேறு எதற்காக இல்லாவிடினும், விவசாயத்தின் நலனுக்காக உரிய சட்டப்பேரவைகளால் தனிச் சட்டங்களும், சிறப்புச் சட்டங்களும் இயற்றப்படும்; அவற்றில் வாரிசு உரிமை பற்றிய விசேஷச் சட்டம் உட்படலாம். சொத்தின் மற்ற வகைகளுக்கு பொருந்தும் வாரிசுரிமைச் சட்டத்திலிருந்து இது வேறுபட்டதாக இருக்கலாம்.

இப்பொழுது, மகளுக்குப் பங்கு கொடுக்கும் பிரச்சினைக்கு வருகிறேன். பல காரணங்களால் இது எதிர்க்கப்படுகிறது; அதாவது சொத்து சிதையுறுவதற்கும், துண்டு துண்டாக ஆவதற்கும் இது

இட்டுச் செல்லும்; மேலும் ஒரு வெளி நபரை மருமகன் என்ற உருவில் உள்ளே புகுத்தும். ஆட்சேபனைக்கு மற்றொரு காரணம்: ஒரே சமயத்தில் ஒரு மகளுக்கும் ஒரு மகனுடன் வாரிசு உரிமை அளிப்பது இந்து சமுதாயத்தை சீரழித்து விடும் என்பதாகும். ஒரு மகள் ஒரு பங்கை எடுத்துச் சென்றால், அவளது சகோதரர்களின் அன்பு இழக்கப்படுகிறது என்றும் கூறப்படுகிறது. திருமணச் செலவு மற்றும் மகளுக்குப் பங்கு என்ற இரட்டைப் பளுவால் பல குடும்பங்களின் மகன்கள் வீழ்ச்சியடைவர், சீரழிவர் என்றும் கூறப்படுகிறது. தங்கள் சொந்த நலனில் சற்று அதிக சிரமம் ஏற்படுவதை ஏற்றுக் கொள்ளாவிடில் பின்னர் சகோதரர்களின் பாசம் எத்தகையது என்று நான் கேட்கலாமா? மகளுக்கு பங்கு எதுவும் கொடுக்காவிடில் மகன்களின் பாசம் அதிகமாக இருக்குமா என்று நான் கேட்கலாமா?

சொத்து சிறு சிறு பாகங்களாகப் பிரிந்துவிடும் என்பதைப் பொறுத்தவரை, இக்கேள்வி எவ்வாறு எழுப்பப்படுகிறது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை; ஏனெனில், இந்த மசோதாவின் வரம்பிலிருந்து ஏற்கனவே விவசாயச் சொத்துக்கள் விலக்கி வைக்கப்பட்டுள்ளன. இந்த அவையின் மதிப்பிற்குரிய உறுப்பினர்களில் ஒருவர் இந்தப் பிரச்சினையை எழுப்பினார்; விவசாயச் சொத்தின் பெரும் பகுதி இந்தச் சட்டத் தொகுப்பின் செயல்பாட்டிலிருந்து நீக்கி வைக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் எல்லோரும் அறிவோம். நகர்ப்புற சொத்துக்கும் அசையக்கூடிய சொத்துக்கும்தான் இது பொருந்தும். துண்டு துண்டாகி விழும் என்று கூறுவது மகளுக்கும் ஒரு பங்கு கொடுக்கப்பட்டால் இவர்களின் பங்கு குறையும் என்று நினைக்கிறார்கள் என்று கருதுகிறேன். அதே சதையையும் ரத்தத்தையும் கொண்ட மகளுக்கு பங்கு கொடுப்பது பற்றிப் பெரும் கூச்சல் கிளப்ப வேண்டுமா என்று கேட்கிறேன்.

குடும்பத்தில் ஒரு அன்னியரை நுழைப்பது பற்றி எனது பதில் : தனது தந்தையிடமிருந்து மகள் பெறும் சொத்து, தேவைப்படின் ஒரு சட்டம் மூலம் அவளது சொந்தச் சொத்தின் பாகமாக ஆக்கப்படலாம். இந்தச் சட்டத்திலிருந்து விளையும் நன்மை அல்லது தீமை அந்தக் குறிப்பிட்ட நபரை, அதாவது மருமகனையும் பொறுத்தது. இதுபற்றி அதிகம் சொல்ல நான் விரும்பவில்லை.

பங்கு கோரும் மகள், மகன்களைப் போலவே, தந்தையின் மரணத்திற்கு பிறகே அதை அடைவது சாத்தியமாகும் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்; தந்தை உயிருடன் இருக்கும்போது சொத்துப் பிரிவினையை அவள் கோருவது என்பது நிச்சயம் கிடையாது. எனவே மதிப்பிற்குரிய உறுப்பினர்களில் சிலர் இதற்கு ஏன் ஆட்சேபம் செய்ய வேண்டும் என்பதை என்னால் கண்டுகொள்ள முடியவில்லை. சட்ட அமைச்சர் ஏற்கனவே இந்த விஷயம் பற்றி எடுத்து விளக்கியதுபோல், தனது தந்தையின் சொத்திலிருந்து மகள் பங்கு பெறுவதை ஸ்மிர்திகளே அங்கீகரித்துள்ளன; எனவே, இதில் புரட்சிகரமானது எதுவும் இல்லை. தனது தந்தையின் அல்லது அவளது முன்னோர்களின் ஆன்மீக நலன்களுக்கு அவள் பங்கு ஏதும் இல்லை என்ற காரணத்தைக் கொண்டு மகளை விலக்குவது நியாயமற்றது, நீதிக்குப் புறம்பானது என்று கூறுவேன்.

இது சம்பந்தமாக ஒரு வாதம் முன்வைக்கப்படுகிறது. மகள் தனது தந்தையின் சொத்தில் பங்கிற்கு வராமல் தனது கணவனுடைய சொத்தில் ஏன் ஒரு பங்கு எடுத்துக் கொள்ளக் கூடாது என்பதே அந்த வாதம். இது ஒரு சமரச சூத்திரமாகத் தோன்றுகிறது. இந்த சமரச சூத்திரத்தை பெண்களால் ஏற்றுக் கொள்ள முடியாது; ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பதைப் பட்டவர்த்தனமாகவே நான் கூற முடியும். எதுவும் சமத்துவ அடிப்படையில் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று நாங்கள் கூறுகிறோம். பால் அடிப்படையில் நிலவும் பாகுபாட்டை நீக்குவதைக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது இந்தச் சட்டத் தொகுப்பு; இந்தப் பாகுபாடு அகற்றப்பட வேண்டும். மகள் ஒரு வாரிசாக அங்கீகரிக்கப்பட வேண்டும்; தந்தையின் ஒரு மகளாகவும் அவரது ஒரு வாரிசாகவும் முழு உரிமையோடு தந்தையின் சொத்தை அவள் அனுபவிக்க வேண்டும். சொத்து சிதைந்து போகும் என்ற பிரச்சினை பற்றி நான் ஏற்கனவே விளக்கியுள்ளேன். தீங்கை பல்வேறு வழிகளில் சமாளிக்கலாம். சொத்து சிதறிப் போகாமல் தடுத்து அதனை ஒன்று படுத்துவதற்கு விசேடச் சட்டங்கள் இயற்றி அவற்றின் மூலம் இதனைச் சாதிக்கலாம். சொத்து ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் கீழே போய் விட்டால், அதை விற்று தரப்பினர் தங்களுக்குள் பங்குபோட்டுக் கொள்ளலாம். பிரச்சினையைச் சமாளிக்க பல்வேறு வழிகள் உள்ளன. மகள் ஒரு பங்கைப் பெறக் கூடாது என்ற அடிப்படையில் வாதங்களை முன்வைக்க முடியாது. சமத்துவம் என்ற கோட்பாட்டின் அடிப்படையில், அதாவது மகனோடு மகளுக்கும் சம பங்கு அளிக்கப்பட

வேண்டும் என்ற அடிப்படையில் பொறுக்குக் குழு பரிந்துரை செய்துள்ளது. இந்த விஷயம் பற்றி அநேகமாக ஏகமனதாக பொறுக்குக் குழு செய்துள்ள பரிந்துரையை ஆதரிக்கும்படி மதிப்பிற்குரிய அவை உறுப்பினர்களை வேண்டிக்கொள்கிறேன்....

**திரு. எச்.வி. காமத்** (மத்திய மாகாணம் - பேரார்) : இது பற்றி டாக்டர் அம்பேத்கர் அனுதாபம் காட்டவில்லை.

***திருமதி ஜி. துர்க்காபாய்:*** எனவே, மகள் தந்தையிடமிருந்து மட்டுமல்லாமல் கணவனிடமிருந்தும் பங்கு பெறுகிறாள் என்று கூறும்போது, கணவன் எதையும் எடுத்துக் கொள்ளவில்லை என்றால் அது எப்படி? மனைவி கணவனது சொத்தில் உரிமை பெறும்போது, அதேபோல் ஆண் மகனும் மனைவியின் சொத்தில் உரிமை பெறலாம் என்றும், தனது தந்தையின் சொத்தில் மகள் ஒரு பங்கு கோருவது போல் தாயின் சொத்தில் மகளுக்குச் சமமான பங்கை மகனும் பெறுவான் என்றும், பொறுக்குக் குழு சிபாரிசு செய்துள்ளது. எனவே இதுபற்றியும் எந்தக் கஷ்டமும் இருக்கக்கூடாது. ஏனெனில் இந்த காரணங்களுக்காக இந்த மசோதாவை எதிர்ப்பவர்களுக்கு ஒரு பதில் அளிக்கப்பட்டுள்ளது. நான் மேற்கோள் காட்ட விரும்பவில்லை; ஏனெனில் நேரம் குறைவாக உள்ளது, மேலும் மற்ற உறுப்பினர்கள் பேச ஆவலுடன் இருக்கிறார்கள். (**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** தொடருங்கள். உங்கள் நேரத்தை எடுத்துக் கொள்ளலாம்.) மத அடிப் படையில் இந்த சட்டமியற்றுதலை எதிர்ப்பவர்கள் மனு காலத்தி லிருந்து இந்துச் சட்டம் மாறாமல் நிலையாக இருந்து வந்துள்ளது என்ற தவறான அனுமானத்தில் மனத்தை அலட்சிக் கொள்கிறார்கள் எனத் திரு. பி.வி. சீனிவாச ஐய்யங்கார் சுட்டிக்காட்டினார்.

இது என்னை வேறொரு விஷயத்திற்கு இட்டுச் செல்கிறது. அது என்னவெனில், சொத்து உரிமையை வாழ்க்கைக்கு மட்டு மல்லாமல் முழுமையாக வைத்திருக்க பெண்கள் அனுமதிக்கப் படாதது பற்றி பெண்ணின் சொத்தின் மீது திணிக்கப்பட்டுள்ள இந்தத் தகுதியின்மையை இந்த மசோதா நீக்க விழைகிறது. வாழ்க்கைக்கு மட்டும் இல்லாமல், சொத்தை முழுமையாக வைத்துக் கொள்ளும் உரிமையை இது அவளுக்கு அளிக்கிறது. பெண்கள் விஷயமாக சொத்தைக் கட்டுப்படுத்துவதற்குச் சாதகமாகச் சொல்லப் படும் பிரதான வாதம் நிர்வகிக்க அவர்கள் திறமையற்றவர்கள்

என்பதேயாகும். மேலும் அவர்கள் ஏமாற்றப்படலாம்; அல்லது சுரண்டப்படலாம்; அவர்கள் கல்வியறிவு இல்லாதவர்கள். மேலும் பின்வருமாறு கூறப்படுகிறது: நிர்வகிக்கும் கோட்பாடுகளை அவர்கள் அறிந்திருக்கவில்லை; அதனால், அவளது உரிமையை எடுத்துக் கொள்வதற்கு கெட்ட நோக்குடன் திட்டமிடும் ஆண் உறவினர்களுக்கு ஒரு பலமான தூண்டுதலாக இருக்கலாம். இதற்கெல்லாம் என் பதில் இதுதான்: பம்பாயில் மகளுக்கு முற்றிலும் உரிமையுள்ள சொத்து உள்ளதை அவை அறியும். எனவே அந்த அடிப்படையில் அவர்கள் எந்த அபாயத்திற்கும் உள்ளாவார்கள் என்று நான் நினைக்கவில்லை. மேலும் பெண்கள் ஆண்களைவிட நல்ல நிர்வாகிகள் என்பதை நிரூபிக்கும் பல எடுத்துக்காட்டுகளும் நம்மிடம் உள்ளன. இன்னொரு வாதமும் உள்ளது: அதாவது பெண்கள் கல்வியறிவு பெறாதவர்கள், எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் என்பதை சந்தேகமின்றி நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் எத்தனை ஆண்கள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் என்று நான் கேட்கலாமா? நான்கு ஆண்களில் மூன்று பேர் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இன்று உள்ளனர் (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** 'பத்தில் ஒன்பது'). எனவே மக்களில் நான்கில் ஒரு பங்கினரே சாதகமான நிலைமையை அனுபவிக்கின்றனர். (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** ''அவர்கள் அவர்களுடைய தாய்மார்களின் குழந்தைகள்''). பெண்களில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் சதவிகிததம் ஆண்களைவிட அதிவேகமாக உயர்ந்து வருகிறது என்பதை ஞாபகத்தில் கொள்ள வேண்டும் (**திரு. எச்.வி. காமத்** கேள்வி') சொத்தில் பெண்களுக்குள்ள பங்கின் அளவைப் பொறுத்தவரை, பொறுக்குக் குழுவின் நிலையை நான் ஏற்கனவே எடுத்துக் கூறியுள்ளேன். மகளுக்கு சம பங்கை நாங்கள் சிபாரிசு செய்துள்ளோம். உங்கள் பங்கிற்கு, பொறுக்குக் குழு செய்துள்ள சிபாரிசை எந்தத் தயக்கமுமின்றி தாராள மனதுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று வேண்டுகிறேன். இப்பொழுது நான் மற்றொரு விஷயத்தை அதாவது ஒருதார மணம் பற்றி எடுத்துக் கொள்கிறேன். இந்த விஷயம் பற்றி எவ்வளவு பேச நான் விரும்பினாலும், எனக்கு குறைந்த நேரமே இருப்பதால் நான் அவ்வாறு செய்யப்போவதில்லை. அது மட்டுமல்ல மாண்புமிகு சட்ட அமைச்சரும் மற்றும் பல பேச்சாளர்களும் இதை விளக்கிக் கூறியிருக்கிறார்கள். பொருளாதார, சமூக மற்றும் பிற அடிப்படையில் பல வாதங்கள் முன்வைக்கப்பட்டன: தங்கள் வாதங்களுக்கு ஆதரவாக மதமும் ஆன்மீகவும் கொண்டு வரப்பட்டன. மேலும் வரட்டுத்தனமான வாதங்கள் முன்வைக்கப் பட்டன: ஒரு மனிதன் உடல் ஆரோக்கியத்துடனும் பண வசதியுடனும் இருந்தால், மீண்டும் மீண்டும் ஏன் திருமணம் செய்து

கொள்ளக் கூடாது? ஒருதார மண விதி அமுல்படுத்தப்பட்டால், பலதார மணத்தின் பயனை அடைய பல இந்துக்கள் முகமதியர்களாக மாறுவர்: இந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்ல வேண்டிய தேவை இல்லை. ஏனெனில் ஒரு பெண் பார்வையாளர் இந்த விஷயத்தை மிகத் திறமையாக, பயனளிக்கும் முறையில் பதிலளித்ததை நான் கண்டேன். ஒருதார மணமுறை அமுல் நடத்தப்படாவிடில், ஒரு தார மணத்தின் நலனைப் பெற பெண்கள் கிருஸ்தவர்களாக மாறலாம் என்று அவர் கூறினார்.

**திரு. பி. தாஸ்** (ஒரிஸ்ஸா: பொது) : ஒரு கிருஸ்தவ பெண் ஓர் இந்துப் பெண்ணை விட அதிகம் சந்தோஷமாக இருக்கிறாளா?

**திருமதி ஜி. துர்க்காபாய் :** மாண்புமிகு சட்ட அமைச்சர் ஏற்கனவே கூறியபடி, உலக அபிப்பிராயமும் உலகம் முழுவதிலும் நிலவும் நடைமுறைகளும் ஒருதாரமணத்திற்குச் சாதகமாகவே உள்ளன. இந்த விஷயம் பற்றி மேலும் அதிகம் நான் கூறத் தேவை இல்லை.

மசோதாவின் மற்ற அம்சங்களை எடுத்துக் கொள்ள எனக்கு நேரமும் இல்லை; அது விரும்பத் தக்கதும் அல்ல; ஏனெனில், திருமணம் மற்றும் விவாகரத்து பற்றிய பிரச்சினைகள் பற்றிப் பேச மற்ற உறுப்பினர்கள் இருக்கிறார்கள். கூட்டுடைமையில் இணை உரிமை பற்றி மட்டும் சிறிது கூற விரும்புகிறேன். **மிதாக்ஷரா**வுக்கும் தாயபாகாவுக்கும் இடையேயுள்ள பாகுபாடு விமர்சகர்களும் கருத்து விளக்கம் அளிப்பவர்களும் பல்வேறுபட்ட கருத்து விளக்கங்களை முன்வைத்ததன் விளைவேயாகும். அடிப்படையில் கூட்டுக் குடும்பத்தின் மூலக் கொள்கை இரண்டிற்கும் பொதுவானதே. பிறப்பினால் வரும் உரிமையும் எஞ்சுநர் உரிமையும் **மிதாக்ஷரா**வின் ஒரு சிறப்பான அம்சமாகும். தாயபாகா முறைமை நடைமுறை அனுபவத்தில் மிகவும் திருப்திகரமானது என்று நிரூபணமாகி உள்ளது; எனவே தான் **மிதாக்ஷரா** அமைப்பு முறையிலான மரபு உரிமையை **தாயபாகா** முறைக்கு மாற்ற முயல்கிறது மசோதா. வங்காள மக்களின் சிறந்த வாழ்க்கை வளத்திற்கும் அவர்களின் பெருகிவரும் வணிக நிறுவனங்களுக்கும் பெருமளவு **தாயபாகா** அமைப்பே காரணம் என்று கூறப்படுகிறது. சென்னையில் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களின் வணிக முயற்சி பெரும்பாலும் அவர்களது குடும்ப உறுப்பினர்களது சட்ட உறவுகளின் அடிப்படையில் அமைந்துள்ளது என்று எனக்குக் கூறப்படுகிறது; பிராமணக் கூட்டுக் குடும்பங்களைவிட, கூட்டாண்மை முறையை இது அதிகம் ஒத்திருக்கிறது.

இந்தப் பொருள் பற்றி அதிகம் கூறப்பட்டது; எனவே இதுபற்றி அதிகம் கூற நான் விரும்பவில்லை. அதிக எதிர்ப்பு காட்டப்படுவதற்கு புராதன அமைப்பு முறை மீது அவர்களுக்குள்ள பாசத்தினால் என்று உணர்கிறேன்; இதை எதிர்ப்பவர்கள் இந்துச் சட்டமும் தர்மமும் இவ்விஷயங்களில் நிலையானவை என்பதையும் மாற்றங்கள் எவையும் செய்யப்படவில்லை என்பதையும் அவர்கள் மறந்து விட்டதால்தான் இதனை எதிர்க்கிறார்கள் என்று கருதுகிறேன். இந்த அமைப்பில், அவ்வப்போது பல்வேறு நீதிமன்றத் தீர்ப்புகள் மாற்றங்களைச் செய்துள்ளன. இந்த அமைப்பு முறையின் சிறப்புப் பண்புகள் துண்டித்தெறியப்பட்டுள்ளன. எஸ். ஸ்ரீனிவாச அய்யங்கார் போன்ற சிறந்த வழக்கறிஞரால் இந்த விஷயம் பற்றி மிகத் திறமையாகப் பதிலளிக்கப்பட்டுள்ளது; அவர் கூறினார்: பிரிவுக் கவுன்சில் அதிகாரபூர்வமாக விளக்கிக் கூறியபடி, குடும்பத்திலிருந்து பிரிந்து போகும் தமது நோக்கத்தை ஒருதலைப்பட்சமாக ஓர் உறுப்பினர் எந்த நேரத்தில் அறிவிக்கிறாரோ அப்பொழுதே குடும்ப ஒற்றுமை உடைந்து போகிறது. கூட்டுரிமை உடைக்கப்பட்டது அல்லது **மிதாக்ஷராவிற்குப்** பதில் **தாயபாகா** கொண்டுவரப்பட்டது என்ற குற்றச்சாட்டிற்கு இது போதுமான பதிலாகும்.

இந்த அவையின் அதிக நேரத்தை நான் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. சுதந்திரம் அடைந்தபின் பல விஷயங்கள் நடந்துள்ளன; சர்வதேச மாநாடுகளில் இந்தியா கலந்து கொண்டு மனித உரிமைகளுக்காகவும் அன்னிய நாடுகளில் இந்தியர்கள் சமமாக நடத்தப்பட வேண்டும் என்பதற்காகவும் வாதாடி வந்துள்ளது. இந்த சந்தர்ப்பத்தில் நமது எல்லைகளுக்குள் ஓர் இந்து சட்டத் தொகுப்பை சட்டமாக இயற்ற நாம் தவறினால் அது மிகவும் துரதிர்ஷ்டவசமானதாகும்; நமது எல்லைகளுக்குள் எந்தப் பாரபட்சமும் இருக்காது; இங்கு நடமாட, முன்னேற, நமது இந்தியாவை புனரமைப்பதில் பங்குபெற ஆண்களுக்கும் பெண்களுக்கும் சம உரிமை இருக்கும். நமது அரசியல் சாசனம் உருவாக்கப்பட்டு வருகிறது; அடிப்படை உரிமைகள் பற்றிய அத்தியாயத்தை நாம் ஏற்கனவே நிறைவேற்றியுள்ளோம்; சட்டத்தின் முன் ஒவ்வொருவரும் சமம் என்ற கோட்பாட்டை அங்கீகரித்துள்ளோம். ஒரே சீரான உரிமை இயல் சட்டத் தொகுப்பை உருவாக்குவதைச் சாத்தியமாக்கும் ஷரத்தையும் நிறைவேற்றியுள்ளோம். எனவே உங்களிடம் பின்வரும் வேண்டுகோளை முன் வைக்கிறேன்: நான் ஏற்கனவே எடுத்துக் கூறியதுபோல் நமது சொந்த சமுதாயத்திற்கு ஒரு சிறந்த வரப்பிரசாதமாகத் திகழக்கூடிய,

ஓர் இந்துச் சட்டத் தொகுப்பை பெறுவதில் நாம் விருப்பமின்மை யையோ தயக்கத்தையோ காட்டாமல் இருப்போமாக.

***பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா** (மேற்கு வங்காளம் - பொது) : ஐயா, இந்து சட்டத் தொகுப்பை பரிசீலிப்பது சம்பந்தமாக இந்த அவையின் முன் உள்ள தீர்மானத்தின் மீது, சில வார்த்தைகள் கூற எனக்குச் சந்தர்ப்பம் அளித்துள்ளதற்கு மிகவும் நன்றி செலுத்து கிறேன். இந்தத் தீர்மானம் முதல் இரண்டு நாட்கள் விவாதிக்கப்பட்ட போது நான் வெளியூர் சென்றிருந்தேன். இதனால் பெருமளவு சாதக மற்ற நிலையில் இருக்கிறேன் என்பதை அறிவேன். எனது அலுவல் களுக்கிடையே பத்திரிகைச் செய்திகளை படிக்க சில நிமிஷங்கள் கிடைத்தன. இந்தத் தீர்மானத்துக்கு ஆதரவாக மதிப்பிற்குரிய என் னுடைய நண்பர் சட்ட அமைச்சர் டாக்டர் அம்பேத்கர் ஒரு நேர்த்தி யான உரையை ஆற்றினார். ஒப்புநோக்குதல் எதையும் நான் செய்ய வில்லை; பத்திரிகை செய்திகளைத்தான் நான் ஆதாரமாகக் கொள் கிறேன் - பத்திரிகை நிருபர்களிடையே கருத்து வேறுபாடுகள் இருந்த போதிலும் - மறு பக்கத்தில் பண்டிட் தாகூர் தாஸ் பர்கவா அதேபோல் சக்திவாய்ந்த உரையை ஆற்றியுள்ளார்.

தீர்மானத்துக்குச் சாதகமாக ஆற்றப்பட்ட நான்கு உரைகளை யும் அதற்கு எதிராக நிகழ்த்தப்பட்ட ஓர் உரையையும் போதுமான கவனத்துடன் கேட்டேன். அவையின் மனோ நிலையை என்னால் உணர முடிந்தது - சில சமயங்களில் உற்சாகம் கரைபுரண்டோடிற்று. ஆனால் இந்த மசோதாவின் பிரதான ஷரத்துகள் சம்பந்தமாக தனது கருத்து வேறுபாட்டை ஓர் உறுப்பினர் தெரிவிக்க முயன்ற போது பலவிதமான பரிகாசங்களையும் ஏளனங்களையும் அவர் பெற்றார். (மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்: இல்லை, இல்லை') அது அவ்வாறு இல்லை என்றால் நான் சந்தோஷப்படுகிறேன். அது எனக்கு கொஞ்சம் தைரியம் கொடுக்கும் என நம்புகிறேன்; ஏனெனில், நான் எவ்வாறு பேசுவேன் என்று மிகப் பெரும்பான்மையான உறுப் பினர்கள் அறிவார்கள். இம்மாதிரியான கெட்ட பெயரை எவ்வாறு நான் அடைந்தேன் என்பதை நான் அறியேன் - அதை புகழ் என்று நான் சொல்லிக் கொள்ள முடியாது - மசோதாவின் ஷரத்துக்களை நான் ஆதரிக்கவில்லை. அதை நான் இரகசியமாக வைத்துக் கொள்ளப் போவதில்லை (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்** : ஏன் நீங்கள்

---

★ அ.நி.ச.வி. (சட்டப்பேரவை ராவாதத் தொகுப்பு II, பாகம் 1949 மார்ச் 1, பக்கங்கள் 995 - 1015.

அவ்வாறு வைத்துக் கொள்ள வேணடும்?); ஏனெனில் உள்ளத்தில் ஊறிய எண்ணங்கள் எவற்றையும் மறைக்காமல் உள்ளது உள்ளபடியே பேசுவேன். இந்த அவை எந்த மனப்பாங்கில் உள்ளது என்பதைக் கண்ட நான் இந்த அவையில் உரையாற்றுவது எனக்கு எவ்வளவு சிக்கலான விஷயம் என்பதை அறிவேன். நான் நினைப்பதைச் சொல்ல துணிவோடு முன்வந்துள்ளேன். இந்த அசட்டுத் துணிச் சலுக்காக ஒருவேளை நான் வருந்த வேண்டியிருக்கலாம். இந்த அவையில் உரையாற்றும் முன்பு மரியாதைக்குரிய சகோதரி திருமதி துர்க்காபாயின் உரையை கேட்கும் வாய்ப்பு கிடைத்தது எனக்கு உதவிகரமாக உள்ளது; இந்த மசோதாவக்கு ஆதரவாக மிகவும் பொருத்தமான உரையை அவர் ஆற்றினார்.

அநேகமாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாக அவர் மிக நம்பிக்கையுடன் உள்ள அவருடைய கருத்துக்களை ஒப்புக் கொள்ள இயலாமைக்காக என் சகோதரிக்கு நான் மன்னிப்பு தெரி விக்க வேண்டும். சட்டத்தின் முன் எல்லோருக்கும் சமத்துவம் அளிக்கும் வரைவு அரசியல் சாசனத்திலுள்ள கோட்பாட்டை நடை முறைப்படுத்தும்படி அவைக்கு வேண்டுகோள் விடுத்து அவர் தமது உரையை முடித்தார். ஆம், நாம் அவ்வாறு செய்துள்ளோம். அரசியல் சாசனத்தின் நெறிமுறைக் கோட்பாடுகளில் ஒன்றாக நாடு முழு வதற்கும் ஒரு சீரான உரிமை இயல் சட்டம் இருக்க வேண்டுமென்று நாம் நிறைவேற்றியதை அவர் ஞாபகப்படுத்தினார். எனது உரைக்கான ஆரம்பத்தை அவர் எடுத்துக் கொடுத்ததற்கு மகிழ்ச்சியடைகிறேன். இந்த விஷயம் வேறு ஓர் இடத்தில் விவாதிக்கப்பட்ட சமயத்திலும் அதே போன்று பிறிதோரிடத்தில் விரிவாக விவாதிக்கப்பட்ட சமயத் திலும் இந்த ஷரத்திற்கு எதிராக எனது கடுமையான கண்டனத்தைத் தெரிவித்துள்ளேன்; ஏனெனில், இந்து மதம் சீக்கிய மதம், ஜைன மதம், புத்தமதம், கிறிஸ்தவ மதம், கடைசியாக ஆனால் குறைந்த தல்லாத இஸ்லாம் மதம் முதலான எல்லாவித மத நம்பிக்கை களையும் கொண்டுள்ள 32 கோடி முதல் 34 கோடி மக்கள் வாழும் ஒரு நாட்டிற்கு ஒரே சீரான உரிமை இயல் சட்டத் தொகுப்பு என்பதை ஒரு போலிக் கோட்பாடாகவே, கோஷமாகவே நான் கருதுகிறேன். இன முறை சட்டம் பாதுகாக்கப்பட வேண்டும் என்று பல திருத்தங் களை முன் வைத்தேன். இன முறைச் சட்டத்தில் அரசு தலையிடுவது ஓர் அத்து மீறலாகும். இவ்வாறு செய்ய அரசுக்கு உரிமை எதுவும் இல்லை.

**மௌலான ஹஸரத் மோகனி** (ஐ.மா. முஸ்லீம்) : சபாஷ், சபாஷ்.

**திருமதி ரேணுகா ரே:** இந்து சட்டத் தொகுப்பை நீங்கள் ஏன் ஆதரிக்க வேண்டும் என்பதற்கு இதுதான் காரணம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** இந்துச் சட்டத் தொகுப்பை நான் ஆதரிக்க வேண்டும் என்பதற்கு இதுதான் காரண மென்று என் முன்னால் அமர்ந்திருக்கும் மதிப்பிற்குரிய சகோதரி கூறுகிறார். இந்த இந்துச் சட்டத் தொகுப்பை நான் ஏன் எதிர்க்கிறேன் என்பதற்கு இதுவே காரணம் - பிரதான காரணங்களில் ஒன்று - நான் கூறலாமா? நீங்கள் தர்க்கரீதியாக இருக்கவேண்டும், எனது சகோதரி களின் உணர்வுகளை நான் புரிந்துகொள்ள முடியும். நான் பெண்களை வெறுப்பவன் என்று நினைக்காதீர்கள்; அல்லது பெண்கள் மீது உணர் வில்லாதவனல்ல (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** 'அவர் ஒரு திருமணமான மனிதர்') ஆம், இந்து சாஸ்திரச் சடங்குகளின்படி நான் திருமணமான மனிதன், எனக்கு அக்கமான மனைவி இருக்கிறாள். அவள் எளிமையானவள். கள்ளங்கபடமற்றவள், ஆடம்பர ஆர்ப் பாட்டம் இல்லாதவள்; நமது இந்து இல்லங்களின் லட்சியங்களின்படி வளர்க்கப்பட்டவள். (**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ''என்ன பரிதாபம்'). அது பரிதாபமாக இருக்கலாம். மலர் மணங்கள், உதட்டுச் சாயம், பகட்டொப்பனைக் கைப்பை ஆகியவை கொண்ட பெண்டிர் மீது எனக்கு அதிகம் பாசம் கிடையாது. எளிமைக்கு எளிமை சேர்க்கும் என் அன்பு மனைவியோடு நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்; ஒவ்வொரு நூறு இந்துக்குடும்பங்களிலும் 98 குடும்பங்களில் இம்மாதிரியான மனைவிமார்கள் உள்ளனர்; அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** ஏன் 98 சத விகிதம்? 99.9 சதவிகிதம் என்று சொல்லுங்கள்.) எனது ஒரு நண்பர் 99.9 சத விகிதம் என்று கூறுவதைக் கேட்க எனக்கு மகிழ்ச்சியாக உள்ளது. அது எனது வாதத்தைப் பலப்படுத்துகிறது. இந்த மசோதாவில் அவர் அறிமுகப்படுத்த விழையும் கடுமையான மாற்றங்கள் அவசியம் என்று எனக்குத் தோன்றவில்லை என எனது நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கருக்கு நான் கூறமுடியும்: (**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் :** 'அம்மாதிரி நானும் நினைக்கவில்லை') மிகத் தீவிர மான இந்த மாற்றங்களுக்குத் தேவையில்லை என அவர் உண்மை யிலேயே கருதினால், இப்போது நம் முன்னிருக்கும் இந்த இந்து சட்டத் தொகுப்பு மசோதா அவருடைய தற்பெருமைக்கு அடையாளம் என்று நான் எடுத்துக் கொள்ளலாமா? என்னுடைய நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரை மிகவும் வியந்து பாராட்டுகிறேன்; இந்த அவையில் முன்பு பல ஆண்டுகள் அவருடன் பணியாற்றிய பெருமை எனக்குண்டு; அவரை மதிக்கிறேன். அரசியல் சாசனம்

சம்பந்தமாக அவர் நாள்தோறும் ஆற்றி வரும் செயற்கரிய செயலை நான் அறிவேன். (**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் :** 'சபாஷ், சபாஷ்') அவரை உயர்வாக மதிக்கிறேன். அவரை வியந்து பாராட்டுகிறேன். ஆனால் இந்த சமூக சட்டமியற்றல் சம்பந்தமாக அவர் செய்து வருவதை ஒருபோதும் நான் பாராட்ட மாட்டேன். புரட்சிகரமான மாற்றங்களால் இது இந்து சமுதாயத்தைச் சீர்குலைக்கும்; எங்களில் சிலரே இதை உணர முடிகிறது.

(*மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் :* 'புரட்சி இல்லை, இல்லை, இல்லை'). ஆம். இல்லையெனில் நான் மகிழச்சியடைகிறேன், இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்பட்டால் ....

**பாபு ராம்நாராயண் சிங்** (பீஹார்: பொது): இல்லை.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா :** என்ன இல்லை?

**பாபு ராம்நாராயண் சிங் :** அது சட்டமாக நிறைவேற்றப் பட மாட்டாது.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா :** அப்படியா? இப்பொழுது உள்ளதுபோல இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்பட்டால், நல்ல தீர்க்கதரிசி யார் நானா, அல்லது, இல்லை, இல்லை என்று கூறுபவரா. இதைப் பார்க்கத்தான் போகிறேன்.

**திரு. எல். கிருஷ்ண சாமி பாரதி** (சென்னை : பொது) : தாங்கள் பொறுத்திருந்து பார்க்கவும்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா :** நல்லது. பொறுத்திருந்து பாருங்கள். வருங்காலச் சந்ததி தீர்ப்பளிக்கும்; வருங்காலச் சந்ததி வரை தாங்கள் காத்திருக்க வேண்டுமென நான் நினைக்கவில்லை. தங்களைப் பற்றியும் தங்களின் பணி பற்றியும் நாடு என்ன சொல்லவிருக்கிறது என்பதை அடுத்த பொது தேர்தல்கள் வரை தாங்கள் காத்திருக்க வேண்டும்.

**மௌலான ஹஸரத் மோகனி :** சபாஷ், சபாஷ், நன்கு சொன்னீர்கள்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா :** எனது சகோதரி திருமதி துர்க்காபாய் எழுப்பிய முதல் விஷயம் நெறியுறுத்துக் கோட்பாட்டை நிறைவேற்றியபின் நீங்கள் இந்துச் சட்டத் தொகுப்பை நீங்கள்

ஆட்சேபிக்கக் கூடாது என்பதாகும். நெறிமுறைக் கோட்பாட்டை அவை ஏற்றுக் கொண்டபோது, பாம்பு - அதாவது இந்துச் சட்டத் தொகுப்பு - கொல்லப்பட்டது என்று நினைத்தேன்; நான் இப்பொழுது காண்பது, அந்த பாம்பு காயப்படுத்தப்பட்டது மட்டுமே என்று; அது தன் தலையை மீண்டும் தூக்குகிறது; தனது நச்சுப் பற்களை விரைவி லேயே காட்டும். உங்களுடை நெறிமுறைக் கோட்பாடுகளுக்கு நீங்கள் உண்மையாக இருந்தால் அவற்றின் அடிப்படையில் நீங்கள் செயல் பட்டால், இந்துச் சட்டத்தொகுப்பை ஏன் கொண்டு வருகிறீர்கள்? எல்லோருக்கும் பொருந்துகிற - இந்துக்கள் முதல் கிருஸ்தவர்கள் வரை, பார்ஸிகளுக்கு, சீக்கியர்களுக்கு, புத்தர்களுக்கு, முகமதியர் களுக்குப் பொருந்துகிற - சர்வாம்ச உரிமை இயல் சட்டத் தொகுப்பைக் கொண்டு வாருங்கள். *(திரு. கிருஷ்ணசாமி பாரதி : ''தாங்கள் அதை ஆதரிப்பீர்களா?'')* : முஸ்லீம்களைத் தொடுவதற்கு நீங்கள் துணிய மாட்டீர்கள்; ஆனால் இந்து சமுதாயம் இன்று ஒரு மோசமான நிலை யில் இருப்பதால், அதை என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று துணிந்து செயல்படுகிறீர்கள். ஒரு சில நவ நவீன ஆசாமிகள்தான் கூக்குரலிடுகிறார்கள்; ஆனால் இந்தச் சட்டத் தொகுப்புக்கு நாட்டில் உண்மையான ஆதரவு எதுவும் இல்லை (குறுக்கீடுகள்).

**துணைத் தலைவர் :** அவர் தமது பேச்சைத் தொடரட்டும்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** லட்சோப லட்சம் மக்கள் ஊமைகளாய் அறியாமையில் மூழ்கியவர்களாய் இருக்கிறார்கள். கல்லூரிக் கல்வி இல்லாததால் அல்லது சட்டப் பேரவைகள் உறுப் பினராக இல்லாததால் போதிய புத்திக் கூர்மையோ விவேகமோ இல்லாதவர்களாக இருக்கின்றனர். அப்படிப்பட்டவர்களின் இனமுறைச் சட்டத்தில் இத்தகைய தீவிரமாற்றங்கள் தேவைப்படவில்லை என்று அவர்கள் கருதுகிறார்கள். அவர்களைப் புறக்கணிக்கக்கூடாது.

**திருமதி ரேணுகா ரே :** அப்படியாயின் அரசியல் சாசனத்தை உருவாக்காதீர்கள்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** எனவே நாடு முழு வதற்கும் ஒரு சீரான உரிமை இயல் சட்டம் என்ற கோட்பாட்டை ஏற்றுக் கொண்டதில் நான் நேர்மையைக் காணவில்லை. ஏனெனில் இரு மாதங்களுக்குள், இந்துக்கள், சீக்கியர்கள், ஜெயினர்கள், புத்த மதத்தினருக்கு மட்டும் பொருந்துகிற இந்துச் சட்டத் தொகுப்பைத் தாங்கள் எப்படிக் கொண்டு வந்திருக்க முடியும்?